# உரிமையுரை

---

இடையறுதுநல் லூக்க மளித்தனள்
இந்த நூல்இனி தேபரி பூரணம்
அடைய நின்றனள் என்மனை யாட்கிதை
அன்பு கொண்டுநான் ஆக்குவன் அர்ப்பணம்.

ஏ. எஸ். பி. ஐயர்

## பொருளடக்கம்

---

# முகவுரை

ஏற்கெனவே நான் எழுதிய "பாலாதித்தியன்' என்னும் சரித்திர சம்பந்தமான கதைப் புத்தகத்தை ரஸிகர்களும் பத்திராதிபர்களும் மகா ஜனங்களும் அன்புடன் ஏற்றுக்கொண்டாடினர். அது பற்பல இந்திய பாஷைகளிலும் ஆவலுடன் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இவ்வாதரவினுல் ஊக்கங்கொண்டு இந்திய சரித்திரத்தில் அதனினும் அதிக இனிமை வாய்ந்த காலத்து நிகழ்ச்சிகளைக் குறித்து இப்புதுக்கதையை எழுதத் துணிந்தேன். இந்தியாவில் இப்போது கலைக்கிளர்ச்சி தோன்றி ஓங்கிக்கொண்டிருக்கின்றது. இக்கிளர்ச்சி மிக மேன்மையானது. கீழ் நாட்டுக் கொள்கைகளும் மேல் நாட்டுக் கொள்கைகளும் மக்களின் மனத்தை அரசியற்றுறையிலும் கலைத்துறையிலும் சமயத்துறையிலும் பலபலவகைகளிற் கிளர்த்தி, இந்தியப்பாங்கான நவத் துறையொன்றை அமைக்கின்றன. இத்தருணத்தில், ஐரோப்பா கண்டத்தில் மிக்க பெருமையும் நாகரிகமும் வாய்ந்த சாதியாரெனக் கொண்டாடப்பெற்ற கிரேக்கர்களும் நம் இந்தியர்களும் ஒருவரோடு ஒருவர் முதன் முதல் நெருங்கி முட்டி மோதிக்கொண்ட விருத்தாந்தத்தை வர்ணித்துரைப்பது மிகப் பொருத்தமானதேயாகும். இப்புத்தகத்தின் முகப்பில் 'ஸாஞ்சித் தோப்பி'லிருந்து (Sanchi

Tope)[1] ஒரு படமெடுத்து அமைத்துள்ளேன். அது கி.மு. 303-ஆம் யாண்டில் நடந்த உடன்படிக்கைக்குப் பின், சந்திரகுப்தனும் சலூகஸும் நட்புக்கொண்டதைக் காட்டுகின்றதென நினைக்கிறேன். அதைப் பார்த்தாலே அதன் கருத்து நன்கு விளங்கும். சந்திரகுப்தன் தன் கையில் இந்திய சின்னமாகிய தாமரை மலரைக் கைக் கொண்டுள்ளான்; ஐரோப்பாவுக்குரிய திராக்ஷைக் கனிக்கொத்தைச் சலூகஸ் கைக்கொண்டுள்ளான். எனவே, இந்தியாவும் ஐரோப்பாவும் சமமான அந்தஸ்து வாய்ந்து சமரசமாக அப்போது கலந்தன என அப்படம் குறிக்கின்றது. வீரர்கள் இருவரும்

1. ஸாஞ்சித் தோப்பு (Sanchi Tope) என்பது 'ஸாஞ்சி ஸ்தூபம்' என்னு மொழியின் திரிபு. இந்த ஸ்தூபத்தை ஆதியில் அசோகன் கட்டினனென்று சொல்லுகிறார்கள். பௌத்தரது சிஷ்யர்களில் சாரிபுத்திரன் என்றும் மௌத்கலாயனன் என்றும் இரு சீடர்கள் மிகப் பிரஸித்தமாக இருந்தார்கள். அவர்கள் இறந்தபின், அவர்களுடைய சாம்பலைக் கொண்டுவந்து $77\frac{1}{2}$ அடி உயரமுள்ளதொரு ஸ்தூபத்தில் அசோகன் புதைத்துவைத்தனன் என்கிறார்கள். அந்த ஸ்தூபத்தைச் சுற்றிக் கருங்கல் கிராதியும் நான்கு தோரணவாயில்களும் அவன் அமைத்தனன்.

ஸாஞ்சி என்பது மத்திய இந்தியாவிலுள்ள போபால் ஸம்ஸ்தானத்துப் பட்டணங்களில் ஒன்று. அது பம்பாயிலிருந்து டில்லிக்குப் போகும் ஜி. ஐ. பி. ரெயில் மார்க்கத்தில் 549 மைலில் இருக்கின்றது. ஸ்தூபத்தைச் சுற்றியுள்ள கருங்கல் கிராதிகளிலும் தோரணங்களிலும் பல பல புடைப்புச் சித்திரங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அச்செதுக்கு உருவங்கள் புராணக் கதைகளுக்கும் சரித்திர விஷயங்களுக்கும் உரியவை. ஸாஞ்சி என்னும் இவ்வூரில் முன்னாளில் அசோகனது கம்பக் கல்வெட்டு ஒன்று இருந்தது. பிரார்த்தனைக்காகச் செதுக்கப்பட்ட கல்வெட்டுக்களும் அநேகம் இவ்விடத்தில் இருக்கின்றன.

ஸிம்மாரூடராய் இருந்தது ஏற்புடையதே. இப்போது பிரிட்டிஷ் ஸிம்மாரூடனை ஆங்கிலத்தானும், கஜாரூடனை இந்தியனும் கூடிவதனால் இந்தியக்கமலமும் ஐரோப்பிய திராக்ஷையும் திருப்ப ஒன்றுபடுமென நினைப்பது வெறும் மனோராஜ்யமாகுமோ?

## சரித்திராதாரம்

இந்தியாவின்மீது அலெக்சாண்டர் படையெடுத்த விவரங்கள் வேண்டியமட்டும் எழுதிவைக்கப்பட்டுள்ளன. ஆனால், அவையெல்லாம் கிரேக்கர்கள் சொல்வனவே. இந்துக்களேனும் பௌத்தர்களேனும் ஜைனர்களேனும் எழுதிய இந்திய புஸ்தகம் எதனிலும் இவ்விஷயம் குறிக்கப்பெறாதிருப்பது விசித்திரமாயிருக்கின்றது. ஆதலின், அலெக்சாண்டர் இந்நாட்டிற் செய்த காரியங்களின் விவரம் இந்தியர் வாயிலாக ஒன்றுமே இல்லை. சந்திரகுப்தனைக் குறித்துக் கிரேக்க நூலாசிரியரும் லத்தீன் நூலாசிரியரும், சிற்சில விவரங்கள் மிகச் சொற்பமாக எழுதிவைத்துள்ளார்; இந்திய வீரகாவிய நூலாசிரியர்களான இந்துக்களும் ஜைனர்களும் பௌத்தர்களும் சில விவரங்கள் எழுதிவைத்துள்ளார்கள். அவை அற்புதமாகவும், நம்பத்தகாதனவாகவும், அதிசயோக்திகளாகவும், பரஸ்பர விரோதமானவைகளாகவும் இருக்கின்றன. இவையன்றி, முத்திராராக்ஷஸம் என்னுமொரு பிரஸித்தமான நாடகமொன்று உளது. அது சந்திரகுப்தனுடைய ஜீவிய காலத்தின் ஒரு பகுதியைக் குறிக்கின்றது. அதனில் காதற்கதை எதுவும் இல்லையெனினும், அந்நாடகம் மிக இனிமையாயிருக்கின்றது; அஃது அக்காலத்தில் வழங்கிய கர்ணபரம்பரைக் கதையை ஆதாரமாகக் கொண்டதென்பதும் தெளிவு. ஆனால்,

மௌரிய பரம்பரை அற்றுப்போன சில நூற்றாண்டுகளுக்குப் பின் அஃது எழுதப்பட்டது; சரித்திர சம்பந்தமான விஷயங்கள் நம்பத்தக்கவாறு உள்ளபடி அதனில் எழுதப் பட்டிருப்பதாகத் தோற்றவில்லை. அதிற் சாணக்கியருடைய பிரதாபமே அதிகம். அவர் ஆட்டிவைத்தபடி சந்திரகுப் தன் ஆடியதாகத் தெரிகிறதேயன்றி, அவனுடைய சொந்தப் பிரதாபம் வெளிப்படவில்லை.

## இந்திய இதிகாசங்கள்

மேற் சொல்லிய நாடகத்தைக் காட்டிலும், சந்திர குப்தனையும் சாணக்கியரையும் பற்றி இந்துக்களும் பௌத் தர்களும் ஜைனர்களும் சொல்லிக்கொண்டிருந்த அதிசய மான கதைகள் மிகப் பழமையானவை யென்பதிற் சந்தேக மில்லை. அவை நம்பத்தக்கனவல்லவென்று தோன்றின போதிலும், அவைகளிற் காணும் அதிசயோக்திகளைத் தள்ளிக் கதைகளின் கருத்து என்னவென்று இந்தியர்கள் தெரிந்துகொள்ளமுடியும். உதாரணமாக, மௌரியனுக்கு 100 புத்திரர் இருந்தனரெனக் கதை சொல்கின்றது. அதன் கருத்து உண்மையில் 100 புத்திரர்கள் பிறந்தனரென்ப தன்று. அவன் இனத்தவர்கள் 100 பேர் அவனைப் பின்பற்றிக் கொண்டிருந்தனரென்றும், அவர்களை அவன் புத்திரர்களைப்போலப் பாவித்துக் கொண்டிருந்தானென் றும் நாம் தெரிந்துகொள்ளக்கூடும். முற்காலத்தில் மலை நாட்டுத் தலைவனும், ராஜபுத்திர அரசனும், இந்து குலத்து மூப்பனும் தங்களைப் பின்பற்றியிருக்கும் ஆட்களைத் தம் புத்திரர்களெனவே மதிப்பது வழக்கமாயிருந்தது. இன் றைக்கும் ஒரு தலைவன் தன் அனுசரர்களை மலையாளத்திலும் கன்னடத்திலும் ‘என்மக்கள்’ (பிள்ளைகள்) என்று சொல்

வதைக் காண்கின்றோம். மேனாட்டார் 'சிநேகிதர் சங்கம்' என்பதொன்று அமைத்துகொண்டிருக்கிறார்கள். அந்தச் சங்கத்தைச் சேர்ந்தவர் ஒவ்வொருவரும் மற்றவரை, 'அண்ணன்' அல்லது 'தம்பி' என்றே விளித்து வியவகரிக்கின்றனர். ஒரே குடும்பத்திற் பிறக்காதவரையும் அவர்கள் சகோதரர்களென்று வழங்குவதுபோல, நம்மவர்களும் தம் வயிற்றிற் பிறக்காதவர்களைத் தம் பிள்ளைகளென்று வழங்கினர். பழங்கதையிற் சந்திரகுப்தனை மௌரியனின் புத்திரனென்று சொல்லியிருக்கிறார்கள். அங்கே 'புத்திரன்' என்பது பௌத்திரனாகை இருந்தாலும் இருக்கலாம். ஏனெனில், இந்துக்களில் பிதுரார்ஜித சொத்துக்குச் சட்டப்படி உரிமை கொண்டாடுகையில் 'மகன்' என்ற வார்த்தை, சொந்த மகனுக்கும், மகனது மகனான பேரனுக்கும், பேரனது மகனுக்கும் பொருந்தும். நமக்குக் கிடைக்கக்கூடிய ஆதாரங்களை யெல்லாம் நான் ஆராய்ந்து பார்த்ததில் சந்திரகுப்தன், பிரஸித்திபெற்ற பழமையான நந்தர்களின் வமிசத்து மகாநந்தி என்பவனுடைய சந்ததியில் தோன்றினவனென்று நினைக்கின்றேன். ஆதலின், இடைக்காலத்திற் சிங்காசனத்தை ஆக்கிரமித்துக்கொண்டிருந்த நவநந்தர்களினும் (புதிய நந்தர்களினும்) உயர் குலத்தவனென்றே நினைக்கிறேன். அந்த நவநந்தர்களை வென்றே சந்திரகுப்தன் திரும்ப ஆட்சி பெற்றான்.

## சாணக்கியரும் சந்திரகுப்தனும்

இந்துக்களும் பௌத்தர்களும் ஜைனர்களும் சொல்லும் கதைகளிற் சந்திரகுப்தனுடைய யோக்கியதையையும் திறமையையும் மிகக் குறைவாகச் சொல்லி, சாணக்கியருடைய பெருமையை மிகைப்படுத்திக் கூறியிருக்கின்றார்

கள் என்று தெளிவாகத் தெரிகின்றது. ஆனால் அவர்கள் இருவரும் ஒருவரோடொருவர் சேர்ந்தது அற்புதமான இணைப்பென்றே திடமாகச் சொல்வேன். ஒருவர் பெருமை யடைவதற்கு மற்றொருவர் இன்றியமையாத சாதனமாயிருந் தனர் என்பேன். இங்கிலாந்திலிருந்த வார்விக்கும், ஜெர்மனியிலிருந்த பிஸ்மார்க்கும் சேர்ந்து ஒன்றித்துச் சாணக்கியராக உருவெடுத்தனர் என்னலாம்; ஜெர்மனியி லிருந்த முதலாம் வில்ஹெல்மும் டென்மார்க்கிலிருந்த மால்ட்கேயும் ஒன்றித்துச் சந்திரகுப்தனை உருவெடுத்தனர் என்னலாம். நம்மவர்கள் சொல்லியிருக்கிற விரங்களி லுள்ள ஏற்றத் தாழ்வுகளைக் கிரேக்கர்களும் ரோமர்களும் எழுதியுள்ள விருத்தாந்தங்களைக்கொண்டு ஒருவாறு திருத் திக் கொள்ளலாம். இந்தியாவின் பல பிரதேசங்களையும் வென்று ஆட்சிகொண்டது சந்திரகுப்தனேயென அவர்கள் எல்லாப் பெருமையும் அவனுக்கே உரிமையாக்கிச் சாணக் கியரைப்பற்றி ஒன்றமே சொல்லாமல் விடுகின்றனர்.

## சந்திரகுப்தன் உயர்வுற்றது

ஜஸ்டின்[1] என்னும் சரித்திரக்காரர் பின்வருமாறு கூறுகின்றார்:—

"அலெக்சாண்டர் இறந்த பிறகு அன்னியரின் ஆதி பத்தியத்தை நீக்கிக்கொண்டு இந்தியர் அவன் வைத்திருந்த மண்டலாதிகாரிகளையும் கொன்றொழித்தனர். அவ்வாறு அடிமைத்தனத்தினின்றும் இந்தியாவை விடுவித்தவன் சந் திரகோடஸ் (சந்திரகுப்தன்). ஆனால், வெற்றி வாய்ந்த பின், அவன் கொடுங்கோலோச்சியதனால், அடிமை நீக்கிய

1. ஜஸ்டின் (Justin). என்பவன் ரோம சரித்திரக்காரன்; கி.பி. 4-ஆம் நூற்றாண்டில் இருந்தவன்.

பேருபகாரியென்னும் பெருமையை இழந்தனன். ஏனெனில் பிறருடைய ஆட்சியினின்றும் எந்த ஜனங்களை அவன் விடுவித்தனனே அவர்களுக்கே கொடுமை செய்து வருத்தி ஞன். அவன் எளிய குடும்பத்திற் பிறந்தவனுயினும், தெய்வாதீனமாகத் தூண்டப்பெற்று ராஜபதவியை நாட லாயினன். எங்ஙனமெனின், துடுக்காகப் பேசி அலெக் சாண்டருடைய கோபத்திற்குக் குறியாயினன். அவனைக் கொல்லும்படி அலெக்சாண்டர் கட்டளையிட்டான். அந்தச் சமயத்தில் சந்திரகுப்தன் விரைந்து ஓட்டம்பிடித்துத் தப்பிக்கொண்டான். ஓடிக் களைத்து ஓரிடத்தில் உறங்கு கையில், பேருரு வாய்ந்த சிங்கமொன்று வந்து அவன் உடம்பினின்றும் ஒழுகிக்கொண்டிருந்த வியர்வையைத் தன் நாவினல் நக்கித் துடைத்து அவனை மெதுவாக எழுப்பி விட்டு நீங்கிப்போயிற்று. இவ்வதிசயமான சம்பவத்தினல் அவன் தனக்கு ராஜபதவி வாய்க்குமென்னும் ஆசை கொண்டான். சில கொள்ளைக்கணத்தாரைக் கூட்டிக் கொண்டான். அரசுரிமை தனதேயெனக் கூறி இந்தியர் களுடைய ஆதரவை வேண்டினன். சிலகாலத்திற்குப் பின் அலெக்சாண்டருடைய தளகர்த்தர்களுடன் அவன் போர் புரியப் போகையில், மலைபோன்ற காட்டானை யொன்று தானகவே அவன்முன் வந்து தோன்றி, பழக்கப்பட்ட சாதுவான மிருகத்தைப்போல அவனைத் தூக்கித் தன் முதுகின்மேல் வைத்துக்கொண்டு போர்க்களங்களில் வழிகாட்டி அவனை நடத்திக்கொண்டுபோய், போர்களி லெல்லாம் அவனுக்குப் பெருமையும் வெற்றியும் வாய்க்கச்செய்தது. இவ்வாறு சிங்காசனம் பெற்ற சந்திர கோடஸ், அலெக்சாண்டரின் தளகர்த்தனை சலூகஸ் இனிப் பெருமை படைப்பதற்கு அடிப்படை போட்டுக்

கொண்டிருக்கையில், இந்தியாவுக்கு அதிபதியாயிரு
தனன்."

புளூடார்க்கு என்பவன் பின்வருமாறு எழுதியிரு
கின்றான் :—

"சிறிது காலத்திற்குப் பின், அதற்குள்ளாகச் சிங்க
தனம் ஏறியிருந்த அந்திரகோடஸ் (சந்திரகுப்தன்)
500 யானைகளைச் சலூகஸ்ஸுக்கு இனமாகக் கொடுத்து
ஆறு லக்ஷம் ஆட்களடங்கிய சேனையுடன் படை
யெடுத்து இந்தியா முழுவதையும் தன் வசமாக்கிக் கொண்
டனன்."

## மௌனத்தால் மயங்கலாகாது

கிரேக்க சரித்திரக்காரர்களும் ரோம சரித்திரக்காரர்
களும் சாணக்கியருடைய பெயரைக் குறிக்கவேயில்லை.
கௌடல்யருடைய அர்த்தசாஸ்திரத்தில் சந்திரகுப்தன்,
பாடலிபுரம், அலெக்சாண்டர், சலூகஸ் என்னும் இப்பெயர்
களுள் ஒன்றாவது எவ்விடத்தும் குறிக்கப்படவில்லை. இந்தக்
காரணத்தால், சாணக்கியர் என்பவர் ஒருவர் உண்மையில்
இருந்தனரோவென மேனாட்டுப் புலவர் சிலர் சந்தேகிக்
கலாயினர். பெயரைக் குறிக்காமல் மேற்சொல்லியவர்கள்
மௌனமாயிருந்ததைக் கொண்டு ஒரு தீர்மானத்துக்கு வரு
வது அபாயகரமாகும். அது முடிவான தீர்மானமும் ஆகாது
கீழ்த்திசைப்பாஷைகளில் வல்லவரான மாக்டானல் என்னும்
புலவர் (Professor Macdonnell) எழுதியுள்ள "ஸம்ஸ்
கிருத இலக்கியங்கள்" (Sanskrit Literature) என்னும்
புத்தகம் 150-151-ஆம் பக்கங்களில் பின்வருமாறு வரைந்
துள்ளார் :—

"மௌனம் சம்மதக்குறியென்று கொள்வது ஆபத்தான கொள்கை. மௌனத்தை நம்பி நாம் ஒரு விஷயத்தை ஊகத்தாற் சாதிக்கலாகாது என்பதற்கோர் உதாரணம் காட்டுவேன். உப்பு என்பது மனிதனுக்கு இன்றியமையாத அவசியமான தாதுப்பொருள்களுள் மிக முக்கியமானது. அதைப்பற்றி ரிக்குவேதம் ஒருவார்த்தையாவது ஓரிடத்திலாவது சொல்லவில்லை. ஆயினும், அது வட பஞ்சாபிலேயே அதிகமாகப் படிந்திருக்கின்றது. அஃது 'உப்பு மலைத் தொடர்' என்னுமொரு பெரிய மலையாக ஸிந்துநதிக்கும் ஜீலம் நதிக்கும் இடையிற் குவிந்துகிடக்கின்றது. அங்கே கிடைக்கக் கூடிய உப்பின் மிகுதியை எடுத்துக் கூறுகையில், அலெக்சாண்டருடைய கிரேக்கத்துணைவர்கள், இந்தியா முழுமைக்கும் போதுமான அளவு உப்பு அங்கே இருக்கின்றதென உறுதியாகக் கூறினரென்று ஸ்டிராபோ என்னும் சரித்திரக்காரன் எழுதியிருக்கின்றான்."

இதைப்போன்ற பெரிய உதாரணம் மற்றொன்றினாலும், மௌனத்தைக்கொண்டு ஊகிக்கலாகாதென்பது விளங்கும். அசோக மகாராஜன் எத்தனையோ சிலாசாசனங்கள் செதுக்கிவைத்துள்ளான். அவைகளில் எதிலும் தன்தந்தை பிந்துசாரனது பெயரையாவது, பாட்டனை சந்திரகுப்தனது பெயரையாவது குறிக்கவில்லை. இந்தக் காரணத்தினால் அவர்களை அவனுக்குத் தெரியாதென்றேனும், அவர்கள் வமிசத்தில் அவன் பிறக்கவில்லை யென்றேனும் சொல்லலாமோ? அவனுடைய சொந்தப்பெயரும், அத்தனை சிலாசாசனங்களுள், ஓரிடத்தில்மாத்திரமே குறிக்கப்பட்டிருக்கின்றது. மற்றச் சிலாசாசனங்களெல்லாவற்றைக் காட்டிலும் பிற்காலத்தில், மஸ்கி என்னுமிடத்திற் (Maski) கண்டுபிடிக்கப்பட்ட சாசனத்திலேயே அது இருக்கின்

றது. இக்காலத்தில் மனிதருடைய பெயரைக் குறிப்பிட்டுப் பேசுவது வழக்கமாயிருக்கின்றதே யொழிய முற்காலத்தில் அஃது இவ்வளவு வழக்கமாக இருக்கவில்லை.

## சாணக்கியரின் அத்தாட்சி

சாணக்கியர் தம்முடைய அர்த்தசாஸ்திரத்தில் பின்வருமாறு தெளிவாகக் கூறுகின்றனர்:—

"எல்லாச் சாஸ்திரங்களையும் பார்த்து, கட்டளை எழுத வழங்கிவரும் முறைகளையும் சாசனம் எழுதும் முறைகளையும் முற்றுந் தழுவி, நரேந்திரன்பொருட்டு, ராஜாங்கக் கட்டளைகள் எழுதுவதற்கான இவ்விதிகள் கௌடல்யரால் அமைக்கப்பட்டன." (2-ஆம் பகுதி, 10-ஆம் அத்தியாயம்.)

ரஸ்தாக்களில் வழிநடப்போருக்கும் உள்நாட்டுப் பிரதேசத்திற் சஞ்சரிக்கிற பிராணிகளுக்கும் உற்ற சகாயம் செய்து அவர்களைக் காப்பாற்றவேண்டுமென்று ராஜப்பிரதிநிதிகளுக்குக் கட்டளையிடுகிற சாசன முறைகள் இவ்வத்தியாயத்திற் காணப்படுகின்றன. இதனால், நரேந்திரன் பெரிய ராஜ்யத்திற்கு அதிபதியாயிருந்தனனெனத் தெரிகின்றது. நரேந்திரன் என்பவன் சந்திரகுப்தனே யென்று பிரம்மாண்டபுராணம் கூறுகின்றது. மற்றும், சாணக்கியர் என்னும் விஷ்ணுகுப்தர் தமது அர்த்தசாஸ்திரம் என்னும் நூலின் 15-ஆம் பகுதியில் (Book XV) "நந்தர்களுடைய கைவசப்பட்டிருந்த வேதசாஸ்திரங்களையும் ஆயுதசாஸ்திரத்தையும் உலகத்தையும், அநியாய ஆட்சி பொறுக்காமல், விரைவில் மீட்டவரால் இந்தச் சாஸ்திரம் செய்யப்பட்டது" என்று சொல்லியிருக்கிறார்.

இந்திய ஸம்ஸ்தானங்களில் வாழ்கிற குடிகள் தங்கள் அரசர்களை அவர்களுடைய சொந்தப் பெயரால் வழங்குவது இந்நாளிலும் இல்லை. ஆதலால், சந்திரகுப்தனைச் சந்திரகுப்தனென்றே குறிக்காமல் நரேந்திரனென்று சாணக்கியர் குறிப்பிடுவது இயல்பே. முக்கியமாக அவர் தம்மையே சாணக்கியரென்று சொல்லிக்கொள்ளாமல், விஷ்ணுகுப்தர் என்று பேசுகிறார். அவர் தம்முடைய அர்த்தசாஸ்திரத்தில் பாடலிபுரத்துப் பெயரே சொல்லவில்லை. அஃது ஏனோவெனின், அது மௌரிய சாம்ராஜ்யத்து விவரணம் அன்று; பாடலிபுரத்து விவரணமும் அன்று. எல்லாத் தேசங்களுக்கும் எல்லாக் காலங்களுக்கும் ராஜதந்திரத்திலும் பொருளாதார விஷயத்திலும் பெரிய புத்தகமாகக் கருதி அவ்வர்த்த சாஸ்திரத்தை யாக்கினார்போலும். அன்றியும், முற்காலத்திருந்த பெயர் பெற்ற அரசர்களின் பெயரையும் புராதன நகரங்களின் பெயரையும் எடுத்துச் சொல்வதில் ஜனங்களுக்கு அந்நாளிற் பிரியம் அதிகமாயிருந்தது. ஆளும் அரசர்களையாவது, சில நாளைக்குமுன் ஏற்பட்ட பட்டணங்களையாவது பற்றிப் பேசுவதில் அவர்களுக்கு ஆசை இல்லாதிருந்தது. இந்தியாவில் காசி, அயோத்தி, கௌசாம்பி, கன்யாகுப்ஜம், இந்திரப்பிரஸ்தம், ஹஸ்தினபுரம், உஜ்ஜயினி முதலான புராதன நகரங்கள் பல இருந்தன. அவைகளோடு ஒப்பிட்டுப் பார்க்கையில் பாடலிபுரம் என்பது நவீனமாகத் தோன்றியதேயாகும். அங்குள்ள கோட்டை புததருடைய காலத்தில்தான் வஸ்ஸகரன் என்னும் பிராமண மந்திரியினற் கட்டப்பட்டது. வஸ்ஸகரன் என்பது 'வர்ஷகரன்' (மழையுண்டாக்குவோன்) என்னும் பெயரின் திரிபு. அதை அவன் அஜாதசத்துரு என்னும் அரசனது உத்தரவுப்படி,

வைசாலி தேசத்து லிச்சவிகளின் (Lichchhavis) எதிர்ப்புக்குக் காப்பாகக் கட்டுவித்தனன். மகதத்திலுள்ள ராஜகிருகம் என்னும் பட்டணமும் பாடலிபுரத்தைக் காட்டிலும் பழமையானதே.

## சாணக்கியர் என்றொருவர் இருந்தனரா?

சாணக்கியர் தம்முடைய அர்த்தசாஸ்திரத்தில் குசத்வஜத்து அரசியற்கொள்கை இன்னதென்றும் குறிப்பிட்டிருக்கின்றார். அம்பீயக்கொள்கை என்பது அம்பீசு என்னும் அம்பியின் பெயரால் வழங்குவது. அவைகளைக் குறிப்பிட்டிருப்பதனாலே சாணக்கியர் உண்மையில் உலகத்தில் வாழ்ந்த புருஷரென்றும், சரித்திர சம்பந்தமான புருஷரென்றும் தெற்றெனத் தெரிகின்றது. குசத்வஜத்தை அலெக்சாண்டர் அழித்துப் பாழாக்கினான்; அம்பியின் பெயர் கி.மு. 321-க்குப் பிறகு சரித்திரத்தில் எங்கும் அகப்படவில்லை. ஆதலின், அர்த்தசாஸ்திர நூலாசிரியரான சாணக்கியர் கி.மு. 300-க்கு முன்னால் வாழ்ந்து அந்நூலை எழுதியிருக்கவேண்டும். அன்றியும், அவர் ஜீவதசையிலிருந்த உண்மையான புருஷரேயென்று இந்துக்களும் பௌத்தர்களும் ஜைனர்களும் ஒரே வாக்காகச் சொல்லியிருக்கிறார்கள். இவர்கள் மூவரும் ஒருவருக்கொருவர் விரோதிகள். சாணக்கியர் என்னும் ஒருவர் உண்மையில் இல்லாவிட்டால், அவர்களெல்லாரும் அவர் இருந்தாரென்று ஒருமனமாக ஒப்புக்கொள்வதற்குக் காரணமேயில்லை. சாணக்கியர் என்னும் ஒரு பிராமணரைக் கற்பனை செய்து, அவர் நந்தர்களை ஒழித்தாரென்றும், சந்திரகுப்தனுக்குப் பட்டங் கட்டினாரென்றும் எல்லாப் பெருமையும் அவருக்குக் கொடுத்துச் சந்திரகுப்தனுக்கு இந்துக்கள்

பெருமை கொடாதிருப்பதற்கும் விசேஷ காரணமொன்றும் இல்லை பிராமணர்களிடத்து விருப்பில்லாத பௌத்தர்களும் ஜைனர்களுங்கூட அவ்வாறு பிராமணன் ஒருவனுக்குப் பெருமை யளிப்பதற்குக் காரணம் ஏதும் இருக்கமுடியாது. இங்ஙனம் மூன்று திறத்தாரும் ஒரேமாதிரியாகச் சொல்லும் சாக்ஷியமல்லாது கௌடல்யா தமது அர்த்த சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிற தெளிவான உறுதி வாக்கியமும் இருக்கின்றது. நந்தர்களை வேரறுத்ததாகவும், நரேந்திரன்பொருட்டு ஓர் அத்தியாயம் தனியாக எழுதியதாகவும் அவர் அந்நூலிற் சொல்லியிருக்கின்றார். நரேந்திரன் என்பவன் சந்திரகுப்தமௌரியனேயெனப் பிரம்மாண்ட புராணத்தினால் ஏற்படுகின்றது. இங்ஙனம் இவர் கொண்டாடும் பெருமையை இந்தியாவில் எவரும் தர்க்கிக்க முன்வரவில்லை. அஃது உண்மையெனவே எல்லாரும் அங்கீகரித்தனர்.

## பௌத்த சாக்ஷியம்

சாணக்கியர் உண்மையில் வாழ்ந்த மனிதரே என்றும், அவர் அற்புதச் செயல்கள் செய்தாரென்றும் உறுதியாகச் சொல்வதற்கோர் ஆதாரம் இருக்கின்றது. ஆரிய மஞ்சுஸ்ரீ மூலகற்பம் என்பது பௌத்தர்கள் எழுதிய இந்திய சாம்ராஜ்ய சரித்திரம். இந்நூலாசிரியன் பௌத்தத் துறவி. அவனுக்குச் சாணக்கியர்மீது அன்பே இல்லை. அவர் பெயரைச் சொன்னாலே அவனுக்கு எரிவுண்டாகும். மத சம்பந்தமான மச்சரம் அவனுக்கு அதிகம். அந்தத் துவேஷத்தினால் அவன் சாணக்கியர் அரசியல் சம்பந்தமான கொலைகள் பல செய்தனரென்றும், வேறு எத்தனையோ குற்றங்கள் செய்தனரென்றும், அவைகளுக்குத் தண்டனையாகக் கற்பாந்தகாலம் நரகத்தில் நானாவகையான சித்திர

வதைகளுக்கு உட்படவேண்டியதாயிற்றென்றும் அவன் எழுதியிருக்கிறான். அப்படிப்பட்டவனும் சாணக்கிய ரென்னும் மனிதர் ஒருவர் இல்லையென்றாவது, அவர் அருங்காரியங்கள் செய்யவில்லை யென்றாவது நினைக்கவே இல்லை. அவன் பின்வருமாறு சொல்கிறான்:—

"இனி, பாடலிபுரத்திலிருந்த விஷ்ணுகுப்தனைப்பற்றிச் சொல்வோம். அவன் கோபமே வடிவெடுத்து வந்தவன்; அற்புதங்கள் ஆக்குபவன்; வறுமையினால் அவனுக்கு நேர்ந்த அவமதிப்புக் காரணமாக அரசர்களை அழிப்பவன்; அவனைக் கோபக்கோன் என்றும் யமாவதாரமென்றும் சொல்வார்கள். அவன் துஷ்டர்களை அடக்கித் தீமைகளை அகற்றி நன்மையைப் பெருக்கினான். ஆனால், அவன் சொன்னதும் செய்ததும் போகட்டும்; மிடிவாய்ப்பட்ட அந்த மூடன் கோபாவேசங் கொண்டு அரசனுடைய உயிரை வாங்கிப் பகை தீர்த்துக்கொண்டான்."

மற்றும் அவன் எழுதுவதாவது:—

"நந்தனுக்குப் பிறகு சந்திரகுப்தன் அரசனாவான். அவன் எதிர் எவருமின்றி அரசாள்வான். அவன் உலகத்தி லுள்ள போக போக்கியங்களை யெல்லாம் அநுபவித்து வளமையும் சீரும் சிறப்பும் உற்றிருப்பன். மகுடாபிஷேக காலத்திற் செய்யும் பிரமாணத்திற்கும் தர்மத்திற்கும் கட்டுப் பட்டு உண்மையாக நடப்பன். மந்திரி (சாணக்கியர்) சொல்லிய துராலோசனையைக் கேட்டு அவன் அநேக ஜனங்களைக் கொன்றான். அந்தப் பாபத்தினால் அவனுக்கு விஷமித்த ராஜப்பிளவைகள் உண்டாயின. அவைகளினால், அவன் நினைவு தப்பியிருந்து இறந்தனன். இறக்குமுன், நடுநிசியில் அழுதுகொண்டே தன் மகன் பிந்துசாரனுக்குப் பட்டங் கட்டினான். அப்போது பிந்துசாரன் சிறு பையன்.

(அதாவது, இந்துக்களில் பட்டங் கட்டுவதற்குரிய 25 வயதுக்கு உட்பட்டவன்). பிந்துசாரனது பிரதான மந்திரி (சாணக்கியர்) கெட்டவர். முன் ஜன்மத்தில் பிந்து சாரன் சிறு பிள்ளையாய் விளையாடிக்கொண்டிருக்கையில், பௌத்தாலய மொன்று அமைத்தனன். அப் புண்ணி யத்தின் பயனாக நந்தராஜவமிசத்துச் சந்திரகுப்தனுடைய குடும்பத்திற் பிறக்கலாயினன். சிறு பிள்ளையாயிருக்கும் போது நல்ல சௌக்கியங்களை அனுபவித்தனன். பெரியவ னானபோது, வீரமும் வாசாலமும் யுக்திபுத்தியும் வாய்க்கப் பெற்றான். அவனுக்குப் பிரதான மந்திரியான சாணக்கியன் கோபக்கொழுந்து; யமனுடைய அவதாரமெனத் தக்கவன். இந்தக் கெட்ட பிராமணன் நெடுங்காலம் ஜீவித்திருந்தான். மூன்று அரசர்களின் காலத்தில் இருந்தான் (அதாவது, ஸுகல்பநந்தன், சந்திரகுப்தன், பிந்துசாரன் என்னும் மூன்று அரசர்களின் காலத்திலிருந்தான்). கடைசியாக அவன் உயிர்நீத்தபின் ஒரு கற்பகாலம் நானாவகைச் சித்திரவதைகளை யனுபவிக்க நரகத்தில் தள்ளப்பட்டான்.”

## சந்திரகுப்தனது இறுதி

சந்திரகுப்த மௌரிய மகாராஜன் ‘சுருதகேவலி’யான பத்திரபாகு சுவாமியுடன் மைசூரிலுள்ள சிரவண வெண் குளம் என்னும் ஊருக்குப்போய், அங்கே சல்லேகன விர தம் மேற்கொண்டு பட்டினி கிடந்து, தன் குருவுடன் கி.மு. 297-இல் மரித்தனனென்று ஜைனர்கள் ஒரு கதை, சில நாளைக்குமுன், சொல்லத் தொடங்கி யிருக்கிறார்கள். இஃது உண்மையன்றென்பது சந்திரகுப்த மௌரியன் நீரிழி வினால் நேர்ந்த ராஜபிளவை காரணமாக இறந்தனனென்று முற்கூறிய சரித்திரமேற்கோளினால் நிச்சயமாக ஏற்படு

கின்றது. சந்திரகுப்தன் நடுநிசியில் பாடலிபுரத்திலுள்ள தன் அரண்மனையில் தன் மகன் பிந்துசாரனுக்குப் பட்டங் கட்டிவிட்டு அழுதுகொண்டு (சாக மனமில்லாமலே) இறந்தனனென்று தீர்மானமாக அம் மேற்கோள் காட்டு கின்றது. சந்திரகுப்தன் தன் ராஜ்யாதிகாரத்தைத் துறந்து மற்றொருவருக்கு ஒப்பித்தனனென்றாவது, பட்டினி கிடந்து செத்தனனென்றாவது இந்தியப் புராணங்களும் சொல்லவில்லை. அப்படிப்பட்ட வதந்தி ஏதேனும் இருக்கு மாயினும், அவ்விசித்திரமான விவரங்களை இந்துப் புரா ணங்கள் சொல்லாமல் விடா. இங்ஙனமாக சந்திரகுப்தன் என்பவன் தன் தந்தையையும் தன் தமயனையும் வஞ்சகமாகக் கொலை செய்தான் என்னுங் கதையை அப்புராணங்கள் குறும்பாகச் சொல்கின்றன. (பிரம்மாண்ட புராணத்தில் கலியுக விருத்தாந்தத்திற் காண்க.) மற்றெல்லாவற்றைக் காட்டிலும் முக்கியமாக அசோகனும் அவ்விவரங்களைப் பற்றித் தன் சிலாசாசனம் எதனிலுங் குறிப்பிடவில்லை. பிரம்மகிரி, ஸித்தபுரம், ஜாதிங்கா, ராமேசுவரம் என்னு மிடங்களில் அவனுடைய கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவ்வூர்களெல்லாம் சிரவண வெண்குளம் என்னும் ஸ்தலத் திற்குச் சமீபத்தில் உள்ளவை யென்றே சொல்லவேண்டும். அப்படியிருந்தும், சிரவண வெண்குளத்தில் சந்திரகுப்தன் 'சல்லேகனம்' செய்து இறந்தானென்னும் விவரம் அவ்வூர்ச் சாசனங்களிற் காணப்படவில்லை. 'சல்லேகனம்' என்பது பெரும் புண்ணிய விரதமென்று இந்தியர்கள் நினைக்கிறார் கள். தன் பாட்டனார் அவ்வரும்புண்ணியம் பண்ணி னது உண்மையாயிருப்பின், அதை அசோகன் குறிக் காமல் விட்டிருப்பானென்று நம்புவதற்கு இடமில்லை. தன் ராணியாகிய காருவகி (திவலனது தாயார்) செய்த அற்ப

புண்ணியச் செயலையும் சிரத்தையாகத் தன் கல்வெட்டுக்களில் குறிப்பிட்டவன், தன் பாட்டன் செய்த பெரும் புண்ணிய காரியத்தை விட்டிருக்கமாட்டான்.

## சந்திரகுப்த முனீந்திரன்

ஜைன விருத்தாந்தங்கள் ஒன்றுக்கொன்று முரண்படுகின்றன; ஒரு விருத்தாந்தத்திலேயே முன்னுக்குப் பின் விரோதம் இருக்கின்றது. தற்கொலை புரிந்துகொண்ட பிரபாசந்திரன் என்பவன் அசோகனுடைய பேரனென்று ஒரு விருத்தாந்தம் கூறுகின்றது! ஆனால், பத்ரபாகு சுவாமி கி. மு. 297-இல் இறந்தார்; சந்திரகிரி மலையிலுள்ள 'பத்ரபாகு குகை'யின் வாயிலில் பட்டினி கிடந்து அவருடன் பிராணனைப் போக்கிக்கொண்ட அவருடைய முக்கிய சிஷ்யன், சந்திரகுப்த முனீந்திரனென்னும் பிரபாசந்திரனவன். ஆதலால், பிரபாசந்திரன் என்பவன் அசோகனுடைய பேரனாயிருத்தல் பொருந்தாது. அவனைச் சில ஜைனவரலாறுகள் 'உஜ்ஜயினி சந்திரகுப்த'னெனச் சொல்கின்றனவே யன்றி, பாடலிபுரத்துச் சந்திரகுப்தனென்று சொல்லவில்லை. ஆனதனால் 'சல்லேகனம்' செய்து உயிர் துறந்தவன் உஜ்ஜயினியில் சந்திரகுப்தனெனப் பெயர்கொண்டிருந்த வேறொரு ராஜ குமாரனென்றே எனக்குத் தோன்றுகின்றது; அவன் சந்திரகுப்தனுடைய சாம்ராஜ்யத்திற் சௌராஷ்டிரத்து அதிகாரியாயிருந்து பெயர்பெற்ற 'சுதர்சன ஏரி'யைக் கட்டிய ராஜவைசிய புஷ்யகுப்தனுடைய மகனாயிருக்கக் கூடுமென்றே நான் நினைக்கிறேன். அந்தக் குடும்பம் கௌரவம் மிக்க ராஜரிகமான குடும்பமென்பதும், அதனில் பிரவிசித்திக்குரிய பெரிய யோக்கியதை வாய்ந்த ஸ்திரீ புரு

ஷர்கள் தோன்றுதல் கூடுமென்பதும் தெளிவாய்த் தெரியும் விஷயங்களாம். இந்தச் சந்தர்ப்பத்தில் உஜ்ஜயினிக்குச் சமீபத்திலுள்ள வேதிசாகிரி என்னும் ஊரிலிருந்து அசோகனுக்கு ராணியாக வந்த தேவிசாக்கிய குமாரியும், அவளுக்குப் பிறந்த குழந்தைகளான மகேந்திரன், சங்கமித்திரன் என்பவர்களும் ஞாபகத்திற்கு வருகின்றனர். ஆகையால், 'சந்திரகுப்த முனீந்திரன்' அல்லது, 'பிரபாசந்திரன்' என்பவனும் அபூர்வசக்திவாய்ந்த குடும்பத்தில் தோன்றியவனென்று நினைப்பது பொருந்தாதிருக்கவில்லை. அசோகனுடைய காலத்தில் துஷஸ்பன் (Tushaspha) என்னும் யவனன் சௌராஷ்டிரத்து அதிபதியாயிருந்தனனென்று தெரிவதனால், மேற்சொல்லிய ஊகம் உறுதிப்படுகின்றது. புஷ்பகுப்தனது மகன் ஜைனத்துறவியானமையினாலும், அவனுக்குச் சந்ததியில்லாமையினாலும், யவனன் ஒருவன் மண்டலாதிகாரியாக நியமிக்கப்பட்டனன் என்பது தெளிவு.

## சாணக்கியர் கோச்சிநாட்டுத்தமிழர்

**சாணக்கியர்** தென்னாட்டினரென்றே சொல்லல் பெரும்பான்மையும் தகும். அவருடைய பெயர் 'திரமிளன்' என்பதனால் அவர் தமிழரென்று தெரிகிறது. கி. பி. 3-ஆம் நூற்றாண்டில் ஆந்திரசாம்ராஜ்யம் நலிவுறுமளவும், 'திரமிளன்' அல்லது 'திராவிடன்' என்னும் சொல் தமிழனையே குறித்துக்கொண்டிருந்தது. இன்றைக்கும் தமிழரை ஆந்திரர்கள் 'திராவிடர்'என்றே சொல்கிறார்கள். அர்த்தசாஸ்திரத்தைப் பார்த்தால் அதனை ஆக்கியவர், தென்னாட்டுப்பழக்க வழக்கங்களும், ஊர்களும், வியவகாரங்களும் நன்றாகத் தெரிந்தவரென்று விளங்குகின்றது. குமாரபூஜையையும் குமாரி பூஜையையும்

ஆமோதித்து அந்நூல் பேசுவதனாலே, சாணக்கியர் கன்னியாகுமாரிக்குச் சமீபத்திலுள்ள பிரதேசத்துத் தமிழ ரென்று தெரிகிறது. கொச்சி ஸம்ஸ்தானத்தில் அநேக சிறு குன்றுகளும் சிற்றோடைகளும் இருக்கின்றன. அவை களில் உற்பத்தியாகும் வஸ்துக்களைப்பற்றிச் சாணக்கியர் அவ்வர்த்தசாஸ்திரத்தில் எழுதியிருக்கின்றார். ஆதலால், அவர் முயிரிக்கோடு, முச்சிரி, முஸிரிஸ் அல்லது, கிராங்கனூர் (கொடுங்கல்லூர்) என்று இக்காலத்துக் கொச்சி ஸம்ஸ்தானத்தில் வழங்குகிற ஊரிற் பிறந்தவரா யிருப்பரென்று நினைக்கலாம். அந்நாளில் அவ்வூர் தமிழ் நாட்டைச் சேர்ந்திருந்தது. தமிழ்க்கலாநிலயமாயும் இருந்தது. தென்மொழியும் வடமொழியுங் கலந்து உற் பத்தியான மலையாளபாஷை அப்போது இல்லை. கேரள மென்னும் மலையாளதேசமானது அதர்வவேதப் பிரயோ கங்களுக்கும், சூனியமந்திரவாதிகளுக்கும், வைத்தியர் களுக்கும், சோதிடர்களுக்கும் முக்கியமான இருப்பிட மாய் இருக்கின்றது. மந்திரப் பிரயோகத்தினால் ஆட்களைக் கொல்லவல்லோமென்றும், ஓநாய் புலி முதலான துஷ்ட மிருகங்களாக உருமாறி நிற்போமென்றும், மறைப்பு மையின் பிரபாவத்தால் பிறர் கண்ணுக்குத் தெரியாமல் வியவகரிப்போமென்றும் சொல்கிறவர்களை இன்றைக்கும் அந்நாட்டில் எளிதிற் காணலாம். அவர்களில் ஒருவகை யார் ஓடியர் எனப்படுவர். இவர்கள் அசாத்தியமான காரியங்கள் செய்யவல்லாரென்று ஜனங்கள் நினைக்கிறார் கள். கௌடல்யர் தமது அர்த்தசாஸ்திரத்தில், 14-ஆம் பகுதியில், சில அற்புதமான விஷயங்களும் அசாத்திய மான காரியங்களும் சொல்லுகின்றார். உதாரணமாக, மந்திரங்களினாலும் மருந்துகளினாலும் சத்துருவை ஊறு

படுத்தல், ஏமாற்றத்தக்க அதிசயமான உபாயங்களையும் சாதனங்களையும் கற்பித்தல், பிறர் கண்ணுக்குப் புலப்படா திருத்தல், சாகச்செய்தல், குருடாக்கல், க்ஷயரோகங்கள் உண்டாக்குதல், பயித்தியம் பிடிக்கச்செய்தல் முதலான காரியங்கள் சாத்தியமென்று அவர் சொல்லியிருக்கிறார். இந்தக் காரியங்கள் சாத்தியமென்று ஆக்ஷேபிக்காமல் நம்பக்கூடியவர்களை மலையாளத்தில் இன்னும் காணலாம். அம்மந்திரப்பிரயோகங்கள் உக்கிரசக்திகள் வாய்ந்தவை. அவைகளினால் மேற்சொல்லிய காரியங்களைச் சாதிக்கலாம் என்று ஆயிரக்கணக்கான அந்நாட்டார் இன்றைக்கும் நம்புகிறார்கள். தஞ்சாவூர் ஜில்லாத் தமிழர்கள் 'மலையாளம்' செய்துவிடுவோமென்று தம் எதிரிகளைப் பயமுறுத்துகிறார்கள். 'மலையாளம்' செய்வதெனின், சூனியம் வைக்கிறதென்னும் அர்த்தத்தில் அவர்கள் பேசுகிறார்கள். ஆகையால், அதர்வவேதத்தில் நிபுணராகவும், க்ஷுத்திரமந்திரங்களில் வல்லவராகவும் இருந்த சாணக்கியர் கேரளதேசத்தவரென்று சொல்வதே பொருந்துமல்லாது, தமிழ்நாட்டினரென்று சொல்வது பொருந்தாது.

மலையாளத்திலும், கொச்சிஸம்ஸ்தானத்திலும், 'வாஸ்து' என்னும் சொல் இன்றைக்கும் வீடு, வாசல், வயல், தோட்டம், கட்டடங்கள், குளங்கள் ஆகிய இவைகளையெல்லாம் சேர்த்துக் குறிப்பதற்கு உபயோகிக்கப்படுகின்றது. இது முக்கியமாகக் கவனிக்கத்தக்கது. ஏனெனில், இந்தியாவில் வேறு எந்தப் பிரதேசத்திலும் 'வாஸ்து' என்னுஞ் சொல் இவ்வர்த்தத்தில் வழங்கப்பெறுவதில்லை. இவ்வர்த்தத்திலேயே சாணக்கியர் வாஸ்து என்னுஞ் சொல்லைத் தமது அர்த்த சாஸ்திரத்தில் உபயோ

கித்திருக்கின்றார். ஆனதனாலும், சாணக்கியர் கேரளத்தாரே யென்று ஊகிக்கவேண்டி யிருக்கின்றது. இதுபோலவே, ஆடி அறுதியும் ஆவணிப் பிறப்பும் (ஆஷாட மாதக் கடையும், சிராவணமாத முதலும்) அர்த்தசாஸ்திரத்திற் சொல்லியபடியே கேரளத்தவருக்கு வருஷத்தில் முக்கிய மான தினங்களாகும்; அத்தினங்களிலேயே அவர்கள் தங்கள் பணவிவகாரக் கணக்குகளை முடித்துப் புத்தாண்டுக் கணக்கைத் தொடங்குகிறார்கள்.

"சோழியன் குடுமி சும்மா ஆடாது" என்னு மொரு பழமொழி வழங்குகின்றது. அஃது ஏதேனுமொரு விஷமத்தைச் செய்துகொண்டே, அல்லது, ஆலோசித்துக் கொண்டேயிருக்கும் என்பது அதன் கருத்து. இஃது, ஆடிக்கொண்டிருந்த சாணக்கியருடைய உச்சிக் குடுமியைக் குறிக்கின்றதென்பது திண்ணம். அவர் தமிழர் என்பதற்கு இதுவுமோர் அத்தாட்சியாம். ஆனால், கொடுங்கல்லூர் (கிராங்கனூர்) க்காரரல்லரென்பதற்கு ஆதாரமாகாது. ஏனெனில், சோழநாட்டுப் பிராமணர்கள் பலர் குடியேறிய ஊர்கள் கேரளநாட்டில் அநாதிகாலமாக இருந்திருக்கின் றன; இந்நாளிலும், மலையாளத்திலும், கொச்சியிலும், திரு வாங்கூர் ராஜ்யத்திலும் இருக்கின்றன.

## அர்த்தசாஸ்திரம் ஆக்கியோன்

"அர்த்தசாஸ்திரம்" என்பது தென்னாட்டார் சிலர் கற்பித்த நூலென்று மேனாட்டுப் புலவர் சிலர் வாதிக் கின்றனர்; எங்ஙனமாயினும், சந்திரகுப்தமௌரியனுடைய பிரதான மந்திரியாயிருந்தவனெவனும் ஆக்கியதன்றென்று சொல்கின்றனர். சாணக்கியர் என்பவர் ஒரு காலத்திலும் இருக்கவில்லை யென்பதற்கு மெகாஸ்தனீஸ் என்பவன்

அவர் பெயரைக் குறிக்காததையே ஆதாரமாகக் கொள்கின்றனர். இது நகைப்புக்கிடமான வாதமென்று ஏற்கெனவே காட்டியுள்ளோம். அன்றியும், மெகாஸ்தனீஸ் எழுதிய யாத்திரைவரலாறு முற்றும் நமக்குக் கிடைக்கவில்லை. அதனினின்று எடுத்த சில பகுதிகள் மாத்திரமே காப்பாற்றி வைக்கப்பட்டிருக்கின்றன. ஆனதனால், சாணக்கியரின் பெயரை அவன் குறிக்கவேயில்லை என்று சாதிப்பதும் சரியன்று. ஒருவேளை அவன் அவரைக் குறிக்கவே இல்லையென்று கொள்வோமாயினும், அவன் பாடலிபுரத்திற்கு வந்திருந்த காலத்தில் மிகச் சாமானிய புருஷனை ராக்ஷஸனை மந்திரியாக வைத்துவிட்டு அவர் பாடலிபுரத்தினின்றும் வெளியே போயிருக்கலாம். அசோகனுடைய கல்வெட்டுக்களில் கௌடல்யருடைய அர்த்தசாஸ்திரத்திலுள்ள வாக்கியங்கள் பல முழுமையாகக் காணப்படுகின்றன. அவற்றிலுள்ள பதங்கள் பலவற்றிற்கு அர்த்தசாஸ்திரத்தைக் கொண்டே பொருள்கூற வேண்டியதாயிருக்கின்றது; வேறு வகையில் அவை பொருள்படா. இதனால் கி. மு. 3-ஆம் நூற்றாண்டுக்குரியன வெனச் சந்தேகமில்லாமற் சொல்லக்கூடிய கல்வெட்டுக்களோடு ஒப்பிட்டுப் பார்க்கையில், அர்த்தசாஸ்திரமானது அவைகளுக்கு முற்பட்ட காலத்தில் ஆக்கப்பெற்றதென ஏற்படுகின்றது. ஆகையால், அர்த்தசாஸ்திரமானது கௌடல்யர் என்னும் சாணக்கியர் நூலாகவே இருக்கவேண்டும். அவரே நவ நந்தர்களை அழித்துச் சந்திரகுப்த மௌரியனுக்கும், அவனது மகன் பிந்துசார அமித்திரகாதனுக்கும் பிரதான மந்திரியாயிருந்திருக்கவேண்டும். அந்நூல் இப்பொழுதுள்ளபடி குறைந்த பக்ஷம் கி. மு. 300-ஆம் ஆண்டிலேயே இருந்திருக்கவேண்டும். ஆகையால், அதனிற் சொல்லியிருக்கிற

படி ராஜநரேந்திரன் என்னும் சந்திரகுப்தனுடைய உத்தரவின்மேல் கௌடல்யரால் ஆக்கப்பட்டிருக்கவேண்டும்.

## மௌரியரின் தென்னிந்தியப் படையெழுச்சி

தென்னிந்தியாவின்மீது மௌரியர் படை யெடுத்து வந்தது மெய்யோ பொய்யோ வெனச் சில ஐரோப்பியப் புலவர்களும் இந்தியப் புலவர்களும் ஐயுறுகின்றனர். மாமூலனார், பரங்கொற்றனார், ஆத்திரேயனார் என்னும் பண்டைக் காலத்துத் தமிழ்க்கவிவாணர் மூவரும் மௌரியரின் படையெழுச்சியைப்பற்றிச் சொல்ல வேண்டிய ஆவசியகம் என்னவென்று மேற்சொல்லிய ஆட்சேபகர்கள் விளக்கவில்லை. கோசர்களுக்கும் வடுகர்களுக்கும் சகாயமாகப் புதிய மௌரியர்கள் படையெடுத்து வந்தனர். மௌரியர்கள் தங்கள் வானத்தை அளாவும் கொடிகளுடனும் விண்ணுயர் குடையுடனும், பொன்னிரதங்களிலேறிப் பொதியில் மலையைக் கடந்து வந்தபின், தென்னார்க்காடு ஜில்லாவைச் சேர்ந்த மோகூர் என்னும் பிரதேசத்தரசன் தோல்வி யுற்றனன்; பொதியில் மலையைக் கடப்பதற்கு மௌரியர்கள் அம்மலையின்மீது தேர்ச்சாலையொன்று அமைத்தனர்— என்று அம் மூன்று புலவர்களும் கற்பனை செய்திருப்பானேன் என்பதற்குச் சமாதானம் சொல்லவில்லை. இந்தத் தமிழ்ப் பேராசிரியர்கள் தமிழ் மன்னர்களின்மீதும், அவர்களுடைய படைகளின்மீதும் மிக்க அபிமானங் கொண்டவர்கள். அவர்களை எவ்விடத்தும் பெருமைப் படுத்திப் பாராட்டிப் பேசத் தக்கவர்கள். அப்படிப்பட்ட புலவர்கள் தம் தமிழ் மன்னர் மௌரியரிடம் தோல்வியுற்றனரென்று ஒருபோதும் கற்பனை செய்திருக்கமாட்டார்கள். நவநந்தர்களைப் பற்றியும், அவர்கள் திரட்டி வைத்திருந்த

திரவியக் குவியலைப் பற்றியும் அவர்களுக்குத் தெரியும். அதுவன்றி, தேரோடும் ரஸ்தாக்களை அமைக்கும் விவரம் அர்த்த சாஸ்திரத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது. குந்தலம் முதலான பிரதேசங்கள் நந்தருடைய ஆட்சியிலும் மௌரியருடைய ஆட்சியிலும் இருந்ததாகப் பழைய தென்னிந்தியக் கல்வெட்டுக்கள் பலவற்றிற் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதிகாலத்துத் தென்னிந்திய மன்னர் சிலர் மௌரிய வமிச பரம்பரையில் தோன்றியவர்களென உரிமை கொண்டாடினர். இதனாலும், இந்தியாவின் தென்கோடியின்மீது மௌரியர் படையெடுத்து வந்தன ரென்பது உறுதிப்படுகின்றது.

அதுநிற்க, அசோகனுடைய சிலா சாசனங்களைக் கூறுபடுத்தி I, II, III என்பன முதலான பகுதிகளாகப் பதிப்பித்திருக்கின்றனர். அவற்றுள் 2-ஆம் பகுதியிலும் 13-ஆம் பகுதியிலுமுள்ள கல்வெட்டுக்களில் சோழ பாண்டிய கேரள சத்தியபுரநாட்டு அரசர்களின் பெயர்கள் குறிக்கப்படவில்லை. ஆனால், ஸிரியா, எகிப்து, மாஸிடோனியா, ஸிரீன், எபிரஸ் என்னும் நாடுகளின் அரசர் முறையே அன்டியாகஸ், டாலமி, அன்டிகோனஸ், மேகாஸ், அலெக்சாண்டர் என்று குறிக்கப்பட்டிருக்கின்றது. இதனால் என்ன தெரிகின்றது? தென்னிந்திய மன்னர்களும் சிங்களத்தரசனும் மௌரிய சக்கரவர்த்திக் குட்பட்ட சாமந்த ராஜர்கள். ஆதலால், மௌரியச் சக்கரவர்த்தி நெருங்கிய பழக்கத்தை முன்னிட்டு அவர்களின் பெயரைக் குறிக்காமல் பொதுவாகப் பேசினன் என்பதாம். எதுபோலவெனின், நமது சக்கரவர்த்தியாராவது வைஸிராயாவது இப்போது மைசூர் மகாராஜாவையும்,

கொச்சி மகாராஜாவையும், திருவாங்கூர் மகாராஜாவையும் குறிப்பிடுவதுபோல் என்க.

## அலெக்சாண்டருக்குச் சந்திரகுப்தன் கோபமூட்டினன்

அலெக்சாண்டருக்குக் கோபமுண்டாகும்படி சந்திர குப்தன் நடந்துகொண்டான்; அதற்காகச் சந்திரகுப்த னைக் கொல்லும்படி அலெக்சாண்டர் உத்தரவு செய்தான்; உற்ற சமயத்தில் ஓட்டம் பிடித்துச் சந்திரகுப்தன் அச் சாவுக்குத் தப்பிப் பிழைத்தானென்று ஜஸ்டின் என்னும் சரித்திரக்காரர் எழுதி யிருக்கிறாரென்று மேலே சொன் னோம். அந்த வார்த்தையைத் திருத்தி, அலெக்சாண்டருக் குச் சந்திரகுப்தன் கோபம் விளைவிக்கவில்லை, சாவுக்குத் தப்பியோடவுமில்லை என்று வேறு சில சரித்திரகாரர் சொல் கின்றனர். சந்திரகுப்தன் கோபமுண்டாக்கியது நந்த ராஜனுக்கே யெனவும், அவன் கையாற் சாவுக்குத் தப்பி ஓடிப் போயின னெனவும் அவர்கள் கூறுகின்றனர். ஜஸ்டின் என்னும் சரித்திரக்காரரைத் திருத்துவதற்கு இவர் களுக்கு ஆதாரமும் இல்லை, அவசியமும் இல்லை யென்றே நான் சொல்லுவேன். 'வாக்குத் துடுக்கினுற் சந்திரகுப்தன் நந்தராஜனுக்குக்கோபம் உண்டாக்கினன்; ராஜன் அவன் தலையை வெட்டச் சொன்னன்; அவ்வாக்கினைக்குத் தப்பிச் சந்திரகுப்தன் ஓடிப்போனன்: அங்ஙனம் ஓடிக் களைத்துப் படுத்து உறங்குகையிற் சிங்கமொன்று வந்து அவனது வியர்வையை நக்கி இளைப்பாற்றிப் போயது' என்று இந்துக் களேனும் ஜைனர்களேனும் பௌத்தர்களேனும் கிரேக்கர் களேனும் எவ்விடத்தும் சொல்லவில்லை. சாணக்கியர் துணிந்து பேசியதனல் அவரைக் கொல்லும்படி நந்த ராஜன் கட்டளையிட்டனன்; ராக்ஷஸன் குறுக்கிட்டுத்

தடுத்ததனால், அத்தண்டனை நிறைவேற்றப் பெறவில்லையென்று இந்திய சரித்திரங்கள் கூறுகின்றன. நந்தருடன் சந்திரகுப்தன் மனஸ்தாபப் பட்டானென்று புனைந்து எவரும் ஜஸ்டின் என்னும் சரித்திரக்காரரைத் திருத்த முடியாது. நந்தன் இருந்த இடம் பாடலிபுரம். அதற்குச் சமீபத்தில் சிங்கங்கள் இல்லை. அலெக்சாண்டர் இருந்த பஞ்சாபையடுத்த காட்டிலேயே சிங்கங்கள் அதிகம் என்பது மறுக்கமுடியாத விஷயம். இதனாலும், ஜஸ்டின் சொல்வதற்கிணங்க, அலெக்சாண்டருடனேயே சந்திரகுப்தன் சண்டையிட்டனன் என்று கொள்ளக் கிடக்கின்றது.

அலெக்சாண்டரைச் சந்திரகுப்தன் சந்தித்தனன் என்று ஒப்புக்கொண்டு புளூடார்க்கு (Plutarch) தெளிவாகச் சொல்லியிருக்கின்றார். அலெக்சாண்டரோடு அவன் சண்டையிடவில்லை. அதனால், அவனைக் கொல்லும்படி அலெக்சாண்டர் கட்டளையிடவில்லை, அவன் ஓடி உயிர் பிழைக்கவில்லையென்று சொல்வோமானால், அலெக்சாண்டருடைய சேனாதிபதிகளைச் சந்திரகுப்தன் அடித்துக் கொல்வானேன்? ஜஸ்டின் எழுதிய சரித்திரக்குறிப்பை மேலே எடுத்துக் காட்டியிருக்கின்றோமே. அதை முழுதும் ஒன்றாகச் சேர்த்துப் படித்துப்பார்த்தால், அலெக்சாண்டரோடேயே சந்திரகுப்தன் சண்டையிட்டான், அலெக்சாண்டர் கையாற் சாகாமலே தப்பியோடினான் என்று சிறிதும் சந்தேகமில்லாமல் ஏற்படும். "அலெக்சாண்டரோடு" என்பதை, "நந்தனோடு" என்று கட்ஷ்மிடு (Gutschmid) என்பவர் திருத்தினர். அந்தத் திருத்தத்தை மாக்கிரிண்டில், வின்சென்டு ஸ்மித்து முதலாயினோர் (Mccrindle, Vincent Smith) அங்கீகரித்தனர். இந்தத் திருத்தம் சரியானதன்றென்று வற்புறுத்திச் சொல்ல

வேண்டியிருக்கின்றது. சந்திரகுப்தனே, பெருமைகொண்ட இந்தியராஜகுமாரன், யுவன். அப்படிப்பட்டவன் அலெக்சாண்டரை முதன் முதல் சந்தித்தபோது, அவனுக்குச் சிற்றம் உண்டாகும்படி பேசினனெனின், எவரும் அதை அதிசயமாகக் கொள்ளார். அலெக்சாண்டரோ, அற்புதமான வெற்றிகள் பெற்றுக் கர்வங்கொண்டவன்; மிக்க முன்கோபமுள்ளவன். அப்படிப்பட்டவனுடைய அகம்பாவத்தைச் சந்திரகுப்தன் தீண்டியபோது, மதங்கொண்ட அலெக்சாண்டர் அவனை உடனே கொன்றிருக்கக் கூடியவனே; அல்லது, கொன்றுவிடக் கட்டளை செய்திருக்கக் கூடியவனே. அத்தகைய அற்ப காரணத்தினுல் அவன் தன் ஆப்தநண்பனுன கிளீடாஸ் என்பவனைக் கொன்ருன்; கலிஸ்தினீஸ் பிலோடாஸ் என்பவனையும், பார்மீனியன் என்பவனையும் கருணையின்றிப் புத்தியில்லாமற் கொன்ருன். அவனுடைய முன்கோபத்துக்கு இவை போதிய உதாரணங்களாம்.

## பர்வதகன்

முத்திராராக்ஷஸம் என்னும் நாடகத்தில் பர்வதகன் என்னும் அரசன் பெயர் வந்திருக்கின்றது. அவ்வரசன் நேபாளத்தில் இருந்த அரசனுய் இருக்கவேண்டுமென்று சில புலவர்கள் சொல்லுகிருர்கள்; அவன் சலூகஸாய் இருக்கவேண்டுமென்று வேறு சிலர் சொல்லுகிருர்கள்; பெரிய போரஸாக (Poros Senior) இருக்கவேண்டுமென்று இன்னும் சிலர் சொல்லுகிருர்கள். அவன் பெரிய போரஸே யென்று நான் நினைக்கிறேன். அவன் ஒருவனே பலபராக்கிரமம் மிகுந்தவனுயிருந்து காசுமீரம், மலயம், குலூதம், ஸிந்து, ஸெளராஷ்டிரம் என்னும் தேசத்தரசர்

களைத் தனக்குச் சாமந்தராஜர்களாகக் கொள்ளவும், யவன பாரஸிக கிராத காம்போஜ பாஹ்லிகத்து ஆட்களைக் கூலிப் படையாக வைத்திருக்கவும் சக்தியுள்ளவனுயிருந்தான். இவர்களைத் தனக்கு அனுசரர்களாக நேபாளத்தரசன் எவனும் வைத்திருக்கமுடியாது. அன்றியும், காசுமீரம், மலயம், குலூதம் என்னும் தேசாதிபதிகள் பர்வதகனுடைய ராஜ்யத்தைப் பங்கிட்டுக்கொள்ள ஆசைப்பட்டார்களெனச் சொல்லப்பட்டிருக்கின்றது. அதனால், பர்வதகனுடைய ராஜ்யமானது அவர்களுடைய தேசங்களுக்கு இடையில் இருந்ததெனத் தெரிகின்றது. இப்படிச் சொல்வது போரசினுடைய ராஜ்யங்களின் நிலைக்கும் பொருத்தமாக இருக்கின்றது.

இந்துக்களுடைய சமச்சடங்குகளையே பர்வதகன் அனுசரித்து வந்தானென்று சொல்லப்பட்டிருப்பதனால், அவன் சலூகஸாக இருக்கமுடியாதென்று ஏற்படுகின்றது. அன்றியும் சலூகஸானவன், சந்திரகுப்தனிடமிருந்து சில பிரபலமான தாதுபுஷ்டிமருந்துகளைப் பெற்றனனென்று சொல்லப்பட்டிருக்கிறதே யொழிய, விஷமாதை ஏற்றனனென்று சொல்லப்படவில்லை.

போரசு அல்லது பௌரவனைப் 'பர்வதகன்' என்று சொல்லியிருப்பதனால் நாம் கலக்கவேண்டியதில்லை. காசுமீரத்துக்கும் பஞ்சாபுக்கும் இடையிலுள்ள மலைகளுக்கு அதிபதிகளான அபிசாரனும் அர்ஷகேசியும் பெரிய போரசுக்கு அடிமைப்பட்டிருந்தனர். ஆனதனால், அவன் தன்னைப் 'பர்வதேசுவரன்' (மலைகளுக்கு அதிபதி) அல்லது, 'பர்வதகன்' (மலைநாட்டான்) என்று நியாயமாகவே சொல்லிக்கொண்டிருக்கலாம். கங்காதீரத்து

இந்துக்கள் அவனைப் 'பர்வதகன்' அல்லது 'மலையன்' என்று சந்தோஷமாகவே சொல்வரென்பது ஒருதலை. ஏனெனில், அவன் புரு வமிசத்திற் பிறந்தவனென்றும், அதனால் 'பௌரவன்' என்றும் பெருமையாகப் பேசிக் கொண்டிருந்தான். 'பௌரவன்' என்னும் வார்த்தையைச் சிலேடையாக அவர்கள் 'பர்வதகன்' எனத் திரித்துச் சொல்லலாம். பஞ்சாபும் வடமேற்குப் பிரதேசமும் 'வேத நாடு' என்னும் புண்ணிய பூமியாகக் கருதப்பட்டிருந்தன வல்லவா? கங்காதீரத்திலுள்ள அகம்பாவம் மிகுந்த இந்துக்கள் மௌரியருடைய காலத்தில் அந்தப் பிரதேசத்தைப் புண்ணிய பூமியெனக் கருதாமல் இகழத் தலைப்பட்டனர்; அவ்விடத்து ஜனங்களை இழிவான இந்துக்களென்றும், மிலேச்சர்களென்றுங்கூட நினைக்கலாயினர். இவ்வபிப்பிராயம் பல புராணங்களிலும் தர்மசாஸ்திரங்களிலும் பிரதிபலித்திருக்கின்றது. இந்தியாவின் வடமேற்குப் பாகத்தைப் பாரஸீகர் வென்று கைப்பற்றிக் கொண்டதனால் இந்த நிலைமை மிகக் கேடுற்றது. ஏனெனில், பாரஸீகரும் இந்துக்களும் தாயாதிகளாவர்; தாயாதிக்குரிய பகைமையை ஒருவருக்கொருவர் காட்டிக்கொண்டிருந்தனர். தேவரென்று பாரஸீகர் கொண்டாடுகிறவர்கள் இந்துக்களுக்கு அசுர ராஞர்கள்; தேவரென்று இந்துக்கள் சொல்கிறவர் பாரஸீகருக்கு அசுர ராஞர்கள். ஆரியர் (பூஜ்யர்) என்னும் பெயரை இந்துக்கள் அகங்கரித்துத் தமக்கே உரிமையாக்கிக்கொண்டனர். அந்தப் பெயரைப் பாரஸீகர் 'இழிஞர்' என்னும் அர்த்தத்தில் வழங்கலாயினர். ஆகையால், பாரஸீகர்களோடு சம்பந்தப்பட்ட வடமேற்குப் பிரதேசத்து இந்துக்களைக் கீழ்நாட்டிலுள்ளவர்கள் முன்னினும் இழிவாக நினைக்க நேர்ந்தது அதிசயமன்று.

அது நிற்க, பர்வதகனுக்கும் மலயகேதுவுக்கும் விஜயை என்னும் மாது படைத்துணைவியாக இருந்தனள். ஜாஜாலி என்பவள் சேனாதிபதியாக இருந்தனள். இங்ஙனம் ஸ்திரீகளை இவ்வுத்தியோகங்களில் வைத்துக்கொள்வது நந்த ராஜர்களுக்கும் மௌரிய ராஜர்களுக்குமே வழக்கம். இந்தக் காரணத்தால் பர்வதகனும் மலயகேதுவும் நேபாளத்து அரசராயிருக்கமுடியாது. அந்நாளில் நேபாளம் பிரபலம் இல்லாது தாழ் நிலையில் இருந்தது. பர்வதகனும் மலயகேதுவும் பஞ்சாபுப் பிரதேசத்து அரசர்களாகவே இருக்கவேண்டும். அன்றியும், 'மலயகேது' என்னும் பெயருக்கு 'மலயத்தை அழித்தவன்' என்று அர்த்தம். அவன் போரசினுடைய மகன். இளவரசனாகிய அவன் இப்போது கர்வால் என்று சொல்லப்படும் மலயத்தரசனை வென்று போரசுக்கும் தனக்கும் அடிமையாக்கிக்கொண்ட சம்பவத்தையொட்டி, அவனுக்கு அப்பெயர் வந்திருக்கலாம்.

## இளைய போரஸ்

கிரேக்க சரித்திரங்களில் பெரிய போரசைப்பற்றிக் கடைசியாகச் சொல்லியிருப்பது கி.மு. 321-இல் ஆகும். அஃது எந்தச் சந்தர்ப்பம் எனின், அலெக்சாண்டருடைய ராஜ்யத்தை அவனுடைய தளகர்த்தர்கள் இரண்டாம்முறை திரிபரதேஸாஸ் (Triparadeisos) என்னுமிடத்திற் பங்கிட்டுக் கொண்டபோது, பஞ்சாபுக்கும் ஸிந்து மாகாணத்துக்கும் அதிபதியாகப் பெரிய போரசை உறுதிப்படுத்தியபோதாகும். ஆனதனால், சாணக்கியர் சொல்லிய ஆசைவார்த்தைக்குட்பட்டு கி. மு. 321-ஆம் யாண்டின் பிற்பகுதியில் _அவன் பாடலிபுரத்துக்குப்

போயிருந்து அங்குக் கொல்லப் பெற்றனனென்பது கூடாத காரியமாகாது. கி.மு. 317-இல் போரசு என்பவன் மோசடியாகக் கொன்றுனென்று சொல்லப்பட்டிருக்கிறது. இவன் பெரிய போரசின் உடன்பிறந்தவரின் மகனை இளைய போரசு என்றே நான் நினைக்கிறேன். ஏனெனில், அவனுக்கு 129 யானைகளே இருந்தன. பெரிய போரசுக்கோவெனின், ஹைடாஸ்பஸ் சண்டை நடந்த காலத்திலேயே 200 யானைகள் இருந்தன; அலெக்சாண்டர் அவனுக்குக் கொடுத்த தேசப்பகுதிகளினுல் அவனுடைய ராஜ்யம் விரிவுற்றபின், அவன் எத்தனையோ யானைகளை அதிகமாகச் சேர்த்திருக்கவேண்டும். அன்றியும் அலெக்சாண்டரை எதிர்த்து ஈடுகொடுத்த வீரனை பெரிய போரசை அவ்வளவு எளிதாக யூடிமாஸ் ஏமாற்றிக் கொன்றிருக்க முடியாது. மற்றும், பெரிய போரசு ஆஜானுபாகுவான பெரிய ஆள் என்றும், குண்டு பாயாத அற்புதமான அயக் கவசம் அணிந்தவனென்றும் கிரேக்க சரித்திரகாரர் வர்ணித்திருக்கிறுர். அப்படிப்பட்டவனை அவ்வளவு எளிதில் யூடிமாஸ் கொன்றிருக்கமுடியாது. அவனைக்காட்டிலும் மிக மிகத் தாழ்ந்த உடல்வலியும் மனவலியும் உள்ள இளைய போரசை யூடிமாஸ் ஏய்த்துத் தந்திரமாக வரவழைத்து எளிதிற் கொன்றிருக்கக்கூடும் என்பதே சரி.

## ஆம்பீசு

இனி ஆம்பீசைப்பற்றி ஒரு வார்த்தை சொல்வோம். கடைசியாக அவனைப்பற்றியுள்ள சரித்திரக் குறிப்பு கி. மு. 321-இல் ஆகும். அலெக்சாண்டருடைய ராஜ்யங்கள் திரிபரதேஸாஸ் என்னுமிடத்தில் இரண்டாம் முறை பங்கிடப்பெற்றபோது ஸிந்துநதிக்கும் ஹைடாஸ்பஸ்

நதிக்கும் இடையிலுள்ள அவனுடைய தேசத்திற்கு அவனே அதிபதியென ஊர்ஜிதப்படுத்தப்பட்டான். அதற்குமேல் அவனைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை. நலிவு நீங்கிப் பொலிவு திரும்பத் தோன்றுகையில் தக்ஷசிலை யானது உத்தரபதப் பிரதேசத்திற்கு நியமிக்கப்பட்ட மௌரிய வைஸிராயின் தலைமை ஸ்தானமாக இருக்கின்றது. அதை அவ்வைஸிராயே நேரே பரிபாலித்து வந்ததாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆம்பீசும் அவனது சுற்றத் தாரும் எங்குப்போயினரோ, என்னவாயினரோ தெரிய வில்லை. ஆனால், பிந்துசாரனுடைய காலத்திலும் அசோக னுடைய காலத்திலும் தக்ஷசிலைக் குடிகள் கலகித்தெழுந்த தாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. துஷ்டமந்திரிகள் அவர் களை அவமானப்படுத்தியதாலேயே அவர்கள் கலகித்தன ரென்றும், மௌரியச் சக்கரவர்த்தியின்மீதும் வைஸிராயின் மீதும் அவர்கள் குறைகூறவில்லையென்றும் சொல்லப்பட் டிருக்கின்றது. அக்குடிகளைத் துஷ்டமந்திரிகள் சரியாகக் கௌரவிக்காமல் நிந்தையாக நடந்துகொண்டதனாலேயே அவர்களுக்கு மனவருத்தம் உண்டாயிற்றென்றும், வேறு வகையில் அவர்களுக்குக் குறையில்லையென்றும் சமாதானம் சொல்லப்பட்டிருக்கின்றது. இதனால், ஆம்பீசின் வமிச பரம்பரை அற்றுப்போயிற்றென்று தோன்றுகிறது. அவ னுடைய வமிசக்கிளையினர் சிற்சிலர் இருந்தபோதிலும், அவர்களிடத்து ஜனங்களுக்கு ராஜவிசுவாசம் இல்லை யென்றும், பழைய ஆம்பீசு ராஜவமிசத்தவரின் பரிபால னத்தை அவர்கள் பெருமையாகப் பாராட்டிக்கொள்ளவில்லை யென்றும் நாம் நினைக்கவேண்டியிருக்கின்றது. ஆதலால் ஆம்பீசுக்குச் சந்தானம் இல்லை; கிரேக்கர்களெல்லாம் அவனைவிட்டு நீங்கிப்போனபின், அவன் தற்கொலை செய்து

கொண்டான். ஆதலால், அவ்விசித்திரமான சம்பவத்தைக் கிரேக்கர்கள் அங்கிருந்து கண்கொண்டு காணுமையின் குறிப்பு எழுதிவைக்கமுடியாததாயிற்று என்று நாம் தீர்மானித்துக்கொள்வதே பொருத்தமாகும்.

## இது கதை வடிவம்

இக்கதை எழுதுவதில், உண்மையெனச் சரித்திரவாயிலாகத் தெரிந்த முக்கியமான விஷயங்களுக்கு, இயன்றவரையில் நான் விரோதமாகப் போகவில்லை. அர்த்தசாஸ்திரம், முத்திராராக்ஷஸம், பழைய கட்டடங்கள், புத்த சரித்திரக்குறிப்புக்கள், ஜைனசரித்திரக் குறிப்புக்கள், கிரேக்க சரித்திரக் குறிப்புக்கள் என்னும் இவைகளுள் உள்ள ஆதாரங்களை யெல்லாம் தழுவியே இதனை எழுதியிருக்கின்றேன். கிரேக்கர்களுடைய சரித்திரக் குறிப்புக்களையெல்லாம் மாக் கிரிண்டில் (Mc Crindle) என்பவர் திரட்டி "இந்தியாவின்மீது அலெக்சாண்டர் படையெழுச்சி" (Alexander's Invasion of India) என்னுமொரு சிறந்த புத்தகம் எழுதியிருக்கின்றார். ஆனால், சரித்திரக் குறிப்புக்கள் இல்லாத இடங்களிலும், சரித்திரம் நிச்சயமாகக் கூறுமற் சந்தேகமாக விட்டிருக்கிற இடங்களிலும் கதாசிரியனுக்குள்ள ஸ்வதந்திரத்தை மேற்கொண்டு சிறிது கற்பனை செய்துள்ளேன். 'கதைக்குக் காலுண்டோ?' என்பார்களல்லவா? சரித்திர சம்பந்தமான 'நாவலை' (Novel) எழுதுகிறவன் உண்மையென நிரூபிக்கப்பட்ட சரித்திர விஷயங்களுக்குக் கட்டுப்பட்டே இருக்க வேண்டுமென்னும் நிர்ப்பந்தமும் இல்லை; அவன் தன் மனம் போனவாறு மறைநிலையான இடங்களிலும் சஞ்சரிக்கலாம். 'ரவி நுழையாவிட்டாலும் கவி நுழைவான்.'

இக்கதைப் புத்தகத்தை முதலில் இங்கிலீஷில் அச்சிடுமுன் திருவனந்தபுரத்துக் கலாசாலைத் தலைவர் ஸ்ரீ ஸஹஸ்ர நாம ஐயர், சென்னையிலுள்ள டாக்டர் வைத்தியநாதசாமி ஐயர், சென்னை மாஜி 'ஆரியா' பத்திராதிபர் ஸ்ரீ தி. அ. சாமிநாத ஐயர் என்னும் என் நண்பர்கள் இங்கிலீஷ் டைப் பெழுத்துப் பிரதியைப் படித்துப் பார்த்துக் குணதோஷங்களை ஆராய்ந்து, நல்லாலோசனை சொல்லி அன்புடன் எனக்குப் புரிந்த உதவியைப் பெரிதும் பாராட்டுகின்றேன்.

ஆசிரியர்.

---

## கதாபாத்திரங்கள்

### புருஷர்

1. மகா அலெக்சாண்டர்.

2. சந்திரகுப்த மௌரியன், இந்தியச் சக்கரவர்த்தி.

3. சாணக்கியர், சந்திரகுப்தனுடைய பிரதான மந்திரி.

4. ஸுகல்பன் (சுமால்யன், ஔக்ரமேசன், சந்திரமேசன் எனவும் சொல்லப்படுவன்), மகதத்து நந்த ராஜன்.

5. ஸர்வார்த்தஸித்தி, ஸுகல்பனுக்கும் அவன் தம்பிமார்க்கும் சிறியதகப்பன்.

| | | |
|---|---|---|
| 6. | பாண்டுகதி | ஸுகல்பனென்னும் நந்த ராஜனுடைய சோதரர்; அவனுக்குக் கீழ் மாகாணதிபதிகளாய் இருந்தவர். |
| 7. | பூதபாலன் | |
| 8. | ராஷ்டிரபாலன் | |
| 9. | கோவிஷணகன் | |
| 10. | தசஸித்தகன் | |
| 11. | கைவர்த்தன் | |
| 12. | தனநந்தன் | |

13. பிந்துசாரன், சந்திரகுப்தனின் மகன்.

14. ஸுசீமன் என்னும் ஸுமனன்; பிந்துசாரனுடைய மகன்.

15. அசோகவர்த்தனன், பிந்துசாரனுடைய மகன்.

16. பெரிய போரஸ் (பூரு, பௌரவன், பர்வதகன், பர்வதேசுவரன் எனவும் சொல்லப்படுவன்), ஜீலம் நதிதீரத்து அரசன்.

17. மலயகேது, பெரிய போரஸின் மகன்.

18. அர்ஜுனன், பெரிய போரஸின் மகன்.

19. இளைய போரஸ், பெரிய போரஸின் சோதரர் மகன்.

20. வைரோசகன், பெரிய போரஸின் சகோதரன்.

21. ஸ்படிகேசன் (ஸ்பிடேகீஸ்), போரஸின் மைத்துனன்.

22. ஆம்பீசு (அம்பி), தக்ஷசிலை மன்னன்.

23. தக்ஷசிலைக்கிழவர், ஆம்பீசின் தந்தை.

24. சத்திய ஸ்ரீசத்கர்ணி, ஆந்திர மன்னன்.

25. படாலத்தரசன்.

26. கலிங்கத்தரசன்.

27. காமரூபத்தரசன்.

28. நேபாளத்தரசன்.

29. அசுவஜித்து, அசுவகர்களின் அரசன்.

30. அபிசாரன், காசுமீரத்துக்கு அருகிலுள்ள மலைப்பிர தேசத்து அரசன்.

31. அர்ஷகேசி, காசுமீரத்தருகிலுள்ளதொரு மலைப்பிர தேசத்துச் சிற்றரசன்.

32. புஷ்கராக்ஷன், காசுமீரத்தரசன்.

33. புஷ்கரதத்தன், அவனுடைய மகன்.

34. சித்திரவர்மன், குலூதர்களின் (குலு பள்ளத்தாக்கின்) அரசன்.

35. மூஷிகசேனன் (மூசிகேனஸ்), மேலைச்சிந்து அரசன்.

36. விந்துசேனன் (சுசேனன்), அவனுடைய மகன்.

37. விம்மநாதன், மலயத்து (சர்கால்) அரசன்.

38. மேகநாதன் (மேகாஸ்), கச்சுக்கும் சௌராஷ்டிரத்திற்கும் பாரஸீக அதிபதி.

39. சம்பாஸ் (சம்பு, சபேசன்), சைந்தவ வனத்தரசன்.

40. பிரத்யும்னன், அபிசாரனுடைய தம்பி.

41. ஹஸ்தி, புஷ்கலவதிப் பாளையக்காரன்.

42. சஞ்சயன், ஹஸ்தியின் ஞாதி.

43. பார்த்திவசேனன் (பார்த்திகேனஸ், ஆஸ்திகசேனன், ஆக்ஸிகேனஸ்), ஸிந்து மாகாணத்தில் மகா ஊர்தத்து அரசன்.

44. பாகேலா (பேகேலாஸ்), பஞ்சாபிலுள்ள ஒரு சிற்றரசன்.

45. தலஜங்கன், மாளவகோட்டு மண்டலாதிபதி.

46. லோகிதாக்ஷன், மாளவத்து இளவரசன்.

47. மோஹார் அரசன்.

48. வத்ஸத்து அரசன்.

49. சலூகஸ் நிகேடார், ஸிரியாவுக்கும் பாபிலனுக்கும் அரசன்.

50. அன்டியோகாஸ், அவனுடைய மகன்.

51. சௌபூதி, லவணபர்வதப் பிரதேசத்தரசன்.

52. காய்னஸ், அலெக்சாண்டரின் சேனையில் ஒரு தளகர்த்தன்.

53. பிலிப்பாஸ், மேலைச் சிந்து நதிதீரத்து மண்டலாதிபதி.

54. பைதான் (அகேனரின் மகன்), கீழ்ச் சிந்துநதி தீரத்து மண்டலாதி பதி.

55. நியார்க்காஸ், அலெக்சாண்டருடைய கப்பற் படைத் தலைவன்.

56. கிரேடிராஸ், அலெக்சாண்டருடைய தளகர்த்தரில் ஒருவன்.

57. மெலீகர், அலெக்சாண்டருடைய சைனியத்தில் ஒரு தள கர்த்தன்.

58. பாலிஸ்பெர்க்கான், அலெக்சாண்டருடைய தளகர்த்தர் களில் மற்றொருவன்.

59. யூடிமாஸ், மேலைச் சிந்துநதிப் பிரதேசத்திலிருந்த கிரேக்கப் பட்டாளத்துத் தலைவன்.

60. யூமினீஸ், அலெக்சாண்டருடைய காரியதரிசி.

61. டெமீட்ரியாஸ், சலூகஸின் தளகர்த்தன்.

62. அரிஸ்டோபூலஸ், அலெக்சாண்டருடன் வந்திருந்த கிரேக்க சரித்திரகாரன்.

63. கிரிடோடிமாஸ் (கோஸ் என்னும் ஊரான்), அலெக்சாண்டருடைய ரணவைத்தியர்களுள் ஒருவன்.

64. கிரிடோபூலஸ், அலெக்சாண்டருடைய மற்றொரு ரணவைத்தியன்.

| | |
|---|---|
| 65. பியுசெஸ்டாஸ் | அலெக்சாண்டரின் சகாக்கள் |
| 66. லியோனேடஸ் | |
| 67. லிஸிமேகாஸ் | |
| 68. ஹெபேயிஸ்டியன் | |
| 69. அரிஸ்டோனஸ் | |
| 70. பெர்டிக்காஸ் | |
| 71. டாலமி | |
| 72. பைதான் (கிரீடியஸின் மகன்) | |

73. ஆக்ஸியார்டீஸ், அலெக்சாண்டரின் மாமனார்.

74. ஓனெஸிகிரிடாஸ், அலெக்சாண்டருடைய சப்பலுக்கு வழி காட்டி.

| | |
|---|---|
| 75. தோவாஸ் | கட்ரோஸியாவின் கிரேக்க மாகாணாதிபதிகள். |
| 76. ஸிபிர்ட்டியாஸ் | |

77. மெகாஸ்தனீஸ், சலூகஸின் ராயபாரி.

| | |
|---|---|
| 78. திரியாஸ்பீஸ் | துஷ்பரிபாலனத்திற்காக அலெக்சாண்டர் கொல்வித்த மாகாணாதிபதிகள். |
| 79. ஸிதால்கீஸ் | |
| 80. கிளியாண்டர் | |

81. தண்டிஸ்வாமி (தண்டமி), ஹிந்து ஸந்நியாஸி.

82. கல்யாணஸ்வாமி (சோபனஸ்வாமி, கலனஸ், ஸ்பினீஸ்), மற்றொரு ஸந்நியாஸி.

83. வைரந்தியன், சவாரர்களின் தலைவன்.

84. காண்டோவீரன், காண்டர்களின் தலைவன்.

85. புஷ்யகுப்தன், சௌராஷ்டிரத்து மாகாணாதிபதி.

86. சந்திரகுப்தமுனீந்திரன், அவனுடைய மகன்.

87. ராக்ஷஸன் (சுபுத்திசர்மன்), நந்தர்களுக்கும் சந்திரகுப்தனுக்கும் பிரதான மந்திரி.

| | |
|---|---|
| 88. நக்கரநாஸன்<br>89. சகாதலன் | நந்தர்களின் மந்திரிகள். |
| 90. ஸித்தார்த்தகன்<br>91. சமித்தார்த்தகன்<br>92. நிபுணகன்<br>93. ஜீவஸித்தி (இந்துசர்மன்)<br>94. உதும்பரன் | சாணக்கியருடைய ஒற்றர். |

95. சாரங்கரவன், சாணக்கியருடைய மாணவன்.

96. சந்தனதாசன், பாடலிபுரத்துப் பெரிய வணிகன்.

97. சகடதாசன், எழுத்துக் கூலிக்காரன்.

| | |
|---|---|
| 98. விராதகுப்தன்<br>99. பிரியம்வதகன்<br>100. கரபகன் | ராக்ஷஸனுடைய ஒற்றர். |

101. ஸ்தானகலசன், வந்தி.

102. பத்ரபடன், மகதத்து யானைப்படைத் தலைவன்.

103. புருஷதத்தன், மகதத்துக் குதிரைப்படைத் தலைவன், சுவர்ணகிரி ராஜப்பிரதிநிதி.

104. டிங்கராதன், மகதத்தேர்ப்படைத் தலைவன்.

105. ஸிம்மபலன், மகதப்படையிலொரு தளகர்த்தன்.

106. சந்திரபானு, மகதத்துப் பிரவகண இலாகா மந்திரி.

107. பலகுப்தன், சந்திரகுப்தனுடைய சுற்றத்தான், தக்ஷசிலை ராஜப்பிரதிநிதி.

108. ராஜசேனன், சந்திரகுப்தனுடைய உபதளகர்த்தன்.

109. பாகுராயணன், சாணக்கியருடைய ஒற்றனுயிருந்து உஜ்ஜயினி ராஜப்பிரதிநிதி ஆனவன்.

110. தாருவர்மன், பாடலிபுரத்துத் தச்ச மேஸ்திரி.

111. அபயதத்தன், பாடலிபுரத்து அரண்மனை வைத்தியன்.

112. வைரவாரகன், மகதத்துப் பெரிய மாவுத்தன்.

113. பிரமோதகன், சந்திரகுப்தனுடைய பள்ளியறை பராமரிப்போன்.

114. விபத்ஸகன், சதிக்கொலைகாரன்.

115. விஜயபாலன், பாடலிபுர நகரத்திற்கும் சிறைக்கும் அதிகாரி.

116. காலபாசிகன்
117. தண்ட பாசிகன்
} பாடலிபுரத்து நியாயாதிபதிகள்.

118. சங்கீர்த்தியாயனர், மகதத்துத் தலைமை நீதிபதி.

119. சமுத்திரநாதன், மகதத்துக் கப்பற்படைத் தலைவன்.

120. தர்மரத்தினர், தக்ஷசிலைக்கழகத் தலைவர்.

121. அக்னிசர்மன், சாணக்கியருடைய மருமகன்.

122. ராதாகுப்தன், அவனுடைய மகன்.

123. தேவசர்மன், சுபத்திராங்கியின் தந்தை.

124. வைகிநாரி, சந்திரகுப்தனுடைய கோசாதிகாரி.

125. ஜாஜாலி, மலயகேதுவின் கோசாதிகாரி.

126. பத்தசாலன், நந்தர்களின் சேனாதிபதி.

127. சேகரசேனன், மலயகேதுவின் சேனாதிபதி.

128. பாட்ரோகிளீஸ், சலூகஸின் தளகர்த்தரில் ஒருவன், கப்பற்படைத் தலைவன்.

129. ஸுபந்து, நந்த மன்னனுடைய ராஜகுரு.

130. அக்ஷூபி (அகூபிஸ்), நைஸாவின் நகரசபைத்தலைவன்.

131. பாஸன், பாடலீபுரத்து நாடகாசிரியன்.

132. சசிகுப்தன் } இந்தியக் கூலிப்படைத் தள
133. விஜயவர்மன் } கர்த்தர்கள்.

134. கிளியோகேரீஸ், பெரிய போரசிடம் அலெக்சாண்டர் அனுப்பிய ராயபாரி.

135. விஜயஸிம்மன், ஸிம்மபுரத்தரசன்.

136. மீரோஸ் (மிரீசன்), பெரிய போரஸின் நண்பன்.

137. ஹொரேடஸ், மாஸிடோனியக் குத்துச்சண்டைக்காரன்.

138. டயோனிபஸ், அதீனியக் குத்துச்சண்டைக்காரன்.

139. அன்டிகோனஸ், அலெக்சாண்டருடைய தளகர்த்தரில் ஒருவன்.

140. தீர்க்கரக்ஷன், மலயகேதுவின் தளகர்த்தரில் ஒருவன்.

141. சியாமா சாஸ்திரி, பண்டிதர்.

142. விசாலாக்ஷன், சாணக்கியரின் மற்றோர் ஒற்றன்.

143. காாளன், தக்ஷசிலையின் ராஜதூதன்.

144. பாகீரதி, சந்திரகுப்தனுடைய ஒற்றன்.

145. அம்பரீஷர், சாணக்கியருடைய ஆசிரியர்.

* * *

## ஸ்திரீகள்

1. சாந்தவதி
2. துர்த்தரை
3. தேவப்பிராந்தை (டயோபாண்டீச்)

} சந்திரகுப்தனுடைய ராணிமார்.

4. சூரியகாந்தை
5. லஜ்ஜாவதி
6. சுபத்திராங்கி

} பிந்துசாரனுடைய ராணிமார்.

7. கௌதமி, சாணக்கியருடைய பாரியை.
8. தேவகி, சாணக்கியருடைய தாய்.
9. ராஜராஜேசுவரி, சாணக்கியருடைய புத்திரி.
10. மீனாக்ஷி, சியாமா சாஸ்திரியின் பாரியை.
11. பௌலோமி, தலஜங்கனுடைய தாய்.
12. சுவர்ணமயி, பெரிய போரஸின் ராணி.
13. கலாபினி (கிளியோபிஸ்), அசுவஜித்தின் ராணி.
14. சோணோத்தரை, சந்திரகுப்தனுடைய காவற் படைத் துணைவி.
15. விஜயை, மலயகேதுவின் காவற்படைத் துணைவி.
16. வீரசேனை, மகதத்து நடனமாது.
17. பகுதந்தி, சந்திரகுப்தனுடைய மெய்காவல்மாதர் படைத் தலைவி.
18. ரூபமஞ்சரி, தலஜங்கனுடைய மனைவி.

———

# முப்பெரு வீரர்



## அத்தியாயம் 1

## உலகாளும் உன்மத்தன்

ஜலலாபாது* என இந்நாளில் வழங்கும் ஊருக்கு மேற்கே நிகையா என்னும் சிறிய பட்டணத்தில் யவன தேசாதிபதியாகிய அலெக்சாண்டர் பாளையம் இறங்கியிருந்தான். அங்கே தனது கூடாரத்தின் உள்ளறையில்

---

* ஜலலாபாது என்பது அபகணஸ்தானத்தில் காபூல் மாகாணத்திலுள்ளதோர் பட்டணம். காபூல் என்பது அந்த மாகாணத்திற்கும் அபகணஸ்தானம் முழுமைக்கும் தலை நகரம். அதற்கு 75 மைல் தென்கிழக்கே ஜலலாபாது இருக்கின்றது. இந்தியாவிலுள்ள காசுமீரமும் லாகூரும் அந்தக் காபூல் மாகாணத்தின் தெற்கு எல்லையாம். அது கிஜினி மாகாணம் எனவும் வழங்கப்பெறும். காபூல் பட்டணமானது காந்தாரத்தக்கு (Candahar) வடகிழக்கே 200 மைல் தூரத்திலுள்ளது. காந்தாரமும் அபகணத்து மாகாணங்களில் ஒன்று. இது ஸிந்து நதிக்கும் பாரஸீகத்திற்கும் இடையிலுள்ளது. இதன் தெற்கு எல்லை லாகூர். இம் மாகாணத்துத் தலை நகராகிய காந்தாரம் இந்துஸ்தானத்திலிருந்து பாரஸீகத்திற்கும் தார்த்தாரிக்கும் போகிற பெரிய ரஸ்தாவில் இருக்கின்றது. ஆதலால், இதற்கு வடகிழக்கேயுள்ள காபூல் நகரம் தார்த்தாரியிலிருந்து இந்தியாவுக்குள் பிரவேசிப்பதற்கான தலைவாயில் (Gate of India) எனப்படுகின்றது. வடமேற்குத் திசையிலிருந்து இந்தியாவின்மீது படையெடுத்து வருகிறவரெவரும் இவ் வழியேதான் வரவேண்டும்.

உட்கார்ந்து அவன் கி. மு. 327-ஆம் வருஷம் ஜூன்மாதம் முற்பகுதியில் யூமினீஸ் என்னும் தன் குமாஸ்தாவினிடம் ஒரு கடிதம் சொல்லி எழுத வைத்துக் கொண்டிருந்தான். அந்தக் கடிதம் ஒலிம்பியஸ் என்னும் அவன் தாய்க்கு ஆகும். அவள் ஸ்வதேசமாகிய கிரீஸில் இருந்தாள்.

கிரீஸ் தேசத்தின் மத்தியில் பார்ஞஸஸ் என்னும் ஒரு மலை இருக்கின்றது. அது மிக உன்னதமானது; அந் நாட்டாரின் பிரதான தெய்வங்களுள் ஒருவராகிய அபாலோவும் கலைக்கன்னிகளும் (Apollo and the Muses) அம் மலையில் வசிக்கிறார்களென்பது அத்தேசத்தினரது கொள்கை. அதைப்போன்று உன்னதமாகவும் கடத்தற்கரியதாகவும் இந்தியாவின் வடமேற்கேயுள்ளது இந்துகுஷ் என்னும் மலைத் தொடர். ஆதலால், இது இந்திய பார்ஞஸஸ் எனப்பெறும். இந்த மலைத்தொடரைக் கடப்பதற்கு அலெக்சாண்டர் பட்ட அரும்பாடுகளையும், ரோக்ஷனா* என்னும் மாதை மணம் புரிந்து கொண்டதையும், மஹத்தான மலைக்கணவாய்களினூடே திரும்பி வந்ததையும், இந்தியாவின் மீது படையெடுக்க உத்தேசம் கொண்டிருப்பதையும், தக்ஷசிலையின் அதிபதியும் அதன் சுற்றுமுற்றுமுள்ள அரசர்களும்

---

* ரோக்ஷனா என்பவள் பாக்டிரிய தேசத்து மாது. ஆக்ஸியர்டீஸ் (Oxyartes) என்பவன் புதல்வி. பூர்வத்தில் பாக்டிரியா என்பது பாரஸீக ராஜ்யத்தின் பகுதியாயிருந்தது. இப்போது அபகணிஸ்தானத்தைச் சேர்ந்திருக்கின்றது. டரயஸ் (Darius) என்பவனது ஆட்சிக்காலத்தில் ரோக்ஷனாவின் தந்தை, அலெக்சாண்டரை எதிர்த்துப் பாரஸீக ராஜ்யத்தைச் சேர்ந்த கோட்டையாகிய ஸோக்டியன் (Sogdian) என்பதைக் காத்துப் போர்புரிந்து மடிந்தான். அதன் மீது வெற்றியாளனான அலெக்சாண்டருக்கு ரோக்ஷனா மாலை சூட்டினாள்.

வந்து தன்னைப் பணிந்து இறைஞ்ச வேண்டுமென அவர்களுக்குத் தூது அனுப்பியதையும் விவரமாக அவன் அந்தக் கடிதத்தில் எழுதிக்கொண்டிருந்தான்.

அலெக்சாண்டரின் வடிவு அற்புதமானது; வசீகரண சக்தி வாய்ந்தது. அவன் நடுத்தரமான உயரமுள்ளவன்; அழகு மிகுந்தவன்; தசைப்புஷ்டி வாய்ந்தவன்; கட்டான மேனி அமைந்தவன். எனவே கை கால் முதலியனவெல்லாம் ஆடவனுக்கேற்ற அளவில் அமைந்தவை. அவன் நல்ல ஆரோக்கிய ஸ்திதியில் இருந்தான்; மாநிறமான தோற்றமுடையவன்; முகத்திலிருந்த சிவப்புச் சாயையினால் விசேஷமான அழகு விளங்கியது. கண்கள் பெரியவை; நீரோட்டம் நிறைந்தனவாயினும், ஒவ்வொரு சமயத்தில் தீப்பொறி கக்கும் தன்மையுடையவை. வாயும் மோவாயும் மென்மை வாய்ந்து மெலிந்து தோன்றினும், அகன்ற நெற்றியும் உயர்ந்த புருவங்களும் கம்பீரத்தோற்றமளித்தன. அவனுடைய தலை சற்று இடதுபுறம் சாய்ந்தாற்போல இருக்கும். அவன் உடலினின்று ஒரு விதமான இனிய பரிமளம் வீசியது. துணிக்குள் பஞ்சு வைத்துத் திடமான மெத்தையாகத் தைத்த மார்புக்கவசத்தின்மீது ஓர் உட்சட்டையை அவன் அணிந்திருந்தான். அது குட்டையாக இருந்தது; ஸிஸிலி* தேசப்பாங்கானது. அவனது தலைச்சீரா பளபளப்பான எஃகினால் ஆயது; அதன் மீது வெண்மையான தூராய் ஒன்று விளங்கியது. அது தியாபிலஸ் (Theophilos) என்பவனால் ஆக்கப்பட்டது. கழுத்துக் கவசமும் அதேமாதிரியான எஃகினால் அமைந்தது. அதில்

* ஸிஸிலி என்பது ஐரோப்பாக் கண்டத்திலுள்ள இத்தலி தேசத்தையடுத்து மத்தியதரைக்கடலிலுள்ளதொரு தீவு.

நவரத்தினங்கள் இழைக்கப்பெற்றிருந்தன; போரிற் பெருந் துணையாய் அவன் பாராட்டிப்போற்றும் வாள் சைப்ரஸ்[1] தேசாதிபதி அளித்ததொரு காணிக்கையாகும்; லாகவத்தி லும் பதனிலும் அது ஒப்புயர்வில்லாதது. அவனது அரைக்கச்சே போரணிகளுளெல்லாம் அழகும் அதிசய மும் வாய்ந்தது; பெரிய பெரிய பதுமைகள் அதன்மீது விளக்கமாகச் சித்திரிக்கப்பட்டிருந்தன. அது ரோட்ஸ்[2] (Rhodes) என்னும் தேசத்தாரிடமிருந்து வந்த நன் கொடையாகும். ஹேலிகன் (Helikon) என்னும் சிற்ப சாஸ்திரி தன் வேலைத்திறமை முழுமையும் அதனிற் காட்டி யிருந்தான். கேடயமும் ஈட்டியும் லேசான காற்கவசமும் அவனுக்குப் பக்கத்தில் வைக்கப்பட்டிருந்தன.

அவனது தோற்றம் கம்பீரமானது. அவனைப் பார்த்த மாத்திரத்திலே ஆபத்துக்கஞ்சாதவன், ஆத்மசக்தியில் ஆழ்ந்த நம்பிக்கையுடையவன் என்று சொல்லிவிடலாம். உதடுகளைப் பார்த்தால் சிற்றின்பப் பிரியனெனச் சொல்ல

---

1. சைப்ரஸ் என்பது மத்தியதரைக் கடலில் ஸிரியாவை அடுத்துள்ளதொரு தீவு. ஸிரியா என்பது ஆசியா கண்டத்திலுள்ள துருக்கி ராஜ்யத்தில் ஒரு மாகாணம்.

2. ரோட்ஸ் என்பது ஆசியா கண்டத்துத் துருக்கியிலுள்ள மக்ரி (Macri) என்னும் பட்டணத்தையடுத்த வளைகுடாக் கடலின் தீவுக்கூட்டத்தைச் சேர்ந்தது. உலகத்தில் முதற்பட்டணம் இதுவே என அலெக்சாண்டர் கருதினான். அவன் தன்னுடைய கடைசி உயில் பத்திரம் எழுதி வைத்துப்போனது இவ்விடத்தி லேயே. உலகத்து அதிசயங்கள் ஏழனுள் ஒன்றான 70 முழ உயர முள்ள பிரம்மாண்டமான பித்தளை அபாலோ விக்கிரகம் இந்தத் துறைமுகத்தில் இருந்தது. இது கலைஞானமும் கைவினையும் செழித்த ஊர்.

லாமெனினும், ஆகாசமளாவிய தன் அபாரமான எண்ணத்தை நிறைவேற்றும் பொருட்டு எல்லாச் சுகங்களையும் துறந்து நிற்பானென அவனது மோவாய் குறிப்பித்தது. பிறவியிலேயே நரபதியாகத் தோன்றிய மகாபுருஷன் அவனே; பாராளவே பிறந்தேன் என்னும் உண்மை யுணர்ந்தவனும் அவனே. அவனது கண்களினின்று காந்தியொன்று வீசியது. உலகம் முழுவதையும் வென்று, மானிடரனைவரையும் ஒருங்கே ஒரு குடைக்கீழ் ஆட்சி செலுத்தவேண்டுமென்னும் பேரவாப் பெருக்கமுடைய உன்மத்தன் அவனென அவ் வொளி விளக்கியது. தன்னாலாகாத காரியம் உலகத்தில் எதுவுமில்லையென்னும் தீவிரமான தைரியம் கொண்டவன் அவன் என அவ் வொளி விளக்கியது.

இவ்வளவு பலமும் பெருமையும் பராக்கிரமமும் பயங்கரமும் உள்ளவனைக இருந்தபோதிலும், அலெக்சாண்டர் தன் குமாஸ்தாவினிடம் சாதுவாகவும் நிதானமாகவும் வியவகரித்துக் கொண்டிருந்தான்; அன்புடனே வியவகரித்தானென்றே சொல்லவேண்டும். கூடாரத்தின் வெளியறையில் அவனது சகாக்களான **லியோனேடஸ், லிஸிமாகாஸ், ஹெறபேயிஸ்டியன், அரிஸ்டானஸ், பேர்டிக்கஸ், டாலெமி, கிரேடியஸ்** என்பவனது புத்திரனை **பைதான்** என்பவனும் (Leonnatus, Lysimachos, Hephaistion, Aristonous, Perdikkas, Ptolemy and Peithon son of Krateus) உட்கார்ந்திருந்தார்கள்.

கடிதம் சொல்லிக்கொண்டிருக்குமளவில், அலெக்சாண்டர் இடையிற் சிறிதுநேரம் நிதானித்துத் தன் தாயாகிய ஒலிம்பியாஸினிடமிருந்து வந்த கடிதத்தின் கடைப் பகுதியைப் பார்த்தான். அந்தப் பகுதியில், "போர்களில் நீ வெற்றிபெற்றதையும், தேசங்களைப் பிடித்து வசப்

படுத்திக்கொண்டதையும் கேட்டு இவ்விடத்தில் உள்ளவர்க ளெல்லாரும் அதிசயிக்கிறார்கள்; ஆனால், நான் மாத்திரம் அதிசயிக்கவில்லை. நீ *ஆமனுடைய (Ammon) புதல்வ னென்று மாத்திரமே அவர்கள் நம்பியிருக்கிறார்கள். நானோ நீ ஆமனுக்குப் பிறந்தவனேயென்று தெரிந்திருக்கிறேன். நீ ஆமனுடைய மகனென்றும், டயோனிஸியஸ், ஹெர்க்குலீஸ், அச்சிலீஸ் என்பவர்களின் ஜாதியென்றும் எனக்குத் தெரிந் திருக்கும்போது உலகப்பிரஸித்தியான உனது வெற்றி களைப் பார்த்து நான் ஆச்சரியப்படுவேனோ? எனக்கு விவாஹ முகூர்த்தம் நடக்குமுன்னமே, எனது கர்ப்பாசயத் தின்மீது பேரிடிபோன்று விழுந்து, தீ மூண்டு ஜுவாலை யாகிப் பல திக்குகளிலும் வியாபித்துப் பின் அந்த ஜுவாலை கள் அணைந்து போனதாகக் கனவு கண்டேனல்லவா? இப் போது நீ ஆசியா கண்டத்தின் மீது இடிபோலப் பாய்ந்துள் ளாய். ஜுவாலைகள் நெடுந்தூரம் பல திக்குகளிலும் பரவி யிருக்கின்றன. ஆசியா கண்டத்திற்கு மாத்திரமேயன்றி, உலகம் முழுமைக்கும் அதிபதியாக நீ புவனேசுவரன் என

---

* ஆமன் என்பது ஓர் எகிப்து (மிஸிரி தேசத்து)த் தெய்வத் தின் பெயர். ஆமன் என்பதை ஹாமன் (Hammon) எனவும் சொல்வார்கள். இந்தத் தேவதையையே கிரேக்கர்கள் தங்கள் ஜுபிடர் (ஸியெஸ்: பிதா = ஆகாசமாகிய தந்தை) எனக் கொண் டாடுவார்கள். எகிப்திய வைபோகிகளில் இந்தத் தெய்வத்தின் உருவம் ஆட்டுக்கடாத்தலையும் மானிட சரீரமும் உள்ளதாகச் சித்திரிக்கப் பட்டிருக்கிறது. இந்தத் தெய்வத்தின் ஆலயம் லிபியா பாலைவனத் தில் இருந்தது. அவ்விடத்தில் ஓர் ஆகாசவாணி (பிரசின்ன தேவ தை)யும் உண்டு. அந்த ஆகாசவாணியிடம் ஹெர்க்குலிஸ், பெர் ஸியஸ், அலெக்சாண்டர் முதலான பிரமுகர்கள் பிரசின்ன கேட்டுப் பல விஷயங்கள் தெரிந்து கொண்டார்கள்.

விளங்கும்போது அந்தச் சுவாலைகள் அவியும். ஆகையால், மகனே! மேலும் மேலும் ஓங்கிபடி. எதற்காகப் பிறந்திருக்கிறாயோ அந்தக் காரியத்தைச் சாதித்து ஜன்மத்தை ஸார்த்தகமாக்குக" என்று தாய் எழுதியிருந்தாள்.

அதைப் படித்துப் பார்த்த பின், திருப்பக் கடிதம் எழுத மேற்கொண்டு அலெக்சாண்டர், "அப்படியே, அம்மா! நான் முன் செல்வேன். பாரின் பரப்பெல்லை வரையில் போகவேண்டுமென்றிருக்கிறேன்; இந்தியக் குடாக் கடலைத் தாண்டி ஆழ்கடலின் கரைவரையிற்போய், அங்கிருந்து திரும்பிப் பாரஸீகக் குடாக்கடலின் வழியாக எகிப்துக்கும் மாஸிடனுக்கும் வந்து சேரச் சங்கற்பித்துள்ளேன். அம்மா, இடையில் ஒரு வார்த்தை சொல்லுகிறேன்: இந்திய பர்ணைஸஸ் என்னும் இந்துகுஷ் மலையுச்சியினின்று பார்த்தால் மகா ஸமுத்திரம் தெரியுமென்று அரிஸ்டாடில்* நினைத்தாரே, அது சரியன்று. அங்கிருந்து

---

* அரிஸ்டாடில் (Aristotle) என்பவர் முற்காலத்தில் மிகப் பிரபலமாயிருந்த தத்துவ ஞானிகளில் ஒருவர். 17-ஆம் வயதில் கிரீஸின் தலைநகராகிய ஏதென்ஸுக்குப் போய்ப் பிளேட்டோ (Plato)வினிடம் வேதாந்தம் படிக்கலானார். 8 வருஷகாலம் அலெக்சாண்டருக்கு உபாத்தியாயராயிருந்து கல்வி கற்பித்தார். அலெக்சாண்டர் பட்டத்துக்கு வந்து 2 வருஷத்துக்குப்பின், ஆசியா கண்டத்தின் மீது படையெடுத்துப் போனபோது, இவர் மாஸிடோனியாவை விட்டுப்போனார். அவனது புத்திபலத்தைத் தத்துவ விசாரத்தில் விநியோகிக்கும்படி அலெக்சாண்டருக்கு இவர் கடிதம் எழுதிக்கொண்டிருந்தார். அலெக்சாண்டர் இறந்த பின், ஏதென்ஸு நகரத்தில் மாஸிடோனியன் கட்சிக்கு விரோதிகளாயிருந்தவர்கள் இவரை, அலெக்சாண்டரைச் சார்ந்தவரென வருத்தினார்கள். ஏதென்ஸைவிட்டு நீங்கி இவர் மாஸிடோனியா மாகாணத்திலுள்ள

ஸமுத்திரம் தெரியவில்லை. அது வெகு தொலையில் இருக்கின்றது. ஆயினும், பூமியின் எல்லைகளையே என் ராஜ்யத்தின் எல்லைகளாக்கவேண்டுமென்றிருக்கிறேன். பிரபலமான பாரஸிக ராஜ்யத்தை வெகு சுலபமாகக் கைப்பற்றிக் கொண்டேன்; ஆக்ஸஸ் நதிப் பிரதேசத்துக் காட்டு ஜனங்கள் புக்கிபேலஸ் (Boukephalus) என்னும் என் குதிரையைத் திருடிக்கொண்டு போனார்கள். அவர்கள் ஒவ்வொருவரையும் நசுக்கிக்கொன்று துண்டாக்குவேனென்று பயமுறுத்தி, அதை அவர்கள் திரும்பிக் கொண்டுவந்து என்னிடம் ஒப்பிக்கச்செய்தேன்; எனது வாளைப் பார்த்து அஞ்சி ஸிதியன் (Scythians) களுங்கூட எனக்கு எதிர்ப்படாமல் அவசர அவசரமாகத் தம் பாளையத்தை விட்டோடும்படி செய்தேன்; இப்படிப்பட்ட எனக்கு, இந்தியர்களை ஜயிப்பது கஷ்டமான காரியமென்று தோன்றவேயில்லை. விவேகம் மிக்க இந்திய வித்வான்களை எப்போது சந்திப்பேன், ஞானயோகத்திலமர்ந்த திகம்பர ஸந்நியாசிகளை எப்போது காண்பேன், கீழ்கடலின் கரையிலுட்கார்ந்து, அவர்கள் சொல்லும் அர்த்த வாதங்களையும் உபாக்கியானங்களையும் எப்போது உற்றுக்கேட்பேன் என என் மனம் ஆவல் கொள்கின்றது. *ஹெல்லாஸும் இந்தியாவும் ஒன்றுபட வேண்டும். பாரஸிகம் அவ் விரண்டையும் இணைக்கும் மத்தியவர்த்தி

---

சால்ஸிஸைக்குப் போயிருந்து, 63-ஆம் வயதில் காலகதி எய்தினர். (கி.மு. 384-321).

* ஹெல்லாஸ் (Hellas) என்பது ஹெல்லன் (Hellen) என்பவன் ஆண்டதொரு மாகாணத்தின் பெயராக முதன் முதல் வழங்கியது. பிற்காலத்தில் இந்தப் பெயர் கிரீஸ் தேசம் முழுமைக்குமே வழங்கப்பெற்றது. இந்தியாவும் கிரீஸும் ஒன்றுபட வேண்டுமென எண்ணங்கொண்ட அலெக்ஸாண்டர் இந்தியர்கள்

யாகவேண்டும். எகிப்து (மிசிரி) இந்தியருக்கும் யவனருக்கும் துவிபாஷியாயிருந்து ஒருவர் கருத்தை மற்றவருக்கு எடுத்துரைக்க வேண்டும். உலகமுழுதும் ஒருங்கே என் குடையின் கீழாக்கிக் கீழ் நாட்டை மேல்நாட்டோடு இணைத்து, செயற்கை வேறுபாடுகளாகிய ஜாதி வித்தியாசம் தேச வித்தியாசம் முதலானவற்றையெல்லாம் ஒழிக்க வேண்டுமென்று எண்ணியிருக்கிறேன். கொண்டாட வேண்டிய இந்த என் நன்முயற்சியை ஜனங்கள் தடுக்கிறார்களே, எவ்வளவு அறிவிலிகளாய் இருக்கிறார்கள்! ஆயினும், அவர்கள் தடுத்து எதிர்க்கும்போது நான் என்ன செய்யக்கூடும்? கருணை காட்டுவதற்கான சந்தர்ப்பம் நேரும்போது எனக்குண்டாகிற மகிழ்ச்சி வேறு ஒருபோதும் உண்டாகிறதில்லை. ஆனால், சில சமயங்களில் எல்லாம் தப்பிப்போகின்றது. கிளீட்டாஸ் என்பவனைக் கொன்றதுபோன்ற கோர கிருத்தியங்களை நான் செய்யவேண்டி வருகிறது. இந்தியர்கள் நியாய புத்தியோடு நடப்பார்களென்று நம்புகிறேன்" என்று சொல்லிக் கடிதத்தை எழுதி முடித்தான்.

அலெக்சாண்டர் மேற்சொன்னவாறு தன் அன்னைக்குக் கடிதமெழுதி முடிக்குமளவில், ஹெபேயிஸ்டியன் என்பவன் வெளியறையினின்றும் உள்ளறைக்கு வந்து வந்த

---

வளர்த்து வந்த பற்பல சாஸ்திரங்களையும் பண்டிதர்களையும் தன் தேசத்திற்குக் கொண்டு போனான். இந்தியத் தெய்வங்களின் பெயர்கள், புராணக்கதைகள் முதலியனவெல்லாம் கிரீஸ் தேசத்தில், பாஷைக்குரிய மாறுபாடுகளுடன் வழங்கப்பெற்றன. இந்தியாவையே கிரீஸ் தேசத்திற் கொண்டுபோய் நாட்டியது போலாயிற்று. கிரீஸில் இந்தியா (India in Greece) என்னும் இங்கிலீஷ் புஸ்தகம் இதற்குச் சான்றும்.

னம் செய்து, "மஹாராஜா, ஆம்பிஸ் என்னும் தம் மகனுடன் தக்ஷசிலாதிபதியாகிய முதியார் மஹாராஜாவுக்குத் தம் பணிவைக்காட்டப் பொற்பல்லக்கில் வந்திருக்கிறார்" என்று அறிவித்தான்.

"நல்லது. அப்படியானால், நமது வெற்றிப் பிரதாபங்கள் இந்தியர்களின் மனத்தை நன்கு உறுத்துகின்றன போலும். தக்ஷசிலாதிபதி எப்படிப் பட்டவர்?" என அலெக்சாண்டர் வினவினான்.

"அவர் வயது முதிர்ந்தவர். ஊகமும் நுண்ணறிவும் வாய்ந்தவர். லௌகிக வியவகாரங்களில் அனுபவஞானப் பெருக்கமுற்றவர். தீர்க்கமாகவும் நிதானமாகவும் ஆலோசித்துப்பார்த்து நியாயம் இதுவேயெனத் தேர்ந்து அவர் பணியவந்திருப்பதாகத் தோன்றுகிறது. அவருடைய குமாரன் அம்பி அத்தகையவனல்லன்; நாம் செய்யும் காரியங்களைக் கண்டு பெருமகிழ்வுற்று நம்மைச் சார்ந்தொழுகுவதே சரியென முழுமனத்தோடும் அவன் நினைப்பதாகத் தோன்றுகிறது" என்று ஹெபேயிஸ்டியன் சொன்னான்.

"அவர்களோடு நீ எப்படிச் சம்பாஷிக்கலானாய்?" என்று கேட்டதற்கு அவன், "சசிகுப்தன் (Sasigupta) மூலமாகப் பேசினேன். அவனுக்குப் பாக்டிரிய பாஷைகளும் இந்திய பாஷைகளும் தெரியும்; அவற்றோடு, அதீனியனைப்போலவே அவன் கிரேக்க பாஷையும் பேசுவான்" என்று பதில் சொன்னான்.

"ஆ! பேஸ்ஸாஸ் என்பவனை நாம் தோல்வியுறச் செய்தபின், பாக்டிரியாவில் சசிகுப்தன் நம்மோடு வந்து

---

* ஆம்பிஸ் (Omphis) எனக் கிரேக்கர் சொல்லும்பெயரை நாம் அம்பி (Ambhi) என்போம்.

சேர்ந்தது முதல் நமக்கு உபகாரியாகவே இருக்கிறனே. அவன் வந்து சேர்ந்தபோது, படைத் தலைமை பூண்பதற் கேற்ற தீரனொருவன் நமக்கு வாய்த்தானென்று மாத்திரமே நினைத்தேன். வேறு வகைகளிலும் அவன் மிக்க திறமை வாய்ந்தவனெனக் காட்டி வருகிறுன். இந்தியப் படையெழுச்சியில் அவன் நமக்குப் பேருபகாரியாய் இருத்தல் வேண்டும். இனி, தக்ஷசிலாதிபதியையும் அவர் குமாரன் ஆம்பியையும் என்னண்டை அழைத்து வா. எங்களுக்குத் துவிபாஷியாகச் சசிகுப்தனையும் வரச் சொல்க" என்று அலெக்சாண்டர் மொழிந்தான்.

ஹெபேயிஸ்டியன் வெளியே போய், தக்ஷசிலாதிபதியையும் அம்பியையும் சசிகுப்தனையும் அழைத்துக்கொண்டு திரும்பி வந்தான். தக்ஷசிலாதிபதிக்கு எழுபது வயது இருக்கும். நேர்த்தியான மஸ்லின் ஆடை அணிந்திருந் தார். அதன்மீது ஊதாப்பட்டினுலும் பொற்சரிகையினு லும் சித்திரப் பூக்கோலங்கள் இழைக்கப்பட்டிருந்தன. அவருடைய மகன் அம்பி அவருக்கு முப்பதுவருஷம் சிறியவனுகலாம். அவன் கிரேக்கதேசமோஸ்தரான உடுப்புத் தரித்துக்கொண்டிருந்தான். சசிகுப்தனுக்கும் அம்பியின் வயதே யிருக்கும். அவனைப் பார்த்தால் போர்ப்படைத் தலைவனெனத் தோன்றியது. அவனும் கிரேக்க ஸம்பிரதாயப் படியே உடை அணிந்திருந்தான்.

நூதனமாக வந்த இம்மூவரும் அலெக்சாண்டருக்கு வந்தனம் செய்தார்கள். முதியவரான தக்ஷசிலைக்கோனை யும் அவருடைய புத்திரனை அம்பியையும் தனக்கு எதிரி லிருந்த மெத்தைத் திவாஸிகளின் மீது அமரச்செய்து அலெக்சாண்டர், சசிகுப்தன் மூலமாக, அவர்களுடன் பேசத் தலைப்பட்டான்.

"நான் அனுப்பிய வர்த்தமானப் பத்திரிகை உமக்குக் கிடைத்ததா? அதற்கு என்ன பதில் சொல்லுகிறீர்?" என்று முதியவரைப் பார்த்து அலெக்சாண்டர் கேட்டான். அதற்கு அவர் புன்னகை பூத்து, "நாம் ஒருவரோடு ஒருவர் போர் புரிவானேன்? நீங்கள் எங்கள் சோற்றையும் தண்ணீரையும் அபகரிக்க வரவில்லை யென்பது உங்கள் பத்திரிகையினால் தெளிவாகத் தெரிகின்றது. அவை இரண்டுக்காக மாத்திரமே யல்லவா விவேகிகள் சண்டையிட வேண்டி வரும்? செல்வமென உலகோர் கருதும் மற்றப் பொருள்களின் விஷயத்திலோவெனின், உங்களிடம் உள்ளதைக் காட்டிலும் என்னிடம் அதிகமாயிருந்தால் நீங்களும் தாராளமாகப் பங்கு கொள்ளுங்கள். அப்படியன்றி, தெய்வானுகூலத்தால் நீங்கள் அதிக ஐசுவரியம் படைத்திருப்பின், உங்களைக் கேட்டு வாங்கிக்கொள்ள எனக்கு ஆக்ஷேபம் இல்லை" என்று மறுமொழி கூறினார்.

அலெக்சாண்டர் உடனே எழுந்து அம் முதியமன்னரை அன்புடன் அணைத்துத் தழுவி, "உம்முடைய இந்த அன்பு மொழிகளினாலும் நயநடவடிக்கைகளினாலும் போர்புரியாமல் தப்பித்துக்கொள்ளலாமென்று நினைக்கிறீரா? ஓஹோ, அப்படியில்லை; ஏனெனில், நீர் எவ்வளவு நயந்தபோதிலும், நீர் என்னைக்காட்டிலும் மேம்பாடுற்றவரல்லவெனக் காட்டும் பொருட்டு நான் உம்மோடு போர் புரிவேன்" என்று சொன்னான். அதன்மீது, அம்மன்னர் கொண்டுவந்திருந்த காணிக்கைகளை ஏற்றுக்கொண்டு அலெக்சாண்டர், அவைகளைக் காட்டிலும் விலையுயர்ந்த வஸ்துக்களை அவருக்குச் சம்மானமாக அளித்தான்.

அவனுடைய பெருந்தகைமையினால் தக்ஷசிலைமன்னர் உள்ளம் பூரித்தார். "என் ராஜ்யத்திலுள்ள பொருளும்



தக்ஷசிலை மன்னரும் ஆம்பீசும் அலெக்ஸாண்டரும்

(பக்கம் 12)

ஜனங்களும் உங்களுக்குரிய சொத்துக்களே. நீங்கள் எப்போது விஜயம் செய்வீர்களென்று தக்ஷசிலா நகரம் முழுதும் ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறது. எங்கள் கல்விக்கழகத்துப் புலவர்கள், வைத்தியம், வியாகரணம், ஜ்யோதிஷம், சிற்பம், நிர்மாணசிற்பம், சங்கீதம், வேதாந்தம் ஆகிய இந்தச் சாஸ்திர சம்பந்தமான விஷயங்களைப்பற்றி உங்கள் கலைஞர்களோடு கலந்து ஆராய்ச்சி செய்ய ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். பௌரவனும் (Poros) அபிசாரனும் மாத்திரமே தங்கள் ராஜ்யத்தில் சர்வகலாசாலை இல்லாதிருக்கிறார்கள். அவர்களே உங்கள் போர்வீரர்களோடு தங்கள் படையாட்களைக் கொண்டு பல பரீக்ஷை செய்துபார்க்க நினைக்கிறார்கள். பௌரவனுக்குக் கர்வம் இப்போது அதிகமாயிருக்கிறது. அவன் சமதரையான சிறியதேசத்திற்கு அதிபதியானாலும், அவனும் அவனுடைய மகனும் சேர்ந்து அபிசாரனையும், அர்ஷகேசனையும் (Arsakes), மலையத்தரசனையும் வெற்றி கொண்டு விட்டார்கள். இவர்களெல்லாரும் சிறுசிறு மலைகளின் அதிபதிகள். இதனால், பௌரவன பர்வதேசுவரன் (மலைகளுக்கு அரசன்) என்னும் பிருது பூண்டிருக்கிறான். உங்களைச் சந்திக்கவேண்டுமென்னும் ஆவலாயிருக்கிறான்" என்று அந்தக் கிழவர் சொன்னார்.

"அவன் இஷ்டப்படிச் செய்வது நமக்குச் சந்தோஷமே. அவனைச் சந்திக்க எங்கள் போர்வீரர்கள் அச்சப்படவில்லை. ஆனால், உங்கள் புலவர்களோடு வாதித்து வெற்றி பெறவோமென்னும் தைரியம் எங்கள் புலவர்களுக்கு இல்லை. பௌரவனுடைய படைப்பலம் எவ்வளவு இருக்கிறது?" எனறு அலெக்சாண்டர் வினவினன்.

"ஏறக்குறைய 30,000 காலாட்களும், 5,000 குதிரைப் படையும், 500 ரதங்களும், 200 யானைகளும் இருக்கலாம். அவனது நண்பனான அபிசாரத்தரசனுக்கு 5,000 பதாதிகளும், 1,000 குதிரைப்படையும், 50 ரதங்களும், 50 யானைகளும் இருக்கலாம்" என்று அவர் பதில் சொன்னார்.

அதன்மீது அலெக்சாண்டர், "இந்த யானைகளினால் யுத்தத்தில் என்ன பிரயோஜனம்? அர்பேலாவில் (Arbela) பாரசீகப்படை நடுவில் 15 இந்திய யானைகள் இருந்தனவாயினும், அவைகளினால் உபயோகம் இருந்ததென எனக்குத் தோன்றவில்லை" என்றான்.

"அவற்றின் பலம் பயன்படுவதற்குப் போதிய அத்தனை யானைகள் இல்லாததனால் அப்படியிருக்கலாம். அதுவல்லாமல், அவை ஊரைவிட்டு ஊர்போய்ப் புதிய தேசத்தில் இருக்க நேர்ந்தது. அவை கூட்டமாக ஒருமிக்குமானால், பிரமாதமாகக் கோரப்படுத்தும். யுத்தத்தில் யானைகள் மிக உபயோகமானவையென எண்ணி இந்தியர்களாகிய நாங்கள் அவைகளைச் சதுரங்க பல வரிசையில் தேர், கரி, பரி, காலாள் என இரண்டாவதாக வைத்துப் பேசுகிறோம். படைப்பலத்தைக் கணிக்கும்போது நாங்கள் யானைகளின் சங்கியையே பார்க்கிறோம். இந்தக் காரணத்தினால் ஊரிலுள்ள குடித்தனக்காரனெவனும் அரசனது அனுமதியின்றிப் போர்யானை வைத்து வளர்க்கக்கூடாதென்பது எங்கள் சட்டம்" என்று தக்ஷசிலாதிபதி சொன்னார்.

"அப்படியானால், இந்தப் பேருடற்பிராணிகள் குதிரைகளைப் போலப் பழகிச் சொன்னபடி கேட்குமா? சுறுசுறுப்பாக நகருமா?" என்று அலெக்சாண்டர் வினவினான்.

"தேர்ந்த மாவுத்தர்கள் சொல்லுகிறபடி அவை ஒழுங்காகச் செய்யும். அவ்வளவு சுறுசுறுப்பாக நகரமாட்டா

வாயினும், காத்து எதிர்ப்பதற்குப் பெருந் துணைப்பலமாக வும், தாக்கி முன் செல்லும்பொருட்டு முட்டித்தள்ளு வதற்கேற்ற பருத்த திம்மசுகளாகவும் அவைகளை வைத்துக் கொண்டிருக்கிறோம். யானைப்படையின் பாய்ச்சலுக்கு அஞ்சிக் குதிரைகள் குலைந்தோடுகின்றன. பதாதிகளும் வில்லிகளும் யானைக் காலில் அகப்பட்டு நசுங்கிப் போவோ மெனப் பயந்து பதறவார்கள்" என்று தக்ஷசிலாதிபதி சொன்னார்.

"யானைகளுக்கு நான் அஞ்சேன்" என்று அலெக்சாண் டர் சொன்னபோது தக்ஷசிலாதிபதி, "நீங்கள் அஞ்சாவிட் டாலும் உங்கள் படையாட்கள் அஞ்சலாமே" என்றார்.

அதற்கு அலெக்சாண்டர், "யானைகளைப் பார்த்துப் பழக்கமில்லாததனால் அவர்கள் ஒருவேளை அஞ்சக்கூடும். ஆனால், அந்த அச்சம் நீடித்திருக்குமென்று நான் நினைக்க வில்லை. இந்த முரட்டு ஜந்துக்களின் மீது எவனுக்குப் பிரியம் வரும்?" என்று அலெக்சாண்டர் சொன்னன்.

"ஓ, அப்படிச் சொல்லாதீர்கள். அமைதியான காலத்தில் அவைகளை எவனும் பிரியமாகக் கொண்டாடு வான். அவை அடங்கி ஒடுங்கி ஏவியவண்ணம் செய்கின் றன. தேவாலய உற்சவாதிகளிலும் அரசர்களின் ஊர்வலங் களிலும் அவை இருப்பதனால் கம்பீரமும் மகத்துவமும் மிகும்" என்று தக்ஷசிலை மன்னர் சொன்னார்.

"போர்க்களத்தில் யானைகளை மடக்குவதெப்படி?" என்று அலெக்சாண்டர் வினவ, "அவைகளைப் பயமுறுத்தி விரட்டினால் அவை திகைப்புற்றுத் தங்கள் சைன்னியத் தின் மீதே திரும்பிப் பாய்ந்தோடி அதைக் குலைத்துவிடும்" என்னும் உபாயத்தைத் தக்ஷசிலாதீசர் எடுத்துச்சொன்னார்.

"பேஷ், நல்லதாயிற்று; அந்தத் தந்திரம் நாம் எளிதிற் செய்துவிடுவோம். பௌரவனது பலக் கோட்டைகளை அவனையே அழிக்கும் சாதனங்களாக்குவோமாக. இனி, நண்பரே! பலமான படைப்பகுதியுடன் எனது தளகர்த்தர்களான ஹெபேயிஸ்டியனும் பெர்டிக்கசும் உம்முடன் வருவார்கள்; இடைவழியிலுள்ள ஜாதியார்களை வென்று, உம்முடைய சகாயத்தினால், அண்டு எனவும் ஓஹிண்டு எனவும் வழங்குகிற உதபாண்டபுரத்தில் ஸிந்து நதியைக் கடப்பதற்குப் படகுப்பாலம் அமைக்கட்டும். ஸிந்துநதியின் இக்கரையில் ஹெபேயிஸ்டியனும் பெர்டிக்கசும் க்ஷேமமாகப் பாளையம் இறங்கப்பார்த்து, படகுகளுக்கு ஏற்பாடு செய்து விட்டு நீங்கள் உங்கள் தேசத்திற்குப்போய், நான் வருவதற்கு வேண்டிய அனுகூலங்களை யெல்லாம் செய்து பௌரவனும் அபிசாரனும் படையெடுத்து வராமல் நதியின் அக்கரையையும் உங்கள் நகரத்தையும் காத்துக் கொண்டிருங்கள். காபூல் நதிக்கு வடக்கே இன்னும் அடங்காதிருக்கிற சாதியார்களை அடக்கிவிட்டு நான் உதபாண்டபுரத்துக்கு வந்து ஹெபேயிஸ்டியனோடும் பெர்டிக்கசோடும் மற்றப் படைப் பகுதியோடும் கூடிக்கொள்கிறேன். நாங்களெல்லோருமாக ஆற்றைக் கடந்து தக்ஷசிலைக்கு வந்து, பௌரவர்களையும் அபிசாரர்களையும் உங்கள் தேசத்து யானைகளையும் போர் முகத்திற் பார்ப்போம். நண்பர்களோடு போர்புரியக் கூசுவேனேயல்லாமல், சத்துருக்களோடு சமர் புரிய ஒரு போதும் பின் வாங்கமாட்டேன். இதெல்லாம் உமக்கு எப்படி இருக்கிறது?" என்று அலெக்சாண்டர் திரும்பி அம்பியைப் பார்த்துக் கேட்டான். அதுவரையில் அம்பி வீராராதனை செய்பவனைப் போல வியந்து விரிந்த கண்களுடன் உற்றுப் பார்த்தபடியே கேட்டுக்கொண்டிருந்தான்.

"மஹாராஜரே! உங்களுக்கு எதுவும் அசாத்தியமன்று. இந்தியர்களுக்கு உங்களைப்போன்ற நாயகன் இல்லை. என்னதானகட்டும், யானைகள் என்ன செய்ய முடியும்? அவைகளுக்குப் பருமனும் பெருமையேயொழியக் குணப் பெருமை இல்லை. அறிவிலிகளான மாவுத்தர்கள் அவைகளை அடக்கி ஆளுகிறார்களென்றால், உங்களைப் போன்ற பேரரசர் இன்னும் எவ்வளவு நன்றாகவும் அதிகமாகவும் அவைகளை அடக்கி யொடுக்குவதற்காகும்?" என்று அம்பி பதில் மொழிந்தான். அலெக்சாண்டர் அவனை அரைவினாடி உற்றுப்பார்த்துப் புன்னகை கொண்டு, "இவ்விளைஞன் பெருங்காரியங்கள் செய்யவல்லவன்" என்று சொல்லவே, தக்ஷசிலைக் கிழவருடைய முகம் புன்சிரிப்பினுற் சொலித்தது.

சல்லாபம் முடிவுற்றது. எல்லோரும் எழுந்தனர். தக்ஷசிலை மன்னரையும் அம்பியையும் சசிகுப்தன் அழைத்துக்கொண்டுபோய் அவர்களுடைய கூடாரங்களில் விட்டான்.

"ஓ, இவர் ஜீயஸின்* (Zeus) மகனென்பதற்குச் சந்தேகமேயில்லை. என்ன தீரம், என்ன விநயம், என்ன பெருந்தன்மை! இவர் வாழ்க்கைச் சம்பவங்கள் சிலவற்றை எங்களுக்கு எடுத்துக் கூறும். அதிசயமான இவருடைய வாழ்க்கையில் அற்புத ஸம்பவங்கள் எத்தனையோ நிகழ்ந்திருக்கவேண்டும்" என்று சசிகுப்தனை நோக்கித் தக்ஷசிலை விருத்தர் வினவினர்.

"ஆம், இவரைப்பற்றிய விருத்தாந்தங்களில் முக்கியமானவைகளை யெல்லாம் பெரும்பாலும் நான் கேட்டிருக்

---

* ஜீயஸ் (Zeus) என்பது ஜுபிட்டருக்குக் கிரேக்கர் வழங்கும் பெயர்.

கிறேன்; சிலவற்றை இவர் முன்னிலையிலேயே கேட்ட துண்டு. உங்களுக்குச் சிலவற்றை எடுத்துச் சொல்கிறேன். இவை உண்மையான சங்கதிகளென டாலெமியும் ஹெபேயிஸ்டியனும் ஒனஸிகிரேடாசும் சொல்லியிருக்கிறார்கள். மாஸிடோனியா தேசத்து இளவரசரான இவர் தந்தை பிலிப்பு (Philip) என்பவர், எபிரஸ் (Epirus) என்னும் தேசத்து ராஜகுமாரியாகிய ஒலிம்பியஸ் என்னும் இவர் தாயைச் சாமாதிரேஸ் என்னுமிடத்திலுள்ள காபிரிகுப்த வித்தியாலயத்தில் சந்தித்தார். நெருங்கிய பழக்கத்தால் இருவர் மனமும் கலந்தன. ஒலிம்பியஸைப் பாணிக்கிரஹணம் செய்துகொள்ளப் பிலிப்பு ஸங்கற்பித்தார். ஆனல், ஆமன் எனவும் வழங்கப்பெறுகிற ஜீயஸ் என்னும் தேவர் ஏற்கெனவே ஒலிம்பியஸின்மீது கண்வைத்திருந்தார்; மண்ணுலகம் முழுவதையும் வென்று வசப்படுத்தக் கூடிய வீரனொருவனை அவள் வயிற்றில் பிறப்பிக்க வேண்டுமென்று நிச்சயித்திருந்தார். ஆகையால், காலக்கிரமத்தில் பிலிப்பு என்பவர் அவளைப் பாணிக்கிரகணம் செய்து கொண்டு மாலை சூடியபோதிலும், நிஷேக முகூர்த்தத்திற்கு முதல்நாள் ஒலிம்பியஸானவள் தன் கருப்பையில் இடி விழுந்ததாகவும், அதினின்று தீக்கிளம்பி ஜ்வாலைகளாகிப் பலதிக்குகளிலும் பரந்து, பிறகு அணைந்துபோனதாகவும் கனவு கண்டாள். அதே தருணத்தில் பிலிப்பானவர் தம் மனைவியின் கர்ப்பாசயத்தின்மீது சிங்கமுத்திரை வைத்ததாகக் கனவுகண்டார். அதனல் திகிலுற்று அவர் தம் மனைவி படுத்திருந்த அறைக்குள் எட்டிப் பார்த்தார். அப்போது அவளுடன் படுக்கையில் பெரிய ஸர்ப்பமொன்று படுத்திருக்கக் கண்டு அதிசயித்தார். அச்சம் அதிகரித்து அவர் டெல்பி என்னுமிடத்திலுள்ள ஆகாசவாணியைப்

பிரசினை கேட்டார். அவ்விடத்தில் அபாலோ பிரஸன்ன மாகிப் பிரசினைகளுக்கு உத்தரம் சொல்வதாக ஜனங்கள் நம்பியிருந்தார்கள். கிரீஸ்தேசத்தின் பற்பல பாகங்களில் இப்படிப்பட்ட ஆகாசவாணிகள் முந்நூறு இருந்தன. அவற்றுள் முதன்மையானது டெல்பியிலுள்ள அபாலோ ஆகாசவாணியே. அவசரம் நேர்ந்தபோதும் ஐயம் நேர்ந்த போதும் அரசர்களும் சாமானிய ஜனங்களும் ஆகாச வாணியை யணுகிப் பிரசினைகேட்டு விஷயங்களைத் தெரிந்து கொள்வார்கள். டெல்பி ஆகாசவாணி யென்பது பர்ணுஸஸ் பர்வதத்தின் தென்சரிவில் இருந்தது. அந்த ஆகாசவாணி யைப் பிலிப்பு கேட்டபோது, 'ஸர்ப்பவடிவமாக இருந்தது ஆமன் என்னும் தேவதை. அவருக்கும் ஒலிம்பியஸுக்கும் சிங்கத்துக்கொப்பான தீரமுள்ள புத்திரனொருவன் பிறப் பான்; அந்தத் தேவதையும் ஒலிம்பியஸும் ஒரு படுக்கையி லிருந்தபோது எட்டிப்பார்த்ததற்காகப் பிலிப்புக்கு ஒரு கண் குருடாகும்' என்று அது சொல்லியது. பிலிப்புக்கு ஒரு கண் போயிற்று. சிங்கம்போன்ற தீரனாகிய அலெக் சாண்டர் என்னும் பிள்ளையும் பிறந்தான்" என்று சசிகுப் தன் சொன்னான்.

அதைக் கேட்ட தக்ஷசிலை அரசர், "மிக விசித்திரமா யிருக்கின்றது; அதனாலேதான் அலெக்சாண்டர் முன் பின் பாராமல் 'எதையும் சாதிப்பேன்' என்னும் தைரிய மும் தயாளமான கொடைக்குணமும் உடையவராயிருக் கிறார்" என்று சொன்னார்.

மற்றும் அவரைப் பார்த்துச் சசிகுப்தன், "சிறுபையனா யிருந்தபோதும் அலெக்சாண்டர் ராஜகம்பீர முடையவ ராகவே இருந்தார். ஒலிம்பியா என்பது கிரீஸ்தேசத்தார் கொண்டாடுகிற விழாக்களுள் மிகப் பிரபலமானது. இது

நான்கு வருஷங்களுக் கொருமுறை ஒலிம்பியன் ஜூபிட் டரை உத்தேசித்துக் கொண்டாடும் பெரியபண்டிகையாம். இதில் பலவகையான ஆட்ட பாட்டங்களும் போட்டிப் பந்தயங்களும் நடைபெறும். அவைகளில் கிரீஸ் தேசத்தா ரெல்லாருமே, ஹெல்லன் சம்பந்தமான பெயர் உள்ளவர்க ளெல்லாரும் கலந்து கொள்வார்கள். அவற்றுள், 'நடைப் பந்தயத்தில் நீயும் போட்டிபோடப் போவாயா?' என்று கேட்டதற்கு அலெக்சாண்டர், 'ஆம், போட்டிபோட வருகிற மற்றவர்களெல்லாரும் அரசர்களாகவும் ராஜகுமாரர் களாகவும் இருந்தால் அவர்களோடு நானும் பந்தயம் கட்டு வேன்' என்று பதில் சொன்னார்" எனக் கூறினன்.

அந்த வார்த்தையைக் கேட்டு, 'இவர் நன்றாகவே பதில் சொன்னார்' என மகிழ்ந்து தக்ஷசிலையரசர், "ஆதலால், இவர் பிறவியிலே பிரபு ஆவர்; மகாபத்மனைப்போலப் புதிதாக முளைத்த அற்ப பவுஷனன்று" என மொழிந்தார்.

"இவருடைய தந்தை பிலிப்பு ஸ்திரீலோலர்; ஆனல். இவர் அத்தகையவர் அல்லர். ஒருநாள் இவர் பள்ளியறைக் குப் போகுமுன், இவரைச் சிற்றின்பத்தில் ஈடுபடச் செய்யக் கருதி, ஒரு சுந்தரவதியான தாசியை இவருடைய படுக்கையில் பிலிப்பு, படுக்கவைத்திருந்தார். அலெக்சாண் டர் உள்ளேபோய் அந்த ஸ்திரீயைப் பார்த்தவுடனே, வெறுப்புற்றுத் திரும்பி வெளியேவந்து பக்கத்தறையில் தமது நண்பன் டாலேமியோடு படுத்துறங்கினர். அதன் பிறகு பிலிப்பு இவ்விதமாக இவரைச் சோதிக்கவில்லை" என்று சசிகுப்தன் சொன்னன்.

"ஆ! இவருக்குள்ள அசாத்தியமான ஸஹன சக்திக் கெல்லாம் இந்தப் பிரம்மசரிய விரதமே மூலகாரணம். நம்

முனிவர்கள் எவ்வளவு சுலபமாக இமயமலையேறிச் செல்கிறார்களோ அவ்வளவு சுலபமாக இவர் இந்துகுஷ் மலையைக் கடந்து வந்தது அதிசயமன்று" எனத் தக்ஷசிலை யரசர் கூற, "இவருக்கு லியோனிடாஸ் (Leonidas) என்னுமோர் உபாத்தியாயர் இருந்தார். ஆசை யொறுத்து அற்பாகாரம் உண்டு நியமமாக ஜீவிக்கும்படி இவரை அவர் பழக்கிவைத்தார். தின்னவொண்ணுத ருசிகரமான அரிய தின்பண்டம் எதனையேனும் தாய் தமக்கு அனுப்பிவிட்டாளோவெனத் தினந்தோறும் தமது பெட்டியை ஆராய்ந்து பார்ப்பார். 'காலையில் கலகலவெனப் பசியெடுக்க வேண்டுமானால், இரவில் நெடுந்தூரம் நடக்கவேண்டும். மாலையில் ஆவலோடு அன்னம் புசிக்கவேண்டுமானால் காலையில் இலகுவாக உண்ண வேண்டும்' என்று தமது பழைய உபாத்தியாயர் போதித்த நீதிமொழியை அலெக்சாண்டர் இப்பொழுதும் சொல்லிக்கொண்டே யிருப்பார்" எனத் தொடர்ந்து சசிகுப்தன் சொன்னான்.

"நல்ல நீதிவாக்கியம். அபேக்ஷை குறையக் குறைய ஸ்வதந்திரமும் பெருங்காரியம் சாதிக்கும் சக்தியும் அதிகரிக்கும். தேவை எதுவும் இல்லையானால் பிறர் தயவே வேண்டாம். அதனாலன்றோ 'துறவிக்கு வேந்தன் துரும்பு' என்னும் பழமொழி ஏற்பட்டது?" என்று தக்ஷசிலை மன்னர் சொன்னார்.

"தந்தைக்குள்ள குணகுற்றங்கள் இவருக்குப் படியாமற் காக்கும் பொருட்டே லியோனிடாஸ் என்பவரைத் தாய் இவருக்கு உபாத்தியாயராக நியமிக்கச் செய்தாள். இவருடைய தாய் நியாயா நியாயம் பாராமல் சில சமயங்களில் வெறிபிடித்தவளைப்போல நடப்பாள். சில வேளை அடங்காத கோபாவேசம் அவளுக்கு வந்துவிடும்.

இப்படிப்பட்ட வெறித் தன்மையும் வேகமும் தாய்வழியில் அலெக்சாண்டருக்குவராதிருக்கும்பொருட்டு அரிஸ்டாடில் என்பவரை, மூன்றுவருஷகாலம், 13-ஆம் வயது முதல் 16-ஆம் வயதுவரையில் இவருக்கு உபாத்தியாயராகத் தகப்பனுர் நியமித்திருந்தார். அரிஸ்டாடில் என்பவர் கிரீஸ் தேசத்திலிருந்த ஞானிகளுள் உத்தமமானவர். லௌகிக ஞானத்திலும் பாரமார்த்திக புத்தியிலும் சிறந்தவர். அவருடைய போதனையினுலும் பழக்கத்தினுலும் அலெக்சாண்டருக்கு நிதான புத்தியும், ஈகை இரக்கம் தயை தாக்ஷிண்யம் முதலான நற்குணங்களும் படியவேண்டுமென்பது தந்தையாரின் கருத்து. அந்தப் பாடங்களை அரிஸ்டாடில் நன்ருகக் கற்பித்தார். அதைப்பற்றிப் பேசும்போது அலெக்சாண்டர், 'தந்தை எனக்கு உயிரளித்தார்; உயிர்வாழும் வகை புகட்டினுர் அரிஸ்டாடில்' என நன்றி பாராட்டி இன்றைக்கும் சொல்லுவர்" என்ருன் சசிகுப்தன்.

"இவருக்குத் தாய்வழியில் வந்த குணங்கள் என்ன? தந்தை வழியில் வந்த குணங்கள் யாவை?" என்று தக்ஷசிலாதிபதி வினவ, "தந்தையிடமிருந்து திடமான காத்திரமும், கலங்காத் தைரியமும், எவ்வளவு வேலையானுலும் சோர்வுருமல் எளிதிற் செய்யும் திறமையும் இவருக்கு வாய்த்துள்ளன. துணிந்து மேற்கொள்ளும் கற்பனு சக்தியும், வீறுகொண்ட மனவலியும், குப்தமாயுள்ள தெய்வ ஸம்பத்துத் தொடர்பும் தாயினிடமிருந்து இவர் பெற்றுள்ளார்" என்று சசிகுப்தன் சொன்னுன்.

"ஆமாம், மேலே சொல்லும்; இவரது வாழ்க்கைச் சம்பவங்களில் இன்னும் சிலவற்றைச் சொல்லும்" என்று அம்பி கேட்டான்.

"இவர் சிறுபிள்ளையாயிருக்கும்போது, தேஸ்ஸலி வியாபாரி யொருவன் புக்கிபேலஸ் (காளைத்தலை) என்னும் குதிரையைத் தகப்பனாராகிய பிலிப்பினிடம் விற்கக் கொண்டு வந்தான். மூவாயிரம் பொன்கள் கொடுத்து அதை வாங்க அவர் தீர்மானித்தார். ஆனால், அவருடைய ஆட்களில் எவரும் அதன்மீது ஏறிச் சவாரிசெய்யச் சக்தியற்றவர்களாயிருப்பதைக் கண்டு, அதைத் திரும்பக் கொண்டுபோகும்படி சொல்வதற்கு இருந்தார். அந்தச் சமயத்தில் அலெக்சாண்டர், 'அதை ஏறி நடத்துவதற்குத் திறமையில்லாத மூடர்களாயிருக்கிறார்களென்றும் போதிய தைரியமில்லாதவர்களாயிருக்கிறார்களென்றும் இவ்வளவு அருமையான குதிரையை விட்டுவிடலாமா? நான் ஏறிச் சவாரி செய்கிறேன்' என்று துணிந்து கூறி, அப்படியே அதன்மீது சவாரி செய்து காட்டினார். அதுமுதல் இவரே அந்தக் குதிரையை வைத்துக்கொண்டிருக்கிறார். அதன்மீது வைத்துள்ள அளவு அன்பு மனிதர் எவர்மீதும் இவர் வைத்ததில்லை. ஆக்ஸஸ் நதிக்கரையிலுள்ள காட்டுச் சாதியார் அதைத் திருடிக்கொண்டு போனபோது, அவர்களெல்லோரையும் 'வெட்டிச் சாய்ப்பேன்' என்று இவர் பயமுறுத்தவே அவர்கள் அதைக் கொண்டு வந்து இவரிடம் திரும்ப ஒப்பித்தார்கள்" என்று சசிகுப்தன் சொன்னான்.

"அது மிகவும் நல்ல குதிரையே; ஆனால், கிழடாகி வருகின்றது" என்று அம்பி சொன்னதற்குச் சசிகுப்தன், "நம்மெல்லோரைக் காட்டிலும், அது அநேக போர்களையும் அநேக பிரதேசங்களையும் கண்டிருக்கின்றது" என்றான்.

"உலகம் முழுமையும் ஜயிக்கவேண்டுமென்னும் எண்ணம் இவருக்கு இந்தியாவிலிருந்து வந்ததா? ராஜசூய

யாகம் செய்து ஸம்ராட் என்னும் விருதுபடைக்க வேண்டு மென்னும் விருப்பம் இவருக்கு உண்டோ?" என்று தக்ஷசிலாதிபதி வினவினர்.

"அப்படியன்று. பேருக்கு ராஜசூயயாகம் செய்து உலகத்தை வென்றதாகச் சொல்லிக் கொள்வது இவரது நோக்கமன்று. உண்மையில் போர்செய்து ஒவ்வொரு நாட்டையும் பிடித்து, உலகம் முழுவதையும் ஒரு குடைக்கீழ் ஆளவேண்டுமென்பதே இவருடைய கருத்து. நம் சக்கரவர்த்திகளைப்போல, உலக சாம்ராஜ்யத்திற்கெல்லாம் அதிபதியென்னும் வெறும் பட்டப்பெயர் தாங்குவதில் இவருக்கு ஒரு பிரயோஜனமும் இல்லை. எல்லா நாடுகளையும் கைப்பற்றி, அங்கங்கே மண்டலேசர்களையும், கப்பங்கட்டும் சிற்றரசர்களையும் வைத்து உலகம் முழுவதையும் தம் ஆட்சிக்கும் அதிகாரத்திற்கும் உட்படுத்த வேண்டுமென்பதே இவரது சங்கற்பம்" என்று சசிகுப்தன் சொன்னன். அது சாத்தியமாகுமா வென்று ஐயுற்றுத் தக்ஷசிலாதிபதி வினவ, "அது நாம் இப்போது சொல்லமுடியாது. ஆனல் சாத்திய மென்றே இவர் நினைக்கிருர். இவர் சிறுபையனயிருக்கும் போது, பாரஸீகத்து ராஜதூதர்கள் இவருக்குக் காணிக்கையாக ஒரு மட்டை (bat)யும் பந்தும் கொடுத்தார்கள். அப்போதே இவர், 'இந்தப் பந்தே பூகோளம்; தன் இஷ்டப்படி இந்தப் பந்தை நகர்த்தும் மட்டையே நான்' என்று அவர்களுக்குச் சொன்னர்" என்று சசிகுப்தன் புகன்றன்.

"தமது சக்தியை உணர்ந்தே இவர் அவ்வளவு தைரியமாகப் பேசினரென்று தோன்றுகிறதல்லவா?" என்று தக்ஷசிலாதிபதி சொன்னர்.

"பாரஸீக ராஜ்யம் எவராலும் ஜயிக்க முடியாத தென்று எல்லோரும் அந்நாளில் நினைத்திருந்தார்கள். அப்படிப்பட்ட ராஜ்யத்தைப் பிடிக்க இவர் படையெடுத்துப் புறப்பட்டபோது, அதை நிச்சயமாக வென்று கைப்பற்றுவோ மென்னும் நம்பிக்கை பெரிதும் இருந்ததாக இவர் காட்டினர். இவர் மாஸிடோனியா தேசத்து அரசரல்லவா? ராஜாங்கத்துக்கல்லாமல் அரசருக்கே சொந்தமான நிலங்களும் ஜமீன்களும் மானியங்களும் பல இருந்தன. இவருடன் படையெழுச்சியிற் சேர்ந்து யுத்தத்திற்கு வராமல் தத்தம் ஊர்களிலே சில பிரபுக்கள் தங்கி விட்டார்கள். பாரஸீகப் படையெழுச்சியிற் கலந்திருந்தால் வெற்றிபெற்று வேண்டிய பொருள்களை அங்கிருந்து அவர்கள் சூறையாடியிருப்பார்கள். அப்படி லாபமடைய அவர்களுக்கு அவகாசமில்லாமற் போனதற்கு ஈடாக இவர் தமது சொந்த ஜமீன்களை அவர்களுக்கு இனமாகப் பங்கிட்டுக் கொடுத்து விட்டார். இங்ஙனம் செய்தது முட்டாள்தனம் என இவர் தாய் ஒலிம்பியஸ் இடித்துரைத்தாள். மானியம் பெற்ற பிரபுக்களிலொருவர் 'எல்லா ஜமீன்களையும் இவ்வாறு கொடுத்துவிட்டீர்களே, உங்களுக்கென என்ன வைத்துக்கொண்டிருக்கிறீர்கள்?' என்று கேட்டபோது, 'வெற்றிபெறும் உறுதியே எனக்குள்ள ஆஸ்தி' என்று இவர் மறுமொழி கூறினர்" என்று சசிகுப்தன் சொன்னான்.

"அற்புதமாயிருக்கின்றது! இவருடைய எண்ணங்களெல்லாம் பின்னாளில் இவரது உறுதிப்படியே நிறைவேறினவல்லவா?" என்று அம்பி கேட்டான்.

"ஆம். நிறைவேறவில்லையா என்ன? சூசா (Susa)விலிருந்து 50,000 டாலண்டுகள் (talents), பேர்ஸிபாலிஸி

லிருந்து (Persepolis) 1,20,000, பஸர்கடேயிலிருந்து (Pasargadae) 12,000, எக்படானு (Ecbatana)வி லிருந்து 10,000 இவருக்கு வந்தன. டாலண்டு என்பது ரோமர்களும் கிரேக்கர்களும் அஸிரியர்களும் வழங்கிவந்த நாணயம். இதில் வெள்ளி டாலண்டும் தங்க டாலண்டும் உண்டு. இது அட்டிக்கு (Attic) நாணயமுறை எனப் படும். அட்டிக்கு வெள்ளி டாலண்டு 242 பவுண்டு 16 ஷில்லிங்கு 6 பென்சு பெறுமானது; அட்டிக்கு தங்க டாலண்டு 2428 பவுண்டு 5 ஷில்லிங்கு ஒரு பென்னி பெறு மானது. இப்படி மேற்சொல்லிய தங்க டாலண்டுகளை கணக்கிட்டுப் பார்த்தால் எத்தனையோ கோடி பவுண்டுகள் ஆகும். இதுவல்லாமல், அட்ரியாடிக்கு (Adriatic Sea)க் கடல் முதற்கொண்டு ஸிந்து நதிக்கரைவரையில் உள்ள தேசங்களெல்லாவற்றிலிருந்தும் கிஸ்திப்பணம் வந்துகொண் டிருந்தது" என்று சசிகுப்தன் சொன்னான்.

"பாரஸீகதேசத்தரசனை டாயஸ் என்பவன் யூப்ரடீஸ் (Euphrates) என்னும் நதிக்கு மேற்புறமாயுள்ள ராஜ்யங் களை யெல்லாம் விட்டுக் கொடுப்பதன்றித் தன் மகளையும் விவாகம் செய்து கொடுப்பேனென்று சொன்னான். அலெக் சாண்டருடைய முக்கிய மந்திரியாயிருந்த பார்மீனியோ (Barmenio) என்பவனும், 'நான் அலெக்சாண்டரா யிருந் தால், டாயஸ் கொடுக்கிறே னென்று சொல்வதைத் தடை யில்லாமல் ஏற்றுக்கொள்வேன்' என்று சொன்னபோது, சரேலென அலெக்சாண்டர், 'நான் பார்மீனியோவாக இருந் தால் நானும் அதை ஏற்றுக்கொள்வேன்' என்று பதில் சொன்னார். அப்படிச் சொல்லிய டாயஸுக்கு, 'என்னை நீர் ஆசியா கண்டத்து அதிராஜனைப் பாவித்து உமக்கு வேண்டி யதை என்னிடம் இறைஞ்சிக் கேட்கவேண்டுமே யல்லாமல்,

உமக்குச் சமானஸ்தனாக நினைத்து வியவகரிக்கக் கூடாது. உம் மகளை நான் மணக்க விரும்பினால், உமது அனுமதியின்றியே மணந்து கொள்வேன்' என்று பதில் எழுதியனுப்பினார்" என்று சசிகுப்தன் சொன்னான்.

அப்போது, "ஆனால், என்னை இவர் சமானஸ்தராக மதித்து வியவகரித்தாரே" என்று தக்ஷசிலாதிபதி சொல்லச் சசிகுப்தன், "ஆம், தம்மை வணங்கி வருகிறவர்களின் விஷயத்தில் தயாளமாக இருக்கிறார்; கிரேக்கரையும் பாரஸீகரையும் இந்தியரையும் எல்லாரையும் ஒரே மாதிரியாகப் பாவிக்கிறார். தம்மை எதிர்க்கிறவர் விஷயத்திலோ கொஞ்சங்கூட இரக்கமில்லாமலே வியவகரிக்கிறார். தீப்ஸ் (Thebes) என்னும் கிரேக்க நகரத்தைத் துவம்சம் பண்ணி நிலமட்டமாக்கி, ஸ்திரீகளையும் குழந்தைகளையும் அடிமைகளாக விற்றார். அதுபோலவே பாரஸீகத்திற்குச் சார்பாக நின்று போராடிய பினீஷியன் (Phoenician) நகரங்களாகிய டயர் என்பதையும் காஜா என்பதையும் பாழாக்கினர். பாடிஸ் (Batis) என்னும் எதியோப்பிய தளகர்த்தனொருவன் பாரஸீகத்தார் கட்சியை ஆதரித்துக் கொண்டிருந்தான். அவனைப் பிடித்துப் பாதங்களைத் துளைத்து வெண்கல வளையங்களை மாட்டி, அவன் உயிர் போகிறவரையில் தரையில் இழுத்துக்கொண்டு போகச் செய்தார். பெஸ்ஸாஸ் (Bessos) என்பவனைக் கசையாலடித்து இரண்டு மரங்களோடு கட்டி, பின் அவன் கிழிந்து போகும்படி மரங்களை அகற்றிவிட்டார். பாரஸீகத்து அரசனான ஜர்ஜெக்ஸ் (Xerxes) என்பவன் ஏதென்சு நகரத்து அலங்கத்துக்குத் தீ வைத்ததற்குப் பழி வாங்கும் பொருட்டுக் கோடிக்கணக்கான பணம் செலவிட்டுப் பர்ஸிபாலிஸில் கட்டப்பட்டிருந்த மிக்க அதிசய

மான அரண்மனையை இவர் சுட்டுச் சாம்பலாக்கினர். இளம் பிராயத்தில் இவருக்கு விளையாட்டுத் தோழனயிருந்த கிளீடாஸ் (Kleitos) என்பவன் துடுக்குத்தனமாக இவரை நிந்தித்த குற்றத்திற்காக அவனைக் கொன்ருர். அது போலவே, பார்மீனியோவையும் அவனுடைய மகன் பிலோடாஸ் (Philotas) என்பவனையும் ராஜத்துரோகத்திற்காகச் சிரச்சேதம் செய்வித்தார். காலிஸ்தினீஸ் (Kallisthenes) என்பவன் ஒரு சரித்திரகாரன். அதாவது, இதிஹாஸ லேககன். அலெக்சாண்டருக்கு வாய்த்த பெருமையும் புகழும், இவர் செய்த காரியங்களினலல்லவென்றும் இவரைப் பாராட்டித் தான் சரித்திரத்தில் வர்ணித்து எடுத்து எழுதியதனலேயே விளைந்தனவென்றும் ஜம்பமடித்துக் கொண்டிருந்தான். அலெக்சாண்டருக்கு அவன் அஷ்டாங்க நமஸ்காரம் செய்ய மறுத்தான்; 'இழிதன்மை வாய்ந்த ஆசியா கண்டத்தவர்களே அப்படித் தண்டம் சமர்ப்பிப்பார்களல்லாமல் நான் செய்யமாட்டேன்' என்ருன். அவன் ஆபத்துக்கிடமான ராஜத்துரோகியென அவனைப் பிடித்துக் கடுஞ்சிறையில் அடைத்து வைத்திருக்கிருர்; என்ருே ஒருநாள் அவனுக்கும் தலை போய்விடும்" என்று சசிகுப்தன் சொன்னன்.

இந்த விவரங்களைக் கேட்டுத் தக்ஷசிலாதிபதி, "இவர் எதனையும் நேருக்கு நேரே செய்வாரல்லாமல், கோணல் வழியைக் கைக்கொள்ளாரென்று இதனல் தெரிகிறது" என்ருர்.

அதற்குச் சசிகுப்தன், "நீங்கள் சொல்லுவது சரியே. கார்டியம் (Gordium) என்னும் நகரத்தில் பிரஸித்தமான கயிற்றுமுடிச்சு ஒன்று இருந்தது. அதற்குக் கார்டியன் முடிச்சு (Gordian knot) என்று பெயர். அந்த முடிச்சு மரப்

பட்டையினற் செய்த கயிற்றிற் போடப்பட்டிருந்தது. அந்தக் கயிற்றினுல் ஒரு பெரிய கட்டைவண்டியின் நுகத் தடி பிணைக்கப்பட்டிருந்தது. கிரீஸ்தேசத்தில் **திரேஸ் (Thrace)** என்னும் ஒரு மாகாணம் உண்டு. அந்த மாகாணத்தவர்கள் **மைடாஸ் (Midas)** என்பவனைத் தங்களுக்கு அரசனுகத் தெரிந்தெடுத்துக்கொண்ட தினத் தில் அவனை அந்த வாகனத்தின்மீது ஏற்றுவித்துப் பட்டணப்பிரவேசம் செய்வித்தார்கள். அந்த முடிச்சை அவிழ்க்கிறவன் ஆசியா கண்டத்துக்கு அதிபதியாவா னென்று சொல்வது வழக்கம். அலெக்சாண்டர் அதைப் போய் உற்றுப் பார்த்தார்; அவிழ்ப்பதற்கு முடியாத மிகச் சிக்கான முடிச்சு என்று கண்டு தன் வாளையெடுத்து அதை ஒரே வெட்டாக வெட்டி இரண்டு துண்டாக்கினுர். உடனே இடியிடித்து மழை பெய்தது" எனக் கூறினுன்.

"அடடா! இவர் சற்றுப் பொறுமையா யிருந்து அம முடிச்சை அவிழ்த்திருந்தால் இன்னும் நன்று யிருக்கும். அதை நறுக்கவும், ஆசியா கண்டத்தை ஜயிக்கவும் இவர் கத்தியைக் கைக்கொண்டதனுல், இவர் பலவந்தத்தினுல் காரியத்தைச் சாதித்தவராகிருரேயல்லாமல், அன்பினுற் சாதிக்கிறவரல்லவே. இனிமேல், ஐரோப்பா கண்டத்தாரும் ஆசியா கண்டத்தாரும் ஒருவரையொருவர் வெல்வதற்குக் கத்தியையே தாராளமாகக் கையாளுவார்கள். அநேக நூற் ருண்டுகளுக்குப்பின் எவனே ஒருவன் தோன்றி, வெட் டுண்ட அந்த முடிச்சைத் திரும்ப இணைத்து முடிபோட்டுச் சமாதானம் நிலை நாட்டுகிற வரையில் இவ் விருகண்டத் தாரும் இவ்வாறு போராடிக் கொண்டிருப்பார்கள். இதய நரம்புகளை அங்ஙனம் கத்திகொண்டு பிய்த்தெறிதல் கூடாது" என்ருர் தக்ஷசிலாதிபதி.

"ஆனல், இந்தியாவிலுள்ள அரசர்களும் நகரங்களும் முன் ஜாக்கிரதையாகி அலெக்சாண்டர் வந்தவுடனே அவருக்குப் பணிந்து போகட்டும்; இல்லையெனின், தீப்ஸுக்கும் டயருக்கும் காஜாவுக்கும் சேர்ந்த கதியை அனுபவிக்கச் சித்தமாகட்டும்" என்று சசிகுப்தன் சொன்னன்.

"அவருடைய கோபத்திற்கு நாம் ஏன் ஆளாகவேண்டும்? எங்கள் தக்ஷசிலை முன்னொரு காலத்தில் பாரசீக சாம்ராஜ்யத்திற்கு உட்பட்டிருந்தது. அந்தச் சாம்ராஜ்யத்திற்கு இப்போது அலெக்சாண்டர் அதிபதியாக இருக்கிறார். ஆகையால், முன்போல நாங்கள் அந்தச் சாம்ராஜ்யாதிபதிக்கு வணங்கி உட்பட்டிருந்து வாழக்கட்டுவோம். எங்கள் மண் சட்டி அந்த இரும்புச் சட்டியோடு தாக்குண்டால் நொறுங்கிப்போம். தான் பித்தனைப்போலவே நினைத்துக் கொண்டிருக்கிற பௌரவன் (Poros) தன் அதிர்ஷ்டத்தைப் பரீக்ஷை செய்து பார்த்து, வருத்தத்தை அடையட்டும். எவ்வகைக்காரணத்தாலும் பௌரவனைக்காட்டிலும் அலெக்சாண்டர் பெரியவரே; சிறந்தவரே. பக்தி விசுவாசப்பிரமாணம் செய்தவருக்குப் பௌரவன் எப்பொழுதேனும், பிரதி சம்மானம் செய்தனுப்பியதாக நான் கேட்டதேயில்லை" என்று அந்தக் கிழவர் சொன்னர். இதற்குள்ளாக அவர்கள் தங்கள் கூடாரங்களுக்கு வந்து சேர்ந்தார்கள். சசிகுப்தனுக்கு வந்தனமளித்துத் தக்ஷசிலையரசரும் அம்பியும் உள்ளே போனர்கள்.

சசிகுப்தன் அலெக்சாண்டரிடம் திரும்பி வந்தான். அப்போது ஹெபேயிஸ்டியனும் கிரேடாரகம் அலெக்சாண்டருடன் இருந்தார்கள். "தக்ஷசிலைக்கிழவருக்கு உண்டான சந்தோஷம் சொல்லிமுடியாது. அவர் மேலும் மேலும் உங்களைப்பற்றியே பேசிக்கொண்டிருந்தார். 'தடை

யில்லாமல் இவர் ஜீவனின் மகிமை. என்ன தீரம், என்ன விநயம், என்ன பெருந்தகைமை!' என்று வியப்புற்றார். உங்களுடைய வீரச்செயல்கள் சிலவற்றைச் சொல்லும்படி என்னைக் கேட்டு, அவரும் அவருடைய மகனும் மகிழ்வுற்றார்கள்" என்று அவன் அலெக்சாண்டருக்குச் சொன்னான்.

"அவர் நல்ல கிழவர். எனக்குப் பிடித்திருக்கிறார்" என்று அலெக்சாண்டர் சொன்னான்.

"இப்படித் தாராளமாகக் கொடையளிப்பதனால், கேடு நேரிடுமென்று மாஸிடோனியர்கள் சிறிது அஞ்சுகிறார்கள். 'இப்படியே செய்துகொண்டிருந்தால், இவருக்கு வரும் ஆதாயத்தைக்காட்டிலும், விரயம் அதிகமாகும்' என்றொருவன் சொன்னான்" என ஹெபேயிஸ்டியன் பகர்ந்தான்.

"அது அப்படி இருக்கலாம். கொடுப்பதைக் காட்டிலும், அதிகமாகப் பெற வேண்டுமென்னும் எண்ணங் கொண்ட வர்த்தகனாக நான் இங்கே வரவில்லை. கண்டனுக்கு மீண்டும் விருப்பேன்; மடனுக்கு நமனாவேன்; ஓர் அடி அடித்தால் இரண்டு அடி அடிப்பேன்; உபகாரிக்குப் பேருபகாரியாய் இருப்பேன்; திணையளித்தவனுக்குப் பனை யளிப்பேன். தக்ஷசிலை மஹாராஜர் சொல்வதுபோலச் சோற்றுக்கும் தண்ணீருக்கும் குறைவில்லையென்றால் எவரும் போர் புரியப் போகார். சசிகுப்தா! நீ என்ன சொல்லுகிறாய்?" என அலெக்சாண்டர் வினவினான்.

"பிரபுவே! அது அப்படித்தானென்று நான் நிச்சயமாகச் சொல்லமுடியாது. இந்தியச் சிற்றரசர்கள் என்னைப் போல க்ஷத்திரிய குலத்திற் பிறந்தவர்கள். வேறு எவ்வரசனுக்கும் பணியக்கூடாதென்பது அவர்களுடைய சமயக்

கட்டளை. அதைக்காட்டிலும் இறப்பதே கண்ணியமெனக் கருதவேண்டுமென்பதும் அவர்களுடைய மதாசார விதி. உதிர்கனி புசித்து ஓடு புனலருந்தித் தெய்வத்தியானத்தி லேயே அமர்ந்து, வாழ்க்கையின் நோக்கம் என்னவென்று சிந்தித்துக்கொண்டு, எளிய சிற்றுயிரையும் கொல்வது கொடுமையெனக் கூசி நடுங்குகிற தத்துவஞானிகளும் மேற் சொல்லியபடி ஒழுகுவதே க்ஷத்திரிய தருமம் எனவும், அவர்கள் முக்தி பெறுவதற்கு அதுவே வழியெனவும் சொல்லி அவர்களை ஆதரிக்கிறார்கள். ஆதலால், அப்படிப் பட்ட க்ஷத்திரியர்களிற் சிலர் எதிர்த்து நின்றாலும் நிற்கக் கூடும்" என்று சசிகுப்தன் சொன்னான்.

"அப்படியானால், தக்ஷசிலாதிபதியும் அவருடைய மகனும் தடை சொல்லாமல் வந்து ஏன் பணிந்தார்கள்?" என்று அலெக்சாண்டர் வினவினான்.

"பலம் மிக்க பௌரவனும் அபிசாரத்தரசனும் வந்து தம்மை இப்போது தாக்குவார்களென்று இவர்கள் அச்சப் படுகிறார்கள். பிறர் துணையின்றேல் இவர்கள் தோல்வி யடைந்து பௌரவனை அதிராஜனாகக் கொள்ளவேண்டி வருமென்பது இவர்களுக்கு நிச்சயமாகத் தெரியும். அதி ராஜனாக மற்றொருவனைக் கொள்வதில், தூரத்திலிருக்கிற அன்னியனையும் தயாளம் மிக்க அரசனையும் அதிராஜனாகக் கொள்வதே நலமென்று இவர்கள் இயற்கை யுணர்ச்சியி னால் உங்களை நண்ணுகிறார்கள். தக்ஷசிலையிலுள்ள புலவர் களும் தத்துவஞானிகளும் இவர்கள் உங்களுக்கு வணங்கி இடங்கொடுப்பது சரியன்றெனவே சொல்லுகிறார்கள்; இவர்களுடைய மனத்தை எந்த வேளையிலும் அவர்கள் மாற்றித் திருப்பினாலும் திருப்பக்கூடும். இவர்கள் உங்க ளிடம் வந்து ராஜ விசுவாசப்பிரமாணம் செய்யலாகாது.

செய்தால் புராதனமாயுள்ள இந்திய தர்மத்திற்கு மோசம் வரும் என்று அவர்களில் ஒருவன் வந்து இவர்களுக்குப் போதித்துப் பார்த்தான். உங்களையல்லாமல், வேறு எந்தப் பெரிய இந்திய மன்னனையேனும் துணைகொள்வது நன்றெனச் சொல்லிப் பார்த்தான். தக்ஷசிலாதிபதியும் அம்பியும் அவனுடைய வார்த்தையை ஏற்றுக்கொள்ளவில்லை. அதனால் அப் புலவன் இவர்களுடைய நகரத்தை விட்டு மற்றோர் இந்திய அரசனுடைய ஸம்ஸ்தானத்திற்குப் போய்ச்சேர்ந்தான். அப்படிப்போகையில், ராஜ்ய பரிபாலன தந்திரத்தைப் பற்றியும் அர்த்த சாஸ்திரத்தைப்பற்றியும் அவன் எழுதியிருந்த நூலையும் எடுத்துக்கொண்டு போய் விட்டான்” என்று சசிகுப்தன் மறுமொழி கூறினான்.

“மாஸிடோனிய மன்னர்களைப்போல் இந்திய மன்னர்களுக்கு ராஜ்ய பரிபாலனத்திலும் ராஜாங்க வியவகாரத்திலும் ஸ்வதந்திரமில்லையா? இப்படிப்பட்ட கலகக்காரர்கள் துரைத்தன வியவகாரத்தில் தலையிடுவதற்கு இவர்கள் இடங்கொடுக்கிறார்களா?” என அலெக்சாண்டர் வினவினான்.

“எங்கள் ராஜாங்க முறை வேறு; உங்கள் ராஜாங்க முறை வேறு. எங்கள் அரசர்கள் ஸ்வதந்திர அதிகாரம் வாய்ந்தவர்களே. ஆனால், பிரஜைகளின் ஜாதி குலாசார முறைகளையும் தர்ம சாஸ்திர விதிகளையும் அவர்கள் மாற்றமுடியாது. அந்தத் தர்மசாஸ்திரங்கள் தத்துவஞானிகளுக்கும் பிராமணர்களுக்கும் உரிமையாகவிருக்கின்றன. ஆதலால், அவர்கள் அரசர்களிடத்தும் பிரஜைகளிடத்தும் அபரிமிதமான செல்வாக்குடையவர்களாக இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் கலகக்காரர்களுமல்ல, அகந்தை பிடித்தவர்களுமல்ல. சில விஷயங்களில் அவர்கள் பாமரமக்களிடத்

3

தில் பக்ஷபாதிகளாகவும், வேறு சில விஷயங்களில் பிரபுக்களிடத்திற் பக்ஷபாதிகளாகவும் இருக்கிறார்கள். அவர்கள் பண்டைப்பற்று மிகுந்தவர்கள். நவீன முறைகளுக்குச் சிறிதும் இடங்கொடுக்கமாட்டார்கள். வெறும் வாய்மொழிப் பிரசங்கத்தினாலேயே பெரும்பாலும் தங்கள் காரியங்களைச் சாதிக்கிறார்கள். அவர்கள் சண்டை போடுகிறவர்களல்ல; ஆனால், எங்கள நாட்டு யுத்தவீரர்கள் பெரும்பாலார் அவர்கள் வார்த்தையைக் கேட்டு அதன்படி நடக்கிறார்கள்" என்று சசிகுப்தன் சொன்னான்.

"நல்லது. நமக்கு விரோதமாக அவர்கள் ஒன்றும் சொல்லாதிருக்கட்டும். சொன்னால் அவர்கள் தலை போய் விடும். அதுதான் பயன். வேதாந்திகள் என்றால் எனக்குப் பிரியமே. ஆனால், அவர்கள் தங்களுக்குரிய தத்துவ விசாரத்தோடு நிற்கவேண்டும்; பிராணனைக் காப்பாற்றிக் கொள்ள விரும்பினால் அவர்கள் அரசியல் வியவகாரங்களில் தலையிடக்கூடாது. ஆயினும், இந்த விஷயங்களைப்பற்றி நாம் இப்போது ஆலோசிக்கவேண்டிய ஆவசியகம் இல்லை. 1,20,000 பதாதிகளும் 15,000 குதிரைவீரர்களுமடங்கிய நமது சேனை இனிச் சின்னாளில் இந்தியாவின் மீது பாயும். டாயஸ் அனுப்பிய படையையும் சேமிரமிஸ் (Semiramis) அனுப்பிய படையையும் காட்டிலும் இது மிகப் பெரியது. அப்போதைக்கப்போது மாஸிடனிலிருந்து புதுப்படைகளும் நமக்குத் துணையாக வந்து கொண்டிருக்கும். வேதாந்திகளேனும் அரசர்களேனும் வீரர்களேனும் நம் வல்லமையை எதிர்க்கத் துணிவார்களென்று எனக்குத் தோன்றவில்லை. நம் ஆலோசனைப்படி நாம் நடப்போம்.—ஹெபேயிஸ்டியன்! உங்களுக்குக் குறிப்பிட்டுள்ள காரியத்தைச் சாதிப்

பீர்களென்று உனக்கும் பர்டிக்கசுக்கும் நம்பிக்கை யில்லையா?" என்று அலெக்சாண்டர் கேட்டான்.

"அந்த விஷயத்தில் எங்களுக்கு நல்ல நம்பிக்கையே. ஆனால், நீங்கள் போகிற கஷ்டமான படையெழுச்சியில் உங்களுடன் நான் இருப்பதற்கு இல்லையே யென்றுமாத் திரம் விசனிக்கிறேன்" என்று ஹெபேயிஸ்டியன் சொன் னான்.

"ஓ, என்னைப்பற்றிக் கவலைப்படாதே. என்னுடன் கிரேடிராஸ் இருக்கிறான். அவன் எனக்குச் சமானமான வன். எங்கள் உத்தேசத்தை நாங்கள் எளிதில் நிறைவேற்று வோம். கிரேடிராஸ்! என்ன சொல்லுகிறாய்?" என்று அலெக்சாண்டர் வினவினான்.

"உங்களுக்கு எதுவும் அசாத்தியமன்று" என்று கிரேடிராஸ் பதில் சொன்னான். "உலகம் முழுவதையும் வென்று கைப்பற்றி எல்லாத் தேசங்களையும் ஒன்றுபடுத்து வதுகூட அசாத்தியமன்றா?" என்று அலெக்சாண்டர் வினவ, "அதுவும் அசாத்தியமன்று" என்றான் கிரேடிராஸ்.

அதற்குப்பின் மூன்றுநாட்களில் இரண்டு சேனைகளும் புறப்பட்டன.

---

# அத்தியாயம் 2

## முனிவர் மரபினன்

**கா**சிமாநகரத்தில் ஒருநாள் பிற்பகலில் மழை பெய்து கொண்டிருந்தது. விசாலமில்லாத தெருக்களில் சேறும் சதுப்பும் அதிகமாகிக்கொண்டிருந்தன. பூதாகாரமான காளைமாடுகள் தெருக்களையும் சந்துகளையும் அடைத்து நின்றுகொண்டிருந்தன. மழையையும் அவை பொருட்படுத்தவில்லை; வழிப்போக்கர்களையும் பொருட்படுத்தவில்லை. அவை அசையாமல் நின்றுகொண்டிருந்தமையின், பாறைகளுக்கும் கம்பங்களுக்கும் இடையில் பக்கவாட்டாக உராய்ந்துபோவதுபோலப் பாட்டைசாரிகள் போய்க்கொண்டிருந்தார்கள். எவரும் அந்தக் காளைகளின் ஜோலிக்குப் போகவில்லை. மழையின் வழிக்குப் போகாமலும், அலைந்து திரியும் பல்வகைச் சந்நியாசிகளின் வழிக்குப்போகாமலும் தங்கள் வழியே ஜனங்கள் சென்றதுபோலக் காளைகளை அகற்றி அல்லற்படுத்தாமற் சென்றார்கள். ஏனெனில், மழைத்தாரைகள் தேவேந்திரனது தூதர்களெனவும், சந்நியாசிகள் கடவுளின் தூதர்களெனவும் நினைப்பது போலக் காளைமாடுகள் சிவபிரானுடைய தூதர்களென்று இந்துக்கள் மதிக்கிறார்களல்லவா?

அன்றைத்தினம் அந்நகரில் பெரிய வித்துவான்களின் ஸபை ஒன்று நடைபெற்றுக்கொண்டிருந்தது. அந்த ஸபையில் வேதாத்தியயனப் பரீக்ஷையும் சாஸ்திர விவாதமும் நடைபெற்றன. பல்விடங்களிலிருந்து கனபாடிகளும் சிறந்த பண்டிதர்களும் அம் மகாஸபையில் போட்டி போட்-

டுத் தங்கள் திறமையைக் காட்டிக்கொண்டிருந்தார்கள். போட்டி பிரமாதமாயிருந்தது. அம் மகாவித்துவான்களோடு போட்டிப் போடச் **சாணக்கிய**னும் போயிருந்தான். தத்தமக்குரிய துறையில் நெடுங்காலம் உழைத்துத் தீரர்களெனவும் சூரர்களெனவும் பெயர் பூண்டு வந்துள்ள அப் பெரும் புலவர்களின் வாயையடக்கித் தன் மகன் வெற்றி பெற்று வீரக்கழலணிந்து வருவானோ, தோற்றுத் துன்புற்ற முகத்தைத் தொங்கவிட்டுக்கொண்டு வருவானோ என அவனுடைய தாயாகிய **தேவகி**, கங்கா நதியின் ஹநுமந்த கட்டத்திலுள்ளதொரு வீட்டில், கவலை மிகுந்தவளாய்க் காத்துக் கொண்டிருந்தாள். அவளுக்கு வயது 45. கருமைநிறம்; ஒல்லியான தேகம்; சுறுசுறுப்பு அதிகம். அவளுடைய பழந் தோழியான **மீனாக்ஷி**யும் அவளது பேத்தி **கௌதமி**யும் தேவகியுடன் இருந்தார்கள். மீனாக்ஷிக்கு வயது 56; அவள் மாநிறமானவள். நகை முகங்கொண்ட நல்லாள். கௌதமியோ பதினொருவயதுச் சிறுமி; நல்ல தேகக்கட்டும் அழகும் வாய்ந்தவள்; அவளுடைய முகச்சாயை கோதுமை நிறமானது.

"இந்தக்கடினப் போட்டிப் பரீக்ஷையில் இன்றைக்குச் சாணக்கியன் என்னவாகிறானோ? பரீக்ஷை இன்னும் முடிவு பெறாததனால் போட்டி மிகக் கடுமையாக இருக்கிறதென்றே தோன்றுகிறது. பாரததேசத்தின் பற்பல இடங்களிலிருந்தும் புலவர்கள் வந்திருப்பதாகக் கேள்விப்படுகிறேன். காசி மகாராஜர் போட்டியில் வெற்றிபெற்றவருக்கு மிக விலையுயர்ந்த சால்வைஜோடி பரிசளிப்பதல்லாமல், அவரை மேளதாள விமரிசைகளுடன் வெற்றிக் கோலமாக ஊர்வலம் வரச் செய்வாராம்" என்று மீனாக்ஷி சொன்னாள்.

"நம்மவன் நன்றாகவே ஜயம் பெறுவான். பண்டிதர்களோடு இவன் போட்டிபோடுவது இது முதன்முறையன்று. தகப்பனருக்கு இருந்த ஞாபகசக்தி அவ்வளவும் இவனுக்கு இருக்கின்றது; அதோடு, பிதாமகருக்குள்ள சூக்ஷ்ம புத்தியும் நவீன கற்பனை சக்தியும் இவனுக்கு அமைந்திருக்கின்றன. தந்தை வழியில் இப்படியானல், தாய்வழியில் இவனுடைய மாதாமகருக்கு அற்புதமான சக்திகள் இருந்தன. அந்தச் சக்திகள் எந்தச் சமயத்தில் எவ்வாறு பயன்படுமென்று எவரும் சொல்லமுடியாது. அந்த வழியில் மாதாமகருடைய அவ் வபூர்வமான புத்திப்பிரபாவமும் இவனுக்கு வாய்த்திருக்கின்றது. 16-ஆம் வயதிலேயே இவனுக்கு விவேகம் உதயமாகிவிட்டது. தக்ஷசிலே மகா பண்டித சபைகளில் நடந்த பெரும்போட்டிகளில் வெற்றி பெற்றதனல் இவனுக்கு **மல்லநாகன்** என்னும் பட்டம் அளிக்கப்பட்டது. 'மற்போருக்குச் சமானமான வாக்யுத்தத்தில் யானைக்கு ஒப்பானவன்' என்பது அப்பட்டத்தின் பொருள். அந்தப் பட்டப்பெயரல்லாமல், இவனுக்குள்ள இணையற்ற ஞாபகசக்திக்காக இவனை **பக்ஷிலஸ்வாமி** எனச் சிலர் சொல்லுவார்கள். இவன் ஏக **ஸந்தக்கிராஹி**; ஒரு முறை காதிஞற் கேட்டதெதனையும் ஒரு **பக்ஷம்**, அல்லது, 15 நாள் வரையில் மறவாமல் ஞாபகமாகத் திரும்பச் சொல்லவல்லான். அந்தப்பெயருக்கு இவ்வாறு சிலர் பொருளுரைப்பார்கள். வேறு சிலர், இரகசிய வர்த்தமானங்களைப் பல இடங்களுக்கும் அனுப்பும்பொருட்டு நூற்றுக் கணக்கான தூதுப்புறாக்களையும் கக்குருவான் புட்களையும் இவன் வைத்துக்கொண்டிருப்பதனல், **பக்ஷிலஸ்வாமி** யென்ற பெயராலழைப்பது பொருந்தும் என்பார்கள்" என்றாள் தேவகி.

அவள் சொல்லி முடித்தவுடனே கௌதமியைப் பார்த்து மீனாக்ஷி, "அவள் சொன்னதெல்லாம் காதில் விழுந்ததா? ஆனதனால் நீ ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். கணவனென்றால் எவனும் கடுக்கு முடுக்காயிருப்பான். அவனது மனமறிந்து நடந்து மகிழ்விப்பது கஷ்டம். எல்லாக் கணவன்மாரையும் போலல்லாமல் இவனுடன் வாழ்வது இன்னும் அதிகக் கஷ்டமாயிருக்கும்" என்றாள்.

அப்போது, "இவள் கொஞ்சங்கூடப் பயப்பட வேண்டாம். சாணக்கியன் அன்புமிக்கவன்; ஈகையும் இரக்கமும் உள்ளவன்; தயாதாக்ஷிண்யம் மிகப் பாராட்டுகிறவன். இதுவரையில் என்னைப் பார்த்து அவன் கடுமையான வார்த்தையொன்றும் சொன்னதேயில்லை. அவனுக்குக் கோபம் அதிகமென்பது உண்மையே. ஆனால், அவனுடைய கோபத் தீயானது கோபத்துக்குப் பாத்திரமாயுள்ளவர்களையே கொழுந்துவிட்டெரிக்கும்; அபலைகளின்மீதும் அநாதைகளின்மீதும் ஒருபோதும் பாய்வதில்லை" என்று தேவகி அந்தப் பெண்ணை உற்சாகப்படுத்திப் பேசினாள்.

"சாணக்கியனுக்கு வேறு பல பெயர்கள் இருக்கின்றனவே. அவைகளுக்கெல்லாம் அர்த்தம் என்ன? விஷ்ணுகுப்தன் என்பதுதான் அவனுடைய சொந்தப் பெயராயிற்று; அது பிதாமகருடைய நாமத்தையொட்டி வந்தது. மற்றப் பெயர்கள் எப்படி வந்தன?" என்று மீனாக்ஷி வினவினாள்.

"நாங்கள் 'குடல' கோத்திரத்தவர்கள். கோத்திரத்தின் பெயரைத் தழுவி அவனைக் கௌடல்யன் என்

பார்கள். ஆனாலும், கணக்கு வழக்கில்லாமல் அவன் செய்கிற சிக்கல் முக்கலான யுக்திகளையும், அவன் மூளையில் தோன்றுகிற திருகல் முறுகலான தந்திராலோசனைகளையும் பார்த்து அவனைக் **கௌடில்யன்** எனச் சிலர் சொல்லு வார்கள். இந்தப் பெயருக்கு 'வக்கிரன்', அல்லது 'கோண லானவன்' என்று அர்த்தம். இவ்வாறு நிந்தாஸ்துதி செய்யும் விகற்ப மனமுடையவர்களை ஏளனம் செய்யும் பொருட்டு அவன் தன்னைப்பற்றிப் பேசிக்கொள்ளும்போது **கௌடில்யன்** எனவே சொல்லிக்கொள்வான். அவன் இப் படிச் சொல்லிக்கொள்வது உத்தவன் தன்னை **வடவியாதி** எனவும், நாரதர் தம்மைப் **பிசுனன்** (கோட்சொல்லி) என வும், **பீஷ்மர்** தம்மைக் **கௌணபதாந்தன்** எனவும் சொல்லிக் கொண்டதுபோலாகும். என் தகப்பனருடையது ஸ்ரீவத்ஸ கோத்திரம். அதைத் தழுவி அவனுக்கு **வாத்ஸ்யாயனன்** என்னும் பெயர் வந்தது. ஏனெனில், அவன் **துவாமுஷ் யாயணன்**; அதாவது, என் தந்தைக்கும் புத்திரஸ்தானத் தில் இருப்பவன். தந்தையானவன் தன் குமாரியை விவாகம் செய்துகொடுக்கும்போதே அவள் வயிற்றிற் பிறக்கும் புத்திரன், மருமகனுடைய புத்திரனாயிருப்பதல்லாமல், தனக் கும் புத்திரஸ்தானத்திலிருந்து வியவகரிக்கவேண்டுமென ஒப்பந்தம் செய்துகொள்வது 'துவர்முஷ்யம்' எனப்படும். நாங்கள் உன்னைப்போல முச்சிரி என்ற ஊரிலிருந்து வந்த தமிழர்களானமையின், அவனைத் **திராமிளன்** அல்லது, **தமிழன்** என்கிறார்கள். அவன் குட்டையாயிருப்பதனால், அவனை **அங்குலன்** ('ஓர் அங்குலக்குள்ளன்') என்கிறார் கள். தந்தையின் பெயரைத் தழுவிவந்த நாமமாக அவனைச் **சாணக்கியன்** என அழைக்கிறார்கள்'' என்று தேவகி விரிவாக எடுத்துச் சொன்னாள்.

"நல்லது, கௌதமி, நீ அன்றைக்கு ஒரு நாள் என்னைக் கேட்டாயே, அந்தக் கேள்விக்குப் பதில் தெரிந்து கொண்டாயா?" என்று மீனாக்ஷி சொல்லவே, சரேலெனக் கௌதமி அடுக்களைக்குள் ஓடினாள்.

"உனக்கு இவள் நல்ல நாட்டுப்பெண் ஆவாள்" என்று மீனாக்ஷி சொல்ல, "சொன்னபடி கேட்கிற குணம் இவளுக்கு இருக்கிறது: நன்றாகச் சமைக்கிறாள். இவள் சமையல் என் பிள்ளைக்குப் பிடிக்கிறது" என்று தேவகி அதை ஆமோதித்தாள்.

"ஆகையினாலேயே முக்கியமான இந்த விசேஷதினத்தில் இவளுக்குப் பழக்கமதிகமாயுள்ள தோசைவார்க்கும்படி இவளுக்குச் சொல்லியிருக்கிறேன். இந்தக் கலியாணம் நடந்தேறிவிட்டால் எங்கள் பாரம் நீங்கிப்போம். இவளுடைய பெற்றோர் இறந்ததுமுதல் நாங்கள் இவளை இங்கே வளர்த்துவருகிறோம். எங்களுக்கோ வயது முதிர்ந்து வருகின்றது. கடைசிக்காலத்தைப் புண்ணிய க்ஷேத்திரத்தில் கழிக்கலாமென்று எண்ணி எங்கள் வீட்டுக்காரர் சுக்கில தீர்த்தம் போய்ச் சேரலாமென்கிறார். உலக விஷயங்களில் அவர் எவ்வளவு வெறுப்புற்று உதாசீனமாயிருக்கிறாரென்பது உனக்குத்தெரியுமே" என்று மீனாக்ஷி சொன்னாள்.

"ஆம். எனக்குத் தெரியும். சியாமா சாஸ்திரிகளின் பாண்டித்தியமும் விரக்தியும் எல்லாருக்கும் நன்கு தெரிந்த விஷயமே. அதுபோல, அவருடைய சமத்கார புத்தியும், ஆஷாடபூதிகளைப் பரிகாசம் செய்வதுபோல இடிக்கும் வல்லமையும் பிரஸித்தமே. பணக்காரனொருவன் இறந்துபோகவும் அவனுடைய பிசினாறிப்பிள்ளை, போதிய புசிப்பின்றி எலும்பும் தோலுமாய் நின்றதொரு

பசுவைத் தானம் செய்வதற்கு உத்தேசித்திருப்பதைச் சியாமா சாஸ்திரி அறிந்து, இறந்துபோன செல்வ வந்தனுடைய பசுக்களுள் உத்தமமானதை, வேண்டு மென்று பொறுக்கி யெடுத்து, அந்தச் சமயத்தில் தான மந்திரத்தை ஓதிவிட்டாராம். உத்தரக்கிரியை செய்கிற மகனுக்கு உள்ளூறக் கோபம் கொதித்தெழுந்ததாயி னும், அந்தத் தருணத்தில் மாறிச் செய்ய முடியாதவனைச் சிக்கிக்கொண்டான். அந்தப்படிச் செய்யாவிட்டால் அங்கே கூடியிருந்த ஜனக்கூட்டமெல்லாம், உத்தமமான தானம் செய்தானென்று அப்பொழுது அவனைத் துதித் துக் கொண்டாடியதுபோலன்றிப் பரமலோபியென நிந் தித்திருப்பார்கள். சமயம் பார்த்துச் சியாமா சாஸ்திரிகள் தைரியமாகச் செய்த இந்தச் சமத்காரத்தை எங்கள் வீட் டுக்காரர் அடிக்கடி எடுத்துச் சொல்லிக்கொண்டேயிருப் பார்" என்று தேவகி சொன்னாள்.

"அது மாத்திரமா? அதைக் காட்டிலும் அதிகத் துணிவான காரியமொன்று செய்தாரே! ஒருநாள் ஸ்வய காரியப் புலியொருவன் கயையில் சிராத்தம் செய்ய வந்து ஆமலகத்தை (நெல்லிக்காயை) வர்ஜித்துச் சுலப மாகப் புண்ணியம் பெற நினைத்தான். அப்போது எங்க ளவர் அவனுக்குச் சங்கற்பம் செய்விக்கையில் ஆமலகம் என்பதற்குப் பதிலாக ஆம் (மாம்பழம்) என்று சொல்லி ஏமாற்றிவிட்டார். அந்த மனிதன் அவர் சொல்வது இன்னதென்று கவனியாமலே அவர் சொன்னபடி திருப்பிச் சொல்லி நிஜமான தியாகம் செய்தான். காசி யாத்திரை கயா யாத்திரை செய்கிறவர்கள் அங்கே போய் வந்ததன் அறிகுறியாகத் தமக்கு இஷ்டமான பதார்த்தமொன்றை இனியுண்பதில்லையெனச் சங்கற்ப பூர்வகமாக விட்டொழிப்

பார்கள். உபாத்தியாயர் சொல்லியபடி ஆம் வர்ஜிக்கிறே னென்று சங்கற்பித்துவிட்டதனால், அந்த மனிதன் இனி மாம்பழம் தின்னக் கூடாதவனானன். அதற்குப் பிறகு அவன் மாம்பழத்தைப் பார்க்கும்போதெல்லாம் எங்கள் வீட்டுக்காரரைச் சபித்துக் கொண்டேயிருந்தான். ஆனால் எங்களவரோ சிரித்துக்கொண்டு, 'சில படையாட்களைக் கட்டாயப்படுத்திப் போர் புரியும்படி செய்யவேண்டியிருப் பதுபோலவும், சில மாணவர்களைப் பலவந்தமாகப் பாடம் படிக்கும்படி செய்யவேண்டியிருப்பது போலவும், சில ஜனங் களை அவர்களுடைய இஷ்டத்திற்கு விரோதமாகவே புண் ணியம் பெறச் செய்யவேண்டியிருக்கிறது' என்று சொன் னர். அன்றியும், ஒருநாள் செல்வவானெருவன் தேவதை களுக்கு ஹோமம் செய்வதற்காகக் கடையில் மலிவாக விற் கிற நெய்யை வாங்கி வைத்திருந்தான். அதைப் பார்த்து எங்கள் வீட்டுக்காரர், 'தேவதைகளின் புலன்கள் கூரி யவை; அவர்களுடைய நாசிகள் நுண்ணிய மணங்களையும் நன்கு அறியும். இந்த நெய்யின் நாற்றம் அவர்கள் குடலைப் புரட்டும். இதைச் சகிக்கமாட்டார்கள்' என்று சொன்னர். உடனே வேறு நெய் கொண்டு வந்து அவன் ஹோமம் செய் தான்'' என்று மீனாக்ஷி சொன்னதும் தேவகி நகைத்தாள்.

அப்போது இரண்டு வாழை இலைகளில், தன் பாட்டி யாருக்கு ஒன்றும் தேவகிக்கு ஒன்றுமாக, இரண்டு நல்ல தோசைகளை வைத்துக் கௌதமி கொண்டு வந்தாள். "உங் கள் பாட்டனருக்கு வேண்டிய அளவு வைத்திருக்கிருயா? இந்தப் போட்டிப்பரீக்ஷையிலிருந்து திரும்பி வரும்போது அவருக்குப் பசி அதிகமாக இருக்குமே'' என்று தேவகி வினவினள்.

"நிச்சயமாக அவள் வைத்திருப்பாள். அவள் தாத்தாவின் செல்வம் அல்லவா? அவரை ஒருநாளும் மறக்க மாட்டாள். சாணக்கியனுக்கும் கொஞ்சம் வைத்திருப்பா ளென்று நம்புகிறேன்" என்று மீனாக்ஷி சொல்லக் கௌதமி திரும்பச் சமையலறைக்குள் ஓடிப்போனாள்.

"இப்படிப்பட்ட போட்டிப் பரீக்ஷைகள் தக்ஷசிலையில் நடப்பதில்லையோ?" என்று மீனாக்ஷி கேட்டாள்.

அதற்கு, "அங்கும் போட்டிப்பரீக்ஷைகள் நடப்ப துண்டு. ஆனால், காசி ராஜருக்கும் மகத மன்னருக்கும் இருப்பதுபோல, வேதாகமங்களை ஆதரித்து வளர்க் கும் வள்ளல் என்னும் பரம்பரைப் பெருமை தக்ஷசிலை யரசருக்கு இல்லை. அது ஜம்பூத்வீபத்தின் எல்லைக் கோடியில் இருக்கின்றது. வேதாகமங்களைக் காட்டிலும் வைத்திய சாஸ்திரமும் சல்லிய சாஸ்திரமும் அங்கே பிரபலமாக இருக்கின்றன. யவனர், சைசினியர், பாஹ்ற லிகர், அசுவகர், அஸ்பாவஸியர், பாரவஸிகர் முதலான அன்னிய தேசத்தார் பலரும் அங்கே நிரம்பி யிருக் கிறார்கள். அவர்களுக்குச் செல்வாக்கு அதிகம். உள்ள தைச் சொல்லப்போனால், பெரிய யவனராஜனொருவன் பாரவஸீக ராஜ்யத்தை ஜயித்துவிட்டுத் தக்ஷசிலையின் மீது படையெடுத்து வந்து கொண்டிருக்கிறானாம். அவனுக்கு வணங்கி மரியாதை செய்வதற்காகத் தக்ஷசிலை மன்னரும் இளவரசனும் போயிருக்கிறார்கள். முன்பின் தெரியாத யவன ராஜனுக்குத் தொண்டராவதனால், இந்து தர்மத் திற்கு மோசம் வருமாதலால், மகதத்து அரசனுடைய உத வியை முதலில் நாடும்படி சாணக்கியன் அவர்களுக்குப் புத்தி சொன்னான். இவனுடைய ஆலோசனையை அவர்கள்

ஏற்கவில்லை. ஆகையால், நந்த ராஜனைச் சந்தித்து, அவனுடைய ஆதரவில் பாணினியும் வரருசியும் வர்ஷனும் பிரவித்தமான தங்கள் நூல்களை வெளியிட்டதுபோல், தானும் தன்னுடைய அர்த்த சாஸ்திரம் என்னும் பெருநூலை வெளியிடக் கருதி இப்போது பாடலீபுத்திரத்துக்குப் போய்க்கொண்டிருக்கிறான்" என்று தேவகி சொல்லிமுடித்தாள்.

"அந்தக் காலத்திற்கும் இந்தக் காலத்திற்கும் கொஞ்சம் வித்தியாசம் இருக்கின்றது. இப்போதிருக்கிற பாடலீபுரத்து அரசன், முற்கால வேந்தர்களைப்போலக் கல்வித் திறமையை உணர்ந்து மகிழ்ந்து ஆதரிப்பதில்லை; இழிகுணமுடையவனாக இருக்கிறான். அவனும் அவனுடைய தம்பிமார் எண்மரும் பாண்டித்தியத்தைப் பாராட்டுவதில்லை; யோக்கியதையை மெச்சுவதில்லை. குவியல் குவியலாகத் தனம் சேகரிப்பதும், எல்லையில்லாத இச்சகமுகமன் பேச்சுக்களைக் கேட்டுக் கொண்டிருப்பதுமே காரியமாக இருக்கிறார்களென்று சொல்லுகிறார்கள்" என மீனாக்ஷி காதோடு சொன்னாள்.

"உம்! அதனாலேதான் போலிருக்கிறது, என்னை இங்கே இருக்கச்சொல்லித் தான்மாத்திரம் தனியாகப் பாடலீபுத்திரத்திற்குப் போவதாகச் சாணக்கியன் சொன்னான். அயோக்கியரான அரசர் எவரைக் கண்டாலும் அவனுக்கு அடங்காக் கோபம் மூள்கின்றது. அவன் கையின் கீழ் எண்ணிறந்த சாரணர்கள் இருக்கிறார்கள். அவர்களிற் சிலர் மகத தேசத்தவர்கள். அவர்களிடமிருந்து இப்போதிருக்கும் அரசனைப்பற்றி அவன் ஏதோ கொஞ்சம் கேள்விப்பட்டிருக்கிறான் போலும்" என்றாள் தேவகி.

"அடேயப்பா! அரசனைப் போல இவனும் வேவுப் படை வைத்திருக்கிறனா? அவர்களெல்லாரும் இப்போது எங்கே இருக்கிறார்கள்?" என்று மீனாக்ஷி கேட்டாள்.

"அவனுடைய வேவுகாரர்கள் எங்கும் இருக்கிறார்கள்; ஓரிடத்தும் இல்லை. அவர்களை எப்போதுமே என்னாலும் தெரிந்து கொள்ளமுடியாது. சில சமயங்களில் அவனுடைய வேவுகாரர்களில் நானும் ஒருத்தியென்று ஜனங்கள் தவறாக நினைத்ததுண்டு. சத்துருக்களுக்கு அவன் மாயாவி; மிகப் பயங்கரமானவன். ஆனால், மித்திரர்களுக்கு மிக எளியவன்; அன்பே வடிவாயுள்ளவன். தக்ஷசிலையிலிருந்தபோது, புலமைக்காகவும் குப்தவித்தையிலுள்ள தேர்ச்சிக்காகவும் அவனுக்குப் பெரும் பெயரும் பிரஸித்தியும் உண்டானதனால், அவனுடன் படித்துக்கொண்டிருந்த மாணவர்களில் நூற்றுக்கணக்கானவர்கள் அவனைத் தமக்குக் குருவாக வைத்துக்கொண்டனர். ஆனதனாலே, 24-ஆம் வயதிலேயே அவன் எண்ணிறந்த சிடர்களோடு கூடிய **ஆசாரியனாய்** விட்டான். தக்ஷசிலை அரசரும் அந்தக் 'கறுப்புப் பிராமண'ன்பால் நல்ல மரியாதை வைத்திருந்ததன்றிப் பயப்பட்டுக்கொண்டும் இருந்தார். தென்னாட்டுக்குரிய கரிய நிறத்தால் அவனை அத்தேசத்தார் கறுப்புப் பிராமணனெனக் குறிப்பார்கள். அவனுடைய சிஷ்யர்கள் **இந்து சர்மன், ஸித்தார்த்தகன், நிபுணகன்** முதலானவர்கள் சிலர் மிகவும் சமர்த்தர்கள். இந்து சர்மன் என்பவன் பெரிய மாந்திரிகன். இங்கே சாணக்கியனுடைய குருவாகிய **அம்பரீஷர்** என்னும் பெரியார், தம் சிஷ்யன் தக்ஷசிலையில் பெருங்காரியங்கள் சாதித்துப் பெற்ற பெருமையைக் கண்டு மிக மகிழ்ந்தார். அவரும் அவருடைய சிஷ்யர்களும் இன்று

நடக்கிற சாஸ்திர விவாதத்தைப் பார்க்கப்போயிருக்கிறார்கள். சாணக்கியன் வென்றுவருவானென்று அம்பரீஷர் நிச்சயமாக நினைத்திருக்கிறார்" என்று தேவகி பதில் மொழிந்தாள்.

"இதோ, ஸித்தார்த்தகன் வருகிறானே, அவன் என்ன சாரசாரம் கொண்டு வருகிறானோ!" என்றாள் மீனாக்ஷி.

இருபத்தொரு வயது வாய்ந்த ஸித்தார்த்தகன் என்னும் அந்த யுவகன் தேவகியம்மையை அணுகி வந்தனம் புரிந்து, "வென்றார்! வென்றார்! வெற்றிக்கோலமாக அவரை ஊர்வலம் செய்விக்கின்றார்கள். நீங்களெல்லாரும் வாருங்கள். தசாசுவமேத கட்டத்தினண்டையிருந்து அவ்வூர்வலத்தைப் பார்ப்போம்!" என்று சொன்னான்.

"அப்பப்ப! எனக்கு எவ்வளவு சந்தோஷமாயிருக்கிறது!" என்று கூறித் தேவகி, "எத்தனை பேர் போட்டி போட்டார்கள்?" என வினவினாள்.

"எழுபத்து நான்கு பேர் வந்திருந்தார்கள். அவர்களில் ஒவ்வொருவரும் ஏதோ ஒரு பிழை செய்து ஒதுங்கிப் போனார்கள். கடைசியில் ஒரு கிழவனும் எங்கள் ஆசாரியருமே எஞ்சி நின்றார்கள். அந்தக் கிழவனும் ஓரிடத்திற் கொஞ்சம் தவறினான். சாக்ஷியாக இருந்த வித்வத் பரிஷத்தார் எங்கள் ஆசாரியரே வென்றனரெனச் சாற்றினார் 'நான்கு வேதங்களையும் அவர் புரட்டியுருட்டி யொன்றாகத் திரட்டியுள்ளார். அவரோடு போட்டிக்கு என்னை நிறுத்தலாகாது. மதக்களிற்றை எதிர்க்கக் கிழக்காளையை விடலாமோ?' என்று அந்தக் கிழவன் சொன்னான். எங்களுடைய ஆசாரியருக்கு ஆசாரியராகிய அம்பரீஷர் தமக்கு மாணவனாயிருந்தவன் வெற்றிபெற்றானெனப் பெருமகிழ்வுற்று ஆர

வாரித்தார். இனிச் சீக்கிரம் வாருங்கள்" என்று ஸித்தார்த்தகன் சொன்னான்.

தேவகியும் மீனாக்ஷியும் கௌதமியும் ஸித்தார்த்தகனுடன் புறப்பட்டுத் தசாசுவமேத கட்டத்திற்குப் போய்ச் சேர்ந்தார்கள். அங்கே ஏற்கெனவே ஜனக்கூட்டம் நிறைந்திருந்தது. ஊர்வலம் வந்து அங்கே முடிவுற்றது. பட்டுப் பொன் சித்திர ஆடைகளினால் சிறக்க அலங்கரிக்கப்பட்ட யானைமீது சாணக்கியன் அமர்ந்திருந்தான்; வியப்பினால் அவனைப் பார்க்க வந்திருந்த ஜனங்கள் நாற்புறத்திலும் குழுமி நின்று யானையையே மறைத்தார்கள். கம்பீரமான ஊதுகொம்புகள் ஒலிக்க, "முனிவர் மரபினர், வித்துவான்கள் போற்றும் வித்யாதீபம், தர்க்கசிரோமணி, வித்தியாஸாகரம், பூஜிக்கத்தக்க சாணக்கியர் பவனி வருகிறார். இவருடைய பிரதாபத்தைப் பற்றிச் சந்தேகித்து ஆக்ஷேபிக்கும் துணிவுற்றோர் எவரேனுமுண்டேல் முன் வருக" என்று ராஜாங்கக்கட்டியக்காரன் உரத்துக் கூவினான். எவரும் தலையை நீட்டவில்லை. தேவகியின் முகத்தில் ஆனந்தம் தாண்டவமாடியது. மீனாக்ஷியும் மிக மகிழ்வுற்றாள். தன்னைப் பத்தினியாகக் கொள்ளப்போகிற சாணக்கியனை உற்று உற்றுப் பார்த்துக் கௌதமி உள்ளூற வியந்தாள். அவர்களெல்லாரையும் சாணக்கியன் பார்த்தான். தன் தாய்க்கும் மீனாக்ஷிக்கும் அவன் தலை வணங்கி வந்தனம் செய்தபோது ஜனக்கூட்டம் முழுதும் ஜயகோஷம் செய்து கொந்தளித்தது. அதன்மீது காசி மகாராஜர் விலையுயர்ந்த சால்வை ஜோடியை அவனுக்குப் பரிசளித்து, அன்று நிகழ்ந்த பெரிய சாஸ்திர வாதத்தைப்பற்றிச் சில வார்த்தைகள் சொன்னார். கூட்டம் கலைந்தது.

அந்தச் சால்வைகளைப் போர்த்துக்கொண்டு சாணக்கியன் தன் தாயிடம் வந்து பணிந்து, "அம்மா! உனது ஆசீர்வாதத்தால் நான் வெற்றி பெற்றேன்" என்று சொன்னான்.

"இந்தக் காட்சியைக் கண்டு களிக்க உன் தந்தையார் இப்போது இல்லையே!" எனப் பிரலாபித்து அவள் கண்ணீர் உகுத்தாள்.

"நீ வெற்றி பெற்றது எங்களெல்லாருக்கும் பரம சந்தோஷத்தை விளைத்தது. இனி எல்லோரும் வீடு போய்ச் சேருவோம்! உனக்காகக் கௌதமி நன்றாகத் தோசை வார்த்து வைத்திருக்கிறாள்" என்று மீனாக்ஷி சொன்னாள்.

"நீங்கள் முன்னே போங்கள். நான் சிறிது நேரத்தில் வந்து சேருகிறேன்" என்று சாணக்கியன் சொன்னான். அப்படியே அவர்கள் வீட்டுக்குப் போனார்கள். சிறிது நேரம் சென்றவுடனே தன் நண்பர்களிலும் சீடர்களிலும் 24-பேரை அழைத்துக்கொண்டு சாணக்கியன் வீட்டுக்கு வந்தான். அவன் வருவதற்கு முன்னரே சியாமா சாஸ்திரியார் திரும்பி வந்திருந்தார். அந்தரங்க சந்தோஷத்துடன் அவர் அவர்களெல்லோரையும் வரவேற்றார். "கடந்த 30 வருஷ காலமாகக் காசியில் நடந்த சாஸ்திர வாதங்களுள் இதே மிகப் பிரபலமானது" என்று அவர் பெருமை பாராட்டி ஒவ்வொருவரிடமும் சொன்னார்.

"அம்மா! இனித் தோசைகளைக் கொண்டுவரலாமே; செவிக் குணவில்லாதபோது சற்று வயிற்றுக்கு ஈயப்படுமல்லவா? நம் நண்பர்களுக்கு ஸௌக்யமான சாஸ்திர வாதங்களைக் காட்டிலும், சற்று ஸ்தூலமான உணவு வேண்டும்" என்று சாணக்கியன் சொன்னான்.

தேவகியும் மீனாக்ஷியும் கலக்கமுற்று ஒருவரை யொருவர் பார்த்துத் திகைத்து நின்றார்கள். ஏனெனில், இத்தனை விருந்தாளிகள் வருவார்களென்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை. சாணக்கியனுக்கும் சியாமா சாஸ்திரிக்கும் மாத்திரம் கௌதமி கொஞ்சம் தோசை வார்த்து வைத்திருப்பாளென்று அவர்கள் நினைத்தார்கள். ஆனால், பெரிய அடுக்காகத் தோசைகளை எடுத்துக்கொண்டு கௌதமி வந்தபோது, அவர்களுக்கே ஆச்சரியமாக விருந்தது. அவள் கொண்டுவந்தது அத்தனை பேருக்கும் கண்டு மிஞ்சும். சாணக்கியனும் அவனுடைய நண்பர்களும் சீடர்களும் தோசை நன்றாயிருக்கிறதென்று ஆவலாகத் தின்றுகொண்டிருக்கையில், மீனாக்ஷியும் தேவகியும் சமையலறைக்குப் போய்க் கௌதமியைப் பார்த்து, "அவன் இத்தனை நண்பர்களை அழைத்து வருவானென்று உனக்கு எப்படித் தெரிந்தது? அத்தனை பேருக்குமென இத்தனை தோசைகள் எப்படி வார்த்து வைத்தாய்?" என வினவினர்.

"ஆரியபுத்திரர்[1] எதை எப்படிச் செய்வாரென்று எனக்குத் தெரியாதா? 'சுபத்தையும் சுகத்தையும் ருசியுள்ள பண்டங்களையும் பலரோடு புசிக்கவேண்டும்; விசனங்களையும் விபத்துக்களையும் நாமே அனுபவிக்கவேண்டும்' என்று அவர் அன்றொரு நாள் சொல்லவில்லையா? ஆரியபுத்திரர் வெற்றிபெறுவாரென்று எனக்குத் தெரியும். ஆகையால், இயல்பாகவே அவர் தம் நண்பர்களையும் சீடர்களையும் அழைத்துக்கொண்டு வருவாரென்று நினைத்து அதற்கேற்றபடி தோசை வார்த்தேன்" என்றாள் கௌதமி.

---

1. இந்தமனைவியர் கணவர்பெயரை உச்சரிக்கமாட்டார்கள்; கணவனை 'ஆரியபுத்திரன்' எனக் குறிப்பிடுவார்கள்.

அவளைத் தழுவிக் கொண்டு தேவகி, "என் அன்பே! அவனுக்கேற்ற மனைவி நீயே" என்றாள்.

இதற்கிடையில் சியாமா சாஸ்திரியார் சாணக்கிய னுடைய நண்பர்களை நோக்கி, "அடுத்த புஷ்ய நக்ஷத்திர தினத்தில் இவன் கௌதமியைப் பாணிக்கிரஹணம் செய்து கொள்ளப்போகிறான். அந்தச் சமயத்தில் நீங்களெல்லாரும் விஜயம் செய்து ஆசீர்வதிக்கவேண்டும்" என்று சொன்னார்.

"நாங்கள் கட்டாயமாக வருவோம்" என்று ஒவ் வொருவரும் கூவினார்கள். "தை மாதத்தில் பூச நக்ஷத்திர தினம் விவாகத்திற்கு மிகச் சுபகரமான முகூர்த்த நாள், தெரிந்ததா? நாங்கள் உங்கள் வீட்டுக்கு வரும்போ தெல்லாம் இந்த மாதிரியான தோசை வேண்டுமென்று உங்களையும் உங்கள் மனைவியையும் தொந்தரவு செய் வோம்" என்று எல்லாரும் சாணக்கியனைப் பார்த்துச் சொன்னார்கள்.

"என் குடிசையில் ஒரு மணி அரிசி உள்ளளவும் உங் களுக்குத் தோசைக்குக் குறைவில்லை" என்று சாணக்கியன் சொன்னான்.

"அதாவது, ஜம்பூத்வீபத்துக்குள் ஒரு மணி அரிசி உள்ளளவும் என்று அர்த்தம்" என்று ஸித்தார்த்தகன் வியாக்கியானம் பண்ணினான்.

---

## அத்தியாயம் 3

## மகாமேலனம்

கி. மு. 327-ஆம் வருஷம் ஆடி மாதத்தில் ஒருநாள் காலை எட்டு நாழிகையளவிருக்கும்; சூரியன் வானத்தில் விரைவாக எழுந்து கொண்டிருந்தான். வெப்பம் மேலும் மேலும் அதிகரித்துக் கொண்டிருந்தது. அதைப் பாராட்டாமல் பாடலீபுரம் என்னும் நகரத்தைச்சேர்ந்தவர்கள் தங்களுக்கு வழக்கமாயுள்ள விதவிதமான வேலைகளைக் கவனிப்பதில் ஊக்கங்கொள்ளலானார்கள். அந்நகரத்திற்கு 64 கோட்டை வாசல்கள் உண்டு. அவையெல்லாம் திறந்திருந்தன. அந் நகரத்து மதில்களிலுள்ள 570 அட்டங்களிலும் காவலாட்கள் நின்று காவல்செய்து கொண்டிருந்தார்கள். பலவகையான தின்பண்டங்களும் ஆடைகளும் அபூர்வ வஸ்துக்களும் அலங்கார பதார்த்தங்களும் நிறைந்த மாட்டுவண்டிகள் கணக்கு வழக்கில்லாமல் அந்த ராஜ நகரத்திற்குள் வந்துகொண்டிருந்தன. அரேபியாவிலிருந்தும் பாரஸீகக் குடாக்கடலி லிருந்தும் பாருகச்சா, சொபாரா, உஜ்ஜயினி மார்க்கமாகச் சாம்பிராணி, பவழம், நல்முத்து, காண்டாமிருகத்துப் பல்; சிங்களத்திலிருந்தும் கேரளத்திலிருந்தும் மாணிக்கம், நீலமணி; கலிங்கம், கோசலம், விதர்ப்பம், வஜ்ரகரூர், வேதோத்கடமலை ஆகிய இவ்விடங்களிலிருந்து வச்சிரம்; சத்தியபுத்ர தேசமென்னும் மங்கலாபுரத்திலிருந்தும் (*Mangalore*) சத்திய மங்கலத்திலிருந்தும் கோமேதகம்; பாண்டிய நாட்டினின்று ஆணி

மூத்து, சேலை, துப்பட்டா முதலியன; திபெத்து, காசுமீரம், காசி என்னுமிடங்களிலிருந்து பட்டாடை; வலிந்து மாகாணம், சுவர்ணகிரி, கில்ஜித்தினண்டையுள்ள தாத தேசம் ஆகிய இவைகளினின்று பொன்; லவணபர் வதத்தொடரினின்று இந்துப்பு; தாமிரலிப்தியிலிருந்து கடலுப்பு; காமரூப(*Assam*)த்திலிருந்தும் மகிஷ மண்டல(*Mysore*)த்திலிருந்தும் சந்தனக்கட்டை; வங்க (*Bengal*) நாட்டிலிருந்தும் காமரூப (*Assam*) த்திலிருந் தும் முதலைத்தோல், புலித்தோல்; இமயமலைத் தொடரிலி ருந்தும் விந்திய பர்வதத்திலிருந்தும் கரடித்தோல், சிவிங் கிப் புலித்தோல்; சௌராஷ்டிர தேசத்திலிருந்து கடற் பிராணிகளின் தோல்கள்; நேபாளம், வங்கதேசம், பாண் டிநாடு ஆகிய இவைகளிலிருந்து கம்பளிகள், ஜமக்காளங் கள்; இவையல்லாமல் நவதானியங்கள், வெண்ணெய், எண் ணெய், மிளகு, சீரகம், இஞ்சி (சுக்கு), லவங்கப்பட்டை, லவங்கம், ஏலக்காய், கொத்துமல்லி விதை, கிராம்பு, மீன், காட்டுக்கரி, விறகு, வைக்கோல், ஆயுதங்கள், மட்பாண்டங் கள், வாழையிலை முதலானவை, கால காலமாக உழவுக் கும் உழைப்புக்கும் சோர்வுறுமற் பொறுமை வாய்ந்து நம் நாட்டாருக்கு உற்ற சாதனமாயுள்ள காளைமாடுகளி னற் கொண்டுவரப்பட்டன.

இவ்வாறு வந்துகொண்டிருந்த சரக்குகளையெல்லாம் உள்நாட்டுச் சுங்க அதிகாரிகள் கவனமாகச் சோதித்துப் பார்த்து, அரசிறைச் சுங்கமும் நகரபரிபாலனத்துச் சுங்க மும் வாங்கிக்கொண்டு, பணம் பெற்றுக் கொண்டதற்கு அடையாளமாக அவைகளின் மீது சிவப்பு முத்திரை போட் டுக் கொண்டிருந்தார்கள். அதுவுமன்றி, பிற நாட்டாரும் காட்டு ஜாதியாரும் குமானி ஆசாமிகளும் வரும்போது

அவர்களுடைய ரகதாரிகளைக் காட்டும்படி கேட்டார்கள். அந்த நகரம் 9 மைல் நீளமும் இரண்டு மைல் அகலமும் உள்ளது. அதைச் சுற்றி 600 அடி அகலமும் 45 அடி ஆழமும் உள்ள பெரிய அகழிகள் உண்டு. அவைகளுக்கு நான்கு பாலங்களும் இருந்தன. அவைகளுள் ஒரு பாலத்தைக் கடந்து, உன்னதமான மரக்கிராதிகளுக்கும் அலங்கங்களுக்கும் இடையிலுள்ளதொரு நகரவாயிலண்டை மேற்சொல்லிய ஆட்கள் வரும்போது ரகதாரி காட்டச் சொல்வார்கள். ஹிரண்யவாஹம் என்னும் ஸோணநதியில் அணைகட்டி அமைத்துள்ள ஏரியினின்று நீர்கொணர்ந்து இந்த அகழிகளை நிரப்பியிருந்தார்கள். இந்த அகழிகள் ஸோணநதிக்கும் மதில் சூழ்ந்த நகரத்திற்கும் இடையிலுள்ள தென்பாகம் வரையிலும் வியாபித்திருந்தன.

ஸோணநதியில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் குளித்துக்கொண்டிருந்தார்கள். நகரத்தின் வடகிழக்கே சில மைல் தூரத்திலுள்ள பவித்திரமான கங்காநதியில் நீராடி இன்னும் ஆயிரக்கணக்கானவர்கள் குதிரை வண்டிகளிலும் மாட்டு வண்டிகளிலும் திரும்பிவந்துகொண்டிருந்தார்கள். நகரத்தின் வடதிசையிலுள்ள கங்கைக்கால்வாயிலும் அநேகர் ஸ்நானம் செய்துகொண்டிருந்தார்கள். இந்தக் கால்வாயினின்று கங்காஸாகரத்திற்குக் கங்கை நீரை அகழியின் மீதாகக் கொண்டு போவதற்கு ஒரு கலிங்கு அமைக்கப்பட்டிருந்தது. கங்காஸாகரம் என்பது ஸுகங்கா அரண்மனையின் வெளிப்புறத்தில் தேங்கி நிற்கிற தெள்ளிய நீர்ப்பரப்பு. அந்தக் குளத்திலும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் குளித்துக்கொண்டிருந்தார்கள். அந்தக் குளக்கரைகளில் சிவாலயமும், இந்திரன் குபேரன் அசுவினிதேவதைகள் ஆகிய இவர்களுக்குரிய கோயில்களும் இருந்தன.

ஆவையல்லாமல், ஸ்ரீ குமாரிதேவிக்கு ஓர் ஆலயமும், ஸ்ரீ மதிராதேவிக்கு மற்ருேர் ஆலயமும் இருந்தன.

அரண்மனையைச் சுற்றி விஸ்தாரமான விஹாரஸ்தலங்களும் நந்தவனங்களும் இருந்தன. அந்த நந்தவனங்களில் எல்லாவகையான மலர்ச் செடிகளும், கனிதரு மரங்களும், அலங்காரத்திற்குரிய மரங்களும் நிரம்பியிருந்தன. அவ்வரண்மனையின் ஆவரணத்தில் பாதிரி மரங்கள் நிரம்ப வைத்து வளர்க்கப்பட்டிருந்தன. பாதிரிப்பூ மிக இனிமையான வாசனையுள்ளது. அது வடமொழியில் பாடலி எனப்படும். அந்தப் புஷ்பவிசேஷத்தினலே அந்நகரம் பாடலீபுத்திரம், பாடலீபுரம் எனவும், அது மருவி பாட்ண (*Patna*) எனவும் வழங்கப்படுகின்றது. இவையல்லாமல், நறுமணம் தரும் வேறு பல்வகை மலர் மரங்களும் மிகுதியாக இருந்தன. அதனல் அந் நகரத்துக்கு (குஸுமபுரம்) மலர் நகர் என்னும் மறுபெயரும் வழங்கலாயிற்று. இந்த விஹார ஸ்தலங்களுக்கு உட்புறத்தில் கங்கை நீரினல் நிரப்பப்பெற்ற அநேக குளங்கள் உண்டு. அரசனுக்கும் ராணிகளுக்குமென ஒரு தடாகம், ராஜகுமாரர்களுக்கென ஒரு குளம், ராஜகுடும்பத்து ஸ்திரீகளுக்கென ஒரு நீர்நிலை, ராணியின் ஸகிகளுக்கென ஒரு பொய்கை, ராஜகுடும்பத்து உத்தியோகஸ்தர்களுக்கென ஒரு வாவி—இவ்வாறு ஒவ்வொரு தாரத்தாருக்கும் ஒவ்வொரு குளிப்புரை அமைக்கப்பட்டிருந்தது. அரண்மனைக் கட்டடமோ, அக்காலத்து நாகரிக நிர்மாண சிற்பச் சிறப்புடையது. அது முழுதும் மரத்தினலேயே கட்டப்பட்டிருந்ததாயினும், காந்தி மிகுந்ததாக இருந்தது. விஸ்தாரமான வெளியினிடையே அது கம்பீரமாக நின்றது. அது மூன்று அடுக்கு மாடிகள் வாய்ந்தது; அதிலுள்ள மாளிகைகள்

வெகு விசாலமானவை; மாளிகைக் கம்பங்கள் பொன் முலாம் பூசப்பெற்றுப் பளபளவெனப் பிரகாசித்தன. அவைகளின்மீது தங்கக்கொடிகளும் வெள்ளிப்பறவைகளும் சித்திரிக்கப்பட்டிருந்தன.

அரசர் கோட்டங்களும் கொலு மண்டபங்களும் சித்திரவிசித்திரமான பலவகைச் சாமான்கள் நிரம்பிக் கண்ணுக்கு இனிமையாகத் துலங்கின. அவ்வறைகளிற் செம்பொன்னாற் செய்த பாத்திரங்கள், கூஜாக்கள்—அவற்றிற் சில ஆறு அடி அகலமுள்ளவை; தேக்கு, கருங்காலி, தூக்கமரமாகிய இவைகளினாற் செய்து சித்திர வேலைப்பாடுகள் வாய்ந்து பொன்வெள்ளிச் சரிகைப் பூவேலை பொருந்திய விலையுயர்ந்த வஸ்திரங்களினாற் போர்த்தப்பெற்ற ராஜாங்க மேஜை நாற்காலிகள்; மிக நேர்த்தியாகச் செம்பு பித்தளைகளினாற் செய்யப்பட்ட விசித்திர வஸ்துக்கள்; மெருகிட்டுப் பல நிறப் பூவேலைகள் பொருந்திக் குளிர்ச்சியான நீர் நிறைந்து அழகாக விளங்கிய பிரம்மாண்டமான மட்பாண்டங்கள்; மிக நுண்ணிய சிற்ப வேலை செய்த திவ்வியமான தந்தப் பிரதிமைகள்; மினுக்கமாய் நின்று முகங்காட்டத்தக்க பென்னம் பெரிய நிலைக் கண்ணாடிகள்—அவற்றுள் பித்தளைத் தகட்டினாற் செய்யப்பட்டவை சில, பளிங்குக் கல்லினாற் செய்யப்பட்டவை சில;—இப்படிப்பட்ட வஸ்துக்களெல்லாம் அக் கூடங்களை அலங்கரித்தன. சாமானியமான கூடங்களிலும் பெருஞ்செல்வத்திற்கும் பெருவாழ்வுக்கும் உரிய வஸ்து விசேஷங்கள் நிறைந்து இனிமையாக விளங்கின. அவ்வளவு பெரிய மகாராஜனுடைய அரண்மனையின் பெருமைக்கு ஏற்றவாறு அவை இருந்தன. அரண்மனையும் தோட்டங்களும் பெரிய விசாலமான சதுரத்தில் அமைந்திருந்தன. உள்ளே செல்

வதற்கு நான்கு அஜாரவாசல்கள் இருந்தன. ஒவ்வொரு வாசலிலும் ஆறு குதிரை வீரரும் பன்னிரண்டு வீரர்களும் பாராக்கொடுத்துக்கொண்டிருந்தார்கள். மூன்றுமணிநேரத் திற்கொருமுறை இவ் வாட்கள் மாறி மாறி வருவார்கள். அரண்மனையின் உள்ளறைகளையும், அந்தப்புரத்தையும், படைவீட்டையும், கஜானாவையும் காப்பதற்கு அங்கங்கே வேறுவேறு காவலாளர்கள் உண்டு. அரண்மனை வேலைக் காரர்களும் வேலைக்காரிகளும் பற்பல காரியங்களுக்கு அடிக்கடி வெளியே போவதும் உள்ளே வருவதுமாய் இருந் தார்கள்.

அரண்மனைக்கருகிலுள்ள தனிக் கட்டடமொன்றில் மகத்தான போஜனசாலை யொன்று உண்டு. அதில் மகா ராஜனும் இளவரசர்களும் ஓராயிரம் பிராமணர்களுடன் போஜனம் செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகள் வெகு மும்மரமாக நடந்துகொண்டிருந்தன. அன்றைத்தினம் அமாவாசையாதலால், சாமானிய நாட்களிலுள்ளதைக் காட்டிலும், அன்றைக்கு விசேஷச்சாப்பாடு செய்விக்க வேண்டியிருந்தது. காலை பத்து மணிக்கு மகாராஜனும் இளவரசர்களும் அவ்விடம் வந்து சேர்வதாகக் குறிக்கப் பட்டிருந்தது. ஆகவே, அங்கே பரபரப்பு அதிகமா யிருந்தது. போஜனசாலையின் அத்தியக்ஷன் வீட்டில் அன் றைக்கு ஒரு வைதிக காரியம் நடைபெறவேண்டியிருந்த மையின், அன்றைத்தினம் அவன் ரஜாவாங்கிக்கொண்டிருந் தான். ஆயினும், போஜனசாலை விஷயங்களெல்லாம் சரி யாகவும் நேராகவும் நடக்கின்றனவாவென்று பராமரிப் பதில் அவனுக்கு ஆசையதிகமாதலால், அவன் அரை நாழிகை நேரம் அந்த ஏற்பாடுகளைப் பார்த்துச் சரிப்படுத்தி வருவோமென்று போஜனசாலைக்கு வந்திருந்தான். அவன்

போஜனசாலையைவிட்டு வெளிப்போந்தபோது அங்கிருந்த காவலாளர்கள் மிகவும் மரியாதையாக அவனுக்கு வந்தனம் செய்ததில் உள்ளன்பும் காட்டினார்கள். ஏனெனில், போஜனசாலையின் அத்தியக்ஷனான அந்தச் சந்திரகுப்தன் மீது அவர்களுக்கு விசுவாஸம் அதிகம். அவன் அந்த ராஜ்யத்துப் போர்ப்படையின் ஒரு பகுதிக்கு நாயகனாக எல்லோரும் மிகக் கொண்டாடும்படியாக நடந்துகொள்கிறான்; போர்ப்படையனைத்துக்கும் முக்கிய சேனாதிபதியாயிருந்த மௌரியனுடைய பேரன் அவன்; அந்த மௌரியனுடைய ஞாபகத்தை அந்தக் காவலாளர்கள் அன்புடன் பாராட்டிக்கொண்டிருந்தார்கள்.

அவர்களுக்குத் திரும்பி வந்தனம் செய்துவிட்டுச் சந்திரகுப்தன் விசாலமான அரண்மனைத் தோட்டங்களின் வழியாக அரண்மனைத்தடத்தின் வடமேற்கு மூலையிலிருந்த தன் மாளிகைக்கு நடந்துபோனான். அவன் நடுத்தரமான உயரமுள்ளவன்; தேகக்கட்டும் தசைப்புஷ்டியும் வாய்ந்தவன்; அப்போது அவனுக்கு 19 வயதே ஆனபோதிலும், ஒவ்வோர் அம்சத்திலும் போர்வீரனெனவே தோற்றினான். வெளிப்பார்வைக்கு அவன் உல்லாஸ முகங் காட்டினான்; புன்சிரிப்புச் சிரித்துக்கொண்டிருந்தான்; எதிரியை வசீகரிக்கும் தன்மை வாய்ந்திருந்தான்; உற்றுநோக்கினால், உள்ளூற அவன் ஆழ்ந்தகவலையும் அதிக துக்கமும் நிரம்பியவனென்பது தெரியும். பயங்கரமான மனவுறுதியும் பின்வாங்காப் பிடிவாத சித்தமும் உள்ளவனென்பது அவனுடைய மோவாயின் அமைப்பினால் தெரியவரும். கங்காநதீ தீரங்களில் நெய்யப்படுகிற பிரசித்தமான ரவை சல்லா ஆடையை அவன் தரித்திருந்தான். அந்த வஸ்திரத்தின் நுனியைத் தூக்கி இடுப்பிற் செருகியிருந்தமையின், அது கணுக்

காலுக்குச் சற்றுச் சமீபம் வரை வந்திருந்தது. பட்டுச் சொக்காய் ஒன்று அணிந்திருந்தான். அது முன்புறத்திற் குஞ்சங்களினுற் பிணிக்கப்பட்டிருந்தது. தோளின் மீது ஒரு சரிகைத் துப்பட்டாவும், தலையின்மீது சரிகை முண்டாசும் அணிந்திருந்தான். தோட்டங்களின் வழியே பாதிதூரத்தில் கவனித்துத் திருந்தாததோர் இடத்தண்டை போனுன். அந்தப் பாதையின் இருபுறத்திலும் முட்களும் முட்புதர்களும் பெரிதும் வளர்ந்துகிடந்தன. நடக்கும் வழியில் ஆழ்ந்த வேருள்ள தொருவகைப் புல்லும் சில இடங்களிற் படர்ந்திருந்தது. அந்த வழியில் அவன் போய்க்கொண்டிருந்த இடத்திற்குச் சிறிது தூரத்தில் ஒரு மனிதன் உட்கார்ந்து, அவ்வாறு படர்ந்திருந்த புல்லின் வேர்கள் சிலவற்றை ஊக்கமாகத் தோண்டியெடுத்துக்கொண்டிருந்தான்.

அந்தப் புதிய ஆளைச் சந்திரகுப்தன் உற்றுக் கவனிக்கலானுன். அவ்வாளுக்கு ஏறக்குறைய 25 வயது இருக்கும். அவன் குட்டையாக இருந்தான்; கரியநிறம் வாய்ந்திருந்தான்; அதனுல், அவன் தென்னுட்டிலிருந்து வந்தவனெனத் தெரிந்தது. பூணூலும் நெற்றிப்பொட்டும் தரித்திருந்தான். நெற்றிப்பொட்டினுல் அவன் சாமவேத சுரோத்திரிய பிராமணனெனத் தெரிந்தது. கங்கையில் ஸ்நானம் செய்துவிட்டு அரண்மனைப் போஜனசாலையில் சாப்பாட்டுக்குப் போகும் வழியில் அவன் அங்கே உட்கார்ந்திருந்தானெனத் தோன்றியது. அவனுக்கு அருகில் ஒரு தாமிரச்செம்பும் பஞ்சபாத்திரமும் ஒரு துணி முடிச்சும் இருந்தன. தோட்டக்காரனைப்போல, அந்தப் பிராமணன் அடிவேரைப் பிடுங்குகிறவரையில் ஏன் அவ்வளவு ஊக்கமாகத் தோண்டிக்கொண்டிருந்தான்? இது

அசாதாரணமான காரியமானதனால், அவன் உத்தேசம் என்னவென்று தெரிந்துகொள்ளச் சந்திரகுப்தன் ஆசை கொண்டான். ஆகையால், இருந்த இடத்திலேயே நின்று அந்தப் பிராமணன் செய்யும் காரியத்தை உற்றுக் கவனிக்கலானான்.

அப்புதிய மனிதன் தோண்டியெடுத்த காய்ந்த புல்லையெல்லாம் ஒருமிக்கச் சேர்த்தான். தன் துணி மூட்டையை அவிழ்த்தான்; அதிலிருந்து சக்கிமுக்கிக் கல்லும் எஃகுத் துண்டும் பஞ்சும் எடுத்து நெருப்பு உண்டாக்கி அந்தப் புல்லைக் கொளுத்தினான்; தாமிரச் செம்பிலிருந்து பஞ்சபாத்திரத்திற் கொஞ்சம் நீர் வார்த்து, எரிந்துபோன புற்சாம்பலை அதில் கரைத்து, மிகுந்த ஆவலோடும் திருப்தியோடும் அதைப் பருகினான். பின்பு அந்தப் பஞ்சபாத்திரத்தைக் கழுவித் தாமிரச்செம்புக்குள் வைத்தான். சக்கிமுக்கிக்கல்லையும் எஃகுத்துண்டையும் திரும்பத் துணி மூட்டையில் வைத்துக் கட்டினான். அவன் அத்தனை நேரமும் தன் காரியத்திலேயே கண்ணாயிருந்தமையின் அங்கே நின்றுகொண்டிருந்த சந்திரகுப்தனைப் பார்க்கும் நிலையிலிருந்தும், சிறிதும் கவனிக்கவில்லை.

சந்திரகுப்தன் ஆச்சரியப்பட்டு அவனண்டை போய்ப் பயபக்தியோடு வந்தனம் செய்து, "இவ்வளவு கவனமாக நான் உற்றுப்பார்த்துக் கொண்டிருந்ததற்கு என்னை க்ஷமிக்கவேண்டும். இந்த விஷயங்களில் எனக்கு அவ்வளவு அனுபவமில்லை. நீங்கள் காலைப்பானத்தின் பொருட்டு இவ்வளவு மும்முரமாகத் தோண்டியெடுத்துக் கொண்டிருந்த பெரும் பிரபாவமுள்ள மூலிகை எதுவாயிருக்குமென்று அதிசயப்பட்டுக் கொண்டிருந்தேன்" என்று சொன்னான்.



சந்திரகுப்தனும் சாணக்கியரும்

(பக்கம் 60)

"அது ஒருவகை மூலிகையும் அன்று; சாதாரணமான புல்லே; புல்லிலும் தரையிற் படர்ந்து, அஜாக்கிரதையாக நடக்கிறவர்களின் காலை இடறி வீழ்த்தத் தக்கது. அது இன்றைக்கு என் காலில் சிக்கிக்கொண்டு என்னைக் கீழே விழச்செய்தது. அது என்னை முட்டாளாக்கிவிட்டது. ஆனால், இப்போது அதற்கு என்ன நேர்ந்தது பார்த்தீர்களா? என்னை அவமானப்படுத்தியதற்காக அதை ஆணிவேர் சல்லிவேரோடு பிடுங்கி இலை கொடியுட்படச் சுட்டுப் பொசுக்கி அழித்து விட்டேன். சாணக்கியனுடைய சத்துருக்களெல்லாரும் இப்படியே அழிவார்கள்!" என்று அந்தப் புதிய பிராமணன் சொன்னான்.

அதைக் கேட்டவுடன் சந்திரகுப்தன் அயர்ந்து போனான். ஆ! பாட்டனாராகிய மௌரியர் சொல்லிய மனிதர் இவரேயாகும். இவரைப்பற்றிச் சொல்லும் போது அவர் பயத்தினாலும் பக்தியினாலும் ஒடுங்கி மூச்சு விடமாட்டாமல் திணறித்திணறி மெதுவாக, 'சாணக்கியர் அசாத்தியமானவர், மகா மாயாவி. அவருடைய சக்தியும் யுக்தியும் ஆழமும் இன்னவென்று எவராலும் கண்டு பிடிக்க முடியாது. பிரதிவாதிபயங்கரர். எப்படிப்பட்ட வலையிலும் அகப்பட்டுக் கொள்ளாமல் பிறர் உதவியின்றித் தப்பித்துக்கொள்ளத்தக்க புருஷர் இவ்வுலகத்தில் அவர் ஒருவரே. உலகப்பிரஸித்தி பெற்ற வித்துவான். மந்திர தந்திரங்களில் நிபுணர். அரசியல் வியவகாரங்களிலும் பொருள் நூல் முறைகளிலும் தேர்ந்தவர். எல்லாச் சாஸ்திரங்களிலும் மற்றெல்லா விஷயங்களிலும் சமர்த்தர். தக்ஷசிலையில் நிகழ்ந்த வாக்குவாதங்களில் எல்லாப் பண்டிதர்களையும் இருபதாம் வயதிலேயே வென்றவர், மிகக் கொடுமையாகக் கொழுந்துவிட்டு எரியும் கோபாக்கினி

குண்டடம் போன்றவர். அந்தக் கோபம் கனமான அல்லது பெரிய காரணங்களுக்காகவே எப்பொழுதும் வராமல் அற்ப காரணங்களினலும் மூண்டெரியும். ஆனல், கோபாவ சரத்தில் எண்ணமற் செய்த சங்கற்பங்களையும் நிறைவேற்றக் கருதி அமைதியாகவும் நிதானமாகவும் விவகரிக்கத்தக்கவர்' என்று சொல்லியிருந்தார். 'அந்த மனுஷ்யரால் எவ்வளவு கோபகாரணம், என்ன கோபகாரணம் ஏற்பட்டபோதிலும் அவரை விரோதப்படுத்திக் கொள்ளாதே. என்ன போன லும் எவ்வளவு நஷ்டமானலும் என்ன தீங்கு நேர்வதான லும், அவரை நட்புக்கொள்ளவே முயலுவாயாக' என்று கட்டளை யிட்டிருந்தார்.

தெய்வகதியாக அந்த மகா புருஷருடைய ஸந்திப்பு இத்தருணம் நேர்ந்ததை எண்ணிச் சந்திரகுப்தன் மிகக் களிப்புற்றுன். ஆயினும், பாட்டனர் சொல்லியதெல்லாம் சரியோ வென்னும் ஐயம் அவனுக்கு இருந்தது. நந்தர் களை அவனுடைய பாட்டனருக்கு அநேக வருஷங்களாகத் தெரியும். அந்த நந்தர்கள் செய்த சூழ்ச்சியை அறியாமல் அவர்களுடைய வலையிற் சிக்கி, அவர் பெரிதும் மோசம் போனர். அவருடைய வாழ்நாளில் அவர் செய்த பெரும்பிழை அதுவே. இந்த மனிதரைப்பற்றி அவருக்கு நேரில் ஒன்றும் தெரியாது. இவருடைய பிரபாவத்தைப் பிறர் சொல்லக் கேட்டவரே. ஆதலால், வெகு காலமாகப் பழகித் தெரிந்த நந்தர்கள் செய்த சூழ்ச்சியையே தெரிந்து கொள்ளாதவர் பழக்கமில்லாத இந்த மனிதரைப் பற்றிச் சரியாக யோசித்துத் தீர்மானமாக அபிப்பிராயப்பட்டிருப் பாரா?—இப்படிப்பட்ட ஐயுறவினல் சந்திரகுப்தன், பார்ப் பதற்குப் பைத்தியக்காரனைப் போலிருக்கிற இந்தப் புதிய மனிதருடைய உறவையும் உதவியையும் நாடும்

முன்னர், இவரைப் பரீக்ஷித்துப் பார்க்க வேண்டுமென எண்ணினான்.

அந்த எண்ணத்தோடு சாணக்கியரை நோக்கி, "ஸ்வாமீ! அந்தப் புல்லைப்போன்ற ஜடவஸ்துவைத் தண்டிக்க வேண்டுமா?" என வினவினான்.

அதற்கு அவர், "அதற்கென்ன சந்தேகம்? ஆனால், இவ் விஷயத்தில் **தண்டனை** என்னும் வார்த்தையை நான் உபயோகிக்கமாட்டேன். அப்படிப்பட்டவைகளைச் சரியாகத் திருத்தவேண்டுமென்றே சொல்வேன். உண்மையில் இது **முள்களைதல்** என நான் எழுதியிருக்கும் தலைப்பின் கீழ்வருகிறது. நமது காலைக் குத்துகிற முள்ளின் நுனியைப் பல்லினால் கடித்திழுத்து எறிகிறோமல்லவா? இப்படிப்பட்ட துஷ்ட வஸ்துக்களை அழித்தொழித்து ஜனங்களுக்கு உபகாரம் செய்ய நாம் கடமைப்பட்டிருக்கிறோம். அதுவல்லாமல், இப்படிச் செய்ததனால் எனக்கொரு சொந்த லாபமும் உண்டு. நான் விழுந்தவுடனே என் மனத்திலெழுந்த கோபாவேசமானது இப்படி நான் பழிக்குப்பழி வாங்கினதனால் தணிந்து போயிற்று. அந்த அற்ப காரியத்தினால் இரண்டு உத்தேசங்கள் நிறைவேறின, பாரும்" என்று சாணக்கியர் மறுமொழி கூறினார்.

உண்மையில் அவர் பெரியவரேயெனச் சிறிது உறுதி கொண்டவனாகிச் சந்திரகுப்தன், "ஆம், நீங்கள் சொல்வதில் கொஞ்சம் உண்மை இருக்கின்றது. ஆனால், உங்கள் சத்துருக்களெல்லாரும் இங்ஙனம் அழியக்கடவரென்று சற்றுநேரத்திற்கு முன்னால் சொன்னீரே. அது அபரிமிதமான வார்த்தையாகத் தோன்றுகிறதே. உதாரணமாக, பிரபலமான அரசனொருவன் தங்களுக்கு அபசாரம் செய்தால் என்ன செய்வீர்கள்?" என்று கேட்டான்.

"இப்பொழுது நான் என்ன செய்யக்கூடுமோ அதுவே செய்வேன். இந்த ஊருக்கு நான் வருவது இதுவே முதன்முறை. இவ்வூராராகிய நீங்கள் என் பராக்கிரமத்தையும் எனக்குள்ள ஸாதனாதாரங்களையும் பற்றிக் கேள்விப்பட்டதில்லை போலும். அரசன் என்னை என்ன செய்வதற்கு முடியும்? யானைகள் குதிரைப்படைகள் தேர்ப்படைகள் பதாதிகள் இவையெல்லாம் எனக்குத் திருண மாத்திரம். எனது புத்திசாதுரியத்தினால் இவைகளையெல்லாம் எளிதில் வெல்வேன். எதுவும் எனக்கு அசாத்தியமன்று. என் வார்த்தையை நம்ப மாட்டாமல் விழிக்காதீர். நான் தர்மவிரோதமான காரியமெதுவும் செய்வதில்லையாதலால், எனக்கு அவ்வளவு தைரியமும் நிச்சயமும் உண்டு. தர்மத்தை எவன் அனுஷ்டிக்கிறானோ, தர்மம் அவனைத் தாங்கும்; தர்மத்தை எவன் அழிக்கிறானோ, அதுவே அவனை அழிக்கும்" என்று சாணக்கியர் சொன்னார்.

"ஆனால், இந்தக் கலிகாலத்தில் தர்மம் தலையெடுக்குமா?" என அவன் வினவியதற்கு, "நிச்சயமாகத் தலையெடுக்கும். எந்த யுகத்திலும் தர்மமே நிலைத்து நிற்கும். இந்த யுகத்தில் தர்மத்திற்குப் பலம் குன்றிப் போயிற்றெனக் குறை கூறுகிறவர்கள் தர்மம் இன்னதென்றே தெரியாத மூடர்களாவர். அவர்கள் தமக்கு இஷ்டமான வகைகளையும் குயுக்திகளையும் 'தர்மம்' எனத் தவறாக எண்ணி மேற்கொண்டு, அவை தவறிப்போவதனாலே தர்மத்திற்கு அதிகாரம் குறைந்து போயிற்றென்று முறையிடுகிறார்கள்" என்று சாணக்கியர் பதில் சொன்னார்.

இத்தனை வார்த்தைகளையும் அவர் தம் அனுபவ ஸித்தமாகவும் நத்தமான மனத்தோடும் சொன்னபோ

சந்திரகுப்தனுடைய மனத்தில் நன்றாகப் பதிந்தது. அவர் வெறும் வேஷக்காரரல்லவென்பது உறுதியாயிற்று. அந்தப் பெரியாரை நமஸ்கரித்துச் சந்திரகுப்தன், "மகாஸ்வாமீ! உங்களுடைய கீர்த்திப்பிரபாவம் இந்த ஊரில் எங்களுக்குக் கொஞ்சங்கூடத் தெரியாமல் இருக்கவில்லை. சின்னாளைக்கு முன் காசியில் நடந்த வித்வத் பரிஷத்தில் சாஸ்திர வாதத்தில் நீங்கள் ஜயித்த நிபுணரென நாடெங்கும் ஒலிக்கிற ஜய கோஷத்தினால் இந் நகரத்துப் பண்டிதர்களெல்லாரும் உங்களுக்கு அஞ்சி நடுங்கிக் கொண்டிருக்கிறார்கள். உங்களுக்குள்ள அபாரமான கல்வித்திறமையையும் யோகசித்திகளையும் பற்றி இவ்விடத்திலும் ஜனங்கள் அடிக்கடி பேசி அதிசயித்து இன்புறுகிறார்கள். ஆனால், தங்கள் மகிமையை அறிந்திருந்தோமேயன்றித் தங்களை நேரில் தரிசித்ததில்லை. ஜம்பூத்வீபத்தில் எந்தப் பிரதேசம் தேவரீருடைய ஜனனத்தினால் பவித்திரமாயிற்றோ?" என்று சந்திரகுப்தன் சொன்னான். அதற்கு அவர், "நான் கேரளராஜ்யத்தில் முச்சிரி என்னும் க்ஷேத்திரோத்பவன். அது இந் நாளில் முஜிரி அல்லது கொடுங்கல்லூர் (Cranganore) என வழங்கப்பெறும்" என்றார்.

"அவ்விடத்திலிருந்து நேரே இப்போது இங்கே எழுந்தருளியிருக்கிறீர்களா?"

"இல்லை, இல்லை. நான் இப்பொழுது தக்ஷசிலையிலிருந்து வருகிறேன். கேரள தேசத்தைவிட்டுப் புறப்பட்டு 12 வருஷங்களாயின. அப்போது எனக்கு வயது பதின்மூன்றே. என் தாய் தந்தையரும் நானும் கேரளத்திலிருந்து காசிக்குப் போனோம். அவ்விடத்தில் பிரசித்தமான பேராசிரியர் ஒருவரிடம் வேதங்களையும்

உபநிஷத்துக்களையும் ஆறு வருஷம் அப்பியசித்தேன். பிறகு தக்ஷசிலைக்குப் போனேன். அங்கே வைத்தியம், ராஜ்ய தந்திரம், யுத்த சாஸ்திரம், அர்த்த சாஸ்திரம் ஆகிய இவைகளை மற்றோர் ஆறு வருஷகாலம் கற்றேன். பொருளாதார முறைகளையும் அரசியல் வியவகார முறைகளையும் பற்றி அர்த்தசாஸ்திரம் என்னும் ஒரு மகத்தான நூல் எழுதத் தொடங்கியுள்ளேன. அது இப்போது பாதி முடிந்திருக்கின்றது. நந்தர்கள் வித்தியாபோஷகர்களென்னப் பெரும்புகழ் படைத்திருப்பதனால், அவர்களிடம் என் புலமையைக் காட்ட வந்திருக்கிறேன்" என்றார்.

"தக்ஷசிலாதிபதிக்கு அந்த நூலைக் காட்டியதுண்டோ? ஸ்வாமி" என்று சந்திரகுப்தன் வினவச் சாணக்கியர், "இல்லை. அது பெரிய மகாராஜர்களுக்கே காட்டத் தக்கது. அவர்கள் நடந்துகொள்ளவேண்டிய வழிகளையெல்லாம் அந்நூலில் விளக்கியுள்ளேன். இரகசியமான பல விஷயங்கள் அதிற் பொதிந்துள்ளன. வேதோக்தமான நான்கு வருணத்தவர்களுக்கேனும் நமது ஸநாதன தர்மத்திற்கேனும் விரோதமாக அவைகளை ஒருபோதும் உபயோகிக்க மனங்கொள்ளாத பெருந்தன்மை வாய்ந்த பேரரசர்களுக்கே அந்நூல் காட்டத்தகும். தக்ஷசிலை ராஜன் என் வார்த்தையைக் கேளாமல் அலிகசுந்தரன் அல்லது அலெக்சாண்டர் என்னும் யவனதேசாதிபதியொருவனுக்கு வணங்கி ராஜவிசுவாஸப்பிரமாணஞ் செய்யப்போயிருக்கிறான். தக்ஷசிலையரசனுடைய ஸம்ஸ்தானத்தைக் காட்டிலும், பாணினியையும் வரருசியையும்போல, ஆயிரக்கணக்கான பண்டிதர்கள் சூழப் பெரும் பெருமையும் வாய்ந்து பிரபலமாக விளங்குகிற இவ்வரசனுடைய ஸம்ஸ்தானத்தில் பாடலீபுரமென்னும் இப்பிரஸித்த நகரத்தில்,

என் வித்தையை வெளியிட விரும்புகிறேன். பாணினியைப் போன்ற இலக்கண நூலாசிரியனைக்காட்டிலும், அரசியற் பொருண்முறை நூலாசிரியனுக்கு இது முக்கியமான இடமாகும்" என்று சொன்னார்.

"ஜனங்கள் சொல்வதைப் பார்த்தால் ஸ்வாமிகள் கல்விக்கடலைக் கடந்தவரா யிருக்க வேண்டும்" என்றான் சந்திரகுப்தன்.

அதற்குச் சாணக்கியர், "பூ! கங்காநதியைப் பார்த்திராதவர்கள் என்னைப் போன்றவன் ஒருவன் ஒரு குடத்தில் கங்கைநீரைக் கொண்டுபோவதைப் பார்த்து, எவ்வளவு நீர் கொண்டுபோகிறானென்று அதிசயிக்கிறார்கள். பாத்திரத்திலுள்ள நீர் மிகமிகச் சொற்பமென்று உம்மையும் என்னையும் போலக் கங்கையைப் பார்த்தவர்களுக்கே தெரியும். கல்விக்கடலை ஒருபோதும் கடக்கமுடியாது. கடந்ததாகச் சொல்கிறவன் சமுத்திரத்திற் போய் விழுகிற தரித்திரமான சிறு ஓடையைக் கடந்துவிட்டு அதுவே சமுத்திரமெனத் தனது அறியாமையினாலும் தகுதியின்மையினாலும் தவறாக நினைக்கிறான். அவன் ஒரு சிறு குளத்தைக் கடலெனத் தவறாகக் கருதுகிற எறும்புக்கு ஒப்பாவான்" என்று சொன்னார்.

"ஸ்வாமிகள் மிக அடக்கமாயிருக்கிறார்" என்று சந்திரகுப்தன் சொல்லியபோது, "அடக்கமா! நான் உண்மையைச் சொல்லுகிறேனேயொழிய வேறொன்றும் இல்லை. தனக்கு விரோதமாயிருப்பினும் ஒருவன் உண்மையையே பேசவேண்டும். தனக்குச் சாதகமாயிருக்கும் போதும் உண்மை பேசவேண்டுமென்று சொல்லவும் வேண்டுமோ? ஆனதனாலேயே, தருமத்திநின்றும் வழுவி

எனக்கு அபசாரம் செய்கிற அரசனெவனுக்கும் ஈடுகொடுப் பேனென்று நான் சொன்னேன். நான் சொல்லுகிற வார்த்தையைக் கேளும்: சாணக்கியனுடைய புத்தி எல்லாச் சந்தர்ப்பங்களையும் ஏற்றவாறு சமாளித்துக்கொள்ளும்; உலகத்திலுள்ள எந்தப் போர்ப்படையும் அந்தப் புத்தியை வெல்லமாட்டாது. இனி, ராஜபோஜனசாலை எங்கே இருக்கின்றது? அதில் அவரவருக்கு இடமமைக்கும் அதிகாரியான **விருஷலன்**[1] அங்கே இருக்கிறனா? அவன் அருமையான குணவிசேஷங்கள் வாய்ந்து விளங்கும் யௌவன புருஷனென்றும், வித்தியாபாண்டித்தியத்தையும் யோக்கியதா விசேஷத்தையும் யூகமாகக் கண்டறிவதிற் சமர்த்தனென்றும் கேள்விப்படுகிறேன்" என்றார்.

சந்திரகுப்தன் நாணமுற்று, "நானே அந்த விருஷலன்; அதோ காண்கிற கட்டிடவரிசையே போஜனசாலை" என்றான்.

சாணக்கியர் வெட்கிப்போனார். "எண்ணாமல் நான் உம்மை இவ்வாறு இகழ்ந்ததற்கு என்னை மன்னிக்க வேண்டுகிறேன். உமக்கு வருத்தமுண்டாக்க வேண்டுமென்று நான் நினைக்கவே இல்லை. ஜனங்களை அவரவருடைய ஜாதிப்பெயரால் குறிப்பிடும் கெட்டவழக்கம் நமக்கு இருக்கின்றதே, அதனால் இப்படி நேர்ந்தது. உம்முடைய கம்பீரமான பிரபுத்துவத்தோற்றத்தினாலேயே நீர் இன்னாரென்று நான் ஊகித்திருக்கவேண்டும். ஆனால், நான் ஊகிக்க

---

1. ஒரு காலத்தில் தன் குடும்பத்தவர்கள் பௌத்த மதத்தை அவலம்பித்து வைதிக குலாசாரங்களைக் கைவிட்டதனால் சூத்திரனெனக் கருதப்படும் க்ஷத்திரியன் திரும்ப இந்துமதத்தைத் தழுவியதனால் இந்தப் பெயர் பெறுவான்.

வில்லை. நான் செய்த குற்றத்திற்காக உமக்கு இஷ்டமான தண்டனையை எனக்கு விதிக்கலாம். பிறரைமாத்திரமே சாணக்கியன் தண்டிப்பானென்னும் பெயர் எனக்கு வரலாகாது" என்று சொன்னார்.

அவருடைய மனத்தூய்மையையும் பச்சாத்தாபத்தை யும் உணர்ந்து சந்திரகுப்தன், "என்னை எப்பொழுதுமே விருஷலன் என அழையுங்கள். ஒருவனை அவனுக்குள்ள சுட்டுப் பெயரினால் பூலோகத்து மகாபுருஷர்கள் அழைப்பதைக் காட்டிலும் அதிக இனிமையானது வேறொன்றும் இல்லை" என்றான்.

அதற்குச் சாணக்கியர், "உம்மைப்பற்றி எவ்வளவு சொல்லக் கேட்டிருந்தேனோ அவ்வளவு புத்திசாலியாகவும் பெருந்தன்மை யுடையவராகவும் இருக்கிறீர். இன்னும் ஏதேனும் உமக்கு இஷ்டமான வரம் வேண்டிக்கொள்ளும்" என்றார். அப்போது சாணக்கியர் உண்மையாகவே மகா புருஷரெனத் திடமாகத் தெரிந்துகொண்டு அவரைப் பார்த்து, "எந்நாளும் தாங்கள் எனக்கு நண்பராகவும் நன்மை நாடுகிறவராகவும் இருக்கவேண்டுகிறேன். அறி யாமையால் நான் என்ன குற்றம் செய்தபோதிலும் தாங்கள் மனம்முறிந்து என்னைவிட்டு அகலலாகாது. என்னுடைய பாட்டனரான பெரிய மௌரியர் மரணத்தறுவாயில் எனக்குச் செய்த உபதேசம் இதுவே" என்றான்.

"உமது சிநேகத்தால் எனக்குப் பெருமையே. க்ஷத்தி ரியன் ஒருவன் இல்லாமல் பிராமணன் எவனும் விவகரிக்க முடியாது. பிராமணனொருவன் இல்லாமல் க்ஷத்திரியன் எவனும் விவகரிக்க முடியாது. மௌரியருடைய பேரர் க்ஷத்திரியராகவே இருத்தல்வேண்டும். மௌரியருடைய

ஜீவிதகாலத்தில் நிகழ்ந்த அதிசயமான செயல்களையும் கடைசிக்காலத்தில் உண்டான கஷ்டங்களையும் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். உண்மையான சரித்திரத்தை மற்றொரு சமயம் நீர் எனக்குச் சொல்வீராக. இப்போது நான் போஜனசாலைக்குப் போகவேண்டும். நீர் அங்கே சீக்கிரம் வருவீரா?" எனச் சாணக்கியர் வினவினர்.

"இல்லை. என் தாயாரின் சிராத்தத்தின்பொருட்டு நான் இன்றைக்கு 'ரஜா' வாங்கிக்கொண்டிருக்கிறேன். ஆனால், அங்கே உள்ள காரியஸ்தர் காரியங்களைப் பார்த்துக்கொள்வார். போஜனமான பிறகு இதோ அருகிலுள்ள எனது குடிசைக்கு வந்து இளைப்பாறுங்கள். அதோ தெரிகிறதே, அதுதான் என் வீடு. அப்போது, வேண்டுமானால் மௌரியருடைய செய்கைகளையும் முடிவையும் பற்றிச் சொல்கிறேன்" என்று சந்திரகுப்தன் சொன்னான்.

"பேஷ், அதைக் காட்டிலும் இனிமையானது எனக்கு வேறொன்றுமில்லை. நான் போஜனம் செய்த பிறகு உமது வீட்டுக்கு என்னை அழைத்துக்கொண்டு போகப் போஜனசாலை வாயிலில் ஒரு மனிதனை வைத்திரும்" என்றார் சாணக்கியர். "அப்படியே ஆகட்டும்" என்று சொல்லிச் சந்திரகுப்தன் தன் வீட்டுக்குப் போனான். சாணக்கியர் விரைந்து போஜனசாலைக்குச் சென்றார்.

வீடுபோய்ச் சேர்ந்தவுடனே சந்திரகுப்தன் தன் வேலையாட்களுள் கைதேர்ந்தவனாகிய பாகீரதி என்பவனை அழைத்து, "சாணக்கியர் இந்நகரத்திற்கு வந்திருக்கிறார்; போஜன சாலைக்குப் போயிருக்கிறார். ஆடம்பரம் சிறிதும் இல்லாமல் நீ வெளியே காத்துக்கொண்டிரு-

இன்ன இன்ன அடையாளங்களினுல் அவரை நீ தெரிந்து கொள்ளலாம். அவர் போஜனசாலையினின்று வெளிவந்த வுடன், அவரை இங்கே நமது வீட்டுக்கு அழைத்து வா" என்று சொன்னுன். மற்றும் அவனை நோக்கி, "போஜன சாலையில் அவர் ஏதோ வம்புதும்பில் மாட்டிக் கொள்வா ரென்று அஞ்சுகிறேன். அவர் தர்மத்தைப் பெரிதும் நம் பிப் பாராட்டுகிறவர். இந்தக் கலியுகத்திற்கு அது ஏலாது. எப்படி யிருப்பினும், இந்த யுகத்திலும் தர்மமே ஜயிக்கும் என்னும் அவருடைய ஸித்தாந்தத்தை இன்றைக்கு அவர் அனுபவத்தில் பரீக்ஷை செய்து பார்த்துத் தெரிந்துகொள் வார். இனி நீ போ; கண்ணையும் காதையும் திறந்து கொண்டு ஜாக்கிரதையா யிரு" என்று சொன்னுன்.

---

## அத்தியாயம் 4

## சாணக்கியரது சபதம்

விஸ்தாரமான அந்த விருந்து மண்டபத்திற்குள் சாணக்கியர் நுழைந்தார். அங்கே பத்துத் தங்கத் தாலங்களும், ஓராயிரம் வெள்ளித்தாலங்களும் வைக்கப் பட்டிருந்தன. அநேகம் வெள்ளித்தாலங்களின்முன் கல்வியிற் சிறந்த பல பிராமணர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அவ்விடத்துக் காரியஸ்தனைச் சாணக்கியர் கேட்டதற்கு, "இந்த ஒன்பது தங்கத் தாலங்கள் நந்த சகோதரர் எண்மருக்கும், அவர்களுடைய மாமாவாகிய ஸர்வார்த்தஸித்திக்கும் ஆகும்; பத்தாவதான இந்தத் தங்கத் தாலம் இக்காலத்திலுள்ள பிராமணர்களுள் பாண்டித்தியத்தில் மேம்பட்டவருக்கு உரியதாகும்; வெள்ளித் தாலங்கள் வித்துவான்களான மற்றப் பிராமணர்களுக்கும், மந்திரிமார்களுக்கும், விருந்தினர்களுக்கும் ஆகும். வெள்ளித் தாலங்களில் ஒன்றிற்புசிப்பதற்கு நீர் சீட்டுப் பெற்றிருக்கிறீரா?" என்று காரியஸ்தன் பதில் சொன்னான். அப்போது சாணக்கியர், "ஜீவதசையிலிருக்கிற பிராமணர்களுள் பாண்டித்தியம் மிகுந்தவனென்று வாரணசிப் பண்டிதர்களாலும் தக்ஷசிலைப் பண்டிதர்களாலும் ஒப்புக்கொள்ளப்பெற்ற சாணக்கியன் நான். ஆதலால், பத்தாம் தங்கத் தாலத்தில் உண்பதற் குரியவன் நானே" என்றார்.

தம் பெயரை அவர் உச்சரித்த மாத்திரத்திலே ஜனங்களுக்குள் ஒரு கிளர்ச்சி உண்டாயிற்று. எல்லாரும்

அவரைத் திரும்பிப் பார்த்தார்கள். சிலநாளைக்கு முன்னல் காசிமா நகரில் அவர் வெற்றிபெற்றது அனைவருக்கும் தெரியும். பாண்டித்திய விஷயத்தில் அவருடைய கீர்த்தியைக் கதை கதையாக ஜனங்கள் சொல்லிக் கொண்டிருந்தார்கள். "ஸ்வாமீ! தங்களுடைய அபார பாண்டித்தியத்தைப் பற்றி நாங்களெல்லோரும் கேள்விப் பட்டிருக்கிறோம். ஆனல், இந்த ஸ்தானம் வேறு எவருக்கும் ஆகாது. பூஜ்யரான எங்கள் ராஜகுரு ஸுபந்து தினந்தோறும் இங்கே உட்காருகிறார்" என்ற காரியஸ்தன் சொன்னன்.

"அது எப்படியாகும்? எந்நாளும் ஒரு பிராமணரே கல்வியிற் சிறந்தவராக எப்படி இருக்கமுடியும்? அன்றியும், அவர் அவ்வளவு படிப்பாளியல்ல வென்றும் கேள்விப் படுகிறேன்" என்றார் சாணக்கியர். அங்குக் குழுமியிருந்த பிராமணர்களெல்லாரும் கொல்லென நகைத்தார்கள். ஏனெனில், அந்த விருந்துக்காலங்களில் ஸுபந்துவின் பாண்டித்தியத்தைக் குறித்து அவர்கள் பலவிதமாகக் கேலி செய்து கொண்டிருப்பதுண்டு.

உடனே சாணக்கியர் அவர்களோடு சம்பாஷிக்கத் தொடங்கி, பற்பல விஷயங்களைப் பற்றிக் கஷ்டப்படாமல் வெகு சுலபமாகவும் பிரமாணதிக்கியத்தோடும் பேசி அவர்களைக் களிப்பித்தார். அந்தப் பிராமணர்களுள் முக்கியமானவர்கள் காரியஸ்தனை நோக்கி, "இவருடைய பிரபாவத்தைப் பற்றிப் புகழ்ச்சியாக ஜனங்கள் சொல்லிக்கொள்வது மிகைபடக் கூறவதன்று. நாங்கள் இதுவரையில் பார்த்த பிராமணர்களுக்குள் இவரே நிச்சயமாகக் கல்வியிற் சிறந்தவர்" என்று சொன்னர்கள்.

அதன்மீது சாணக்கியர்போய் அந்தத் தங்கத் தட்டின் முன் உட்கார்ந்தார். அப்படி உட்காரும்போது, "இந்தப்

பண்டித மகா சபை என்னை இந்த ஸ்தானத்திற்குத் தெரிந்தெடுத்து நியமித்திருக்கிறது" என்றார்.

திகைப்புற்ற காரியஸ்தன் அவரை நோக்கி, "ஸ்வாமீ! நீங்கள் இங்கே உட்காருவது நல்லதன்று" என்றான்.

அதற்குச் சாணக்கியர், "ஏன் நல்லதன்று? என்னை விடப் படிப்பாளி யொருவன் வந்து இந்த ஸ்தானத்தினின்று என்னைக் கிளப்புகிறவரையில் நான் இங்கிருந்து நகரமாட்டேன்" என்றார்.

அந்தத் தருணத்தில் நந்தர்கள் வந்து சேர்ந்தார்கள். அவர்களுடன் ராக்ஷஸன், நக்ரநாஸன், சகாதலன் என்பவர்களும் மற்ற மந்திரிமார்களும் வந்தார்கள். அவர்களுக்கு மரியாதை செய்யும் பொருட்டுச் சாணக்கியர் தம் இடத்திலே எழுந்து நின்றார். அவர்களும் ஸுபந்துவும் அவரை உற்றுப் பார்த்தார்கள். இடுப்பில் ஒரு நாட்டு வேஷ்டியும் மேலே ஓர் அங்கவஸ்திரமும் தரித்து, தரித்திரம் வாய்ந்து வறுமையிலடிபட்டுள்ள தென்னாட்டுப் பிராமணன் பத்தாம் தங்கத்தாலத்தில் அமுதருந்தத் துணிந்தனனே என அவர்கள் எண்ணினார்கள். கடைசியில் ஸுபந்து அடக்கமாட்டாமல் சிரித்துக்கொண்டு, "என்ன ஐயா! அந்தப் பத்தாம் தங்கத்தாலம் எவருக்காக வைக்கப்பட்டிருக்கிறதென்று உமக்குத் தெரியுமா?" எனக் கேட்டான்.

அதற்குச் சாணக்கியர், "ஆம், இக்காலத்திலுள்ள பிராமண பண்டிதர்களுள் மிகச் சிறந்தவருக்கு என்று தெரியும். அப்படிக் கல்வியிற் சிறந்தவன் நான். வாராணசிப் பண்டிதர்களாலும் தக்ஷசிலைப்பண்டிதர்களாலும் இக்காலத்துப் பிராமணர்களுள் பண்டித சிரோமணியென ஒப்புக்கொள்ளப்பெற்ற சாணக்கியன் நான்" என்று சொன்னார்.

அந்தப் பெயரைக் கேட்டவுடனே, தேள் கொட்டினவனைப்போல ஸுபந்து நடுங்கி ஒடுங்கினான். உலகப் பிரஸித்தரான இந்த மகாவித்துவானோடு எவ்வகையான சாஸ்திர விவாதத்திலேனும் சிக்கிக்கொள்வோமென்று அவன் கனவிலும் நினைக்கவில்லை.

"ஹா! ஹா! நன்றாயிருக்கிறது. தனு! இது நீ செய்து வைத்த விளையாட்டோ?" என்று தன் கடைசித் தம்பியைப் பார்த்து ஸுகல்பன் சொன்னான்.

"இல்லை, அண்ணா, நமது அரண்மனை ஆசாரியருக்குப் பங்கம் உண்டாகும்படி 'தமாஷ்' பண்ணுவேனா?" என்றான் தனநந்தன். அதன்மீது, "அப்படியானால், இது ஏதோ விபரீதமாயிருக்கின்றது. தங்கத்தட்டினின்று அந்த ஆளை எழுந்து போகச் சொல்" என்றான் ஸுகல்பன். சாணக்கியரைப் பார்த்து, "ஐயரே! எழுந்திரும்" என்று தனநந்தன் சொன்னான்.

அவனைப் பொருட்படுத்தாமல் சாணக்கியர் ஸுகல்பனை நோக்கி, "மகாராஜரே! இங்குள்ள பிராமணர்களுள் நானே பாண்டித்தியம் மிக்கவன். உங்களுடைய சட்டப்படி இங்கே உட்காருவதற்கு உரிமை வாய்ந்தவன் நானே" என்றார்.

"என் உத்தரவு உமக்குப் போதாதா?" என்று தனநந்தன் வினவச் சாணக்கியர், "போதாது; அரசரே கட்டளையிடவேண்டும்" என்றார்.

"இந்த ஸ்தானத்தில் ஸுபந்துவே உட்காரவேண்டுமென்று நாங்கள் தீர்மானித்திருக்கிறோம். ஆனதனால், உடனே போய் ஒரு வெள்ளித்தட்டினண்டை உட்காரும்" என்றான் ஸுகல்பன்.

அப்போது சாணக்கியர், "என் வாய்மொழியைக் கேளாமலும் எங்களிருவருடைய யோக்கியதைகளையும் பரீக்ஷித்துப் பார்க்காமலும், நீங்கள் எப்படி ஒரு தீர்மானம் செய்யலாம்? தர்ம சாஸ்திர விதியின்படியும் சாக்ஷியத்தின் படியுமே அரசர்கள் நீதி செலுத்தவேண்டும். வித்தியா விஷயமாக நாங்கள் வாக்குவாதம் செய்வோம். இங்குள்ள வித்துவான்கள் விதாயகர்த்தர்களாக இருந்து தங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லட்டும். அதன்மீது, மகா ராஜரே, நீங்கள் தீர்மானியுங்கள்: அந்தத் தீர்மானத் தின்படி நான் நடக்கிறேன். தர்மத்தின்படி விஷயங்களைத் தீர்மானிக்க வேண்டுமென்று ஸுகல்பர் என்னும் தங்கள் பெயரே சொல்கின்றது" என்று சொன்னார்.

"இளைஞரே! எங்களுக்குப் புத்தி சொல்லுமளவு உமக்குத் துணிவா?" என்று ஸுகல்பன் கோபித்துக் கேட்டதற்குச் சாணக்கியர், "விவேகமான வார்த்தையை ஒரு குழந்தை சொல்லினும், அரசர் அதை எடுத்துக் கொள்ளவேண்டும். ஸுபந்துவே படிப்பாளிகளுள் பெரிய வரென ருஜுவாகிறவரையில் அவர் இந்த இடத்தில் உட் கார முடியாது. இந்த இடம் அரண்மனைப் புரோகிதருக் குரியதென்றேனும், ஸுபந்துவுக்கே உரியதென்றேனும் சொல்லிவிடுங்கள். இந்த க்ஷணம் இதைவிட்டு நீங்கி நான் வெள்ளித்தாலத்திற்குப் போகிறேன். ஆனால், பெரிய கல்வி மானை பிராமணனுக்கு என்று சொல்கிறவரையில் அவரு டைய கல்வி மேம்பாடு ருஜுவாகாமல் நான் இந்த இடத் தை விட்டு நீங்க மறப்பதே என் கடன்" என்றார்.

ஸுகல்பனுக்கு ஆத்திரம் பொங்கியது. "இதோ பாரும், மடையரே! தென்னாட்டிலிருந்து நீர் இவ்விடத்திற்கு நூதனமாக வந்தவரென்றும், எங்கள் பழக்க வழக்கங்களை

நன்றாக அறியாதவரென்றும் தோன்றுவதனால், உம் விஷயத்தில் நான் கடுமை காட்ட விரும்பவில்லை. உடனே எழுந்து வெள்ளித்தாலத்துக்குப் போம். இன்றேல், இந்த மண்டபத்தை விட்டு உம்மை வெளியே தள்ளச் சொல்வேன்'' என்றான்.

"மந்திரிகள் எவரும் இங்கே இல்லையா? செய்யவேண்டிய முறை இன்னதென்று தங்கள் அரசர்களுக்கு அவர்கள் சொல்லமாட்டார்களா?'' எனக் கூவினார் சாணக்கியர்.

"உலகத்தில் உத்தமமான மந்திரிகள் எங்களுக்கு இருக்கிறார்கள். ஆனால், அவர்கள் எங்கள் இஷ்டத்திற்கு விரோதமாக நடக்கத் துணியமாட்டார்கள். இது அரசர்களை மந்திரிகள் ஆளும் தேசமன்று; அரசரது கட்டளைப்படியே மந்திரிகள் நடக்கிற தேசம்'' என்று ஸுகல்பன் நக்ஷத்ரநாஸனையும் சகாதலனையும் குறிப்பாகப் பார்த்துக் கொண்டே சொன்னான்.

"வேதங்கள், சாஸ்திரங்கள், ராஜ்ய தந்திரம், பொருள் நூல், அல்லது வேறு எந்த விஷயமாகவேனும் ஸுபந்து என்னோடு வாதத்திற்கு வரட்டும். தக்ஷசிலையிலும் வாரணாசியிலும் கல்வியிற் சிறந்த பண்டிதர்கள் அநேகர்களை வென்றதுபோல இவரை ஒரு நொடியில் வெல்வேன்'' என்றார் சாணக்கியர்.

"அன்பார்ந்த ஐயரே! தக்ஷசிலைக்கும் வாரணாசிக்கும் போய் இன்னும் அநேகரை வெல்லும். இப்போது இந்த இடத்தை விட்டு ஒழிந்துபோம்'' என்றான் ஸுகல்பன்.

"வித்தியா போஷகர்களென்றும் நமது ஆரிய தர்மத்தைத் தாங்குகிறவர்களென்றும் மகத மன்னர்கள் பெரும் பெயர் படைத்திருக்கிறார்கள். ஆதலின், ஓ மகாராஜரே,

நீங்கள் என்னைச் சரியானபடி மரியாதையாக நடத்த வேண்டுமென்று எதிர்பார்க்க எனக்கு உரிமையுண்டு. இங்கே வந்துள்ள வித்வத்கோஷ்டியில் நானே மிக்க வித்யாவந்தன் என்பது மாத்திரமேயல்லாமல், ராஜ்ய வியவகார தந்திரங்களிலும் பெரிய பிரமாண புருஷன்; உங்கள் வெருட்டலுக்கெல்லாம் அஞ்சமாட்டேன். அரசர்கள் இடும் அநியாயக் கட்டளைகளை எதிர்த்துப் போராடுவது எனது கடமை. அந்தக் கடமையைத் துறக்கமாட்டேன்" என்றார் சாணக்கியர்.

"அவன் உச்சிக்குடுமியைப் பிடித்திழுத்து அவனை இம் மண்டபத்திற்கு வெளியே தள்ளுங்கள்! இந்த நிமிஷமே இந்தக் காரியம் செய்யக் கூடியவர்கள் இங்கே இல்லையா?" என ஸுகல்பன் கர்ஜித்தான். உடனே ஆயுதபாணிகளான ஆட்கள் பன்னிருவர் சாணக்கியரைப் பலவந்தமாக வெளியேற்றப் போனார்கள்.

அப்போது பிரதான மந்திரியாகிய ஸுபுத்திசர்மன் என்பவன் இடைமறித்து அவர்களைச் சும்மா இருக்கச் சொன்னான். அவன் அமானுஷிய சக்தி வாய்ந்தவன், உழைப்புமிகுந்தவன், அரக்கனைப்போல அசாத்தியமான காரியங்கள் செய்பவன்; ஆதலால், அவனை ஜனங்கள் சாதாரணமாக ராக்ஷஸன் என்பார்கள். அவன் சாணக்கியரண்டை போய், "நானும் உம்மைப்போன்ற பிராமணன். சாதாரணத் திருடனையும் கொலைகாரனையும்போல, ஒரு பெருங்கீர்த்தி பெற்ற பிராமணனை மகாராஜருடைய விருந்துமண்டபத்திலிருந்து வெளியே தள்ளப் பார்ப்பது எனக்கு வெறுப்பாயிருக்கின்றது. என்னைப்போலவும், நக்கரநாஸன் சகாதலன் என்னும் மந்திரிகளைப் போலவும் நீரும் தயவுசெய்து போய் வெள்ளித் தாலத்தினண்டை உட்காரும். பிரதான மந்திரி

யைக் காட்டிலும், உமக்கு அதிக மரியாதை செய்யவேண்டு மென்பதை நீர் எதிர்பார்க்கவில்லையென நிச்சயமாகச் சொல்வேன்" என்றான்.

"ஸுபுத்திசர்மரே! அகந்தையினாலும் கர்வத்தினாலும் கௌரவ ஆசையினாலும் நான் இங்கே உட்காரப் பிடிவாதம் பண்ணவில்லை. என் வீட்டில் நான் வாழையிலையில் அன்னம் புசிக்கிறேன். சில சமயங்களில் மண் சட்டிகளிலும் உண்டதுண்டு. இந்த ஸ்தானம் கல்வியிற் பெரிய பிராமணருக்கென வைத்திருப்பதனாலே, நான் உரிமை கொண்டாடுகிறேன். ஸுபந்து பெரிய பண்டிதரென்று எவரும் ஒப்புக்கொள்ள மாட்டார். அப்படிப்பட்டவரை இங்கே அரசர் உட்காரச் செய்வது தவறு" என்றார்.

அதற்கு ராக்ஷஸன், "அரசரது கட்டளை தவறானதேயானாலும், அதற்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டுமே. ஏனெனில், உலகத்தில் அரசர் விஷ்ணு அம்சம் வாய்ந்து கடவுளுக்குப் பிரதிநிதியாக இருக்கிறாரல்லவா?" என வினவினான்.

"ஸுபுத்திசர்மரே! உமது ராஜபக்தியை மெச்சுகிறேன். ஆனால், பிராமணர்களும் சமணர்களும்* அரசர் சொல்வதற்கெல்லாம் தலையசைத்து ஒப்பம் வைப்பதைக் காட்டிலும் மேம்பட்ட கடமையுள்ளவர்கள். அரசர் பிறப்பித்த கட்டளைகளே யானாலும், அநியாயமாயிருந்தால், அவைகளுக்குக் கீழ்ப்படியாமல் நாங்கள் எதிர்த்துப் போராட வேண்டியவர்களாவோம். சாமானிய ஜனங்களே ஆட்சேபிக்காமல் அரசர்களுடைய கட்டளைப்படி நடக்கவேண்டும்.

---

*சமணர் என்பார் ஜைன சமயத்துச் சந்நியாசிகள் முதலான பலவகைத் துறவிகள்.

ஏனெனில், நியாயாநியாயத்தைப் பகுத்தறிந்து அவைகளை எதிர்க்கத் தக்க யோக்கியதை அவர்களுக்கு இன்னும் வரவில்லை" என்றார் சாணக்கியர்.

"அரசனது கட்டளைக்கு அடங்கி நடக்காவிட்டால், நாம் ராஜத்துரோகிகளாவோம்; அதனால் தண்டனைக்கு உரியவர்களாவோம்" என்றான் ஸுபுத்திசர்மன்.

"அப்படியன்று; ஏனெனில், அரசருடைய சொந்த நன்மையையும் குடிகளின் நன்மையையும் காப்பாற்றுவதே எங்கள் நோக்கம். அவருடைய ராஜ்யம் வேண்டுமென்று நாங்கள் ஆசைப்படவில்லை. நாங்கள் ஒருபோதும் அரசர்களாக மாட்டோம். அவர் நியாயமாக நடக்கவேண்டுமென்று மாத்திரமே விரும்புகிறோம். ஜனகமகாராஜருடைய ஸம்ஸ்தானத்திலும், யாக்ஞவல்கியர் பிராமண பண்டிதர்களுள் மிகப் பெரியவரென்று உரிமை கொண்டாடியதைக் கார்க்கி என்னும் ஒரு ஸ்திரீ ஆக்ஷேபித்து வாதத்திற்கு அழைக்க இடங் கொடுத்தார்கள். வித்தியாசம்பந்தமான ஒரு வார்த்தைகூட வாயைத் திறந்து இன்னும் சொல்லாதிருக்கிற இந்த மனிதன் கொண்டாடும் உரிமையை ஆக்ஷேபிக்க எனக்கு எப்படி இடங் கொடாதிருக்கலாம்?" எனச் சாணக்கியர் கேட்டார்.

பிராமண சமூகத்தவரெல்லாரும் மறுபடி நகைத்தார்கள்.

ஸுபுத்திசர்மனைப் பார்த்து ஸுகல்பன், "அவனோடு பேசுவதிற் பயனில்லை. பலாத்காரமே அவனுக்குச் சரி; அவனுடைய விகாரமான உச்சிக்குடுமியைப் பிடித்து இழும்; இப்படிப்பட்ட கடுவன்களுக்கும் கள்வர்களுக்கும் இங்கே இடம் இல்லை" என்று சொன்னான்.

"கபிபோ கரவனே, இங்குள்ள பிராமணர்களுள் எனக்குச் சமானமான புலமை வாய்ந்தவர் எவரேனும் இருக்கிறாரா? எவரேனும் இருந்தால் இந்த இடத்தை நான் விட்டு விடுகிறேன். வேறு எந்தக் காரணத்திற்காகவும் இதைக் காலி செய்யமாட்டேன். உங்கள் சீற்றச் சொல்லினாலேனும், அச்சுறுத்தலினாலேனும் அசையமாட்டேன். பிராமணர்களாகிய நாங்கள் வித்தையையும் வேதங்களையும் அரசர்களும் கெடுக்காமல் பாதுகாக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். ஆனதனால், வேதங்களிலாவது சாஸ்திரங்களிலாவது தேர்ச்சி பெற்றவன் எவனேனும் வந்து இந்த ஆஸனத்தினின்றும் என்னைக் கிளப்பட்டும். கரியும் கத்தியும் மாத்திரமே உள்ளவர்கள் வரக்கூடாது. ஓர் அரசனுடைய அதிகாரத்துக்காக நான் இந்த ஆஸனத்தை விடமாட்டேன்" என்றார் சாணக்கியர்.

"ஸுபந்துவைப் பாரும். அவர் உயரமாயும் அழகாயும் இருக்கிறார். நல்ல ஆடை தரித்திருக்கிறார். நீரோ குரங்கைப்போலக் கறுத்திருக்கிறீர். பொல்லாப் பீற்றலை உடுத்திருக்கிறீர்" என்று தனநந்தன் சொன்னான்.

அதற்குச் சாணக்கியர், "கலைஞரை மதிப்பது அவருக்குள்ளிருக்கும் கல்விக்காகவேயன்றி, அவர்கள் மீதுள்ள ஆடைக்காக அன்று. 'உருவுகண்டு எள்ளாமை வேண்டும்.'

'கற்றார்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்றோர் அணிகலம் வேண்டாவாம்'

செல்வவான்கள் இதைத் தெரிந்து கொள்வது கஷ்டம்" என்று சொன்னார். மறுபடி பிராமணர்களெல்லாரும் சிரித்தார்கள்.

"இந்தப் போராட்டம் போதும். அந்தப் பயலை வெளியே தள்ளுங்கள்" என்றான் ஸுகல்பன். பன்

னிரண்டு பேர் சாணக்கியரைப் பிடித்துக் கொண்டார்கள். ஒருவன் குடுமியைப் பிடித்துக்கொண்டான். பின்புற மிருந்து மூவர் தள்ளினார்கள்; சில அடிகளும் அடித்தார்கள். சாணக்கியர் பிராமண சமூகத்தின் முன் கீழே விழுந்தார். அவருடைய உச்சிக்குடுமி அவிழ்ந்து குலைந்து ஆடியது; ஆடை அலங்கோலமாயிற்று. அதற்குப் பிறகு பெருமகிழ்ச்சியோடு ஸுபந்து தங்கத்தாலத்தினண்டை போய் உட்கார்ந்தான். குழுமியிருந்த பிராமணர்களெல்லோரும் மௌனம் பூண்டனர். அந்த மௌனம் பெரிய அபசகுனமாய்த் தோற்றியது.

கடுங்கோபத்தோடு சாணக்கியர் எழுந்து நந்தர்களை நோக்கி, "ஓ ராஜகுமாரர்களே! உயிரோடிருக்கிற பிராமணர்களுள் உத்தமமானவனை இன்றைத் தினம் நீங்கள் பெரிதும் அவமதித்து அபசாரம் செய்திருக்கிறீர்கள். வேதசாஸ்திரங்களை உங்கள் அதிகாரச்செருக்கினுற் சாக்கடையில் இழுத்து எறிந்துவிட்டீர்கள். ஈன க்ஷத்திரியர்களே, உங்கள் கையினின்றும் அந்த வேத சாஸ்திரங்களையும் உலகத்தையும் விரைவில் விடுவிப்பேன். உங்களுடைய துராகிருதமான செயலினுல் தொங்கி ஆடலுற்ற இந்தக் குடுமியை நான் முடிக்குமுன் உங்களைக்காட்டிலும் சிறந்தவனொருவனை மகத தேசத்தரசனுக்கி அவனுக்கு முடிசூட்டுவேன். சாணக்கியனது வல்லமை எத்தன்மையதென்று உங்களுக்குத் தெரியாது. இங்கிருக்கிற நூற்றுக்கணக்கானவர்களுக்கும் நான் சொல்வது நியாயமென்று தெரியும். ஆனுல் கோழைத்தனத்தினுல் உங்கள் கொடுங்கோன்மைக்கு அஞ்சி வாளா இருக்கிறுர்கள். நான் திரும்பிவந்து உங்களை வேரோடு களையும்போது இவர்களெல்லாரும் மகிழ்வார்கள்" என்று இரைந்து சொன்னர்.

"அந்தப் பாதகனைப் பிடித்துக் கொல்லுங்கள்" என்று ஸுகல்பன் சொன்னான். தடிகளையும் வாள்களையும் எடுத்துக்கொண்டு அநேக ஆட்கள் சாணக்கியரைப் பிடிக்க ஓடுந் தறுவாயில், அங்கே கூடியிருந்த பிராமணர்களெல்லாரும் தடுத்துரைத்தார்கள். பிராமணர்களுக்குள் உண்டான உள்ளக் கிளர்ச்சியை யுணர்ந்து ஸுபுத்திசர்மன் எழுந்து, "மகாராஜா! இது உங்கள் கௌரவத்திற்கும் பெருந்தன்மைக்கும் பொருந்தாத காரியம். பரசுராமரது அபராவதாரம் போல உலகத்தை ஜயித்த மகாபத்மருடைய புத்திரர்கள், ஒன்றுங்கையாலாகாத பித்துப் பிடித்த பிராமண பண்டிதனுடைய வீண்வெருட்டலுக்கு அஞ்சலாமோ? இந்த மனிதன் என்ன செய்வதானாலும் அதையெல்லாம் தடுத்து எதிர் செய்ய நான் ஒருவன் இங்கே இருக்கிறேனல்லவா? தினந்தோறும் ஓராயிரம் பிராமணர்களுக்கும், மகாராஜரின் ஜன்மதினத்தில் அறுபதினாயிரம் பிராமணர்களுக்கும் அன்னதானம் செய்கிற நாம், எவ்வளவு அயோக்கியனானாலும், ஒரு பிராமணனை வதைத்துப் பிரம்மஹத்திக்கு ஆளாகலாமோ? நிராயுதபாணியான பிராமணனொருவனைக் கொலை செய்தோமெனக் குடிகள் நம்மீது குற்றஞ் சாட்டுவதற்கு நாம் இடங்கொடுக்கலாமோ? வாய்ஜம்பம் அடிக்கிற இவனுடைய வார்த்தைகளைப் பொருட்படுத்தாமல், துச்சமாக நினைப்பதற்குப் போதியவளவு பலம் நமக்கு இருக்கின்றது. பெரும் பிரபுவாகிய மௌரியனையும் அவன் துணைவர்கள் நூற்றுவரையும் அடக்கிய நாம் தென்னாட்டினின்று வந்த இந்தக் கரிய பிராமணனுக்கு அஞ்சினோமெனப்பதற்கு இடங்கொடுக்கலாமா? இவனைப் பற்றிச் சிறிதும் கவலை கொள்ளவேண்டாம். இவன் எங்கே

வேண்டுமானாலும் போகட்டும், என்னவேண்டுமானாலும் செய்யட்டும்; இப்படிப்பட்ட பலபராக்கிரமம் மிகுந்த அரசர்மீது கோபங்காட்டுவது, சிறிய கடுகு ஒன்று வறுக்கிற வாணலிச்சட்டியின்மீது கோபங்கொள்வதனால் வெடிப்பது போல முடியும். தன் அசக்தம் தன்னை வீணாக வெடிக்கச் செய்யுமென்று அனுபவத்தினால் இவன் தெரிந்து கொள்ளட்டும்" என்று சொன்னான். அவனுடைய வார்த்தையைக் கேட்டவுடன் ஸுகல்பனுக்குச் சிரிப்பு வந்துவிட்டது; "ஸுபுத்திசர்மா! நீர் எப்பொழுதும் நிதானபுத்தி வாய்ந்தவர். அவனை மறந்துவிட்டு நமது போஜனத்தைக் கவனிப்போம். சமையலெல்லாம் ஆறிப்போகின்றது" என்றான். சாணக்கியனுடைய சமாசாரத்தை முற்றும் மறந்து எல்லோரும் சாப்பிடத் தொடங்கினார்கள்.

கோபாவேசத்தினாற் கொதித்துப் பொங்கிக்கொண்டு சாணக்கியர் வெளியே போனார். பாகீரதியைத் தவிர வேறு எவரும் அவரைச் சிறிதும் கவனிக்கவில்லை. உள்ளே நடந்த வர்த்தமானங்களையெல்லாம் அதிசயத்தோடும் திகிலோடும் கவனித்துப் பார்த்துக்கொண்டிருந்த பாகீரதி, சந்திரகுப்தனுடைய முன்னாலோசனையை நினைத்து ஆச்சரியப்பட்டான். இரகசியமாகச் சாணக்கியருக்குச் சைகை காட்டிவிட்டுத் தன் யஜமானன் வீட்டுக்குப் போனான். வேறு எவரும் கவனிக்காதவாறு சாணக்கியர் அவனுக்குப் பின்னால் சிறிது தூரத்தில் நடந்து சந்திரகுப்தனுடைய மாளிகைக்குள் புகுந்தார்.

அவரைச் சந்திரகுப்தன் தன்னுடைய தனியறைக்கு அழைத்துக்கொண்டுபோய், அவருக்குப் போஜன சாலையில் நேர்ந்த அவமானத்திற்காக விசனப்பட்டான். "இந்தக்

கலிகாலத்தில் தர்மம் ஜயம் பெறுமென அஞ்சினேன்’’ என்றான்.

“அஞ்சவேண்டாம். அது நன்றாக ஜயம் பெறும். நீர் மகிழ்வுறும். ஏனெனில், உம்மை மகத தேசத்திற்கு அரசனாக்கிச் சிங்காசனத்தில் நீர் ஸ்திரமாக நிலைகொள்கிற வரையில், நானே முக்கியமந்திரியாக இருக்கச் சங்கற்பித்துள்ளேன். இந்த மூடர்களுக்கு என் வல்லமை எப்படிப்பட்டதென்று தெரியாது!” என்று சாணக்கியர் சொன்னார்.

“ஆனால், இப்படிப்பட்ட ஆபத்துக்களுக்கு உள்ளாவது புத்திசாலித்தனமா? நீங்கள் தப்பிப்பிழைத்தது ராக்ஷஸன் இடையிட்டதனாலே என்று ஏறக்குறையச் சொல்லலாம். புத்திசாலியாக இருக்கிறவன் தன்னுடைய க்ஷேமத்திற்கு எதிர்பாராத செயல்களின் மீது சாரலாமா?” என்று சந்திரகுப்தன் வினவினான்.

“சாரலாகாது. அங்கிருந்த நிலைமையை உள்ளபடி தெரிந்துகொள்ளாமல், தவறாக நடந்தேனென்று தோற்றக்கூடுமென்பதை ஒப்புக்கொள்கிறேன். ஆனால், நிஜமாகத் தெரியாமல் தப்பிப்போகவில்லை. அந்தப் பிராமண சமூகத்தினிடையில் நான் கொல்லப்படமாட்டேனென்று எனக்குத் தெரியும். இந்திய மன்னனெவனும் அப்படிப்பட்ட ஆபத்துக்கு இடம் வைத்துக்கொள்ள மாட்டான். ராக்ஷஸனே குறுக்கிடாவிட்டால், என் புகழைக் கேட்டுள்ளவன் எவனேனும் அந்தச் சமயம் தோன்றியிருப்பான். சீக்கிரத்தில் நான் பழிக்குப்பழி வாங்குவேன். அந்தப் புல்லை வேரோடு அறுத்தது போல, இவர்களையும் வேரோடு அறுப்பேன். அதற்கு வேண்டிய வேலை செய்ய இப்போதே போவேன். நான் சொல்வதைக் கவனியும்: பலவகையான வேவுகாரர்கள் எத்

தனையோ பேர் என்னிடம் உண்டு. அவர்களின் மூலமாக நான் உம்முடன் உறவு வைத்துக்கொள்வேன். அவர்கள் எல்லாவிதமான இடங்களிலும் சமயங்களிலும் நினைக்கக் கூடிய எல்லாவிதமான மாறு வேஷங்களிலும் உம்மைச் சந்திப்பார்கள். உம்மிடத்திலும் அநேக வேவாட்கள் இருப்பதாகத் தெரிகிறது. என் ஒற்றர்கள் உபயோகிப்பதற்கு மூன்று குழூஉக்குறிகள் வைத்திருக்கிறேன். அவற்றுள் முதலாவது, 'துறவிகளனைவர்க்கும் தண்டம்' என்பது; இரண்டாவது, 'நாகர்களுக்கும் தேவிகளுக்கும் தண்டம்' என்பது; மூன்றாவது, 'பிரம்மதேவருக்கும் குசத்வஜருக்கும் நமஸ்காரம்' என்பது. ஒற்றர்களை நம்பி அவர்களிடம் சமாசாரம் சொல்லுமுன், அவர்கள் உண்மையானவர்களா என்பதை நன்றாகத் தெரிந்து திருப்தி செய்துகொள்ளும். சந்தேகம் தோன்றினால் அவர்கள், 'ஸோமாய ஸ்வாஹா' என்று சொல்லுகிறவரையில், அவர்களைச் சிறிதும் பொருட்படுத்த வேண்டாம். நீரும் இதே குழூஉக்குறிகளை வைத்துக் கொள்ளும். ஒற்றர்களிடம் நீர் என்ன சொல்வதானாலும், அது, அவர்கள் முற்றும் நம்பிக்கையானவர்களென்று உமக்குத் தெரிகிறவரையில், மேற்பார்வைக்கு நித்தியப்படி வியவகார அர்த்தமுள்ளதாய் இருக்கவேண்டும். அதோடு, ஊன்றிப்பார்த்தால் உம் மனத்திலுள்ள உண்மையான கருத்தை மறைத்து வெளியிடத்தக்கதாய் இருக்கவேண்டும். அப்படிப்பேசுவதனால், அவர்கள் வஞ்சகர்களாயிருப்பினும், அவ்வர்த்தமானத்தினால் எவ்விதப் பயனும் அடைய முடியாது. உம்மை ஆபத்தில் மாட்டிவைக்கிற சாக்ஷியமாகவும் முடியாது" என்று சாணக்கியர் சொன்னார்.

"நீங்கள் மேற்கொண்டிருப்பது பெரிய பிரமாதமான காரியமாய் இருக்கின்றதே" என்றான் சந்திரகுப்தன்.

"ஆம். பிரமாதமானதுதான்; ஆனால், சிலர் நினைப்பது போல, அவ்வளவு பிரமாதமானதன்று. தர்மத்தைக் கைவிட்ட அரசனைக் கைப்பற்றக் கூற்றுவன் அப்போதே கிளம்பிவிட்டான். அவனது அழிவுக்கு வழி வெட்டியாய் விட்டது. பயப்படாதேயும்" என்றார் சாணக்கியர்.

"பயத்திற்கும் எனக்கும் வெகு தூரம். உங்களைப் பற்றியே நான் கவலைப்பட்டேன்" என்றான் சந்திரகுப்தன்.

"எனக்காக நீர் கவலைப்பட்டது எனக்கு ஆச்சரியமாகத் தோன்றவில்லை. மகா புருஷனுக்குரிய முப்பத்திரண்டு லக்ஷணங்களும் உம்மிடத்தில் அமைந்திருக்கக் கண்டேன். நிச்சயமாக நீர் அரசாளப் பிறந்தவரே. உம்மைப்பற்றி எனக்கு ஏற்பட்ட அபிப்பிராயம் தவறானதன்று; சரியானதே. வீரமில்லா வேந்தனும், படிப்பில்லாப் பிராமணனும் இருவரும் பதரே" என்று சாணக்கியர் சொன்னார்.

"எனக்கொரு வரம் அளிக்கவேண்டும்: தாங்கள் கிருபை கூர்ந்து எனக்குக் குருவாக இருக்கவேண்டும்" எனச் சந்திரகுப்தன் பிரார்த்தித்தான்.

"அது எனக்குப் பெருமை தரும். இப்படிப்பட்ட சீடனைப் பெறுவது எந்தக் குருவுக்கும் சிறப்பேயாகும். நான் உமக்குச் செய்யும் உபதேசம் இதுதான்: பிராமணர்களையும் கோக்களையும் போற்றி ஆதரிக்கவேண்டும். எல்லா வருணத்தவர்களும் தத்தம் தர்மங்களை முறைப்படி அனுஷ்டித்துச் செழித்தோங்கட்டும்" என்று சாணக்கியர் சொன்னார்.

"அப்படியே செய்கிறேன்" என்று சந்திரகுப்தன் உறுதி கூறினான்.

"இது மாத்திரம் ஞாபகம் வைத்துக்கொள்ளும்: நந்தர்களைப்பற்றி நாம் செய்திருக்கிற சங்கற்பம், உற்றகாலம் வருமளவும் எவருக்கும் தெரியக்கூடாது. ஒரு விஷயத்தைப் பெருமையாக வெளிப்படுத்துவதற்கு எவ்வளவு தைரியம் வேண்டுமோ, அவ்வளவு தைரியம் ஒரு விஷயத்தை வெளியிடாமல் ஒளித்து வைப்பதற்கும் வேண்டும். அதாவது, தனக்குச் சாதகமாயிருக்குமானால், தீரனொருவன், தன்னை ஜனங்கள் சௌரியமில்லாத பேடியெனத் தவறாக நினைத்துக்கொள்ளுமளவு துணிவு கொண்டிருக்க வேண்டும். அதுவே ராஜ தந்திரம். மூர்க்க தைரியம் அரசனுக்கு உதவாது. நன்னாரிவேர் உடம்புக்கு நன்மை செய்யுமென்று எல்லாருக்கும் தெரியும். ஆனால், அதைப் பச்சையாக உட்கொண்டால் கேடு விளைக்கும். அதுபோலவே, மூர்க்கமாகத் தைரியம் காட்டுவதும் தீமைதரும்" என்று சாணக்கியர் சொன்னார்.

"எனது நடவடிக்கையில் அது தெரியவில்லையா? நந்தர்களிடத்து நான் ராஜவிசுவாஸமுள்ளவனைகத் தோன்றவில்லையா? ஆகையால், நீங்கள் சொல்லுகிறபடியே செய்கிறேன்."

பிறகு அவன் ஒரு நிமிஷநேரம் வெளியே போய்த் திரும்பி வந்து சாணக்கியரை நோக்கி, "சுவாமீ! தாங்கள் இந்நகரில் இருப்பது நன்றன்று; ஆபத்துக்கிடமாகும். ஸுபுத்திசர்மனுடைய யுக்திவாதத்திற்கு இணங்கிய இந்த இழிமக்கள் உடனே மனம்மாறி, உங்களைப் பிடிப்பதற்குப் படையாட்களை அனுப்பக் கூடும். ஆதலால், இப்போதே நீங்கள் ஏதேனுமொரு தூர ஸ்தலத்திற்குப் போய் விடுவது நல்லது. அடிக்கடி பிரயாணம் போகிற நண்பனொருவன் எனக்கு இருக்கிறான். விரைந்து செல்லக்கூடிய திவ்விய

மான இரண்டு குதிரைகள் பூட்டிய அவனது வண்டி இதோ வெளியே ஸித்தமாயிருக்கின்றது. மிக்க நம்பிக்கைக்குரிய பணியாள் ஒருவன் அதை வைத்துக் காத்துக் கொண்டிருக்கிறான். நமது ஆலோசனைகளை நிறைவேற்றுவதற்கான காரியங்களுக்கு வேண்டிய செலவின்பொருட்டுப் பத்துப் பைப் பொன் இந்த வண்டியில் வைத்திருக்கிறேன். பணத்திற்காக நீங்கள் கவலைப்படவேண்டாம். என் தந்தையார் எனக்குப் போதுமான திரவியம் வைத்திருக்கிறார். அந்தத் திரவியத்தைத் தமது அவஸான காலத்து ஆசையை நிறைவேற்றுவதற்குச் செலவிடவேண்டுமென்று எனக்கு வற்புறுத்தியிருக்கிறார். மரணத்தறுவாயில் அவருக்கிருந்த கோரிக்கை, துராக்கிரஹமாகப் பட்டத்துக்கு வந்த இந்த நந்தர்களின் வமிசத்தை அடியோடு அழிக்கவேண்டுமென்பதே" என்று சொன்னான்.

அப்போது சாணக்கியர், "நீர் தீர்க்க ஆலோசனை உள்ளவர். உமக்கு வெற்றி வாய்ப்பது திண்ணம். ஏற்கெனவே, உமக்கு யாராவது சகாயம் செய்கிறோமென்று வாக்களித்துள்ளாரா?" என வினவினார்.

"எனது பாட்டனார் இறந்தது முதல் நம்பத் தகுந்த துணைவர்கள் எங்கெங்கே கிடைப்பார்களென்று பிரயத்தனப்பட்டுப் பார்த்திருக்கிறேன். மௌரியர் கலிங்கதேசத் தரசனை வென்று அவனை மகததேசாதிபதிக்கு அடங்கின சிற்றரசராக்கினார். அவன் மகதாதிகாரத்தைத் தவிர்த்துக் கொள்ள வேண்டுமென்று ஆசைகொண்டிருக்கிறான். நான் 2,00,000 ஆட்படையைச் சேகரிக்கக்கூடுமானால், அவன் 50,000 ஆட்படை கொடுத்து உதவுவதாக உறுதி சொல்லியிருக்கிறான்."

"அதுவும் ஒரு சகாயமே. ஆனால், சகாயம் அதிகமாக வேண்டாதபோது வரத் தக்க சகாயம். வேறு யாராவது துணைசெய்வதாகத் தைரியம் சொல்லியிருக்கிறார்களா?"

"சவரர்களும் காண்டு ஜாதியாரும் (Savaras and Khonds) கலிங்க தேசத்தரசனுடைய அதீனத்தினின்றும் நீங்கி ஸ்வதந்திரமாக வாழ்வதற்கு அந்தக் கலிங்கத்தரசன் இசையும்படி எனது பாட்டனார் அவனைக் கட்டாயப்படுத்தினார். அந்த நன்றியைப் பாராட்டி வைரங்திரியன் என்னும் சவரச்சிற்றரசனும், காண்டோவீரனென்னும் காண்டுச்சிற்றரசனும், 5000 சவரர்களையும் 5000 காண்டுகளையும் அழைத்துக்கொண்டு என்னுடன் வருவதாகச் சொல்லி யிருக்கிறார்கள்."

"நந்தர்களோடு போர் புரிவதற்கு இந்தப் பதினாயிரம் காட்டாள்கள் எம்மாத்திரம்? ஆயினும், அவசரம் நேர்ந்தபோது அவர்கள் கைக்கு உதவுவார்கள். சமவெளிகளிலுள்ள ஜனங்களைப் போலல்லாமல், மலை நாடுகளிலுள்ள இந்தச் சாதியார் மிக நம்பிக்கையானவர்கள். இப்போது நான் வர்த்தமானபுரத்துக்கு (Burdwan)ப் போய் நமது எண்ணங்களைச் சாதிப்பதற்கு வேண்டிய வழி வகைகளை ஆலோசிப்பேன். நந்தர்களை வேரறுப்பதற்குச் சில வருஷங்களாகும். ஆனால், வேரறுப்பது நிச்சயம். என்னை வர்த்தமானபுரத்திற்குக் கொண்டு போகும்படி வண்டிக்காரனுக்குச் சொல்லும்."

சந்திரகுப்தன் வெளியே போய் வண்டிக்காரனுக்குச் சொன்னான். சாணக்கியர் உணவுண்டு வண்டியில் ஏறிக்கொண்டார். அது வர்த்தமானபுரத்தை நோக்கிக் கடகடவென ஓடியது.

---

## அத்தியாயம் 5

# ஜீவஸித்தியின் சூது

அன்றைச் சாயங்காலமே ஸுபுத்திசர்மனும் தனநந்தனும் சாணக்கியரைப்பற்றிப் பேசலானார்கள். "இந்தச் சம்பவம் எனக்குச் சந்தோஷமாயில்லை. கூடியிருந்த பிராமணர்களெல்லாரும் சாணக்கியரிடமே அபிமானம் காட்டினார்கள். பாண்டித்திய விஷயத்தில் அவருடைய புகழுக்குப் பழுதேயில்லை. அவருக்கு ஈடாக எவரையும் சொல்ல முடியாது. பார்த்தவர்களுக்குள் பெரும்புலவரென்று அவர்களுடைய மனத்தில் நன்றாகப் பதியும்படி அவர் செய்து விட்டதாகத் தோன்றுகிறது. ஒரு ராஜ்யத்தை எப்படி ஜயிக்கிறது, குடிகள் திருப்தி வாய்ந்திருக்கும்படி எப்படிச் செய்கிறது, அதை எப்படிப் பரிபாலனம் செய்கிறது, கலகங்கள் எப்படி விளைவிக்கிறது, சேனையை எப்படி நடத்துகிறது என்னும் விஷயங்களையெல்லாம் அவர் விவரித்துரைத்ததாக அவர்கள் எனக்குச் சொன்னார்கள். மனிதர்கள், உலோகங்கள், கைத்தொழில்கள், நவரத்தினங்கள், மிருகங்கள், ஸ்தலங்கள், வஸ்துக்கள் ஆகிய இவைகளைப் பற்றிய விஷயங்களை யெல்லாம் அவர் நன்குணர்ந்தவரென்று தோன்றுகிறது. சுருங்கச்சொல்லின், ஸர்வதந்திர ஸ்வதந்திரர் என்று அவர்களுக்குத் தோன்றியதாம். அது அப்படி இருக்கிறதென்றால், உலக சம்பந்தமான விஷயங்களில் எவ்வளவு தெரிந்திருக்கிறதோ அவ்வளவு ஆழமாக வேதங்களின் விஷயத்திலும் அத்தியாத்ம சாஸ்திரத்திலும் படித்துத் தேர்ந்திருக்கிறாரெனத் தோன்றியதாம். எல்லா

வற்றிற்கும் மேலாக, தமது சொந்த ஜீவன வியவகாரத்தில் கடுமையான துறவற வாழ்க்கையே கைக்கொண்டு அதுவே பித்தாகப் பரிந்து பேசுகிறாராம். அன்றியும், அதர்வ வேதத்தைக் கரைத்துக்குடித்தவராகவும், அபிசார மந்திரப்பிரயோகத்தில் கைவந்தவராகவும் தெரிகிறது. அவரைப் பற்றி நாம் கேள்விப்பட்டிருந்த புகழும் பெருமையும் எல்லாம் உண்மையென்றே தெரிகிறது. அவருக்குள்ள தோஷம் ஒன்றேயாகும். அதாவது, அபரிமிதமான செருக்கு என்கிறார்கள். அந்தச் செருக்குக்கு ஏற்பச் சாதிக்கும் திறமையும் இருப்பதனால், அவர் பெருமை பாராட்டிக் கொள்வது நியாயமேயென்று பண்டிதர்கள் சொன்னார்கள்" என்று ஸுபுத்திசர்மன் சொன்னான்.

"நமக்குத் தீங்கு ஏதேனும் அவர் விளைக்கக்கூடுமென்று நம்புவதற்கு அவர்கள் அவ்வளவு மூடர்களல்லவே?" என்று தனநந்தன் வினவினான்.

**மந்திரி:** அவர் பயமுறுத்தியது முற்றுமே வாய்ச்சளுக்கு அல்லவென்று அவர்களிற் பெரும்பாலார் நினைக்கிறார்களென்றே அஞ்சுகிறேன்.

**தனநந்தன்:** பெருமையைப் பிரகடிப்பதற்காகச் சொல்லிய வார்த்தைகளைச் சாதிக்கமுயலுமளவு அவருக்குப் புத்தி யில்லாமற் போமா?

**மந்திரி:** அதை நிறைவேற்ற முயலுவாரென்றே நினைக்கிறேன். அவர் அபிசார மந்திரப்பிரயோகத்தில் மிகத் தேர்ந்தவரெனப் பெயர் பெற்றிருக்கிறார். யோகாப்பியாசம் செய்து ஸித்திகளும் பெற்றிருக்கிறார். யோகிகள் எதற்கும் அஞ்சுவதில்லை. அதிசயிக்கத்தக்க சக்திச்செல்வம் இவர்களுக்கு உண்டு. அவருடைய சூழ்ச்சிகளுக்கு

எதிர் உபாயம் செய்யத் தக்கவனொருவனைக் கண்டு பிடிக்க நான் இப்போது பிரயத்தனப்படவேண்டும்.

**தனநந்தன்:** அபிசார மந்திரங்களில் பிறரைக் கொல்லத்தக்க பிரயோகங்கள் உளவென நீர் நம்புகிறீரா?

**மந்திரி:** ஆம். சங்கார தந்திரங்களெல்லாம் வெளிப்படுத்தப்படுகிற வரையில் ரகசியமே. அவை வெளிப்பட்டுப்போனால், இன்னும் அகோரமான தந்திரங்களைக் கண்டுபிடித்து ரகசியமாக வைத்துக் கொள்கிறார்கள். **சதக்னி** என்னும் ஆயுதத்தை எடுத்துக்கொள்ளும். அது தமிழில் **நூற்றுவரைக் கொல்லி** எனப்படும். அது தூண்போன்றதோர் ஆயுதம். அதற்குள் எண்ணிறந்த ஆணி முதலியன அடைக்கப்பட்டிருக்கும். அதைக் கோட்டைச் சுவரின் மீதிருந்து யந்திரவலியால் எறிந்தால் அது அநேகரைக் கொல்லும். பலவகையான விஷப்புகைகளைக் கற்பித்திருக்கிறார்களே. இவை உடனே மனிதரைக் கொல்கின்றன, அல்லது கண்களைக் கெடுத்துக் குருடராக்குகின்றன சுவாஸ நோய்களை உண்டாக்குகின்றன, வாந்திபேதி முதலான பலவகை விஷ வியாதிகளை விளைக்கின்றனவே. அவைகள் இல்லையென நினைத்துத் தன் உயிருக்கு மோசம் வாராதென எவனேனும் தைரியமாக இருக்கமுடியுமா?

**தனநந்தன்:** இப்போதுதான் எனக்குத் தெரிகிறது. ஆம். சாணக்கியரால் செய்யத்தக்க தீமை நம்மைச் சாராமல் ஒதுக்கத் தக்க கெட்டிக்காரனொருவனைக் கண்டுபிடியுங்கள். அவரை, போனாற்போகிறதென்று, அந்த ஒருநாள் தங்கத் தாலத்தில் உண்ணவிட்டிருந்தால் ஒருகால் நலமாயிருந்திருக்குமே. அவரைப்பற்றி நான் கேள்விப்படுவதிலிருந்து அரசிறை ஆதாயத்தை அதிகப்படுத்துவதில் அவர் சமர்த்த

றென்று தோன்றுகிறது. தோல்கள், பிசின் வகைகள், மரக்கள், கற்கள் ஆகிய இவைகளின் மீதெல்லாம் வரிவிதித்தும், நான் நமது கஜானாவில் எண்பது கோடி பொற்பணங்களை சேர்க்கமுடிந்தது. ஒரு பொற்பணம் என்பது ஏறக்குறைய ஏழரை ரூபாய் பெறும்; வெள்ளிப்பணம் முக்கால் ரூபாய் பெறும். இதைக் காட்டிலும் பத்துமடங்கு அவர் நமது ஆதாயத்தை அதிகரித்திருக்கக்கூடும். அரசனது செல்வத்தை வளர்ப்பது ஸுபந்துவின் குணப்பெருமைகளில் ஒன்றாகாது: அனாவசியகமான வைதிக கர்மங்களைச் செய்யச்சொல்லி, கஜானாப்பணத்தைக் கரைப்பதே அவருடைய முக்கிய காரியம். சாணக்கியரைத் திரும்ப வரவழைத்து நம்மவராக இருக்கும்படி செய்யமுடியாதா என்று ஆலோசிக்கிறேன்.

மந்திரி: இப்போது அந்தக் காரியம் மிஞ்சிப் போயிற்று. அவரை நாம் ஜன்ம சத்துருவாக்கிக் கொண்டு விட்டோம். பரிதானத்தினால் வசப்படுத்தக்கூடிய ஆள் அவர் அன்று. வீறாப்பும் வறுமையும் வாய்ந்து, பொன்னாசை ஒழித்துள்ள புருஷர்களுள் அவர் ஒருவரெனத் தோன்றுகிறது. ஆதலால், கடைசி வரையில் அவரோடு நாம் போராடி, அவர் செய்வதற்கெல்லாம் பிரதி செய்ய வேண்டியவர்களாயிருக்கிறோம். குப்தவித்தையில் தேர்ந்தவனையும் க்ஷுத்ர மந்திர தந்திரப்பிரயோகங்களில் வல்லவனையும் இருக்கிறவனொருவனைத் தேடிப் பிடித்துக் கொணரும்படி என் நம்பிக்கையான வேவுகாரர்களை இதற்கு முன்னரே அனுப்பிவிட்டேன்.

தனநந்தன்: நீர் தூரதிருஷ்டியுள்ளவர். நீர் இங்கே உள்ளளவும் எந்த விஷயத்திற்கும் நாங்கள் கவலைப்பட வேண்டிய அவசரம் ஏது? நீர் தேடித்தருகிற மனிதன்

தாழ்ந்த உலோகங்களைப் பொன்னாக்க வல்லவனாயிருப்பானோ?

மந்திரி: அப்படிச் செய்யவல்லவனானால் அவன் பூதங்களை உபாசிப்பானேன்? அல்லது நம்மை நாடிச் சேவிப்பானேன்?

தனாநந்தன்: அந்த வார்த்தை எல்லாரது விஷயத்திலுமே சொல்லலாம். ஆயினும், அப்படிப்பட்டவர்கள் அரசர்களுக்காகவும், மற்றவர்களுக்காகவும் வேலை செய்கிறார்களென்று நம்பிக்கையானவர் சொல்லக் கேட்டிருக்கிறோம்.

மந்திரி: சாணக்கியருடைய அபிசாரப்பிரயோகங்களைத் தடுக்கவேண்டுமென்பதே எனது நோக்கமல்லாது, தாழ்ந்த உலோகங்களைத் தங்கமாக்க வல்லவனைத் தேடிப் பிடிப்பது எனது காரியமன்று.

தனாநந்தன்: உமது காரியமே கருத்தாய் மேலே நடத்தும்.

அதன் மீது அவர்களிருவரும் பிரிந்து போனார்கள்.

சாணக்கியர் க்ஷேமமாக வர்த்தமானபுரம் போய்ச் சேர்ந்தார். வண்டியை ஊருக்கு வெளியே நிறுத்திவிட்டு, ஒரு பெரிய வர்த்தகனுடைய வீட்டுக்குப் போனார். பத்துப் பை பொன்னையும் தூக்கிக்கொண்டு சந்திரகுப்தனுடைய ஆள் அவர் பின் நடந்தான். அந்த ஆளைப் போகச் சொல்லிவிட்டு அவர் நீராடி அன்னம் அருந்தினர். சூரியாஸ்தமன சமயமானபோது அவர் இந்துசர்மன் என்பவனுடைய வீட்டுக்குப் போனார். அவன் அவரோடு படித்தவன்; நம்பிக்கையான நண்பன்; வைத்தியம், சூனிய வித்தை, ஜோதிஷம், உளநூல் ஆகிய இவைகளில் ஆழ்ந்துழைத்துத் தேர்ந்தவன். ராஜபோஜனசாலையில் நடந்த சம்பவங்களையும்,

தாம் செய்துள்ள சபதத்தையும், சந்திரகுப்தனைப்பற்றிய எல்லா விஷயங்களையும் அவனுக்கு எடுத்துச் சொன்னார். அதற்குப் பிறகு, "நீ மதவெறிபிடித்த பௌத்த பிக்ஷுவாகப் பாடலிபுரத்திற்குப் போய், சூதினாலும் சோதிடத்தினாலும் மாந்திரிகத்தினாலும் ஸர்வார்த்திசர்மனுடைய முழு நம்பிக்கையையும் நந்தர்களுடைய பரம விசுவாஸத்தையும் சம்பாதித்துக் கொள். நந்தர்களை அழிப்பதற்கு வேண்டிய காரியங்களையெல்லாம் செய். அப்போதைக்கப்போது நீ என்ன செய்யவேண்டுமென்று நான் சொல்லியனுப்புகிறேன்" என்று சொன்னார். மற்றும், "உடனே நீ சந்திரகுப்தனை உற்ற நண்பனாகக் கொள்ளலாம். ஆனால், அவனை இரகசியமாகப் போய்ப் பார்க்கவேண்டும். அவனிடத்திலிருந்து நந்தர்களுடைய பூர்வ சரித்திரத்தைப்பற்றி அந்தரங்கமான விஷயங்களைத் தெரிந்துகொண்டு, உனது சோதிட சாஸ்திரப்புலமையினால் அவைகளைக் கண்டு பிடித்ததாக நடிக்கலாம். பாலிலும் நீரிலும் உணவிலும் இரகசியமான ஔஷதிகளைச் சேர்த்து உண்பித்து நோயுண்டாக்கி அந்தப் பழியை என் மீது சுமத்தலாம். அதற்குப் பிறகு உனது மந்திர சக்தியால் அவைகளை நிவர்த்தி செய்ததாகப் பாசாங்கு பண்ணி முறிவு மருந்துகளைக் கொடுக்கலாம். உன் மனம் வந்தபடியெல்லாம் பிராமணர்களைத் தூஷி. அவர்கள் செய்யும் மோசங்களை வெளியாக்குவதே உனது வாழ்க்கையின் நோக்கமெனப் பலரறியப் பிரகடனம் செய். நந்தர்கள் என்ன சம்மானம் செய்தாலும் ஏற்றுக்கொள்ளாதே. உனக்கு என்ன பணம் வேண்டுமானாலும் எப்போதும் அனுப்புகிறேன்" என்றார்.

இந்துசர்மன் களிமிகுந்து கூத்தாடினான்; "வேலையின்றி விம்மிச் சோம்பி மந்தமாய்த் தனியே வாழ்ந்து வந்

தேன். இனி எனது வாழ்க்கை இனிமையுறும். உங்கள் சொற்படி வேலை செய்கிறவரெவரும் பங்கமுறுர். பௌத்த பிக்ஷுவேஷம் பூண்டு, மருந்துப்பெட்டியையும் மாந்திரிகப் பெட்டியையும் வேண்டிய வஸ்துக்களுடன் கைக்கொண்டு நாளையே புறப்படுவேன். ஜீவஸித்தி என்னும் புனைபெயரோடு காரியங்களைச் செய்வேன். உங்களையும் பிராமணர்களையும் அளவு சங்கையில்லாமல் துர்ப்பாஷையாகத் திட்டுவேன். ஒரு வாரத்திற்குள் ராக்ஷஸனுக்கும் நந்தர்களுக்கும் நம்பிக்கையான அமைச்சனுவேன், உமக்கு வைரியாவேன்" என்று சொன்னுன். சாணக்கியர் அவனைத் தழுவிக்கொண்டு அவனுடைய செலவுகளுக்காக ஒரு பை நிறையப் பொற்பணம் கொடுத்தார்; மேலே செய்யவேண்டிய காரியங்களைப்பற்றி இரவு நெடுநேரம் வரையில் அவனேடு கலந்து பேசிக் கொண்டிருந்தார்.

சாணக்கியர் சபதம் செய்து போய்ப் பதினைந்து நாட்களுக்குப் பிறகு ஜீவஸித்தி என்னும் மகானைப் பற்றியே பாடலிபுரத்து ஜனங்களெல்லாம் ஆவலுடன் பேசிக்கொண்டிருந்தார்கள். "அவர் மிகவிசித்திரமான வைத்தியர்; அரிய சோதிடம் சொல்பவர்; பில்லி சூனியப் புலவர்; அபிசார மந்திரமூர்த்தி; குப்த வித்தியாகுசலர். அவ்வளவு அருந்திறல் வாய்ந்தவர் சாணக்கியருடைய சூது வாதுகளையெல்லாம் எதிர்த்தடிப்பதற்காக நந்தர்களுக்கு ஊதியமின்றி வேலை செய்து வருகிறுர். 'சாணக்கியர் பொல்லாத பிராமணப்போக்கிரிகளுள் முதன்மையானவர். எல்லாம் தெரிந்ததாகப் பாசாங்கு பண்ணும் பொய்யர்' என்று அவரை நிந்திக்கிறுர். வைராக்கியம் மிகுந்த பௌத்த பிக்ஷுவாகிய அவர் சாணக்கியருடைய பிரயோகங்களையெல்லாம் பங்கப்படுத்தி

அவர் ஒன்றுக்கும் உதவாதவரென வெளிப்படுத்திக் காட்டச் சங்கற்பித்திருக்கிறார்" என்று ஜனங்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். முதலில் எடுத்த எடுப்பிலேயே நந்தர்களும் ராக்ஷஸனும் ஜீவஸித்திக்கு வசமாகிவிட்டார்கள். அவன் சந்திரகுப்தனோடு இரகசியமாகக் கலந்துபேசி, நந்தர்களைப்பற்றியும் அக் குடும்பத்தில் மற்றவர்களைப்பற்றியும் அந்தரங்கமான நுண்ணிய சொந்த விஷய விவரங்களைத் தெரிந்துகொண்டு, தன் சோதிடசாஸ்திரத் திறமையினால் கண்டு பிடித்ததாக வெளியிட்டான். சகாதலன் என்னும் மந்திரியின் புதல்வன் தன் தந்தைக்கும் வேறு எவருக்கும் தெரியாமலே மகாபத்மனுடைய ஏகாந்த ஸ்தானத்திற்குத் தனியே போய், ராஜ்யத்தை அவன் துராகிருதமாகக் கைப்பற்றிக்கொண்டு அரசனையும் ராஜ குமாரர்களையும் கொலை செய்தது பெரும்பாதகமென அவனை நிந்தித்து இகழ்ந்தான். அந்தப் பிரபலமான பிராமணனை மகாபத்மன் இரகசியமாகக் கொன்று அரண்மனையின் உள்ளறையொன்றின் தளத்தின்கீழ்ப் புதைத்து விட்டான் என்னும் சங்கதியை, மௌரியன்தான் இறப்பதற்குச் சற்றுமுன்னர் மந்தணமாகச் சந்திரகுப்தனுக்குச் சொல்லியிருந்தான். மிக இரகசியமாக வைக்கப்பட்டிருந்த அச் சங்கதி மௌரியனுக்கும் மகாபத்மனுக்கும் மாத்திரமே தெரியுமல்லாது, நந்தர்களுக்கும் ராக்ஷஸனுக்குங் கூடத் தெரியாது. சகாதலனுடைய புத்திரன் இமயபர்வதத்திற்கு ஓடிப் போய்ச் சந்நியாசியாய் விட்டானென்று மற்றவர்களைப்போல அவர்களும் நம்பியிருந்தார்கள். சகாதலனும் இந்த வதந்தியையே நம்பியிருந்தான். இந்த இரகசிய சமாசாரத்தைச் சந்திரகுப்தனிடமிருந்து தெரிந்துகொண்டு ஜீவஸித்தி மிக உற்சாகமடைந்தான். "நந்தர்கள் மனத்திலும் ராக்ஷஸன் மனத்தி

லும் நான் வல்லவனென்று வற்புறுத்துவதற்கு இதுதான் வேண்டும்" என்று சொன்னான்.

சந்திரகுப்தனிடம் பேசிய பிறகு மூன்றும் நாள் அவன் நந்தர்களுடன் அரண்மனையைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு வந்தான். அப்போது, "இரகசியமான வஞ்சக சக்தியொன்று இவ்விடத்திலிருந்து நமக்கு விரோதமாக வேலைசெய்வதாய் எனக்குத் தோன்றுகிறது. இவ்விடத்தில் ஏதோ இருந்துகொண்டு கொடிய துன்மார்க்கனை சாணக்கியனுக்குச் சாதகம் செய்கிறது. இருக்கட்டும், ஒரு கை பார்க்கிறேன். ஆ! என்ன இது! இவ்வறைகளில் ஒன்றின் கீழ் ஒரு பிராமணனுடைய எலும்புகள் புதைக்கப்பட்டிருக்கின்றனவெனத் தெரிகிறதே. இறந்து போனவனுடைய ஆவி நமக்கு விரோதமாக வேலை செய்துகொண்டிருக்கின்றது. இறந்துபோன பிராமணனொருவன் உயிரோடிருக்கிற பிராமணனுக்கு உதவிசெய்துகொண்டிருக்கிறான்" என்று சொன்னான்.

"அரண்மனைக்குள் எந்தப் பிராமணனுடைய எலும்புகளும் இல்லையே" என்று நந்தர்களும் ராக்ஷஸனும் சொன்னார்கள்.

"இருக்கத்தான் வேண்டும். அவை எனக்குப் புலப்படுகின்றனவே" என்று சொல்லி ஜீவஸித்தி ஒவ்வோர் அறையாக நுழைந்து முன்னும் பின்னும் நடந்தான். அங்ஙனம் நடக்கையில் அவன், "வைரோசனனது மகனை பலிக்கு நமஸ்காரம்; நூற்றுக்கணக்கான மந்திரப்பிரயோகங்கள் செய்யவல்ல சம்பானுக்கு நமஸ்காரம்; நிகும்பனுக்கும், நாகனுக்கும், கும்பனுக்கும், பிரம்மராக்ஷஸாகிய தந்துகச்சனுக்கும் நமஸ்காரம்; ஓ சண்டாளி, கும்பீ, தும்பா, கடுகா, ஸரகா! அவ்வெலும்புகளை எனக்குத் தோற்று

விப்பீராக!" என்னும் விபரீதமான மர்ம மந்திரத்தை ஓதிக் கொண்டிருந்தான். கடைசியில், சந்திரகுப்தன் குறிப்பிட்டிருந்த அறைக்குள் வந்து நின்றுகொண்டு, "ஆ! நமது தேஜஸை அழிக்கத்தக்க இரகசியமான எதிர்காற்று இவ்விடத்திலிருந்து வீசுவது உங்களுக்குத் தெரியவில்லையா? அவ்வெலும்புகள் இவ்விடத்திலேயே இருக்கவேண்டும்" என்றான்.

அவனுடைய வார்த்தையை நம்பாமல் நந்தர்களும் ராக்ஷஸனும் அவனைக் கேலி செய்து சுடச்சுடப் பேசினார்கள். "இவ்விடத்தில் காற்றும் இல்லை, அலையும் இல்லை, எலும்புகளும் இல்லை" என்றான் தனநந்தன்.

"நான் சொல்வது உண்மையாயில்லாவிட்டால் என் பிரதாபத்துக்கே லோபம் வந்துவிடும். இவ்விஷயத்தில் நான் தப்பிப் போனால், என்சக்திகளை மிதமிஞ்சி மதித்தவனாவேன். இவ்விடத்தினின்று பகையான காற்றலைகள் இரகசியமாக வீசிக்கொண்டிராவிட்டால், அத்யாத்ம ஞானம் எனக்குச் சிறிதும் இல்லையென ஒப்புக்கொண்டு, பிராமணர்களே பெரியவர்களென விட்டுக் கொடுப்பேன். ஆனால், இது வரையில் நான் ஒருபோதும் தவறிப் போனதில்லை. தயவு செய்து இவ்விடத்தில் தோண்டிப்பாருங்கள்" என ஜீவஸித்தி அவர்களை மன்றாடிக் கேட்டுக்கொண்டான்.

அறையைத் தோண்டிப் பார்த்தபோது, அந்தோ! ஒரு மனிதனுடைய எலும்புக்கூடு அங்கே இருந்தது. அது பிராமணனுடைய களேபரமெனக் காட்டுவதற்கு அதனுடன் பொற்காசு ஒன்று வைக்கப்பட்டிருந்தது*. இதனால் ஜீவ

* பிராமணனையும் ஸர்ப்பத்தையும் தகனம் செய்வதானாலும் புதைப்பதானாலும் அந்தச் சவத்துடன் ஒரு பொற்காசேனும்

ஸித்தியின் வெற்றிக்கு விலையில்லா உயர்வு ஏற்பட்டது. சூப்தவித்யா விசாரதர்களுள் அவனே சிறந்தவனென நந்தர்களும் ராக்ஷஸனும் கொண்டாடினார்கள்.

"நான் இதுவரையில் பார்த்த பிராமணர்களெல்லாரைக்காட்டிலும் நீரே பெரிய மந்திரவாதியும் சோதிடப்புலவரும் ஆவீர். மாந்திரிகம் பயின்ற பிராமணர்களெவரும் இவ்விடத்தில் என்புக்கூடு இருக்கிறதென அனுமானப்படவே இல்லை. ஆனால், நீரோ வந்தவுடனே இவ்விடத்தில் என்பு புதைந்துள்ளதென உணர்ந்துவிட்டீர்" என்றான் ராக்ஷஸன். இவ்வாறு நந்தர்களுடைய பெரு நம்பிக்கைக்கும் பரம விசுவாஸத்திற்கும் ஜீவஸித்தி உரியவனானன்; அவர்களுக்கு உற்ற நண்பனும் அமாத்தியனும் ஆனான். அவன் சொற்படி, சாஸ்திரோக்தமான சடங்குகளைச் செய்து மந்திரங்களை ஜபித்து அவ்வஸ்திகளை இரகசியமாகக் கங்காநதியிற் போட்டுவிட்டார்கள். அதன்மீது ஜீவஸித்தி, "இனி நமக்கு இந்தப் பகைப் புகைப் படலத்தின் வாதை நீங்கியது. நந்தர்களின் அரண்மனைக்குள்ளிருந்து சாணக்கியனது ஏவற்பிசாசுகளுக்கு இனி எவ்விதமான உதவியும் உண்டாகாது" எனத் திருப்தியோடு பேசினான்.

"சாணக்கியன் ஒரு பெரிய சூனியவித்தை செய்துகொண்டிருக்கிறான். உங்களுக்குப் பிரமாதமான ஜ்வரம் உண்டாக்கி, அதன் மூலமாக நீங்கள் மரிக்கவேண்டுமென்று அவன் அந்த ஏவல் வேலை செய்துகொண்டிருக்கிறான். அவனுடைய மந்திரம் பலியாமல் தடுக்கும்பொருட்டு நான் பால் ஜபித்து வைத்திருக்கிறேன். இதை உட்கொள்ளுங்

---

வெள்ளிக்காசேனும் வைப்பது வழக்கம். அப்படி வைக்காதொழிவது பெரும்பாவம் என இந்துக்கள் கருதுவார்கள்.

கள்'' என்று ஒருவாரம் தாழ்த்து நந்தர்களுக்குச் சொல்லிப் பாலைக் குடிக்கச் செய்தான். ஜ்வரவேகம் காட்டத்தக்க மருந்தொன்றை அந்தப் பாலில் அவனே கலந்திருந்தான். ஆனதால், நந்தர்களுக்குச் சிறிது ஜ்வரதாபம் உண்டாயிற்று. எதிர்மந்திரம் ஜபிக்கத்தொடங்கி, ஜீவஸித்தி அவர்களை நோக்கி, "பயப்படாதீர்கள், சாணக்கியனது மந்திர சக்தியை முறித்துவிட்டேன். உங்களுக்குக் கொஞ்சம் ஜ்வரம் வரும்படியாக மாத்திரமே அவன் செய்ய முடிந்தது; அதுவும் பறந்துபோம். இதோ அதை ஒழித்து விடுகிறேன்'' என்று சொல்லி மும்முரமாக ஜபம் செய்யலானான். ஒரு மணிநேரம் சென்றபின், காய்ச்சலைத் தணிக்கத் தக்க இரகசிய மருந்தொன்றைச் சேர்த்து வேறு பாலை அவர்களுக்குக் கொடுத்தான். ராஜகுமாரர்களுக்குக் காய்ச்சல் நீங்கியது; தங்கள் உயிரைக் காப்பாற்றியதற்காக அவர்கள் ஜீவஸித்திக்கு விழுந்து விழுந்து வந்தனம் செய்தார்கள்.

இதற்குப் பதினைந்து நாட்களுக்குப் பின் ஜீவஸித்தி மறுபடி ஜபம் பண்ணத் தொடங்கினான்; ராஜகுமாரர்களுக்குத் திரும்பவும் கொஞ்சம் பால் கொடுத்தான்; தாற்காலிகமாக அவர்களுக்கு உன்மத்தம் உண்டாகும்படி ஊமத்தம் விதையைப் பொடி பண்ணி மிகச் சிறிதளவு அதிற் சேர்த்திருந்தான். அந்தப் பாலைக் குடித்த பிறகு அவர்களெல்லாரும் பைத்தியக்காரர்களைப் போலப் பிதற்றத் தலைப்பட்டார்கள். ஜீவஸித்தி மேலும் மேலும் ஜபம் செய்துகொண்டிருந்து மற்றுங் கொஞ்சம் பால் கொடுத்தான். இப்போது கொடுத்த பாலில் பிதற்றலைப் பரிகரிப்பதற்கான மருந்தைச் சேர்த்திருந்தான். அதைக் குடித்து அவர்கள் கொஞ்சங்கொஞ்சமாகப் பைத்தியம் தெளிந்து நல்ல நினைவு கொண்டார்கள்.

"அந்தப் பாதகன் உங்களெல்லாருக்கும் பைத்தியம் பிடிக்கும்படி செய்யப் பார்த்தான். அதை நான் தடுத்திருக்கிறேன்" என்று ஜீவஸித்தி சொன்னான். ராஜகுமாரர்கள் நன்றி பாராட்டிக் கை நிரம்ப நவரத்தினங்களையும் வைரங்களையும் நீலக்கற்களையும் மாணிக்கங்களையும் முத்துக்களையும் மரகதங்களையும் அள்ளி அள்ளிக் கொடுத்தார்கள். அவற்றின் விலை மதிக்கமுடியாதது. அவைகளையெல்லாம் வாங்கிக்கொண்டு ஜீவஸித்தி அந்த இடத்திலேயே சிதற வீசி எறிந்துவிட்டான். அப்படிச் செய்யுமளவில், அயர்ந்து போயிருந்த ராஜகுமாரர்களைப் பார்த்து, "பணப்பித்தென்னும் இந்தப் பேய் எனக்குப் பிடித்திருந்தால், சாணக்கியனுடைய ஏவற்பேய்களுக்கு நான் சிறிதும் ஈடு கொடுக்க முடியாது" என்று சாற்றினான். செல்வத்தைச் சிறிதும் மதிக்காத ஜீவஸித்தியின் இந்தச் செயலைப் பார்த்து ராஜகுமாரர்களும் ராக்ஷஸனும் பிரமித்துப் போனார்கள். ஜீவஸித்தியின் அபார யோக்கியதையையும், நம்பிக்கையான தன்மையையும், ராஜவிசுவாஸத்தையும் பற்றி அவர்களுக்கு உண்டான உறுதி எவரும் அசைக்க முடியாததாயிற்று.

ஜீவஸித்தி அங்கே வந்து மூன்று மாதத்திற்குப் பிறகு அவன் நந்தர்களையும் ராக்ஷஸனையும் நோக்கி, "பாபிகளான இந்தப் பிராமணர்கள் இரகசியமாகச் சாணக்கியனிடம் அபிமானம் வைத்து அனுதாபம் காட்டிக்கொண்டிருக்கும் போது அவர்களில் ஆயிரம்பேருக்கு நாள்தோறும் ஏன் அன்னமிடுகிறீர்கள்?" எனக் கேட்டான்.

ராக்ஷஸன்: இத்தனை வருஷகாலமாக நாங்கள் பிராமண போஜனம் செய்வித்து வருகிறோமே.

ஜீவஸித்தி: நீங்கள் அப்படி ஒருமுறை செய்யத் தொடங்கியிருக்கலாம். மனத்திற்கிசைந்த சரியான காரண

மில்லாமல், அந்தக் காரியத்தை நீங்கள் ஏன் நீடித்துச் செய்ய வேண்டும்?

**ராக்ஷஸன்:** பிராமணர்கள் உத்தமவருணத்தவர்களல்லவா? அவர்களுக்கு அன்னமிடுவது பெரும் புண்ணியமெனச் சாஸ்திரங்கள் சொல்கின்றனவே?

**ஜீவஸித்தி:** பிராமணர்களெல்லாருமே புண்ணியவான்களாய் இருக்கமுடியாது. சண்டாளனுன இந்தச் சாணக்கியனும் பிராமணன்தானே? சாஸ்திரங்களோவெனின், அந்தப் பிராமணர்கள் எழுதி வைத்த நூல்களாகும். பிராமணர்களுக்கும் மற்றவர்களுக்கும் எள்ளளவு வித்தியாசமும் இல்லையென்பதே எனது கொள்கை. அரண்மனை வைத்தியராகிய **அபயதத்தர்** வந்து பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர், சண்டாளர், பௌத்தர், ஜைனர், ஆஜீவகர், காபாலிகர் ஆகிய இவர்களுள் ஒவ்வொருவர் உடம்பிலிருந்தும் இரத்தம் எடுத்துச் சோதித்துப் பார்க்கட்டும். இரத்தத்திற் சிறிதும் வேற்றுமை காணமாட்டார்.

ஸ்தம்பித்துப்போன நந்தர்கள் உடனே அபயதத்தரை வரவழைத்து அந்தப் பரீக்ஷை செய்துபார்க்கச் சொன்னார்கள். அந்த வைத்தியர், "கர்ப்பாதானம், ஜனனம், யௌவனவஸ்தை, மரணம் ஆகிய இந்தக் காரியங்களெல்லாம் மானிடரனைவர்க்கும் சாமானியமாய் இருப்பதுபோல, இரத்தமும் ஒரேமாதிரி இருக்கும்" என்றார். அவர் அப்படிச் சொல்லியும், தங்கள் முன்னிலையில் அந்தப் பரீக்ஷை செய்துபார்க்கவேண்டுமென்று அவரைக் கட்டாயப்படுத்தினர்கள். வைத்தியர் அதேமாதிரி இரத்தத்தை எடுத்துப் பார்த்து, மானிடர் ஒவ்வொருவருடைய இரத்தமும் தத்துவத்தில் ஒரேமாதிரி இருக்கிறதெனவும், இரத்தத்தைப் பார்த்து ஜாதியை நிர்ணயிக்கமுடியாதெனவும் அவர்

களுக்குத் திருப்தியாகும்படி காட்டினார். அப்பரீக்ஷையினால் அவ்விஷயம் விளக்கமாய்விட்டது. அர்த்தமற்ற இந்தப் பிராமண சந்தர்ப்பணையிற் பணத்தை வீணே செலவழிப் பானேன்?" என்று தனநந்தன் வினவினான். மறுநாள் முதற்கொண்டு பிராமண சந்தர்ப்பணை நின்று போயிற்று. பிராமணர்களெல்லாருக்கும் அதிருப்தி உண்டாயிற்று. அவர்களில் ஒவ்வொருவனும் அதிருப்தியை வளர்த்து நந்தர்களைக் கவிழ்க்க ஆவல் கொண்ட எரிமலையா யினான். ஜீவஸித்திக்கு உள்ளூற மகிழ்வு மிகுந்தது. "தீ மூண்டுவிட்டது; துராக்கிரமிகளான இந்த நந்தர்களின் வமிசமெனும் வனம் முழுதும் எரிந்து சாம்பலும் கரியுமாய்க் குவிவது நாட்கணக்கிலே இருக்கின்றது" என்று அவன் சாணக்கியருக்கு எழுதினான்.

பிராமண போஜனம் நின்றுபோனதனால் போஜன சாலை பராமரிப்புக்காரர் வேண்டிய ஆவசியகம் இல்லாதா யிற்று. "சிறு சம்பளமுள்ள நிர்வாக அதிகாரி ஒருவன் அவ் விடத்திற்குப் போதும்" என்றான் தனநந்தன். ஆனதனால், சந்திரகுப்தன் பட்டாளத்திலிருந்த படைப்பகுதித்தலைமை உத்தியோகத்திற்குத் திரும்பிப்போகவேண்டியதாயிற்று. போஜனசாலையின்மேல் விசாரணாதிகார ஸ்தானமே ஒழிந்து போயிற்று. ஆனால், அவன் பிராமணர்களுக்கும் அந்நகரத் தில் அதிருப்திப்பட்டுக்கொண்டிருந்த மற்றவர்களுக்கும் மிகப் பிரியமானவன். இதுவல்லாமல், சைனியத்தில் உள்ள வர்களெல்லாரும் அவனைத் தெய்வமாகக் கொண்டாடத் தலைப்பட்டார்கள். அவன் சென்றவிடமெல்லாம் சிறப்பும் களிப்பும் கரகோஷமும் வரவேற்புமாயிருந்தது. நந்தர்கள் போனாலோ கடும்பகையினால் மூஞ்சிமேல் அடிப்பது போன்று மௌனமாக ஜனங்கள் இருந்தார்கள்.

நந்தர்களுக்கு இது பிடிக்கவில்லை. ஆகையால், பாடலீபுரத்துக்கு ஜீவஸித்தி வந்த பிறகு நான்கு மாதங்கள் கழிந்தவுடனே, சந்திரகுப்தனை என்ன செய்யலாமென்று ஒருநாள் நடுநிசியில் நந்தர்களும் ராக்ஷஸனும் இரகசியமாகக் கூடி ஆலோசித்தார்கள். சந்திரகுப்தன் நகரத்திற்குள் ஒரு வீட்டில் இருந்தானல்லவா? சந்திரகுப்தனை ஆதரிக்கிறவர்கள் ஊரில் அதிகமாய் இருப்பதனால், அவனைக் கொன்றால் ஜனங்கள் கலகம் விளைவிப்பார்களாகலின் அவனை நாட்டை விட்டு ஆயுள் பரியந்தம் துரத்திவிட வேண்டுமென்று ஜீவஸித்தி சொன்னான்.

அப்போது ராக்ஷஸன், "அது சரியன்று. இவ்விஷயத்தில் நான் உமக்கு மாறாக அபிப்பிராயப் படவேண்டியிருக்கிறது. நாகப்பாம்பை வைத்து ஆராதித்தால் ஆராதிக்கவேண்டும், அப்படியில்லையென்றால் கொன்றுவிட வேண்டும். இப்படியும் இல்லை, அப்படியும் இல்லை, நடுத்தரமாக நடப்போமென்றால், ஆபத்தே விளையும். அவனைத் தேசப்பிரஷ்டனாக்கினால், அவன் சாணக்கியரோடு சேர்ந்து உபபலம் திரட்டிக்கொண்டு ராஜ்யத்திற்கு ஆபத்து விளைப்பான். நாளைக் காலையில் அவனைத் திடீரெனப் பிடித்து, விசாரணை செய்வதுபோலச் செய்து, பெரிய ராஜத்துரோகக் குற்றம் சுமத்தி மரணதண்டனை விதித்து, பகிரங்கமான சிரச்சேதத் தலத்திலில்லாமல் அரண்மனையிலுள்ள இருட்டுக் கிடங்கிலேயே அந்தத் தண்டனையை உடனே நிறைவேற்றிவிடுவோம். முன்னால் அவனுக்கு நாம் வாக்களித்திருப்பதனால் அந்த வார்த்தையைக் காப்பாற்றும் பொருட்டு, பேருக்காவது ஒரு விசாரணை செய்யவேண்டும். அவன் இறந்தபிறகு, அவனுக்குச் சாதகமாயுள்ளவர்கள் செய்யுங்கலகத்தைக் காட்டிலும், அவனை உயிரோடு விட்

டால் பெருங்கலகமாகிய ஆபத்து நேரும். அவன் உயிரோடிருந்தால் அதிருப்தியடைந்துள்ளவர்கள் எல்லாரும் அவனைச் சார்ந்து சூழ்ந்துகொள்வார்கள். இந்து தர்மத்தின் நண்பனென்றும், மாந்தாதா, பிம்பிஸாரன், அஜாதசத்துரு ஆகிய இவர்களுடைய நிஜமான சந்ததியிற் பிறந்தவன் அவனே யென்றும் புகழ்ந்து பேசிப் பிராமணர் அவனுக்கு ஆதரவு அதிகமாகும்படி ஜனங்களைக் கிளப்பிவிடுவர். மேற்சொல்லிய மூதாதைகளுள் அஜாதசத்துருவுக் கிருந்த அங்க அடையாளங்களெல்லாம் சந்திரகுப்தனுக்கு அமைந்திருக்கின்றனவென்றும் அவனைப் பாராட்டுவார்கள். அவன் இறந்துபோனால், குறை கூறுகிறவர்களுள் அவனுக்குள்ள போர்த்திறமையோடு தலைமை வகித்து நடத்தக்கூடியவர் வேறு எவரும் இருக்கமாட்டாராதலின், அவர்கள் வேறு வழியில்லாமல் வாயை மூடிக்கொண்டு அடங்கிக் கிடக்கவேண்டியவர்க ளாவார்கள்" என்று சொன்னான்.

"நல்ல ஆலோசனை, திறமான யுக்தி! நான் சொல்லிய உபாயம் அவ்வளவு சரியானதல்லவென்று நான் தாராளமாக ஒப்புக்கொள்கிறேன். ஆதலின், முன்சொன்ன வார்த்தையை ரத்துசெய்து நான் பின்வாங்குகிறேன். ராக்ஷஸர் சொல்லியவண்ணம் செய்வதே எனக்குச் சம்மதம்" என்றான் ஜீவஸித்தி. மற்றவர்களெல்லாரும் ஒப்புக்கொண்டார்கள். அருணோதயத்தில் சந்தடி செய்யாமல் சந்திரகுப்தனைப் பிடித்துச் சிறைப்படுத்தி, உடனே சபா மண்டபத்திற்குக் கொண்டுவரும்படி **பத்தசாலன்** என்பவனுக்குக் கட்டளையிட்டார்கள். மந்திராலோசனைச் சபையினர் எல்லாரும் அச்சமயம் வந்திருக்கும்படி கட்டளையிடப்பட்டது. பிறகு இந்த மந்தண ஸபை கலைந்தது.

---

அத்தியாயம் 6

## ஓடிப் போனுன்!

குளிர்மிகுந்த மார்கழிமாதத்தில் ஒருநாள் பொழுது விடியுமுன் மூன்றுமணிநேரத்தில் சந்திரகுப்தனுடைய வீட்டுவாசற்கதவை ஒருவன் மெதுவாகத் தட்டினான். அதற்கு முன்னரே சந்திரகுப்தன் விழித்தெழுந்து, தன் சாமான்களை மூட்டை கட்டிக்கொண்டிருந்தான். அவன் போய்க் கதவைத் திறந்தபோது சாணக்கியனுடைய வேலாளான ஸித்தார்த்தகன் வண்டிக்காரனைப்போல ஆடை யுடுத்துவெளியே காத்துக்கொண்டிருந்தான். "தாங்கள் உடனே புறப்படவேண்டும். ஜவுளிசாமான் வண்டியொன்று காத்திருக்கிறது. நான் வண்டிக்காரனுயிருப்பேன். வண்டிப்பணியாளாகத் தாங்கள் வேஷம்போட்டுக் கொள்ளுங்கள். தாமதிக்கலாகாது. நாம் வர்த்தமானபுரத்துக்கு ஓடிப்போகவேண்டும். மிகுந்த சாமர்த்தியம் காட்டவேண்டும். தாங்கள் இன்னுரென்று கண்டுபிடிக்கமுடியாதபடி நன்றாக வேஷம் போடவேண்டும்" என்றான் ஸித்தார்த்தகன். பத்து நிமிஷத்தில் ஸித்தமாய்விடுகிறேனென்று சந்திரகுப்தன் பதில் சொன்னான். "மந்திராலோசனை ஸபையார் என்ன தீர்மானம் செய்திருக்கிறார்களென்று தங்களுக்கு ஏற்கெனவே தெரியுமே!" என்று ஸித்தார்த்தகன் ஆச்சரியத்தோடு சொன்னபோது, சந்திரகுப்தன் மறுமொழி கூருமல் புன்னகை பூத்தான். பிறகு ஸித்தார்த்தகனைப் பார்த்து, "உனக்குக் கவலைமிகுதியாய்

இருக்கிறதா? மனத்தில் படபடப்பு உண்டாயிருக்கிறதா?" என வினவினான்.

அதற்கு அந்த வேவாள், "எப்போதும் ஆபத்தில் இருப்பதே எங்களுக்கு வழக்கம். ஆதலால், எங்களுக்குக் கவலையும் இல்லை, பரபரப்பும் இல்லை. சத்துருவின் தலைமாட்டினும் சிறந்த தஞ்சம் வேறு இல்லையென்று எங்களுக்குத் தெரியும்" என்றான். சந்திரகுப்தன் மறுபடி புன்னகை பூத்தான். உள்ளேபோய், பத்துநிமிஷத்திற்குள் வித்தமாக வந்துவிட்டான். வண்டியிலுள்ள துணிமூட்டைகளின் காவலனாக அவன் அணிந்திருந்த வேஷம் அவன் இயல்புக்கு மிகவும் ஒத்திருந்தது. அதைப் பார்த்து வித்தார்த்தகனும் வியப்புற்றான்.

"எங்களைப்போலவே தாங்களும் எந்த வேஷம் வேண்டுமானாலும், போடக்கூடியவராயிருக்கிறீர்கள்" என்று அவன் சொன்னபோது, "ஏன் அப்படி ஆகக்கூடாது?" என்று சந்திரகுப்தன் வினவினான். வண்டியிலேற்றிப் பொற்பணமாகவும் இரத்தினங்களாகவும் திரட்டிவைத்திருந்த பொக்கிஷத்தை யெல்லாம் ஒரு துணி மூட்டைக்குள் வைத்துவிட்டு, மூட்டைகளின்மீது உட்கார்ந்து, வேவாள் கொடுத்த சாமான் பட்டியைப் பார்த்துப் படித்துக்கொண்டான். பின்பு, வர்த்தமானபுரத்தை நோக்கி வண்டி செல்லலாயிற்று.

கோட்டையின் தென்கிழக்கு வாசலில் காவற்காரர்கள் மூட்டைகளின்மீதுள்ள முத்திரைகளை முறைப்படி சோதித்துப் பார்த்து வண்டியை வெளியே போகவிட்டார்கள். அது தன் வழியே போகத் தொடங்கியது. ஐந்து மைல் தூரம் கிட்டமுட்டப் போய்க்கொண்டிருந்தபோது குதிரை

வீரர்கள் விரைந்தோடிப் பின்னால் வரும் சத்தம்கேட்டது. அப்போது அருணோதய சமயம். சந்திரகுப்தன் திரும்பிப் பார்க்கையில் ஆயுதபாணிகளாகப் பத்துக் குதிரைவீரர்கள் வந்துகொண்டிருந்தார்கள். இந்த வண்டியினண்டை வந்தபோது, அவ்வாட்களின் நாயகன் தன் குதிரையை இழுத்துப் பிடித்துக்கொண்டு, "வண்டிக்காரா, பட்டணத்துக்குள்ளிருந்து எவராவது குதிரைமீது வரக்கண்டாயா?" என வினவினான். "யஜமானே, நான் காணவில்லை" என்று வித்தார்த்தகன் பதில் சொன்னான். அவ்வாட்களின் தலைவன் மறுபடி, "அப்படி ஒருவரையும் பார்க்கவில்லையென்று கோட்டைவாயிலினுள்ளவர்களும் சொன்னார்கள். ராஜகுமாரனை சந்திரகுப்தனைத் தேடிக்கொண்டு நாங்கள் புறப்பட்டிருக்கிறோம். அவனைப் பிடிப்பதற்குரிய உளவு சொல்பவர்களுக்குப் பதினாயிரம் பொற்பணம் பரிசளிப்பதாகத் தண்டோராப் போட்டிருக்கிறார்கள்" என்று சொன்னான். அதற்கு வண்டிக்காரன், "அந்த ராஜகுமாரனை நான் பார்த்ததில்லை, யஜமானே! ஆகையால், அவரோ வேறு எவரோ என்று எனக்குச் சொல்லத்தெரியவில்லை; ஆனால், தென்கீழ்க் கோட்டைவாசலுக்கு வெளிப்புறத்தில் தென்கீழ்த்திசையின் அதிதேவதையாகிய அக்கினிதேவர் ஆலயத்தண்டை யௌவன புருஷனொருவன் குதிரையேறி வர்த்தமானபுரத்தை நோக்கி விரைவாகப் போனதைப் பார்த்தேன்" என்றான்.

"ஆ! இது எத்தனை நாழிகைக்குமுன்?"

"யஜமானே, ஏறக்குறைய இரண்டு மணிநேரத்திற்கு முன் இருக்கலாம். ஆனால், இதற்குள்ளாக நெடுந்தூரம் போயிருப்பானே. மாட்டுவண்டிகள் எவ்வளவு மெதுவாக நடக்குமென்று யஜமானருக்குத் தெரிந்தேயிருக்கிறது."

"நல்லது, உனக்கு வந்தனம். இனி நாங்கள் தாமதிக்காமல் போகவேண்டும்" என்று குதிரைத் தலைவன் சொன்னான். குதிரை வீரர்களெல்லாரும் தடதடவெனக் குதிரையை விட்டுக்கொண்டு போனார்கள். பெருந்தூசிப்படலம் எழுந்தது. தன் வண்டியை ஓட்டிக்கொண்டு போகையில், "சத்துருவின் தலைமாட்டினும் சிறந்த தஞ்சம் வேறு இல்லை" என்று ஸித்தார்த்தகன் கிருகிருத்தான்.

பதினைந்து மைல்களுக்கப்பால் அந்தக் குதிரைப் படையாட்கள் ஒரு சாவடியினண்டையிலுள்ள மரத்தடியில் இளைப்பாறிக்கொண்டிருக்கக் கண்டார்கள். அவர்கள் குதிரைகளை மேயவிட்டிருந்தார்கள். ஸித்தார்த்தகனும் தன் வண்டியை அங்கே அவிழ்த்துவிட்டு, மாடுகளுக்குத் தண்ணீர் காட்டினான். அந்தப் படைத்தலைவனைப் பார்த்து "அவனைக் கண்டீர்களோ? என்று வினவினான்.

"அவன் ஜாடையே தெரியவில்லை. அது போகட்டுமென்றாலும், இந்தக் கோபன் (ஒரு கிராம வட்டத்துப் பரிபாலனாதிகாரி) விடியற்காலையிலிருந்து இங்கேயே இருக்கிறேனென்றும், குதிரைமீது எவனும் இவ்வழிச் செல்லவில்லையென்றும் சொல்லுகிறானே" என்று அந்தத் தலைவன் சொன்னான்.

"அந்த ராஜகுமாரன் மிக்க தந்திரசாலியெனச் சொல்லுகிறார்கள். கோட்டைவாசலின் வழியாகக் குதிரையேறி வருவதை விட்டு அவன் ஆள் நடமாட்டமில்லாத இடத்திலுள்ள அந்தக் கோவிலினண்டைபோய்க் குதிரையேறியதனாலேயே அது தெரிகிறது. சிறிது தூரத்திலிருந்தே இந்தக் கோபன் இங்கிருப்பதைப் பார்த்து அவன் குதிரையை விட்டிறங்கி, வயற்காட்டின் வழியே குறுக்குப்பாதையாய்ப் போயிருக்கவேண்டும். நமது நாட்டுக் கிராமாதிகாரி

களின் சாமர்த்தியமும் ராஜபக்தியும் பிரஸித்தமல்லவா?" என்று ஸித்தார்த்தகன் மறுமொழி கூறினன். உற்சாகத்தினல் கோபன் மிளிர்ந்தான்; "ஆம். அப்படித்தான் நடந்திருக்கவேண்டும்" என்று அழுத்திச் சொன்னன்.

அப்போது குதிரைத்தலைவன், "ஆனல், நாங்கள் இங்கே வருகிறவரையில் அவனைத் தேடிவருகிறேமென்று உனக்குத் தெரியாதே. ஆகையால், நீ அவனைத் தடுத்து நிறுத்தி யிருக்கமாட்டாய். அவன் ஏன் உன்னைக் கண்டு ஒளிந்து ஓடவேண்டும்?" என வினவினன். அதற்கு மறுமொழி கூறமாட்டாமல் கோபன் விழித்தான்.

"இதற்குக் காரணம் வெட்டவெளிச்சம். சந்திரகுப்தனே பெரிய மனிதன். அவனுடைய நிலைமையோ அவனுக்குத் தெரியும்? கோபனே சாமர்த்தியம் மிகுந்தவன்; ஜனங்களால் கொண்டாடப் படுகிறவன்; செல்வாக்கு உள்ளவன். தன்னைப்பற்றிப் புகார் கிளம்பியவுடன், இந்தக் கோபன் தன் ஆட்களைத் திரட்டிக்கொண்டு தான் போனவழியிற் சென்று தன்னைப் பிடிக்கக்கூடியவன் என்று அஞ்சியே சந்திரகுப்தன் அவ்வாறு செய்திருப்பான்" என்று ஸித்தார்த்தகன் கோபனுக்காகப் பதில்சொன்னன்.

"அதுதான் சரி" என்று கோபன் சொல்லிக் களித்தான்.

அப்போது குதிரைத் தலைவன், "அடே, எத்தனையோ வண்டிக்காரர்களைப் பார்த்திருக்கிறேன். அவர்களெல்லாரைக்காட்டிலும் நீ வெகு புத்திசாலியாயிருக்கிருய். அது எப்படியிருப்பினும், பக்ஷி பறந்துபோய்விட்டது" என்றன்.

"அது ஓடிப்போனல்தான் என்ன அது போயிற்றென்று நீங்கள் அதை விட்டுவிடப் போகிறதில்லையே?" என ஸித்தார்த்தகன் வினவினன்.

"ஒருநாளும் விடப்போகிறதில்லை. எங்களைப் போன்ற படைப்பகுதிகள் எட்டு ராஜபாட்டைகளுக்கும் அனுப்பப்பட்டிருக்கின்றன. இந்த ராஜ்யத்தின் எல்லை வரையிலுள்ள கிராமம் ஒவ்வொன்றுக்கும் போய், அந்த ராஜகுமாரன்மீது கண்வைத்து அவனைப் பிடிக்கவேண்டுமென்று எல்லா அதிகாரிகளையும் எச்சரித்து வரும்படியாக எங்களுக்கு உத்தரவு. பரிசு பெறுவோமென்னும் ஆசையினால் இன்னும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் அவன்மீது கண்வைத்துத் தேடிக்கொண்டிருப்பார்கள்" என்று அந்தப் படைவீரன் சொன்னான்.

"ஏன்? என்ன சங்கதி? சந்திரகுப்தன் இப்பொழுது என்ன குற்றம் செய்தான்?" என வண்டிக்காரன் வினவ, "விவரம் எங்களுக்குத் தெரியாது. ஆனால், நம் அரசனையும் இளவரசர்களையும் கொல்வதற்கு அந்தக் குரங்கு மூஞ்சிப் பார்ப்பான் சாணக்கியன் ஏதோ கோரமான அபிசாரப் பிரயோகம் செய்துகொண்டிருக்கிறானென்று நினைக்கிறார்கள். அன்றியும், நம் அரசனை எதிர்த்துப் போர்புரிவதற்காகச் சுற்றுப்புறத்துத் தேசாதிபதிகள் சிலரையும் காட்டாள்களையும் மலைவாசிகளையும் சேர்த்துத் திரட்டுவதற்கு என்னென்னவோ பிரயத்தனப் படுகிறானென்றும் சொல்லிக்கொள்கிறார்கள். சந்திரகுப்தனுக்கு ராஜபட்டம் கட்டவேண்டுமென்று அவன் இவ்வளவு பாடுபடுவதாகத் தெரிகிறது" என்று அந்தத் தலைவன் சொன்னான்.

"பூ! அது சாத்தியமே இல்லையென்று தோன்றுகிறது. நம் ராஜகுமாரர்கள் எத்தனை நல்லவர்கள்! நம் பிரதான மந்திரி ஸுபுத்திசர்மன் எவ்வளவு சாமர்த்தியசாலி!" என்றான் ஸித்தார்த்தகன்.

அதற்கு அந்தப் படைத் தலைவன், "ஆம், நீ சொல்லுகிறது சரியே. ஆனால், அது ஒரு பக்ஷம்: அதைவிட்டு அந்தச் சாணக்கியன் பார்ப்பதுபோலப் பார்: 'மகாராஜா மகாநந்தியைப் பட்டத்தினின்றும் நீக்குவதற்கு எத்தனை நேரம் ஆயிற்று?' என்று சாணக்கியன் ஒருவனைக் கேட்டானாம்" என்றான்.

"ஆனால், அவ்வளவு கஷ்டமான பெரிய காரியத்தைச் சாணக்கியன் சாதிப்பானென்று யஜமானருக்குத் தோன்றுகின்றதா?" என்று ஸித்தார்த்தகன் வினவவே, படைத்தலைவன், "நான் அப்படி நினைக்கவே இல்லை. அவனுடைய மலைநாட்டு நண்பர்களுக்கு நான் சிறிதும் அஞ்சவில்லை. அவன் இருந்தாற்போலிருந்து நமது கண்ணுக்குத் தெரியாமல் மறைந்துபோவானென்று சொல்லுகிறார்களே. அதுதான் என் மனத்தைக் கொஞ்சம் கலக்குகின்றது. எனக்கு வேண்டியபோது கண்ணுக்குப் படாமல் மறையக் கூடியவனோடு எப்படிச் சண்டை செய்கிறது?" என்று சொன்னான்.

"அப்படியானால், சாணக்கியனுக்கு மாயாசக்தி உண்டென்று நம்புகிறீரா?" என்று ஸித்தார்த்தகன் கேட்டதற்குக் குதிரைத்தலைவன், "எனக்குத் தெரியாது. அவனுக்கு மறையும் சக்தி உண்டென்று ஜனங்கள் சொல்லுகிறார்கள். சத்துரு கண்ணுக்குத் தெரிந்தால் அவனோடு நான் சண்டை போடுவேன். இந்த மறைப்புமைக்கும் பில்லி சூனியங்களுக்கும் நான் என்ன செய்வேன்! அவை எனக்கு மிஞ்சினவைகளாக இருக்கின்றனவே!" என்று சொன்னான். அதற்கு வண்டிக்காரன், "ஆனால், அவன் மறைந்துபோகக்கூடுமாயினும், இந்த ராஜகுமாரனை மறைக்க முடியுமென்று உங்களுக்குத் தோன்றவில்லையல்லவா?" என வினவினான்.

"ஆ! அதுவும் சாத்தியமாகும் என்பதை நான் மறந்து விட்டேன்" என்றான் படைத்தலைவன். அப்போது கோபன், "ஆனால், குதிரையை என்ன செய்வதற்காகும்?" எனக் கேட்டான். "நிச்சயமாக, மனிதனை மறைக்கத்தக்க மை வைத்திருப்பவன் அந்த மையினால் குதிரையையும் மறைக்கக்கூடும்" என்றான் ஸித்தார்த்தகன்.

"நீ மிகவும் கெட்டிக்காரனாயிருக்கிறாயே. பெரும்பாலும் எப்போதுமே நான் இந்தச் சாவடியில் உட்கார்ந்திருக்கிறேன். ஆனபோதிலும், நீ இதற்கு முன்னால் இந்த வழி வரக்காணவில்லையே. வண்டியில் என்ன வைத்திருக்கிறாய்? ஜவுளிமூட்டையா? நல்லது; நான் கொஞ்சம் துணிவாங்க வேண்டுமென்றிருந்தேன். மதுரைத் துப்பட்டாக்கள் இருக்கின்றனவா?" என்று கோபன் ஸித்தார்த்தகனைப் பார்த்துக் கேட்டான்.

அதற்கு அவன், "ஆம். மதுரைவஸ்திரங்கள் இருக்கின்றன" என்று சொல்லிக்கொண்டே ஒரு மூட்டையை அவிழ்த்து, நேர்த்தியான துப்பட்டா ஒன்றை எடுத்து அதைத் தன் ஞாபகக்குறியாக அவனுக்குக் கொடுத்தான்.

அப்போது, "எனக்கும் ஒன்று கொடு" என்று படைத்தலைவன் கேட்டான். மிக உயர்ந்த தினுசு வஸ்திரமொன்றை எடுத்துச் சந்திரகுப்தன் அவனுக்குக் கொடுத்தான். படைத்தலைவனுக்கு மிக்க சந்தோஷமாயிற்று. அப்போது அவன் ஸித்தார்த்தகனைப் பார்த்து, "உன்னைக் காட்டிலும் உன் வேலைக்காரன் மிகத் தயையுள்ளவனாயிருக்கிறானே. இதோ பார், எவ்வளவு பெரிய துப்பட்டா! எவ்வளவு நன்றாயிருக்கிறது!" என்று சொன்னான்.

அதற்கு ஸித்தார்த்தகன், "கோபனைக்காட்டிலும் நீங்கள் பெரிய மனிதரானமையின் உங்களுக்கு அதைக்

காட்டிலும் சிறந்த வஸ்திரம் கொடுத்தான்" என்று பதில் சொன்னான்.

இதற்குள்ளாக மாடுகள் வயிறு நிரம்ப நீர்குடித்து வைக்கோலும் தின்றுவிட்டன. கோபனிடத்தும் படைத் தலைவனிடத்தும் விடைபெற்று வஸித்தார்த்தகன் தன் வண்டியை ஓட்டிக்கொண்டு போனான். ஒரு நாழிகை தூரம் போன பின்பு, சந்திரகுப்தனைப் பார்த்து, "ராஜகுமாரர்களுக்கு அற்பத்தனமே வராது. ஏதாவது ஒருவருக்குக் கொடுப்பதானால் அது பெருங்கொடையாக இருக்குமேயல்லாமல், சிறியது கொடுக்க அவர்களுக்குத் தெரியாது" என்று சொன்னான்.

அந்த வார்த்தையைக் கேட்டுச் சந்திரகுப்தன் நகைத்து, "சாணக்கியர் எப்படி?" எனக் கேட்டான்.

அதற்கு வஸித்தார்த்தகன், "கொடைவிஷயத்தில், மகா பூஜ்யரான சாணக்கியரை மிஞ்சினவர் வேறு எவருமில்லை. அவர் அவ்வளவு தயையுள்ளவர். அவர் தமக்கென வைத்துக் கொள்வதையும் பிறருக்கு நன்கொடையாகக் கொடுப்பதையும் கணக்கிட்டுத் தாரதம்மியம் பார்த்தால், அவர் கோடைக்கோன் ஆவர். ஏனெனில், அவர் தமக்கென ஒன்றும் வைத்துக்கொள்வதில்லை. எல்லாவற்றையும் எங்களுக்குக் கொடுத்துவிடுவார்" என்று பதில் சொன்னான்.

அப்படிப்பட்ட வேலையாளான வேவுகாரன் தன்னை அறியாமல் மனம் பொங்கி அவரைப் புகழ்ந்ததைக் கேட்டுச் சந்திரகுப்தன் மிகவும் திருப்தியடைந்தான். "மற்ற விஷயங்களில் எப்படி?" என மேலும் வினவினான்.

"கடல்நீரை ஓர் ஆழாக்கைக்கொண்டு அளக்கினும் அளக்கலாம்; ஹிமாலயபர்வதத்தின் உயரத்தைக் கையால்

முழம்போட்டு அளந்து சொல்லினும் சொல்லாம். அவரை அளந்து சொல்வது முடியாத காரியம். அவர் அவ்வளவு பெரியவர். அவருடைய ஆழம் எவ்வளவென்று கண்டு பிடிக்க முடியாது. அவர் என்ன செய்வார், அல்லது, எதற்காகச் செய்வார் என்று எவரும் சொல்லமுடியாது. ஆனால் தட்வாக்கினால் சொல்லிய வார்த்தையினின்றும் சாணக்கியர் ஒருபோதும் தவறமாட்டார். அன்றி, அடுத்தவரை ஒரு நாளும் கைவிடமாட்டார்" என்று ஸித்தார்த்தகன் பதில் சொன்னான்.

மறுநாள் பிற்பகலில் ஸித்தார்த்தகனும் சந்திரகுப்தனும் சாலையோரத்தில் தனித்துநின்ற சத்திரத்தின் கிணற்றினண்டை இருந்தார்கள். அப்போது, விராதகுப்தன் என்பவனைக் கண்டார்கள். அவன் ராக்ஷஸனுடைய ஒற்றனென்பது எல்லாருக்கும் தெரியும். அவனுக்குச் சந்திரகுப்தனையும் தெரியும். அவன் தன் வண்டியை விட்டு இறங்கி அதே கிணற்றை நோக்கி வந்தான். உடனே சந்திரகுப்தன் கிணற்றினண்டை இருந்த ஓர் ஆலமரத்துப் பொந்துக்குள் நுழைந்து அங்கே மறைந்து நின்றான். கிணற்றினண்டை வந்து ஸித்தார்த்தகனைப் பார்த்து விராதகுப்தன் தனக்குக் கொஞ்சம் தண்ணீர் கொடுக்கும்படி கேட்டான். அவனுக்குத் தண்ணீர் கொடுத்துவிட்டு ஸித்தார்த்தகன், "யஜமானர் எவ்விடத்திலிருந்து வந்து கொண்டிருக்கிறாரோ?" எனக் கேட்டான்.

"சந்திரகுப்தனைத் தேடி வர்த்தமானபுரத்துக்குப் போய் அவ்விடத்தில் எங்கும் காணாமல் வீணே அலைந்து திரிந்து வந்துகொண்டிருக்கிறேன். வண்டிக்காரா! இந்த வயிற்றெரிச்சலைக் கேள். பெரியமனிதர்கள் செய்கிற தப்புகளை நாம் திருத்த வேண்டியிருக்கிறது. முதன் முதலிலே,

சாணக்கியன் என்னும் அந்தப் பேய்போன்ற பார்ப்பானை ஒன்றும் செய்யாமல் விட்டுவிட்டார்கள். இப்போது சந்திர குப்தனையும் நழுவி ஓட விட்டுவிட்டார்கள். அவர்களில் ஒவ்வொருவரும் தனித்தனியே பிரமாதம் விளைக்கக் கூடிய வர்கள். அவர்களைத் தனியாக எதிர்ப்பதே பெருங்கஷ்டம். அவர்கள் இருவரும் சேர்ந்துவிட்டால் பஞ்சமும் கொள்ளை நோயும் சேர்ந்ததுபோலாகும்" என்று அவ் வொற்றன் சொன்னான்.

"அந்தப் பாவி சாணக்கியன் இப்போது எங்கே இருக்கிறான், ஐயா?" என்று ஸித்தார்த்தகன் கேட்டான்.

"என்னைக் கேட்காதே! எனக்கு என்ன தெரியும்? அவன் மகா தந்திரசாலி. இதே சத்திரத்தில் இருந்தாலும் இருக்கலாம். அப்படியிருந்தாலும் ஒருவருக்கும் தெரியாது" என்றான் ஒற்றன்.

"அவன்தான் அப்படியென்று சொல்கிறீர் ஐயா; சந்திரகுப்தனை?"

"ஓ! அது ஒரு பெரிய காரியமன்று. ஒரு நூறு மைல் சுற்றளவுக்குள் எங்கேயிருந்தாலும் அவனை நான் பிடித்துவிடுவேன். இனி நான் அவசரமாகப் போகவேண்டும். வண்டி இங்கே காத்துக்கொண்டிருக்கிறது. ராக்ஷஸன் பாடலீபுரத்திற் காத்துக்கொண்டிருக்கிறான்."

பிறகு அவன் தன் தாகத்தைத் தணித்துக்கொண்டு சாலைக்குப் போய் வண்டியேறி, அதை விட்டுக்கொண்டு போனான். ஆலமரப்பொந்திலிருந்து வெளியே வரும்போது சந்திரகுப்தன், "சத்துருவின் தலைமாட்டினும் சிறந்த தஞ்சம் வேறு இல்லை, கெக்கே. ஆனல், அதில் காற்றோட்டம் இல்லை, புழுக்கம் அதிகமாய் இருந்தது. அடித்துப்போட்

டாற்போலிருந்தது" என்று ஸித்தார்த்தகனைப் பார்த்துச் சொன்னான்.

"ஆலமரப் பொந்துகள் ராஜகுமாரர்களின் வாஸத்துக்காக அமைக்கப்படவில்லையே?" என்று ஸித்தார்த்தகன் பதில் சொன்னான்.

நான்கு நாட்கள் இரவும் பகலும் பிரயாணம் செய்த பின், அவர்கள் மாலை நேரத்திலே வர்த்தமானபுரம் சேர்ந்து சாணக்கியர் இருந்த வர்த்தகனுடைய வீட்டுக்குப் போனார்கள். தனியாயிருக்கையில், சந்திரகுப்தனை அன்போடு கட்டித் தழுவிக்கொண்டு, "மறுநாட்காலையில் உம்மைத் திடீரெனப் பிடித்துப் போலி விசாரணையொன்று நடத்தி, பெரிய ராஜத்துரோகத்திற்காக உம் தலையை வெட்டி விடுவதென நடுநிசியில் நடந்த மந்திராலோசனைச் சபைத் தீர்மானத்தை நீர் கேட்டே யிருப்பீர்; ஆதலினால் இவ்வளவு அவசரப்படவேண்டியதாயிற்று. உம்மை இவ்வளவு சிரமப்படுத்தவும் வேண்டியதாயிற்று" என்று சாணக்கியர் சொன்னார்.

"ஆம், ஸித்தார்த்தகன் வருமுன்னரே ஜீவஸித்தி எனக்குச் செய்தி சொல்லியனுப்பிவிட்டார். ஆபத்தான பிரயத்தனமொன்றை மேற்கொண்டவன் எப்படிப்பட்ட சிரமத்திற்கும் பிரதிகூலத்திற்கும் உட்படல்வேண்டும். உணவுப்பொருள் விளைவிக்கவேண்டுமானால், முதலில் நிலத்திற்கு நீர்பாய்ச்சிச் செழுக்கவேண்டும். அதற்கு வழி அதுவொன்றே" என்றான் சந்திரகுப்தன்.

அப்போது சாணக்கியர், "நன்றாய்ச் சொன்னீர். இப்போது போய் நீராடிப் பசிதணிய ஏதேனும் கொஞ்சம் உண்ணும். பிறகு பேசிக்கொள்வோம்" என்று பதில் மொழிந்தார்.

---

## அத்தியாயம் 7
## மௌரியன் சரித்திரம்

ஸ்ளாதீரக் குளித்துச் சந்திரகுப்தன் சம்பிரமமான போஜனம் அருந்தியதனால், நெடும்பிரயாணத்தால் உண்டான இளைப்பும் அசதியும் நீங்கின. அன்னம் உண்டபின், சாணக்கியராண்டை போனான். அவர் அப்போது ஸாஸ சித்தராயிருந்தார். அவர் சந்திரகுப்தனைப் பார்த்து, "பார்த்தீரா? நந்தர்களுடைய இரகசியங்கள் இப்படித்தான் பாதுகாக்கப்படுகின்றன! அவை எப்படிப் பொசிந்து வெளிப்படுகின்றன பாரும்!" என்றார்.

"பொசியும் பெரும்பானையாகிய ஜீவஸித்தியின் மூலமாகவே. அதுவும் தங்களாலேயே. நந்தர்களுடைய மந்திரிகளுக்கும் தங்களுக்கும் உள்ள வித்தியாசம் மலைக்கும் மடுவுக்கும் உள்ளதுபோன்றது. 'கருங்கற்கள் மட்பாண்டங்களை உடைக்கும், மட்பாண்டங்கள் கருங்கல்லை உடைப்பதில்லை' என்று என் பாட்டனாரான மௌரியர் சொல்வதுண்டு" என்று சந்திரகுப்தன் சொன்னான். சாணக்கியர் புன்னகையுடன், "அது சரியான வார்த்தையே. ஆ, எனக்கு இப்போது ஞாபகம் வந்தது. அந்த மகாமௌரியருடைய கதையைச் சொல்லும்: அதைக் கேட்க விரும்புகிறேன்" என்றார்.

"நல்லது" என்று சொல்லிச் சந்திரகுப்தன் மௌரியனுடைய கதையைச் சொல்லத் தொடங்கினான்.

"தங்களுக்கு ஏற்கெனவே தெரிந்திருக்கிறபடி மௌரியர் என்பவர் மகாநந்திக்கு முரா என்னும் மனைவியின்

வயிற்றிற் பிறந்த பிள்ளை. அவள் பிப்லவனத்து மௌரியர்களின் அரசரது ஏகபுத்திரி. மகாநந்திக்குச் சுனந்தை என்னும் ஒரு தூய க்ஷத்திரிய குலத்து மனைவியும் உண்டு. அவளுக்கு இரண்டு பிள்ளைகளும் உண்டு. தன் இனத்தவர் பௌத்த மதத்தைத் தழுவியதனல், க்ஷத்திரியனொருவன் தன் குலாசாரங்களை விட்டபோது, சூத்திரனைக் கருதப்படுவான். அவன் இந்துமதத்தையே திரும்பத் தழுவின போது விராத க்ஷத்திரியன் எனப்படுவான். மௌரியர் விராதக்ஷத்திரியத் தாயின் வயிற்றிற் பிறந்தவரானமையின், ராஜபட்டத்திற்கு உரியரல்லரென்று கருதப்பட்டார். ஆனல், தௌர்ப்பாக்கியரான மகாநந்திக்கு மகாபத்மன் என்னும் ஒருவன்மீது மிக்க அபிமானம் உண்டு. அந்த மகாபத்மன் ஒரு க்ஷத்திரியனுக்கும் சூத்திரஸ்திரீக்கும் பிறந்தவன். அவனுடைய தந்தை, பிறவியில் க்ஷத்திரியனே யானபோதிலும், வறுமை வாய்ப்பட்டு, வயிறு வளர்ப்பதற்காக நாவிதத்தொழில் மேற்கொள்ளலானன். தந்தையைப்போல மகாபத்மனும் நாவிதத்தொழிலையே செய்துவந்தான். மற்ற நாவிதர்களைக்காட்டிலும், உயர் ஜாதிக்காரனானமையின், அரண்மனை அம்பட்டனைக் கொள்ளப்பட்டான். சில நாளில் அவன் மனவலியில்லாத மகாநந்தியின் தயவையும், அவன் ராணி சுனந்தையின் தயவையும் சம்பாதித்துக்கொண்டான். அவனுடைய பதவி அற்புதமாக உயர்ந்தது. சில வருஷங்களுக்குள் பிரதான மந்திரியும் சேனபதியும் ஆயினன். அடங்காமல் எதிர்த்துக்கொண்டிருந்த கலிங்கம் முதலான பிரதேசங்களை அடக்கி அதிகாரத்திற்குட்படுத்தியதனல், படைவீரர்களால் பெரிதும் கொண்டாடப்பெற்றன். ராணி சுனந்தை அவன்மீது மோகங்கொண்டாள். கனவிலும் கலங்க

முறுத அரசனை ஒழித்துவிடுவதற்கு அவள் அவனோடு சேர்ந்து சதிசெய்தாள். ஒருநாள் அரசனையும் ராஜ குமாரர்களிருவரையும் கொன்றுவிட்டுப் பிரபலமாயிருந்த மகாபத்மன் தானே அரசனெனப் பட்டங் கட்டிக்கொண் டான். அதற்கு முன்னரும் எல்லா வியவகாரங்களிலும் அவனே தலைவனாக இருந்தமையினாலும், போர்ப்படை முழுதும் அவனுக்குச் சாதகமாயிருந்தமையினாலும் அவனை எதிர்ப்பார் எவருமே இல்லை; ஊரில் கூக்குரலும் இல்லை. ஆனால், சகாதேவன் என்னும் மந்திரி யின் மகனான பிராமணன் ஒருவன்மாத்திரம் அவனுக்கு விரோதமாயிருந்தான். அந்தப் பிராமணனை மகாபத்மன் இரகசியமாகக் கொன்று, அரண்மனைக்குள்ளே புதைத்து விட்டான். மகுடாபிஷேகம் செய்துகொண்டபிறகு மகா பத்மன் வெளிப்படையாகச் சுனந்தையை மணம்புரிந்து அவளால் எட்டுப் பிள்ளைகளைப் பெற்றான். இப்போது அரசனாயிருக்கிற ஸுகல்பனும் அவன் தம்பிமார் எழு வருமே அந்தப் பிள்ளைகள்.

"மகாபத்மன் பல பராக்கிரமமுள்ளவன். உழைக்கும் ஊக்கமுள்ளவன். பலவீனமான மகாநந்தியின் ஆட்சிக் காலத்தில் கொள்ளைக்காரர்களும் திருடர்களும் துஷ்டர் களும் நாட்டில் அதிகமாய் இருந்தார்கள். அவன் அவர் களைக் கொடுங்கோலால் அடக்கியொழித்தான். பெரிய பிரபுக்களையும் ராஜகுடும்பத்தைச் சேர்ந்த எண்ணிறந்த உறவினர்களையும் ஒடுக்கினான். அவர்கள் கொடுமையாக ஜனங்களை மிக வருத்திக்கொண்டிருந்தார்கள். அபிநவ பார்க்கவ*ரைப்போல அவன் பாரதவர்ஷத்தின் வடபகுதி

---

* விஷ்ணுவின் ஆறும் அவதாரமாகிய பரசுராமர்.

யாகிய ஆரியாவர்த்தத்தின்மீதும் தென்னாட்டின் மீதும் படையெடுத்து, அநேக ராஜ குடும்பங்களை யழித்து, தேசம் முழுமையும் தன் வசமாக்கிக்கொண்டான். அவனுடைய ராஜ்யம் இமாலயம் முதல் குந்தலம் வரையிலும், யமுனை முதல் பிரம்மபுத்திரா வரையிலும் வியாபித்திருந்தது. குந்தலம் என்பது சோழராஜ்யத்திற்கு வடக்கேயுள்ளது. குருகோட்டுக்குத் தெற்கே இருக்கிற கல்யாணதுர்க்கம் அதன் தலைநகரமாயிருந்தது. (இந்தக் குந்தல தேசம் என்பது ஹைதராபாது ஸம்ஸ்தானத்தின் தென் மேற்குக் கோடியில் இருந்தது.) பிராமணர்களையும், வாருசி, வ்யாதி, வர்ஷர் என்பவர்களைப்போன்ற பெருங் கல்வியாளரையும் ஆதரித்து அவன் போஷித்தான்; நயநீதியைக் கருதி மற்ற மத சாகையினர்களின் விஷயத்திலும் இதமாக நடந்துகொண்டான். போர்ப்படையை நன்றாகப் பழக்கிப் பெருந்திறமையுள்ளதாகச் செய்தான். அவன்காலத்தில் வரிவகைகளெல்லாம் ஒழுங்காக வசூல் செய்யப்பட்டன. எங்கெங்கும் கால்வாய்கள் வெட்டுவித்தான். எடுத்தலளவைக்கும் முகத்தலளவைக்கும் புதிய அளவுகளைக் கற்பித்து வழங்கலானான். நாடு செழித்து ஐசுவரியம் பொங்கியது. எங்கும் சமாதானம் குடி கொண்டிருந்தது. அவனுடைய பிராபல்யம் பிரபுக்களையும் பெரிய மனிதர்களையும் உறுத்தியதேயல்லாமல், சாமானியர்களைப் பாதிக்கவில்லை. சாமானிய ஜனங்களெல்லாரும் அவனிடத்துப் பிரியமாகவே இருந்தார்கள்; ஆதியில் அவன் செய்த மகா பாதகங்களை நினைப்பதுமில்லை, நிந்திப்பதுமில்லை. அவரவரிடத்துள்ள யோக்கியதாம்சங்களைப் பகுத்தறிந்து பாராட்டினான்; அவைகளை வளர்க்கவும் உதவினான். அப்படி உதவுவதனால் தன்னுடைய காரியங்களுக்கு இடைஞ்சல் இல்லையென்று தெரிந்

தால் மாத்திரமே அப்படிச் செய்வான். முராவின் இளம் பிள்ளையாகிய மௌரியர் என்னும் என் பாட்டனருக்கு யுத்தத்தில் மேதையுளதெனக் கண்டு, அவரை அவ்வழியில் பழக்கி ஒரு படைப் பகுதிக்குத் தலைவராக்கினன். அவருடைய போர்த் திறமை அவர் வயதிற்கு மிஞ்சினதாகவும் கொண்டாடத் தக்கதாகவும் இருந்தது. இளம்பிராயத்திலேயே அவருடைய யோக்கியதையை உய்த்துணர்ந்து அவரை அவ்வாறு போர்த் தொழிலில் பழக்கிவந்தான். நாளடைவில் அவரையே உற்ற துணைவராகக் கொண்டான். அவர்களிருவரும் சேர்ந்து பெற்ற வெற்றிகள் மிகப் பெரியவை; பிரபலமானவை.

“மௌரியர் அவனுடைய பெருந்தயவுக்கு உரியவரானர். அதற்கு ஏற்ற திறமையும் அவருக்கு இருந்தது; அவரே படைமுழுதுக்கும் சேனதிபதியானர். தம் தந்தையின் ஸ்தானத்தில் மகாபத்மனை அவர் பாராட்டலானர். அவரும் அவருடைய மோரிய இனத்தவர்கள் நூற்றுவருமே மகாபத்மனுடைய மெய்காவற்படையினராய் இருந்தார்கள். மகாபத்மன் அரசாண்ட வரையில் எல்லாம் ஒழுங்காகவே நடந்துவந்தன. ஆனல், அவனுடைய அந்திய காலத்தில் அவன் தன் மந்திரிகளின் சொல்லைக் கேளாமல் அசட்டை செய்தான். அதனல் அவர்களுக்கும் மற்ற விவேகிகளுக்கும் அவனிடத்தில் வெறுப்புண்டாயிற்று. ஆனபோதிலும், அவனுடைய பெயரும் பிரதிஷ்டையும் அதிகமாகவே இருந்தன. அவனுடைய சைனியமும் பலமாக இருந்தது. அவன் ஜ்வரத்தினல் இறந்தபோது, காமரூபம் முதல் குந்தலம் வரையில் வியாபித்திருந்த அவனுடைய ராஜ்யம் சிறிதும் பழுதுபடாமல் செழிப்பாயிருந்தது.

"அவனுடைய மக்களான இப்போழ்தத்து அரசனும் தம்பிமாரும் அவனுக்குப் பிறகு ராஜ்யாதிகாரம் பெற்றார்கள். தந்தையின் ஸ்தானத்தில் ஸுகல்பனுக்கு முடி சூட்டித் தம்பிமார் எழுவரும் யுவராஜர்களாகவும் மாகாணங்களுக்குத் தலைவர்களாகவும் ஆனார்கள். பரிபாலனத் திறமை உடனே படுத்துப்போயிற்று. பிள்ளைகள் தகப்பனைப்போலக் கொடுங்கோலர்களாகவும் யதேச்சாதிகாரிகளாகவும் இருந்தார்களே யொழிய, தந்தைக்கிருந்த போர்த்திறமையும் பரிபாலன சக்தியும் இவர்களுக்கு இல்லவாயின. நக்கரநாஸன் என்னும் மந்திரியின் நல்ல ஆலோசனையைச் செவிக்கொள்ளாமல், ராஜகுமாரர்களெல்லாரும் தலை நகரத்திலேயே இருந்தார்களேயன்றி, தத்தமக்குரிய மாகாணங்களுக்குப் போய் அவைகளைப் பரிபாலிக்கவில்லை. அவன் சொன்ன புத்தி இவர்களுக்கு ஏலாததனால் அவன் மீது இவர்கள் கோபங்கொண்டு ஸுபுத்திசர்மன் என்பவனைப் பிரதான மந்திரியாக்கினார்கள். இதனால் நக்கரநாஸனுக்கும் சகாதலனுக்கும் வயிற்றெரிச்சல் உண்டாயிற்று. எல்லாராலும் கௌரவித்துப் பெருமைப்படுத்தப்பட்ட சேனாதிபதியான மௌரியரையும் நீக்கிவிட்டு, அவருடைய ஸ்தானத்தில் பத்தசாலன் என்னும் தங்களுக்கு வேண்டியவன் ஒருவனை நியமிக்க விரும்பினார்கள். பத்தசாலன் என்பவன் ஆளழகன், ஆடையழகன், போர்த்திறமை சிறிதும் இல்லாதவன், இரகசியமாகக் கைக்கூலி வாங்கும் காடகன். மௌரியர் ஜனங்களெல்லாருக்கும் பிரியமுள்ளவராயிருந்ததனாலும், படையாளர்களெல்லாரும் அவரைக் கௌரவித்து மரியாதையாக வைத்துக்கொண்டிருந்ததனாலும் வெளிப்படையாக அவரை நீக்கிவிட்டு வேறொருவனைச் சேனாநாயகனை நியமிப்பது எளி

தான காரியமாகவில்லை. ஆதலால், மௌரியரை ஒழிப்பதற்கு நெடுங்காலம் சதி செய்தார்கள்.

"நான்கு வருஷங்களுக்கு முன் ஒரு நாள் ராக்ஷஸனும் பத்ரசாலனும் சொல்லிய துர்ப்புத்தியைக் கேட்டு, மௌரியரையும் அவரைச் சார்ந்த நூறு வீரர்களையும் வஞ்சகவலையிற் சிக்கவைத்தார்கள். கங்கை நதிக்கரையில் இராஜாங்கப் பொக்கிஷசாலை இருக்கிறது. அதில் தனநந்தன் தன்னுடைய 80 கோடிப் பொற்பணத்தைை ஒளித்து வைத்திருக்கிறான். அதற்கருகில் தரையின்கீழ் இரகசியமான மந்திராலோசனைக் கூடமொன்று இருக்கின்றது. அவ்விடத்திற்கு மௌரியரையும் அவர் ஆட்களையும் வஞ்சகமாக வரச்சொன்னார்கள். பாஞ்சாலத்தின் மீது படையெடுக்கும் விஷயத்தையும், வேறு சில முக்கியமான ராணுவ விஷயங்களையும் பற்றி ஆலோசிப்பதற்காகவென்று சாக்குச் சொல்லி அவர்களை அவ்விடத்திற்கு இழுத்தார்கள். கள்ளங்கபடில்லாமல் போர்க்கோலமின்றி மௌரியர் தம் நூறு ஆட்களையும் என்னையும் அழைத்துக்கொண்டு அவ்வறைக்குள்ளே போனவுடன் பத்ரசாலனும் ராக்ஷஸனும் அதிலிருந்த ஏழு கள்ளக் கதவுகளையும் அடைத்துவிட்டார்கள். அந்தக் கதவுகள் ஒன்றன்மீது ஒன்றாக வேறு வேறு உயரத்தில் இருந்தன. அங்கே நாங்களெல்லோரும் பட்டினியாற் சாகும்படி விட்டுவிட்டார்கள். எங்களைப் பரிகாசம் செய்வார் போல, நாங்கள் ஒவ்வொருவரும், வயிறாரக் கடைசியாக உண்டு சாவதற்கென வாய்க்கரிசி போடுவது போல, ஒவ்வொருவருக்கும் சம்பிரமமான சாப்பாடு வைத்திருந்தார்கள். எங்கள் பிணங்களையெல்லாம் தகனம் செய்வதற்காக அடுத்த அறையில் விறகுக்கட்டைகளையும் பெருங்குவியலாக அடுக்கிவைத்திருந்தார்கள்.

"அப்படிப்பட்ட அத்தியாவஸ்தையிலும் மௌரியர் தம் பொறுந்தன்மையையும் புத்தித்திறமையையும் காட்டினார். எங்களுக்கு உண்டாயிருந்த திகிலைத் தணித்து எங்களைப் பார்த்து இவ்வாறு சொன்னார்: 'நாம் பீலா வலையிற் சிக்கிக்கொண்டுவிட்டோமென்பதை மறக்கமுடியாது. நந்தர்களே வந்து கதவுகளைத் திறந்தாலன்றி, நாம் தப்பித்துக்கொள்ள வேறுவழியில்லை என்பதையும் மறக்க முடியாது. இந்த இடம் எனக்கு நன்றாகத் தெரியும். உடனிருந்தே இதை நான் கட்டினேன். நாமாக இதினின்று தப்பிப்போடலா மென்பது இயலாத காரியம். மகாஞானிய சாணக்கியரல்லாது வேறு எவரும் இப்படிப்பட்ட நிலைமையிலிருந்து பிறர் உதவியின்றித் தப்பித்துக் கொள்ள முடியாது' என்றார். 'நமக்குப் பரிந்து போர்ப்படையாரும் ஊர் ஜனங்களும் கிளர்ச்சி செய்யமாட்டார்களா?' என்று நான் கேட்டேன். 'ஓ, ஓ! கிளம்பமாட்டார்கள். படைவீரர்களும் ஊர் ஜனங்களும் சாதாரணமாக வெற்றியாளனுக்கே சார்பாயிருப்பார்கள். அவர்கள் ஏதோ நமக்குச் சகாயம் செய்வார்களென்று நினைக்காதே. நமக்கு ஒரே ஆசை தான் உண்டு. அந்த ஆசையும் மிகத் துர்ப்பலமானது. அது என்னவென்றால், சில மாதங்கள் சென்றபின், அந்த நந்தர்களே வந்து இந்தச் சாவுக்கிடங்கைத் திறந்து பார்த்து, அப்போது பிழைத்திருப்பவன் ஒரே பொருவனாயிருந்தால், அவனை விடுதலை செய்யக்கூடும் என்பதாம். ஆகையால், அவர்கள் செய்த இந்த வஞ்சகத்திற்குப் பழி வாங்க நாம் ஓர் உபாயம் பண்ணவேண்டும். நாமெல்லோரும் மிகச் சொற்பமாக உண்போமாயினும், இங்கே வைத்திருக்கிற உணவுப் பொருள்களெல்லாம் மூன்று நாளிற் செலவாகிவிடும். அதற்குப் பிறகு எல்லோரும் இறந்து போவோம். பழி

வாங்குவதற்கு ஒருவனும் மிஞ்சியிருக்கமாட்டான். உயிரோடிருந்து பழிவாங்குவதற்காக நம்மில் ஒருவனைப் பொறுக்கியெடுத்துக்கொள்வோம். உணவுப்பொருள்களையெல்லாம் அவனுக்கு வைத்துவிட்டு, மற்றவர்களெல்லோரும் இறந்து போவோம். நமக்குப் பின், பிழைத்திருக்கத் தக்கவனைத் தெரிந்து ஏற்படுத்துங்கள்' என்று மௌரியர் சொன்னார். 'நீங்களே பிழைத்திருந்து எங்களுக்காகப் பழி வாங்குங்கள். நாங்களெல்லோரும் இறந்து போகிறோம்' என்று எல்லாரும் கூவினார்கள். அப்போது அவர், 'அப்படியன்று! தலைவனாயிருப்பவன் மீந்திருக்கக்கூடாது. நான் மீந்திருந்தால் உங்களெல்லாருக்கும் மரணமே கிட்டும். அன்றியும், நந்தர்கள் பலவான்களாயிருக்கிறார்கள். அவர்களை வேரோடு களைவதற்கு அநேக ஆண்டுகள் விடாமல் உழைக்கவேண்டும். ஆதலால், இளம் வயதுடையவனே வேண்டும். அன்றியும், மீந்துபிழைத்திருப்பவனை நந்தர்களே தயைகூர்ந்து விடுதலைசெய்தால் உண்டு, இல்லாவிட்டால் இல்லை என்று ஏற்கெனவே உங்களுக்குச் சொல்லியிருக்கிறேனே. என் நிமித்தமாகவல்லவோ இவ்வாறு நம்மெல்லோரையும் இந்தக் கிடங்குக்கு அழைத்து அடைத்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட என்னை அவர்கள் விடுதலை செய்வார்களோ? ஆனதனால், சிறு பிள்ளையாகிய சந்திரகுப்தன் உயிரோடு மீந்திருக்கட்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. ஏனெனில், அவன் நம்மெல்லோரிலும் வயதிற் சிறியவன். பையனாயிருப்பினும் யுத்தவீரமும் அந்த வித்தையில் மேதையும் வாய்ந்தவன். நந்தர்களுக்கும் ராக்ஷஸனுக்கும் வேண்டாதவனல்ல. இந்தக் காரணங்களல்லாமல், அவன் சக்ரவர்த்தியாக நாடாள்வனென்று திறமைமிக்க சோதிடர்கள் கணித்துச் சொல்லியிருக்கிறார்

கள்' என்று சொன்னார். நான் மாத்திரம் ஐயுற்றேன எனினும், மற்றவர்களெல்லாரும் ஒப்புக்கொண்டார்கள். அதன் பின்பு அவர்கள் என்னைப் பார்த்து, 'தற்கொலை செய்து கொள்ளமாட்டேன்; விடுதலை பெற்றால் மகாபத்மனுடைய வமிசத்தை நாசஞ்செய்து உங்களுக்காகப் பழிவாங்க எல்லா விதப் பிரயத்தனங்களையும் சோர்வில்லாமற் செய்வேன்' என்று தெய்வ சாக்ஷியாகப் பிரமாணம் பண்ணச் சொன்னார்கள். அப்போது என்ன கஷ்டப்பட்டாயினும் இந்தக் காரியத்தைச் சாதிப்பதற்குத் தங்கள் உதவியை எப்படியாவது சம்பாதித்துக்கொள்ள வேண்டுமென்றும் மௌரியர் எனக்குச் சொன்னார்; 'இந்தக் காலத்தில் அசாத்தியமான காரியங்களைச் செய்து சாதிக்கக் கூடியவர் சாணக்கியர் ஒருவரே. ஆழ்ந்த ஆலோசனையுள்ள விவேகிகளின் வாயால் இந்த வார்த்தையை நான் கேட்டிருக்கிறேன். எப்பொழுதேனும் அவரை நீ சந்திக்க நேர்ந்தால், அவரோடு நட்புக்கொள். கடைசிவரையில் அவரையே அண்டியிரு, விட்டுவிடாதே; ஏனெனின், அவர் பெருந்தன்மை வாய்ந்தவர், தன்னலக் கருத்து இல்லாதவர், உனக்கு வேண்டிய காரியங்களை யெல்லாம் சாதித்துக் கொடுக்கக்கூடியவர்' என்றார். அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டேன். இறந்துபோன என் பிதாமகரின் மனோபீஷ்டத்தை இப்போது நிறைவேற்றிவிட்டேன்.

"மேற்சொல்லியபடி நான் பிரமாணம் செய்து கொடுத்தபின், மற்றவர்களெல்லோரும் வேறோர் அறைக்குப் போனார்கள். அங்கே மௌரியர் அவர்களெல்லோரையும் கொன்றார். பின்பு, எனக்குச் சொல்லவேண்டிய கடைசியான உபதேச வார்த்தைகளைச் சொல்லி, என் இரண்டு கன்னங்களிலும் முத்தமிட்டுத் தம் கத்தியின்மீது விழுந்து

உயிர் துறந்தார். பிறகு, அவர் சொல்லியபடியே அவர்களுடைய சவங்களையெல்லாம் தகனம் செய்தேன்; நான் வெளியே வந்து பௌரோகிதப் பிராமணர்களுடைய உதவி பெறுமளவும் அபரக்கிரியைகளைத் தள்ளிவைத்தேன்.

"நான்கு மாதங்கள் கழிந்தன. நான் கொஞ்சம் கொஞ்சமாகவே உண்டபோதிலும், உணவுப்பொருள்கள் முற்றும் ஒழிந்துபோகும் நிலைமைக்கு வந்துகொண்டிருந்தன. துக்கத்தினுலும் கோபத்தினுலும் எனக்குத் தாபம் மிகுந்தது; வெளிப்போந்து எனது ஆசைக்குரிய உறவினர்களின் சாவுக்குப் பழிவாங்கவேண்டுமென்னும் தாகம் அதிகமாகிக்கொண்டிருந்தது. மெல்ல மெல்ல ஏக்கம் பிடிக்கத் தொடங்கியது. 'இனி நான் விடுதலை பெற்று வெளிப் போவேனு! அன்பான உறவினர்களின் உணவை வீணுக்கு உண்டு, சிறிது சிறிதாகப் பட்டினிவாய்ப்பட்டு நீடித்துத் துன்புற்றுச் சாவதற்கே அவர்களுக்கான உணவை உட்கொண்டேனு? தற்கொலை செய்துகொள்வதில்லையென வாக்குக்கொடுத்துவிட்டேனே' என வருந்தினேன். பட்டினியினுல் அங்குலம் அங்குலமாக வாடிச் சாவதைக் காட்டிலும், அவர்களைப்போலக் கத்தியினுல் ஒரே நிமிஷத்தில் மரணமடைவது மிக மேலாயிருக்கும்!

"மரணவேதனைக்கு ஒப்பான மேற்சொல்லிய துன்பத்தைப் பின்னும் இருபதுநாள் நான் அனுபவித்த பிறகு, பூட்டுகள் திறக்கப்பெறும் சத்தம் கூர்மை வாய்ந்திருந்த என் காதில் விழுந்தது. அதுவே கவனமாக உற்றுக் கேட்டு, உடனே களிமிகுதியாற் குதித்தேன். உண்மையாகவே பூட்டுகள் திறக்கப்பெறுவது தெரிந்தது. நான் திரும்பவும் விடுதலை பெறமுடியும், தெருக்களையும் சூரிய சந்திரர்களையும் நக்ஷத்திரங்களையும் மரஞ்செடிகளையும்

ஸ்திரீ புருஷர்களையும் பார்க்கமுடியும் என்ற எண்ணத்தினால் களிகூர்ந்தேன். ஆனால், விடுதலை பெற வேண்டுமென்னும் ஆசை எனக்கு அதிகமாயிருக்கிறதெனக் காட்டினால் காரியம் கெட்டுப்போமெனப் பயந்து என் ஆவலை வெளிக்காட்டாதிருக்கத் தீர்மானித்தேன்.

"கடைசியில் கதவு திறக்கப்பட்டது. தனநந்தனோடு ராக்ஷஸன் வந்தான். திக்கற்றவனாக நான் ஒரு மூலையில் உட்கார்ந்து அழுதுகொண்டிருந்தேன். அவர்கள் 'சந்திரகுப்தன் உயிரோடிருக்கிறான்!' என்று சந்தோஷமாக ஆரவாரித்தார்கள். ஸுகல்பனும், அவன் தம்பிமாரும், பத்தசாலனுங்கூட உள்ளே வந்தார்கள். எவர்களுக்குரிய உணவுப்பொருள்களைப் புசித்து என் உயிரைக் காப்பாற்றி வைத்துக்கொண்டிருந்தேனோ அந்த அன்பர்களின் ஞாபகார்த்தமாக அவ்வறையின் மூலையில் நான் வைத்திருந்த எலும்புக்குவியலை அவர்கள் பார்த்தார்கள். அது என்னவென்று அவர்கள் கேட்டதற்கு, 'அவை மற்ற நூறுபேரின் எலும்புகள். சிறைப்படுத்தப்பட்ட தினமே அவர்கள் தங்கள் வாளைக்கொண்டே உயிர்துறந்தார்கள். அப்படி உயிர்விடும்போது மௌரியர், நம் அரசருக்கு நம்மீது நம்பிக்கை இல்லாமற் போனபின், நாம் உயிர்வாழ்ந்து என்ன பயன்? சிறு பிள்ளையாகிய சந்திரகுப்தனைமாத்திரம் உயிரோடு விட்டு நாமெல்லோரும் நம் கத்திகளுக்கு இரையாவோம். அரசருக்கும் ராஜகுமாரர்களுக்கும் அவன் பிரியமானவன். இன்னும் வியவகார வயது பெறாதவன்; நம்மோடு சேர்ந்திருந்ததனால் அவனுக்கு நம் கதி வாய்க்கலாயிற்று. ஆதலின் அவன் மீந்திருந்து, அரசருடைய கருணையால் விடுவிக்கப்பெற்றால் பெறட்டுமென்று எல்லாருக்கும் தெரியும்படி உரத்துச்

சொன்னார்' என்று பதில் சொன்னேன். 'ஓ, அப்படியா! நான் நினைத்ததைக் காட்டிலும் மௌரியன் மிகவும் பெருந் தன்மையாக நடந்துகொண்டிருக்கிறானே' என்று சொல்லி ராக்ஷஸன் கண்ணீர் உதிர்த்தான். அதற்குப் பிறகு ஸுகல் பன் என்னைப் பார்த்து, 'சந்திரா! உன்னை விடுதலை செய்து விட்டேன். மௌரியனுடைய பூஸ்திதிகளும் மற்றுமுள்ள சொத்துக்களும் எல்லாம் உனக்குத் திருப்பிக் கொடுக்கப் படும். நடந்துபோனதையெல்லாம் மறந்துவிடு. எங் களுடன் வா. எங்களுக்கு நீ வேண்டும். சிங்களத்தரசன் ஒரு கூட்டுக்குள் ஒரு சிங்கத்தை வைத்து அனுப்பி யிருக் கிறான். அது நடந்துகொண்டிருக்கிறது. அதை வளர்க் கிறவன் பராமரிக்கிறான். அதோடுகூடச் சிங்களத்தரசன் எழுதியனுப்பியிருக்கிற ஓலையில், கூட்டைத் திறவாமல் ஸிம்ஹ ஏஷ வித்ராவ்யதாம் என்று எழுதியிருக்கிறான். அந்த வாக்கியத்திற்கு அர்த்தம், 'இந்தச் சிங்கம் துரத்தப் படட்டும்' என்பதாம். அப்படி அதை மூன்று நாளைக் குள் துரத்தாவிட்டால், மகதர்களைக்காட்டிலும் சிங்களத்த வர்கள் அறிவிற் சிறந்தவரென ஒப்புக்கொள்ளவேண்டு மென்று எழுதியிருக்கிறான். அப்படி ஒப்புக்கொள்ள எங்களுக்குப் பிரியமில்லை. அந்தக் காரியத்தைச் சாதிக்க வகையொன்றும் எங்களுக்குத் தோன்றவில்லை. அதன் மீது கடைசியில் நீ இருக்கிறாயோ என்று பார்ப்பதற்கு இங்கே வந்தோம். ஏனெனின், கூட்டைத் திறவாமற் சிங்கத்தைத் துரத்தக்கூடுமானால், அப்படிச் செய்யக் கூடியவன் நீ ஒரு வனேயென்று எங்களுக்குத் தெரியும்' என்றான். அப்போது நான் உள்ளுக்குள் எனக்கிருந்த சந்தோஷத்தை வெளிக் காட்டாமல் நன்றாக அடக்கி மறைத்துக்கொண்டு, 'என்னை விட்டுவிடுங்கள். என் உறவினர்களைப்போல நானும் இங்கே

பிராணனை விடுவேன். அவர்களெல்லாரும் மரித்த பின், வாழ்வதற்கு எனக்கு இஷ்டமில்லை' என்றேன். 'ஆனால் நீ உயிரோடிருக்கவேண்டு மென்று அவர்கள் விரும்பினார்களே?' என்றான் ராக்ஷஸன். 'நான் வெளியே வந்து உங்களால் திரும்ப இவ்விதமாகக் கஷ்டப்படுவதை வேண்டேன்' என்று சொன்னேன். இனி எனக்கு எவ்விதமான தீங்கும் இழைப்பதில்லையெனவும், ராஜகுடும்பத்திற் சேர்ந்தவனொருவனுகை என்னை வைத்து நடத்துவதாகவும் ஸூகலபன் பிரமாணம் செய்தான்.

"அவ்வுறுதிமொழியை வாங்கிக்கொண்டேன். என் உறவினர்களின் அஸ்திகளை வெளியே கொண்டுபோய் முறைப்படி அபரக்கிரியை செய்வதற்கு அனுமதியும் கொடுத்தார்கள். அதன் பிறகு, சிறையினின்றும் வெளியேற நான் இசைந்தேன். அந்தச் சிங்கத்தை ஒரு மணி நேரம் உற்றுப் பார்த்தேன். அதன் நடமாட்ட மெல்லாம் ஒழுங்காக, யந்திர இயக்கம் போல, ஒரே மாதிரியாய் இருந்தது. ஆகையால், அது நிஜமான சிங்கம் அன்றென்றும் தீர்மானித்தேன். இந்தத் தீர்மானத்திற்குச் சிங்களத்தரசன் எழுதியனுப்பிய 'ஸிம்ஹ ஏஷ வித்ராவ்ய தாம்' என்னும் வாக்கியம் துணையாயிற்று. அதிலுள்ள வித்ராவ்யதாம் என்னும் சொல்லுக்குத் 'துரத்தப்படட்டும்' என்னுமோர் அர்த்தம் சாதாரணமாக இருப்பதன்றி 'உருக்கப்படட்டும்' என்னுமோர் அர்த்தமும் உண்டு. ஏனெனின், அந்த வடமொழிச் சொல்லின் பகுதியாகிய த்ரு என்பதற்கு 'விரைவாகச் செல்லல்' என்னுமோர் அர்த்தமும், 'திரவமாக்கல்' என்னும் ஓர் அர்த்தமும் உண்டு. அந்தப் பகுதி வேறு வேறு சொல்லாயினும், அவ்விரண்டிற்கும் உருவம் 'த்ரு' என்பதொன்றே. ஆனால்,

அர்த்தங்கள் மாத்திரம் வேறு. இந்தச் சூக்ஷ்மத்தை யுணர்ந்து, பழுக்கக் காய்ச்சின இரும்புச்சலாகையொன்றை வரவழைத்துச் சிங்கத்திற்குள் பாய்ச்சினேன். உடனே அது உருகி ஓடியது. அங்கே கூடியிருந்த ராஜகுமாரர் களும் மந்திரிகளும் மற்ற ஜனங்களும் மிக ஆச்சரியப்பட் டார்கள். இவ்வாறு மகதர்களுடைய புத்திப் பிரபாவத்தை நிலைநாட்டினேன்.

**பாவஜ்ஞா மாகதா: ப்ரோக்தா**
**இங்கிதஜ்ஞாச்ச கோஸலா:**
**அர்த்தோக்தா குருபாஞ்சாலா:**
**கண்டோக்தா தாக்ஷிணபதா:**

என்பது வடமொழி வழக்கு. மற்றத் தேசத்தார்களோடு ஒப்பிட்டு மகத தேசத்தார் அறிவுக் கூர்மை வாய்ந்தவர்க ளென்று இது சொல்லுகிறது. இதன் பொருள், பிற ருடைய மனக்கருத்தை ஊகித்தறிந்து நடப்பவர்கள் மகத தேசத்தார்; பிறருடைய நடவடிக்கைகளையும் சந்தர்ப்பங் களையும் அனுசரித்து நடப்பவர்கள் கோசல நாட்டார்; முழுவதும் வெளியிடாமல் கொஞ்சம் கோடி காட்டின வுடனே தெரிந்து நடப்பவர்கள் குரு தேசத்தாரும் பாஞ் சால தேசத்தாரும். வாய்விட்டு வெளிப்படையாகச் சொன் னால் மாத்திரமே செய்பவர்கள் தக்ஷிண தேசத்தார் என்பதாம்.

"சிங்களத்தரசனுடைய கருத்தை ஊகித்தறிந்து காரி யத்தை முடித்து நான், நெடுங்காலமாக மகத தேசத்தா ருக்குப் பிரஸித்தமாய் ஏற்பட்டிருந்த **பாவஜ்ஞர்கள்** என்னும் விருதை ஸ்தாபித்தேன்.

"நான் செய்த அருஞ்செயலைக் கண்டு நந்தர்களும் ராக்ஷஸனும் பத்தசாலனும் நிஜமாகவே மகிழ்வுற்றார்கள்.

மௌரியருடைய நிலங்களையும் சொத்துக்களையும் எனக்குத் திருப்பிக் கொடுத்துவிட்டார்கள். சேனையில் என்னை ஒரு பகுதிக்குத் தலைவனாகவும் நியமித்தார்கள். ஆனால், போர்வீரர்களெல்லாரும் என்னிடத்துப் பிரியம் மிகுந்தவர்களாய் என்னைக் கௌரவப் படுத்துவதைக் கண்டு பொறாமல், பட்டாளத்தினின்றும் என்னை நீக்கி, போஜனசாலைக்கு அதிகாரியாக நியமித்தார்கள். அந்த உத்தியோகத்திலிருக்கும்பொழுதே தாங்கள் என்னைக் கண்டீர்கள்" என்று சந்திரகுப்தன் சொல்லி முடித்தான்.

அந்த வர்த்தமானங்களை யெல்லாம் கேட்டுச் சாணக்கியர், "நல்ல விநோதமான சரித்திரம். உம் பாட்டனார் குறிப்பிட்ட சோதிடரது சொல் பலித்து உண்மையாகும் போது இந்தக் கதை இன்னும் அதிக விநோதமாயிருக்கும்" என்று சொன்னார்.

"அந்தப் பவிஷ்ய வாதங்களை நாம் நம்பலாமா?" என்றான் சந்திரகுப்தன்.

"நாம் முயற்சி செய்து அவை பலிக்கும்படி செய்ய வேண்டும்; அவை பலிப்பதற்கு வேண்டிய முயற்சி செய்வதனால் தீமையொன்றும் இல்லையே. இப்போது நாம் படுத்து உறங்கப் போவோம். நந்தர்களுடைய ராஜ்யத்தினின்றும் தப்பியோடுவதற்கான வழிவகைகளை நாளை ஆலோசிப்போம்" என்று சாணக்கியர் சொன்னார்.

"சத்துருவின் தலைமாட்டினும் சிறந்த தஞ்சம் வேறு இல்லை. இங்கேயே சிறிதுகாலம் பதுங்கியிருப்போம்" என்று சொல்லிச் சந்திரகுப்தன் பாடலீபுரத்தினின்று வரும்வழியில் தங்களுக்கு நேர்ந்த சம்பவங்களை எடுத்துரைத்தான்.

"உம்மை அவர்கள் தேடுகிற வேகம் சற்றுக் குறைகிற வரையில் இவ்விடத்திலேயே இருக்க வேண்டுமென்று நானும் எண்ணினேன். இந்த விஷயங்களை நீரும் தனியே ஆலோசித்து அதே எண்ணங்கொண்டதற்குச் சந்தோஷிக்கிறேன். ஒருவருக்கு இருவர் யுக்தி உரமே. நூறு அங்குல தூரத்திற்குள் நீர் இருக்க, நூறுமைல் தூரத்திற்குள் எங்கே இருந்தாலும் உம்மைப் பிடித்துவிடுவேனென்று அந்த மூடன் விராதகுப்தன் பெருமையாகப் பேசின வாய்ச் சவுக்குக்கு விலை இல்லை. இப்படிப்பட்ட காரியங்களே வாழ்க்கைக்குச் சுவையூட்டுவன" என்று சாணக்கியர் சொன்னார்.

---

## அத்தியாயம் 8

## நந்தர்களை விட்டு நகர்ந்தது

இரண்டு மாதகாலம் வர்த்தமானபுரத்தில் வர்த்தகனுடைய வீட்டில் சாணக்கியருடன் சந்திரகுப்தன் தங்கியிருந்தான். அதற்குள்ளாக அவனை நந்தர்கள் தேடுகிற ஊக்கம் குறைந்தது. ஆனபோதிலும் அந்த ராஜ்யத்திற்குள் சந்திரகுப்தனை எங்கே கண்டாலும் சிறைப்படுத்த வேண்டும் என்று எல்லா அதிகாரிகளுக்கும் நிலையான உத்தரவு மாத்திரம் இருந்தது; உயிரோடாவது உயிரில்லாமலாவது அவனைப் பிடிக்கிறவர்களுக்குப் பரிசு முன்னினும் அதிகமாகக் கொடுப்பதாகவும் பறையறைந்திருந்தார்கள்.

"க்ஷேமமாக உயிர்வாழ்வதைத் தவிரவேறு ஓர் உத்தேசமும் நமக்கு இல்லாவிட்டால் நாம் இங்கேயே சௌக்கியமாக நம் வாளுளைக் கழித்துவிடலாம். ஆனால், கீர்த்தியின்றி இழிவாக ஒளிந்து வாழ்வதைக்காட்டிலும், அதிகமான காரியம் செய்யக் கருதுவதனால் நாம் நந்தர்களோடு போர்புரிவதற்கேற்ற படையாட்களைத் திரட்டக் கூடியதோர் இடத்திற்குப் போகவேண்டியது அவசியம். அவர்களை அடிபோடழிப்பது கஷ்டமான காரியமன்று. பெரிய பாரசீக ராஜ்யத்தையும் அலிகசுந்தரன் என்னுமொரு யவனராஜன் ஜயித்துவிட்டான். அவன் இப்போது தன் படையுடன் காந்தார தேசத்தினண்டை

இருக்கிறான். ஆதலால், நாம் [1]சதத்ருவைக் கடந்து, அராட்டி[2], வல்லிகர்[3], கிராதர், காம்போஜர்[4], காசுமீரத் தரசன், அபிசாரத்தரசன்[5], தக்ஷசிலை மன்னன், விதஸ்தத்து வேந்தன்[6] ஆகிய இவர்களுடைய உதவியை நாடுவோம். இன்னும் அவசியமானால் சகர், யவனர், பாரசிகர் முதலான மிலேச்சர்களது உதவியையும் பெறலாம். விதஸ்த தேசத் தின் அரசனாகிய பர்வதகன் (பர்வதேசுவரன்) என்பவன் பேராசை பிடித்தவன்; எவ்வளவு பிரதேசங்களைப் பிடிக்கக் கூடுமோ அவ்வளவையும் பிடித்துக்கொள்ளப் பார்க்கிறான். ஏற்கெனவே சில நாடுகளைக் கைக்கொண்டான். தன் பெயர் பூரு அல்லது, பௌரவன் என்று சொல்லிக் கொள்ளத் தலைப்பட்டிருக்கிறான். பஞ்சாப் தேசத்தில் சிறிது காலத்திற்குமுன்னால் தோன்றிய சிற்றரசன் என் பதல்லாமல், பூர்வத்தில் பிரஸித்தமாயிருந்த பூரு சக்கர வர்த்தியின் பரம்பரையில் வந்த ஆரிய ராஜகுமாரனென்று கருதி, அந்தப் பெயர் வைத்துக்கொண்டிருக்கிறான். அதிகார ஆசைமிகுந்த வைரோசகன் என்னும் தம்பியும் அநேக புத்திரர்களும் அவனுக்கு உண்டு. அவர்களெல் லாருக்கும் ஆட்சிப்பிரதேசங்கள் அளிக்கவேண்டியவனாக இருக்கிறான். அவனுக்குத் தோற்றுப்போய் அபிசாரத்

---

1. 'சட்லஜ்' என்னும் நதி.

2. அராஷ்ட்ரி, அதாவது அரசனில்லாத, சீனப் நதிக்குத் தென்புறத்திலுள்ள பஞ்சாப் மாகாணத்துக் குடியரசுகள்.

3. பாக்டிரியர்கள்.

4. லடக் என்னும் நாட்டிலும் சிறு திபேத்திலுமுள்ள ஜனங் கள்.

5. காசுமீரப் பள்ளத்தாக்கின் தென்புறத்திலுள்ள மலைநாடு.

6. ஜீலம் நதிப்பிரதேசம்; அதன் அரசன் பௌரவன் (Poros)

தரசனும் காசுமீரத்தரசனும் இப்போது அவனுக்குத் துணைவர்களாயிருக்கிறார்கள். அவர்களுக்கும், அவனைப் போலவே, ஆசை அதிகமாக இருக்கின்றது. மிகுதியாகப் பணம் கொடுப்போமென்று சொன்னால் அவர்கள் நமக்குச் சகாயம் செய்யச் சித்தமாயிருப்பார்கள். அவ்வண்ணமே காட்டுமிராண்டிச் சாதியார்களும் அராட்டியர்களும் துணை செய்ய முற்படுவார்கள்" என்று சாணக்கியர் சொன்னார்.

"ஆனால், மகாஸ்வாமீ! இந்தச் சிற்றரசர்களை முக்கிய மாக, பர்வதகனையும் வைரோசகனையும், துணைக்கு அழைத்தால் மகத ராஜ்யத்தைத் தாங்களே அரசாளவேண்டுமென அவர்கள் விரும்புவார்களென்று உங்களுக்குத் தோன்ற வில்லையா? எனக்குப் பிரியமாயுள்ள மகதராஜ்யம் இந்தச் சிற்றரசர்களால் ஆளப்படுவதைக்காட்டிலும், துராக்கிர மிகளான இந்த நந்தர்களாலேயே ஆளப்பட்டாலும் ஆளப் படட்டும்" எனச் சந்திரகுப்தன் சொன்னான்.

"அஞ்சாதேயும். சிற்றரசர்கள் நமக்குத் துணைசெய்வதோடு சரி. அவர்கள் மகதத்தை ஆளவிடமாட்டேன். பொற்பொதி சுமக்கும் கழுதைபோலவும், மோவாய் சிரைக்கும் கத்திபோலவும், அமிர்தம் கடைந்த அசுரர்போலவும் இச்சிற்றரசர்கள் நமக்குச் சாதகர்களாய் இருப்பார்களேயல்லாமல், யஜமானர்க ளாகமாட்டார்கள். அதையெல்லாம் நான் பார்த்துக்கொள்கிறேன். அவர்களோடு எப்படி வியவகரிக்கவேண்டுமென்பது எனக்குத் தெரியும்" என்று சாணக்கியர் சொன்னார்.

"ஆனால், மகாஸ்வாமீ, புஜபலப் பெருக்கத்தினால் அவர்கள் மிருகப்பிராயமாய்ச் செய்யும் கொடுமையை எப்படி எதிர்ப்பீர்கள்?" எனச் சந்திரகுப்தன் வினவினான்.

"பாம்பாட்டி பாம்பையடக்கி ஆள்வதுபோலவும், மாவுத்தன் யானைகளையடக்கி ஆள்வதுபோலவும்" என்று சாணக்கியர் பதில் சொன்னார்.

"நான் ஒரு விஷயம் வேண்டிக்கொள்கிறேன். எவருக்கு என்ன வாக்குக் கொடுக்கவேண்டுமோ, எவரோடு என்ன தந்திரமாக வியவகரிக்கவேண்டுமோ, அவற்றையெல்லாம் தாங்கள் பார்த்துக்கொள்ளுங்கள். அந்தக் காரியங்களில் நான் சமர்த்தனல்ல. சண்டைபோடவேண்டுமானால் நான் போடுகிறேன். அதுதான் என்னாலாகும்" என்றான் சந்திரகுப்தன்.

"நல்லது. ஆனால் நான் செய்வதெதனிலும் குறுக்கிடாதேயும்; எதிர்த்துப் பேசாதேயும்; உமது அறிவுப் பெருக்கைக் காட்டாதேயும்; அசம்மதத்தையும்காட்டாதேயும்" என்றார் சாணக்கியர்.

"அப்படியே ஆகட்டும்" என்றான் சந்திரகுப்தன்.

மறுநாள் நெடுந்தூரத்திலுள்ள பஞ்சாபுக்குப் போகச் சாணக்கியரும் சந்திரகுப்தனும் புறப்பட்டார்கள். சாணக்கியருடைய சீடனைச் சந்திரகுப்தன் வேஷம்போட்டுக் கொண்டான். சாணக்கியரின் பிரஸித்தமான ஒற்றர்களாகிய ஸித்தார்த்தகன், ஸமித்தார்த்தகன், உதும்பரன், நிபுணகன் என்பவர்களும் அவர்களோடு போனார்கள். ஆனால், அவர்களோடு சேர்ந்து போகவில்லை. பலநாள் பிரயாணம் செய்து கயைக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அங்கே நந்தர்களுடைய உத்தியோகஸ்தனை காயஸ்தன்[1]

---

1. காயஸ்தர் என்பவர்கள் வங்கதேசத்திலுள்ள ஒருவகைச் சாதியார். இந்தச் சொல் 'காரியஸ்தர்' என்பதன் திரிபு. 'உத்தியோகம் வகிப்பவர்கள்' என்று அர்த்தம். சாமாஜிக வியவகாரத்தில் இவர்கள் பிராமணர்களுக்குச் சற்றுத் தாழ்ந்தவர்கள்.

ஒருவன் அவர்களை வழிமறித்துச் சாணக்கியரை நோக்கி, அவருடன் இருந்தவன் யாவன் என வினவினான். அவன் தம் சீடனென்று சாணக்கியர் சொன்னார். பார்வைக்குப் பிராமணனாக அவன் தோன்றவில்லையே யெனக் காயஸ்தாதிகாரி சொன்னான். அதற்குச் சாணக்கியர், "பார்வையினால் பிராமணர்களைப் பகுத்தறியும் காலம் போய்விட்டது. இந்நாளில் பிராமணர்களிற் பலர் பார்வைக்குச் சூத்திரராகத் தோன்றுகிறார்கள். சூத்திரர்களிற் பலர் பிராமணராகத் தோன்றுகிறார்கள். அவ்வளவு தூரம் போவானேன்? நீர் காயஸ்தரேயல்லவா? ஆனாலும் என்னைக்காட்டிலும் நீர் நல்ல பிராமணராகத் தோன்றுகிறீரே" என்று சொல்லவே, அவ்வதிகாரி புன்னகை கொண்டு, அவர்களைப் போகவிட்டான். சந்திரகுப்தனை அழைத்துக்கொண்டு அவர் ஒரு சத்திரத்திற்குப் போனார். இருவருக்கும் பசி அதிகமாயிருந்தது. அவனை அங்கே இருக்கச் சொல்லி அவர் ஆற்றங்காலுக்குப் போனார்.

காசியில் ஸ்நானம் விசேஷம். காசியாத்திரை போகிறவர்கள் அங்குள்ள கங்காபுத்திரர் என்னும் பிராமணர்களுடைய அனுமதிபெற்றுக் கங்கையில் ஸ்நானம் செய்ய வேண்டும். எனவே, யாத்திரிகர்களுக்குக் கங்காபுத்திரர் ஸ்நான ஸங்கற்பம் செய்வித்துத் தக்ஷிணை பெற்றுக் கொண்டபின்னரே ஸ்நானம் செய்யவேண்டும். அந்தச் சங்கற்பம் செய்வித்து, ஸ்நானத்திற்கு அனுமதி கொடுப்பதற்கெனவே கங்காபுத்திரர் என்னும் வகுப்பினர் ஏற்பட்டிருக்கின்றனர்.

கயையில் சிராத்தம் விசேஷம். கயாயாத்திரை போகிறவர்களெல்லாரும் சிராத்தம் செய்வார்கள். அங்கே செய்

யும் சிராத்தத்தில் பிதுருக்கள் நேரே வந்து புசித்துத் திருப்தி யடைந்து ஆசீர்வதிக்கிறார்களென்பது கொள்கை. இந்தக் கொள்கையைத் தழுவியே கயாயாத்திரை செய்கிறவர்கள் தமக்காகவும், உயிரோடிருக்கும்பொழுதே சிராத்தம் செய்து 'ஆத்ம பிண்டம்' போடுவார்கள். இந்தச் சிராத்தங் களில் அன்னம் புசிக்க வருகிற பிராமணர்கள் **கயாவாளிகள்** எனப்படுவர். அவர்கள் ஸாக்ஷாத் பிதுருக்களாகவே கருதப் படுகிறார்கள். மற்ற இடங்களில் சிராத்தம் செய்வதற்குப் பிதாவாகவும், மாதாவாகவும், பிதாமகராகவும் இவ்வாறு வேறு வேறு பிதுருக்களுக்கும், ஒவ்வொருவருக்கு ஒவ் வொரு பிராமணரை வரிக்கிறோம். இப்படி வரிப்பதற்கு **நிமந்த் ரணம்** என்று பெயர். பிராமணர்கள் வந்தவுடன் அவர் களுக்கு ஸ்நானம் செய்வித்து வஸ்திரங்கள் கொடுத்து, பிதுருக்களை அவர்களிடம் ஆவாகனம் செய்து, அவர்கள் முன்னிலையில் ஹோமங்கள் வளர்த்துப் பக்குவான்னம் படைத்து, அதற்குமேல் மற்ற உபசாரங்கள் செய்து தக்ஷிணை கொடுத்து, 'திருப்தியடைந்தோம்' என அவர்கள் வாயால் வாக்கும் ஆசீர்வாதமும் பெறுகிறோம். கயாவாளி களின் விஷயத்தில் மேற்சொல்லியபடி அவர்களை முன்ன ராக வரிப்பதில்லை. அவர்களில்லாமலே ஹோமம் முதலான சிராத்தக்கிரியைகளைச் செய்துவிட்டுப் பிதுருப் பிரீதியாக அன்னத்தையும் இலையில் படைத்துவிடுவார்கள். அந்த வேளையில் கயாவாளிகள் வந்து அன்னம் அருந்தித் தக்ஷிணை பெற்றுத் திருப்தி சொல்லி, ஆசீர்வதித்துப் போவார்கள். மற்ற இடங்களிற் பிதுருக்களாக வரிக்கப் பெற்றுச் சிராத்தான்னம் புசிக்கிறவர்கள் அன்றைத்தின மும் மறுநாளும் வேறொரு சிராத்தத்தின் பிதுருவாக இருந்து புசிக்கலாகாது. கயாவாளிகள் மாத்திரம் தினந்

தோறும் ஒவ்வொரு சிராத்தத்தில் அன்னம் புசிக்கலா மென்று சம்பிரதாயம்.

சிராத்த காலங்களில் பிதுருக்களுக்கல்லாமல், இஷ்ட பந்தி போஜனமும் உண்டு. ஆதலால், சிராத்தம் செய்கிற வர்கள் உணவுப்பண்டங்களை அதிகமாகவே சமையல் செய்திருப்பார்கள். சாணக்கியர் அங்கே போனபோது சிராத்தங்கள் நடந்து கொண்டிருந்ததனால், அவ்விடத்தில் அன்னமும் மற்றுமுள்ள பதார்த்தங்களும் மிகுதியாக மீந்திருந்தன. அவ்வன்னத்தையெல்லாம் வாரியெடுத்துச் சுற்றிக் கொண்டு சாணக்கியர் சத்திரத்திற்குத் திரும்பி வந்தார். சந்திரகுப்தனும் தாமுமாக வயிறார விருந்துண்டனர். "பிதுருக்களுக்கு அர்ப்பித்த அன்னத்தின் மீதி பிதுருசேஷம். அதை ஞாதிகள் தவிர மற்றவர்கள் உண்ணலாகாது என்பார்களே; அதை நாம் உண்ணலாமா?" எனச் சந்திரகுப்தன் வினவினான்.

அதற்குச் சாணக்கியர், "கயையில் சிராத்தம் செய்து மீந்த அன்னத்திற்குப் பிதுருசேஷ தோஷம் இல்லை. ஏனெனில், மற்ற இடங்களில் நாம் செய்வதுபோல வேறு பிராமணர்களை அந்த வேளைக்குப் பிதுருக்களாக வரித்து உபசரித்து அன்னமிடுவதில்லை. கயையில் சிராத்த மிடுகிறவர்களுடைய சிரத்தைக்கு மெச்சிப் பிதுருக்களே கயாவாளி வடிவாக வந்து அன்னத்தை ஏற்றுக்கொண்டு அனுக்கிரகிக்கிறார்கள். அவர்கள் புசித்த அன்னசேஷத்தை நாம் புசிப்பது சாஸ்திர விரோதமாகாது.

"அது நிற்க, ஆபத்திற்குப் பாபம் இல்லை. விபத்தான வேளையிலும் அத்தியாவசியமான அவசரத்திலும் நிஷேத பதார்த்தத்தையும் புசிக்கலாம். முன்னாளில் பெரிய மாமுனிவரொருவர் பட்டினியால் வருந்திச் சாவாமல் தம் உயிரைக்

காப்பாற்றிக்கொள்ளும்பொருட்டு ஒரு சண்டாளனுடைய உண் கலத்தினின்றும் இரண்டு கைச் சோறு வாங்கி உண்டார்" என மொழிந்தார்.

காசியில் மணிகர்ணிகா கட்டத்தில் சாணக்கியரும் சந்திரகுப்தனும் கங்கா நதியில் தீர்த்தமாடிக்கொண்டிருந்தார்கள். அப்போது நந்தர்களின் படைத்தலைவன் ஒருவன் அங்கே குளிப்பவர்களெல்லாரையும் உற்றுப் பார்த்துக் கொண்டே போனான். சந்திரகுப்தனுக்கு அந்தப் படைத் தலைவனைத் தெரியும். சிறிது தூரத்தில் அவன் வரும்போதே பார்த்துவிட்டான். இந்தச் சங்கதியைச் சாணக்கியருக்குச் சொன்னான். உடனே அவனை மூழ்கச் சொல்லிவிட்டுச் சாணக்கியர் பத்து கஜதூரம் நகர்ந்து அவ்விடத்திற் குளித்துக் கொண்டிருந்த மகாராஷ்டிரப் பிராமணனொருவனோடு சச்சரவு செய்தார். அந்தப் பிராமணனுடைய குடுமியைச் சாணக்கியர் பிடித்திழுத்து, அதற்கு முன்னாள் தம்மை அவன் அவதூறாக ஏன் பேசினானென்று சண்டைக்கு இழுத்தார். அந்த மகாராஷ்டிரப் பிராமணனும், அவரைப் போலவே கோபங்கொண்டு பதில் சொல்லிச் சாணக்கியருடைய குடுமியைப் பிடித்திழுத்தான். நந்தர்களின் படைத் தலைவன் சந்திரகுப்தன் இருந்த இடத்தை விட்டுச் சண்டை நடக்குமிடத்திற்கு ஓடினான். சச்சரவு செய்துகொண்டிருந்த பிராமணர்களைச் சமாதானப்படுத்திவிட்டு அவன் தன் கடமைப்படி வட்டம் சுற்றப்போனான். மகாராஷ்டிரப் பிராமணனாக மாற்றாருக் கொண்டிருந்த விஸ்தார்த்தகனை அங்கே விட்டுவிட்டுச் சாணக்கியர் நிதானமாக ஸ்நானம் செய்தார்.

பிரயாகைக்குப் போகும் வழியில் ஒரு காட்டுக்கருகில் தனிமையான இடம் ஒன்று இருந்தது. அவ்விடத்தில்

பிச்சைக்காரனொருவன் சந்திரகுப்தனிடம் பிச்சை வேண்டி னான். சந்திரகுப்தன் எண்ணாமலே ஒரு பொற்காசை யெடுத்து அவன் கையிற் கொடுத்தான். ஆச்சர்ய மடைந்த அந்தப் பிச்சைக்காரன், "ஹா, நீர் சந்திர குப்தர் என்னும் ராஜகுமாரராக இருக்கவேண்டும். உம்மைப் பிடிப்பவருக்கு நாலாயிரம் பொற்பணம் பரிசு அளிப்பதாகப் பறையறைந்திருக்கிறார்களே!" எனக் கூவினான். உடனே சந்திரகுப்தன் ஒளித்து வைத்திருந்த உடைவாளால் அவனைக் கொன்றான். "அதிக ஆசை அதிக நஷ்டம்; பேராசை பிராண நஷ்டம்" என்று சாணக்கியர் சொன் னார். அந்தச் சமயத்தில் ஏதோ வழிப்போக்கர்கள் போல உருமாறி ஸித்தார்த்தகனும் சமித்தார்த்தகனும் அவ்விடம் வந்து, அந்தப் பிணத்தை யெடுத்து அருகிலிருந்த புதர்க் காட்டில் எறிந்துவிட்டார்கள்.

பல நாளைக்குப் பின் அவர்கள் வடமதுரை போய்ச் சேர்ந்தார்கள். அவ்விடத்தில் ஒரு பிராமணனுடைய வீட்டில் அன்னம் அருந்துவதற்காகச் சாணக்கியரும் சந்திரகுப்தனும் உட்கார்ந்தார்கள். அந்த வேளையில் ராக்ஷஸனுடைய வேவுகாரனை பிரியம்வதகன் சாப்பிடுவதற் காக அதே வீட்டை நோக்கித் தெருவிற் போனான். அந்தத் தருணத்தில் அந்த வீட்டின் எதிரில் பாம்புகளை ஆட்டிக் கொண்டிருந்த பாம்பாட்டியின் ஸர்ப்பங்களிலொன்று வசம் மீறி அந்த வீட்டுக்குள் விரைந்தோடியது. வீட்டுக் குள் இருந்தவர்களெல்லாரும் திகிலுற்றுக் கலங்கித் தேகம் தெரியாமல் ஓடியொளியலானார்கள். அப்போது சாணக் கியரும் சந்திரகுப்தனும் பின்புறத்து வாயில் வழியே ஓடிப் போனார்கள். பாம்பாட்டி வீட்டுக்குள் வந்து கால்மணி நேரத்தில் பாம்பைப் பிடித்துத் தன் கூடைக்குள் போட்டுக் கொண்டான். நன்றி மிகுந்த அந்தச் சத்திரக்காரன்

ஒரு சட்டி நிரம்பப் பாலும் வேண்டியவளவு சோறும் பாம்பாட்டிக்குக் கொடுத்து வந்தனம் செய்தான். பாம்பாட்டி அவைகளையெல்லாம் மற்றொரு கூடையில் வைத்துக் கொண்டு அன்னமளித்த சத்திரக்காரனுக்கு வந்தனம் செய்து தன் வழிப் போனான். பின்பு பிரியம்வதகன் அமைதியாக அவ்வீட்டிற் சோறு உண்டான். பாம்பாட்டி அந்தக் கிராமத்திற்குச் சிறிது தூரம் அப்பால் தனிமையாக நின்றதோர் ஆலமரத்தினடியில் சாணக்கியரோடும் சந்திர குப்தனோடும் சேர்ந்து கொண்டான். மூவரும் திருப்தியாக அன்னம் புசித்தார்கள். அவன் பாற்சட்டியை எடுத்த போது, சாணக்கியர் அதனின்றும் தாராளமாகப் பால் எடுத்து ஒரு மண் குடுவையில் வார்த்து, "ஸித்தார்த்தகா! உனது நச்சுப் பல்லில்லா நாகத்திற்கு வார். அது நம்மைக் காப்பாற்றியது" என்று சொல்லி அவன் கையிற் கொடுத்தார்.

வர்த்தமானபுரத்தை விட்டுப் புறப்பட்டு மூன்று மாதத்திற்குப்பின் சாணக்கியரும் சந்திரகுப்தனும் யமுனை நதிக்கரையிலுள்ள இந்திரப்பிரஸ்த நகரம் போய்ச் சேர்ந்தார்கள். அவர்களுக்கு முன்னரே ஸித்தார்த்தகனும், பின்னால் நிபுணகனும் போய்க்கொண்டிருந்தார்கள். சமித்தார்த்தகனும் உதும்பரனும் அருகில் வட்டமிட்டுக்கொண்டு போனார்கள். அவர்கள் அறுவரும் ஒரு சத்திரத்திற்குப் போனார்கள். ஒற்றர்கள் மாத்திரம் வேறு வேறு இடங்களில் அந்தச் சத்திரத்திலேயே தங்கினார்கள். சாணக்கியர் தனியே தெருக்களில் உலவப் போனார். மகத ராஜ்யத்துத் துருப்புகள், யானைப்படை, குதிரைப்படை, தேர்ப்படை, காலாட்படை ஆகிய இவைகளெல்லாம் கூட்டங் கூட்டமாக அந்நகரில் இருந்

தன. தக்ஷசிலைக்குப் போகும் கோட்டைவாசலில் பல குப்தன் என்னும் தளகர்த்தன் சாணக்கியரை வழி மறித்து நிறுத்தினான். அவன் தேர்ப்படைத் தலைமை யதிகாரி. "எங்கே போகிறீர்? ஐயா" என்று அவன் வினவிய தற்குச் சாணக்கியர், "நாங்கள் அறுவர் வந்திருக்கிறோம். புண்ணிய க்ஷேத்திரமாகிய அமரநாதத்திற்குப் போகிறோம்" என்றார்.

"அலிகசுந்தரன் (அலெக்சாண்டர்) என்பவன் கையின்கீழ்க் கொடியர்களான காட்டுமிருண்டிகளும் மிலேச்சர்களும் வந்து அவ்வழியை அடைத்துக் கொண்டிருக்கிறார்களென்று உமக்குத் தெரியாதா? பௌரவன் எனச் சொல்லிக்கொள்ளும் பராக்கிரமியான பர்வதக ராஜனை அவன் தோல்வியுறச் செய்து விட்டான். அவனைத் தக்ஷசிலையரசன் மலைக்கணவாய்களின் வழியாக நம் நாட்டுக்குள் வரவிட்டான். இப்பொழுதும் அவனுக்கு உதவி செய்துகொண்டிருக்கிறான். பர்வதகனும் இப்போது அவனுக்கு உதவியாயிருக்கிறான். இந்தக் காட்டு மிருண்டியும் அம்பஸ்தர், பௌரவர் முதலிய பெயர்களைச் சொல்லிக் கொள்ளும் பஞ்சாபுச் சிற்றரசர்களும் ஒன்று சேர்ந்து காலசூரிகளையும் சங்கலத்து க்ஷத்திரிய வீரர்களையும் நசுக்கி விட்டார்கள். அந்தக் காரணத்தினாலே நம் சேனை இவ்விடத்தில் சத்துருவை எதிர்ப்பதற்குச் சித்தமாகக் கடந்த ஒரு மாதகாலமாய் இங்கே அணிவகுக்கப்பட்டிருக்கின்றது. அந்தக் காட்டுமிருண்டித்துருப்புகள் நம் துருப்புகளை எதிர்க்கத் துணியமாட்டார்களென்று கேள்விப்படுகிறேன்" என்று தளகர்த்தன் சொன்னான்.

"நம் படைகளுக்கு நாயகன் யார்?" என்று சாணக்கியர் கேட்க, "மகாராஜனும் ராஜகுமாரர்களும் சொல்கிற

படி செய்வதற்குப் பத்தசாலன் சேனுதிபதியாய் இருக்கிறுன்" என்று தளகர்த்தன் சொன்னுன்.

"சந்திரகுப்தன் தன் படைப்பகுதியை நடத்திக் கொண்டுவந்திருக்கிறுனே?" என்று சாணக்கியர் வினவினுர்.

"ஓஹோ, இல்லை. அந்த ராஜகுமாரன் ராஜாக்ஞைக்குத் தப்பி இப்போது ஓடி ஒளிந்துகொண்டிருக்கிறுன். அவன் தலையைக் கொணர்வார்க்குப் பரிசு கிடைக்கும். அவனை உயிருடனுவது சவமாகவாவது கொண்டு போவார்க்கு ஒரு லக்ஷம் பொற்பணம் கிடைக்கும்" என்று தளகர்த்தன் சொன்னுன்.

"ஒரு லக்ஷம் பொற்பணமா!" என்று சாணக்கியர் வியப்புற்றுர்.

அப்போது தளகர்த்தன், "உமக்குப் பொன்னுசை மேலிட்டது போலும்! நல்லது. என் சங்கதியைச் சொல்லுகிறேன் கேளும். இப்படிப்பட்ட கொலைக்காசுக்கு நான் ஒருபோதும் ஆசைப்படமாட்டேன்" என்று சொன்னுன்.

"ஏன்? ஐயா! அரசனே உவந்து கொடுக்கும்போது அதை ஏற்பதிற் குற்றமென்ன?" எனச் சாணக்கியர் வினவினுர்.

"ஒருவேளை குற்றமொன்றும் இல்லாதிருக்கலாம். ஆனுல், மௌரியர் சேனுபதியாயிருந்தகாலத்தில் அவர் கையின் கீழ் நான் உத்தியோகம் செய்திருக்கிறேன். உலகத்திலுள்ள பொன் அத்தனையும் கிடைப்பதானுலும், அவருடைய பேரப்பிள்ளையை நான் காட்டிக்கொடுக்கலாகாது" என்று பலகுப்தன் சொன்னுன்.

"நீர் சந்திரகுப்தனுக்கு நண்பரெனத் தோன்றுகிறீரே."

"ஆம். அவனுக்காக என் பிராணனைக் கொடுக்கவும் ஸித்தமாயிருக்கிறேன், ஐயரே. அவன் எனக்கு உறவினனாக இருப்பதோடு முன்னர் எனக்கு யஜமானரா யிருந்த வருடைய பேரன்" என்றான் பல்குப்தன்.

அந்தக் குடும்பத்துக்கு அவன் உற்ற நண்பனெனக் கண்டு சாணக்கியர் தாங்கள் தப்பியோடி வந்திருக்கிற விவரத்தைச் சொல்லி, அவ்வூரில் தாங்கள் தங்கியிருப் பதற்கும், அங்கிருந்து நந்தர்களுடைய படைவரிசைகளைத் தாண்டி யமுனையைக் கடந்து க்ஷேமமாக அப்புறம் போவ தற்கும் வேண்டிய உதவியையெல்லாம் பெற்றார்.

மகதர்களுடைய அணிவகுத்த படைவரிசைகளைப் பின்னே விட்டகன்று யமுனையாற்றை அவர்கள் கடந்து கொண்டிருக்கையில், சந்திரகுப்தனுடைய கண்ணில் நீர் ததும்பியது. சாணக்கியரைப் பார்த்து அவன், "இந்தப் படையாட்களோடு சேர்ந்து நின்று நான் போர்புரிவதற் கில்லையே என விசனிக்கிறேன். என் தோழர்களில் அநேகர் தத்தம் படைப் பகுதிகளின் தலைவர்களாக அங்கே நிற்கிறார்கள். ஆனால், எனது மாறுவேஷத்தில் அவர்கள் என்னைக் கண்டு கொள்ளவில்லை" என்று காதோடு சொன்னான்.

"நல்லது. நீரும் ஒரு நாள் அவர்களெல்லாருக்கும் தலைவராய் நிற்பீர். உண்மையில் நீர், தெய்வானுக்கிரகத் தால், மகாபாரதயுத்தம் நடந்த நாள்முதல் இதுவரையில் இந்நாட்டில் எவரும் காணாத மிகப் பெரிதான போர்ப் படைத் தலைவராவீர். ஆனால், துராக்கிரமிகளான இந்த நந்தர்களை முதலிற் கவிழ்த்து உம்மை அரசனாக்குவோ மாக" என்று சாணக்கியர் சொன்னார்.

அவர்களைப் படகு அக்கரையிற் கொண்டுபோய்ச் சேர்த்தது. அவர்களைச் சாமானிய யாத்திரிகர்களென்று மாத்திரமே தெரிந்துகொண்டிருந்த பலகுப்தனின் ஆட்களுக்கு வந்தனம் சொல்லித் திருப்பியனுப்பிவிட்டு, அவர்கள் தம் வழியே போகலானார்கள். அப்படிச் செல்லும் போது, "நான் மகதநாட்டை விட்டு நீங்கியது இதுவே முதன்முறை. இனி எப்பொழுது திரும்பிவருவேனோ, தெய்வத்திற்குத்தான் தெரியும்" என்று சந்திரகுப்தன் துக்கித்துக் கூறினான்.

"இந்நந்தர்களோடு போர்புரிவதற்குப் போதுமான படையைத் திரட்டிக்கொண்டவுடனே திரும்பி வருவோம். அது சிறிது காலம் பிடிக்கலாம். ஆனால், திரும்பி வருவதற்காகவே மகதத்தினின்றும் நீங்குகிறோமென்பதிற் சிறிதும் ஐயமில்லை" என்றார் சாணக்கியர்.

---

## அத்தியாயம் 9

# இந்தியாவின் மீது இடி

அசுவகணியின்[1] அரசனை அசுவஜித்தும், அவன் ராணி கலாபினியும்[2] மசிகம்[3] என்னும் தங்கள் மகத்தான மலைக்கோட்டையில் அந்தரங்கக் கொலுமண்டபத்தில் அமர்ந்திருந்தார்கள். அந்தக் கோட்டை மசகவதி எனவும், மச்சகம் எனவும் பெயர் பெறும். அதுவே அவர்களுடைய தலைநகரம். தக்ஷசிலை அரசனும் அவனுடைய மகன் அம்பியும் அனுப்பிய விசேஷ வர்த்தமானம் கொண்டுவந்த கராளன் என்னும் ராஜதூதனோடு அவர்கள் அத் தனி மண்டபத்திற் சம்பாஷித்துக்கொண்டிருந்தார்கள். அந்தக் கராளன், ராணியாகிய கலாபினிக்கு உறவினன். அவன் நிரம்பப் புத்திசாலி என்பது கலாபினியின் கொள்கை. ஆதலால், அவனுடைய வார்த்தையில் அவளுக்கு அபரிமித நம்பிக்கை உண்டு.

---

1. இவர்களுக்கு அஸ்ஸகனுய் என்றும் அசுவகர் என்றும் பெயர் உண்டு. இந்நாளில் இவர்களை ஆப்கானியர் என்பார்கள்.

2. பதினறு கலைகளோடு கூடிய சந்திரன். அழகின் பொருட்டு இங்ஙனம் பெயரிடுவார்கள்.

3 பாம்புப்புற்று. அந்தக் கோட்டையைச் சத்துரு பிடிக்க முடியாதென்பதையும் அக்கோட்டைகாவலரின் வீரத்தையும் குறிக்கும் பெயர்.

அசுவஜித்துக்கு வயது 30. பார்வைக்கு ஓநாய் போன்றிருப்பான். கலாபினிக்கு வயது 22. வசீகரம் மிக்க அழகி. ஆனால், தைரியம் சிறிதும் இல்லாதவள். கராளனோ குள்ள நரிக்குரிய கரவு முகமும், ராஜதூதனா யிருப்பதற்கெனவே பிறந்தவனென்று சொல்வதற்குரிய நயநடவடிக்கைகளும் உள்ளவன். அவர்களுடைய கோட்டையின் மீது அலெக்சாண்டர் படையெடுத்து வரப்போகிறானெனவும், தக்ஷசிலை யரசனும் அம்பியும் தீர்க்கமாய் ஆலோசித்து அவனுக்கு வணங்கிப்போனது புத்திசாலித்தனமெனவும், அவர்கள் இப்போது சொல்லியனுப்பியபடி தங்களைப்போல அசுவஜித்தும் அலெக்சாண்டருக்கு வணங்கித் தன் நாடுகளையும் ஸ்வதந்திரங்களையும் காப்பாற்றிக்கொள்வதே நயநீதியெனவும் அவர்களுக்குக் கராளன் வற்புறுத்திக்கொண்டிருந்தான்.

"அசுவகர்களாகிய நாங்கள் எவருக்கும் எப்போதும் மனமுவந்து வணங்கியதில்லை. எங்களை வெல்வது பெருங் கஷ்டமெனப் பெரிய பெரிய வெற்றியாளரும் கண்டுளார். எங்கள் நாட்டை வைத்து நிர்வகிப்பது அதனினும் கஷ்டமெனக் கண்டுளார். இந்த அலெக்சாண்டர் இதுகாறும் என்ன செய்துளான்? அதைச் சொல்லுக. அவனைப்பற்றி என்னென்னவோ கதை கதையாகச் சொல்லுகிறார்கள். அவற்றுள் எதை நம்புவது எதை விடுவதெனை எங்களுக்குத் தெரியவில்லை" என்று அசுவஜித்து சொன்னான்.

"அவன் கிரீஸ், எகிப்து, பாரஸீகம் என்னும் ராஜ்யங்களை ஜயித்துளான். அவனுடைய தளகர்த்தர்களான ஹெபேயிஸ்டியனும் பெர்டிக்கசும், தக்ஷசிலையரசனின் உதவியையும் அம்பியின் உதவியையுங் கொண்டு தங்கள் சேனையை க்ஷேமமாக உதபாண்டபுரத்துக்குக் கொண்டு போயிருக்கிறார்கள். இடைவழியிலுள்ள சிற்றரசர்களெல்லா

ரும் அவர்களைத் தாராளமாகப் போகவிட்டார்கள். அவனுடைய பிறநாட்டு வியவகாரங்களும் ராணுவ விஷயங்களும் யவனப்படைத்தலைவன் ஒருவனிடம் ஒப்பிக்கப்படுமெனக் கேட்டு, புஷ்கலவதியின் அரசனான ஹஸ்தி என்பவன் அவனைப் பேரரசாகப் பாராட்டவில்லை. தன் கோட்டைக்குள் புகுந்துகொண்டு அவன் சாவுக்குத் துணிந்து எதிர்த்துப் போராடச் சித்தமாயினான். முப்பது நாள் யவனர்கள் அவனுடைய கோட்டையை முற்றுகை போட்டிருந்தார்கள். அதற்குப் பிறகு, புஷ்கலவதிப் பிரதேசங்களை அளிப்பதாக வாக்குறுதி கூறி ஹஸ்தியின் ஞாதியான ஸஞ்சயன் என்பவனை வசப்படுத்திக் கொண்டார்கள். அவன் கோட்டைக் கதவுகளைத் திறந்து விட்டான். யவனர்கள் கோட்டைக்குட் புகுந்து ஹஸ்தியையும் அவன் அனுசரர்களையும் கொன்று, கோட்டையையும் தகர்த்துத் தரைமட்டமாக்கினார்கள். புஷ்கலவதிப் பிரதேசங்களைப் பெற்று ஸஞ்சயன் யவனர்களுக்கு ராஜ விசுவாஸப்பிரமாணம் செய்து கொடுத்தான்" என்று கராளன் சொன்னான்.

அதற்கு அசுவஜித்து, "என்ன மகாதுரோகி! இப்படிப் பட்டவர்கள் ஒரு நாளும் ஓங்கி வாழமாட்டார்கள். அந்த யவன தளகர்த்தர்கள் இப்போது என்ன செய்துகொண்டிருக்கிறார்கள்?" என்று கேட்டான்.

"அலெக்சாண்டருடைய வரவுக்காகக் காத்துக் கொண்டு அவர்கள் உதபாண்டபுரத்தில் தங்கியிருக்கிறார்கள்."

"இந்த அலெக்சாண்டர் இத்தனை நாள் என்ன செய்துகொண்டிருந்தான்? என் வேவாட்கள் வந்து சொல்

வது நேருங் கூறுமாக இல்லை. உள்ளபடி விருத்தாந்தத்தை எனக்குச் சொல்லு."

"மற்றொரு சேனையுடன் அவன் அஸ்பேஸிய நாடுகளையும் கௌட தேசத்தையும் பிடிக்கப்போனான். குசத்துவஜம் என்னுங் கோட்டையைத் தாக்கிப் பிடித்தான்; அந்நகரத்தை நிலமட்டமாக்கினான். அக்கோட்டையினின்று ஓர் அம்பு வந்து அலெக்சாண்டரைக் காயப்படுத்தியதனால் அதைக் காத்துக்கொண்டிருந்தவரெல்லாரையும் கொன்றான். அண்டகத்தையும் கோரியையும் பிடித்துக்கொண்டான்."

"ஆம், கோரிராஜனது பிணத்தை உண்மையாகவே யவனர்கள் கொண்டு போனார்களா? சொல்லு. அந்தத் தீரன் எப்படி மரண மெய்தினான்?"

"அலெக்சாண்டருடைய தளகர்த்தனை துலமயி[1] என்பவனைத் தாக்கி ஈட்டியினாற் குத்தினான். அது துலமயியின் தலைச்சீராவிற் பட்டு உடைந்து பயனற்றதாயிற்று. அவனைத் துலமயி துடையின்மீது திருப்பியடித்தான். கோரி கீழே விழுந்தான். துலமயி அவனைக் கொன்று அவனுடைய ஆயுதங்களைக் களைந்து கொண்டான். அவனுடைய பிணத்தை யவனர்கள் கொண்டு போகையில் கோரியின் மெய்காவற்படையினர் திடசங்கற்பத்தோடு வந்து தாக்கிப் பிணத்தைப் பிடித்தார்கள். ஆனால் துலமயிக்கு உதவி செய்யப் பதாதிப்படையை அலெக்சாண்டர் கொண்டு வந்தான். முடிவில் கோரியின் மெய்காவற்படையினரைத் துரத்திவிட்டு யவனர்கள் பிணத்தைக் கைப்பற்றிக்கொண்டனர்."

---

1. டாலமி.

"என்ன கண்ணராவி! அதற்குப் பிறகு அலெக்சாண்டர் என்ன செய்தான்?" என்று அசுவஜித்து வினவினன்.

"ஹரிகாமைப் பிடித்தான். காசியபபுரத்துக்கு வெளியே நடந்த பெரும்போரில் அஸ்பேஸியரைத் தோற்கடித்தான். அவர்களில் 20,000 பேரைக் கொன்முன். 40,000 பேரைச் சிறைப்பிடித்தான். 2,30,000 மாடுகள் உட்பட மிகுதியான பொருளைக் கொள்ளையடித்துப் பட்டணத்தைப் பிடித்துக் கொண்டான். தன் சேனையில் கிழவர்களாயும் வீட்டுக்குப் போகவேண்டுமெனனும் ஆவலுள்ளவர்களாயும் இருந்த ஆட்களின் வசமாக மேற்சொல்லிய மாடுகளுள் மிக அழகானவை 10,000 பொறுக்கியெடுத்து மாஸிடோனியாவுக்கு அனுப்பினன்."

அசுவஜித்து ஆச்சரியப்பட்டு, "அவ்வளவு தூரம் அவைகளைக் கொண்டுபோக முடியுமா?" என்று கேட்டான்.

"கொண்டு போக முடியும்; ஏன் என்முல், அந்த வழி முழுதும் அவன் சொந்த ராஜ்யமேயல்லவா?"

அப்போது கலாபினி, "ஓ, அப்படியானல் அவன் மிகப் பெரிய அரசனயிருக்கவேண்டுமே. மற்றவர்களைப்போல நாமும் அவனுக்கு வணங்கிப் போவோம்" என்முள்.

அதற்கு அசுவஜித்து, "அவன் பெரிய அரசனயிருக்கலாம். அதனல் அவன் நமது ஸ்வதந்திரத்தை அழிக்க முயலுவானேன்? அது நியாயமல்லவே. நல்லது, காசியபபுரத்தைப் பிடித்தபின் அவன் என்ன செய்தான்?" என்று கேட்க, கராளன், "நைஸாவைப் பிடித்துக் கொண்டான். யவனப் படைகள் அங்குள்ளவர்களுடைய சமாதிக்கட்டடங்களை எரித்துப் பாழாக்கினர்கள். நைஸியர் உயிர் போனல் போகட்டுமென இவர்கள் மீது பாய்ந்தபோது அவர்களை யவனர்கள் மடக்கியடித்துத் துரத்திவிட்டார்கள். அப்

போது அந்த நகரத்து அத்தியக்ஷனை அக்ஷூபி என்பவன் சத்துருக்களுக்குப் பணிந்து போகும்படி நைஸியர் களுக்குப் போதித்தான். நதியொன்று குறுக்கே இருந்ததனு லேயே யவனர்கள் நைஸியர்களின் மீது திரும்பிப் பாய்ந்து அடியோடு அழிக்காமல் விட்டார்கள். ஏனெனில், யவனர் களுக்குப் படகுகள் இல்லை. அப்போது அலெக்சாண்டர், "நீந்தக் கற்றுக்கொள்ளாததனுல் நான் எவ்வளவு தௌர்ப் பாக்கியனுனேன்!" எனக் கூவினுன். ஆற்றங்கரையில் அவன் நின்று கொண்டிருந்தபோது அக்ஷூபி போய் நைஸியர்கள் சரணமெனச் சொன்னுன். அவனை ஆயுள் பரியந்தம் நைஸா வுக்கு மண்டலாதிகாரியாக்க விரும்பி, அவனுடைய ஆட் களில் உத்தமமானவர்கள் நூறு பேரைப் பிணையாளிகளாக அனுப்பும்படி கேட்டான். அதமர்கள் நூறுபேரை அனுப்பி னுல் நன்ருக ஆட்சி புரிவேனென்று அக்ஷூபி சொன்னுன். இந்தியாவை ஜயிப்பதற்கு அலெக்சாண்டருக்குத் துணை யாகத் தன் மகன் வசமாகவும் தௌஹித்திரன் வசமாகவும் 300 கைதேர்ந்த குதிரை வீரர்களின் பட்டாளமொன்றை அனுப்ப வாக்களித்தான். அன்றியும், நைஸியர்கள் என் பார் டயோனிஸியஸ் என்பவனின் சந்ததியாரானமையின், யவனர்கள் தங்களைவிட்டு நெடுங்காலமாகப் பிரிந்துபோன உறவினர்களென்று சொல்லி அவர்களை அக்ஷூபி வசப் படுத்திக்கொண்டான்" என்ருன். அசுவஜித்தும் கலாபினி யும் நகைத்தார்கள்.

"இந்த உறவைக் கெட்டிப்படுத்துவதற்கு அவர்கள் என்ன செய்தார்கள்?" என்று அசுவஜித்து வினவினுன்.

"டயோனிஸியஸின் ஞாபகார்த்தமாகக் கொண்டா டும் பண்டிகையொன்றைக் காண்பதற்கு அலெக்சாண்டரை யும், அவனுடைய தளகர்த்தர்களையும், பொறுக்கியெடுத்த

வேறு சிலரையும் அவர்கள் மேரோஸ்[1] மலைக்கு அழைத்துக் கொண்டு போனார்கள். காரமில்லாத மதுபானங்களும் புராணக் கூத்துக்களும் பாட்டுக்களும் விசேஷமாக இருந்தன. அந்தக் காடுகளில் நைஸியர்களோடு குடித்துக் கூத்தாடிப் பாடிக் குலவிக்கொண்டு யவன யுத்தவீரர்கள் பத்துநாள் வரையிற் கோலாகலமாகக் காலங்கழித்தார்கள். அப்படிக் குடித்துக் கூத்தாடிய நிஷ்கபடமான ஜனங்கள் தங்களுக்கு உறவினர்களென்றே நினைத்து யவனர்கள் அவர்களோடு அந்நியோன்னியமாகக் கலந்திருந்தார்கள்."

"இவ்விடத்திற்கு அவர்கள் எப்போது வருவார்கள்?" என்று அசுவஜித்து கேட்டான்.

"இன்றைக்கே வருவார்களென்று சொல்லிக்கொள்ளுகிறார்கள். ஆனதனாலேயே, நீங்களும் அவர்களுக்கு இணங்கிப் போக வேண்டுமென்று உங்களுக்கு ஆலோசனை சொல்லும்படி தக்ஷசிலாதிபதியும் அம்பியும் என்னை அவசரமாக அனுப்பியிருக்கிறார்கள்" என்று கராளன் சொன்னான். அப்போது அசுவஜித்தைப் பார்த்துக் கலாபினி, "தக்ஷசிலையும் அம்பியும் போல நாமும் அலெக்சாண்டரை அரசனைக் கொள்வோம்" என்றாள்.

அதற்கு அசுவஜித்து, "கூடாது, ஒரு நாளும் கூடாது! என் நாட்டுக்கு நான் அவமானம் விளைத்தேனென்று எவரும் சொல்லாதிருப்பாராக. நமது குலத்தின் கௌரவத்தைக் காப்பதற்காகவும், நம் மலைகளின் ஸ்வதந்தரத்தைப் பாலிப்பதற்காகவும் நம் முன்னோர்கள் செய்ததுபோல, நாம் போர் புரிவோம். உலகத்திலுள்ளவர்களுள் முதல்தரமான 20,000 வீரர்களடங்கிய குதிரைப்படையும், 30,000 பதாதிப்படை

---

1. இந்நாளில் கோஹிமூர் என வழங்கப்பெறும்.

யும் நமக்கு இருக்கின்றன. இதுவன்றி, விஜயவர்மனுடைய தலைமையின்கிழ், கைதேர்ந்த 7,000 மத்ரகர்கள் இருக்கிறார்கள். மலைக்கோட்டை என்னும் இந்தப் பாம்புப்புற்றிலிருந்து நாம் எத்தனைநாள் வேண்டுமானாலும் சோர்வுறாமல் சத்துருவை எதிர்க்கலாம். இந்தப் புற்றைத் தாக்குகிறவனெவனும் (பாம்பினால்) விஷம் தீண்டப்பெறுவான். ஒருவேளை இந்தக் கோட்டையைச் சத்துரு பிடித்துக் கொண்டபோதிலும், அயர்நாஸ் (Aornos) என்னும் கோட்டைக்கு நாம் எளிதிற் போய்விடலாம். அதுவும் நீடித்த முற்றுகை தாங்குவதற்கு ஏற்றவாறு பந்தோபஸ்து செய்யப்பட்டிருக்கின்றது. அயர்நாஸை ஒருபோதும் ஜயிக்கமுடியாது" என்று சொன்னான்.

அந்தச் சமயத்தில் தூதனொருவன் ஓடிவந்து, "மகாராஜா, யவனப்படை இங்கிருந்து 20-மைல் தூரத்திலேயே இருக்கின்றது" என்றான்.

"சரி, நான் போய் விஜயவர்மனோடு கலந்து ஆலோசித்து, அவர்களைத் தக்கவாறு எதிர்கொள்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வேன்" என்று சொல்லி அசுவஜித்து எழுந்து வெளியே போனான்.

"அம்பி பயப்பட்டதுபோலவே இவர் முரட்டுப்பிடியாய்ப் பேசுகிறார். எனக்குச் சகோதரி முறையிலுள்ள கலாபினி விவேகம் உள்ளவள். சமயசந்தர்ப்பம் அறிந்து புத்திசாலித்தனமாக நடந்துகொள்ளக்கூடியவள். எப்போது எதிர்க்கவேண்டும் எப்போது வணங்கவேண்டும் என்று அவளுக்குத் தெரியும். அவளுடைய கணவனை அசுவஜித்தோ முரட்டுப் பிடிவாதக்காரன். அவனுக்குச் சண்டை போடத்தான் தெரியும்; சிங்கத்தின் முன்னும் சண்டைக் கடாவாக எதிர்த்துப் போவது எப்போதும் நல்லதன்று;

அழகிற் சிறந்த என் ஸகோதரியின் வார்த்தை அரசியல் வியவகாரங்களில் அவனிடம் செல்லுவதில்லை; என்ன கிரகசாரம்!" என்று கலாபினிக்குக் காரளன் உரையேற்றினான்.

"என்ன செய்கிறது! இவ்விடத்து ஜனங்களுக்கு அரசியல் வியவகாரமே தெரியாது. சண்டைபோடத்தான் தெரியும். இன்றைக்குத் தோற்றுப்போனாலும், நாளைக்குச் சண்டைபோடலாமென்னும் எண்ணங்கொண்டு உயிர்வாழ்வார்கள்" என்று கலாபினி சொன்னாள். அதற்குப் பிறகு அவள், "அலெக்ஸாண்டர் மிக்க சுந்தர புருஷனென்று சொல்லுகிறார்களே, அது உண்மைதானா?" என்று காரளன் காதில் குசுகுசுவென மெல்லக் கேட்டாள்.

அதற்குக் காரளன், "ஸ்திரீகளுள் நீ எவ்வளவு அழகுவாய்ந்தவளோ அவ்வளவு, புருஷர்களுள் அவன் அழகு வாய்ந்தவன்" என்று பதில் சொன்னான். கலாபினி நாணித் தலை குனிந்தாள். பிறகு அவள் உள்ளே போய் விட்டாள். காரளன் தன் காரியத்தைப் பார்க்கப் போனான்.

அன்றைப் பிற்பகல் யவனச்சேனை மசிகம் வந்துசேர்ந்தது. அந்தப் பட்டணத்தின் ஸந்நிவேசத்தைப் பார்த்து அலெக்சாண்டர் ஆச்சரியப்பட்டான். கிரேடிராஸைப் பார்த்து, "தென்புறத்திலும் மேற்புறத்திலும் மகத்தான கற்பாறைகள் இருக்கின்றன. அவைகளின்மீது ஏறுவது கஷ்டம்; கீழ்ப்புறத்தில் மசகவதி என்னும் விரைந்தோடும் மலையாறு ஒன்று இருக்கின்றது. கருங்கல் மரம் ஆகிய இவைகளினாற் கட்டப்பட்ட பலமான மதில், நான்குமைல் சுற்றளவுள்ளது, கோட்டையைச் சுற்றியிருக்கின்றது. அதன் மூன்றுபுறத்திலும் அகழும், நான்காம்புறத்தில் நதியும் இருக்கின்றன. அதைத் தாக்குவதற்கு நாம் நிதானமாய் ஆலோசித்து வகை செய்யவேண்டும்" என்று சொன்னான்.

அந்த வேளையில் அசுவஜித்தும் விஜயவர்மனும் அசுவகர்களுடன் கோட்டைக்கு வெளியே பாய்ந்துவந்து, கோரமாகத் தாக்கி, யவனர்கள் மூன்றுமைல் தூரத்திற்கப்பாலுள்ள குன்றினண்டை திரும்பியோடும்படி செய்தார்கள். ஆனால், அலெக்சாண்டர் தன் படைகளைத் திரும்பத் திரட்டிக்கொண்டுவந்து அசுவகர்களை அடித்துக் கோட்டைக்குள் ஓடியொளியும்படி செய்தான்.

மறுநாட்காலையில் அலெக்சாண்டர் எந்த இடத்தில் என்ன இருக்கிறதென்று சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தான். அப்போது அலங்கத்தின் மீதிருந்து அம்பொன்று வந்து அவன் காலில் தைத்துக் காயப்படுத்தியது. காயத்தைக் கட்டிக்கொள்ளக் காத்திராமல், முற்றுகை ஏற்பாடுகளைப் பராமரித்து, கோட்டையை நன்றாக முற்றுகையிட்டான். தரைமட்டத்திற்குச் சரியாக அகழில் அணை போடத் தலைப்பட்டான். அதற்குப் பிறகே அவன் காயத்தைக் கட்டிக்கொண்டான். அதற்குள்ளாக இரத்தம் கட்டி கட்டிப்போயிற்று; கடுநோ வுண்டாயிருந்தது.

“நான் தெய்வப் பிறப்பென்றும், ஜீயஸின் மகனென்றும், எல்லாரும் நினைத்திருக்கிறார்கள். ஆனால், நானும் மானிடப்பிறப்பே என்று இப்போது எனக்குத் தெரிகிறது” என்று யூமினிஸைப் பார்த்து அலெக்சாண்டர் வேடிக்கையாகச் சொன்னான். காயங் கட்டிக்கொண்டவுடனே கோட்டைக்குத் திரும்பிப்போனான். அகழிக்கு அணை போட்டாகிவிட்டது. நகர்த்தக்கூடிய கோபுரங்களையும் மற்றுமுள்ள யந்திரங்களையும் மதில்களினண்டை கொண்டு போய், அவைகளைத் தாக்கி, ஒரு பக்கத்தில் வழியும் உண்டாக்கிவிட்டார்கள்.

கோட்டையைத் தாக்கும்பொருட்டு அலெக்சாண்டர் அந்த வழியாகத் தன் ஆட்களை நடத்திக்கொண்டு போனான். அசுவஜித்தையும் விஜயவர்மனையும் தலைமையாகக் கொண்டு அசுவகர்கள் கைகலந்து கடுமையாகப் போராடி யவனர்களைத் திரும்பிப்போடும்படி அடித்தார்கள். அதிக ஊக்கத்தோடு அலெக்சாண்டர் திரும்பவந்து தாக்கினான். அந்த மதிலுக்கு எதிரே மரக்கோபுரமொன்றைத் தந்து நிறுத்திக்கொண்டு, அதன்மீதிருந்து அவனுடைய வில்லிகள் அசுவகர்களின்மீது அம்புகள் பொழிந்தார்கள். யந்திரங்களிலிருந்து கோட்டையைக் காத்துக்கொண்டிருப்பவர்களின்மீது வேறு பாணங்களும் விடப்பட்டன. அந்தப் பாணங்கள் வந்துவிழும் இடத்தினின்று அசுவஜித்து தன் ஆட்களை நகர்த்திவிட்டான். மதில்களுக்குள்ளே போகமுடியாமல் யவனர்கள் தவித்தார்கள்.

"எங்கள் பாணங்களைக் காட்டிலும் உங்கள் பாணங்கள் சிறந்தவைகளே. ஆனல், உங்கள் ஆட்கள் சிறந்தவர்களல்லர்" என்று அசுவஜித்து ஏளனமாகப் பேசினான்.

மூன்றும் நாள் அகழின்மீது அலெக்சாண்டர் பாலமொன்று போட்டுவிட்டான். மாஸிடோனியப்படையொன்று அந்தப் பாலத்தின் மீதாக விரைந்துபோயிற்று. அவர்களுடைய பளுவினற் பாலம் முறிந்தது; அந்தப் படையினர் அகழியில் விழுந்தார்கள். மேலே இருந்து அசுவகர்கள் எறிந்த அம்புகளினுலும் கற்களினுலும் மற்றப் பாணங்களினுலும் அநேகர் கொல்லப்பட்டார்கள். மிகுந்திருந்தவர்களை மிகக் கஷ்டப்பட்டு அலெக்சாண்டர் கரையேற்றினன். அவர்களெல்லாரும் காயப்பட்டிருந்தனர். அலெக்சாண்டர் கிரேடிராஸைப் பார்த்து, "இந்த எதிர்ப்புக்

11

கெல்லாம் மூலபலம் அசுவஜித்தே. அவனைக் கொல்கிற வரையில் கோட்டையைப் பிடிப்பது கஷ்டம். ஆகையால், அவன்மீதே லக்ஷ்யம் வைத்து அடிப்போம். அவன் எப்பொழுதும் தன் படையின் முன்னணியிலேயே இருக்கிறான். அவனை எளிதில் அடிப்பதற்காகும்" என்று சொன்னான். மறுநாள் அருணோதயத்தில் மாஸிடோனியர்கள் திரும்பத் தாக்கத் தொடங்கினர். அவர்களை எதிர்த்தடிக்க அசுவஜித்து தன் அசுவகர்களை நடத்திக்கொண்டு போனான்; வழக்கம்போல முன்னணியில் நின்றான். எதிரிகள் எறிந்த கவண்கல் ஒன்று தற்செயலாக அவனைத் தாக்கியது; அவன் கீழே விழுந்தான்.

அந்தச் சமயம் பார்த்து அலெக்சாண்டர் கோட்டையைத் தாக்கலானான். நாயகன் இறந்துபோனதனாலும் கலாபினி (கிளியோபிசு)க்குத் தைரியமில்லாததனாலும் அசுவகர்கள் வீரமழிந்துபோனார்கள். அந்தக் கண்டாந்தரமான சமயத்தில், வணங்கிப்போவதே நல்லதென்று கராளன் உபதேசித்துக் கலாபினியின் மனத்தைத் திருப்பினான். மாஸிடோனியர்கள் முனைந்து மூர்க்கமாகப் பாய்ந்து அடித்தார்கள். கோட்டை மதில்களிற் பிளவுண்டாக்கி வெளிக்கோட்டையைப் பிடித்தார்கள். கிளியோபிஸின் உத்தரவுப்படி அசுவகர்கள் போர்செய்யாமல் ஓய்ந்தார்கள். தன் கைக்குழந்தையை எடுத்துக்கொண்டு அவள் அலெக்சாண்டரிடம் போய், அந்தச் சிசுவின் உயிரைக் காப்பாற்றும்படி வேண்டினாள். அவன் கண்ணூடே உற்றுப்பார்த்து அவள், "என் மகனை எனக்கு அளி" என்று கேட்டாள். அவளது அழகைக் கண்டு பிரமித்த அலெக்சாண்டர், "இந்தக் கோட்டைமுழுமையும் பிடித்தவுடன், எனக்கு எவ்வளவு அன்பு இருக்கின்ற

தெனக் காண்பாய்" என்று சொல்லி, அவளையும் அவள் மகளையும் ஒரு கூடாரத்துக்கு அனுப்பினான்.

விஜயவர்மனால் நடத்தப்பட்ட 7,000 மத்ரக வீரர்கள் உட்கோட்டைக்குள்போய், அங்கிருந்து நீடித்து எதிர்க்கத் தலைப்பட்டார்கள். ஒன்பது மாதகாலம் உண்பதற்கு வேண்டிய பண்டங்கள் அவர்களிடம் இருந்தன. வந்து பணிந்து ஆயுதங்களைக் கொடுத்துவிடும்படி அலெக்சாண்டர் அவர்களுக்குச் சொன்னான். அதற்கு விஜயவர்மன், "மாட்டோம். மத்ரகர்களாகிய நாங்கள் ஆயுதங்களை ஒரு போதும் ஒப்பிக்கமாட்டோம். உங்களையும், உங்கள் படைகளையும், உங்கள் பழைய நண்பர்களையும், புதிய நண்பர்களையும், எல்லாரையும் எதிர்த்துப் போர்புரிவோம். உங்களைப்போல நாங்களும் யுத்தத்திற்குச் சிறிதும் அஞ்சாதவர்கள். போருக்குப் பின்வாங்கமாட்டோம். ஏனெனின், போர்புரிவதே எங்கள் குலவிருத்தி. தீரனை அசுவஜித்து இறந்துபோனான். ஆனால், நாங்கள் இருக்கிறோமே. முதல் தரமான கோட்டை யொன்றை நெடுங்காலம் முற்றுகை யிடுவது எவ்வளவு பிரதிகூலமாயிருக்குமென்பது உங்களுக்கும் தெரியும்; எங்களுக்கும் தெரியும். ஆகையால், எங்கள் ஆயுதங்களோடு நாங்கள் கௌரவமாக எங்கள் நாட்டுக்குத் திரும்பிப்போக நீங்கள் விட்டாலொழிய இந்த இடத்தை விட்டு நாங்கள் நீங்கமாட்டோம்" என்றான்.

அதற்கு அலெக்சாண்டர், "அதனினும் அதிகமான அனுகூலம் உங்களுக்குச் செய்கிறேன். உங்கள் ஆயுதங்களை நீங்களே வைத்துக்கொள்ளுங்கள்: என்னண்டை உத்தியோகத்திற்கு வந்துவிடுங்கள்; இதுவரையில் அசுவஜித்து கொடுத்துக்கொண்டிருந்ததைக் காட்டிலும் ஒன்றரை மடங்குச் சம்பளம் கொடுக்கிறேன்; இந்தியாவை

ஜயிப்பதற்கு நீங்கள் எனக்குத் துணையாயிருங்கள்" என்று சொன்னான்.

"மாட்டோம், மாட்டோம். ஆரியர்களுக்கும் ஆரியாவர்த்தத்திற்கும் விரோதமாக அந்நியரைச் சார்ந்து க்ஷத்திரியர்களாகிய நாங்கள் ஒருபோதும் போர்புரியக்கூடாது என்று சென்ற வருஷத்தில்தான் பூஜ்யராகிய சாணக்கியர் எங்களுக்கு உபதேசித்தார். இந்த உபதேசத்தைக் கைக்கொண்டே பெருந்தீரமுள்ள அசுவஜித்தும் போராடினான்" என்று விஜயவர்மன் பதில் மொழிந்தான்.

"அசுவகர்கள் வணங்கிப் போனார்கள்; ஆகையால், அவர்களுடைய கோட்டைக்குள் நுழைந்துகொண்டு, அவர்களுடைய உணவுப்பொருள்களைத் தின்றுகொண்டு, இது வரையில் உங்களை ஆதரித்தவர்களாகவும் யஜமானர்களாகவும் இருந்தவர்களெல்லாரும் அடியோடு அழிந்துபோவதற்கு வழிதேடுவதனால் நீங்கள் உண்மையில் நன்றிகொன்றவர்களாகிறீர்கள்" என்று அலெக்சாண்டர் தர்க்கித்தான்.

அதற்கும் விடாமல் விஜயவர்மன், "அந்த அசுவகர்களே எங்கள் கடமையினின்றும் எங்களை விடுவித்து வேறிடம் போய்ச் சேவகத்தில் அமர்ந்து கொள்ளுங்கள் என்று சொன்னாலல்லாமல், நாங்கள் கோட்டையைக் காப்பதை விடமாட்டோம்" என்று மறுமொழி கூறினான்.

அம்மறுமொழியைக் கேட்டு ஆச்சரியப்பட்ட அலெக்சாண்டர், "உங்களுக்கு என் வார்த்தை போதாதா?" என்றான்.

"போதாது. உன்னுடைய உத்தரவை நாங்கள் ஏற்றுக்கொள்ள மாட்டோம். எங்கள் யஜமானர்களாகிய அசுவகர்

களின் கட்டளைக்கே கீழ்ப்படிவோம். அந்த யஜமான ஸ்தானத்தில் அசுவகர்களின் ராணி இருக்கிறாள்" என்றான் விஜயவர்மன்.

"அவள் என்னிடம் கைதியாயிருக்கிறாள்" என்று அலெக்சாண்டர் சொன்னான்.

"அவள் கைதியாயிருந்தாலென்ன? எப்படியிருந் தால் எங்களுக்கென்ன? அவள் எங்களுக்கு யஜமானி யஜமானியே இன்னும்" என்று விஜயவர்மன் பதில் கூறினான். அலெக்சாண்டர் சிறிது நிதானித்து ஆலோசிக்கலானான். சாவுக்குத் துணிந்த இந்த வீரர்களோடு போர்புரிந்து இவர்களை அடக்கும்பொருட்டு இங்கே தாமதிப்பதானால் அநேக மாதங்கள் வீணே கழியும்; அந்தக் காலத்தில் எத்தனையோ பெருங்காரியங்கள் செய்யலாம். ஏற்கெனவே தான் ஆலோசித்து வகுத்துள்ள திட்டங்களெல்லாம் கெட்டுப்போமென்று எண்ணினான். இவ்வாறு எண்ணிப் பார்த்து உதட்டைக் கடித்துக்கொண்டு, கலாபினியை அழைத்து, "இந்த ஆட்கள் அலெக்சாண்டரின் உத்தரவைக் கேட்கமாட்டார்களாம். ஆனால், கிளியோபிஸ்! உன் சொற்படி நடப்பதாக வாக்களிக்கிறார்கள். ஆகையால், உன் கைக்குழந்தையின் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டுமானால், உட்கோட்டையை விட்டுப் போம்படி இவர்களுக்கு நீ கட்டளையிடு" என்று சொன்னான்.

அழுதுகொண்டே அவள் வெளியேவந்து, மத்ரகர்களை அவர்களுடைய கடமையினின்றும் விடுவித்து, உட்கோட்டையை விட்டு நீங்கி வேறெங்கேனும் போய்ச் சேவகத்தில் அமர்ந்துகொள்ளும்படி சொன்னாள். அவர்கள் கோட்டையைவிட்டுப் போகையில் அவர்களைத் துன்புறுத்துவ

தில்லையென அலெக்சாண்டர் வாக்களித்தான். அதன்மீது விஜயவர்மன் தன் ஆட்களோடு, மாஸிடோனியர் பாளையத்திற்கு 9-மைல் தூரத்திலிருந்ததோர் குன்றத்துக்குப் போய்ச்சேர்ந்தான்.

"என் சேனையில் உங்களுக்கு உத்தியோகம் கொடுக்கிறேனென்று நான் சொல்லிய வார்த்தையைத் திரும்ப நினைத்துப் பாருங்கள். அந்த மூடன் சொல்லிய புத்திமதியை மறந்துவிடுங்கள். நான் பிறப்பில் யவனகுலத்தவனே. உலகத்தவரெல்லாரையும் உறவுகொள்ள விரும்புகிறேன். யவனர், எகிப்தியர், பாரசீகர், இந்தியர் என்னும் வித்தியாசமே எனக்கு இல்லை. அந்த விஷயம் உங்களுக்குச் சசிகுப்தன் சொல்வான்" என்று விஜயவர்மனுக்கு அலெக்சாண்டர் ஓதினன். விஜயவர்மன் தன் படையாட்களை நடத்திக்கொண்டு போகையில், "நான் ஆலோசனை செய்து இரண்டுநாளில் உமக்குப் பதில் சொல்வேன்" என்று மொழிந்தான். அப்பொழுது காலை ஒன்பது நாழிகை.

சசிகுப்தனையும் கிரேடிராஸையும் அழைத்து அலெக்சாண்டர், "இவர்கள் மிக ஆபத்தான ஆட்கள். கிரேக்கர்களுக்கு எவ்வளவு கர்வம் உண்டோ அவ்வளவு கர்வம் இவர்களுக்கும் இருக்கின்றது. கூலிக்கு உழைக்கிறவர்களேயானலும், கௌரவக்கொள்கை இவர்களுக்கு அதிகமாக இருக்கின்றது. பணத்திற்கு ஆசைப்பட்டு ஒரு காரியமும் செய்பவர்களாக இல்லை. நம்மிடத்தில் சம்பளக்காரராக வந்து சேரத் தீர்மானிப்பார்களானல் நல்லதாயிற்று; இல்லாவிட்டால், இவர்களை நாம் அழித்துவிடவேண்டும். தக்ஷசிலையிலும் மற்ற இடங்களிலும் ஜனங்கள் இப்போது நமக்கு நடுங்கிக்கொண்டிருக்கிறார்

கள். இவர்களை இந்தியாவுக்குள் போகவிட்டால், அவர்களெல்லாரையும் கெடுத்து, எதிர்த்துப் போராடத் துணிவூட்டிவிடுவார்கள். ஆதலால், இவர்களை அங்கே போகவிடக்கூடாது. நமது பிரதிஷ்டையினாலும் நம் பேரைக் கேட்டு உண்டாகிற பயத்தினாலும், நம் பேருக்கு அவர்கள் வைத்திருக்கிற மரியாதையினாலுமே பெரும்பாலும் நமக்கு வெற்றி வாய்க்கவேண்டும். ஆனால், இந்த ஆட்களோ நமக்கு அஞ்சுவதுமில்லை; மதிப்பு மரியாதை வைப்பதுமில்லை. ஆகையால், இவர்கள் நம் கூலிக்காரர்களாயிருக்க இசையாவிட்டால் இவர்களைத் துடைத்து ஒழிக்கவேண்டும். இவர்களுடைய எண்ணங்களைத் தெரிந்து, இன்றைச் சாயங்காலமே வந்து எனக்கு அறிவிக்கும்படி சில ஒற்றர்களை அனுப்புங்கள்" என்றான்.

அன்று மத்தியானம் சசிகுப்தன் அலெக்சாண்டரிடம் போய், "ஒற்றர்கள் திரும்பிவந்துவிட்டார்கள். தங்கள் நாட்டாரையே அடக்கும் பொருட்டு அந்நியருக்குத் துணை செய்வதில்லையென விஜயவர்மனும் அவனுடைய ஆட்களும் தீர்மானித்துவிட்டார்கள். இன்றிரவு நடுநிசியில் நழுவியோட நிச்சயித்திருக்கிறார்கள்" என்று சொன்னான். மத்ரகர்கள் சிறிதும் சந்தேகப்படாமலிருக்கையிலே அலெக்சாண்டர் திடீரென்று அவர்கள் மீது பாய்ந்து, அவர்கள் தங்கள் நிலைமையை யுணர்ந்து எதிர்த்துக் காத்துக் கொள்வதற்கு அவகாசம் கொடாமலே, அவர்களில் அநேகரைச் சங்கரித்துவிட்டான். மத்ரகர்களுக்குத் தங்கள் நிலைமை தெரிந்தவுடனே அவர்கள் தங்கள் மாதர்களையும் மக்கள்களையும் நடுவில் நிறுத்தித் தாம் அவர்களை வட்டமாகச் சூழ்ந்துகொண்டு, சலிக்காமல் எதிரிகளை யெதிர்த்துத் தாக்

னார்கள். அப்படித் தாக்குவதில் ஸ்திரீகளும் சேர்ந்து எதிர்த்தார்கள். பணிந்துபோவோம் என்னும் எண்ணமே அவர்களுக்கு உண்டாகவில்லை.

"நாம் க்ஷத்திரியர்கள், க்ஷத்திரியர்களைப் போலவே சாவோம்" என்று கூவினார்கள். எதிரிகள் சங்கியையில் மிக அதிகமாயிருந்ததனால், இவர்களுடைய வீரம் பயன் படாததாயிற்று. இருதிறத்தாருக்கும் கோரமான சண்டை நிகழ்ந்தது. கடைசியில் மத்ரகர்களின் கை சளைத்துப் போயிற்று. விஜயவர்மனைத் தவிர மற்றவர்களெல்லாரும் கொல்லப்பட்டனர். அவன் மாத்திரம் நல்ல குதிரையேறி விரைந்தோடித் தப்பிக்கொண்டான். அந்தச் சங்காரகிருத் தியம் முடிந்தவுடனே அலெக்சாண்டரைப் பார்த்துக் கிரேடிராஸ், "இவர்கள் மிக்க பெருமையோடு மரணமெய்தி னார்கள். இவர்களுக்கு வீர ஸ்வர்க்கமே வாய்க்கும். அதைவிட்டு மானமிழந்து உயிர் வாழ்வதற்கு இவர்கள் இசைந்திருக்கமாட்டார்கள்" என்றான்.

அதற்கு அலெக்சாண்டர், "ஆம், முதலெடுப்பிலேயே இந்தக் குளவிகளை நாசம் செய்ததனால், நாம் பெரிய அபா யத்தினின்றும் தப்பிக்கொண்டோம். இவர்கள் இந்தியா முழுதும் கலகக்கிளர்ச்சி யுண்டாக்கி, அனாவசியமாக அநே கரை நாம் கொல்லவேண்டி வருமாறு செய்திருப்பார்கள். அலெக்சாண்டரின் சத்துருக்களெல்லாம் இங்ஙனமே ஒழி வார்கள்" என்றான்.

அன்றைத்தினம் இரவில் கிரேக்கர் பாளையத்தில் விருந்து நடந்தது. அதில் குடியும் கூத்தும் மிக நிகழ்ந் தன. மசகத்துக்கோட்டையைப் பிடித்து விட்டதற் காகவும், மத்ரகர்களை வம்ச நாசம் செய்ததற்காகவும் அவர்கள் களிகூர்ந்து கொந்தளித்தார்கள். மாஸிடோனிய

ருடைய புருத்துணையாகக் கலாபினியும் அவர்களுடன் அங்கே இருந்தாள். அந்தக் களியாட்டம் முடிந்தவுடன், அவள் அலெக்சாண்டருடன் அவனுடைய கூடாரத்துக்குப் போனாள். சசிகுப்தனைப் பார்த்து ஓனெஸிகிரிடாஸ், "எவ்வளவு சுலபமாக இவள் அவனுக்கு வசப்பட்டுவிட்டாள்!" என்றான். அதற்குச் சசிகுப்தன், "கணவனுடைய சிதையிலேயே மனைவியானவள் ஸககமனம் செய்வது அசுவகர்களுடைய பூர்வ சம்பிரதாயம். ஆனால், தன் மகன் மீதுள்ள அன்புப்பெருக்கத்தாலும், அவனைக் காப்பாற்ற வேண்டுமென்னும் பெருங்கவலையாலும் இவள் குல சம்பிரதாயங்களையும் ஆசாரங்களையும் துறந்துவிட்டாள்" என்று சொன்னான்.

"பூ! துறந்துவிட்டாளா! என்ன தியாகம் செய்துவிட்டாள்? சாதாரணமாக மாதர்மோகத்தில் சிக்கொணாத ஸர்வலோக ஸாம்ராஜ்யனுடைய பிரேமையைப் பெற்றாள். அவன் 'நித்திரை, நாரீ என்னும் இரண்டுமே நான் மானிடன் என எனக்கு நினைப்பூட்டுகின்றன. முதற் கூறியதைக் கூடியவரையில் குறைக்கிறேன். பிற் கூறியதை முற்றும் புறக்கணிக்கிறேன்' என்று அடிக்கடி பெருமை பாராட்டிச் சொல்லிக்கொண்டிருப்பான். ஆசியா கண்டத்திற்குள் அழகுமிகுந்தவளெனப் பெயர் பெற்ற டரயஸின் மனைவியான ஸ்டேடீரா (Stateira) என்பவளைப் பார்க்க மாட்டேன் என்று மறுத்தானே. 'கோதையர் கண்ணைக் கெடுக்கும் கூற்றுவர்கள். அவரது மாயவலையினின்றும் விலகியிருப்பதே உத்தமம்' என்று அப்போது அவன் சொன்னான். அப்படியிருந்தும் இப்போது கிளியோபிஸின் மையலில் விழுந்தானே. ஆகையால், அசாதாரணமான இந்நல்லதிர்ஷ்டம் தனக்கு வாய்த்ததற்கு இவள்,

தான் பிறந்த வேளையைப் பெரிதும் பாராட்ட வேண்டும். இனி இவளுக்குப் பிரதாபவானான புத்திர னொருவன் பிறந்து, அசுவகர்களின் சரித்திரத்தையே திருத்தியமைப்பான்,"

அப்போது சசிகுப்தன், "எங்கள் ஜனங்களின் சங்கதி உனக்கு இன்னும் தெரியாது. இவள் வயிற்றில் அலெக்சாண்டருக்குப் பிறந்தவனெவனையும் அசுவகன் எவனும் ஆதரிக்கமாட்டான். அந்தப் பிள்ளை வேண்டுமானால், அநார்யக் காட்டுக்குடிகளுக்குத் தலைவனாகலாம். போரிற் பிராணன் போகாமல் மிகுந்திருக்கிற அசுவகர்கள் அசுவ ஜித்தின் தாயையே மகாராணியாக ஏற்கெனவே கொண்டு, அயர்நாஸ் என்னும் கோட்டைக்குப் போய்விட்டார்கள். இடையில் ஒரு வார்த்தை: அயர்நாஸுக்கு என்னை மண்டலாதிகாரியாக ஆக்க வாக்குக்கொடுத்திருக்கிறார்களே; அது உனக்குத் தெரியாதா?" என்று கேட்டான்.

"ஆம். நான் கேள்விப்பட்டேன். ஆனால் அதை ஜயிப்பது மசகாவைக்காட்டிலும் (Massaka) மிகக் கஷ்டமாயிருக்கும்" என்றான் ஒனெஸிகிரிடாஸ்.

சசிகுப்தன், "அசுவகராஜ்யத்திற்குள் பலம் மிகுந்த கோட்டை அதுவேயென்பது உண்மை. ஆனால், அதைப் பிடிப்பது அலெக்சாண்டருக்கு அவ்வளவு கஷ்டமாயிராது. முக்கியமாக, என் ஆட்கள் வழிகாட்டி உளவு சொல்வதனால் அவருக்கு எளிதாகும்" என்றான்.

கிரேக்கச்சேனை இனி அயர்நாஸின்* மீது பாய்ந்தது. பிரஸித்தமான இந்தக் கோட்டையானது 6,000 அடி உயர முள்ளதொரு குன்றின்மீது கட்டப்பட்டது. இதன் சுற்ற

* இந்நாளில் பிர் - ஸார் எனப்படும்.

ளவு 12 மைல். இதன் தென்புறத்தில் ஸிந்து நதி ஓடிக் கொண்டிருந்தது. அது ஆழமாகவும் பயங்கரமாகவும் இருந்தது. கோட்டையினின்று செங்குத்தான பாறை களும் கற்குன்றுகளும் அதன் மீது வளைந்து தொங்கிக் கொண்டிருந்தன. மற்ற மூன்று பக்கங்களிலும் மலைச் சந்துகளும் செங்குத்தான குன்றுகளும் சதுப்பு நிலங் களும் நிறைந்திருந்தன. கோட்டையின் உச்சியில் விளை நிலம் இருந்தது. அதைப் பயிரிடுவதற்கு ஓராயிரம் ஆட் கள் வேண்டும். அதன் விளைவைக் கொண்டு 30,000 ஜனங்கள் நெடுங்காலம் ஜீவிப்பதற்காகும். அதுவன்றி, வற்ரு ஊற்றுக்களும் நீர்நிலைகளும் இருந்தன. பெரு மகிழ்ச்சியோடு அலெக்சாண்டர் கண்ணேட்டமாய் அதைப் பார்த்து, "இந்தியாவுக்குள்ள இந்த வடமேற்கு எல்லை அதிசயமான தேசம். இங்குள்ள குன்று ஒவ்வொன்றும் இயற்கையிலேயே கோட்டையாக அமைந்திருக்கின்றது. இங்குள்ள மனிதன் ஒவ்வொருவனும் போர்வீரனுகவே பிறந்திருக்கிருன்" என வியந்து கூறினன்.

சுற்றுமுள்ள பட்டணங்களாகிய நோரா, பஸீரா, மசகா, நைஸா என்னும் இடங்களிற் பட்டாளங்களை நிறுத்தி வைத்துக் கோட்டைக்குள் போக்கு வரவுக்கு இடமில்லா மல் அதைத் தனிமையாகப் பிரித்துவிட்டான். புஷ்கலவதி என்னும் ஊரார் திரும்பக் கலகம் செய்து எழுந்தார் கள். சமதரைகளில் ஒரு பட்டாளத்தோடு போய் அதைத் திரும்பப் பிடித்துக்கொண்டான். தக்ஷசிலையின் நண்பர் களான இந்தியச் சிற்றரசர் இருவர் இந்தக் காரியத்தில் அவ னுக்குத் துணையாயிருந்து பாடுபட்டார்கள். அயர்நாஸ் கோட்டையின் அடிவாரத்தில் ஸிந்து நதியிருக்கும் பக்கத் திலேயுள்ள எம்போலிமா (Embolima) என்னும் சிறு பட்

டணத்துக்கு அலெக்சாண்டர் போனன். அவ்விடத்தில் ஒரு சிறு ஆட்படையோடு கிரேடிராஸை இருக்கச்சொன்னான். சசிகுப்தன் உள்ளூர்க்காரர் சிலரைக் கொண்டு வந்து சேர்த்தான். அவர்களுக்குத் தாராளமாகச் சம்மானம் செய்வதாகச் சொல்லியதன் மீது, அவர்கள் அயர்காஸ் கோட்டை இருக்கிற மலையின் கீழ்புறத்துச் சாரலுக்குப் போகத் தக்க இரகசியமான வழியொன்றைக் கிரேக்கர்களுக்குக் காட்டிக்கொடுத்தார்கள். லேகாஸின் (Lagos) மகனை டாலமி என்பவன தன்னுடைய பட்டாளத்துடன் அந்த இடத்தில் பலமாக நிர்கலானன். அவனேடு போய்ச் சேர்ந்து கொள்ளவேண்டுமென்று அலெக்சாண்டர் முயன்றான். கோட்டையிலிருந்து ஆட்கள் மேல் விழுந்து அடித்ததனல் அலெக்சாண்டர் அவ்விடம் போக முடியாதாயிற்று. டாலமியை அவன் இருந்த இடத்தைவிட்டுக் கிளப்பவேண்டுமென்று கோட்டையைக் காத்துக்கொண்டிருந்தவர்கள் தீவிரமாக எதிர்த்துத் தாக்கினர்கள். டாலமிக்கும் அவர்களுக்கும் கடுமையான சண்டை நடந்தது. அதில் அவர்கள் பின்னிட்டு ஓடவேண்டியதாயிற்று.

மூன்றும் நாள் அலெக்சாண்டர் மூர்க்கமாகத் துணிந்து கோட்டைக் காவலாளரைத் தாக்கினன்; கடும்போர் புரிந்து கடைசியில் டாலமியோடு போய்ச் சேர்ந்து கொண்டான். கோட்டையைத் தாக்குவதற்கு அங்கிருந்த மலைச் சந்துகள் இடைஞ்சலாயிருந்து, அங்கே போகவிடாமல் தடுத்துக்கொண்டிருந்தன. அவைகளை அலெக்சாண்டர் தூர்த்துவிடுவதற்கு வேண்டிய காரியங்களைச் செய்யலானன். அயர்காஸ் கோட்டைக்குப் போகவொட்டாமல் இரட்டை மலையொன்று குறுக்கே இருந்தது. மரங்களை வெட்டி அந்தச் சந்திற் போட்டு, தூர்த்துவிடும்படி தன் ஆட்

களுக்குக் கட்டளையிட்டான். முதன் முதலாக அவனே ஒரு மரத்தைப் பள்ளத்தில் எறிவதற்குத் துணை செய்தான். அப்போது அவனுடைய ஆட்களெல்லாரும் கரகோஷம் செய்தார்கள். அதற்குப் பிறகு மரங்களை விரைவாக வெட்டித் தள்ளி, 4 தினங்களில் ஆட்கள் அதன் மீது நடந்து போகத் தக்கவாறு வழி யமைத்துவிட்டார்கள். அலெக்சாண்டர் அதைக் கடந்துபோய், அயர்நாஸை மேலிருந்து பார்க்கக்கூடிய குன்றுக்குப் போய்ச் சேர்ந்தான்.

இனி அயர்நாஸைக் காத்து உயிரோடு இருப்போமென்னும் ஆசை அந்தக் கோட்டைக்காரர்களுக்கு இல்லாதாயிற்று. சமாதானம் பேசுவது போலப் பாசாங்கு பண்ணினார்கள். ஆனால் அவர்களுடைய உண்மையான எண்ணம் தம் ஆயுதங்களோடு இரவிற் கோட்டையைவிட்டு நழுவியோடிப் போகவேண்டுமென்பதேயாம். இந்த உளவைச் சசிகுப்தன் அலெக்சாண்டருக்குச் சொல்லிக்கொடுத்தான். தன் ஆட்களில் 700 பேரைப் பொறுக்கி யெடுத்துக் கொண்டு, கோட்டைப்படையினர் மெதுவாகப் பின்னிட்டு நகரும் சமயத்தில் அலெக்சாண்டரும் கிரேடிராஸனும் சசிகுப்தனும் வேறு சிலரும் அந்தச் செங்குத்தான பாறையின் மீது தவழ்ந்தேறிப் போனார்கள். கோட்டையைப் பிடித்து விட்டார்கள். தேவர்களுக்குப் பிரீதியாக அலெக்சாண்டர் பலிகள் கொடுத்தான். அதீனு(Athene)க்கும் நைக்கு (Nike)க்கும் பலி பீடங்கள் அமைத்தான். கோட்டையில் ஒரு பட்டாளத்தை வைத்தான். இதுவரையில் சசிகுப்தன் தனக்கு உண்மையாகப் பாடுபட்டதற்குப் பரிசாக அவனை அந்தப் பட்டாளத்திற்குத் தலைவனாக்கினான்.

அதற்குப் பிறகு அலெக்சாண்டர் டிர்ட்டா (Dyrta) என்னும் கோட்டையைப் பிடிக்கப்போனான். மீந்திருந்த

அசுவகர்களெல்லாரும் அவ்விடத்திற் கூடியிருந்தார்கள். அலெக்சாண்டர் வரவே, அவர்கள் அந்தக் கோட்டையை விட்டு நீங்கி, ஸிந்து நதியைக் கடந்து, அபிசாரனண்டையும் போரோஸி (பௌரவ)னண்டையும் ஓடினார்கள். படையெடுத்து வரும் அலெக்சாண்டரை எதிர்க்க அவர்களிருவரும் கங்கணங் கட்டிக்கொண்டிருந்தார்கள். அசுவகர்களுக்கு இருந்த எதிர்க்கும் சக்தி அப்போது குன்றி, அவர்கள் கை ஓய்ந்ததுபோலும். டிர்ட்டாவைப் பிடித்துக்கொண்டு அலெக்சாண்டர் ஸிந்து நதிக்கரையிலுள்ள உதபாண்டபுரத்திற்குப் போய் ஹெபேயிஸ்டியனோடும் பெர்டிக்கஸோடும் சேர்ந்து கொண்டான். அவர்களிருவரும் அங்கே மிகச் சௌகரியமாகப் பாளையம் அடித்துக்கொண்டு அலெக்சாண்டரின் வருகைக்கும், ஸிந்து நதியைக் கடப்பதற்கும் வேண்டிய சன்னகங்களையெல்லாம் செய்து வைத்திருந்தார்கள்.

பழைய தக்ஷசிலை மன்னர் இறந்து போய், ஆம்பீசு பட்டத்துக்கு வந்திருக்கிறானென்று உதபாண்டபுரத்தில் அலெக்சாண்டர் கேள்விப்பட்டான். ஆம்பீசும் தன்னுடைய பணிவைத் தெரிவிப்பதற்குத் தூதர்களை அனுப்பியிருந்தான். 30 யானைகள், கசாய்க்காறவுக்கு ஏற்றவாறு கொழுப்பிக்கப்பெற்ற 3,000 காளைகள், 10,000 ஆடுகள், 200 வெள்ளி டாலன்டுகள் ஆகிய இவைகளை அந்தத் தூதர்கள் ஆம்பீஸின் காணிக்கையாகக் கொடுத்தார்கள். அவைகளை ஏற்று அலெக்சாண்டர் மிக்க திருப்தியடைந்தான். அந்தத் தூதர்கள் காணிக்கை செலுத்திவிட்டுப் போன பின், ஹெபேயிஸ்டியனை நோக்கி அலெக்சாண்டர், "நாம் இதுவரையில் வியவகரிக்க வேண்டியிருந்த காட்டுப்புறத்துச் சிற்றரசர்களைக்காட்டிலும் இந்தியர்கள் அதிக

புத்திசாலிகள். தங்களுக்குப் பலமில்லை, நம்மை எதிர்த்துச் சண்டை போடச் சக்தியில்லை என்று உணர்ந்து இவர்கள் போர்புரியாமலே பணிகிறார்கள். போரோஸு (பௌரவனு)ம் சீக்கிரத்தில் வந்து வணங்குவானென்றும், அதற்காக ராயபாரிகளை அனுப்புவானென்றும் நினைக்கிறேன்" என்றான்.

"நாம் முன்பின் தெரியாத தேசத்தில் வந்திருக்கிறோம். இந்நாட்டு ஜனங்கள் உள்ளுக்குள்ளே உண்மையாக என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார்களென்று நாம் ஒரு போதும் நிச்சயமாகச் சொல்லமுடியாது. போரோஸுடனும் அபிசாரனுடனும் சண்டை செய்ய ஆம்பீசுக்குக் கையாலாகவில்லை. நமது துணையைக் கொண்டு அவர்களை வெல்லவேண்டுமென்றே ஆம்பீசு நமக்குப் பணிந்து வந்திருக்கிறானென்று இவ்விடத்துப் பாளையக்காரனொருவன் எனக்குச் சொன்னான். அதுவன்றி, அன்றைக்குத் தப்பியோடிப்போன விஜயவர்மன், இந்தப் பிரதேசத்து இந்திய அரசர்களெல்லாரும் ஒருமித்து இணைந்து நம்மை எதிர்த்துப் போர்புரிய வேண்டுமெனத் தூண்டிக் கொண்டிருக்கிறா னெனவும், நம்மை எதிர்ப்பதற்கு ஆம்பீசும் சேர்வானானால் அவனுடன் சமாதானம் செய்துகொள்ளப் போரோஸும் அபிசாரனும் நினைத்துக்கொண்டிருக்கிறார்க ளெனவும் நான் கேள்விப்பட்டேன்" என்று ஹெபேயிஸ்டியன் சொன்னான்.

"ஆம்பீசு என்ன சொன்னானாம்?" என்று அலெக்சாண்டர் வினவினான்.

"நம் கூட்டுறவுக்கே அவன் ஆவலாயிருக்கிறான். போரோஸையும் அபிசாரனையும் அவன் நம்பவில்லை. அவர்களுடைய சமாதான வார்த்தையிலும் விசுவாஸம் வைக்கவில்லை. நாம் இந்நாட்டைவிட்டுப் போனவுடனே, அவர்கள்

தன் மீது பாய்ந்து தன்னை ஒழித்துவிடுவார்களென அவன் முடிவாக நினைத்திருக்கிறான். ஆகையால், நம்மை எதிர்ப்பதற்கு அவன் ஒருபோதும் துணை செய்யமாட்டான். ஆனால், தக்ஷசிலைப்பிராமணர்கள் நமக்கு விரோதமாயிருக்கிறார்கள்; நம்மை எதிர்க்கும்படி அவனைத் தூண்ட முயன்று கொண்டிருக்கிறார்கள். ஆனதனால், தன் நிலைமையைப்பற்றித் திரும்ப ஆலோசிப்பதுபோல அவன் நடித்துக் கொண்டிருக்கிறான்" என்றான் ஹெபேயிஸ்டியன்.

"நல்லது, அவன் புத்திசாலியாயிருந்தால் எதைப்பற்றியும் புனராலோசனை செய்யவேண்டாம். போர்புரிய அவனால் ஆகாது. நம்மை எதிர்த்தால் அடியோடு அழிந்து போவான். அந்தக் கூலிக்கார அசுவகர்களுக்கு நேர்ந்த கதியே அவனுக்குப் போதுமான எச்சரிக்கையா யிருக்குமென நினைத்தேன். விஜயவர்மனைத் தப்பியோட விட்டோமேயென்று விசனிக்கிறேன்" என்றான் அலெக்சாண்டர்.

"அந்த அசுவகர்களுக்குத் தீங்கிழைப்பதில்லையென வாக்களித்தபின், அவர்களை நாம் சங்கரித்திருக்கக் கூடாதென்று நம் படையினர் சிலர் நினைத்து, விஜயவர்மன் தப்பியோடுவதைத் தடுக்கமுயலாமல் விட்டுவிட்டார்களெனக் கிரேடிராஸ் எனக்குச் சொன்னான்" என்றான் ஹெபேயிஸ்டியன்.

"ஆம், கடைசிச் சமயத்தில் எனக்கும் அந்த எண்ணம் உண்டாயிற்று. அதனாலேயே, ஸ்திரீகளும் அவர்களோடு சேர்ந்து நம்மை எதிர்த்தார்களாயினும், அவர்களைக் கொல்லாது விட்டோம்" என்றான் அலெக்சாண்டர்.

"ஆனால், அதுவும் நெருப்புக்கு நெய் வார்த்தது போலாயிற்று. ஏனெனில், அந்தப் பெண்மக்களைக்

கொல்லாமல் விட்டு நம் படையினருக்குக் காமக்கிழத்திகளாக்குவது பெருங்குற்றம். ஆனதனால், நம்மீது தீராப் பகையை வைத்துப் பழிவாங்கவேண்டுமென்னும் எண்ணம் அவனுக்கு உதித்தது போலும். 'பழிக்குப்பழியாக நம் படைத் தலைவர்களையும், படையினரையும், நண்பர்களையும் கொல்ல வேண்டும்; நமக்கு நண்பரென்பவர் எவரேயாயினும் அவர் விஷயத்திற் சிறிதும் இரக்கம் காட்டுவதில்லை; தன் சகோதரனேயானாலும் நமக்கு நண்பனாயின், அவனை விடுவதில்லை' என்று அவன் காளியின் பேரால் சபதம் செய்திருக்கிறான் என்கிறார்கள். அந்தக் காளி என்பவள் நமது தேசத்திலுள்ள உக்கிர தேவதைகளில் ஒருத்தியைப் போன்றவள்" என்று ஹெபேயிஸ்டியன் சொன்னான்.

"ஐயோ பாவம்! இந்த அவிவேகமான சபதத்தை அவன் நிறைவேற்றுவதற்கு என்ன வழி இருக்கின்றது?" என்றான் அலெக்சாண்டர்.

"ஆம்பீசின் ராயபாரி சொன்னதுபோல, கடுகு தன்னை வறுக்கிறவன் மீது எவ்வளவு பழி வாங்கமுடியுமோ அவ்வளவுதான் இவனும் செய்யக்கூடும். வறப்பதனால் கடுகாவது பானையினின்றும் வெளியே குதிக்கக்கூடும். ஆனால், வாணாயின் மீதாவது வறுக்கிறவன் மீதாவது பழி வாங்கமுடியுமா?" என்று ஹெபேயிஸ்டியன் சொன்னான்.

அதற்கு அலெக்சாண்டர், "மிகச் சரியான உபமானம். விஜயவர்மனைக்காட்டிலும், சசிகுப்தன் என்னிடம் சொல்லிக்கொண்டிருந்த பணோராஜ்யக்காரர்களான அவதூதர்களைக் காட்டிலும் இந்தத் தக்ஷசிலைக்காரர்கள் உள்ளதை உள்ளவாறு கணித்து வியவகாரத்துக்கு ஒத்து நடக்கிறார்கள்" என்றான்.

கிரேக்கப்படையானது ஸிந்துநதிக்கரையில் ஓஹிந்து என்னுமிடத்தில் 30 நாள் ஓய்வுற்றிருந்தது. தினந்தோறும் ஆட்டபாட்டங்களும், குஸ்திகளும், மற்போர்களும், பெரு விருந்துகளும் நிகழ்ந்தன. இவர்கள் இப்படிக் களியாட்டில் அமர்ந்திருக்கையில், ஸிந்துநதியைக் கடப்பதற்குப் படகுப் பாலமொன்று அமைத்துக் கொண்டிருந்தார்கள். ஆற்றுக்கு அக்கரையில் தக்ஷசிலை ராஜனிடமிருந்து அநேகம் படகுகள் கொண்டு வந்திருந்தார்கள்; இன்னும் அநேகம புதிதாகக் கட்டினார்கள். இவைகளையெல்லாம் ஒன்றன்பின் ஒன்ருகச் சங்கிலிபோல் ஆற்றின் குறுக்கே வைத்தார்கள். பலகைகளினுல் அந்தப் படகுகளை ஒன்ருேடொன்று பிணைத்தார்கள். நீரோட்டத்தின் வேகம் அவைகளை அடித்துக்கொண்டு போகாவண்ணம் மிலாறுக்கூடைகளிற் கற்களை நிரப்பி அருகே வைத்தார்கள். அந்தக் கூடைகள் ஒவ்வொரு படகையும் நங்கூரம் போலப் பிடித்து நிறுத்திக் கொண்டிருந்தன. படகுகளின் மீது போட்டிருந்த பலகைகளின் வழியாகக் குதிரைகள் பத்திரமாக அக்கரை போய்ச் சேர்வதற்கு இரண்டு பக்கங்களிலும் கிராதி போட்டுப் பாதை யமைத்தார்கள். அதற்குப் பிறகு சேனை முழுதும் பெருங்கூச்சற் போட்டுக்கொண்டு க்ஷேமமாக அதன்மீது நடந்து போயிற்று. விபத்து ஒன்றும் நேரவில்லை.

அவ்வாறு க்ஷேமமாக நதியைக் கடந்ததற்கு அலெக்சாண்டர் தேவர்களுக்கு வழக்கம்போலப் பலிகள் கொடுத்தான். அங்கிருந்து மூன்றுநாட் பயண தூரத்துக்குள்ளேயே தக்ஷசிலை இருந்தது. அது நண்பருடைய ராஜ்யமானதனுல், கிரேக்கப்படை கவலை சிறிதுமின்றி உல்லாஸமாக நடந்து போயிற்று. தக்ஷசிலையாட்கள் வந்து வழி காட்டிக்கொண்டு போனுர்கள். தக்ஷசிலைக்கு நான்கு

ஐந்து மைல் தூரம் வரையில் போனபோது, யுத்த வியூக மாக யானைகளும் குதிரைகளும் ரதங்களும் காலாட்களும் அடங்கிய பெருஞ்சைனியம் இவர்களை நோக்கி வரக் கண்டு திடுக்கிட்டார்கள். உடனே அலெக்சாண்டருக்கு ஹெபே யிஸ்டியன் சொன்ன வார்த்தை ஞாபகத்திற்கு வந்தது. தனக்கு விரோதமாக ஆம்பீசைத் திருப்புவதற்கு விஜயவர் மனும் அவதூதர்களும் பிரயத்தனப்பட்டுக்கொண்டிருக் கிறார்களென்று ஹெபேயிஸ்டியன் சொன்னனே. அவர் களுடைய பிரயத்தனம் பலித்தது போலும்! ஆம்பீசு நிஜ மாகவே தன்னை எதிர்ப்பதற்கு வந்து கொண்டிருக்கிறன் போலும் என நினைத்தான். தனக்கு வழிகாட்டிக்கொண்டு வந்த தக்ஷசிலை ஆட்களுக்கு உடனே விலங்கிட்டான். இந் தியச்சேனையின் மீது பாய்வதற்கேற்றவாறு தன் துருப்பு களைப் போரணி வகுத்து நிறுத்தினன். இதையெல்லாம் பார்த்து ஆம்பீசு திகிற்பட்டுச் சில பரிவாரங்களை மாத்திரம் கூட்டிக்கொண்டு தன் சேனைக்கு முன்னே பறந்தோடி வந்து, பெரிய வெற்றியாளரான அலெக்சாண்டருக்கு மரி யாதை செய்யும் பொருட்டுத் தான் போரணியில் வந்ததாக வும், அலெக்சாண்டரைச் சுத்த க்ஷத்திரியராகவே தான் கருதுவதாகவும், தன் சேனை முழுதையும் அலெக்சாண் டருடைய அதீனத்தில் வைத்ததாகவும் சமாதானம் சொன் னன். அன்றியும், "கடைசி வார்த்தை கேளாமலும், போர்க்கு அறை கூவாமலும் நாங்கள் ஒருபோதும் மற்றவ ரைத் தாக்கமாட்டோம்" என்றும் சொன்னன். விஜய வர்மன் மீது, போர்க்கு அறை கூவாமல் தான் பாய்ந் தடித்த அநீதியை நினைத்து அலெக்சாண்டர் வாயை மூடிக் கொண்டான்.

---

## அத்தியாயம் 10

## ஜீயஸின் தனயன்

**த**க்ஷசிலை நகர வாயிலிலுள்ள விஸ்தாரமான புற்றரையில் அலெக்சாண்டர் சவாரி போனான். அப்போது அவனுக்கும் அவனுடைய சேனைக்கும் முன்னிலையில் அநேக பிராமணர்கள் அடிக்கடி காலால் தரையை அடித்து மிதித்துக் கொண்டிருக்கக் கண்டு, அதற்கு அர்த்தம் என்னவென்று தெரியாமல் விழித்தான். அப்படிச் செய்வதன் அர்த்தம் என்னவென்று துவிபாஷிகளின் மூலமாக அவர்களை விசாரித்தான். "ஓ அலெக்சாண்டர் மகாராஜரே! நாங்கள் மிதித்த அளவு தரையே ஒவ்வொரு மனிதனும் கொள்வதற்காகும். நீர், மற்றெல்லாரையும்போல மனிதராயிருந்தும், உலகம் முழுமையும் உமக்குச் சொந்தமெனநடிக்கின்றீர். அந்த நினைவினால் உலகத்து அமைதியைக் கெடுத்துத் தீங்கிழைக்கின்றீர். எங்களையும் மற்றவர் ஒவ்வொருவரையும் பீடித்து வருத்துவதற்காக உமது நாட்டைவிட்டு இவ்வளவு தூரம் வந்திருக்கின்றீர். ஆனபோதிலும், இன்னும் சில நாளில் நீர் இறக்கும்போது, உமது என்புகளை அடக்கம் செய்யும் பொருட்டுக் குழி தோண்டுவதற்குப் போதுமான அளவு பூமியே உமக்குச் சொந்தமாகும். தரையின் மீது நாங்கள் மிதித்து மிதித்துக் காட்டுவதன் கருத்து அதுவே" என்று அந்தப் பிராமணர்களுக்குத் தலைவனாயிருந்தவன் மறுமொழி கூறினான்.

"பிறப்பிறப்புச் சம்பந்தமான விஷயங்களைப்பற்றி நான் நினைத்திருப்பது போலல்லாமல், வேறு விதமாக நீங்கள் நினைத்திருப்பதாகத் தோன்றுகிறது. என்றைக்கோ ஒரு நாள் நாம் இறக்கப்போகிறோமென்னும் காரணத்தால், ஏற்கெனவே பிணமாய் விட்டோமென எண்ணி, உயிரோடிருக்கையிலேயே ஆறடி நிலத்தைக்கொண்டு திருப்தியடைவானேன்? நிலத்தின் மீதும் நீரின் மீதும் நாம் அலைந்து திரியாவிட்டால், மானிடப் பிறவிக்குரிய அதிசயப்பெருமையாகிய ஸாஹஸத்தன்மை என்னவாகும்? அது எப்படியிருப்பினும், சாவகாசமாக உங்களைச் சந்தித்து இவ்விஷயங்களையும், இவை போன்ற மற்றவைகளையும்பற்றி உங்களோடு தர்க்கிப்பேன். நீங்கள் எங்கே வசிக்கிறீர்கள்? உங்கள் ஆசாரியர்கள் எங்கே இருக்கிறார்கள்? ஒருநாள் முழுதும் நீங்கள் என்ன செய்கிறீர்கள்? எனக்குச் சொல்லுங்கள்" என்று அலெக்சாண்டர் கேட்டான்.

"இவ்விடத்திலிருந்து இரண்டு மைல் தூரத்திலுள்ளதொரு காட்டில் பகற்பொழுதெல்லாம் கழிக்கிறோம். எங்கள் குரு தண்டிஸ்வாமி. அங்குள்ள பெரிய ரிஷிகளுள் சோடானஸ்வாமி அல்லது கல்யாணஸ்வாமி (என்னும் கலனுஸ்) என்பவர் மற்றொருவர். அங்கே கிடைக்கக்கூடிய காய் கனிகளையும் கிழங்குகளையும் பூண்டுகளையும் புசித்துத் தண்ணீரே அருந்துகிறோம். கடவுளைத் தியானம் செய்துகொண்டு, ஜனன மரண தத்துவத்தை ஆராய்ந்துகொண்டு, பகற்பொழுதிற் காட்டில் திரிகிறோம். இரவில் நகரத்துக்குத் திரும்பி வந்து தர்மசாலைகளிற் படுத்து உறங்குகிறோம். சில சமயங்களில், மரங்களினின்றும் உதிர்ந்துள்ள சருகுகளே விரிப்பாகக் கொண்டு இரவுப்பொழுதைக் காட்டிலே கழிக்கிறோம்" என்று அவர்களின் தலைவன் சொன்னான்.

"நான் தங்கியிருக்குமிடத்திற்கு வந்து என்னுடன் சம்பாஷிக்க மாட்டீர்களா?" என்று அலெக்சாண்டர் வினவினன்.

"மாட்டோம். இப்போது நாங்கள் அப்படி வரமுடியாது. தண்டியின் அநுமதி பெறவேண்டும்" என்று தலைவன் சொன்னன்.

அவர்களெல்லாரும் போய்விட்டார்கள். அலெக்சாண்டர் தன்னுடைய டேராவிற்குத் திரும்பி வந்து, நகரத்திற்குப் போய் இந்தப் பிராமண ஸந்நியாசிகளிற் சிலரைத் தன்னிடம் அழைத்து வரும்படி அரிஸ்டோபூலஸை (Aristoboulos) அனுப்பினன். அப்படிப்பட்டவர்கள் இரண்டுபேரை அரிஸ்டோபூலஸ் தெருக்களிற் கண்டான். அவர்களில் மூத்தவன் தலையை மொட்டையடித்துக்கொண்டிருந்தான். இளையவன் குடுமி வைத்துக்கொண்டிருந்தான். இருவருக்கும் சீடர்கள் இருந்தார்கள். அவர்களிருவரையும் டேராவிற்கு அழைத்துக்கொண்டு போய் அரிஸ்டோபூலஸ், "இந்த அவதூதர்கள் சாதாரணமாகக் கடைத்தெருவிலே காலங் கழிக்கிருர்கள். பரோபகாரமாக உபதேசம் கூறுபவர்களென இவர்களை ஜனங்கள் போற்றுகிருர்கள். இவர்களுக்கு இஷ்டமான வஸ்துவை இனமாக எடுத்துக்கொண்டு போக விடுகிருர்கள். இவர்களண்டை வந்து பேசுகிற ஜனங்கள் பூஜிதையாக இவர்கள் தலையின் மீது மல்லிகை அத்தர் தெளித்து, எள்ளும் தேனும் சேர்த்துச் செய்த பணியாரங்களை அளிக்கிருர்கள். இந்தப் பணியாரங்கள் கடைகளில் வேண்டிய அளவு விற்கப்படுகின்றன" என்று அலெக்சாண்டருக்குச் சொன்னன்.

அந்தச் சமயம் அலெக்சாண்டர் இடையுணக் கொள்ளும் வேளை. தன்னுடன் அமர்ந்து சிற்றுண்டி ஏற்கும்படி

அலெக்சாண்டர் அவர்களை அழைத்தான். அவர்கள் அவனது அழைப்புக்கு இணங்கிச் சில கனிகளைப் புசித்தார்களாயினும், தண்ணீரே குடித்தார்கள். அப்படிப் புசிக்கும் போதும் அலெக்சாண்டரின் மேஜையினண்டை நின்று கொண்டிருந்தார்கள். உணவருந்திய பின், தங்களுடைய ஸஹன சக்தியை அவ்வரசனுக்குக் காட்டும்பொருட்டு அவனது மேஜையினின்றும் சிறிது தூரத்திற்கப்பால் ஒரு தடத்துக்குப் போனார்கள். அவர்களில் மூத்தவன் தரையின் மீது மல்லாக்காகப் படுத்துக்கொண்டு, கொளுத்துகிற வெயிலைப் பொறுத்திருந்தான்; பின்பு, தாரை தாரையாகப் பொழிந்த மழையையும் பொறுத்துக் கொண்டிருந்தான். மற்றவன் ஒற்றைக்காலின் மீது நின்று, மூன்று முழக் கட்டையொன்றை இரண்டு கையாலும் தூக்கிப் பிடித்துக் கொண்டிருந்தான். அந்தக் கால் சளைத்தவுடனே மற்றொரு காலின்மீது தன் முழுப்பாரத்தையும் போட்டு நின்றுகொண்டிருந்தான். இவ்வாறு நாள் முழுதும் செய்தான். அவர்கள் புறப்பட்டுப் போனபின், யூமினிஸை (Eumenes)ப் பார்த்து அலெக்சாண்டர், "என்ன வீண் பிரயாசை! இந்தப் பெரும்பிரயாசையை நல்ல வழியில் உபயோகித்திருந்தால், இவர்களுடைய ஸஹன சக்தியைச் சோதிப்பதற்கும், இவர்களுக்கு அசௌகரியம் விளைப்பதற்கும் மாத்திரமேயல்லாமல், எத்தனையோ ஆயிரம் ஜனங்களுக்குச் சௌக்கியமும் ஆனந்தமும் உண்டாக்கியிருக்கலாம்" என்று சொன்னான்.

மறுநாள் அலெக்சாண்டருடைய முகாமுக்கு [1]அகோர பந்திக்காரர் இருவரை ஆம்பீசு அனுப்பினான். இறந்து

---

1. இவர்கள் ஒருவகைத் துறவிகள்; விபரீதமாகவும் அகோரமாகவும்முள்ள கிரியைகளை அனுஷ்டிப்பவர்கள்.

போன தங்கள் பிதுருக்களின் உடல்களைப் புசித்துவிடுவது அவர்களுக்குள் ஒரு விதமான வைதிகச்சடங்கு.

"இந்தக் கோரமான வழக்கத்தை உண்மையாகவே நீங்கள் அனுஷ்டிக்கிறீர்களா? உயிரோடிருந்த காலத்தில் நீங்கள் பிரேமை பாராட்டிக்கொண்டிருந்தவர்களுக்கு இப்படிப்பட்ட காரியம் செய்யலாமா? இது உங்களுக்கு வெட்கமா யிருக்கவில்லையா?" என்று அலெக்சாண்டர் வினவினன்.

"ஐயா, உங்கள் பெற்றோர்களின் பிணங்களை நீங்கள் என்ன செய்கிறீர்கள்?" என அவர்களில் ஒருவன் வினவினன்.

"புதைக்கிறோம்" என்றான் அலெக்சாண்டர்.

"புதைத்து அழுக வைத்துப் புழுக்களாக்குகிறீர்கள். நாங்களோ அவைகளை மிகப் பூஜிதையாகப் புசித்து எங்கள் என்போடு என்பாகவும் தசையோடு தசையாகவும் ஆக்குகிறோம்!" என்று அவன் குத்திக் காட்டினன்.

"அயர்லாந்துக்காரரிடத்தும் இந்தக் கோரமாண சம்பிரதாயம் உண்டு. இதைக்காட்டிலும் மிகக் கோரமான சம்பிரதாயங்களும் அவர்களுக்கு உண்டு. ஆனால், இந்தச் சம்பிரதாயங்களுக்குத் தத்துவார்த்தம் கற்பிப்பதில் அவர்கள் காலம் போக்குவதில்லை" என்று அலெக்சாண்டர் சொன்னன்.

இதெல்லாம் வனவாசிகளான முனிவர்களின் விஷயத்தை இன்னும் தெரிந்து கொள்ளவேண்டுமென்னும் ஆசையை அலெக்சாண்டருக்கு எழுப்பியது. ஆகையால், அவர்கள் வசிக்கும் வனத்திற்குப் போய்த் தண்டிஸ்வாமியையாவது, கல்யாண ஸ்வாமியையாவது, அவ்விருவரும்

இல்லாவிட்டால் அவர்களுள் வேறு சிலரையாவது தூண்டி, மாஸிடோனியருடைய முகாமுக்கு வந்து சிறிது காலம் தங்கியிருக்கச்செய்யும்படி ஓனெஸிகிரிடாஸ் என் பவனை அலெக்சாண்டர் அனுப்பினான். அவர்கள் இணங்கி வந்தால், திவ்வியமான பக்ஷிய வகைகளையும் உயர்தரமான பானங்களையும் அனுபவித்துச் சம்மானங்கள் பெற்று, அவ் வளவு பெரிய மகாராஜனோடு இருக்கும் பெருமையும் பெறலாமென அவர்களுக்கு ஆசைகாட்டச் சொன்னான். ஓனெஸிகிரிடாஸ் நகரத்துக்கு இரண்டு மைல் தூரத்தி லுள்ள அவ்வனத்துக்குப் போனான்.

அங்கே பதினைந்து முனிவர்கள் இருந்தார்கள். அவர் கள் பற்பல விதமாக அமர்ந்திருந்தார்கள். வெயிலோ மிக உக்கிரமாக இருந்தது. கால் கொப்புளித்துப் புண்படாமல் எவரும் நடுப்பகலில் வெறுங்காலோடு நடக்கமுடியாது. அந்தக் கடுவெயிலிற் சிலர் வேறு வேறு நிலைகளில் நின்று கொண்டிருந்தார்கள்; சிலர் உட்கார்ந்திருந்தார்கள்; சிலர் படுத்திருந்தார்கள்; எல்லாரும் நிர்வாணத்தோ டிருந்தார் கள். அதே நிலைமையில் அவர்கள் சாயங்காலம் வரையில் இருந்து, பிறகு நகரத்திற்குள் போவார்களென அவன் விசாரித்து அறிந்தான். சோபனஸ்வாமி யெனவும் கல்யாண ஸ்வாமி யெனவும் சொல்லப்படுகிற கலனுஸ் ஒரு கற் குவியலின் மீது நிர்வாணமாய்ப் படுத்துக்கொண்டிருந்தார்.

அவரண்டை போய் ஓனெஸிகிரிடாஸ், “தங்களோடு சம்பாஷிக்கும்படி மகாராஜா அலெக்சாண்டர் என்னை அனுப்பியுள்ளார். தங்களுடைய ஞான விசேஷத்தைப் பற்றிக் கேட்டிருக்கிறாராதலால், இன்னும் அதிகமாகத் தெரிந்துகொள்ள விரும்புகிறார்” என்றான்.

வழக்கம்போல் சோபனஸ்வாமி, "கல்யாண்!" (சுபம் உண்டாகுக!) என்று ஆசீர்வதித்தார். இப்படி ஆசீர்வதிக்கும் வழக்கத்தினலே கல்யாணஸ்வாமி என்னும் பெயர் அவருக்கு வந்தது. யவனர்கள் அதைக் கலானுஸ் எனச் சுருக்கிக் கொண்டனர். ஒனெஸிகிரிடாஸின் மேலாடையையும் தலைப்பாகையையும் பாதரக்ஷைகளையும் பார்த்துச் சிரித்துக் கல்யாணஸ்வாமி, "இந்நாளில் எவ்வளவு துகளும் தூசியும் இருக்கின்றனவோ அவ்வளவு முன்னுளில் நெல் கோதுமை முதலிய தானியவகைகள் உலகத்தில் அபரிமிதமாய் இருந்தன. அந்நாளில் சுத்தமான நீரும் பாலும் தேனும் ஸோமரஸமும் நெய்யும் எண்ணெயும் குளம் குளமாக நிரம்பியிருந்தன. இந்தப் பெருவாழ்வினுலும் சிரமமில்லாச் சுகத்தினுலும் ஜனங்கள் கர்வமடைந்து இறுமாப்புற்ருர்கள். ஆதலால், அவைகளையெல்லாம் அழித்துக் கடவுள் மனிதன் உழைத்து உண்ணும்படி செய்தார். உழைப்பினுல் மிதபானம் முதலான நற்குணங்கள் திரும்பத்தோன்றவே, நல்ல வஸ்துக்களும் மீண்டும் நிரம்பின. மறுபடியும், தெவிட்டும் குறும்பும் தலை காட்டுகின்றன. இப்பொழுதுள்ள சம்பூர்ண சம்பத்தும் மறுபடி அழிந்து போகலாம். ஆகையால், எவ்வளவு உபாயமாக வாழலாமோ அவ்வளவு சொற்ப வஸ்துக்களைக் கொண்டு திருப்தியுடன் வாழ்வாயாக. என்னுடன் சம்பாஷிக்க வேண்டுமானுல், உன் ஆடைகளைக் களைந்துவிட்டு, இந்தக் கற்களின்மீது என் பக்கத்திற் படுத்துக்கொள். அப்போது நான் சொல்வதைக் கேள்" என்ருர்.

என்ன செய்வதென்று தெரியாமல் ஒனெஸிகிரிடாஸ் தயங்கிக்கொண்டிருந்தான். அப்போது அவ்வளவு துடுக்குத்தனம் ஆகாதென்று கலனுஸைத் தண்டிஸ்வாமி கண்டித்

தார். எப்பொழுதுமே அவர் கர்வமும் நிமிர்ந்தன நடையும் கூடாவென இகழ்வர். ஆடைகளைக் களைந்தெறிய வேண்டுமென ஒனெஸிகிரிடாஸைக் கட்டாயப்படுத்தாமல் அவனுடன் சம்பாஷிக்கும்படி அவர் கலனுஸுக்குச் சொன்னார்.

ஒனெஸிகிரிடாஸ் அதன்மீது கலனுஸைவிட்டு நீங்கித் தண்டிஸ்வாமியினிடம் போய்த் தன்னுடன் வந்து அலெக்சாண்டருடைய டேராவிற் சுகமாகப் பெருவாழ்வு வாழ்ந்துகொண்டு அவருக்குத் தம் பேரறிவைச் சிறிது ஊட்டவேண்டுமெனக் கேட்டான்.

“நான் உன்னுடன் வரமாட்டேன் என்பதன்றி, மற்றவர்களும் உன்னுடன் போகக்கூடாதெனத் தடுப்பேன்” என்று தண்டிஸ்வாமி சொன்னார். அவருக்கு வயது 75. கரும்பழுப்பு நிறமுள்ளவர். நடுத்தரமான ஆகிருதி வாய்ந்தவர். அவர் முற்றும் நிர்வாணமாக இருந்தார். முகத்திற் சாந்தமும், கண்ணில் அமைதியும் குடிகொண்டிருந்தன. பரமசாந்த நிலையை அடைந்தவரெனத் தோன்றினார்.

“அந்தப் பெரிய வெற்றியாளரை ஏன் சந்திக்க மாட்டேனென்கிறீர்? பார்த்துப் பேசத் தகுதியற்ற சாமானிய மனிதரென்று அவரை நினைத்தீர்களா?”

“அப்படியன்று. அவன் பெரிய மனிதனென்பதற்குச் சந்தேகமே இல்லை. வெகு விஸ்தாரமான ராஜ்யத்தை ஆளுகிறவனாலும் ஞானம் சம்பாதிக்கவேண்டுமென்னும் ஆசைகொண்டிருப்பதனால் அவனை நான் மெச்சுகிறேன். நான் பார்த்ததற்குள், க்ஷத்திரிய விருத்தி மேற்கொண்ட வேதாந்தி அவன் ஒருவனே.”

"உங்கள் கொள்கையின்படி ஒருவன் தெரிந்து கொள்ளவேண்டிய நிஜமான ஞானம் யாது?"

"சத்தியமாய் நித்தியமாயுள்ளவர் கடவுள் ஒருவரே. அவர் பிரபஞ்சம் முழுதும் வியாபித்திருக்கிறார். உலகம் என்பது கனவுபோன்ற மாயை; சிலருக்கு இன்பமாயிருக்கும் வஸ்துக்களே வேறு சிலருக்குத் துன்பமாயிருக்கும்; உலகத்துக்கு ஆதியும் உண்டு, அந்தமும் உண்டு; உலகம் அழியத்தக்கது. கடவுள் அப்படிப்பட்டவரல்ல. அவருக்கு ஆதியும்; இல்லை அந்தமும் இல்லை. அவர் உலகத்தையுண்டாக்கி ஆளுகிறார். அதன் எல்லாப் பாகங்களுள்ளும் வியாபித்திருக்கின்றார். ஆகையால், உண்மையான பக்தி உள்ளவர்கள் கடவுளைத் தவிர வேறு எவர்மீதும் சார்ந்திருக்கக்கூடாது. ஸர்வம் பரவசம் துக்கம், ஸர்வம் ஆத்மவசம் சுகம். ஊனைத் தின்னலாகாது; கூடுமானால், தீயிற் பக்குவமானதெதனையும் தவிர்க்கவேண்டும்; உதிர்காய் கனியுண்டு சுத்தோதகம் அருந்தி ஜீவிக்கவேண்டும். ஜீவாத்மாவுக்கு ஆடையாக அன்னமய கோசமாகிய தேகத்தைக் கடவுள் அளித்திருப்பதனால், மனிதன் வேறு ஆடைகள் அணியவேண்டியதில்லை. மனிதர்களெல்லாரும் காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மாச்சரியம் என்னும் உட்பகையினர் அறுவரால், போர்க்கைதிகளைப்போல, சிறைப்படுத்திக் கட்டப்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்குள்ளேயே இருக்கிற இந்தச் சத்துருக்களை வென்றவர்களே கடவுளை அடைவார்கள். அவர்கள் இந்த அநித்தியமான ஸ்தூல தேகங்களைக் களைந்தபின், பரிசுத்தமான சூரிய ஒளியைக் காண்கிறார்கள்; எதுபோலவெனின், ஆழ்ந்தகடலின் அடியினின்று மீன் துள்ளி வாயுமண்டலம் போம்போது ஒளி காண்பதுபோலாம்."

"கடவுள் எப்படிப்பட்டவர்?"

"கடவுள் தேஜோமயானந்தஸ்வரூபி. சோதி வடிவமானவர்; ஆனால், நாம் கண்ணாற் பார்க்கிற ஒளிபோன்றவரல்லர்; தினகரனிலும் தீயிலும் காணும் ஒளிபோன்றவரல்லர். எங்கள் வேதங்களில் மகரிஷிகள் கடவுளின் ஸ்வரூபத்தை வர்ணித்திருக்கிறார்கள். பிரம்மமும் வேதமும் ஒன்றே. கடவுளே வாக்கு. வாக்கே உலகம். அவர் உலகமென்னும் மாயையை மேலாடையாக அணிந்துகொண்டிருக்கிறார். பக்தி வைராக்கிய ஞானத்தால் அவ்வாடையைக் கிழித்துக்கொண்டு உள்ளேபோனால், இருளுக்கப்பால்,

நித்யசுத்த புத்தபோத நிர்விகார நிர்மலம்
அத்யணுப்ர மாணதிவ்ய மாதிதீப்த மவ்யயம்
ஞானஸார ஹேதுபூத ஸாக்ஷிஸாத ஸூக்ஷ்மகம்
ஆதிமூல வேதஸார ஹம்ஸஹம்ஸ ஸந்ததம்

சுத்த சோதியாய் விளங்குகிறார். ஆனால், அந்த மாயையைக் கடக்குமுன், நம் சரீரங்களினால் நமக்கு ஏற்பட்டிருக்கிற பந்தங்களை நாம் விடுவித்துக்கொள்ள வேண்டும். யுத்தங்களுக்கெல்லாம் மூலகாரணம் சரீரமே. ஆதலால், மானிடசரீரம் என்பது பெரும்போர் நடக்கிற இடத்திற்கு அறிகுறியாகக் குருக்ஷேத்திரம் எனப்படும். சத்துருவை எதிர்த்துப் போர்புரியும் வீரர்களைப்போல, நாம் அந்தத் தேகத்தையும், அதனின்று எழுகிற ஆயிரக்கணக்கான காமக்குரோதாதிகளையும் எதிர்த்துப் போராடவேண்டும். இந்தப் போருக்கு ஓய்வுமில்லை, சமாதானமும் இல்லை; சமரஸ ராஜியுமில்லை. இது முடிகிற வரையிற் போர்புரிந்தே தீரவேண்டும். கடவுள் ஒளியைக் காணும் முன்னர்க் கொடிய காமக்குரோதாதிகளை அடியோடு அழிக்கவேண்டும்."

"அந்தக் காரியத்தைச் சாதிப்பதற்கு, உங்கள் கொள்கையின்படி, பாரமார்த்திக வழியில் முதற்படி யாது?"

"சுகதுக்கங்கள் என்னும் இரட்டையைக் கடக்க மனத்தைப் பழக்கவேண்டும்."

"எந்தக் காரியத்திலும் துன்பம் தொடர்ந்தே யிருக்கின்றமையின், நாம் துன்பமேயில்லாமல் எப்படி இருக்க முடியும்? ஜீவனத்தின்பொருட்டு ஏதேனுமொரு வேலை செய்யவேண்டியவனுயிருக்கிற மானிடன் துன்பத்தினின்றும் விடுபடுவது எங்ஙனம்?"

"நீ சொல்வது தவறு. உழைப்பினுல் விளையும் பரிசிரமம் வேறு, துன்பம் என்பது வேறு; துன்பம் தீமை செய்யும்; உழைப்பு நன்மை செய்யும். ஏனெனின், மனச்சக்தியைத் திடப்படுத்திக்கொள்ளும்பொருட்டே மனிதர்கள் தேகத்திற்கு உழைப்புக் கொடுக்கிறுர்கள். அந்த மனச்சக்தியின் பெருக்கத்தால் அவர்கள் கலகம் தவிர்த்து உலகோர் ஒவ்வொருவருக்கும், ஊர் வியவகாரங்களிலும் சொந்த வியவகாரங்களிலும், நற்புத்தி போதிக்கத்தக்கவர்களாகிறுர்கள். துன்பம் மனிதனை வீரியமற்றவனுக்குகின்றது; அவனுடைய மனச்சக்திகளைத் தளர்த்துகின்றது. உழைப்போவெனின், பெருநோக்குடையவர்களின் கூட்டுறவைப் போல மனிதனை உயர்த்துகின்றது."

"அப்படியா! அப்படியானுல், அலெக்சாண்டரை நண்பராக ஆம்பீசு வரவேற்றது சரியென நினைக்கிறீர்களல்லவா?"

"நன்றே. ஏனெனின், தன்னினும் மிக்காரை நண்ணிப் பேணுவதனுல் ஒருவன் மேம்பாடுறுவன்; தன்னினும் தாழ்ந்தவரைப் பேணின், தாழ்மையுறுவன். அலெக்சாண்

டயோ ஜெனீசைக்காட்டிலும் சிறந்தவனென்பதிற் சந்தேகமில்லை. அது இருக்கட்டும். இதுவரையில் நான் சுருக்கிச் சொல்லியதுபோன்ற வேதாந்தவுண்மைகளை எடுத்தோதத் தக்கவர்கள் உங்கள் நாட்டில் இல்லையா?"

"இருக்கிறார்கள், பிதாகோராசும் ஸாக்ரடீசும் (Pythagoras and Socrates), என் ஆசாரியரான டயோஜெனீசும் (Diogenes) உங்களைப்போலவே சுக துக்கங்களைப் பாராட்டக்கூடாதென்று உபதேசிக்கிறார்கள். உயிருள்ளது எதனையும் உண்ணலாகாதெனவும் பிதாகோரஸ் தம் சிடர்களுக்குக் கட்டளையிட்டிருக்கிறார். ஆனால், நீங்கள் அனுஷ்டிக்கிற திகம்பரக் கொள்கையை அவர்களெவரும் போதிப்பதில்லை"

"அது ஏனென்றால், வழக்கத்தையே இயற்கையென்று அவர்கள் தவறாக நினைக்கிறார்கள். இல்லையெனின், எங்களைப்போல அவர்களும் நிர்வாணத்தோடிருந்து, அற்பாஹாரத்தில் ஜீவிப்பார்கள். அதிகமாகப் பழுதுபார்க்க வேண்டியிராத வீடே நல்ல வீடல்லவா?" என்றார் தண்டிஸ்வாமி.

"நிர்வாணத்தோடிருந்தால் காமக்கிளர்ச்சிக்கு இடம் உண்டாகுமென அவர்கள் எண்ணினார்களோ என்னவோ; அதனால் அவர்கள் ஆடையணிவது வேண்டாமெனத் தடுக்கவில்லை போலும்" என்றான் ஓனெஸிகிரிடாஸ்.

"அந்த ஆக்ஷேபணை புலனொறுப்பில்லாத சாமானிய ஜனங்களுக்கே பொருந்தும். சாமானிய ஜனங்களுக்கு ஒருவகை ஆடை அவசியமாயிருக்கலாம். அது திருடர்களினின்றும் காக்கப் பூட்டுகள் இருப்பது போலாம். அவர்களுக்காயினும், அந்தக் காரியத்திற்கு எவ்வளவு அவ

சியமோ அவ்வளவு மாத்திரம் இருந்தாற்போதும். இந்திரிய நிக்கிரகம் செய்து தேர்ந்த யோக புருஷன், தன் மூக்கைத் திறந்துகொண்டிருப்பது போல, உடம்பு முழுதையும் திறந்துகொண்டே திரியலாம்; அதனால் அவனுக்கு ஒரு விதமான தீமையும் நேராது" எனச் சுடும்படி தண்டிஸ்வாமி பதில் மொழிந்தார்.

"கௌகஸாஸ் (Kaukasos) என்னும் இந்துகுஷ் மலைப்பிரதேசத்திலிருந்து இரண்டு பேரை ஆம்பீசு எங்கள் இருப்பிடத்திற்கு அனுப்பியிருந்தான். அவர்கள் தங்கள் பெற்றோரின் பிணங்களையும் நெருங்கிய உறவினர்களின் களேபரங்களையும் தாமே தின்று விடுவது வழக்கமென்று சொன்னார்கள். அதைக் கேட்டவுடன், அது பெரிய துராசாரமென்று அலெக்சாண்டர் கண்டித்தார். அதற்கு அவர்கள் எங்கள் பெற்றோர் பிரேதங்களை நாங்கள் என்ன செய்கிறோமென்று கேட்டார்கள். நாங்கள் புதைக்கிறோம் என்று சொல்லவே, அவைகளைத் தின்றுவிடாமல் அன்பு மிக்க நெருங்கின தமர்களை புழுக்கள் தின்னவிடுவது பெரிய துராசாரமென்றும் அதிகக் கோரமென்றும் இகழ்ந்து வெறுத்தார்கள்; அவர்களை நம் உடம்போடு இருக்கும்படி என்போடு என்பாகவும் தசையோடு தசையாகவும் சேர்த்து அமைத்துக்கொள்வதே சிறந்த ஆசாரமென்றார்கள்" என ஒனெஸிகிரிடாஸ் சொன்னான்.

"அவர்கள் அகோரபந்திகளாய் இருக்கவேண்டும்" என்று தண்டிஸ்வாமி சொன்னார்.

அவர்களுடைய ஆசாரம் சரியானதென்று ஒப்புக் கொள்கிறீரா?" என ஒனெஸிகிரிடாஸ் வினவினான்.

அதற்குத் தண்டிஸ்வாமி, "ஒப்புவதில்லை. ஏனெனில், செத்ததானாலும் சேதித்ததானாலும் எவ்வகை மாமிசத்தையும் உண்ணலாகாதென்பது எங்கள் கொள்கை.

'ஊனத்தின் றூனைப் பெருக்காமை முன்னினிதே.'

புலால் கூடாதென்பது பொதுவாயிருக்க, மானிடப்பிசிதம் புசிப்பது கூடாதென இன்னும் பலமாக ஆக்ஷேபிக்க வேண்டும். பரிசனத்தாரின் புலவைப் பாரணம் பண்ணும் அந்த அகோரபந்திகள் உயிருள்ளதெதையும் கொல்ல மாட்டார்கள், எவ்வகைப் புலாலையும் புசிக்கமாட்டார்கள் என்பதைக் கவனித்தாயா? ஆகையால், அவர்கள் அதை ஒருவிதமான உத்தமத் தியாகமெனக் கருதுகிறார்கள். ஆயினும், அது ஆதியில் ஏற்பட்டதொரு வழக்கத்தினால் வந்ததேயல்லாமல், வேதத்தால் விலக்கப்பட்டதன்று எனத் திடமாகச் சொல்வேன்" என்றார்.

"கௌகஸாவில் மற்றொரு விசித்திரமான சாதியார் இருக்கிறார்கள். பட்டப்பகலிற் பகிரங்கமான இடத்தில் ஸ்திரீபுருஷர்கள் புணர்வது அவர்களில் வழக்கமாயிருக்கின்றது; அது சரியா?" என ஒனெஸிகிரிடாஸ் வினவினான்.

"அநீதி எனக் கண்டிக்கத் தக்க அமிசம் அதில் ஒன்றுமில்லையே. ஸ்திரீ புருஷர்களுக்கு அப்படிப்பட்ட சம்பந்தம் உளதென்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். பகற்பொழுதில் வெளி நிலத்தில் போகிப்பதனால், புணர்ச்சிக்கு அடிக்கடி அவகாசம் இராதொழியலாம். காமாதுரமும் குறையலாம். ஆனால், அந்த ஆசாரத்தை நாங்கள் ஆமோதிக்கமாட்டோம். ஏனெனில், தெய்வத்தியானத்தையும் பிரார்த்தனையையும் போலப் புதியதோர் ஜீவனைப் பிறப்பிப்பதற்காகப் பயபக்தியோடு செய்யத்தக்க 'வாமதேவ யஜ்ஞம்'

என்னும் இந்த வைதிக காரியமும் ஏகாந்தத்திற் செய்யத் தக்கதேயாகும்" என்று தண்டிஸ்வாமி கூறினார்.

"நீங்கள் சொல்வது சரியென்றே நானும் நினைக்கிறேன். தியான யோகத்தில் அமர்ந்திருப்பதைத் தவிர நீங்கள் வேறொன்றும் செய்வதில்லையா?" என்று ஓனெஸிகிரிடாஸ் வினவினன்.

"அடிக்கடி நாங்கள் நகரத்திற்குப் போய்க் கடைவீதிகளில் அங்கங்கே பிரிந்துவிடுகிறோம். எங்களுடைய வைதிக தர்மத்தின் உண்மைகளைப்பற்றி ஜனங்களுக்குப் பிரசங்கிக்கிறோம். செல்வவான்களாயினும் ஏழைகளாயினும், எல்லாருடைய வீடுகளுக்குள்ளும் நாங்கள் தாராளமாகப் போகிறோம். அந்த வீடுகளில், ஸ்திரீகள் இருக்கும் இடம் உள்பட, எல்லா அறைகளுக்கும் போகிறோம். அங்கே இருப்பவர்களுடன் சம்பாஷிக்கிறோம். வேதம், வேதாந்தம், தர்மசாஸ்திரம், இதிகாச புராணங்கள், விரதாதிகள், ஆசாராதி வியவகாரங்கள் முதலிய பற்பல விஷயங்களைப்பற்றிப் பேசுகிறோம். அவர்கள் அன்போடளிக்கும் அன்னபானுதிகளைப் புசிக்கிறோம்" என்றார் தண்டிஸ்வாமி.

"அலெக்சாண்டரோடு சம்பாஷிக்கவேண்டுமென்னும் ஆசை உங்களுக்கு உண்டாகவில்லையா? அவரை ஏதாவது கேட்கவேண்டுமென்று விரும்புகிறீர்களா?"

"இல்லை. இவ்வளவு நெடும் பிரயாணம் ஏன் மேற்கொண்டானென்று மாத்திரம் நான் ஒரு வேளை கேட்டாற் கேட்கலாம். அதைத் தவிர நான் கேட்கவேண்டியது வேறொன்றுமில்லை" என்றார் தண்டிஸ்வாமி.

"இந்த வார்த்தையைக் கேட்டு அவர், டயோஜனீஸின் மறுமொழியைக் கேட்டு ஆச்சரிய மெய்தியதுபோல, ஆச்

சரியப்படுவர். கோரிந்து (Corinth) நகரத்துத் தெருவொன்றில், பெரிய மண் ஜாடியொன்றில் உட்கார்ந்து டயோஜனீஸ் வெயில் காய்ந்து கொண்டிருக்கையில் அலெக்சாண்டர் அவரைப் போய்ப் பார்த்தார். ஜாடியின் மீது குனிந்து எட்டிப் பார்த்து, 'தங்களுக்கு நான் ஏதேனும் சகாயம் செய்யக் கூடுமா?' என்று விநயமாக வினவினார். அதற்கு அந்த மகாபுருஷர், 'ஆம். செய்யலாம். தயை செய்து வெயிலை மறைக்காமல் நகர்ந்து போம்' என்று பதில் சொன்னார். அப்போது அலெக்சாண்டர், 'நான் அலெக்சாண்டராக இராவிட்டால், டயோஜனீஸாகவே இருக்க விரும்புவேன்' என ஆர்ப்பரித்தார்" என்று ஓனெஸிகிரிடாஸ் சொன்னான்.

"அலெக்சாண்டராகவே இருக்க அவர் ஏன் விரும்புகிறார்?" என்று தண்டிஸ்வாமி வினவினார்.

"ஏனெனின், அவர் உலகத்தை வென்று ஆள்வாரெனவும், எவரும் அவரை வெல்லமாட்டார் எனவும் ஜோஸியம் சொல்லியிருக்கிறார்கள்" என்று ஓனெஸிகிரிடாஸ் பதில் சொன்னான்.

"ஏதேனுமொன்று அவரை வெல்லும்" என்றார் தண்டிஸ்வாமி.

"எது வெல்லும்?" என அவன் வினவினான்.

அதற்குத் தண்டிஸ்வாமி ஞானவாசிஷ்டத்திலிருந்து கீழ்க்கண்ட செய்யுட்களை எடுத்தோதினார்:

விழுமியர் சுபத்தின் பாலர் மேருவை யொப்பா ரெல்லாம்
பழுதறு கருடன் கொல்லும் பாம்பெனக் காலன் கொல்லும்
புழுதியோ டிலது நம்பு பொன்மலை புணரி வெள்ளஞ்
செழுமையேந் திரமுங் காலன் சிதைத்துத்தன் வடிவ மாக்கும்.

**மகரநீர் கடல்த டிக்கும் வடமுகக் கனலே போலச்**
**சகலமும் விழுங்குங் காலன் சகத்திடை விழுங்கா தில்லைப்**
**புகலரும் பெரியோ ரேனும் பொழுதோரு கணமுந் தாழான்**
**அகிலமும் விழுங்கித் தானே யகிலமாய் நிற்கு மன்றே.**

மற்றும் விளங்கச் சொல்வாராய், "காலம் வெல்லும்; 'காலம்' என்பதே காலன் என வழங்கப்பெறும். நாமெல்லோரும் காலனுக்கு அடிமைகள். முடிவில் நம்மெல்லோரையும் வென்று நிற்பவன் காலனே. காலமே மிச்சம். நாமெல்லோரும் அழியத்தக்கவர்களே. 'மிச்சம்' என்பதையே வடமொழியில் 'சேஷம்' என்பார்கள். காலம் என்பதைக் காலன் என்றதுபோல, சேஷம் என்பதைச் சேஷன் என்பார்கள். சேஷன் என்பது ஸர்ப்பத்தின் பெயர். ஆகவே, ஸர்ப்பமானது காலத்தின் அறிகுறியாக வணங்கப்படுகின்றது. ஸர்ப்பம் தன் வாலை வாயில் வைத்துக்கொள்வது வழக்கம். அப்படி வைத்துக்கொண்டால் அது பூர்ண வட்டமாகின்றது. வட்டத்திற்கு அடியும் இல்லை, நுனியும் இல்லை. ஆதலால், காலம் அநாதி; அதற்கு முதலும் இல்லை கடையும் இல்லை" என்று தண்டிஸ்வாமி சொன்னார்.

"காலம் என்பது என்ன? அதைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்? அதைவசப்படுத்தி ஆள்பவர் எவரும் இல்லையா? அதை வசப்படுத்தமுடியாதா? அதற்கு மேலதிகாரி எவரும் இல்லையா?" என அவன் வினவினான்.

அதற்கு மறுமொழியாக, தண்டிஸ்வாமி தம் சிடர்களுள் மிக்க இளைஞர்கள் இருவரை விளித்து, "கால சக்கரம்" என்னும் செய்யுளைப் பாடச்சொன்னார். அவர்கள் பின்வருமாறு அந்தப் பாடலை ஓதினார்கள்:—

காலசக்கரம்

வாழ்க்கைநதி கரைபெருதும் வற்றது பாயும்
மன்னுபொருள் பலவேறு வரும்பிறத போதும்
வீழ்ச்சிபெறும் தேசங்கள் ஆங்குப்பிற ஓங்கும்
வெவ்வேறு சமயநெறி தோன்றுமழி வாதும்
சுற்றிச்சுழல் கின்றதே காலசக்கரம்—பிரம்ம
சுதியொன்றி விரைகின்றதே காலசக்கரம்!
காரிரவு, நாள்மாதம், ஆண்டுவரும்; போதும்
கதிர்மறைய, மக்கள்தலத் தினகரனும் வீழ்வான்
ஆருயிரெல் லாம்அழியும், துயருலகின் நீங்கும்
அணுமனிதன், அன்பரொடு மாற்றலரும் செல்வார்
சுற்றித்தெரிக் கின்றதே காலசக்கரம்—பிரம்ம
சுதிசேர்ந்து சுழல்கின்றதே காலசக்கரம்!
பேதங்கள் தாமறிவார், வேறுமனங் கொள்ளார்
பேதைமதிப் புவிமனிதர், அபேத* நிலை யதுவே;
வேதங்கள் போற்றுமொரு மெய்ப்பொருளென் றுணரார்
விழிமலரச் சிந்தித்து நின்றுநிஜங் காணுர்
சுற்றிஉயிர்க் கின்றதே காலசக்கரம்—பிரம்ம
சுதிசேரச் சுழல்கின்றதே காலசக்கரம்.
எண்ணரிய பெரும்புவனம் பலதோன்றும் மறையும்
யாரறிவார் மருமத்தை எவரெடுத்து மொழிவார்
திண்ணமுறும் ஞானத்திற் சிறுதிவலை பெறுவோம்
தெளியஅதன் உற்பத்தி மூலத்தை அறியோம்
சுற்றிச்சிரிக் கின்றதே காலசக்கரம்—பிரம்ம
சுதிசேர்ந்து விரைகின்றதே காலசக்கரம்.
விண்மீனும், நவக்கிரக நிலைமையிவை தோரான்
மெய்ஞ்ஞான முனிவன்எனிற் சூழ்ந்தபுவி எங்கும்

---

* சாம்ய.

நண்ணுபல உயிர்தோறும் நல்லன்பு செய்வான்
நாடரிய நாயகனைக் கண்டவனும் ஆவான்
சுற்றிக்களிக் கின்றதே காலசக்கரம்—பிரம்ம
சுதிசேர்ந்து சுழல்கின்றதே காலசக்கரம்.
வாட்டாது வெம்மைதரும் செய்யகனல் அன்னான்
மருவுபயன் கருதாது செயல்புரிவான் அவனே
வேட்கையிலான், தனிஅன்பு தரும்சிர்தை உடையான்
மெலியாது தளிர்க்கின்ற திருக்காதல் நிதியான்
சுற்றிஇசைக் கின்றதே காலசக்கரம்—பிரம்ம
சுதியோன்றி விரைகின்றதே காலசக்கரம்.
சுழல்கின்ற சக்கரமே நினதிறைவன் எவனே
தொல்லுயிரை மறவாத வேதாந்தன் அலனே
வழிநீதி வகுத்திடுவன்; விதியாக்கி உன்னை
மண்பாதையின் கதியாக்கி, நின்றோட்டு விப்பான்
சுற்றிச்சுழல் கின்றதே காலசக்கரம்—பிரம்ம
சுதியோடு லயிக்கின்றதே காலசக்கரம்
எமதிறைவன், முழுமுதலான், மன்னுநீதி மன்னன்
இணையற்ற மாயாவி, அஞ்சும்அற வேந்தன்
அமையுமுயிர்க் காதாரம், சாந்திநிழல் ஆனான்
அருளாழி, காலபதி, அதன்கதிக்கும் தலைவன்
சுற்றிலயிக் கின்றதே காலசக்கரம்—பிரம்ம
சுதிசேர்ந்து சுழல்கின்றதே காலசக்கரம்.

சீடர்கள் இந்தப் பாடல்களை ஓதிமுடிப்பதற்குச் சற்று முன்னரே தண்டிஸ்வாமி சமாதி நிஷ்டையில் ஆழ்ந்தார். அது ஒளைவிகிரிடாஸுக்குப் புதுமையான காட்சியாயிருந்தமையின், அவன் திடுக்கிட்டான்; அவருடன் பேச முயன்றான். அப்போது அவனைப் பார்த்துக் கலைனஸ், "அவருடைய நிஷ்டையைக் குலைக்காதே. இன்னும் ஒருமணி நேரம் நிஷ்டையில் இருப்பார். என்னோடு வேறு ஏதேனும் பேசவேண்டுமானால், பேசு" என்றார்.

அதன்மீது ஓனெஸிகிரிடாஸ் கலனஸினிடம் போனான். அவரைப் பார்த்து, "அவதூதர்களாகிய உங்களுடைய சரியை அதிசயமாயிருந்தது. எங்கள் நாட்டில் இப்படிப்பட்ட தொன்றும் இல்லை. ஓ, நீங்கள் அலெக்சாண்டரிடம் வந்து இதையெல்லாம்பற்றி அவருக்குச் சொல்லவேண்டும்" என்றான். கலனஸுக்கு ஆசையூட்டும் பொருட்டு அவன், அலெக்சாண்டருடைய போஜன பந்தியில் வழங்குகிற ருசிகரமான பலவகைப் புலவுவகைகளையும் ஸுராவகைகளையும் விவரித்துச் சொல்லியதன்றி, அவ்வரசனிடம் போவீரானால் அவர் பெறத்தக்க பற்பல அரிய சம்மானங்களைப்பற்றியும் ஏற்றமாய்ப் பேசினான். மற்றும், "உங்களுடைய புகழைப்பற்றி அவர் கேள்விப்பட்டிருக்கிறார்; உங்களைப் பார்க்க ஆவலாயிருக்கிறார். வீணாக ஏன் இங்கே கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறீர்கள்? உங்களுடைய நிர்வாணத்தை நீங்கள் பெருமையாகப் பாராட்டிப் பேசினபோது, அது அகந்தையென உங்கள் குருவே உங்களைக் கண்டித்தாரே. என்னோடு வாரும்; அரசரோடு உட்கார்ந்து புசித்துப் பாரும். அவர் பேச்சைக் கேளும். அதற்குப்பின் உமது இஷ்டம்போல நடந்துகொள்ளும். உமது ஞானத்தைப் பாராட்டுவார் இவ்விடத்தில் எவரும் இல்லை. இப்படிப்பட்ட இடத்தில் இருப்பானேன்? அவ்விடத்தில் நீர் சுகமாயிருக்கலாம். அந்த ஸம்ஸ்தானத்துக் கனவான்கள் எல்லாராலும் கொண்டாடப் பெறுவீர்" என்று சொன்னான். கலனஸின் மனம் சற்று இளகியதைக் கண்டு, "இரண்டொருநாள் வந்திருந்து பாருமே. அதற்குமேல் உமக்குப் பிடிக்காவிட்டால் திரும்பிவந்துவிடும். வழக்கத்தைக் காட்டிலும், ஆசாரத்தைக் காட்டி

லும், உண்மையையே நீர் பிரபலமாகக் கொள்ளவேண்டும்'' என்று ஓனெஸிகிரிடாஸ் சொன்னான்.

''சரி, நான் வருகிறேன். நாற்பதுவருஷகாலம் நான் விரதம் மேற்கொண்டிருந்தேன். அந்தப் புலனொறுப்பு விரத காலம் ஒரு மாதத்திற்கு முன்னால் முடிந்துபோயிற்று. ஆனதனால், பிரதிஜ்ஞாபங்க தோஷம் என்னைச் சாராது'' என்று கலனஸ் சொன்னார். அன்றுமாலை, நகரத்திலுள்ள எளிய சாவடிக்குப் போகாமல், கலனஸ் ஓனெஸிகிரிடாஸுடன் அலெக்சாண்டருடைய டேராவுக்குப் போனார்.

அவரை மிக்க மரியாதையோடு வரவேற்று அலெக்சாண்டர் ராஜோபசாரங்கள் செய்து, ருசிகரமாயும் புஷ்டிகரமாயுமுள்ள எல்லாவகையான இறைச்சிகளையும் மதுக்களையும் அவருக்கு வழங்கினான். ஆவலோடு அவைகளைத் திருப்தியாகப் புசித்துப் பருகிப் பேசத்தொடங்கி, அங்கிருந்தவர்களெல்லோரையும் அவர் களிப்பித்தார். அவரிடம் அலெக்சாண்டருக்கு அப்போதே பற்றுதல் ஏற்பட்டுவிட்டது. அவரைப் பார்த்து, ''இது முதற்கொண்டு நீர் என் நண்பர். உம்மைத் திரும்பிப் போக விடமாட்டேன். பூஜிக்கப்பெறும் விருந்தினராக எனது போஜன பந்தியை அலங்கரித்துக்கொண்டிரும். உங்கள் குலத்துக்குரிய ஞானத்தையும் எங்கள் ஞானத்தையும் சம்மேளனஞ் செய்யும். அதனால் இருவரும் நலம் பெறுவோம்'' என்று சொன்னான்.

''நல்லது, அப்படியேயாகட்டும். ஆக்ஷேபிக்காமல் உடனே ஏன் இசைகிறேனென்றால், இந்தப் புதிய உணவு எனக்கு இனிமையாயிருக்கின்றது. சுற்றுமுற்றுமுள்ளவைகள் முன்னினும் நன்றாயிருக்கின்றன. பழைய உணவே எனக்கு வேண்டும், பழைய வழிகளையே திரும்பப் பற்று

வேன் என நான் பாசாங்குசெய்தால், அது வெறும் ஆஷாடபூதித்தனமாகும். 'ஆஷாடபூதித்தனம் ஆகாது; தவசிக்கு அது யோக்கியமானதன்று; யோகியானவன் உண்மையையே கடைப்பிடித்து ஒழுகவேண்டும்' என்று தண்டிஸ்வாமி, உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவது பொல்லாப் பாபமென இகழ்ந்துள்ளார். இவ்விடத்துச் சந்தர்ப்பங்களெல்லாம் எனக்கு மிகப் பொருத்தமாய் இருக்கின்றனவென நினைக்கிறேன்; உம்மோடு இருப்பதனால் அத்தியாத்மஞானமும் அதிகமாகுமென்று நினைக்கிறேன்; உம்மோடுகூடப் புதிய புதிய தேசங்களுக்குப் போய் அங்குள்ளவர்களுக்கும் எங்கள் தத்துவஞானத்தைப் போதிக்கலாமென்றும் நினைக்கிறேன்" என்று கலனுஸ் சொன்னார்.

அலெக்சாண்டர் களிப்புற்று எழுந்து அவரைக் கட்டித் தழுவிக்கொண்டு, "இங்ஙனம் நீங்கள் தீர்மானம் செய்து கொண்டதற்காக ஒரு நாளும் வருந்தவேண்டி வராது. உங்களுடைய திடமான கொள்கைகளுக்கு மாறாக ஒரு பொழுதும் ஒன்றும் நான் செய்யமாட்டேன்" என்றான்.

மூன்று நாளைக்குப் பின் அலெக்சாண்டர் நகரத்துக்கு வெளியேயுள்ள புல்வெளியிற் குதிரைச்சவாரி செய்து கொண்டிருக்கையில், மறுபடி சில பிராமணர்களைக் கண்டான். ஒரு துவிபாஷியின் மூலமாக அவர்களுக்கு, "உங்கள் தலைவராகிய கலனுஸ் என்னிடம் வந்திருக்கிறார். பழைய குருட்டு நம்பிக்கைகளையெல்லாம் விட்டுவிட்டார். இப்போது விலையுயர்ந்த ஆடைகளை அணிகிறார்; எவ்வகையான இறைச்சிகளையும் தின்கிறார்; உயர்தரமான பானவகைகளைப் பருகுகிறார்; எங்களிற் சிறந்தவர்களைப்போல வாழ்க்கையை அனுபவிக்கிறார். ஆகையால், தண்டிஸ்வாமி

யும் பாக்கியுள்ள நீங்கள் பதின்மூன்று பேரும் வந்து, உங்கள் பண்டைக்காலத்து ஆசாரங்களையெல்லாம் உதறியெறிந்துவிட்டு, எங்கள் கோஷ்டியிற் சேருங்கள்'' என்று சொன்னான்.

''மகாராஜரே! கலனைப்போல மற்றெல்லாப் பிராமணர்களும் மனமாறுவார்களென்றும், இச்சையடக்கமில்லாதவர்களாயிருப்பார்களென்றும் நீர் நினைப்பது பெருந்தவறு. கலனை இகழ்ந்து காலால் உதைக்கின்றோம். பயனற்றவரென்று அவரை நாங்கள் வெறுத்து விலக்கிவிட்டோம். எதெதை நாங்கள் இகழ்ந்து துச்சமெனத் தள்ளுகிறோமோ அவையெல்லாம், பணப்பேய் பிடித்த துராசாரக்காரரான உங்கள் நண்பர் கலனுக்கு இப்போது உயர்வாகவும் மகிழ்வாகவும் இருக்கின்றன. தௌர்ப்பாக்கியம் மிகுந்த கடைகெட்டவனொருவனைக் கண்டு நாம் எவ்வளவு பரிதபிப்போமோ அதைக்காட்டிலும் அதிகமாகப் பரிதபிக்கத்தக்க இழிவான ஜந்துவாவார் அவர். ஏனெனில், 40 வருஷ காலம் செய்த தவத்தின் பயனைத் துறந்து, ஐசுவரியத்தின்மீது நாட்டங்கொண்டதனால், அவர் தம் ஆன்மா கடைத்தேறுவதற்கில்லாமற் பாழாய்ப் போனார். அவர் எங்களுக்கும் ஏற்காதவர்; கடவுளுக்கும் ஏற்காதவர். ஆகையால், கவலைகள் புகுந்து மனத்தை அலைக்காமல் அமைதியாகக் காட்டிற் காலங் கழிப்பதில் அவருக்குத் திருப்தி இல்லாதாயிற்று; இனி மோக்ஷ சுகம் பெற்று இன்புறுவோமென்னும் இச்சையினால் அவருக்கு உற்சாகமும் உண்டாகாதாயிற்று. பணத்தாசையினால் அவர் தமது ஆன்மாவுக்கே ஹானி தேடிக்கொண்டார். இந்திரிய நிக்கிரக சக்தி சிறிதும் இல்லாமையால் அவர், காட்டிற் கடவுளைத் தியானித்துக்கொண்டு

எங்களோடு அனுபவித்த ஆனந்தத்தைக் கைவிட்டுக் கடவுளுக்குப் பதிலாக வேறொரு பிரபுவைத் தொழப்போனார்" என்று அந்தப் பிராமணர்களின் தலைவன் சொன்னான்.

"ஆனால், நான் ஜீயஸின் சேயென்று உங்களுக்குத் தெரியாதா? என் சேவையில் அமர்ந்ததனால், அவர் கடவுள் சேவையினின்றும் விலகவில்லையென உங்களுக்குத் தெரியாதா? அலெக்சாண்டர் விரும்பினால், அவனுடனேயே இருப்பதற்கு இசையாதவர் உங்களில் எவரேனும் உளரோ? அவன் ஆணையை மீறுவதனால் நேரும் தண்டனையை மேற்கொள்பவரும் இருக்கின்றனரோ?" என்று அலெக்சாண்டர் வினவினான்.

"ஓ வேந்தரே! எங்களுள் மகானாகிய தண்டிஸ்வாமி இன்னும் இருக்கிறார். நீங்கள் அழைத்தாலும் வரமாட்டார்; உங்கள் ஆணையை மீறுவதனால் விளையும் விளைவைப் பொருட்படுத்தாமல் மேற்கொள்வார். வனமே அவரது வாஸஸ்தலம்; பழுத்து உதிர்ந்த சருகுகளே அவருடைய பள்ளி; காட்டுக்காய்கனிகளே அவருக்கு உண்டி; தண்புனலே தாகசாந்தி. அவர் சாந்தி நிலை எய்தியவர்; மானிடருக்குள் தெய்வமாக விளங்குகிறவர் அவரே" என்று பிராமணர்களின் தலைவன் மறுமொழி கூறினான்.

"இந்த ஆளை இன்றைக்கே என் டேராவுக்கு வரவழைப்பேன்; இன்றிரவு அவர் என்னுடனும் கலனுஸுடனும் கூடிச் சிரேஷ்டமான இறைச்சி வகைகளையும் மதுவகைகளையும் உண்ணக் காண்பீர்கள்" என்றான் அலெக்சாண்டர்.

"ஓ ராஜரே! என்ன சொல்லுகிறீரென்று உமக்கே தெரியவில்லை. செய்து முடிப்பேனென்று நீர் சொல்வதைச்

சாதிப்பீராஞல், நீர் கடவுளின் குமாரரென்பது உண்மையே" என்று சொல்லிவிட்டு அவர்கள் தரையை அடித்து மிதித்துக்கொண்டே போஞர்கள்.

அந்தத் தண்டிஸ்வாமி எப்படிப்பட்டவரென்று பார்க்கும்பொருட்டு அலெக்சாண்டர் குதிரையை உடனே காட்டுக்கு விட்டான். அவரை அங்கே காணவில்லை.

"ஐயா, அவர் இன்னும் திரும்பி வரவில்லை. சிறிது நேரம் காத்திருந்தால் அவரைக் காணலாம்" என்று அங்கிருந்த பிராமணர்கள் சிலர் சொன்ஞர்கள்.

"எவர் பொருட்டும் அலெக்சாண்டர் காத்திரான். இப்போதே அவர் என் டேராவுக்கு வருவாராக" என்ருன் அலெக்சாண்டர்.

"ஐயா, தண்டிஸ்வாமியை உங்களுக்குத் தெரியாது. உங்கள் நயத்திற்கும் அவர் இணங்கமாட்டார்; உங்கள் பயத்திற்கும் அஞ்சமாட்டார்" என்று பிராமணர்கள் கூறிஞர்கள்.

"நல்லது, பார்ப்போம்" என்று சொல்லி அலெக்சாண்டர் தன் இருப்பிடத்திற்குத் திரும்பிப்போஞன். "உடனே போய்த் தண்டிஸ்வாமியை இவ்விடம் கொண்டு வரவேண்டும். அவர் வர மறுத்தால் சாவு திண்ணமெனச் சொல்லு" என்று ஒனெஸிகிரிடாஸைக் காட்டுக்கு அனுப்பிஞன்.

ஒனெஸிகிரிடாஸ் போஞன். தண்டிஸ்வாமி நிர்வாணமாகக் கடுவெயிலிற் சருகுகளின் மீது படுத்துச் சாந்தமான முகத்துடன் தியானத்தில் அமர்ந்திருந்தார். அவரையணுகி, "வாழி வாழி, பிராமண குருவே வாழி! பாரக்கிரம தெய்வமாகிய ஜீயஸின் குமாரரான அலெக்சாண்டர் என்

னும் அரசர், மானிட குலத்திற் கெல்லாம் இறைவராயிருப்பவர். அவர், நீங்கள் இப்போதே தம்மை வந்து காணவேண்டுமெனக் கட்டளையிட்டிருக்கிறார். அவரது உத்தரவுப்படி நடப்பீர்களானால், உங்களுக்கு மிகப் பெரிய சம்மானங்கள் சிறக்கச் செய்வார்; மறுப்பீரானால், அவரை அவமதித்ததற்குத் தண்டனையாக உங்கள் தலையை நறுக்கிவிடுவார்" என்று ஒனெஸிகிரிடாஸ் சொன்னான்.

இனிய புன்னகையோடு தண்டிஸ்வாமி அவன் சொல்வதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்தார். அவன் சொல்லி முடித்தவுடனே, தழைத்தடுக்கினின்றும் தம் தலையைச் சிறிதும் தூக்காமலே, பின்வருமாறு துடுக்காக மறுமொழி கூறலானார்:

"கடவுளே எல்லாவற்றிற்கும் தலைவர். அகந்தையினால் அவர் ஒரு போதும் தீங்கிழையார்; அதுவன்றி ஒளி, சாந்தம், பிராணன், நீர், மானிடவுடல், ஜீவாத்மாக்கள் ஆகிய இவைகளையெல்லாம் படைத்துள்ளார். அந்த ஜீவாத்மாக்கள் துராசைகளினாற் பீடிக்கப்பெறாதிருப்பின், அவர்கள் மரணமெய்தியபோது அவர்களைத் தம்மிடம் ஏற்றுக்கொள்கிறார். அவர் எவருக்கும் எவ்விதமான தீமையும் செய்யாது, இறந்துபோனவர்களுக்குத் திரும்பவும் உயிரொளி அளிப்பார். நான் வணங்கும் கடவுள் அவர் ஒருவரே. அவர் கொலையை வெறுப்பார், போரை விளையார். அன்றியும், 'நூற்றுக் கிருந்தாலும் கூற்றுக்கிரை' என்பது போல, அலெக்சாண்டரும் ஒருநாள் சாகவேண்டியவனே யாதலால், அவன் கடவுளல்ல. அப்படிப்பட்டவன், மூன்று உலகங்களையும் வென்று ஸர்வஸாம்ராஜ்ய சிங்காஸனம் ஏறுதவன், உலகத்திற்கு இறைவனாக எங்ஙனம் ஆவான்? அதுவல்லாமல், அலெக்சாண்டர் பூத சரீரத்

தோடு சொர்க்கத்திற்குக்கூடப் போகவில்லையே. பூமத்தியப் பிரதேசத்தில் சூரியன் எப்படிச் சஞ்சரிக்கிறனென்று அவனுக்குத் தெரியாதே. உலகத்தின் எல்லையோரங்களிலுள்ள ஜனங்கள் அவன் பெயரைக்கூடக் கேட்டதில்லையே. அவனுக்குள்ள வெற்றி வெறியைத் தணிப்பதற்கு இப்போதிருக்கிற ராஜ்யங்களின் விரிவு போதாதெனின், அவன் கங்கையைக் கடந்து போகட்டும். அவன் பேராசை திருப்தியடைவதற்கு வேண்டியவளவு விஸ்தாரமான பிரதேசம் அங்கே இருக்கின்றது. ஆயினும், அலெக்சாண்டர் எனக்குக் கொடுப்பதாகச் சொல்கிற கொடைகளும், செய்வதாகச்சொல்கிற சம்மானங்களும், எனக்கு நிஷ்பிரயோஜனமானவை; அவை சிறிதும் உதவா எனத் தெரிந்துகொள். நான் மதிக்கிற வஸ்துக்கள், உபயோகமாகவும் யோக்கியமாகவும் உள்ளவை, எனக்கு இருப்பிடமாயிருக்கிற இந்த இலைகளும், நித்தியான்னம் அளிக்கிற இப்பூண்டுகளும், ஜலம் சொரிகிற இவ்வருவியுமேயாகும். பெரும்பாடுபட்டுப் பெருங் கவலையோடு குவிக்கிற மற்றெல்லாப் பொருள்களும் பண்டங்களும் ஈட்டுகிறவர்களுக்கு ஆபத்தே விளைவிக்கின்றன; துன்பமும் தொல்லையுமே தருகின்றன. ஏற்கெனவே இவை ஒவ்வொரு மனிதனுக்கும் நிரம்பியிருக்கின்றனவே. என் விஷயமோவெனின், காட்டுச் சருகுகளின் மீது படுத்துக் கண்ணை மூடிக்கொண்டு அமைதியாக உறங்குகிறேன்; நான் காவல் புரிவதற்குரிய பொருள் ஒன்றுமில்லை; கவலைப்படத்தக்கது மில்லை. நான் காப்பாற்றி வைக்கப் பொன் உண்டானால், அது என் உறக்கத்தை யொழித்துவிடும். தாயானவள் தன் மகவுக்குப் பால் கொடுப்பது போலப் பூமிதேவி எனக்கு வேண்டியதை யெல்லாம் கொடுத்திருக்கின்றாள். நான் நினைத்த இடத்திற்குப்

போகிறேன். என் விருப்பத்திற்கு விரோதமாகச் சுமந்து கஷ்டப்படவேண்டிய கவலைகளே எனக்கு இல்லை. எனக்கு இஷ்டமான இடத்திற்குப் போகிறேன்; ஓரிடத்திற்குப் போக எனக்கு மனமில்லையெனின், எந்த ஆவசியகத்தை முன்னிட்டாவது, எந்தக் கவலையை நீக்கும் பொருட்டாவது போகமாட்டேன். அவைகளுக்கு நான் கட்டுப்பட்டவனல்ல. அலெக்சாண்டர் ஜீயஸின் சுதன் எனின், நானும் ஜீயஸின் புதல்வனே. அலெக்சாண்டரது பொருள் எதுவும் எனக்கு வேண்டா. எனக்குள்ளனவே எனக்குப் போதும். இவைகளினால் போதுமான அளவுக்குச் சௌக்கியமாயிருக்கிறேன். அலெக்சாண்டருடன் இருப்பவர்களோ ஒரு பயனுமில்லாமல், தேசதேசங்களிலும் தெண்டிரைகளிலும் அலைந்து கொண்டிருக்கிறார்கள்; அந்த அலைச்சலுக்கு இன்னும் முடிவே காணாதிருக்கிறார்கள். அலெக்சாண்டர் கொடுக்கக்கூடியது எதன்மீதும் எனக்கு ஆசை இல்லை. அலெக்சாண்டர் எது செய்தாலும் நான் அஞ்சப்போவதில்லை. நான் உயிரோடிருந்தால் இந்தியாவே எனக்குப் போதும். அந்த அந்தப் பருவங்களுக்குரிய கனிவகைகளை அவ்வப்போது இது எனக்கு அளித்துக்கொண்டிருக்கும். நான் இறந்தால், என் இயற்கைக்குப் பொருந்தாக் கூடாகிய இவ்வுடலினின்றும் விடுபட்டவனாவேன். அலெக்சாண்டர் என் தலையை வெட்டலாமேயல்லது என் ஆன்மாவை அழிக்க முடியாது. என் தலைமாத்திரமே இங்கே வாய் பேசாது கிடக்கும். இச்சடலத்தை, ஜீர்ணித்துக் கிழிந்த ஆடையைப்போல, மண்ணின்மீது விட்டு எனது ஆன்மா பிரபுவாகிய ஈசனண்டை போய்விடும். இம்மண்ணினாலேயல்லவோ இப் பூதியம் அமைந்துளது? ஆன்மாவாகத் தனியே பிரிந்த பின்,

கடவுளிடம் ஏறிச் செல்வேன். அவரே நம்மை இத்தசைக் கூட்டிலடக்கி இவ்வுலகில் விட்டிருக்கின்றார். இங்கு இருக்குமளவில் அவருடைய கட்டளைப்படி நடக்கிறோமா இல்லையா என்று பார்த்தறியும் பொருட்டு அவர் நம்மை இப்படி விடுத்திருக்கின்றார். அவருடைய சந்நிதானத்திற்கு நாம் போய்ச் சேருங்கால், நமது ஜீவித சரித்திர விவரத்தை ஒப்பிக்கும்படி நம்மைக் கேட்பார். நாம் கர்வித்துச் செய்யும் அக்கிரமங்களையெல்லாம் கண்டிப்பவர் அவரே. ஏனெனில், குடிமகள் வயிறெரியக் கொடிச்சீலை பற்றியெரியும். ஏழையழுத கண்ணீர் கூரியவாளொக்கும். ஏழைப்பிள்ளைக்குத் தெய்வமே துணை. வினைவிதைத்தவன் வினையறுப்பான். தினை விதைத்தவன் தினையறுப்பான். தண்டனை தானே வரும். ஆகையால் நீ போய் அலெக்சாண்டரிடம், 'உன்னுடையது எதுவும் தண்டிஸ்வாமிக்கு வேண்டாம். ஆகையால், உன்னிடம் வரமாட்டார். தண்டிஸ்வாமியினிடமிருந்து உனக்கு ஏதேனும் வேண்டுமானால், அது அவரது தலையேயாயினும், நீ அவரண்டை போ' என்று சொல்" எனத் தண்டிஸ்வாமி ஓனெஸிகிரிடாஸுக்குச் சொன்னார்.

ஓனெஸிகிரிடாஸ் போய்வந்த சமாசாரத்தைச் சொல்லக் கேட்டபின், அலெக்சாண்டருக்குத் தண்டிஸ்வாமியைப் பார்க்கவேண்டுமென்னும் ஆவல் முன்னிலும் அதிகமாயிற்று. அவர் கிழவராயும் நிர்வாணியாயும் இருந்தபோதிலும், அநேக தேச ஜாதிகளை ஜயித்தவனான அவன், தன்னுடைய சக்திக்கு மீறின வெல்லமுடியாத எதிரி அவர் ஒருவரே எனக் கண்டான். ஓனெஸிகிரிடாஸை அனுப்பிவிட்டுக் கலனஸை அழைத்து, அந்த வர்த்தமானம் முழுவதும் அவருக்குச் சொன்னான்.

"அவர் ஜயித்துள்ள சத்ருக்கள் வேறாயினும் அவரும் வெற்றியாளரே. அவரை நான் ஹிம்ஸிப்பது தகுதியன்று. முக்கியமாக, நான் என்ன செய்தபோதிலும் அந்த மார்க்கமெல்லாம் அவரிடத்திற் பயன்படாது. ஆதலால், அவர் விஷயத்தில் நான் கொடுமை காட்டுவதனால் அவர் கலங்க மாட்டாரென்பது திண்ணம். அவ்வளவு அசாத்தியமான யோக்கியதை உடையவரொருவர் இருக்கிறாரே என்று மகிழ்கிறேன். வெல்லவொண்ணாத இப்படிப்பட்ட தன்மையை ஊட்டக் கூடிய தர்மம் (மதம்) மிகச் சிறந்த ஸத்துள்ளதாயிருக்கவேண்டும்; எங்கள் மாஸிடோனியச் சேனைகளுக்குள்ளதைப் போன்ற மிகக் கடுமையான சரீர கிரியைகளை வற்புறுத்துவதாகவே இருக்கவேண்டும்" என்று அலெக்சாண்டர் சொன்னான்.

அப்போது கலானஸ் அவனைப் பார்த்து, "ஐயா, யுத்த சம்பந்தமான விஷயங்களில் உங்களுக்கு எவ்வளவு சிரத்தை இருக்கின்றதோ, அவ்வளவு மத சம்பந்தமான விஷயங்களிலும் இருக்கின்றதே!" என்றார்.

"அப்படியன்று; யுத்தவிஷயங்களைக் காட்டிலும் மத விஷயங்களிலேயே எனக்குப் பற்று அதிகம். யுத்தக்கிரியையில் உலகத்தில் எவனுக்கும் ஈடு கொடுப்பேன். ஆதலால், அவ்விஷயத்தில் இனித் தெரிந்து கொள்ளவேண்டுமென நான் ஆசைப்படத்தக்கது ஒன்றுமில்லை; மதவிஷயத்திலோ, அகோசரமாயும் அசிந்தியமாயும் இருக்கிற அந்த ரகசியம் என் மனத்தைக் கவருகின்றது; அதை மேலும் மேலும் ஆழ்ந்து பார்த்து அறியவேண்டுமென்னும் ஆவல் குடிகொண்டு என்னைத் தூண்டுகின்றது" என்று அலெக்சாண்டர் சொன்னான்.

"உண்மையாக, கிரியையில் நீர் தண்டிஸ்வாமி. ஞானத்தில் அவர் அலெக்சாண்டர். எனவே, நீர் கர்மயோகி, அவர் ஞானயோகி. நீங்களிருவரும் வேறு வேறு மார்க்கத்தவர்கள். சாமானியமான மனவெழுச்சிகளுக்கு இடங்கொடுத்து நீர் சலியாமற் சிணுங்காமற் ஸாஹஸமாக உழைக்கின்றீர். இது யவன முறை. அவரோ, பலவகையான மனவெழுச்சிகளையும் சோர்வுறாது எதிர்த்துப் போராடி யடக்கி மனோசக்தியை மிக வளர்க்கின்றார். இது ஹிந்துமுறை. நீங்களிருவரும் சாவுக்கு அஞ்சாதவர்கள். பெரிய ஸாஹஸக்காரர்கள். இவ்வுலகத்தை வெல்ல வேண்டு மென்பது உமது நோக்கம்; மறு வுலகத்தை வெல்லவேண்டு மென்பது அவரது நோக்கம்" என்றார் கலனஸ்.

"என்ன அவஸ்தை இது! நாங்களிருவரும் சந்தித்துக் கலந்து பேசுவதற்குக் கொடுத்துவைக்காதவர்களாயிருக்கிறோமே! ஆயினும், அவருடைய ஸ்தானத்தில் நீங்கள் என்னண்டை இருக்கிறீர்களாதலால், நான் குறை கூறக் கூடாது" என்றான் அலெக்சாண்டர்.

---

# அத்தியாயம் 11

## சூரிகளின் சமாகமம்

**த**ண்டிஸ்வாமி கடைசியாக மறுத்துக் கூறியதற்கு ஒரு வாரத்திற்குப் பின், அலெக்சாண்டர், டாலமி, யூமினீஸ், ஹெபேஸ்டியன், கிரிடோபுலஸ், கிரிடோடிமாஸ், ஆர்க்கெலாஸ், டிமாடீஸ் என்பவர்களெல்லாரும் சேர்ந்து தக்ஷசிலையிலுள்ள வித்தியாபீடத்திற்குப் போய், அங்குள்ள சூரிகளோடு விஷய ஆராய்ச்சி செய்தார்கள். அலெக்சாண்டரையும் அவனுடன் வந்தவர்களையும் ஆம்பீசு அழைத்துக்கொண்டுபோய், அந்தக் கழகத்தின் பற்பல சாகைகளையும் சுற்றிக் காட்டினான். முதன்முதல் அவர்கள் வைத்திய மண்டலத்திற்குப் போனார்கள். இங்கே கிரேக்க வைத்திய சிரேஷ்டர்களான கிரிடோடிமாஸும், கிரிடோபுலஸும், அவர்களல்லாமல் டாலமியும், இந்தியர்களுடைய தேகாரோக்கிய வைத்திய முறையிலும், சஸ்திர வைத்திய முறையிலும் மிகுந்த சிரத்தை காட்டினார்கள்.

"எங்கள் வைத்தியமுறைக்கு ஆயுர்வேதம் என்று பெயர். அதாவது, ஆயுளை வளர்க்கும் வித்தை என்பதாம். இதில் இரண்டு கிளைகள் உண்டு. அவை நரவைத்தியம், பசுவைத்தியம்; அதிலும், ஔஷதப் பிரயோகம், சல்லியப் பிரயோகம் என்பன இருவகை. யானை, குதிரை, பசு, கிளி முதலான பிராணிகளுக்கு உறும் நோய்களைப்பற்றி எங்களிடம் வேறு வேறு விசேஷ சாஸ்திரங்கள் இருக்கின்றன. மருந்து வகையில் பீயூஷம் (குடிநீர்), தாவனம்

(கழுவுநீர்), சூர்ணம், அஞ்சனம், விலேபனம் (பூச்சு மருந்து), மெழுகுசீலை ஆகிய இவைகளை வழங்குகிறோம். பிரபல சக்தி வாய்ந்த மூலிகைகள் பல இந்நாட்டில் இருக்கின்றன. அவற்றிற் சில தேகத்தைத் திடமாகவும் ஆரோக்கியமாகவும் வைப்பதற்கானவை; வேறு சில ஜ்வரம், புழுவகைகள், பாம்புகடி முதலான நோய்களை ஆற்றுவதற்கென ஏற்பட்டவை; இன்னும் சில இறந்தவர்களை உயிர்ப்பிக்கும் சக்தி வாய்ந்தனவெனச் சொல்கிறார்கள்" என்று வைத்தியப் பிரதம பண்டிதர் சொன்னார்.

"இறந்தவர்களைப் பிழைப்பித்ததை நீர் கண்ணாற் கண்டிருக்கிறீரா?" என்று அலெக்சாண்டர் வினவினன்.

"மருந்தினுல் உயிர் ஊட்டியதைப் பார்த்ததில்லை."

"வேறு எவ்வகையாலேனும் பிழைப்பிக்கப் பார்த்திருக்கிறீரா?"

"ஆம். பார்த்திருக்கிறேன். தேர்ந்த யோகிகள் சூரியரச்மிகளையேற்றி, இறந்த பறவைகளைச் சிறிது நேரம் உயிர்த்திருக்கக் கண்டுளேன்."

"எல்லாப் பாம்புக்கடிகளையும் குணப்படுத்த முடியுமா?"

"எல்லாக் கடிகளையும் குணமாக்க முடியாது. பாம்புக் கடிகளை விஷக்கடியென்றும், விதிக்கடி யென்றும் இரண்டு விதமாகப் பிரிக்கிறோம்."

"இது விஷக்கடி, இது விதிக்கடி எனப் பார்த்தவுடனே சொல்வீர்களா?"

"சொல்லமுடியாது. சிகிச்சை செய்து பார்த்த பின்னரே சொல்வதற்காகும். மருந்து பயன்படாமற் போனுல், அது விதிக்கடி எனக் கொள்வோம்.'

"இது காரியானுமான வாதமன்றே? அப்படியானல் அது சாஸ்திரீயமாகுமோ?" என்று அலெக்சாண்டர் வினவினன்.

அதற்கு வைத்திய சாஸ்திரி, "வைத்திய சாஸ்திரம் இன்னும் அனுபவ மூலகமானதாகவே இருக்கின்றது" என்று சொன்னர்.

"இறந்தவர்களை எழுப்பும் சக்தி சூரிய கிரணங்களுக்குள்ளதென நீர் நிஜமாக நம்புகிறீரா?" என்றுன் அலெக்சாண்டர்.

"அவை உயிர்ப்பிப்பது ஆச்சரியமாக எனக்குத் தோன்றுது. இந்துக்களாகிய நாங்கள் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, சூரியகாந்தி என்னும் இவ்வைந்தும் ஆரோக்கியத்திற்கு முக்கியமான ஸாதனங்களென நம்புகிறேம். இதோ இந்தத் தன்வந்தரித்தைலத்தைப் பாரும். நூறு கரண்டித் தைலத்தைச் சூரிய புடம்வைத்து ஐந்து கரண்டியளவாகச் சுண்டவைத்திருக்கிறேம். இவ்வாறு 108 முறை செய்துள்ளோம். ஒருமுறை சுண்டச்செய்தபின், திரும்ப நீர் வார்த்து 100 கரண்டி அளவாக்கிச் சூரியகாந்தியினல் அது ஐந்து கரண்டி அளவாகச் சுண்டும்படி செய்வதே சூரியபுடம். இவ்வாறு ஒவ்வொரு தடவையும் செய்திருக்கிறேம். ஆதலால், இது கனிந்த பழம்போல, உயிரளிக்கும் சூரியகிரணத்தை உள்ளடக்கிக் கொண்டிருக்கிறது. இந்தத் தேவதாரு மரத்து உட்சவ்வுக்கட்டையைத் திருஷ்டாந்தமாக எடுத்துக்கொள்ளுங்கள்: இதைச் சாதாரணமுறைப்படி வாலையிற் காய்ச்சித் தைலம் இறக்குவோமாயின், தைலமெல்லாம் ஆவியாய்ப் பறந்துபோம். நமக்கு ஒரு துளியும் கைக்கு வராது. ஆதலால், நாங்கள் கந்தல் துணியை நல்லெண்ணெயில்

தோய்த்து அக்கட்டையின்மேல் சுற்றிவிட்டுக் கொளுத்து கிறோம். அது எரியும்போது சுடசுடச் சொட்டுகிற சுடர்த்தைலத்தை ஓர் ஏனத்தில் ஏந்துகிறோம். அந்தத் துளிகளில் சிலாக்கியமான தேவதாருத் தைலம் அமைந் துள்ளது" என்று வைத்திய சாஸ்திரி சொன்னார்.

"இந்த முறை வெகு விநோதமாயிருக்கின்றது. தாதுக் களை (லோஹ வகைகளை) வைத்தியத்தில் உபயோகிக்கிறீர் களா?" என்று டாலமி வினவினான்.

"ஆம், உபயோகிக்கிறோம். நாங்கள் உபயோகிக்கிற பஸ்மங்கள் பெரும்பாலும் அயம், பாதரஸம், தாமிரம் முதலானவைகளின் ஔஷதங்களே. ஸர்ப்பவிஷத்தை யும் நிர்வீரியமாக்கி உபயோகிக்கிறோம்" என்று வைத்திய சாஸ்திரி சொன்னார்.

"உயிரோடிருக்கிறவர்களுக்கா நாகத்தின் நஞ்சை ஊட்டுகிறீர்கள்?" என்று டாலமி கேட்டான்.

"பாம்பின் விஷம் எவ்வளவு கொடியதோ அவ்வளவு கொடியதே பாதரஸமும். வார்த்தைகள் விஷப்பிராயமாக இருக்கலாம்; இனிமையாகவும் இருக்கலாம். கடப்பாரை யானது பள்ளம் பறிப்பதற்குமாகும்; தலையைத் தறிப்பதற்கு மாகும்" என்று வைத்தியசாஸ்திரி சொன்னார்.

"என்ன என்ன சஸ்திரப்பிரயோகங்கள் செய்கிறீர் கள்?" எனக் கிரிடோபுலஸ் வினவினான்.

"பீடனத்தினால் ரக்தஸ்தம்பனம் செய்து அவயவங் களைச் சேதிக்கிறோம்; உதரச்சேதம் செய்கிறோம். கர்ப்பா சயத்தில் சஸ்திரப்பிரயோகம் பண்ணுகிறோம்; குடலிறக் கம், பகந்தரம், மூலமுளை ஆகிய இவைகளுக்குச் சிகிச்சை

செய்கிறோம்; அஸ்தி சந்தானமும், ஸந்தி ஸம்சிவேசனமும் (Setting bones & dislocations) செய்கிறோம்; சல்லியா ஹாரணம் (extracting foreign matter) செய்கிறோம்; வாதசூலை (Neuralgia)க்கு ஒரு சஸ்திரப்பிரயோகம் பண்ணுகிறோம்; வஸ்திசல்யா ஹாரணமும் (Lithotomy), நாஸா ஸந்தானமும் (Rhinoplasty) செய்கிறோம். இதோ எங்கள் சஸ்திரங்களைப் பாருங்கள்" என்று சொல்லி, 127 வகைக் கருவிகளைக் காட்டினர். அவற்றிலொன்று ஒரு மயிரிழையை நீளவாட்டில் இரண்டாகக் கிழிக்குமளவு நுண்ணியதாயிருந்தது.

"இவை அத்தியாச்சரியகரமாயிருக்கின்றன! நீங்கள் பிரேதசோதனை செய்வதுண்டோ?" என்று டாலமி வினவினன்.

அதற்கு அந்தப் பண்டிதசிகாமணி, "செய்கிறோம்; சல்லியவித்தை பயிலும் மாணவனுக்கு அது இன்றியமையாததெனக் கருதுகிறோம். ஆனதனாலேயே, வைத்தியத்தில் விசேஷத்தேர்ச்சி உண்டாக்குவதற்கு இந்தியாவின் எல்லைப்புறமாகிய இந்தப் பிரதேசத்தில் வைத்தியசாலை அமைத்துக் கொண்டிருக்கிறோம். காசி நகரத்திலும் மற்றுமுள்ள உள்நாட்டுப் பட்டணங்களிலும் பிரேத பரிசைசெய்வதற்கு இந்துக்களின் மனம் ஒப்பாது. இன்னும் சொல்லப்போனால் சஸ்திரப்பிரயோக வைத்தியமே இகழப்படுகிறது, சல்லியப்பிரயோகம் செய்பவன் சந்தானமில்லாமற் போவானென்னுமொரு சாபம் உளதென்பார்கள்" என்று சொன்னர்.

"என்ன மூடபக்தி! நீங்கள் ஜீவாங்கச்சேதனம் செய்கிறதுண்டா?" என டாலமி வினவினன்.

"செய்வதில்லை; மனிதர் உயிர்த்திருக்கும்போது அவர்களுடைய அங்கங்களைச் சேதித்துச் சோதிப்பது மிகக் குரூரமாகுமே. மிருகங்களிற் செய்வோமானாலும், ஜனபிப்பிராயம் சிறிதும் இடங்கொடுப்பதில்லை. ஆனால், உணவின் பொருட்டேனும், யாகபலியின் பொருட்டேனும் மிருகங்களைக் கொல்லும்போது சில விஷயங்களைப் பார்த்து அறிகிறோம். எதுபோலவெனின், அடிவயிற்றுக்குள் சஸ்திரப் பிரயோகம் செய்யும்போதும், பிரஸவ வைத்தியம் செய்யும் போதும் இதர அமிசங்களையும் கவனிப்பதுபோலாம்" என்று பண்டிதர் பகர்ந்தார்.

"மரணதண்டனை பெற்ற குற்றவாளிகளின் அங்கங்களைச் சோதித்துப் பார்க்கலாகாதோ?" என்று டாலமி வினவினான்.

"எங்கள் தர்மசாஸ்திரத்திற் குறிப்பிட்டுள்ள தண்டனையில் இந்தக் குரூரகிருத்தியம் சேரவில்லை. எங்கள் அரசர் எவரும் தர்மசாஸ்திர விதியை மீறமுடியாது. ராஜத்துரோகத் தண்டனைகள் சிலவற்றில் சட்டப்படி குற்றவாளிகள் துண்டுதுண்டாக வெட்டப்படுகிறார்கள். ஆனால், கொலையாளிகள் இழிகுலத்தவர்களேயல்லாமல், வைத்தியர்களல்ல. சஸ்திரவைத்தியர்கள் அந்தச்சமயத்தில் அவ்விடத்தில் இருக்க விரும்புவதில்லை. ஏனெனின், அவ்வாறு கொலைக் குற்றம் செய்தவர்கள் தண்டனைவிதிக்கும் அரசர்களைக் காட்டிலும் உத்தமர்களாக இருந்தாலும் இருக்கலாமே" என வைத்தியபண்டிதர் கூறினார்.

"உங்கள் நிரூபணங்களினால் என் மனத்தில் மிகவும் நல்ல அபிப்பிராயங்கள் உண்டாயின. இனி யொருநாள் அலெக்சாண்டருடைய ஆதரவில் நாம் வைத்தியப் பொருட்

காட்சிச்சாலை யொன்று அமைப்போமாக!" என்று டாலமி சொல்லிமுடித்தான்.

பிறகு, அந்த யவன சாஸ்திரிகளையும் அலெக்சாண்டரையும் வேதசாஸ்திர மந்திரத்திற்கு அழைத்துக்கொண்டு போனார்கள். அங்கே பிராமணர்கள் ஸ்வரத்தோடு வேத மோதுவதைக் கேட்டு, அவர்களுக்குள்ள அற்புத ஞாபக சக்தியைக்கண்டு அதிசயித்து மிகமிகக் கொண்டாடினார்கள்.

"ஏழாம் வயதிலிருந்து அவர்களுக்கு நாங்கள் வேதம் கற்பிக்கிறோம். அந்த வயதில் ஞாபகசக்தி பலமாயிருக்கின்றது. அப்போது கேட்ட விஷயங்கள் கல்மேல் எழுத்துப்போலப் பதிகின்றன" என்று அங்குள்ள அத்தியாபகர் சொன்னார்.

"ஸ்வரங்கள்கூட மிகக் கம்பீரமாயிருக்கின்றன; எங்கள் யவனசப்தங்களைப்போலவே தெய்விகத்தொனியெனத் தோற்றுகின்றன" என்றான் அலெக்சாண்டர்.

"கடவுள் நாதஸ்வரூபி. ஆனதனால் 'சப்தப்பிரும்மம்' எனச் சொல்லுகிறோம். ஆகையால், எல்லாப் பாஷைகளிலும் அந்தச் சப்தப்பிரும்மமே பிரதிபலிக்கின்றது" என்றார் அத்தியாபகர்.

இந்திய இதிகாசங்களாகிய இராமாயணத்தின் விஷயத்தையும் மகாபாரதத்தின் பொருளையும் கேட்டு அந்த யவனப் புலவர்கள் மிகப் பாராட்டினார்கள்.

"இவை கிரீக்குத் தேசத்து இதிகாசங்களாகிய ஒடிஸ்ஸிக்கும் (Odyssey) இல்லியடுக்கும் (Illiad) சமானமானவை. இவைகளிலிருந்து அநேக கதைகளும் நாடகங்களும் எழுதுவதற்கு வேண்டிய பீஜங்கள் பலர் பலரால்

எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன" என்று ஆம்பீக கூறினன்.

இந்த வகுப்பிலிருந்தவர்களுடைய ஸாஹித்திய சக்தியைக் கண்டு அவர்கள் வியந்தார்கள். உபாத்தியாயர்களும் மாணவர்களுங்கூட எந்த விஷயத்தைப் பற்றியானலும் எப்பொழுதானலும் கவிகள் கட்டத் திறமை வாய்ந்திருப்பது அவர்களுக்கு அதிசயமாயிருந்தது.

அலெக்சாண்டர், ஆம்பீக, டாலமி, யூமினீஸ், ஹெபேயிஸ்டியன், கிரிடோபுலஸ், கிரிடோடிமஸ் ஆகிய இவர்களின்மீது அந்தச் சாஸ்திர பாடசாலை மாணவர்கள் சுலோகங்கள் கவனம் செய்து வாசித்தார்கள். அவைகளைக் கேட்டவுடன் டாலமி, "மிகச் சிறப்பாயிருக்கின்றன. ஆனல், எல்லாரையும் ஒரேமாதிரியாக உயர்த்தி அதிசயோக்தியாகச் சொல்லியிருக்கிறீர்கள். ஜயவலின் சூனுவாகிய அலெக்சாண்டர் என்னும் பெரியாரைக் குறித்துக் கிரமமாகச் சொல்லக்கூடிய பெருமைகளை எங்களைப்போன்ற சிறியார்களுக்கு ஆரோபித்துச் சொல்வது அபஹாஸ்யமாயிருக்கும். அந்தத் தாரதம்மியத்தைப் பகுத்தறியப் பயின்று நீங்கள் சொற்செறிவை அடக்கிக்கொள்ளவேண்டும்" என்று சொன்னன்.

பின்பு, அவர்கள் வியாகரணவகுப்பினரைப் போய்ப் பார்த்தார்கள். வியாகரணத்தைப் பெரிய சாஸ்திரமுறையில் அவர்கள் கற்பதைப் பார்த்து அதிசயப்பட்டார்கள். பாணினி எழுதிய வியாகரண சாஸ்திரத்தை மிகவும் அற்புதமான பாடப்புத்தகமெனக் கொண்டாடினர்கள்.

"இலக்கணத்தில் நாங்கள் இவ்வளவு கவனம் செலுத்துவதில்லை. நுட்ப நுட்பமான இந்த விதிகளைப்

பார்த்தபின், வாய்திறந்து எவனேனும் சாதாரணமாகப் பேசவும் துணிவனே எனச் சந்தேகிக்கிறேன்" என்று அலெக்சாண்டர் சொன்னான்.

"உலகத்திலுள்ள பேச்சுக்காரர்களுள் நாங்களே மிகப் பேசுகிறவர்களாயிருக்கிறோம். ஆதலால், அந்த ஆக்ஷேபணை எங்கள் விஷயத்திற் செல்லாது" என்று வியாகரண சிரோமணி சொன்னார்.

பின்பு, அவர்கள் கணித இலாகாவுக்குப் போனார்கள். அங்ககணிதத்தில் இந்தியர்கள் எவ்வளவு தேர்ச்சி பெற்றிருக்கிறார்களென்பதையும், அவர்கள் செய்யும் அகாதமான கணக்குகளையும் பார்த்து யவனர்கள் பிரமித்துப் போனார்கள்.

"ஒவ்வொன்றும் நூறாயிரக்கணக்காக இருக்கப்பட்ட இந்த யுகங்களை நீங்கள் எப்படிக் கணக்கிடுவதற்காகும்?" என்று டாலமி கேட்டான்.

"தேங்காயும் வாழைப்பழமும் விற்கிறவன் பெரிய தொகைவரையில் எண்ணப் பயிலவேண்டும்; யானை வியாபாரியோ பத்துவரையில் எண்ணத் தெரிந்துகொண்டாற் போதும். நமது ஜனத்தொகைக் கணக்கெடுப்பதற்கும் பெருந்தொகைகள் வரையில் எண்ணவேண்டியது அவசியமாகும்" என்று கணித விற்பன்னர் விடை பகர்ந்தார்.

"நீங்கள் தப்பாமல் அப்போதைக்கு அப்போது ஜனத்தொகைக்கணக்கு எடுக்கிறீர்களா?"

"ஆம், எடுக்கிறோம். மானிடர்களை மாத்திரமேயல்லாமல், யானைகள் குதிரைகள் ஆடுமாடுகள் முதலானவற்றையும் கணக்கெடுக்கிறோம்."

ரேகா கணித சாகைக்குப் போனபோது அவர்கள் திரிகோணங்களின் தன்மைகளைப்பற்றியும், வட்டத்தில் அரைவட்டத்திற்கும் பரிதிக்குமுள்ள விகிதங்களைப்பற்றியும் இந்தியர்களுக்குள்ள அறிவைப் பார்த்து வியந்தார்கள்.

"எகிப்திலுள்ளவர்களும் ரேகாகணிதத்தில் மிக்க தேர்ச்சியுடையவர்களாயிருக்கிறார்கள். இந்த விஷயத்தில் உங்களுக்குள்ள பெரிய பிரமாணக்கிரந்தம் யாது?" என்று டாலமி வினவினான்.

"ரேகாசாஸ்திரத்திற்கு, சுள்வ ஸூத்திரங்களே எங்களுக்கு ஆதாரம். அவை ஐந்நூறு வருஷங்களுக்கு முன்னால் ஆக்கப்பட்டவை" என்றார் புலவர்.

"எகிப்தில் பட்டகோணமான பலபுஜ கோபுரங்கள் (ஸூச்யக்ர ஸ்தம்பங்கள்) இருக்கின்றனவே. அப்படிப் பட்டவை இங்கே உண்டோ?" என்று டாலமி வினவினான்.

"இல்லை, அவை எப்படி இருக்குமென்று எங்களுக்கு விவரமாகச் சொல்லும்" என்று புலவர் கேட்டார். அந்தப் பலபுஜ கோபுரங்களின் வடிவத்தையும் அமைப்பையும் டாலமி விசதமாக எடுத்துரைத்து, வரி வடிவங்களாலும் அவைகளை நிரூபித்துக் காட்டினான்.

"இவை எங்கள் தேவாலயங்களுக்குச் சிறந்த வாயில்களாக இருக்கும். நான் சோழதேசத்தவன் ஐயா, கணித சாஸ்திரம் ஓங்கிப்பெருகுகிற காவேரி நதி தீரத்திலிருந்து வந்தவன். நான் இவ்வுத்தியோகத்தினின்றும் நீங்கி, என் தேசத்திற்குப்போய் விசிரமித்திருப்பேன். எங்கள் தேவாலயங்களுக்குத் தலைவாயில்களாக இந்தப் பட்டகோணங்களைப்போன்ற கோபுரங்கள் அமைக்கும்படி எங்கள் அரசனுக்குச் சொல்லுவேன்" என்று கணிதசாஸ்திரி சொன்னார்.

"பேஷ், அதனால் எகிப்தும் இந்தியாவும் ஒன்றோடொன்று இணைக்கப்பெறும். அது அலெக்சாண்டருடைய மனத்திற்கு உவந்தகாரியம்" என்றான் டாலமி.

அதற்குமேல் அவர்கள் ககோள சாஸ்திரசாலைக்குப் போனார்கள். இந்துக்களின் கணிதமுறைப்படி ஸௌரமான ஸம்வத்ஸரம் என்பது 365-நாள் 5-மணி 50-நிமிடம் 35-விநாடி எனக் கணக்கிடப்பட்டிருப்பதைப்பார்த்து அயர்ந்துபோனார்கள்.

"அது எப்போது கணிக்கப்பட்டது?" என்று டாலமி வினவ, கணிதப்புலவர், "அநேக நூற்றாண்டுகளுக்கு முன்னர்" என்றார். அவர்களுடைய கணிதப்பழக்கத்தை டாலமி பார்த்துவிட்டு, "இந்தியாக்காரர்களாகிய நீங்கள் வெறும் மனோராஜ்யக்காரர்களல்லவெனத் தெரிகிறது" என்றான். அதற்குப் புலவர், "சிலர் வெளியுலகத்து உண்மைகளைக் காண்கிறார்கள்; வேறு சிலர் உள்ளுலகத்து உண்மைகளைக் காண்கிறார்கள்" என்றார்.

"டாலமி அப்படியிருந்தும், நக்ஷத்திரங்களைப்பற்றி உங்களுக்குத் தெரிந்திருப்பதைக்காட்டிலும், எங்கள் அறிவு விரிவாகவும் நுட்பமாகவும் இருக்கின்றது" என்றான். "எங்களுக்கு அனுப்பினால் நன்றி பாராட்டுவோம்" என்று புலவர் சொல்ல, "நிச்சயமாக அனுப்புகிறேன்" என்று டாலமி மொழிந்தான்.

அந்தக் கோஷ்டியினர் அங்கிருந்து சித்திவித்தையும் சிற்பமும் கற்பிக்கும் இடத்திற்குப் போனார்கள். அங்கே அநேகம் தலைகளுள்ள பிரதிமைகள் சிலவற்றைப் பார்த்தார்கள். சிலவற்றிற்கு உடம்பு நிரம்பக் கண்கள் இருந்தன; வேறு சிலவற்றிற்கு நாற்புறமும் தலைகள் இருந்தன. அவை

களைப் பார்த்துக் கலக்கமுற்ற அலெக்சாண்டர், "இவற்றிற் கெல்லாம் அருத்தம் என்ன? உங்களுடைய விக்கிரகங் களிலும் படங்களிலும் இத்தனை தலைகள், இத்தனை கண் கள், இத்தனை கைகள் ஏன் வைத்திருக்கிறீர்கள்?" என வினவினன்.

"ஸ்தூலதேக பலத்தையும், மனோபலத்தையும், அத்தி யாத்ம பலத்தையும் காட்டுவதற்காக. ராவணன் என்னும் இந்த ராக்ஷஸனுக்குள்ள பத்துத்தலைகளும் இருபது புஜங் களும் இவனுக்குள்ள அசாத்தியமான சரீரபலத்தைக் குறிக் கின்றன! தேவதைகளுள் ஒருவனை இந்த இந்திரன் என் பவனுக்கு ஓராயிரம் உசாத்துணைவர்களைப்போல உதவும் கண்களினுல் இவன் அபரிமிதமான ஞானம் படைத்தவன் என்பது விளங்கும்; இந்தப் பிரம்மதேவருக்கு நாற்றிசை களிலுள்ள நான்கு தலைகளும் இவரது அத்தியாத்ம பலத்தையும், ஸர்வவியாபகத்துவத்தையும், ஸர்வஞத்துவத் தையும் குறிக்கின்றன" என்று சிற்பசாஸ்திரி கூறினர்.

"அப்படியா! எங்கள் தேசத்தில் பலதலைப் பாம்பு களைப்பற்றிக் கேட்டிருக்கிறோமாதலால், முதற்கூறிய கருத்து எங்களுக்கு நன்கு விளங்குகிறது. ஆனல், பிற் கூறிய இரண்டு பாவனைகளும் அவ்வளவாகத் தெரியவில்லை. ஆனபோதிலும், மனவலியையும் ஆத்மசக்தியையும் வேறு வகைகளில் இதைக்காட்டிலும் நன்ருகக் குறிப்பிக்கலா மென்று நினைக்கிறேன். உதாரணமாக, இந்தப் புத்த சிரஸைப் பாரும். நாங்கள் உதபாண்டபுரத்தில் இறங்கி யிருந்தபோது எங்கள் கிரேக்கர்களில் ஒருவன் இதை ஆக்கினன். இது பாவித பாவனையாகவும் (தியானத் தில் ஆழ்ந்த பாவனையாகவும்) அழகாகவும் இருக்கின்றது. இதே புத்தருடைய தலையை இந்தியன் அமைத்திருப்

பதைப் பார்த்தால், இன்ன பாவனையென்று சொல்லமுடியாமல் திகைக்கும்படியாயிருக்கின்றது" என்று அலெக்சாண்டர் சொன்னான். அந்தக் கிரேக்கச் சிற்பத்தைக் கையிலெடுத்து நுட்பமாக உற்றுநோக்கிய சிற்பசாஸ்திரி, "நீங்கள் சொல்வது சரியே. ஆனால் ,புத்தருக்கே அப்படிப்பட்ட ஆழ்ந்த அவ்வியக்தத் தன்மை இருந்ததோ, என்னவோ. கிரேக்கர் செய்த தலை முதற்பார்வையில் மனத்தைக் கவருகின்றது; ஆனால், அதன் உட்கருத்து, மற்றப் பதுமையிற் காட்டிலும் அவ்வளவாகப் புலப்படவில்லை. அப்படியிருந்தபோதிலும், இது நேர்த்தியான பிரதிமையே. இதைப்போன்றதொன்று இங்கே செய்து வைப்பதும் நன்றே. அது குசால் மிகுந்த சிற்பிகள் செய்தது; இது அகோசரமான ஆழ்ந்த கருத்து மிகுந்த சிற்பிகள் செய்தது. வெளியழகும் சரளத்தன்மையும் உங்கள் நோக்கம்; உட்கருத்தும் விரளத்தன்மையும் எங்கள் நோக்கம். ஆனால், எல்லாம் ஒன்றுதான். இந்தக் கிரேக்கச்சிற்பம் நேர்த்தியானது. இப்படிப்பட்டது இந்தியாவில் இல்லை. இந்தச் சிற்பமுறையை அனுஷ்டித்துச் சிலைகள் செய்து, இந்திய லக்ஷணங்களையும் அவைகளிற் பொருத்திக் காந்தர்வ முறைச் சிற்பக் கலாசாலை ஒன்றை நாம் அமைக்கலாம். நீங்கள் இந்தக் கழகத்திற்கு விஜயம் செய்ததன் ஞாபகக் குறியாக அதை எங்களுக்கு அளியுங்கள்" என்று சிற்பசாஸ்திரி கேட்டார். அலெக்சாண்டர் உடனே அதைக் கொடுத்துவிட்டான். அதற்காகக் கலாசாலையார் மிகமிக நன்றி கூறினார்கள். அந்தக் கூடத்தை விட்டு அவன் வெளியேறும்போது, சிற்ப சாஸ்திரியும் சுமார் இருபது மாணவர்களும் அந்தக் கிரேக்கச் சிற்பத்தைச் சூழ்ந்துகொண்டு அதன் லக்ஷணங்களை உற்றுப்பார்த்துச் சோதித்துக் கொண்டிருப்பதைக் கண்டு களிப்புற்றான்.

"ஆசானும் மாணவர்களும் இவ்வளவு தாராளமாகவும் அந்நியோன்னியமாகவும், மட்டு மரியாதையுடன் கலந்து வியவகரிப்பதைக் காண்பது ஓர் ஆனந்தக் காட்சி. யுத்தங்களின் பயனாக ஏற்படத்தக்க குழப்பங்களினாலும் தடுமாற்றங்களினாலும் இந்தப் பெரிய வித்தியா நிலயம் கெட்டுப்போகக் கூடாதென்னும் எண்ணங்கொண்டே ஆம்பீசு, கூடியவரையிற் போர்களுக்கு இடங்கொடாதிருப்பது அதிசயமன்று" என்று டாலமியைப் பார்த்து அலெக்சாண்டர் சொன்னான்.

அதன்மீது அவர்கள் சங்கீத இலாகாவிற் புகுந்தார்கள். அங்கே வைக்கப்பட்டிருந்த பற்பல வாத்தியக் கருவிகளைப் பார்த்தார்கள். அவற்றிற் சிலவற்றை வாசிக்கச் சொல்லிக் கேட்டார்கள்; சிறிது பாடச்சொல்லியும் கேட்டார்கள். கேட்டபின், "உங்கள் சங்கீதத்திற்குள்ள விசேஷமான பலாம்சம் பண்ணே (ராகமே); இசைப் பொருத்தம் போதாது; அது அவ்வளவு பலமாக இல்லை. அதுவன்றி, உங்கள் சங்கீதம் மிக உயர்தரமானதாயும் கடினமாயும் இருக்கின்றது. ஆனதனால், அது மேலும் மேலும் அபிவிருத்தியாவதற்கு இடமில்லாமல் தடைப்பட்டிருக்கிறதெனத் தோன்றுகிறது. சங்கீதம், சித்திர லேகனம், சிற்பம் என்னும் இந்தக் கலைகளில் யவன முறையையும் இந்தியமுறையையும் இனி ஒரு காலத்தில் சம்மேளனம் செய்யவேண்டும்" என்று அலெக்சாண்டர் சொன்னான்.

நூல் நூற்றல், நெய்தல் என்னும் விஷயங்களில் அந்த யவனர்களுக்குச் சிரத்தை அதிகமாக இருந்தது. பருத்தியைச் சுத்தம் செய்தல், பட்டைபோடுதல், நூலிழைத்தல், நெய்தல் ஆகிய இந்தக் காரியங்கள் நடந்துகொண்டிருக்

தை அவர்கள் மூச்சுவிடாமல் கவனத்தோடு உற்றுப் பார்த்தார்கள். கங்காதீரத்து ரவைசல்லா ஒன்றை அலெக்சாண்டருக்கும், மற்றவர்களுக்கு ஞாபகச்சின்னமாக நேர்த்தியான சில வஸ்திரங்களையும் ஆம்பீசு அளித்தான். திபெத்துப் பட்டுத் துண்டு ஒன்றையும் அலெக்சாண்டருக்குக் கொடுத்தான். இவ்விடத்தில் கைத்தொழில்களும் கற்பிப்பதைப் பார்க்கச் சந்தோஷமாயிருக்கிறதென்று அலெக்சாண்டர் சொன்னான்.

"இந்தக் கழகத்திற் கைத்தொழில்கள் கற்பிப்பதில்லை; அவைகளுக்குரிய சாஸ்திரங்களை மாத்திரம் கற்பிக்கிறோம். கைத்தொழில்கள், சாயந்தோய்த்தல், இரும்பு வார்ப்படம், கட்கங்கள் செய்தல் முதலியவைகளெல்லாம் அந்த அந்தச் சாதியாரின் சாலைகளிலேயே கற்பிக்கப்படுகின்றன. அவைகளையெல்லாம் நீங்கள் ஒரே இடத்திற் காண்பதற்கு அனுகூலமாக அந்த அந்தச் சாதியாரிற் சிலரை இங்கே ஒன்று கூட்டி வைத்தேன்" என்று ஆம்பீசு சொன்னான்.

"அடடா! அவ்வளவுதானா! சாஸ்திர பாடத்தையும் கலைப்பயிற்சியையும் சேர்த்து நீங்கள் ஏன் ஓரிடத்திலேயே கற்பிக்கலாகாது?" என்று டாலமி கேட்டான்.

அங்கிருந்து யவன கோஷ்டியார் சாயந்தோய்க்கிற இடத்திற்குப் போனார்கள். அவர்கள் ஒவ்வொருவருக்கும் அழகிய அவுரிச்சாய வஸ்திரங்கள் அடையாளமாகக் கொடுக்கப்பட்டன. அதற்குப் பிறகு இரும்புவேலையும் எஃகு வேலையும் செய்யுமிடத்திற்குப் போனார்கள். அங்கே மிகவும் உயர்தர நாணயமான பட்டாக்கத்தியொன்றை அலெக்சாண்டருக்குக் காணிக்கையாகக் கொடுத்தார்கள்.

அந்தக் கோஷ்டியில் ஆர்க்கேலாஸ் என்னும் பூகோள சாஸ்திரி ஒருவன் இருந்தான். பூகோள சாஸ்திரம் படிப்பிக்கிற சாகை எங்கேயென்று அவன் வினவினான். அந்தச் சாகை இல்லையென்று ஆம்பீசு பதில் சொன்னான்.

"என்ன லோபம், என்ன லோபம்! அந்தச் சாகை ஒன்று உடனே அமைக்கவேண்டும். கவட்டுக்கால் வைத்துத் தூரங்களைப் பிழையில்லாமல் அளந்து சொல்லும் ஆட்கள் எங்களில் உண்டு. கிரகங்களையும் நக்ஷத்திரங்களையும் மறுவுலகத்தையும் பற்றித் தெரிந்துகொள்வதைக் காட்டிலும், இவ்வுலகத்தில் ஓரிடத்திற்கும் மற்றோரிடத்திற்குமுள்ள தூரங்களைச் சரியாகத் தெரிந்துகொள்வது மிகவும் முக்கியம்" என்று ஆர்க்கெலாஸ் சொன்னான். அப்படிச் சொல்லிவிட்டு, யவனர்களுடைய கணக்குப்படி எழுதிய பூகோள படமொன்றை ஆம்பீசுக்கும் இந்தியப் புலவர்களுக்கும் அவன் காட்டினான். அப்படிப்பட்ட தொன்று இருக்கவேண்டியது அவசியமேயென இந்தியர்களின் மனத்திற் பட்டது. அவர்களில் ஒருவன், "எங்கள் பழைய சாஸ்திரங்களிற் பல பல கடல்களும் பூகண்டங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன" என்று கடைசியிற் சொன்னான். "அங்கே சொல்லியிருக்கிறபடி அவை இருக்கின்றனவா எனப் பார்த்திருக்கிறீர்களா?" என்று ஆர்க்கெலாஸ் கேட்டதற்கு, "இல்லை" என்று அவன் பதில் சொன்னான்.

"பூ விவரத்தின் விஷயத்திற் சோதித்துப் பார்க்காமல் எந்த வார்த்தையையும் நாம் ஏற்றுக்கொள்ளக்கூடாது. அப்படிப் பார்த்துத் தெரியாவிடில், போர்ப்படைகள் தேசம் விட்டுத் தேசம் போகமுடியாது; கப்பல்கள் கடலிற் செல்ல முடியாது; மனிதர்கள் யாத்திரை செய்ய முடியாது. உதா

ரணமாக, மேருபர்வதமானது எமோடாஸ்[1] என்பதைக் காட்டிலும் உன்னதமானதென்று நம்புகிறீர்களே. இது அனுபவத்திற்கு நேர்விரோதமாய் இருக்கின்றது; பழைய நூல்கள் அப்படிச் சொல்கின்றன என்பதனாலேயே நம்பி விடக் கூடாது. அது நிற்க; எங்கள் பூ விவரப் படத்தில் மகாஸமுத்திரம் 'இந்தியப் பார்ஞ்ஸஸ்' என்னும் இந்து குஷ் மலையை அடுத்திருப்பதாகக் காட்டப்பட்டிருக்கின்றது. அது தவறென்று இப்போது நாங்கள் காண்கிறோம். நாங்கள் திரும்பி எங்கள் தேசம் போனதும், எங்கள் தேசத்து அறிவாளிகளுள் இதை நம்பியிருக்கிறவரான அரிஸ்டாடில் என்னும் பெரியாரைக் கொண்டு இந்தப் படத்தை உடனே திருத்திவிடுவோம்" என்று ஆர்க்கெலாஸ் சொன்னான்.

கடைசியாக அவர்கள் போய்ப் பார்த்தது வேதாந்த விசார சாகை. அங்கே பலபல தரிசன சாஸ்திரங்களைப் பற்றி அலெக்சாண்டர் கொஞ்சங் கொஞ்சம் வாக்கியார்த்தம் செய்தான். அவ்வாறு சம்பாஷித்தபின், "பூவிவர சாஸ்திரத்தைக்காட்டிலும், தத்துவவிசார சாஸ்திரத்தை நீங்கள் அதிகமாகப் பயின்றிருக்கிறீர்கள்" என்று முடிவிற் சொன்னான்.

அப்போது டாலமி, "அது இயற்கையில் அமைந்த பரிகாரம். வஸ்து ஸ்வாதந்தரிய ஞானமும் பாவனு சக்தியும், தனி மனிதர்களிலும் ஜாதிகளிலும் தலை கீழ் விகிதமாக அமைந்திருக்கின்றன. இந்தியர்களுக்கு

---

1. இதை எமோடி மான்டி (Emodi Montes) எனவும் சொல்வர். இது ஆசியா கண்டத்திலுள்ளதோர் மலைத்தொடரைச் சேர்ந்தது. Imans, Paropamisus and Caucasus என்னும் மலைகளோடு சம்பந்தப்பட்டது.

இருப்பதுபோல வஸ்துஸ்வாதந்தரிய ஞானம் குறைவாயிருக்குமிடத்துப் பாவனைசக்தி பிரபலமாயிருக்கின்றது: பினீஷியர் (Phoenicians) களுக்கு இருப்பதுபோல் வஸ்துஸ்வாதந்தரிய ஞானம் பலமாயிருக்குமிடத்துப் பாவனைசக்தி குறைவாயிருக்கின்றது" என்று சொன்னான்.

அதன்மீது ஆம்பீசுக்கும் கழகத்துப் புலவர்களுக்கும் மனமார வந்தனம் புரிந்து அந்தக் கோஷ்டி அவ்வித்தியா பீடத்தைவிட்டு நீங்கியது. அப்படி நீங்கும்போது அவர்கள் அங்கே கண்டவைகளை நினைத்து உள்ளூற மகிழ்ந்து கொண்டே போனார்கள். அப்படித் திரும்பிப்போகையில், "நாமும் எகிப்திலாவது பாபிலனிலாவது நல்ல வித்தியா பீடம் ஒன்று அமைக்கவேண்டும்" என்று அலெக்சாண்டரைப் பார்த்து டாலமி சொன்னான்.

"அப்படியே செய்வோம். நம் யுத்தங்களைப் பூர்த்தி பண்ணினபின் அந்தக் காரியத்தைக் கவனிப்போம்" என்றான் அலெக்சாண்டர்.



# அத்தியாயம் 12

## [1]ஹைடாஸ்பஸ் சண்டையும் அதற்குப் பின்னும்

தக்ஷசிலையில் அலெக்சாண்டர் தன் சைனியத்திற்கு நல்ல ஓய்வு கொடுத்தான்; குதிரைப்பந்தயங்களும் கஸரத்துப்போட்டிகளும் நிரம்ப அமைத்துப் படையினரின் மனத்தைக் குசாற்படுத்தி ஊக்கினான். பிறநாட்டு வியவகாரங்களிலும் யுத்த விஷயங்களிலும் ஆம்பீசுக்கு உசாத்துணையாகப் பிலிப்பாஸ் (Philippos) என்பவனை நியமித்தான். தானும் அந்தப் பிரதேசத்திலுள்ள பற்பல விசித்திரமான இடங்களைப் போய்ப் பார்த்தான். அப்படிப் பார்த்தவைகளுள் கன்னிச்சந்தை என்பது ஒன்று. தனித்தனியே பேசிக் கணவனை வரிக்க முடியாத கன்னிகைகள் இவ்விடத்தில் தனித்தனி அங்கணங்களில் உட்கார்ந்திருப்பார்கள். விவாக விருப்பமும் யோக்கியதையும் உள்ளவன் எவனும், அக்கன்னிமார்களின் உற்றாரிடமேனும் உறவினரிடமேனும் கேட்டுக்கொண்டு, அக்கன்னிகைகளைக் காலோடு தலை நன்றாகச் சோதித்துப் பார்த்து, அவர்கள் மனவலியிலும் அங்கவலியிலும் லோபம் ஒன்றுமில்லையெனத் திருப்தியடைந்த பின், அவர்களை மணந்து கொள்ளலாம். அலெக்சாண்டருக்கும் டாலமிக்கும் ஆம்பீசு இந்தச் சந்தையைச் சுற்றிக் காட்டிக்கொண்டு வந்தான்.

---

1. ஜீலம் நதி; வடமொழியில் விதஸ்தை எனப்பெறும்.

"விவாக இச்சையுள்ளவர்கள் பெண்களை இப்படிச் சோதித்துப் பார்ப்பது ஒருவகை வைத்திய சோதனையும் ரஸஞான பரீக்ஷையுமாகும்" என்று ஆம்பீசு சொன்னான்.

"அவர்களிற் சிலரை நான் சோதித்துப்பார்க்கலாமா?" என டாலமி கேட்டான். "அவர்களுக்கு ஒரு விதமான குற்றமும் இல்லையெனக் கண்டால், அவர்களை மணம் புரிந்து கொள்ளும் யதார்த்தமான நல்லெண்ணம் இருந்தாலொழியச் சோதிக்கலாகாது" என்று ஆம்பீசு சொன்னான்.

அதன்மீது டாலமி, "சோதித்துப் பார்க்கிறவர்கள் அவர்களை வேண்டாமெனத் தள்ளிவிட்டால் என்ன ஆகும்?" என வினவினான்.

"அப்படிப்பட்டவர்கள் அந்தப் பெண்ணின் சீதனத்தின் பொருட்டுத் தங்களால் இயன்றபடி ஒரு பொற்பணமாவது வெள்ளிப்பணமாவது அவளுக்குக் கொடுப்பார்கள். இங்ஙனம் அடிக்கடி நிராகரிக்கப்பெறுவதனாற் சேர்ந்த பணத்தைக்கொண்டு சில பெண்கள் கலியாணம் செய்து கொள்ளுகிறார்கள்" என்று ஆம்பீசு சொன்னான்.

கன்னிச்சந்தையைப் போய்ப் பார்த்ததற்கு ஒரு வாரத்திற்குப்பின், போரஸினிடம் தூது போயிருந்த கிளியோகரீஸ் (Cleochares) என்பவன் திரும்பி வந்தான். அலெக்சாண்டரை வணங்கிப் போரஸ் கப்பங்கட்ட வேண்டும், அவனுடைய ராஜ்யத்தின் எல்லையில் அலெக்சாண்டரை வரவேற்கவேண்டும் என்று சொல்வதற்காக அவன் போயிருந்தான். "வணங்கவும் மாட்டேன், கப்பங் கட்டவும் மாட்டேன்; ஆனால், எனது ராஜ்யத்தின் எல்லையிற் போர்ப் படையோடு வந்து அலெக்சாண்டரை எதிர்ப்பேன்" என்று போரஸ் சொல்லிய வர்த்தமானத்தை அலெக்சாண்டருக்கு அவன் அறிவித்தான்.

"நல்லது, நமது பலத்தின் பிரபாவத்தை அவன் அறிவானாக" என்று அலெக்சாண்டர் சொன்னான்.

தனக்கு வழக்கமாயுள்ள முன்னாலோசனையோடும் பரிஷ்கார புத்தியோடும் அலெக்சாண்டர் போரஸோடு போர் புரிவதற்கு வேண்டிய சன்னாகங்களைச் செய்யத் தொடங்கினான். உதபாண்டபுரத்திலுள்ள படகுப்பாலத்தைப் படகு படகாகப் பிரித்து, அவைகளை ஹைடாஸ்பஸில் ஸித்தமாக வைத்திருக்கும்படி காய்னாஸு (Koinos)க்குக் கட்டளையிட்டான். அந்தப் பிரதேசத்தைப்பற்றிய விவரமான சங்கதிகளை ஆம்பீசினிடமிருந்து தெரிந்து கொண்டான். அதுவன்றி, கை தேர்ந்த 5,000 படை வீரர்களையும் வரவழைத்துக் கொண்டான். ஆம்பீசினுடைய யானைகளைப் போரணியாக நிறுத்தி அவைகளை எதிர்ப்பதற்குத் தன் வீரர்களைப் பழக்கினான். ஆனால், யானைகளின் எதிரில் குதிரைகள் ஆற்றைக் கடந்து போகுமென்று நம்பமுடியாதென்பதைக் கண்டான். குதிரைப் பட்டாளமொன்றை அனுப்பிப் போரஸுக்கும் அபிசாரனுக்கும் இடைவழியில் நிறுத்தி, அவர்களுக்குள் போக்கு வரவு இல்லாதவாறு தடுத்தான். இவ்வாறு தனித்துப் பிரிக்கப்பட்டதைக் கண்டு அபிசாரன் தன் தம்பி பிரத்யும்னனையும் தன் பண்ணையாகிய அர்ஷகேசனையும் விலையுயர்ந்த காணிக்கைகளோடு போய், தான் வணங்கிப் போனதாக அலெக்சாண்டருக்குச் சொல்லும்படி அனுப்பினான். தனக்கு உடம்பு அசௌகரியமாயிருப்பதனால் நேரே வந்து வணங்கமுடியவில்லை என்று சொல்லச் சொன்னான். அவன் 'தகா' செய்கிறானென்று அலெக்சாண்டர் கண்டு கொண்டானாயினும், காலக்கிரமத்தில் அவனை நசுக்கத் தீர்மானித்து அப்போதைக்குச் சும்மா இருந்தான். ஆம்பீசைப் பார்த்து,

'கழுதைப்புலிகளைக் கொல்லுமுன் சிங்கங்களைக் கொல்ல வேண்டும். பஞ்சாபுச் சிங்கமென்னும் போரஸை முதன் முதலில் வெல்லவேண்டும்" என்று சொன்னான்.

கிரேக்கப்படை ஹைடாஸ்பஸை நோக்கிச் சென்றது. அந்தப் படையினரை முன் செல்லாமல் சுற்று முற்றும் வட்டமிட்டுத் தடுக்க முயன்ற ஸ்படிகேசன், விஜயவர்மன், வைரோசகன், மலயகேது என்பவர்கள் தடுக்கமாட்டாமல் தாமே ஓடிப்போகவேண்டியவர்களானார்கள்.

கிரேக்கர்கள் ஹைடாஸ்பஸின் மேல்கரையிற் பாளையம் இறங்கினார்கள். எதிர்கரையில் யானைகளை முன்னணியிற் கொண்ட போரஸின் பலமான சைனியம், அவர்கள் இருந்த இடத்திலிருந்து நன்றாகப் பார்க்கக்கூடியதாயிருந்தது. சற்று முன்னாற் பெய்த மழையினால் ஆற்றில் நீர் பெருகியிருந்தது.

"இந்த யானைகளின் எதிரில் நாம் ஆற்றைக் கடக்க முயல்வது பைத்தியக்காரத்தனமாகும். நம் படைகளைப் போலியாக இடம் பெயர்த்துப் போரஸின் லக்ஷியத்தைக் குலைத்து, அதற்குமேல் நாம் ஆற்றைக் கடப்போம்" எனக் கிரேடிராஸைப் பார்த்து அலெக்சாண்டர் சொன்னான். நாள்தோறும் அநேக பட்டாளங்கள் போர்க்கு அறைகூவிக் கொண்டு ஆற்றங்கரையில் முன்னும் பின்னும் நடந்து செல்லும்படி செய்தான். போரஸும் அவனுடைய யானைப் படைவீரரும் எதிர்கரையில் அதேமாதிரி முன்னும் பின்னும் நடந்தனர். தன்னை ஏமாற்றுவதற்காகச் சத்துருக்கள் இவ்வாறு போக்குக் காட்டுகிறார்களெனக் கடைசியில் போரஸ் நினைத்து, அவைகளைக் கவனியாது புறக்கணித்தான்.

பிறகு, புயற்காற்று வீசிக்கொண்டிருந்த ஒரு நாள் இரவு கிரேடிராஸையும் அவனுடைய படைகளையும் ஆம்பீ

சின் துருப்புக்களையும் அங்கே இருந்து பெருந்தீயெழுப்பிப் போர்க்கு அறைகூவிப் பேரொலி செய்யச் சொல்லிவிட்டு டாலமி, சலூக்கஸ், காய்னஸ், ஹெபேயிஸ்டியன், பெர்டிக் கஸ், டெமிட்ரியாஸ் என்பவர்களைத் தலைவர்களாகக்கொண்டு பொறுக்கியெடுத்த சில துருப்புக்களுடன், தான் ஏற் கெனவே பார்த்து வைத்திருந்ததொரு துறையில் இறங்கிச் சத்தஞ்செய்யாமல் அலெக்சாண்டர் ஆற்றைக் கடந்தான். எதிர்கரையில் வேவாட்கள் இருந்தார்களானாலும், புயலின் கோஷம் அதிகமாயிருந்ததனால், இவர்கள் ஆற்றைக்கடந்து போகும் சப்தம் அவர்களுக்குக் கேட்கவில்லை. இருள் மூண் டிருந்ததனாலும், வழியில் மரஞ்செறிந்த சிறு தீவு ஒன்று இருந்ததனாலும், கிரேக்கர்கள் ஆற்றைக் கடந்த சப்தம் அவர்களுக்குக் கேட்கவில்லை. ஆனால், அருணோதயத் தில் கிரேக்கர்கள் அக்கரையை நெருங்கினபோது அவர்கள் பார்த்து, அந்தச் செய்தியைப் போரஸுக்கு அறிவிப்பதற் காகக் குதிரைமீது விரைந்தோடினார்கள். இந்தியர்கள் அப் படிப் போவதை அலெக்சாண்டர் கண்டு, காய்னஸைப் பார்த்து, "ஒரு விநாடிகூட வீண் போக்கலாகாது" என்றான்.

அவன் குதிரையை விட்டு இறங்கிச் சைனியத்தை அணி வகுத்தான். ஆனால், ஊரிற் கரையேறுமுன் அந்நதியின் ஆழமில்லாத கிளையொன்று குறுக்கே இருக்கக் கண்டான். சிறிதும் தாமதிக்காமல் அலெக்சாண்டர் தன்னுடைய புக்கி பேலஸ் என்னும் குதிரை மீதேறி அந்தக் கிளையாற்றினூடே சென்றான்; குதிரைப்படையும் காலாட்படையும் அவன் பின்னே போயின. குதிரைகள் அக்கிளையாற்றைக் கடக்கும் போது, தலையை நீர் மட்டத்தின்மீது வைத்துக்கொள்வது கஷ்டமாயிருந்தது; காலாட்கள் மார்பளவு ஜலத்தில்

நடந்துபோகவேண்டியதாயிற்று. அப்போது அலெக்சாண்டர், "ஓ அதீனியர்களே! நீங்கள் மெச்சிக் கொண்டாட வேண்டுமென விரும்பி நான் எப்படிப்பட்ட அபாயங்களுக்கெல்லாம் உள்ளாகிறேனென்று உங்களுக்குத் தெரிகிறதா?" என உரத்துச் சொன்னான். முடிவில் எல்லாரும் க்ஷேமமாக ஆற்றைக் கடந்தார்கள்.

அலெக்சாண்டருடைய சைனியம் திரும்ப அணிவகுத்து நின்றவுடனே, 2,000 குதிரைப்படையோடும் 120 தேர்களோடும் போரஸின் மகனான அர்ஜுனன் என்பவன் வந்து அவர்களைத் தாக்கினான். தன் படை மிகத் திறமையுள்ளதானமையின், சத்துருப்படையைத் தோல்வியுறச் செய்வது அலெக்சாண்டருக்குக் கஷ்டமாயிருக்கவில்லை. வீரனான அர்ஜுனன் அலெக்சாண்டரின் மீதே பாய்ந்து, குதிரையினின்றும் இறக்கி அவனைச் சிறைப்பிடிக்கவேண்டுமெனப் புக்கிபேலஸைக் காயப்படுத்தினான். உடனே அவனைக் காய்னுஸ் கொன்றுவிட்டான். அவனுடைய சைனியம் குலைந்து, இறந்துபோன 400 பேரை விட்டுவிட்டு ஓடிப் போயிற்று.

தன் மகனுக்கு நேர்ந்த துர்க்கதியைக் கேட்டுப் போரஸ், அலெக்சாண்டரை எதிர்ப்பதற்குத் தன் முழுச்சேனையோடும் முன் சென்றான். அவனிடத்தில் 4,000 குதிரைப் படையும், 200 யானைப்படையும், 300 தேர்ப்படையும், 30,000 காலாட்படையும் இருந்தன. இவைகளுக்கெல்லாம் மலயகேது, அவன் சகோதரர்கள், ஸ்படிகேசன், விஜயவர்மன், வைரோசகன் என்னும் இவர்கள் நாயகர்களாயிருந்தார்கள். யானைகளை எதிர்த்துக் குதிரைகள் செல்லாவாதலின், போரஸின் படையை நடுவில் எதிர்க்க அலெக்சாண்டர் துணியவில்லை; அன்றியும், போரஸின் காலாட்

படையைக்காட்டிலும் அலெக்சாண்டரின் அணி சிறந்ததா யிருக்கவில்லை. ஆனால், அவனுடைய குதிரைப்படை பலமாக இருந்தது. அவன் தன்னுடைய குதிரை வில்லாளிகளைக் கொண்டு சரமாரி பொழியச் செய்து இந்தியக் குதிரைப் படையைக் கலக்கிவிட்டான்; அவனும் காய்னஸும் இந்தியப்படையின் இடது பாரிசத்தை முன்னும் பின்னும் நின்று தாக்கினார்கள். இந்தியக் குதிரைவீரர்கள் வியூகம் மாறி இரண்டு பக்கங்களிலும் திரும்பினார்கள். ஆயினும், அடிபட்டுத் தோல்வியுற்றுச் சுவர்போல் நின்ற யானைகளின் பின் பக்கமாக ஓடிப்போனார்கள். அந்த யானைகளின் மீதும் மாவுத்தர்களின் மீதும் மாஸிடோனியர்கள் அம்புகளை எய்தார்கள். வெறிகொண்ட யானைகள் சில, மாஸிடோனியப் படை அணியினூடே ஓடலாயின. அந்த அணியைத் திறந்துவிட்டு, யானைகளை அவ்வழியே போகச் செய்து, "அவைகளை நிதானமாகக் கொல்லுங்கள், அல்லது அங்கச் சேதம் பண்ணுங்கள்" என்று அலெக்சாண்டர் கட்டளையிட்டான். இப்படிச் செய்ததனால் யானைகளினால் தன் படையில் அதிகச் சேதம் விளையாமல் தடுத்துக்கொண்டான்.

இந்தியக் குதிரைப்படை திரும்பவந்து தாக்கியது. ஆனால், குலைந்து கலங்கிப் பின்னிட்டு ஓடும்படி இவர்கள் செய்துவிட்டார்கள். மறுபடியும் இந்தியர் சுவர்போன்ற யானை வரிசையின் பின்புறம்போய்ச் சேர்ந்தார்கள். ஆயினும், மாஸிடோனியர்கள் அந்த யானைகளின் மீது ஆயிரக் கணக்கான அம்புகளைப் பொழிந்தார்கள்; அவை பின் திரும்பியோடிப் போரஸின் சொந்தக் குதிரைப்படையையும் காலாட்படையையும் நசுக்கிக்கொண்டு உடனே ஓடின. அதனால் அநேகம்பேர் மாண்டார்கள். அந்தத் தருணத்

தில் மற்றொரு படையுடன் கிரேடிராசும் ஆம்பீசும் நதியைக் கடந்து வந்துசேர்ந்தார்கள். யானைகளின் தாக்குதலினு லுண்டான அதிர்ச்சி தணிவதற்கு முன்னரே போரஸின் படையை அலெக்சாண்டரும் கிரேடிராசும் தங்கள் தங்கள் சைனியங்களைக்கொண்டு இருபுறமும் நெருக்கித் தாக்கினர் கள். போரஸின் ஆட்கள் தெறிபட்டு ஓடினார்கள். ஆனல், அப்படி அவர்கள் ஓடுமுன்னரே அவர்களுடைய பலத்திற் பாதிகுன்றிப்போயிற்று. போரஸின் வேறு இரண்டு புத்திரர் களும் வீரனான ஸ்படிகேசனும் போர்க்களத்தில் மாண்டு போனார்கள். வைரோசகனும் விஜயவர்மனும் மலயகேது வும் தப்பித்துக்கொண்டு ஓடிப்போனார்கள்.

ஏழு அடி உயரமுள்ள பூதாகாரமான போரஸ், இனி எதிர்க்க முடியாதெனத் தோன்றுகிறவரையில் யுத்தம் செய்தான். பின்பு, பின்னிடுவதற்காகத் தன் யானையைத் திருப்பினான். அவனது இடது தோட்பட்டையிற் காயம் பட்டிருந்தது. ஆயுதத்துக்கு அசையாத இரும்புக் கவசம் அணிந்திருந்தானாயினும், அவன் தேகத்தில் அந்த அங்கம் ஒன்றே காப்பின்றித் திறந்திருந்தது. அந்த இரும்புக் கவ சம் பலம் மிக்கது; அவனது உடம்போடு உடம்பாகப் பொருந்தியிருந்தது. அவனுடைய தீரமும் முகத்தோற்ற மும் அதிசயிக்கத் தக்கனவாய் அலெக்சாண்டருடைய மனத்தில் மிகப் பலமாகப் பதிந்தன.

வல்லார் இளைத்தால் வந்து இளைப்பாறுமென்று சொல்லாதிரார் சுத்த வீரர்:

'வல்லா ரமர்செய்து கையிளைத் தாலவர் வம்மினெனச்
சொல்லா திராரிளைப் பாறுமென் பார்சுத்த வீரர்படை
எல்லா மிழந்து நிராயுத னய்நின்ற ராவணனைக்
கொல்லாது விட்டனை யேயச்சு தானந்த கோவிந்தனே.'

அவனுடைய உயிரைக் காப்பாற்ற வேண்டுமென அலெக்சாண்டர் கவலைகொண்டான். ஆதலின், ஆம்பீசைக் குதிரையின்மீது அனுப்பி, உயிரைப் போக்குவதில்லையென வாக்களித்து, அவனை உடனே தன்னண்டை அழைத்து வரும்படி சொன்னான். ஆம்பீசு விரைந்தோடிப் போரஸின் பின்புறம் சேர்ந்தான். ஆனால், அவனுடைய ஸ்வபாவத்தை நன்கு அறிவானாதலின், அவனையடுத்து நெருங்க அஞ்சினான். நின்று, அலெக்சாண்டர் சொல்லியனுப்பிய வர்த்தமானத்தைக் கேட்கும்படி வேண்டினான். போரஸ் திரும்பிப் பார்த்து அவன்மீது தன்னுடைய ஈட்டியை வீசியெறிந்தான். அதன் வீச்சுக்குப் பயந்து தாவி நகர்ந்து ஆம்பீசு உயிர் தப்பினான். போரஸ் இப்படிச் செய்ததனாலும் அலெக்சாண்டருக்குக் கோபம் உண்டாகவில்லை. தன்னை வந்து பார்க்கும்படி தூதர்பின் தூதர்களைத் திரும்ப அனுப்பினான். கடைசியில் போரஸின் பழைய நண்பனான மீரோஸ் (Meroes) என்பவனை அனுப்பினான். அலெக்சாண்டர் சொன்ன செய்தியைச் சொல்வதற்கு அவன் போன போது, போரஸுக்கு நீர் வேட்கை மிக அதிகமாக இருந்தது. அவன் யானையினின்று இறங்கிக் கொஞ்சம் நீர் பருகினான்; அலெக்சாண்டரிடம் தன்னை அழைத்துக் கொண்டு போகும்படி அந்தத் தூதனுக்குச் சொன்னான்.

இந்த வர்த்தமானத்தைக் கேட்டவுடனே அலெக்சாண்டருக்கு உண்டான களிப்புக்குக் கங்கு கரையில்லை. தோழர்கள் சிலரை அழைத்துக்கொண்டு போரஸையும் மீரோஸையும் எதிர்கொண்டு வரவேற்பதற்காகக் குதிரை மீதேறி முன் சென்றான். போரஸினுடைய சௌந்தரியத்தையும் கம்பீரமான ஆகிருதியையும் மேலுங் கீழும் உற்றுப் பார்த்து வியந்து ஆச்சரியப்பட்டான். தோல்வியுற்றதனால்,

போரஸினுடைய வீரியம் தணியவில்லை என்பதையும், அவனுடைய மனம் தளரவில்லை என்பதையும், வீரனொருவன் மற்றொரு வீரனைப் பார்க்க வருவது போல, அவன் தன்னைச் சந்திக்க வந்திருக்கிறானென்பதையுங் கண்டு அலெக்சாண்டர் அதிசயித்தான். "உம்மை நான் எவ்விதமாகப் பாவித்து வியவகரிக்கவேண்டும்?" எனப் போரஸைப் பார்த்து அலெக்சாண்டர் கேட்டான்.

அதற்குப் போரஸ், "ஓ அலெக்சாண்டர்! ஓர் அரசனோடு எப்படி வியவகரிக்கவேண்டுமோ அப்படி வியவகரியும்" எனக் கூறினான்.

"ஓ போரஸ்! அந்தக் காரியம் நானாகவே செய்வேன். உமக்கு இஷ்டமான வேறு வரம் ஏதேனும் கேளும்" என்றான் அலெக்சாண்டர்.

"எனக்கு வேண்டுவனவெல்லாம் அந்த ஒரு வேண்டுகோளிலேயே அடங்கியிருக்கின்றன" எனப் போரஸ் மொழிந்தான்.

இம்மறுமொழிகளைக் கேட்டவுடனே அலெக்சாண்டருக்கு ஆனந்தம் பொங்கியது. தன்னுடைய சொந்த ராஜ்யத்தைப் போரஸ் ஆண்டுகொண்டிருக்கும்படி விட்டதன்றி, அலெக்சாண்டர் இனித் தான் ஜயிக்கும் பிரதேசங்களில் எவ்வளவு பெரிய பாகம் கொடுக்க முடியுமோ அதையும் போரஸினுடைய ராஜ்யத்திற் சேர்ப்பதாகவும் சொன்னான். போர் நிகழ்ந்த இடத்தில் நிகையா (Nikaia) என்னுமொரு நகரத்தைப் பிரதிஷ்டை பண்ணினான்; ஆற்றைக் கடந்து கரையேறியபோது புக்கிபேலஸ் என்னும் தன் குதிரை அர்ஜுனன் கையால் தீராக்காயமுண்ட இடத்தில் புக்கபேலா (Boukaphala) என்னும் பெயரால் மற்றொரு நகரமும் நிருமித்தான்.

போரஸினுடைய வஸந்த மாளிகை பிரும்மாண்டமானதோர் அடுக்குக் கட்டட வரிசை. அந்த மாளிகை புக்கபேலா நகரத்திற் சேர்க்கப்பட்டது. அவ்விரண்டு நகரங்களிலும் பலமான கோட்டைகள் கட்டும்படி கிரேடிராசுக்கு அலெக்சாண்டர் கட்டளையிட்டான். வெற்றியைக் கொண்டாடுவதற்காக வழக்கமாகச் செய்யும் பலி பூஜைகளையும் மற்போர் முதலிய போட்டியாட்டங்களையும் நடத்திய பின், காலகர்கள் என்னும் காலசூரியர்களின் மீது படையெடுத்தான். அவர்கள் ஜனநாயகக் குடிகள்; அகேஸினீஸ் என்றும் ஹைடாஸ்பஸ் என்றும் சொல்லப்படும் நதிகளுக்கிடையில் மேற்புறத்துப் பிரதேசங்களில் அவர்கள் வசித்துக்கொண்டிருந்தார்கள். திடீரென்று போய் அலெக்சாண்டர் அவர்கள்மீது பாய்ந்தடித்து வென்று அவர்களுடைய நாட்டைப் போரஸினுடைய ராஜ்யத்திற் சேர்த்துவிட்டான். "ஜனநாயகக் குடிகளை அந்நியருடைய ஆட்சிக்கு உட்படச் செய்வதைக் காட்டிலும், சிற்றரசர்களை அடக்கி வழிக்குக் கொண்டுவருவது எளிதாயிருக்கின்றது" என்று ஹெபேயிஸ்டியனுக்கு அலெக்சாண்டர் சொன்னான்.

அதற்குப்பின், அலெக்சாண்டர் போரஸுக்கும் ஆம்பீசுக்கும் சமாதானம் செய்துவைத்தான் அது முடிந்தவுடன் ஆம்பீசைத் தக்ஷசிலைக்குப் போகச்சொல்லி, அதைத் தன் மண்டலங்களுள் ஒன்றாகக் கொண்டு, தன் அதிகாரத்திற்குட்பட்ட மண்டலேசனாக அதை ஆளச்சொன்னான். இளைய போரஸு என்பவன் காணிக்கைகளுடன் அலெக்சாண்டரிடம் ராயபாரிகளை அனுப்பினான். அவனை அவனுடைய ராஜ்யங்களுக்கே மண்டலேசனாக நியமித்து, அவனுக்கு ஆலோசனைத்துணைவனாக யூடிமாஸ் என்பவனையும்

நியமித்தான். அர்ஷகேசன், பிரத்யும்னன் என்னும் இரு வர் வசமாக அபிசாரன் நாற்பது யானைகளையும் வேறு பல காணிக்கைகளையும் அனுப்பினான். "அபிசாரனை விரைவில் இங்கே நேரே வரச்சொல்லுங்கள். இல்லையெனின், என் னையும் என் படைகளையும் அவனுடைய நாட்டிற் காண்பான். இப்படி அரைமனத்தோடு வணங்குவது போதாது" என்று அவர்கள் மூலமாக அலெக்சாண்டர் சொல்லியனுப்பினான். அந்தத் தருணத்திற் சசிகுப்தனிட மிருந்து தூதனொருவன் அவசரமாக ஓடிவந்து, அசுவகர்கள் தங்கள் மண்டலாதிகாரியைக் கொன்று கலகித்து எழுந் தார்களெனச் சொன்னான். "இவர்கள் என்ன ஓயாமற் கலகம் விளைவிப்பவர்களா யிருக்கிறார்களே! இப்பொழுது தானே இவர்களை வென்று அடக்கினேன்? அதற்குள்ளாக எதிர்த்து எழுந்துவிட்டார்களா? இவர்களைச் சங்கரித்து இரத்தக்காடாக்க வேண்டும்" என்று சொல்லி அலெக் சாண்டர் அந்தக் கலகத்தை அடக்குவதற்குப் பிலிப்பாசை யும் டிரியாஸ்பீஸை (Tyriaspes)யும் அனுப்பினான்.

பின்பு, அவன் அகேஸினீஸ்[1] என்னும் நதியைத் தன் படைகளுடன் கடந்து போனான். நீரோட்டத்தின் வேகம் அதிகமாயிருந்தது; அதைக் கடப்பது கஷ்டமாயிற்று. அநேகம் படகுகள் பாறைகளின் மீது மோதிச் சிதைந்தன. அதனால் நூற்றுக்கணக்கான ஆட்கள் மாண்டனர். ஆற்றின் அக்கரையில் ஒரு காடு இருந்தது. அதில் கப்பல் கட்டு வதற்கேற்ற நல்ல மரங்கள் இருந்தன. அங்குள்ள புற்புதர் களில் விஷப்பாம்புகள் அநேகம் ஊர்ந்து கொண்டிருந்தன. அவற்றின் செதிள்கள் பொன்னிறம் வாய்ந்தவை. அவை

---

1. ஜீனபு நதி; அசிக்னி - கறுப்பு நிறமுள்ளது.

தம் படங்களையும் விரித்தன. இரண்டு போர்வீரர்களை அவை கடித்துவிட்டன. அதற்குப் பரிகாரம் செய்யக் கிரேக்க டாக்டர்களால் இயலவில்லை. அந்தப் போர்வீரர்களுள் ஒருவன் மரித்தான்; மற்றொருவனை இந்திய வைத்தியனொருவன் சொஸ்தப்படுத்திவிட்டான். எவ்வகைப் பாம்பு விஷத்திற்கும் முறிவு ஒன்று தன்னிடம் இருக்கிறதாக அந்த வைத்தியன் அலெக்சாண்டருக்குச் சொன்னான். "அதன் பெயரைச் சொல்ல மாட்டேன். ஆனால், தேவையானவர்களுக்கு மாத்திரம் கொடுப்பேன்" என்றான் அந்த வைத்தியன். அந்தக் காட்டில் பிரவசித்தமான ஆலமரம் ஒன்று இருப்பதை அலெக்சாண்டர் கண்டான். "இது என்ன அதிசயமான மரம்! வேர்கள் வானத்திலிருக்கின்றன; கிளைகள் தூண்களைப்போலத் தாங்கி நிற்கின்றனவே!" என்று மகிழ்வுற்றுக் கேட்டான்.

"இது பெயர் பெற்ற இந்திய வடவிருக்ஷம், ஐயா! இது எங்கள் புண்ணிய விருக்ஷங்களில் ஒன்று. புண்ணிய புருஷர்களைப்போல இதுவும் மேலுலகில் வேரூன்றியிருக்கின்றது" என்று வைத்தியன் சொன்னான்.

"மற்றத் தேசங்களில் இதைப் பயிராக்க முடியுமா?" என்று அலெக்சாண்டர் கேட்டதற்கு, "முடியாது, ஐயா. புண்ணிய விருக்ஷமாதலின் இது இந்தியாவிலேயே வளரும்" என்று வைத்தியன் சொன்னான்.

"அது வீண் பிதற்றல்" என்றான் அலெக்சாண்டர்.

அலெக்சாண்டரும் அவனுடைய ஆட்களும் அந்தக் காட்டிற் காண்டாமிருகமொன்றைக் கண்டார்கள். அவர்களிற் பெரும்பாலார் அதைப் பார்த்தது அதுவே முதன் முறையாகும். அதன் நெற்றியில் ஒற்றைக்கொம்பு இருப்

பது அவர்களுக்கு அதிசயமாய்த் தோன்றியது. "அதற்குப் பெயர் கண்டா" என்று இந்திய வைத்தியன் சொன்னான். ஆனால், அதன் அர்த்தத்தை நன்றாக விளக்கும் பொருட்டு அலெக்சாண்டர் அதற்கு ரைனஸிரஸ் எனப் பெயரிட்டான். அவைகளிலொன்றை அலெக்சாண்டர் எய்தான்.

ஆனால், உடம்பில் குத்திக்கொண்ட இரண்டு அம்புகளோடு அது ஓடிப் போய்விட்டது. "என்ன உரப்பான தோல் அதற்கு இருக்கின்றது!" என்றான் அலெக்சாண்டர்.

"அதைச் சுட்டுக் கொல்வது கஷ்டம். அதைக் கண்ணில் அடிக்கவேண்டும்" என்று இந்திய வைத்தியன் சொன்னான்.

"முன்னதாகவே அதை ஏன் எனக்குச் சொல்லவில்லை?" என்று அலெக்சாண்டர் கேட்க, "அது உங்களுக்குத் தெரிந்தேயிருக்குமென்று நான் நினைத்தேன்" என்றான் வைத்தியன்.

அதன் தோலையும் கொம்பையுமாவது மாஸிடனுக்குக் கொண்டு போய்த் தன் தாய்க்குக் காட்டுவதற்கில்லாமற் போயிற்றேயென அலெக்சாண்டர் மிக ஏங்கினான்.

போரஸினுடைய ராஜ்யம் ஜீலம் நதிக்கும் சினாப் நதிக்கும் இடையில் இருந்தது. அவனே பர்வதகன் அல்லது பர்வதேசுவரன் எனப்படுவான். அவனுக்குச் சகோதரன் மகன் ஒருவன் உண்டு; தனியாகச் சிந்து நதிக்கரையில் ஒரு பிரதேசத்திற்கு அதிபதியாக இருந்தான். அது அம்பியினுடைய ராஜ்யத்திற்குத் தெற்கே இருந்தது. அவன் இளைய போரஸ் எனப்படுவான்.

இளைய போரஸ் தன் ராஜ்யத்தின் எல்லைக்குப் போன வுடன் அலெக்சாண்டரின் ஆதிபத்தியத்தைத் துறந்து கலகம் விளைவித்து எழுந்தானென்னும் வர்த்தமானம் இவ்விடத்தில் அலெக்சாண்டருக்கு எட்டியது. அவனைத் தானே பின் தொடர்ந்து போகத் தலைப்பட்டு அலெக்சாண்டர் ஹைட்ரோடீஸ்[1] (Hydraotes) என்னும் நதியைக் கடந்தான். போரஸூம் அபிசாரனும் முன்னால் சேர்ந்து தாக்கியபோது அவர்களைச் சங்கலத்துக் கதேயர்கள் (Kathaians of Sangala) எதிர்த்து அடித்துத் துரத்தி ஓட்டினார்கள். அந்தக் கதேயர்கள் அலெக்சாண்டரைப் பலமாக எதிர்க்கத் தீர்மானித்துச் சங்கலத்திற் குழுமுகிறார்களென்று அலெக் சாண்டர் பின்பு கேள்விப்பட்டான். இந்தச் சாதியார் விடாப்பிடியாகப் போராடும் தன்மையினரென்பது, பெரிய போரஸின் தீரத்தை நேரிற் பார்த்திருந்ததனால், அலெக் சாண்டர் மனத்தில் நன்கு பதிந்திருந்தது. ஆதலின், இளைய போரஸைப் பின்பற்றிச் செல்லும்படி ஹெபே யிஸ்டியனை அலெக்சாண்டர் அனுப்பினான்; பெரிய போரஸை, அவனது ராஜதானிக்குப் போய், யானைகளையும் உத்தமவீரர்களையும் அழைத்துவருமாறு சொன்னான். விரைந்து சங்கலத்தின்மீது தான் படையெடுத்துச் சென்றான்.

---

1. ரவி என்னும் ஆறு.

# அத்தியாயம் 13

## ஹைபேஸிஸ்[1] படையெழுச்சி

போகும் வழியிலிருந்த பிம்பராமா (Pimprama) என்னும் ஊரைப் பிடித்துக்கொண்டு அலெக்சாண்டர் கதேயர்களுடைய நடுக்கோட்டையாகிய சங்கலத்திற்குப் போய்ச் சேர்ந்தான். நகரத்திற்கு எதிரிலிருந்த சிறு குன்றின்மீது கதேயர்கள் போரணி வகுத்துக் குழுமியிருந்தனர். அவர்கள் மூன்று வரிசைகளாக அமைந்த பெருஞ் சகடங்களின்பின் பாளையமடித்துக் கொண்டிருந்தார்கள். ஆகவே, அந்தச் சகட வரிசைகள் அவர்களுக்கு மூன்று காப்புத் தடைகளாயிருந்தன. கோட்டையைக் காத்துக் கொண்டிருந்தவர்களின்மீது அலெக்சாண்டர் தன்னுடைய குதிரை வில்லிகளைக்கொண்டு அம்புகள் பொழிவித்தான். பிறகு, அவர்கள்மீது தன் குதிரைப்படையோடு பாய்ந்தான். சகடங்களுக்கு முன் வந்து நின்று அவர்கள் குதிரைப்படையையும் விற்படையையும் தாக்குவார்களென்று அலெக்சாண்டர் எண்ணியிருந்தான். அப்படிச் செய்யாமல் அவர்கள் தங்கள் முதல் வரிசைச் சகடங்களின் மீது ஏறிக்கொண்டு கிரேக்கர்களின்மீது அம்புகளை எய்யவும் ஈட்டிகளை வீசவும் மற்றுமுள்ள அஸ்திரங்களை எறியவும் தலைப்பட்டார்கள். அதன்மீது அலெக்சாண்டர் தன்

---

1. பியாஸ் என்னும் நதி.

வழி வகைகளை மாற்றிக்கொண்டான். இது குதிரைப்படையினர் செய்யத்தக்க காரியமன்றெனக் கண்டான். குதிரையை விட்டு இறங்கிக் காலாட்படையினரோடு அவர்கள்மீது பாய்ந்தான். முதல்வரிசைச் சகடங்களினின்றும் கதேயர்களைப் பின்னடையச் செய்தான். ஆனல், அவர்கள் இரண்டாம் வரிசைச் சகடமீது ஏறிக்கொண்டு அம்புகளைப் பிரமாதமாகப் பொழிந்தார்கள். மிகக் கஷ்டப்பட்டு அவர்களை இரண்டாம் வரிசையினின்று அகற்றினன். அவர்கள் மூன்றும் சகட வரிசையின்மீது ஏறிக்கொண்டு போர் புரிந்தார்கள். முடிவில் அங்கிருந்தும் அவர்களைப் பின்னேட்டினன். பிறகு, அவர்கள் நகரத்திற்குள் ஓடிப்போய்க் கிரேக்கர்கள் புகும் முன்னரே கதவை அடைத்துக்கொண்டார்கள்.

பட்டணத்தை அலெக்சாண்டர் முற்றுகையிட்டான். பட்டணத்தில் மதில் இல்லாத பாகமொன்று இருந்தது. அதன் அருகில் ஆழமில்லாத ஏரியொன்று மாத்திரமே இருந்தது. கதேயர்கள் இரவில் நகரத்தை விட்டுப் புறப்பட்டு அவ்வேரியின் வழியாகத் தப்பித்துக்கொண்டு போய் விடுவார்களென அலெக்சாண்டர் நினைத்தான். அந்நகரத்தைச் சுற்றி இரண்டு வரிசைக் கழுக்கட்டைகளை அடித்து நகரத்தைச் சூழ்ந்து கொண்டான். உள்ளே இருந்து சிலர் வெளியே வந்தார்கள். அன்றிரவே கதேயர்கள் ஏரிப்பக்கமாகத் தப்பித்துக்கொண்டு போக நினைத்திருக்கிறர்களென்று அவர்கள் அலெக்சாண்டருக்குச் சொன்னர்கள். அதன்மீது, 3,000 ஆட்களோடு டாலமியை அவ்விடத்தில் வைத்து, விழிப்புற்றுப் பார்த்துக்கொண்டிருந்து கதேயர்கள் தென்பட்டவுடனே குறிப்பொலி கூவித் தன்னை உஷார்ப்படுத்தும்படி சொன்னன். இரவு நான்காம் ஜாமத்தில் கதேயர் வெளியேற முயன்றனர்.

ஆனால், கிரேக்கர்கள் கைப்பற்றியிருந்த பெருஞ்சகடங்களை டாலமி குறுக்கே வைத்திருந்ததனால், அவர்கள் தடைப்பட்டார்கள். அவர்களில் 500 பேர் கொல்லப்பட்டனர். மற்றவர்கள் நகரத்திற்குள்ளேயே ஓட்டப்பெற்றனர்.

மறுநாள் போரஸ் வந்து சேர்ந்தான். அவன் வரும்போது, பாக்கியிருந்த யானைகளையும், 5,000 பொறுக்கியெடுத்த இந்திய வீரர்களையும், கோட்டையைப் பிடிப்பதற்கான ராணுவ யந்திரங்களையும் கொண்டு வந்தான். இவர்களெல்லோரும் சேர்ந்து சங்கலத்தைத் தாக்கினார்கள். அதன் செங்கற்சுவரை இடித்துப் பிளந்தார்கள். சுவர்களின்மீது ஏறிச் சென்றார்கள். பட்டணத்தைப் பிடித்துக்கொண்டார்கள். 17,000 கதேயர்களைச் சங்கரித்தார்கள்; 70,000 கதேயர்களைச் சிறைப்பிடித்தார்கள்; 300 பெருஞ்சகடங்களையும் 500 குதிரைகளையும் கைப்பற்றிக்கொண்டார்கள்.

கதேயர்களுக்குரிய நகரங்கள் வேறு இரண்டு உண்டு. அங்குள்ளவர்களும் எதிர்ப்பார்களானால், இந்நகரத்திற்கு நேர்ந்த பயங்கரமான துர்க்கதியே அதற்கும் வாய்க்குமென அவர்களுக்குச் சொல்லி, உடனே வந்து சரணமடையும்படி அவர்களை எச்சரிக்கும்பொருட்டு 320 குதிரை வீரர்களோடு யூமினீஸை அலெக்சாண்டர் அனுப்பினான். ஆனால், சங்கலத்திற்கு நேர்ந்த கோரமான கதியை ஏற்கெனவே கேள்விப்பட்டிருந்த அந்நகரவாசிகள், யூமினீஸ் போவதற்கு முன்னரே நகரங்களைவிட்டு ஓடிப்போயிருந்தார்கள். அவர்களைத் தொடர்ந்து பின்பற்றிப் பிடிப்பதற்கு அலெக்சாண்டர் முயன்றானாயினும் அப்படிச் செய்ய முடியவில்லை. ஆன போதிலும், பின் தங்கித் தயங்கிக்கொண்டிருந்தவர்களை,

500 பேர் வரையில், அலெக்சாண்டருடைய படையினர் கொன்றார்கள். அப்படி ஓடிப்போனவர்களிற் பெரும் பாலோரைப் பிடிக்க முடியாமையினாற் கோபங்கொண்டு அலெக்சாண்டர் சங்கலத்திற்குத் திரும்பி வந்து, அதைத் தகர்த்துத் தரைமட்டமாக்கினான். தனக்கு ஏற்கெனவே சரணமடைந்த பிம்பராமம் முதலான நகரங்களில் போர்த் தளங்களை வைப்பதற்காகப் போரஸை அனுப்பிவிட்டு, அலெக்சாண்டர் ஹைபேஸிஸை நோக்கிச் சென்றான்.

சங்கலத்தினின்று தப்பியோடிய ஜனங்கள், அலெக் சாண்டருடைய போர்ப்படை வெல்லவொண்ணாததென் னும் செய்தியைச் சுற்றுப்புறத்து ஊர்களிலெல்லாம் பரப்பி யிருந்தார்கள்.

"அது தேவப்படையோ ராக்ஷஸப்படையோ அல்லா மல் வெறும் மானிடப்படையன்று. அப்படிப்பட்ட ஒழுங் கான நடை, அவ்வளவு தீரம், அப்படிப்பட்ட ஈர இரக்க மில்லாக் கொலைக்குணம், சர்வஜன சங்காரஸாஹஸம் ஆகிய இவற்றை வெறும் மனிதர்களிடம் ஒருபோதும் காணமுடி யாது. அவர்களுடைய தலைவனும் அஞ்சா நெஞ்சன், கலங்கா மனத்தினன், சமயோசிதமான யுக்தியும் புத்தியும் வாய்ந்தவன். சண்டைபோடாமற் சரணமடைந்து எல் லாரும் கூட்டோடு அழிந்து போகாமல் தப்பிப்பிழைப் பதே உத்தமமான காரியம்" என்று அவர்களில் ஒருவன் சொன்னான்.

சௌபூதிக்கு அதுவே போதும்; வேறொன்றும் சொல்ல வேண்டியதே இல்லை. அவனுடைய நகரம் செல்வமிகுந்து செழிப்புற்றிருந்தது. சங்கலத்துக்கு நேர்ந்த கதி அதற்கும் நேராதிருக்கவேண்டுமென அவன் விரும்பினான். மந்திரி

களோடு கலந்து ஆலோசித்தான். அவர்களெல்லோரும் அவனைப்போலவே அபிப்பிராயப்பட்டார்கள்.

"நம்மிடத்தில் பொன் அதிகம் உண்டு, அவனிடத்தில் 'இரும்பு' அதிகம் உண்டு. நம்மிடமுள்ள பொன்னிற்கொஞ்சம் அவனுக்குக் கொடுத்துவிட்டு, அவனுடைய 'இரும்பு' நம்மை வருத்தாமல் தடுத்துக்கொள்வோம்" என்று அவர்கள் சொன்னார்கள்.

அலெக்சாண்டர் தன்னுடைய சேனையுடன் சீக்கிரமாகச் சௌபூதியின் தலைநகருக்கு எதிரே வந்து சேர்ந்தான். கம்பீரமான அந்நகரத்து மதில்கள் 18 அடி உயரம் இருந்தன. அவை நன்றாகப் பழுதுபார்த்து நல்ல நிலைமையில் வைக்கப்பட்டிருந்தன. அவைகளைத் தாண்டிப் போக முடியாது போலத் தோன்றியது. ஆனால், அலங்கங்களின் மீது போர்ப்படையினன் ஒருவன்கூட இல்லாதிருந்தது விசித்திரமாகத் தோன்றியது. தலைவாசல்கள் 24 அடி உயரம் இருந்தன. இரண்டு யானைகள் ஜதையாகச் சேர்ந்து போகக்கூடிய அளவு அவை அகலமாயிருந்தன. கதவுகளோ முதல்தரமான தேக்கம் பலகைகளினால் ஆக்கப்பட்டவை. அவைகளின்மீது இரும்புக்கட்டுகளும் பித்தளைப்பூண்களும் பொதியப்பெற்றிருந்தன. அந்தக் கதவுகளோ இறுக மூடப்பட்டிருந்தன. உள்ளே இருக்கிறவர்கள் எதிர்க்கப் போகிறார்களென்பதற்கு அடையாளமாக அது ஒன்றே தோன்றியது. அலெக்சாண்டர் தன் படைகளை முன் செல்லாமல் நிறுத்திக்கொண்டான். காய்னஸை விளித்து, "இவ்விடத்தின் நிலைமை உள்ளபடி என்னவென்று எனக்குப் புலப்படவில்லை. குடிகள் இவ்விடத்தை விட்டு ஓடிப் போய்விட்டார்களா? அல்லது, போராட்கள் உட்சுவரொன்றின் அலங்கங்களிலிருந்து ஊரைக் காத்துக்

கொண்டிருக்கிறார்களா? அல்லது, நம்மைத் திடீரென்று தாக்கும்பொருட்டுப் பதுங்கியிருக்கிறார்களா? எவ்விடத்தும் ஆண் நாற்றமே இல்லை, பெண் நாற்றமும் இல்லை. ஆனால், இந்த மௌனமே இதற்கு அத்தாட்சியாயிருக்கின்றது. இது வேண்டுமெனப் பூண்ட நிச்சப்தமெனத் தோன்றுகின்றது" என்று அலெக்சாண்டர் சொன்னான்.

"நானும் அப்படியே நினைக்கிறேன். ஊரை விட்டு ஜனங்கள் ஓடிப்போயிருந்தால், கதவுகள் இவ்வளவு கெட்டியாக மூடப்பெற்றிரா. அப்படியல்லாமல், அவர்கள் நம்மை எதிர்க்கக் கருதுகிறார்களென்றால், நேர்த்தியாகவும் ஏணி வைத்து ஏறமுடியாததாகவும் இருக்கிற இந்த மதிலைக் காத்துக்கொண்டிருப்பார்கள். பதுங்கியிருக்கிறார்களென்று நினைப்போமானால், நாம் இவ்வளவு நெருங்கி வருவதற்கு முன்னரே அவர்கள் அதற்கு ஏற்பாடு செய்திருக்க வேண்டும். ஆகையால், இந்த மக்களுடைய எண்ணம் என்னவென்று திடமாகச் சொல்ல என்னாலாகவில்லை" என்று காய்னஸ் சொன்னான்.

"எது எப்படியிருப்பினும் நாம் எச்சரிக்கையோடு இருப்பதற்குச் சமானம் ஒன்றுமில்லை. முன்னும் பின்னும் பார்த்தே முயலவேண்டும். சங்கலத்தவர்கள் போராடியதைப் பார்த்தோமல்லவா? அதைப் பார்த்த பின்னும், சத்துருவின் வீட்டுக்குள் புகுந்து அவனுடைய வசதிகளை அனுசரித்துச் சண்டை செய்வது மூர்க்க புத்தியாகும். முறைப்படி முற்றுகையிடுவதற்கு வேண்டிய காரியங்களை நாம் செய்வோம். ஹா! ஈதென்ன? கோட்டைக்கதவுகள் திறந்துபோயின; உல்லாஸமான ஊர்வலமொன்று வெளி வந்து கொண்டிருக்கின்றதே! 'வாருங்கள், வாருங்கள்'

என விரும்பி வரவேற்கின்றார்களே!" என்றான் அலெக்சாண்டர்.

உண்மையில், அப்படியே இருந்தது. கதவுகள் திறக்கப்பெற்றிருந்தன. பிரபுக்கள், படைத்தலைவர்கள், படைவீரர்கள் எல்லாரும் பெரிய ஊர்வலமாக வெளியே வந்துகொண்டிருந்தார்கள். அவர்கள் தம் அரசனாகிய சௌபூதியையும் அவனுடைய பிள்ளைகள் இருவரையும் முன்னிட்டுக்கொண்டு வந்தார்கள்; அந்தரங்க விசுவாசத்தோடு கூடிய ஸ்வாகத வாக்கிய கோஷத்தோடு வந்தார்கள். சௌபூதியும் புத்திரர்கள் இருவரும் நேரே அலெக்சாண்டரிடம் போனார்கள். சௌபூதி ஓங்கி வளர்ந்து ஒழுங்காகவும் அழகாகவும் இருந்தான். அவன் ராஜரிகமான ஆடை அணிந்திருந்தான். அது பாதம்வரையில் நீண்டு தொங்கியது. அது முழுதும் பொன் சரிகையினாலும் ஊதாப்பட்டினாலும் இழைக்கப்பெற்றிருந்தது. அவனுடைய பாதுகைகள் பொன்னாலாயவை; அவற்றில் நவரத்தினங்கள் பொதியப்பெற்றிருந்தன. புஜங்களையும் மணிக்கட்டுகளையும் அழகிய முத்துக்கள் அலங்கரித்துக்கொண்டிருந்தன. காதுகளினின்று விலைமதிக்கமுடியாத ரத்தின வகைகள் தொங்கிக்கொண்டிருந்தன. அவனது செங்கோல் முழுப்பொன்னால் செய்து கோமேதகக்கற்கள் பொதியப்பெற்றிருந்தது. 'இது உங்களுக்கு நல்யோகம் தருக' என்னும் வாழ்த்துமொழியோடு அந்தச் செங்கோலை அவன் அலெக்சாண்டருக்குக் கொடுத்தான்.

அவன் சரணமடைந்து ராஜ்யத்தைத் தன்னிடம் ஒப்பித்ததற்கு அறிகுறியான அதை அலெக்சாண்டர் ஏற்று மிக மகிழ்வுற்றான். சௌபூதியின் ராஜ்யத்துப் பிரஜைகளின் அறிவையும் ஐசுவரியத்தையும் அழகையும்பற்றிப்

போரஸின் வாயிலாக ஏற்கெனவே சிறப்பாகக் கேள்விப்பட்டிருந்தான். "சௌபூதியின் ஸம்ஸ்தானத்தில் சுத்தமான லவண பர்வதம்[1] ஒன்று இருக்கின்றது. அதிலுள்ள உப்பு உலகத்து ஜனங்களெல்லாருக்கும் 10 லக்ஷம் வருஷங்களுக்கு ஆகும். அந்த ஸம்ஸ்தானத்தில் பிறக்கிற குழந்தைகளெல்லாரையும் வைத்திய முறையாகச் சோதித்துப் பார்க்கிறார்கள். குரூபியாயிருக்கிற குழந்தைகளுக்கு நோவில்லாத விஷமொன்றைக் கொடுத்துக் கொன்றுவிடுகிறார்கள். பெண்களை அவர்களின் அழகின் பொருட்டே தெரிந்தெடுத்து விவாகம் செய்து கொள்ளுகிறார்களே யல்லாமல், அவர்களுக்காக வரும் ஸ்ரீதனத்தைக் கருதி ஒரு போதும் ஏற்கிறதில்லை. அங்கே அற்புதமான நாய்கள் இருக்கின்றன. அவை சிங்கங்களுக்கும் நாய்களுக்கும் பிறந்த சங்கர ஜாதி. அவை சிங்கங்களை வேட்டையாடும். வேட்டையைக் கண்டாற் குரைப்பதில்லை. வேட்டையைப் பிடித்துவிட்டால் விடுவதுமில்லை" என்று போரஸ் அவனுக்குச் சொல்லியிருந்தான். அலெக்சாண்டர் அந்த நாய்களைப் பார்க்க விரும்பினான். அவைகளைப்பற்றிச் சௌபூதியை விசாரித்தான்.

அவனைச் சௌபூதி தன் அரண்மனைக்கு முன்புறத்திலுள்ள மைதானத்திற்கு அழைத்துக்கொண்டு போனான். பெரிய சிங்கமொன்றை விஸ்தாரமான ஆவரணத்திற்குள் அடைத்து, அதன்மீது நான்கு நாய்களை ஏவினான். அவை மிகப் பலமாகச் சிங்கத்தைப் பற்றிக்கொண்டன. சௌபூதியின் ஆட்களிலொருவன் அந்நாய்களில் ஒன்றைக் காலைப் பிடித்து இழுக்க முயன்றான். சிங்கத்தை அந்த நாய் விடவில்லை. ஆகையால், அவன் அதன் காலை வெட்டியெறிந்தான். அப்படியும் சிங்கத்தை அது விடவில்லை. அதோடு

1. உப்பு மலைத்தொடர்; 'Salt Range'.

னில்லாமல் அவன் அந்த நாயை அங்கங்கே வெட்டிப் பல காயங்கள் செய்தான். அப்படிச் செய்தும் சிங்கத்தை விடு விக்க முடியவில்லை; நாய் அத்தனை காயங்களையும் பொறுத் துக்கொண்டு சிங்கத்தைப் பற்றியே இருந்தது.

"நாயை அவ்வளவு இம்சிக்காதே!" என்று அலெக் சாண்டர் உரத்து உரத்துத் தடுத்துக் கூவினான். அவனு டைய மெய்காவலர் ஓடிப்போய், மேலும் மேலும் நாயை வெட்டாமல் தடுத்தார்கள். இவ்வாறு அங்கச்சேதனம் செய்யப்பெற்ற நாய் ஒன்றுக்கு ஈடாக வேறு மூன்று கொடுப்பேனென்று சௌபூதி சொன்னான். இறந்துபோகிற வரையில் அந்த நாயை வேலையாள் நறுக்கிக்கொண்டிருந் தான். ஆயினும், நாய் சிங்கத்தை விடாமல், அதன் மீதே பிராணனைவிட்டது. அலெக்சாண்டரும் அவனுடைய தோழர்களும் அந்த நாய்களின் பிடிவாதத்தைக் கண்டு அதிசயித்தார்கள்.

"யஜமானனிடத்தில் இவ்வளவு விசுவாசம் காட்டுவதற் காக இந்த நாய்களுக்குக் கிடைக்கும் சம்மானம் என்ன?" என்று காய்னஸ் வினவினான்.

"கால்கள் நறுக்கப்பெறுகின்றன. ஐயோ, ராஜபக்தி மிகுந்த மக்களிற் பலருக்கும் இதே கதிதான்" என்று யூமினீஸ் சொன்னான்.

இந்தப் பிரஸித்தமான ஜாதி நாய்களில் ஆறை அலெக் சாண்டருக்குச் சௌபூதி கொடுத்தான். அவற்றையன்றி, தேகம் முழுமையும் மூடத்தக்க பொற்கவசம் ஒன்றையும் அளித்தான். அந்தக் கவசம் இரத்தினங்கள் இழைக்கப் பெற்றது. சௌபூதியினிடம் மிக்க திருப்தியும் சந்தோஷ மும் வாய்ந்தவனாய் அலெக்சாண்டர் அப்பட்டணத்தி னின்றும் நீங்கினான்.

இதற்கிடையில், ஹெபேயிஸ்டியன் வேறு அநேக நகரங்களை ஜயித்திருந்தான். அவன் வந்து அலெக்சாண்டரோடு கலந்தான். அதன்மீது அலெக்சாண்டர் பாகேலாவின் ஸம்ஸ்தானங்களின்மீது பாய்ந்தான். பாகேலா சரணமடைந்து, சௌபூதி செய்ததுபோல அவர்களை வரவேற்று இரண்டு நாள் வைத்துக்கொண்டிருந்து ராஜோபசாரங்களோடு விருந்து முதலானவை செய்தான். அவனுடைய ராஜ்யத்தை அவன் வைத்துக்கொள்ளும்படி அலெக்சாண்டர் விட்டுவிட்டான். ஹைபேஸிஸ் என்னும் நதிக்கரை வரையில் அவன் கிரேக்கர்களுடன் போய் வழியனுப்பினான். அது அரைமைல் அகலமும் 36 அடி ஆழமும் உள்ள ஆறு. அதில் நீரோட்டத்தின் வேகம் மிகக் கடுமை. ஆதலால், அதைக் கடப்பது கஷ்டம்.

அப்பாலுள்ள பிரதேசங்கள் எத்தன்மையவை என அலெக்சாண்டர் வினவியதற்குப் பாகேலா பின் வருமாறு சொன்னான்:

"இந்த நதிக்கு அப்பால் தெற்கே பெரிய பாலைவனமொன்று இருக்கின்றது. அதைக் கடந்து செல்வதற்கு 12 நாள் பிடிக்கும். அதற்குக் கிழக்கே பாலைவனத்திற்கப்பால் செழுமையான நிலங்களும் யமுனையாறும் கங்காநதியும் உள. அவைகளுக்கப்பால் பிராச்சியர்[1]களுடைய பலமான ஸம்ஸ்தானம் இருக்கின்றது. அதில் நந்த சந்திரமேசன் என்னும் ஔக்கிரசேனன்[2] அரசாட்சி புரிகின்றான். அவன் 20,000 குதிரைகள், இந்திரப்பிரஸ்தத்திற் கொண்டுவந்து சேர்த்து வைத்திருக்கிறான். அங்கே குழுமியிருக்கிற யானை

1. கீழ்த்திசையினர்; அதாவது மகத தேசத்தார்.

2. உக்கிரசேனனென்னும் மகாபத்மனுடைய மகன்.

களின் பிளிறொலி பல மைல் தூரம் வரையில் கேட்கின்றது என்கிறார்கள்" என்று சொன்னான்.

நந்தராஜனுடைய படைகளின் சங்கியையைப்பற்றிச் சொல்லியதை அலெக்சாண்டரால் நம்பமுடியவில்லை. பாகேலா சொல்லிய விவரம் சரியோவெனப் போரஸை அழைத்துக் கேட்டான். அவன் சொல்லியது சரியேயென உறுதி கூறிப் போரஸ், "இப்போதுள்ள அரசன் உபயோக மற்றவன். பிரஜைகளும் போராட்களும் அவனைப் பகைக்கிறார்கள். அவனுடைய தந்தை ஒரு நாவிதன்; ஆனால் அழகாயிருப்பான். முதலில் அந்நாட்டு ராணியை அவன் வசப்படுத்திக்கொண்டான். அவர்களிருவரும் சேர்ந்து அரசனை வஞ்சனையாகக் கொன்றார்கள். பிறகு அவ்வம்பட்டன் அரசனான். அவனுடைய மகன் இப்போது அரசனாயிருக்கிறான். அவனுடைய சேனை மற்ற விஷயங்களிற் பெரிதாகவும் பயங்கரமாகவும் இருக்கின்றதெனினும், அப்படிப்பட்ட பிரயோஜனமற்றவனும் பிரஜைகளின் சம்மதமின்றி வந்தவனுமான அரசனின் பொருட்டுச் சண்டை செய்யும் போது அவர்களைப்பற்றி நாம் அச்சங்கொள்ளவேண்டாம்" என்று சொன்னான்.

"யமுனையும் கங்கையும் எப்படிப்பட்ட நதிகள்? உண்மையில் அவை மிக அகலமானவையா? அவைகளைக் கடப்பது கஷ்டமா?" என அலெக்சாண்டர் கேட்டான்.

"அதற்குச் சந்தேகமில்லை. இந்தியாவுக்குள் அகலம் மிகுந்த ஆறு கங்கையே. அது இமயமலையில் உற்பத்தியாகின்றது. அதன் ஆழம் அளந்தறிய முடியாதது. நீரோட்டம் மிக விரைவானது" என்றான் போரஸ்.

அலெக்சாண்டர் சிறிது நேரம் ஆலோசித்துப் பார்த்தான். பிராச்சியர்களை வெல்வதற்குள்ள கஷ்டம் அசாத்திய

மென அவனுக்குத் தோன்றியது. ஆனால், தான் உலகத்தை ஆளப் பிறந்தவனென்னும் எண்ணத்தினால், ஊக்கங்கொண்டான். ஏனெனில் அவனை மற்றெவரும் வெல்லமுடியாதென டெல்பியிலுள்ள அபாலோ கோவில் 'ஆகாசவாணி' சொல்லியிருந்தாள். உலகம் முழுவதிலும் அவனுக்கு ஆட்சி அளிப்பதாக லிபியா பாலைவனத்து ஜூபிடர் கோவில் 'ஆகாசவாணி' வாக்களித்திருந்தாள்.

"எங்ஙனமிருப்பினும், போரஸும் கதேயர்களும் சேர்ந்து எவ்வளவு பயங்கரமானவர்களோ அதைக் காட்டிலும் இந்தப் பிராச்சியர்கள் அதிக பயங்கரமாக இருக்க முடியாது. இவர்களை நாம் வென்றுவிடலாமென நினைக்கிறேன். ஓர் அம்பட்டனுடைய மகனோடு போர்புரிவதற்கு நாம் அஞ்சுவானேன்?" என்று அலெக்சாண்டர் சொன்னான்.

---

## அத்தியாயம் 14

# ஆறுதாண்ட ஆட்கள் மறுத்தல்

கி. மு. 326-ஆம் ஆண்டு புரட்டாசி மாதத்தில் ஹைபேஸிஸ் ஆற்றங்கரையில் டோரா அடித்திருக்கையில் அலெக்சாண்டர் ஒரு நாள் காலை ஹெபேயிஸ்டியன், டாலமி, யூமினீஸ் என்பவர்களை நோக்கி, "இனி முன் செல்ல மறுப்பதற்கு வழி தேடவேண்டுமென்று நம் போராட்கள் இரகசியமாகக் கூட்டங்கூடிப் பேசிக் கொண்டிருக்கிறார்களாமே; அது என்ன சங்கதி? அவர்களெல்லாருக்கும் ஊக்கம் குறைந்து போகிறதென்று நினைக்கிறீர்களா?" என வினவினான்.

"அப்படித்தான் நினைக்கிறேன். யமுனைக்கரையில் 20,000 குதிரைப்படையும், 2,00,000 காலாட்படையும், 2,000 தேர்ப்படையும், 4,000 யானைப்படையும், பிராச்சியர்களும் கங்கா புத்திரர்களுமாகச் சேர்ந்து, கூட்டி வைத்துக் கொண்டிருக்கிறார்களென்று பாகேலா உங்களிடம் சொன்னான்; அது உண்மையெனப் போரஸும் சொன்னான்; அதுவன்றி, அந்நதிகள் செல்லும் வேகத்தையும், அவற்றின் ஆழத்தையும், அகலத்தையும் பற்றிச் சொன்னான். அதைக் கேட்டது முதல் நம்மவர்களுடைய மனம் பெரிதும் வாட்டமுற்றது.

" 'இங்கே கொள்ளையடித்து யதேஷ்டமான பொன்னும் பொருளும் பணமும் நமக்குத் தருவதாக அலெக்சாண்டர் வாக்களித்துள்ளார். இந்தக் காட்டுமிருண்டி

களிடமிருந்து பொன்னையும் விலையுயர்ந்த ரத்தினங்களை யும் நாம் கிரீஸுக்குக் கொண்டுபோய், அந்நாட்டின் செல் வத்தை வளர்ப்பதற்கில்லாமல் இவர்கள் தங்கள் நெல் வயல்களுக்கு எருவாகக்கொள்ளும்படி நம் பிணங்களை நாம் இந்நாட்டில் விட்டுப்போவோமென்றே தோன்றுகிறது' என்று நேற்றிரவு கூட்டங்கூடியிருந்த ஆட்களுக்கு ஒருவன் பிரசிங்கித்தான். மேலும், 'அஸ்பேஸியர்கள், அசுவகர்கள், மத்ரகர்கள், போரஸ், கதேயர்கள் ஆகிய இவர்களோடு நாம் பட்ட கஷ்டங்களும் துன்பங்களுமே போதுமானவை. இப்போது அசுவகர்கள் திரும்பக் கலகம் விளைக்க ஆரம்பித் திருக்கிறார்கள்; நாம் திரும்பி வீடு போய்ச் சேருவதற்கு வழியும் அபாயகரமாயிருக்கின்றது. நம்மை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிற பிராச்சியர்கள், கங்காபுத்திரர்கள் ஆகிய இவர்களுடைய பாம்புக்கடியை ஒப்பிட்டுப்பார்த்தால், இது வரையில் நாம் போராடிய சத்துருக்களின் எதிர்ப்பானது கொசுக்கடியைப் போன்றதே யாகுமெனத் தோன்றுகின் றது. உண்மையுரைப்போமாயின், இந்தியாவிலுள்ள சில ஸம்ஸ்தான நகரங்களையும் சிற்றரசுகளையுமே வென்றுள் ளோம். இனியே நந்தர்களுடைய ராஜ்யத்தோடு போர் புரியவேண்டியவர்களாயிருக்கிறோம். கிரீஸ் தேசத்தில் நமக்கு மாஸிடன் எப்படியோ அப்படி இந்தியாவில் நந்த ராஜ்யம் மிகப் பிரபலமானது. அதிலுள்ள யானைச்சேனைப் பந்தியே பேரணியாய் இருக்கின்றது. நமது நல்லதிர்ஷ்டத் திற்கு ஓர் எல்லை இருக்கவேண்டும். கள்வனொருவன் திருடப் புறப்பட்டபோது நற்சகுனம் நேர்ந்ததை ஆதார மாகக் கொண்டு, ஒரு பெரிய வீட்டினுட் புகுந்து, பொழுது விடியுமட்டும் சூறையாடிக் கொண்டிருக்கலாமா? எதிரில் நந்தர்களுடைய பெரும்படைகளும், பின்னால் கலகம்செய்து

ஏழும் சாதியார்களுமாகச் சேர்ந்து நம்மை இருபுறத்தி லும் நெருக்கியடித்து மேலெழாமற் செய்வார்களென்பது திண்ணம். நாம் ஒருபோதும் வீடுபோய்ச் சேரமாட்டோம். தாரையாய்ப் பொழிகிற மழையும் திகம்பரராய்த் திரிகிற துறவிகளும் நிறைந்த உற்சாகமில்லாத இந்நாட்டிலே மாண் டழிவதே நமது தலைவிதியாகும். நம்முடைய ஸ்வதேசத் திற்கு எப்போது போவோம், அவ்விடத்து நன்னிற மாந்தர் களை எப்போது காண்போம், நாகரிக முறைகளை எப்போது தொடர்வோம், பழக்கமான கொள்கைகளை எப்போது பாராட்டுவோம் என்று நாம் ஆவற்பட்டுக்கொண்டிருக் கிறோம். ஹைபேஸிஸ் என்னும் ஆற்றைக் கடந்து செல்ல நாம் மறுத்தல் வேண்டும்; இல்லையெனின், நம்மை யமுனைக் கரைக்கு இழுப்பார்கள். அங்கே எதிர்கரையிலுள்ள சத் துருக்களின் பலத்தைக் கண்டு பின்னிடுவது வெட்கக் கேடானமையின், அந்நதியையும் கடந்து அவர்களுடன் கை கலக்க வேண்டிவரும்' என்று அந்தப் பிரசங்கி அக்கூட்டத் திற் சொன்னான்" என்று ஹெபேயிஸ்டியன் மொழிந்தான்.

அந்தச் சமாசாரத்தைக் கேட்டு அலெக்சாண்டர், "இந்த மனச்சோர்வு மூண்டு பரவு முன், சேனாநாயகர்களைப் பார்த்துப் பேசி நான், சிறிதும் காலந்தாழ்க்காமல், தைரியம் ஊட்டவேண்டும்" என்று சொன்னான்.

உடனே அவன் படைத்தலைமை தாங்கும் அதிகாரி களெல்லாரையும் ஒருங்கு கூட்டிப் பின் வருமாறு அவர் களுக்குச் சொன்னான்:

"படை அதிகாரிகளே! உங்களுக்கு வழக்கமாயுள்ள ஊக்கத்தோடு சிறிது காலமாக நீங்கள் என்னுடன் ஆபத்துக் களுக்கு ஆளாகாமலிருந்துவந்திருக்கிறீர்களெனவும், இப் போது உங்களிற் சிலர் முன் செல்ல மனமில்லாதிருக்கிறீர்க

ளெனவும் எனக்குத் தெரிகிறது. ஆகையால், உங்களெல்லாரையும் இவ்விடம் கூட்டியிருக்கிறேன். நான் சொல்வதைக் கேட்டு நீங்கள் முழுமனத்தோடும் உற்சாகத்தோடும் முன் சென்றால் செல்லுங்கள்; அல்லது நம் தேசத்திற்குத் திரும்பிப் போம்படி சொல்லி என்னை இசையச்செய்தாலும் செய்யுங்கள். உங்களுடைய தலைவனாகிய என்மீது நீங்கள் குற்றங் கூறுவதானாலும், அல்லது இதுவரையில் நீங்கள் சாதித்த வெற்றிக் காரியங்களைப்பற்றிக் குறை கூறுவதானாலும், நான் மேலே சொல்வதற்கு ஒன்றுமில்லை. ஆனால், அப்படிக் குறை கூறுவதற்குரிய காரணம் உங்களில் எவருக்கும் இல்லையென நம்புகிறேன். அயோனியா, ஹெல்லஸ்பான்டு, பிரிஜியாக்கள் இரண்டு, கப்படோக்கியா, பாப்லகோனியா, லிடியா, கரியா, லிகியா, பாம்பிலியா, பினீஷியா, எகிப்து, லிபியா, அரேபியா, ஸிரியா, மெசபொடோமியா, பாபிலோனியா, அஸ்ஸிரியா, சௌஸியானா, பாரஸிகம், மெடியா, சோக்டியானா, பாக்டிரியா என்னும் நாடுகளையும், வேறு பல நாடுகளையும் நீங்கள் வென்று வந்திருக்கிறீர்கள். இவையன்றி, காஸ்பியன் வாயிலுக்கும், காகஸஸுக்கும், ஹிர்க்கேனியக் கடலுக்கும் அப்பால் உள்ள தேசங்களையும் வென்றிருக்கிறீர்கள்; ஸிதியர்களை அவர்களுடைய பாலைவனத்திற்குள் ஓட்டியடித்திருக்கிறீர்கள். இங்கேயோவெனின், ஸிந்து நதி, ஹைடாஸ்பஸ், அகேஸினீஸ், ஹைட்ரோடீஸ் என்னும் ஆறுகள் பாயும் நாடுகளெல்லாம் நம்முடையனவே. ஹைபேஸிஸ் ஆற்றையுங் கடந்து அதற்கப்பாலுள்ள சாதியாரின் நாடுகளையும் உங்கள் வெற்றிவரிசையிற் சேர்த்துக்கொள்ள ஏன் தயங்குகிறீர்கள்? இதுவரையில் நம்மை எதிர்த்துப் போராடிய காட்டுமிருண்டிச் சாதியார்களிற் சிலர் இணங்கிச் சரண

மடைந்தார்கள்; தப்பி யோடிப் போனவர்களைச் சிறைப் பிடித்து விட்டோம்; வேறு சிலர் தங்கள் தேசத்தையே நமக்கு ஒப்பித்துவிட்டு ஓடிப் போனார்கள். அந்தத் தேசத்தை நம் இஷ்டம் போல நம் துணையரசர்களுக்கேனும், தாமாக வணங்கி வந்த சிற்றரசர்களுக்கேனும் பங்கிட்டுக் கொடுப்பதற்காகும். இவர்களல்லாமல், இன்னும் வேறு காட்டுமிராண்டிச் சாதியார்கள் இருக்கிறார்களென்றும் அவர்கள் உங்களை எதிர்த்து வெல்வார்களென்றும் அஞ்சுகிறீர்களா?

"என் அபிப்பிராயத்தைக் கேட்டாலோ, 'என்ன பயன் நேர்ந்தாலும் நேரட்டுமெனப் பிரதாப காரியங்கள் செய்வதைக் காட்டிலும் வீரனுக்குரிய உயர் நோக்கம் வேறு இல்லை' என்பேன். ஆனந்தமெல்லாம் முயற்சியிலேயே இருக்கின்றது; முயற்சியே மகிழ்ச்சி. ஆனால், இப்போது என் நோக்கத்தின் எல்லையை அறிய விரும்புவீர்களானால், அது, இந்தப் படையெழுச்சியில் கங்காநதியையும் கீழ்க்கடலையும் எட்டவேண்டுமென்பதேயாம். அவை இவ்விடத்திலிருந்து வெகுதூரமில்லை. மகா ஸமுத்திரம் உலகத்தைச் சூழ்ந்து கொண்டிருக்கிறது. ஆதலால், நாம் கீழ்க்கடல் என்று சொல்கிறோமே அது இந்திய வளைகுடாக் கடலே என்னலாம். அது பாரஸிக வளைகுடாக் கடலோடு சம்பந்தப் பட்டிருக்க வேண்டும். அந்தப் பாரஸிக வளைகுடாக்கடல் ஹிர்க்கேனியக் கடலுக்கும் ஹெராகிளீஸ் ஸ்தம்பங்களுக்கும் சம்பந்தப்பட்டிருக்க வேண்டும். ஆகையால், பூமண்டலத்தின் எல்லைகளே நமது சாம்ராஜ்யத்தின் எல்லைகளாகிய பின்னர், நாம் இந்திய வளைகுடாக்கடலிலிருந்து லிபியாவுக்குக் கப்பலேறிச் செல்லலாம்.

"இப்பொழுது நாம் பின் திரும்புவோமானல், ஹைறபெலிஸுக்கும் கீழ்க்கடலுக்கும் இடையிலுள்ள போர்வீரர்களான அநேக ஜாதியார்களேயும், இவைகளுக்கும் ஹிர்க்கேனியாவுக்கும் வடக்கிலுள்ள பல ஜாதியார்களேயும், அவர்களுக்கு அக்கம்பக்கத்திலுள்ளவர்களேயும், ஸிதியக் குலத்தார்களேயும் வெல்லாமல் விட்டுப் போக வேண்டி வரும். அதுவன்றி, இதுவரையில் நாம் ஜயித்துள்ள தேசத்தார்கள் ஏற்கெனவே நம்மீது ராஜபக்தி குறைந்து சஞ்சலப்பட்டுக் கொண்டிருக்கிறுர்கள். அப்படிப் பட்டவர்களே, நம் ஆட்சிக்குட்படாமல் இன்னும் சுதந்தரமாயிருக்கிறவர்கள், தூண்டிவிட்டுக் கலகம் விளைக்கு மாறு செய்வார்கள். நாம் இத்தனை நாள் பாடுபட்டதெல்லாம் வீணுய்ப்போகும்; இல்லையெனினும், பல புதிய கஷ்டங்களுக்கும் அபாயங்களுக்கும் ஈடு கொடுக்க வேண்டி வரும். ஆதலினுல், மாஸிடோனியர்களே! துணைவர்களே! விடாமல் ஊக்கங்கொள்ளுங்கள்; உங்களுக்குச் சிறப்பும் கீர்த்தியும் வாய்க்கும். வீரச்செயல் மிகுந்த வாழ்வே இனிமையானது. அதுபோலவே அழியாப் புகழ் படைத்துச் சாவதும் இனிமையே. என் முன்னவரான ஹேறராகிளீஸை உங்களுக்குத் தெரியுமல்லவா? அவர் மானிடராயிருந்தும் தெய்வமாகக் கொண்டாடப் பெறும் பெருமையும் கீர்த்தியும் பெற்றது எதனுல்? அவர் டிரின்ஸிலாவது ஆர்க்காஸிலாவது வீட்டுக்குள்ளே உட்கார்ந்திருந்ததனுலல்லவே? டயோனிஸியஸ் தேவாம்சமுள்ளவராகவே பிறந்திருந்தபோதிலும், எவ்வளவோ கஷ்டங்கள் படவேண்டியிருந்தது. டயோனிஸியஸைப் போல நாம் நைஸாவை வென்றுள்ளோம். ஹேறராகிளீஸும் பிடிக்க முடியாத அயர்நாஸைப் பிடித்துவிட்டோம். நாம் மாஸி

டோனியாவிலேயே இருந்து நம்மை எதிர்க்கும் திரேஸியர், இல்லீரியர், திரிபாலியர் ஆகிய இவர்களையும், நம்முடன் நட்புக்கொள்ளாத கிரேக்கர்களையும் எதிர்த்துப் போராடித் துரத்திக்கொண்டே இருப்போமானால், என்றென்றைக்கும் ஞாபகத்தில் இருக்கத்தக்க பிரதாபமான இந்தக் காரியங்களை யெல்லாம் சாதித்திருக்க முடியுமா?

"ஆதலால், மனச்சோர்வை உதறித் தள்ளுங்கள்; ஏற்கெனவே ஜயித்திருக்கிற பெரும் பிரதேசத்தோடு, பாக்கியாயிருக்கிற சிறு பிரதேசத்தையும் சேர்த்துவிட்டு ஆசியா கண்டம் முழுமையும் ஜயித்தவர்களாகுங்கள். உங்களை மாத்திரம் ஆபத்துக்களுக்குள்ளாக்கி நான் உள்ளாகாமல் பின்தங்கி இருந்தேனேயானால், போர்க்கொள்ளைப் பொருளில் உங்களுக்குப் பங்குகொடாமல் மறைத்திருந்தேனேயானால் நீங்கள் குறை கூறுவதற்கு இடமுண்டு. அப்படிச் செய்யாமல் உங்களுச்கு நேர்ந்த ஆபத்துக் களுக்கு நானும் எப்போதும் உள்ளாயிருக்கிறேன். கொள்ளைப்பொருள்களையும், உங்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்திருக்கிறேன். ஏனெனில், இந்த நாடு உங்களுடையது. நீங்களே மண்டலேசர்களாக இருந்து இதை ஆளத் தக்கவர்கள். இவ்விடத்துத் திரவியங்களிற் பெரும்பகுதி உங்களுக்கே கொடுத்திருக்கிறேன். ஆசியா முழுதையும் கைவசப்படுத்திக்கொண்டால், தெய்வ சாக்ஷியாக, உங்களைச் சாமானியமாகத் திருப்திப்படுத்துவதல்லாமல், உங்களில் ஒவ்வொருவருக்குமுள்ள எண்ணங்களுக்கும் ஆசைகளுக்கும் அதிகமாகச் சம்மானங்கள் சிறக்கச் செய்வேன். ஊருக்குத் திரும்பிப் போகவேண்டுமென விரும்புகிறவர்கள் எவரேனும் உண்டானால், அப்படிப்பட்டவர்களை அனுப்பிவிடுகிறேன்; அல்லது, நானே கொண்டுபோய் விடு

கிறேன். ஆனால், இங்கே தங்கியிருக்கிறவர்களைப் பார்த்துத் திரும்பி ஊர் போய்ச் சேருகிறவர்கள் வயிற்றெரிச்சற்படும் படியாகச் செய்வேன். இவ்விஷயத்தைப்பற்றிப் பேச விரும்பு கிறவர் எவரேனும் இருந்தால் பேசுங்கள். ஊருக்குத் திரும்பிப் போகவேண்டுமென்கிறவர்களும் அவ்வெண் ணத்தை வெளிப்படையாகச் சொல்லுங்கள். திரும்பிப் போகும்படி என் மனத்தையும் திருப்புங்கள்."

நெடுநேரம் எல்லோரும் மௌனமாயிருந்தார்கள். எவ ரும் தங்கள் அரசனை நேருக்கு நேரே எதிர்த்துப் பேச விரும்பவில்லை. ஆனால், அவனுடைய வார்த்தையை ஏற்று எவரும் உற்சாகங்கொண்டு எழவில்லை.

துக்கம் மூண்டவனாய் அலெக்சாண்டர், "உங்களுக்கு வழக்கமாயுள்ள ஆரவாரம் எங்கே போயிற்று? உங்களுக்கு இயற்கையான சுறுசுறுப்புக்குறியாகிய மனவெழுச்சி என்ன ஆயிற்று? என் மாஸிடோனியர்களின் உல்லாச முகங்கள் எங்கே ஒளிந்தன? நீங்கள் என்னுடைய போர்வீரர்களாகக் காணப்படவில்லையே; என்னை அலெக்சாண்டர் என்னும் தலைவனாக நீங்கள் தெரிந்துகொள்ளவில்லையெனவும் தோன்றுகிறதே. நான் இதுவரையில் சொல்லியது குட்டிச் சுவரில் முட்டிக்கொண்டது போலாயிற்றே; செவிடன் காதில் ஊதிய சங்கு போலாயிற்றே. ராஜபக்தியற்றுப் பேடிப்பயத்தினாற் பீடிக்கப்பெற்றவர்களைப் பார்த்து நான் முறையிட்டுக் கொண்டேன் போலும்" என்றான்.

தலைநாயகர்கள் முகத்தைத் தொங்கப்போட்டுக் கொண்டு மௌனமாயிருந்தார்கள்.

பின்னும் அலெக்சாண்டர் சொல்லுவான்: "நீங்கள் என் முகத்தைக்கூடப் பார்க்கப் பிரியமில்லாமலிருக்கிறீர்

களாதலால், எனக்குத் தெரியாமல் நான் ஏதோ உங்கள் மனத்தைப் புண்படுத்தியிருக்கவேண்டுமெனத் தோன்று கிறது. நிர்மானுஷியமான காட்டில் நான் தனியே நின்று புலம்புகிறவனுயிருக்கிறேன். எனக்குப் பதிலளிப்பார் எவரு மில்லை. நான் சொல்வது சரியல்லவென மறுத்துச் சொல் வாரும் இல்லையே. முன்பின் தெரியாத பிறரோடா பேசிக்கொண்டிருக்கிறேன்? அநியாயமானது எதற்கேனும் உரிமை கொண்டாடுகிறேனு? உங்கள் பெருமையையும் பிர தாபத்தையும் நாட்டுவதற்கே நான் இவ்வளவு பாடுபடு கிறேன். உங்களிற் சிலரேனும் எழுந்து, சிறிதும் பயப்படா மல், உங்கள் மனத்திலுள்ளதை வெளியிட்டுப் பேசுவீர் களாக. 'ஊமைக்கு உளறுவாயன் சண்டப்பிரசண்டன்' என்பார்கள். அதுபோல, இந்த மௌனத்தைக் காட்டி லும் பேசுவது எதுவானுலும் மேன்மையாக இருக்கும்" என்றான்.

அதன் மீது காய்னஸ் எழுந்து பின்வருமாறு மெல்லப் பேசலானன்:

"படையினரின் அபிப்பிராயத்தை அறிய விரும்புகிறீர் களாதலால், ஓ அரசரே, நம் படைகளிற் பெரும்பான் மையோர் சார்பாகப் பேச நான் துணிகிறேன். உங்களிடம் உண்மையை ஒளிக்கலாகாதென நானும் மற்றச் சேனுநாயகர் களும் நினைக்கிறோம். எனது சொந்த க்ஷேமத்தைக் கருதி நான் பேசவில்லை, உங்கள் நன்மையைக் கருதியே பேசு கிறேன் என்பதற்கு எனது வயதும் ராஜ விசவாசத்தோடு கூடிய சேவையுமே போதிய அத்தாட்சியாகும். உங்கள் வீரச்செயல்களின் சங்கியையையும் அவற்றின் மகத்துவத் தையும் நினைக்க நினைக்க, நம் உழைப்புக்களுக்கும் ஆபத்துக் களுக்கும் ஓர் எல்லை வகுப்பது உசிதமென எனக்குத்

தோன்றுகிறது. உங்களுடன் எத்தனை மாஸிடோனியர்களும் கிரேக்கர்களும் புறப்பட்டார்கள்? இப்போது எவ்வளவு கொஞ்சம்பேர் மிகுந்திருக்கிறார்களென்பதைப் பாருங்கள். நம்முடன் வர மனமில்லாதவர்களெனத் தெரிந்து தெஸ்ஸேலியர் முதலானவர்கள் அநேகரைப் போகச் சொல்லிவிட்டோம். காயம்பட்டவர்கள் அநேகரைத் திருப்பியனுப்பிவிட்டோம். காட்டுமிராண்டித் தேசங்களில் நீங்கள் ஸ்தாபித்துள்ள பல நகரங்களிலும் அநேகரை, அவர்கள் இஷ்டப்படாதிருக்கும்போதே, குடி வைத்திருக்கிறோம். போரிற் பலர் மடிந்தனர்; நோய்ப்பட்டுப் பலர் மாண்டனர். மீதி இருக்கிறவர்கள் என்ன துர்த்தசையில் இருக்கிறார்கள்! எங்கள் உடம்பில் இரத்தம் இருக்கின்றதா பாருங்கள்: எத்தனை அம்புகள் துளைத்திருக்கின்றன! வாய் பிளந்து கொண்டிருக்கும் கத்தி வெட்டுக் காயங்கள் எத்தனை!

"எங்கள் ஆயுதங்களெல்லாம் இப்போது மொண்ணையாய்ப் போயின. எங்கள் இரும்புக்கவசங்கள் காலக்கிரமத்தால் தேய்ந்துபோயின. கவசமற்றுக் காப்பாயுதமற்று நிற்கிற இந்தச் சைனியத்தைக் காட்டுமிராண்டிகளான மிருகங்களின் கருணைக்கு ஆளாக்க நீங்கள் நினைக்கலாமா? அந்த மிருகத்தன்மை வாய்ந்தவர்களின் சங்கியையை வேண்டுமென்றே நமக்கு மிகைப்படுத்திக் கூறுகிறார்களென்றே சொன்னபோதிலும், அவர்களுடைய சங்கியை அதிகமாகவே இருக்கிறதென்று அந்தப் பொய்ம்மொழிகளினின்றே எனக்குத் தெரிகிறது. பீடை பிடித்தாற்போல ஓயாமல் மழை பெய்துகொண்டிருக்கின்றது; எங்கள் ஆடைகளெல்லாம் நாட்பட்டுக் கரைந்து கிழிந்துபோனமையின், இந்திய வஸ்திரங்களை

நாங்கள் உடுக்கவேண்டியதாயிருக்கின்றது. சுற்றுமுற்றும் எங்கே பார்த்தாலும் புதுமையாகவும் பகைமையாகவுமே இருக்கின்றது. இந்தக் காரணங்களினால், எங்கள் மனம் துன்புறுகிறது. பகலிலோ வெயில் பொசுக்குகின்றது, இரவிலோ கெட்ட கனவுகளும் கோரமான காட்சிகளும் கூளிக்கூத்துக்களும் அச்சுறுத்துகின்றன; நரிகள் ஊளையிடுகின்றன. தாய் தந்தையர் இருப்பவர்கள் அவர்களைப் போய்ப் பார்க்கவேண்டுமென்று ஆவல் கொண்டிருக்கிறார்கள். பெண்டு பிள்ளைகளைப் பார்க்கவேண்டும், ஸ்வதேசத்தைக் காணவேண்டும், எந்தக் கிராமத்திலிருந்து எளிமை வாய்ப்பட்டு இருந்த இடம் தெரியாமல் உழன்று வெளிப் போந்தார்களோ அந்தக் கிராமத்துக்குச் செல்வமும் சிறப்பும் கீர்த்தியும் வாய்ந்து திரும்பிப் போகவேண்டும் என அவர்கள் ஆசைப்படுகிறார்கள். இந்த ஆசை அநியாயமானதன்று; எல்லாரும் இயல்பாகக் கொள்ளும் ஆசையே.

"ஓ அரசரே! ஜனங்களுடைய இஷ்டத்திற்கு விரோதமாக அவர்களை முன் தள்ள முயலாதீர்கள். ஏனெனில், சத்துருவோடு அவர்கள் மனமில்லாமற் போராடுவார்களானால், ஆபத்தான இக்கட்டுக்களில் முன்னிருந்த வீரமும் தீரமும் அவர்களிடம் காணமுடியாது. உங்களுக்குச் சம்மதமானால் நீங்களும் எங்களோடு நம் ஊருக்குத் திரும்பி வாருங்கள். உங்கள் தாயாரைத் திரும்பிப் பாருங்கள், கிரேக்கர்களுடைய வியவகாரங்களைப் பரிஷ்கரியுங்கள். பல்வாகவும் பெரியனவாகவுமிருக்கிற உங்கள் வெற்றிகளை உங்கள் முன்னோர் இருந்த இடத்திற்குக் கொண்டு போய்ச் சேருங்கள். அதற்குப் பிறகு, மனம் வந்தால் இந்தப் பிராச்சியர்களின்மீது புதிதாகப் படையெடுக்கவேண்டிய ஏற்பாடுகளைச் செய்யலாமே. அப்போது வேறு மாஸிடோனியர்களும் வேறு கிரேக்கர்

களும் உங்கள் பின்னோடு வருவார்கள். உழைத்து ஓய்ந்து ஒடுங்கிய கிழவர்களுக்குப் பதிலாக அவ்விளைஞர்கள் யௌவனத்திற்குரிய பலம் பொருந்தியவர்களாக இருப்பார்கள். யுத்தம் இன்னதென்றும் இப்படிப்பட்டதென்றும் தெரியாமையின், போருக்கு இப்போதே பயப்படமாட்டார்கள். நல்ல சம்மானங்கள் பெறவோமென்னும் ஆசையினால் வீட்டை விட்டு வெளியேற ஆவல் கொண்டிருப்பார்கள். இந்தப் படையெழுச்சியில் உங்களோடு வந்தவர்கள் ஊரும் பேரும் தெரியாத பாமரராயிருந்தும் செல்வவான்களாகித் தம் ஊருக்குத் திரும்பி வந்து பிரபுக்களெனச் சிறந்து விளங்குவதைப் பார்த்து அவர்கள் உங்களுடன் உற்சாகத்தோடு வருவதற்கு முற்படுவர்.

"மன்னர்பிரானே! 'அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் விஷமாகும்.' வெற்றி வைபங்களினிடையே திருப்தியடைந்து முன்செல்லாமை குணங்களிற் சிறந்த நற்குணமாகும். 'போதுமென்னும் மனமே பொன்செய்யும் மருந்து.' அப்படிப்பட்ட சேனைத்துணை இருப்பதனால் மானிட சத்துருக்கள் எவராலும் உங்களுக்குப் பயம் இல்லையெனினும், தேவர்களின் அனுக்கிரகத்தை அதிகமாகப் பரீக்ஷித்துப் பார்க்காதீர்கள். ஏனெனில், தேவ தண்டனை எப்போது வருமெனச் சொல்ல முடியாது. அது வருமானால், தடுக்கவும் முடியாது."

காய்னஸ் விவரம் விவரமாகக் காரணங்களை எடுத்துக் கூறியவுடனே அங்கே குழுமியிருந்த படைத்தலைவர்களெல்லாரும் கரகோஷம் செய்து ஆர்ப்பரித்தார்கள். அவர்களிற் பலருடைய கண்களினின்று தாரை தாரையாக நீர் பெருகியது. அலெக்சாண்டருக்கு உண்டான ஆக்

ரோஷம் அதிகமாயிருந்தது. அந்தக் கடுங்கோபத்தில் அவன் அந்தக் கூட்டத்தைக் கலைத்து விட்டான்.

மறுநாள் படைத் தலைவர்களெல்லாரையும் திரும்ப வரவழைத்து அவன் கீழ்க்கண்டவாறு சொன்னான்:

"போரிற் காயமுண்ட தங்கள் அரசனுடைய சரீரத்தை நானே ஏற்பேன் நானே ஏற்பேனென்று அன்றைத்தினம் ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக் கொண்டிருக்க நான் கண்டேனே. அவர்களெல்லாரும் எங்கே? என்னை எல்லாரும் விட்டோடினார்கள்! எல்லாரும் கை விட்டார்கள்! சத்துருவின் கையில் என்னை ஒப்பித்து விட்டார்கள். நான் தன்னந் தனியே சண்டைக்குப் போகவேண்டியவனாயிருந்தபோதிலும், நான் சண்டைக்குப் போகத்தான் போவேன். அப்படி உங்களுக்கு இஷ்டமானால் ஆறுகளைக் கடக்கும் ஆபத்துக்களுக்கும், யானைகளின் மூர்க்கமான கோபத்திற்கும், எவர் பேரைச் சொன்ன மாத்திரத்திலே உங்களுக்குத் திகில் உண்டாகிறதோ அந்தச் சாதியாரின் கொடுமைக்கும் என்னை உள்ளாக்குங்கள். மாஸிடோனியர்கள் எவரையும், அவர்களுடைய இஷ்டத்திற்கு விரோதமாக, என்னுடன் வரும்படி கட்டாயப் படுத்த மாட்டேன். விரும்புகிறவர்கள் வீட்டுக்குத் திரும்பிப் போகலாம். போய், 'நாங்கள் திரும்பிவந்துவிட்டோம். எங்கள் அரசனைச் சத்துருக்களின் மத்தியில் விட்டுவிட்டோம்' என்று தங்கள் நண்பர்களுக்குச் சொல்லிக் கொள்ளலாம். நீங்கள் என்னைக் கைவிட்டு ஓடிப்போனபோதிலும் என்னுடன் வரத் தக்க ஆட்கள் எனக்குக் கிடைப்பார்கள். ஸிதியர்கள், பாக்டிரியர்கள், பஞ்சாபு மாகாணத்து இந்தியர்கள் ஆகிய இவர்களெல்லாம் முன்பு நமக்கு எதிரிகளாய் இருந்தார்கள்; இப்போது நம் படையாட்களாய் இருக்கிறார்கள்.

இவர்கள் என்னுடன் இன்னும் இருப்பார்கள். நீங்களாகப் பார்த்துத் தயைகூர்ந்து வைத்த சேனாநாயகனைக நான் இருப்பதைக் காட்டிலும், இறப்பதே நன்று. இதுவே என் தீர்மானம். இனி உங்கள் வீட்டுக்கு ஓடிப் போங்கள், 'எங்கள் அரசனைக் கைவிட்டு வந்துவிட்டோம்' என்று பெருமை அடித்துக் கொள்ளுங்கள். நானோ, வாய்க்கா தென் நீங்கள் அஞ்சுகிற வெற்றியை அடைவேன்; அல்லது அவ்வெற்றியை பெறும் முயற்சியில் மடிவேன்!"

இந்த வார்த்தைகளைச் சொல்லிவிட்டு அலெக்சாண்டர் தன் கூடாரத்துக்குள் புகுந்து கொண்டான். எவரும் வந்து தன்னைப் பார்க்க இடங்கொடுக்கவில்லை. தோழர்களும் தன்னை அணுக விடவில்லை. இவ்வாறு மூன்று நாள்வரை அடைத்துக் கொண்டிருந்தான். இதற்குள்ளாக ஜனங்களுடைய மனம் மாறித் தன் பக்ஷமாகத் திரும்புமென நினைத்துக் கொண்டிருந்தான். ஆனல், அப்படிப்பட்ட மாறுபாடொன்றும் நிகழவில்லை. தங்கள் அன்புக்குரிய தலைவனது விருப்பத்திற்கு விரோதமாகத் தாங்கள் நடக்கவேண்டி வந்ததை யெண்ணிப் பெரிதும் அவர்கள் துக்கத்தில் ஆழ்ந்தார்களே யல்லாமல், இனிப் போர்முனை செல்வதில்லை யென்னும் தீர்மானத்திற் சலனமுறவில்லை. அவர்களுடைய மனம் மாறுமென்று எண்ணுவதிற் பயனில்லை யென மூன்றும் நாள் அலெக்சாண்டர் கண்டு கொண்டான். அதன்மீது ஹைபேஸிஸ் நதியைக் கடந்து செல்லும் நோக்கத்தோடு தேவதைகளுக்குப் பலி பூஜை போட்டான். இப்படிப் பூஜை போட்டு வரம் கேட்பது நம்மவர்களுக்கும் வழக்கமா யிருக்கின்றதன்றோ? யாத்திரை போக வேண்டுமானாலும் வேறு பெருங்காரியம் செய்ய வேண்டுமானாலும், நம்மவர்கள் தங்கள் குல தெய்வத்திற்குப்

பூஜைபோட்டு உத்தரவு வேண்டுவார்கள். அந்த உத்தரவைக் குலதேவதை சிற்சில குறிகளின் மூலமாகவே கொடுக்கும். நற்குறி கிடைத்தாலன்றி, அவர்கள் எண்ணிய காரியத்தில் இறங்க மாட்டார்கள். இந்தியச் சம்பிரதாயமே கிரீஸ் தேசத்திலும் பெரும்பாலும் வழங்குவதனல் அலெக்சாண்டர் இவ்வாறு பலி பூஜை போட்டுத் தன்னுடைய படையாத்திரைக்கு உத்தரவு கேட்டான். தேவதைகள் நல்லசகுனம் உண்டாகும்படி செய்யவில்லை. மிகப் பழமையாயுள்ள தன் ஸகாக்களையும் சிநேகிதர்களையும் அழைத்து அவன், "நான் திரும்பிப் போகத் தீர்மானித்து விட்டேன்" என்று சொன்னன். இந்த வார்த்தையைக் கேட்டவுடன் படையினரெல்லாரும் பெருமகிழ்வுற்றுப் பெருங் கூச்சற்போட்டு ஆரவாரித்து ஆனந்தக் கண்ணீர் பெருக்கிக் கொந்தளித்தார்கள். மகிழ்ச்சியின் மகத்துவத்தால் மெய்ம்மறந்து மருண்டு, "எங்களாலேயே உங்கள் சங்கற்பத்தைக் கைவிட இசையலானீர்கள்" என்று தளகர்த்தர்களும் சிறு படைத்தலைவர்களும் படையாட்களும் கூவினார்கள்.

பின்பு, அலெக்சாண்டர் சேனையைப் பன்னிரண்டு பட்டாளங்களாகப் பிரித்தான். ஹைபேஸிஸ் நதிக் கரையிலிருந்த ஒரு குன்றின்மீது, ஒவ்வொன்றும் 75 அடி உயரமுள்ளதாகப் பன்னிரண்டு பலிபீட வேதிகைகளை அமைத்தான். இதுவரையில் தங்களுக்கு வெற்றி யளித்துவந்ததற்காகத் தேவதைகளுக்கு நன்றி செலுத்தும் குறியாக அவ்வேதிகைகளை நிருமித்தான். இவைகளை அமைத்த இடத்திற்கு அலெக்சாண்டர்கிரி எனப் பெயரிட்டான். அவ்வேதிகைகளின் நடுவில் வெண்கல ஸ்தம்பமொன்றை நிறுத்தினன். வேதிகைகளின் மீது,

'என் தந்தையாராகிய ஆமனுக்கு', 'என் சகோதரராகிய ஹெராகிளீஸுக்கு', 'ஞானஸ்வரூபியாகிய அதீனவுக்கு', 'ஒலிம்பிய பர்வதத்து ஜீயஸுக்கு', 'சமோதரேஸிலுள்ள காபிரிகளுக்கு', 'இந்திய ஹெலியாஸுக்கு', 'என் சகோதரர் அபாலோவுக்கு' என்னும் சாசனங்களைச் செதுக்குவித்து, அவரவருக்கு அர்ப்பணம் செய்தான். வெண்கல ஸ்தம்பத்தின் மீது, "இங்கே அலெக்சாண்டர் தங்கினர்" எனச் சாசனம் பதிப்பித்தான். (தமிழ் நாட்டிலுள்ள 'சோழவந்தான்' என்னும் ஊர் 'சோழன் இதுவரையில் வந்தான்' எனத் தெரிவிப்பதற்காக அவன் அமைத்த தேயல்லவா?) வழக்கமாயுள்ள முறைப்படி அந்த வேதிகைகளின்மீது பலிகள் சமர்ப்பித்தான். குதிரைச் சவாரி வரிசைகளும் மற்போர் போட்டிகளும் அவ்விடத்தில் நிகழ்ந்தன. காலாட்படையினர் வசிப்பதற்கென்று விடுதிகள் கட்டுவித்தான். அந்த விடுதிகள் ஒவ்வொன்றிலும் $7\frac{1}{2}$ அடி நீளமுள்ள படுக்கை அமைத்தான்; ஒவ்வொரு குதிரைவீரனுக்கும், சாதாரணமாயுள்ளதைக் காட்டிலும் இருமடங்கு விரிவுள்ள லாயம் அமைத்தான். இப்படிச் செய்ததன் கருத்து என்னவெனின், பிறநாட்டிலிருந்து வந்து வென்றவர்கள் சாமானிய மானிடரல்லர், ஆஜானுபாகுக்களான பேருடல் வாய்ந்த பலபராக்கிரமிகள் என்று இந்நாட்டார் நினைக்க வேண்டுமென்பதேயாம்.

அர்ஷகேசனும் பிரத்யும்னனும் மறுபடி வந்து விலையுயர்ந்த பொருள்களையும் 30 யானைகளையும் அலெக்சாண்டருக்குக் காணிக்கையாகக் கொடுத்தார்கள். அபிசாரனுக்கு உடம்பு சௌக்கியமில்லை யெனச் சொன்னர்கள். உடம்பு அசௌக்கியம் என்னும் வார்த்தையை அலெக்சாண்டர் ஏற்றுக்கொண்டு, அபிசாரனை அவனுடைய ராஜ்யத்திற்கே

அதிபதியாக ஊர்ஜிதப்படுத்தினன்; அர்ஷகேசனை அவனுக்கு உட்பட்ட சிற்றரசாக்கினன். அபிசாரன் கப்பங் கட்டவேண்டிய தொகை இவ்வளவென நிர்ணயித்தான். மற்றும், ஹைடாஸ்பஸுக்கும் ஹைபேஸிஸுக்கும் இடையிலுள்ள பூமிக்கெல்லாம் போரஸைப் பேரரசாக்கினன். அதற்குப்பின் ஹைட்ரோடீஸுக்குத் திரும்பிப் போனன். அங்கிருந்து அகேஸினீஸுக்குப் போய், அங்கே ஹெபேயிஸ்டியன் கட்டிப் பலப்படுத்தியிருந்த நகரத்தைப் பார்வையிட்டான். இனிப் போர்ச் சேவகத்திற்கு உதவாதிருந்த கிரேக்கக் கூலிப்படையாட்களை அங்கே குடிவைத்தான்; அங்கே குடியேற விரும்பிய சுற்றுப்புறத்துக் கிராமத்தார்களையும் வந்து இருக்கச் சொன்னன். அங்கிருந்து ஹைடாஸ்பஸ் ஆற்றங்கரைக்குப் போய், மழையினல் நிகேலா என்னும் பட்டணத்திற்கும் புக்கிபேலா என்னும் பட்டணத்திற்கும் உண்டாயிருந்த சேதங்களைத் தன் படையாட்களைக் கொண்டு செப்பனிட்டான். ஸிந்து நதியின்வழியே போவதற்கான படகுகளுக்கும், வென்றுள்ள இந்திய ஸம்ஸ்தானங்களின் விஷயங்களைப் பரிஷ்கரிப்பதற்காகத் தர்பார் கூட்டுவதற்கும் வேண்டிய ஏற்பாடுகளையும் செய்தான். அந்தச் சமயத்தில் கிரீஸிலுள்ள திரேஸ் என்னும் பிரதேசத்திலிருந்து மேம்னன் (Memnon) என்பவன் புக்கிபேலாவுக்கு வந்து சேர்ந்தான். அவன் தன்னுடன் 5,000 குதிரைப் படை, 7,000 பதாதிப்படை, பொன்னும் வெள்ளியும் இழைத்த 25,000 போர்க்கவசங்கள் கொண்டு வந்தான்.

"இந்த உபபலங்களோடு நீ ஹைபேஸிஸுக்கு வந்திருந்தாயானல், போர் வீரர்கள் படையெடுத்து முன் செல்ல இசைந்திருப்பார்கள். ஆனல், சகுனங்களும் பிரதி

கூலமாயிருந்தன'' என்று அலெக்சாண்டர் சொன்னான். பிறகு அந்தப் புதிய போர்க்கவசங்களைப் படையாட்களுக்குக் கொடுத்தான்.

புக்கிபேலாவில் பிரத்யும்னனைப் பார்த்து அர்ஷகேசன் பின்வருமாறு சொன்னான்: "இந்த அலெக்சாண்டர் பெரிய மனோராஜ்யக்காரன். இவன் கட்டுகிற மனக்கோட்டைகள் நிஜமானவை யெனப் பிறருக்குச் சொல்வதல்லாமல், தானும் நினைத்து ஏமாறுகிறான். அபிசாரன் உண்மையிலே நோய்ப் பட்டுக் கிடக்கிறானென இவன் நினைத்துத் தன் மனத்தைத் திருப்தி படுத்திக்கொண்டிருக்கிறான். ஹைபேஸிஸைக் கடந்து செல்வதற்குத் தடையாக அபசகுனங்கள் ஏற்பட்டனவெனச் சொல்லுகிறான். பித்தலாட்டமாகப் படுக்கைகளை அமைத்துத் தன் போர்வீரன் ஒவ்வொருவனும் போரஸைப்போன்ற பேராகிருதி வாய்ந்தவனென நினைக்குமாறு மாய்மாலம் பண்ணியிருக்கிறான். இப்பொழுது ஸிந்துநதியின் வழியே செல்வது புதிய பாதைகளைக் கண்டுபிடிப்பதற்கென எல்லாரும் நம்பும்படி செய்திருக்கிறான். இவன் மனத்திலுள்ள உண்மையான காரணமோ, திரும்பக் கலகம் விளைத்தெழுந்து மலைக்கணவாய் வழிகளை அடைத்துள்ள அசுவகர்கள் அஸ்பேஸியர்கள் முதலியவர்களோடு முன் போல மறுபடி ஒரு பிரயோஜனமுமில்லாமல் வீணுக்குக் கடும்போர் செய்வதைத் தவிர்க்கவேண்டுமென்பதேயாம். நிச்சயமாக இவனுக்குப் பாவனாசக்தி மிகப் பலமாயிருக்கின்றது. அந்தச் சக்தியினால் கற்பிக்கப்படுகிறவைகளெல்லாம் கற்பனைகளே யல்லவோ? எனவே பொய்களல்லவோ? அந்தப் பொய்களைத் திரும்பத் திரும்ப நினைப்பதனாலும் பிறர் நம்பும்படி சொல்வதனாலும் உறுதிப்பட்டு இவனும் பொய்யை மெய்யெனவே நம்பலாயினான்."

---

## அத்தியாயம் 15

# அலெக்சாண்டரும் சந்திரகுப்தனும்

**ச**ந்திரகுப்தனும் சாணக்கியரும் நான்கு வேவாட்களுடன் சதத்ரு என்னும் நதியினண்டை வந்து சேர்ந்தார்கள். 'அலெக்சாண்டர் மிக்க பராக்கிரமசாலி; அவனுக்குக் குலச்செருக்கு இல்லை, ஜாதித் துவேஷமும் இல்லை; ஆம்பீசு, போரஸ், செளபூதி, பாகேலா என்னும் இவ்வரசர்களின் விஷயத்தில் அவன் நேர்மையாகவும் மேன்மையாகவும் தயாளமாகவும் நடந்துகொண்டிருக்கிறான்' என்று அவ்விடத்தில் அவர்கள் கேள்விப்பட்டார்கள். அவன் தன் பிரபலமான சேனையோடு ஹைபேஸிஸ் ஆற்றங்கரையில் பாளையம் இறங்கியிருக்கிறான் என்றும் ஆற்றைக் கடந்து நந்தர்களோடு சண்டையிடச் சித்தமாயிருக்கிறான் என்றும் கேள்விப்பட்டார்கள். சந்திரகுப்தனைப் பார்த்துச் சாணக்கியர் பின்வருமாறு சொல்லலானார்:

"நான் நினைத்திருந்ததைக் காட்டிலும் அலெக்சாண்டர் மிக்க பெருமை வாய்ந்தவனெனத் தோன்றுகின்றது. முரட்டுக்குணம் வாய்ந்த மலைக்குடிகளையும், காட்டுச்சாதியார்களையும், இப்போது பலம் ஒடுங்கிக்கிடக்கிற போரஸையும், கதேயர்களையும் நாடுவதைக்காட்டிலும் நாம் துணைவேண்டுவதற்கு அவன் உசிதமானவன். அவனுக்குப் பெருஞ்சேனை இருக்கின்றது. அருஞ்செயல்கள் செய்யவேண்டும், பெருங்கீர்த்தி படைக்கவேண்டும், கொள்ளையடிக்கவேண்டும் என்னும் பித்துப்பிடித்து அவன்

உலகம் முழுவதையும் வெல்ல ஆவல் கொண்டிருக்கிறான். அப்படிப்பட்டவன் நமது துணை கிடைக்கப்பெற்றால் சந் தோஷிப்பான். அவன் பெரிய சேனாநாயகனென்றும், வெற்றியடையும் வழிகளில் கைதேர்ந்தவனென்றும் கேள் விப்படுகிறோம். ஆலமரத்தைப்போல அசையாது ஆழ வேரூன்றியதெனத் தோன்றிய மகத்தான பாரஸிக சாம் ராஜ்யத்தை வேரொடு புரட்டிவிட்டான். இப்போது மகத ராஜ்யத்தைக் கொள்ளையடித்து விசேஷத் திரவியம் சம்மானம் அளிப்பதாகத் தன் போர்வீரர்களுக்கு வாக்களித்துள் ளான். அவனுடைய பேராசையைத் திருப்திப்படுத்து வதற்கு ஒரு கோடி, அல்லது இரண்டு கோடி, அல்லது $2\frac{1}{2}$ கோடி பொற்பணங்கள் தருவோம் என்னலாம்; அவன் மிக ஆசைப்பட்டுக்கொண்டிருக்கிற வைரங்கள் முத்துக்கள் மாணிக்கங்கள் நீலமணிகள் மரகதங்கள் ஆகிய இவைகளை யதேஷ்டமாகக் கொடுப்போம் என்னலாம். அந்த முட்டாள் சௌபூதி எப்போதும் உடம்பில் அணிந்து கொண்டிருக்கிற இரத்தின வகைகளைப் பார்த்தது முதல் அவனுக்கு இந்த ஆசை பிடித்திருக்கிறது."

"அம்பிக்கும் பர்வதேசுவரனுக்கும் சொன்னதுபோல, தனது தலைமையை நானும் ஒப்புக்கொள்ளவேண்டு மென்று அவன் கேட்டால் நான் என்ன செய்கிறது?" எனச் சந்திரகுப்தன் வினவினான்.

"அவனைப் பேரரசாக நீ ஒப்புக்கொள்ளமுடியாதெனச் சொல். அப்படி ஒப்புக்கொண்டால், இப்போது ஜனங் களால் வெறுக்கப்படுகிற நந்தர்கள் தேசீயவீரர்களாய் விடுவார்கள்; நாட்டின் ஸ்வதந்திரத்தைக் காப்பாற்றும் பெரியாராவார்கள்; ஸ்வதந்திரமளிக்க முன் வந்த உன்னைப்

பகைத்துத் தேசத்துரோகியென ஜனங்கள் இகழ்வார்கள் எனச்சொல்" என்று சாணக்கியர் சொன்னார்.

"ஜனங்கள் அப்படிச் செய்வது நியாயமே. எவனுடைய ஆதிபத்தியத்திற்கும் உட்பட்டிருக்க என் மனம் உடன்படாது; அதிலும், பிறநாட்டானொருவனுடைய தலைமைக்கு உட்படுவது சிறிதும் எனக்கு ஏலாது. ஆனதனாலேயே, அவனுடைய உதவியை நாம் நாடுவது யுக்தமா எனச் சங்கிக்கிறேன்" என்றான் சந்திரகுப்தன்.

"நம் இஷ்டப்படி வந்தால் மாத்திரமே அவனுடைய உதவியைக் கைக்கொள்வோம். அப்படி வருவானா என்று பிரயத்தனப்பட்டுப் பார்ப்பதில் நஷ்டமென்ன?" என்றார் சாணக்கியர்.

"அவ்வளவு பிரபலமானவன் ஒருவனுடைய உதவியை நாடுவது ஆபத்துக்கிடமாகாதோவெனச் சிந்திக்கிறேன். நம் காரியத்திற்கு உபயோகித்துக் கொள்வதிலும், அடக்கி நம் சொற்படி நடக்கச்செய்வதிலும் அவன் நமக்கு மிஞ்சினவனாக இருக்கலாமே. தவளையொன்று தன் உடன் பிறந்த மற்றொரு தவளையோடு சண்டையிட்டுக்கொண்டு மூடத்தனமாகச் சர்ப்பத்தைப் பஞ்சாயத்துக்கு அழைக்க, அது வந்து இரண்டு தவளைகளையும் விழுங்கியதுபோன்ற கதி நமக்கு வரலாகாதே. மகத ராஜ்யத்தை யவனராஜன் ஒருவன் கைக்கொள்வதில் எனக்குப் பிரியமில்லை. முடிவில் அவன் நம்மை அடிமைகளாக வைத்து நடத்தக்கூடும். மலைநாட்டாரையும் காட்டுக்குடிகளையும் துணைக்கொண்டு நாம் மகத ராஜ்யத்தை ஜயித்தால் அது வேறு மாதிரியாகும். அந்தச் சாதியார்கள் நம்மீது குதிரையேறவும் முடியாது; நம் ஜனங்களை இழிவாகவும் பார்க்கமாட்டார்கள்" என்று சந்திரகுப்தன் சொன்னான்.

"நீ சொல்வது சரியே. அவனுடைய சகாயம் கோரு வதில் அந்த ஆபத்து இருக்கிறதென்பது உண்மையே. ஆனல், க்ஷூளரக்கத்தி காயப்படுத்து மென்னும் காரணத் தைக்கொண்டு புத்திசாலி எவனும் அதை உபயோகிக்கப் பயப்படமாட்டானே. 'இத்தனை பணம் கொடுக்கிறோம், நீ இந்தச் சகாயம் எங்களுக்குச் செய்யவேண்டும்' என்று அவனுடன் ஒப்பந்தம் செய்துகொள், பார்ப்போம். அப்படி ஒப்பந்தம் செய்துகொண்டால் தீமை யொன்றும் விளையாதே. அவன் துணைப்படுவதற்காகப் பணமல்லாது வேறு ஏதேனும் விரும்புவானுனல், அவனுடைய உதவி வேண்டாமெனக் கண்டிப்பாகச் சொல்லிவிடு" என்றார் சாணக்கியர்.

சந்திரகுப்தன் ஒப்புக்கொண்டான்.

இவர்கள் ஹைபேஸிஸண்டை போனபோது, அலெக்சாண்டர் ஹைடாஸ்பஸுக்குத் திரும்பிப்போய் விட்டானெனக் கேள்விப்பட்டார்கள். நந்தர்களின் படைத் தொகையைப்பற்றிப் பாகேலாவும் போரஸும் சொல்லிய பயங்கரமான வார்த்தைகளைக் கேட்டு அவனுடைய படை யாட்கள் முன் செல்ல மறுத்ததனுல், அவன் பின்னிட்டா னெனத் தெரிந்தது. முக்கியமாக, யானைப்பலத்தை எடுத் துச்சொல்லி அவனைப் பயமுறுத்தியிருக்கிறார்கள் எனவும் இவர்களுக்குச் சொன்னார்கள்.

"அப்படியானல், இப்போது அவனுடைய உதவியை நாம் நாடுவதிற் பயனென்ன?" எனச் சந்திரகுப்தன் வின வினன்.

"மகதராஜன் மீது ஜனங்களுக்கு வெறுப்பு; அவன் விஷயத்தில் எல்லாருக்கும் துரபிப்பிராயமும் துவேஷமும் ஏற்பட்டிருக்கின்றன; யமுனை கங்கை முதலான நதிகளில்

இறங்கிப் போவதற்கேற்ற நல்ல துறைகள் இருக்கின்றன; மகதப் போர்ப் படையினரும் ஊர் ஜனங்களும் உன்மீது மிகவும் பிரியம் வைத்திருக்கிறார்கள்; நாட்டின் வழி வகைகளும் தேச அமைப்பும் எங்கே எந்தக் காரியம் செய்வதற்காகுமென்னும் நுட்பமும் உனக்கு நன்றாகத் தெரியும் என்னும் இவ்வுண்மையான விஷயங்களை எடுத்து நீ அவனுக்குச் சொல்வாயானால், அவனுடைய சைனியத்தலைவர்கள் மனம் மாறித் தைரியம் மேற்கொள்ளக்கூடும். அவைகளைக் கேட்டபின், அவன் தன்னுடைய ஆதிபத்தியத்தை நீ ஒப்புக்கொள்ள வேண்டுமெனச் சொல்வானென்று பயப்படவேண்டியதில்லை. ஆகையால், நேரிற் பார்த்துப் பேசவேண்டுமென்று அலெக்சாண்டருக்குக் கடிதம் எழுதிக் கொடுத்து ஸித்தார்த்தகனை உடனே அனுப்பு. இரண்டொரு நாள் தங்கியிருப்பதற்கு அனுகூலம் செய்ய வேண்டுமெனப் பர்வதகனுக்கு ஒரு கடிதம் எழுதியனுப்பு. மகத தேசத்திற்கு இனி அரசனாக வரத் தக்கவனைத் தன் விருந்தினனாக ஆதரிப்பதில் பர்வதகன் மிக்க பெருமை கொள்வான். அவன் ஒழுங்கான நல்ல மனிதன். ஆனால், சிறிதுகாலமாகக் கொஞ்சம் கர்வ மடைந்திருக்கிறான். அதனால், பௌரவன், பர்வதேசுவரன் முதலான என்ன என்னவோ பட்டப்பெயர்கள் வைத்துக்கொண்டிருக்கிறான். இப்போது அலெக்சாண்டரிடம் தோல்வியுற்றதனால், அந்த அகந்தையிற் கொஞ்சம் அடங்கி யிருக்கவேண்டும். அம்பியினிடத்திலும் நல்ல குணங்கள் சில உண்டு. அவன் யவனர்களுடைய நடையுடை பாவனைகளை மேற்கொண்டு அவர்களைப் போல வியவகரிக்கப் பார்க்கிறானாயினும், ஆரியர்களாலும் பெருமையடைய விரும்புகிறான். அவனுக்கு இந்த ஆசையும் இருக்கிறதென்பது

அம்பஸ்தன் எனத் தன்னைப் பாராட்டிக் கொள்வதனால் தெரிகிறது. அன்றியும், பிறநாடுகளையேனும் பொக்கிஷங் களையேனும் பறித்துக்கொள்ள வேண்டுமென்ற எண்ணத் தைக் காட்டிலும், தனக்கு வாய்த்துள்ளதை இழக்காம லிருக்கவேண்டும் என்னும் கவலை அவனுக்கு அதிகமா யிருக்கின்றது. நான் அறிவு மிக்கவனென அவனுக்கு என்பால் பெரிய மரியாதையும் கௌரவ புத்தியும் உண்டு. 'அலெக்சாண்டரிடம் உடனே போய்ச் சரண மடையாதே. முதன் முதலில் நந்தராஜனுடைய உதவியை நாடு' என்று நான் சொல்லிய வார்த்தையை அவன் ஏற்கவில்லை. ஏனெனில், குசத்வஜத்தையும் கசியபபுரத்தையும் அழித் தது போல அலெக்சாண்டர் தன் நகரத்தையும் அழித்துப் பாழாக்கி விடுவானெனப் பயந்தே அவன் என் வார்த்தை யைக் கேளாதொழிந்தான். அலெக்சாண்டரிடம் போகா மல் நந்தராஜனிடம் போம்படி அவனுக்கு நான் அப்போது புத்தி சொல்லியது தவறென இப்போது நான் நினைக்கி றேன். ஆனால், மகதத்தரசன் இவ்வளவு சீர்குலைந்து இழிவுபடுவானென அப்போது நான் கனவிலும் கருத வில்லை" என்று சாணக்கியர் சொன்னார்.

இரண்டு கடிதங்களை எடுத்துக்கொண்டு ஸித்தார்த்த கன் புக்கிபேலாவுக்குப் போனான்.

ஹைபேஸிஸ் நதியில் ஸ்நானம் செய்து சந்திர குப்தனும் சாணக்கியரும் மற்ற மூவரும் போஜனம் செய்து கொண்டு, அலெக்சாண்டர் கட்டியிருந்த வேதிகைகளையும், நாட்டியிருந்த வெண்கல ஸ்தம்பத்தையும் போய்ப் பார்த் தார்கள். வேதிகைகளில் ஒவ்வொன்றும் கோபுரமளவு உயரமாக மகத்தாயிருந்தன. அவை வெண்கல ஸ்தம்பத்தின் இரு பக்கத்திலும் ஆறு வீதம் வரிசையாக நின்றன.

"இந்த வேதிகைகள் எவ்வளவு நன்றாகக் கட்டப் பட்டிருக்கின்றன? நம்முடைய மதாசாரச் சின்னங்கள் எவையுமே இவைகளிற் காணப்படவில்லையே!" என்று சாணக்கியர் சொன்னார். உடனே சமித்தார்த்தகனை அனுப்பி ஊரிலிருந்து ஒரு சித்திரகாரனை வரவழைத்து அவ்வேதிகைகளின்மீது பசு, காளை, கருடன், மயில், சிங்கம், யானை, வானரம், ஸர்ப்பம், தாமரை, ஆலமரம் ஆகிய இவைகளின் உருவங்களைச் சித்திரிக்கச் சொன்னார். பின்பு, எல்லாரும் அவ்வேதிகைகளினருகில் கடவுளைத் தொழுதார்கள்.

"மற்றவர்களுடைய ஆலயங்களை நம் தேவாலயங் களாக நாம் மாற்றலாமா?" என்று சந்திரகுப்தன் கேட் டான்.

"மாற்றலாம். நம்மோடு போட்டி போட்டு அவ் விடத்தில் தொழ வருகிறவர்கள் வேறு எவரும் இல்லாத போது நாம் மாற்றி உபயோகித்துக் கொள்ளலாம். உடை யவன் இறந்து போனனென்னும் காரணத்தினல் நிலத்தைப் பண்படுத்திப் பயிரிடாமல் விட்டுவிடக்கூடாது. ஓர் ஆலயத்தில் தொழுது கொண்டிருந்த உபாஸகர்கள் இறந்து போனார்களென்னும் காரணத்தினல் தொழுகை இல்லாமல் அந்த ஆலயத்தைப் பாழடைய விட்டு விடக்கூடாது. பொன் நகைகள் தேய்ந்துபோனல், அவைகளை உருக்கிப் புதிய ஆபரணங்களாகச் செய்கிறோம். மத ஸித்தாந்தங்கள் காலக்கிரமத்தில் பிடிமானமில்லாமல் கைவிடப்பெற்றால், புதிய உண்மைகளை வெளியிடுவதற்கு அந்த ஸித்தாந்தங் களையே திருப்பிச் சொல்லி வற்புறுத்துகிறோம். உலகத்தில் வாழ்வு வீழ்வு என்னும் இரண்டு உள. இவற்றுள் வாழ்வே சிறந்தது; வீழ்வை மறந்து வாழ்வைப் பாராட்ட வேண்டும்.

அதுவே மனிதன் செய்யும் மேலான காரியம். அந்நற் காரியம் செய்வதற்காக என்ன மாறுபாடுகள் செய்த போதிலும் அவை குற்றமாகா. இந்த யவனுசாரியாகள் இவ்வேதிகைகளை மிகத் திறமையாகவும் சமத்காரமாகவும் அமைத்திருக்கிறார்கள். கோரிகளைப்போல ஆராதனையில் லாமல் இவைகளை விட்டுவிடுவது கண்ணராவியாயிருக்கும். நாட்டு ஜனங்களெல்லாரும் தொழத்தக்கவாறு நாம் இவை களைத் திருத்தியதைப் பார்த்தால், அவர்களே மகிழ்வார் கள்.''

அலெக்சாண்டருடைய பெரிய கொலு நடப்பதற்கு முன்தினம் அவர்கள் புக்கிபேலாவுக்குப் போய்ச் சேர்ந் தார்கள். விதார்த்தகனும், போரஸினுடைய மந்திரிகளில் ஒருவனும் அவர்களைச் சந்தித்து அரண்மனைக்கு அழைத் துக்கொண்டு போனார்கள். சந்திரகுப்தனைப் போரஸே வரவேற்று, அந்தப்புரத்திற்கருகில் ஓரிடத்தில் அவனுக்கு இடம் அமைத்துக் கொடுத்தான். அலெக்சாண்டர் மறு நாட்காலை 10 மணிக்குச் சந்திரகுப்தனைப் பார்க்கலா மென்று சொன்னான். ஆனால் பாடலிபுத்திரத்தின் மீது படையெடுத்துப்போகும் நோக்கம் அவ்வளவாக இல்லை யென்று அவன் குறிப்பிட்டான். ஆனபோதிலும், "கேட்டுப் பார்க்கலாம; முக்கியமாக, பெரிய உப பலங்களோடு மெம்னன் கிரீஸிலிருந்து வந்திருப்பதனால் படையெடுத்துப் போக ஒரு வேளை ஒப்புக்கொண்டாலும் ஒப்புக்கொள்ள லாம்'' என்று போரஸ் சொன்னான்.

மறுநாட் காலையில் 9 மணிக்குப் போரஸினுடைய உள்ளறைகளின் ஜன்னலண்டை ராணி ஸ்வர்ணமயியும் ராஜகுமாரி சாந்தவதியும் உட்கார்ந்திருந்தார்கள்; பிறருக் குத் தெரியாமல் சாந்தவதி ஒரு மல்லிகை மலரைக் கீழே

முற்றத்தில் எறிந்தாள். ஆயினும், ஸ்வர்ணமயி அதைக் கவனித்தாள். ஒரு நிமிஷம் தாழ்த்துச் சாந்தவதி திருப்தி யோடு புன்னகை கொண்டதையும் கவனித்தாள். உடனே ஜன்னலண்டை போய் எட்டிப்பார்த்தாள். அப்போது சந்திரகுப்தன் அவசரமாகத் தன்னறைக்குத் திரும்பிப் போய்க் கொண்டிருந்ததைக் கண்டாள்.

ஸ்வர்ணமயி சிரித்துக்கொண்டு, "சாந்தா! நீயும் கள வொழுக்கத்துறையில் இறங்கினாற் போலிருக்கிறது. அவன் நல்ல அழகான ராஜகுமாரன்; அதைப்பற்றிச் சந்தேக மில்லை; நாகரிக முள்ளவனாகவும் தோற்றுகிறான்" என்றாள்.

சாந்தவதி நாணித் தலை குனிந்தாள்.

"அந்தக் கறுப்புப் பிராமணன் அவனோடு இருக் கிறானே; அவனுக்கும் இவனுக்கும் வித்தியாசம் நிரம்ப இருக்கின்றது. ஆயினும், இவனும் அவனும் சேர்ந்திருக் கிறது என்னவோ மிகப் பொருத்தமாக இருக்கின்றது" என்றாள் ஸ்வர்ணமயி.

"ஓ, அந்தப் பிராமணனை நம்பமாட்டேன். அவன் மிக அசாத்தியனென எனக்குத் தோன்றுகிறது. அவன் கத்திலுள்ளவர்களுள் மிக ஆபத்தானவனென்றும், மந்திர சாஸ்திரத்திலும் பில்லி சூனியம் வைக்கும் வித்தையிலும் மிகத் தேர்ந்தவனென்றும் என் மாமா போரஸ் சொல்லுகின்றார்" என்றாள் சாந்தவதி.

"அப்படிப்பட்டவன் மிக உபயோகமாக இருத்தல் கூடும். ராஜகுமாரனைவிட அவனையே நான் அதிகமாகக் கவனிக்கிறேன்" என்றாள் ஸ்வர்ணமயி.

"துராகிருதமாக ராஜ்யத்தைக் கைப்பற்றிக்கொண் டிருக்கிற நந்தர்களின்மீது படையெடுப்பதற்கு அலெக்

சாண்டரின் உதவியை நாடும் பொருட்டு இவர்களிருவரும் இங்கே வந்திருக்கிறார்களென்பது உண்மைதானா?" எனச் சாந்தவதி வினவினாள்.

"ஆம், உங்கள் மாமா எனக்கு அப்படித்தான் சொன்னார்."

"ஆனால், அத்தை, தமக்கு ராஜ்யம் சம்பாதித்துக் கொடுக்க வேண்டுமென்று ஒருவர் மற்றொருவருடைய கையை எதிர்பார்ப்பது அசட்டுத்தனமென்று உனக்குத் தோன்றவில்லையா? அப்படி ராஜ்யத்தைப் பிறர் வெல்வதானால் தங்களுக்கெனச் செய்வார்களேயல்லாமல், மற்றொருவருக்கெனச் செய்யமாட்டார்களே" என்றாள் சாந்தவதி.

"நீயே போய் அந்தச் செய்தியைச் சந்திரகுப்தனுக்குச் சொல்லு."

"எனக்குச் சமயம் வாய்த்தபோது சொல்வேன்."

"இப்போதிருக்கிற மாதிரியில் அந்தச் சமயம் சீக்கிரத்திலே நேர்ந்துவிடும்."

"எப்படிப்பட்ட ராஜகுமாரிக்கும் அவன் ஏற்ற வரனென்று நேற்று நீயே எனக்குச் சொன்னாயே."

"இன்னும் அப்படித்தான் நினைக்கிறேன். ஆனால், விவாகத்திற்கு ஏற்பாடு செய்யத்தக்கவன் உன் தந்தையாகிய சிங்கபுரத்து அரசனேயல்லவா? உன்னையும் உன்னோடு வரத்தக்க ராஜ்யத்தையும் நாடி வருகிற ராஜகுமாரர்கள் நூற்றுக்கணக்காக இருப்பார்கள்."

"ராஜ்யத்தின் பொருட்டு என்னை எவனேனும் கலியாணம் செய்து கொள்வான் என்னும் எண்ணமே எனக்கு

1. ராஜபுதனத்துப் பாலைவனத்திலுள்ளதோர் பட்டணம்.

வெறுப்பாயிருக்கின்றது. என் மனத்திற்கு இசைந்தவனுக்கே நான் மாலையிடுவேன்."

"சரி. அப்படியானால், இப்போதே போய்ச் சந்திரகுப்தனுக்கு மாலையிட்டு, இப்போது நீ சொல்லிய விஷயத்தை அவனுக்கு எடுத்துரை."

சாந்தவதி மறுபடி வெட்கி லஜ்ஜையோடு, "அத்தை, உங்கள் சம்பிரதாய முறைகளையெல்லாம் மீறாமல் அப்படி நான் செய்யக்கூடுமானால்தானே? ஆனால், நான் நிஜமாகவே கேட்கிறேன், நமக்காக மற்றொருவர் ராஜ்யங்களை ஜயித்துக் கொடுக்கவேண்டுமென எதிர்பார்ப்பது பிரயோஜனமில்லாத காரியமென உனக்கும் தோன்றவில்லையா?" என்றாள்.

"பொதுவாகச் சொல்லின், அது சரியன்றெனவே சொல்வேன்; ஆனால், எந்த விதிக்கும் விலக்கு உண்டு. உதாரணமாக, சிபி சக்ரவர்த்தியைப்போன்ற பெருந்தன்மையான அரசனொருவனை வேண்டுவது குற்றமாகாதல்லவா?"

"ஆமாம். ஆனால், அலெக்சாண்டர் அப்படிப்பட்டவனல்லவே" என்றாள் சாந்தை.

"அவனைக் கண்டால் உனக்குப் பிடிக்கவில்லை போலும். அப்படித்தானே?" என ஸ்வர்ணமயி வினவினாள்.

"எனக்கு எப்படிப் பிடிக்கும்? என் ஞாதிகளை அவன் கொல்லவில்லையா?"

ஸ்வர்ணமயியின் கண்களில் நீர் ததும்பியது. சாந்தையைக் கட்டித் தழுவிக்கொண்டு, "என் கண்ணே! நான் மறந்தேன். அர்ஜுனன் உயிரோடிருந்தால் நீ என் மருமகளாய் இருந்திருப்பாய்" என்று சொன்னாள்.

சாந்தையும் கண்ணீர் உதிர்த்தாள்.

"அன்பின் பாசம் உனக்கு அதிகம்" என்றாள் ஸ்வர்ணமயி.

"அன்பருக்காக என் பிராணனைத் துறப்பேன்" என்றாள் சாந்தை.

"அப்படியானால், ராஜகுமாரனான சந்திரனுக்கு இவ்விடத்தில் ஆபத்துப் பயமே இல்லை" என்றாள் ஸ்வர்ணமயி.

"அத்தை, இப்போது அவர் அலெக்சாண்டரைப் போய்ப் பார்த்துப் பேசப்போகிறார். அலெக்சாண்டருடைய தரிசனசாலைக்குப் பின்புறத்து அறையிற் போயிருந்து, அவர்களிருவருக்கும் நடக்கிற சம்பாஷணையை உற்றுக் கேட்போம். ராஜகுமாரருடைய கம்பீரமான மனப்போக்குக்கும் அலெக்சாண்டருடைய அகந்தைக்கும் ஒத்து வராது, இருவரும் முரண்படுவார்கள் என்று என்னுள்ளே ஏதோ சொல்லுகின்றது. ஆகையால், அங்கே நடக்கிற வேடிக்கையைக் கவனிப்போம்" என்றாள் சாந்தவதி.

"அப்படியே செய்வோம். அது விநோதமாகவே இருக்கும்" என்றாள் ஸ்வர்ணமயி. பின்பு, அவர்களிருவரும் தரிசனசாலையின் பின்புறத்து அறைக்குப் போய் ஒட்டுக் கேட்டார்கள்.

"நல்லது, இளைஞரே, உமக்கு நான் என்ன செய்யக்கூடும்?" என்று சந்திரகுப்தனைப் பார்த்து அலெக்சாண்டர் வினவினான். இருவரும் போரஸின் அரண்மனையிலுள்ள தரிசனசாலையில் அமர்ந்திருந்தார்கள். அலெக்சாண்டர் சுமுகமாகவும் ஆதரிக்கும் நோக்கமுடையவனாகவும் இருந்தான். சந்திரகுப்தனோ, மனத்திற் சமாதானமின்றிக் குழம்பி அமைதியற்றிருந்தான். "உம்மைப்பற்றிய சமா

சாரங்கள் சில சொல்லும்: உங்கள் பிரதேசத்து விஷயங்களைப்பற்றி எனக்கு அவ்வளவு நன்றாகத் தெரியாதே" என்றான் அலெக்சாண்டர்.

அதற்குச் சந்திரகுப்தன் பின்வருமாறு சொல்லலானான்:

"நெடுங்காலமாக மகதராஜ்யத்தைப் பிரபுக்களான நந்தர்களே ஆண்டு வந்தார்கள். அவர்கள் சந்ததியில் தோன்றியவனே யான். இப்போது அரசனாயிருப்பவனும் இளவரசர்களுமோ துராக்கிரமிகள்; இழிவுபட்ட அம்பட்டனொருவனுடைய வமிசத்தினர். அந்த அம்பட்டன் மகாநந்தி என்னும்மகாராஜனுடையகாமாதுரங்கொண்ட ராணியைக் கற்பழித்து, அரசனையும் ராஜகுமாரர்களையும் கொன்றான். என் பாட்டனாராகிய மௌரியரை மாத்திரம் கொல்லாமல் விட்டான்; 'மகாபத்ம நந்தன்' என்னும் பட்டந்தரித்துச் சிங்காதனம் ஏறிக்கொண்டான். மௌரியர் தீமையற்றவர். மௌரிய ராஜகுமாரியின் புத்திரரானமையின், பாடலிபுரத்துப் பிரஜைகள் அவரை அரசராகக்கொள்ளமாட்டார்கள் என நினைத்து அவரைக் கொல்லாமல் விட்டான். என் பாட்டனாரும் மகாபத்மனண்டை உத்தியோகம் செய்தார். மகாபத்மன் பெரிய போர்வீரன்; முடுக்காக ஆட்சி செய்பவன். அவனண்டை இவர் சேனாதிபதியாயிருந்து, அவனுடைய ராஜ்யத்தைத் தெற்கே கோதாவரிக்கரையில் நந்தூர் என்னும் ஊர் வரையிலும், மேற்கே யமுனா நதிவரையிலும், கிழக்கே கௌஹாட்டி, காமாக்கியம் என்னும் இடங்கள் வரையிலும், வடக்கே நேபாளம் வரையிலும் வியாபிக்கச் செய்தார்.

"ஆனால், அவனுடைய இழிகுணம் வாய்ந்த மக்கள், ராக்ஷஸன் என்னும் மந்திரியின் ஆலோசனையின்படி அவ

ரைக் கொன்று, அவருடைய சந்ததியார்களையும் அவருக்கு உற்ற உதவியாளரான உறவினர்களையும் நிர்மூலமாக்கப் பிரயத்தனப்பட்டார்கள். எங்களெல்லோரையும் தரைக் கீழ் அறையொன்றில் வைத்து மூடி அடைத்துவிட்டார்கள். எங்களில் ஒவ்வொருவருக்கும் ஒரு நாளைக்கான உணவு வைத்திருந்தார்கள். நான் தப்பிப் பிழைத்து அவர்கள் மீது பழி வாங்கவேண்டுமெனத் தங்களுக்குள் ஓர் ஒப்பந்தக் கட்டுப்பாடு செய்துகொண்டு, மௌரியரும் அவருடைய தோழர்களான தொண்ணூற்றெருன்பது பேரும் தம் இஷ்ட பூர்வகமாக ஆத்மஹத்தி செய்து கொண்டார்கள். நான் மௌரியருக்குச் செல்வப்பேரன். அவருக்கு ஓரே புத்திரர் இருந்தார். அவர் மௌரியருக்கு முன்னால் இறந்துபோனார். அந்தப் புத்திரருடைய புத்திரன் நான். அந்தக் காராக்கிரு கத்தில் சில மாதங்கள் வரையில் நான் ஜீவித்துக் கொண் டிருந்தேன். சிங்களத்தரசன் இரும்புக்கூட்டிற் சிங்கமொன் றை அடைத்து, அதனுடன் கூட்டைத் திறவாமல் சிங்கத்தை வெளிவிடவேண்டுமென நந்தர்களுக்குச் செய்தி அனுப்பி யிருந்தான். மகதத்தவர்கள் கல்வியிற் சிறந்தவர்களெனக் கர்வங்கொண்டிருந்தார்களாதலால், அந்தக் கல்விச் சிறப் பைச் சோதிக்கும்பொருட்டுச் சிங்களத்தரசன் அந்தச் சிங் கத்தை அனுப்பியிருந்தான். அந்தப் புதிரைவிடுவித்து மகதத் தவர்களுடைய புத்திப்பிராபவத்தை நிலை நாட்டுவதற்காக என்னை அச்சிறையினின்றும் விடுவித்தார்கள். அந்தச் சிங்கத் தின் நடமாட்டம் யந்திரத்தோடுகூடி இருந்தது. ஆதலால் அது மெழுக்கினால் அமைந்ததென நிச்சயித்தேன். பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கம்பியை அதிற் செருகினேன். அது உருகிக் கூட்டைத் திறவாமலே வெளியே ஓடியது. அப் போது என்னை எல்லாரும் மிகப் புகழ்ந்து பாராட்டினார்கள்.

ஆனால், இழிமக்கள் தாங்கள் வாக்குக்கொடுத்த உறுதி மொழிகளையும், தங்களுக்குச் செய்த உபகாரங்களையும் விரைவில் மறந்துவிடுகிறார்கள். அரசனும் இளவரசர்களும் என்னைத் திடீரெனப் பிடித்துப் போலி விசாரணை செய்து கொல்லுவிக்க முயன்றார்கள். ஆனால், அவர்கள் கையினின்றும் நான் சமாளித்து வந்துவிட்டேன்."

"நல்லது. எபிரஸ் (Epirus) ராக்கிருகத்திலும் மாவலிடன் ராஜக்ருகத்திலும் எத்தனையோ கோரமான கிருத்தியங்கள் நிகழ்ந்திருக்கின்றன. அவைகளெல்லாவற்றைக் காட்டிலும், உமது கதை கேட்பதற்கு மிகக் கஷ்டமாயிருக்கின்றதே. இப்போது என்னை என்ன செய்யச் சொல்கிறீர்?" என்று அலெச்சாண்டர் வினவினான்.

"நான் பாடலிபுரத்தின்மீது படையெடுக்கவேண்டும். உங்கள் உதவியைக்கொண்டு நந்தர்களின் அரசை நீக்கி நான் அரசனாகவேண்டும்" என்றான் சந்திரகுப்தன்.

"சகுனங்கள் சரியாக வாய்க்காததனால், நாங்கள் ஸ்வதேசம் போகத் திரும்பிவிட்டோமே" என்றான் அலெக்சாண்டர்.

"நீங்கள் செய்தது தவறு. என் உதவியிருந்தால் நீங்கள் வெகு சுலபமாக நந்தர்களை எதிர்த்து வென்றிருக்கலாம்."

"என் ஆட்களுக்கு வீட்டுக்குப் போகவேண்டுமென்னும் ஆசை பெரிதாக இருந்தது."

"நந்தர்களின் படைகள் மிக அதிகமென்றும், கடந்து போகவேண்டிய ஆறுகள் கஷ்டமானவையென்றும், தூரமும் வெகு அதிகமென்றும் கேள்விப்பட்டதனால் ஒரு வேளை அவர்கள் பயப்பட்டார்கள் போலும். பழைய

காலத்து நந்தர்களாயிருந்தால் உங்கள் ஆட்கள் பயப்பட வேண்டியது நியாயமே. என் பாட்டனார் அவர்களுக்குச் சேனாதிபதியாயிருந்தாலும், அல்லது, மகாபத்மனே படைத் தலைமை பூண்டு வருவதானாலும், அவர்கள் பயப்படவேண்டியதே. உங்களையல்லாமல் வேறு எவரேனும் அவர்களுக்குத் தலைமை பூண்டிருந்தாலும் அவர்கள் பயப்படவேண்டியதே. மகதசைனியத்தில் தீரர்களும் அனுபவம் மிகுந்த ஆட்களும் இருக்கிறார்கள். நான் வரும் வழியில் அவர்களுடைய துணிவான தோற்றத்தைக் கண்டேன். உள்விஷயம் தெரியாதவனெவனுக்கும் அவர்களைப் பார்த்தால் திகில் உண்டாகும். ஆனால், இப்போதுள்ள நந்தர்களை ஜனங்களும் படைவீரர்களும் வெறுத்துக் கொண்டிருக்கிறார்கள். பலமான சேனையோடு நான் பாடலிபுரத்தின்மீது படையெடுப்பேனால், அவர்களெல்லாரும் எனக்குச் சகாயம் செய்வார்கள். ஆகையால், நீங்கள் கிழக்குத் தேச யாத்திரையைத் திரும்ப மேற்கொண்டு உங்கள் படைகளுடன் எனக்கு உதவி செய்ய வேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறேன். உங்கள் தேசத்திலிருந்து புதிய ஆட்களும் உபபலங்களும் இப்போது வந்திருப்பதனால், உங்கள் படையினர் மிகத் தைரியங்கொண்டிருப்பார்கள்” என்று சந்திரகுப்தன் சொன்னான்.

அதற்கு அலெக்சாண்டர், “அந்த விஷயத்தை என் தளகர்த்தர்களோடு கலந்து தீர்க்கமாக ஆலோசிக்க வேண்டும். அப்படியாகும்பக்ஷத்தில், பிறநாட்டு வியவகாரங்களிலும் ராணுவ விஷயங்களிலும் ஆலோசனை சொல்லுவதற்குக் கிரேக்க ஸ்தானாதிபதி ஒருவனை யேற்று, ஆம்பீசையும் போரஸையும் போல மகதமும் எனக்குக் கப்பங்கட்டுமல்லவா?” என வினவினான்.

"இல்லை, இல்லை. அது நடக்காத காரியம். ஆம்பீசும் போரஸும் பஞ்சாபிலுள்ள சிற்றரசர்கள். மகதத்தரசனே இந்திய தேசத்திற்கே அரசன். அவர்களோடு மகதத்தரசனை ஒப்பிட்டுப் பேசக்கூடாது. அன்றியும், முன்னொரு காலத்தில் தக்ஷசிலையானது பாரஸிக சக்கரவர்த்திக்கு உட்பட்டிருந்தது. இப்போது நீங்கள் பாரஸிக சக்கரவர்த்தியாயிருப்பதனால், உங்களுக்கு அது ஆதீனமாயிருக்கின்றது. போரஸை நீங்கள் போரில் வென்றீர்கள். ஆனால், மகதமோ, ஒரு நாளும் பாரஸிகத்திற்கு அடிமைப்பட்டிருக்கவில்லை; நீங்கள் மகதத்தரசனைப் போரில் வெல்லவில்லை. உங்களுடைய செலவெல்லாம் கட்டிக்கொடுக்கிறேன். அதிகப்படியாக இரண்டரை கோடி பொற்பணமும் கொடுக்கிறேன். ஆனால், நான் ஸ்வதந்திரனாகவே இருப்பேன்; மற்றொருவனை யஜமானனாகக் கொள்ளேன். மகத சாம்ராஜ்யத்திற்குரிய ஸ்வதந்திரங்களைக் குறைக்கும் பொருட்டு ஸ்தானாதிபதி எவரையும் வைத்துக்கொள்ளமாட்டேன்; அப்படி வைத்துக் கொள்வேனானால், என் பிரஜைகள் என்னைச் சபிப்பார்கள், அவர்கள் சபிப்பதும் நியாயமேயாகும்; என்னைத் தேசத்துரோகி யெனவும், துராக்கிரகமாகச் சிங்காசனத்தைப் பற்றிக்கொண்ட ராஜகுமாரர்களே தேசாபிமான தீரர்களெனவும் ஜனங்கள் நினைக்கும்படி நேரும்" என்று சந்திரகுப்தன் மறுமொழி கூறினான்.

"அப்படியானால், நீர் கூலிப் படைத்தலைவனொருவனுடைய சகாயத்தை நாடியிருக்கவேண்டும்! ஆசியா தேசத்திற்கெல்லாம் ராஜாதி ராஜனாயிருக்கப்பட்ட என்னண்டை வந்திருக்கக்கூடாது. மகதத்தை நான் தோல்வியுறச்செய்யவில்லையென்று சொன்னீரே. அது ஒரு சிறிய சாதாரணமான காரியம். எப்போது நினைத்தாலும் உடனே அந்தக் காரியத்

தைச் செய்துவிடுவேன். நீர் ராஜகுமாரரேயானாலும், உமக்கு ராஜ்யமும் இல்லை, சேனையும் இல்லை. அப்படிப் பட்ட ராஜகுமாரரோடு போர்புரிந்து அவரைத் தோற்கடிப் பதற்கு இல்லை. அந்தக் காரணத்தினால் போரஸைக்காட்டி லும் நீர் பெரியவரெனச் சொல்லிக்கொள்ள முடியாது. உலகம் முழுமையும் ஜயித்து என் ஆட்சிக்கு உட் படுத்த வேண்டுமென்றிருக்கிறேன். ஆகையால், மகதத்துப் பூர்வ சரித்திரத்தினால் எனக்கு ஆகவேண்டியது ஒன்று மில்லை. பாரஸிக சாம்ராஜ்யத்துப் பூர்வசரித்திரத்தினால் எனக்கு என்ன பிரயோஜனம் இருந்ததோ அதைக் காட்டிலும் இது அதிகமல்ல. பாரஸிகத்துப் பேரரசனை டரயஸ் என்பவனுக்கு நான் ஒரு கடிதம் எழுதினேன். அந்த விஷயம் உமக்குத் தெரிந்திருப்பது நல்லது. அந்த டரயஸ் என்னைத் தனக்குச் சமானனாகப் பாவித்து ஒரு கடிதம் எழுதியிருந்தான். 'எனக்குச் சமானனாக உன்னை நினைத்துக் கொண்டு கடிதம் எழுதக்கூடாது. ஆசியா கண் டத்து அதீசன் எனவும் அவனுடைய சொத்துக்கள் எல்லா வற்றிற்கும் யஜமானனெனவும் என்னைப் பாவித்து வணக்க மாக மனுச்செய்துகொள்ள வேண்டும்' என உடனே அவனுக் குக் கண்டிப்பாக எழுதினேன். அன்றியும், 'உன்னிடமிருந்து எனக்குப் பணமொன்றும் வேண்டாம். உன்னுடைய தேசம் முழுமைக்கும் பதிலாக அதில் பகுதியொன்றை ஏற்றுக் கொள்ளமாட்டேன். ஏனெனில், அந்தத் தேசம் முழுதும், அதிலுள்ள சொத்துக்கள் எல்லாமும், ஏற்கெனவே என்னுடையனவாயின' என்றும் சொன்னேன். அந்தப் பாரஸிகத்தரசனைக் காட்டிலும் நீர் உயர்பதவி வாய்ந்தவ ரெனச் சொல்லிக்கொள்ள மாட்டீரல்லவா?" என்று அலெக்சாண்டர் கேட்டான்.

"டாயஸைக்காட்டிலும் நான் மேலானவனே. நீங்கள் அவனைத் தோல்வியுறச்செய்தீர்கள். ஆனதனால், அவன் இந்த வார்த்தைகளையெல்லாம் கேட்டுக்கொண்டு அடங்கி இருக்கவேண்டியதாயிற்று. இந்தியர்களில், அரசுரிமை வாய்ந்தவனொருவனைத் தவிர்த்து, அக்கிரமக்காரர்கள் பட்டம் பெறுவார்களானால், அவ்வுரிமையாளன் தன் ராஜ்யத்தைத் திரும்பப் பெறுவதற்குத் தன்னைப்போன்ற வேறு அரசனொருவனுடைய உதவியை நாடுவான். அந்த வேற்றரசனும் இவனுக்கு வேண்டிய உதவியைச் செய்வான்; ஆனால், உதவியை நாடுபவன் தன் சுதந்தரத்தை இழக்க வேண்டுமென்னும் நிபந்தனையை விதித்துக்கொள்ள மாட்டான். தனக்குச் சமானமானவன் ஒருவனை ஒருவன் உதவி கேட்பது போலக் கேட்டு அதைப் பெறுகிறான். அப்படி உதவிகேட்கும்போது மற்றவனுடைய தாஸனாவோமென இவன் கனவிலும் நினைப்பதில்லை. உதவி செய்கிறவனும் இவனைத் தனக்குக் கீழ்ப்பட்டிருக்கவேண்டுமெனக் கேட்கச் சொப்பனத்திலும் எண்ணமாட்டான். அப்படிக் கேட்பது அயோக்கியத்தனம் எனவே அவன் நினைப்பான். அதைப் போல் நான் உங்களிடத்தில் உதவி கேட்க வந்தேன். ஏனெனில், யவனர்கள் அநேக விஷயங்களில் எங்களைப் போலவே நடக்கிறார்களென்று கேள்விப்பட்டிருக்கிறேன். இப்படிப்பட்ட விஷயங்களில் உங்களுடைய நீதி நியமம் எங்களுடையதைக் காட்டிலும் உயர்வானதன்று என்று இப்பொழுது கண்டுகொண்டேன்" என்றான் சந்திர குப்தன்.

அது கேட்ட அலெக்சாண்டர் சீற்றம்மிகுந்து, "உங்களுடைய நீதி விதானம் எங்களுடையதைக் காட்டிலும்

சிறந்ததென்று சொல்ல எப்படித் துணிவீர்? அது எப்படி யாகும்?'' எனக் கேட்டான்.

அதற்குச் சந்திரகுப்தன், "அது அப்படியிருப்பதனால் தான் சொல்லுகிறேன். இனி நான் காட்டுக்குடிகளான கிராதர்கள், கோண்டுகள், சவரர்கள் ஆகிய இவர்களிடம் போய், உங்களைக்காட்டிலும் சுலபமான நிபந்தனைகளின் மீது, அவர்களுடைய உதவியைப் பெறுவேன். அவர்களுக்கு எங்கள் நீதிவிதானம் தெரியும். எங்கள் நீதி சாஸ்திரத்தையே அவர்கள் அவலம்பிக்கிறார்கள்" என்று பதில் சொன்னான்.

"அப்படியே செய்யும். அதற்குள்ளாக நான் மகதத்தின்மீது படையெடுத்து, அதைப் பிடித்து விடுகிறேன்" என்றான் அலெக்சாண்டர்.

"அது வீண் மனோராஜ்யம். நான் துணைவனாக உங்களோடு வந்தால் அதைக் கைப்பற்றுவது எளிதாயிருக்கலாம். என் உதவியில்லாவிட்டால், கவைத்தண்டம் வைத்துக் கொண்டு இமயமலையைக் கடப்பது போலாகும்."

"அப்படியானால், உம்மைப் பிணையாளியாகப் பிடித்து எங்களுடன் கொண்டுபோவோம்."

"அப்படிச் செய்வது உங்களுடைய நல்லொழுக்க முறைக்கும் விருந்தோம்பும் விதிகளுக்கும் விரோதமாகுமே!"

"அரசியல் வியவகார அவசரங்களையனுசரித்து நீதி நெறி முறைகளை அப்போதைக்கப்போது தளர்த்திவிட வேண்டியது அவசியமாகும்" என்றான் அலெக்சாண்டர்.

"ஓ அலெக்சாண்டர், உங்களுக்கு நான் அஞ்சவில்லை. நீங்கள் என்னை என்ன செய்வதானாலும், அதற்குப்

பின் வாங்கமாட்டேன். டாயஸைப்போல நான் கோழை யல்ல. மாந்தாதாவின் வமிசத்தவனை யான் மனிதனெவ னுக்கும் பயப்படமாட்டேன். ஆகையால், மகதத்தைப் பிடிப்பதற்கு என்னை நீங்கள் ஒருபோதும் துணையாகக் கொள்ளமுடியாது; நான் அதற்கு முன்னரே இறந்து போவேன்" என்றான் சந்திரகுப்தன்.

"நீர் நினைப்பதைக் காட்டிலும் சீக்கிரமாகவே உமக்கு மரணம் சம்பவிக்கலாமே."

"அடிமைத்தனத்தைக் காட்டிலும் மரணமே எனக்கு மிகப் பிரியமாகும். உங்களாலானவளவு கெடுதி செய்து பாருங்கள்" என்றான் சந்திரகுப்தன்.

அலெக்சாண்டருக்குக் கோபம் மிதமிஞ்சிப்போயிற்று. ஹெபேயிஸ்டியனையும் பிலிப்பாஸையும் அழைத்துப் போரவஸினுடைய இரகசியமான இருட்டறைக்குச் சந்திர குப்தனைக்கொண்டு போய், மறு உத்தரவு செய்கிறவரையில், அடைத்து வைக்கச் சொன்னான். சந்திரகுப்தனைத் திடீ ரெனப் பிடித்துக் கொண்டார்கள். எதிர்த்தால் உடனே சாவு நிச்சயமென நினைத்துச் சந்திரகுப்தன் எதிர்க்காதிருப் பதே யுக்தமெனக் கொண்டான். அவனைக் கொண்டு போகும்போது அலெக்சாண்டருக்குக் கேட்கும்படி அவன், "இப்போதுள்ள நந்தர்கள் எனக்குச் சத்துருக்களேயானா லும், பிறநாட்டாராகிய உங்களுக்கு முழுத்தோல்வியும் அவர்களுக்கு முழுவெற்றியும் கிடைக்கவேண்டுமென விரும் புகிறேன். உங்களைச் சுற்றித் திரிந்துகொண்டு உங்களுக்கு அடிமைகளாயிருக்கிற போரஸ், ஆம்பீஸ் முதலான இந்திய மன்னர்களின் நிலைமையைப் பார்த்துப் பரிதபிக்கிறேன். அவர்களுக்கு எப்படிப்பட்ட யஜமானன் வாய்த்தா னப்பா!" எனக் கூவினான்.

"அவனைக் கொண்டு போங்கள்! தர்பார் முடிந்தபின், அவனுக்குத் தக்க தண்டனை விதிப்பேன். அதுவரையில் சோறும் தண்ணீரும் இல்லாமல் அவனை அந்த இரகசியமான இருட்டறையில் அடைத்துவையுங்கள்" என்றான் அலெக்சாண்டர்.

அலெக்சாண்டருக்கும் சந்திரகுப்தனுக்கும் நிகழ்ந்த சம்பாஷணையில் ஒவ்வொரு வார்த்தையையும் அதிசயத்தோடும் ஆச்சரியத்தோடும் ஆக்கிரகத்தோடும் திகிலோடும் சாந்தவதியும் ஸ்வர்ணமயியும் கேட்டுக்கொண்டிருந்தார்கள். "ஹா! எவ்வளவு தீரரென்று நான் நினைத்தேனோ அவர் அவ்வளவு தீரமுள்ளவராகவே இருக்கிறாரே. அவரைத் தவிர மற்றெவரையும் நான் மணக்கமாட்டேன். மூர்க்கனான இந்த யவனன் யுத்த நீதிகளையும் விருந்தோம்பும் முறைகளையும் மீறப் பார்க்கிறான்; விருந்தாக வந்தவனைச் சிறையிலடைக்கவும் கொல்லவும் பார்க்கிறான். அதுவும் நம்முடைய அரண்மனையிலேயே! நாம் இதைத் தடுக்க வேண்டும்" என்றாள் சாந்தவதி.

"எப்படித் தடுக்கிறது? நாமோ பெண்பிள்ளைகள். நாம் என்ன செய்யமுடியும்?" என ஸ்வர்ணமயி வினவினாள்.

"நாம் என்ன செய்யமுடியாது? என் மாமா அவனுக்கு அடிமையேயன்றி, நாம் அடிமையல்ல. அந்த இருட்டறைக்கு ஒரு கள்ளக்கதவு இருப்பது உனக்குத் தெரியுமே. அதன் வழியாக நான் உள்ளே புகுந்து, ராஜகுமாரரை விடுவித்துச் சாணக்கியரிடம் அனுப்புவேன். எப்படிப்பட்ட அவசரத்திற்கும் அவர் ஸித்தமாயிருப்பார்" எனச் சாந்தவதி மொழிந்தாள்.

"என் கண்ணே! ஸாயங்காலம் தர்பார் முடிந்தபின், அலெக்சாண்டர் இந்தச் சூதைக் கண்டுகொள்ளமாட்டானா? அப்போது உன் மாமா என்ன சொல்வார்?" என வினவினாள் ஸ்வர்ணமயி.

"அவர் என்னவேண்டுமானாலும் சொல்லிக்கொள்ளட்டும். இவ்விடத்தில் வெட்கங்கெட்டதனமாக இப்படிச் சிறைப்படுத்துவதற்கும் கொலை செய்வதற்கும் நாம் இடங்கொடுக்கக்கூடாது. அவ்வறைக்குக் கள்ளக்கதவு இருக்கிறதென்று அலெக்சாண்டருக்குத் தெரியாது" என்றாள் சாந்தவதி.

"அது ஆபத்தான காரியம். உன் தந்தையாரும் அதை ஒப்புக்கொள்ளமாட்டார்" என்றாள் ஸ்வர்ணமயி.

"அவர் நிச்சயமாக ஒப்புக்கொள்வார். நான் செய்வதெதனையும் அவர் ஒப்புக்கொள்ளாமல் ஒரு போதும் இருந்ததில்லை. என் மாமாவுக்குக் கோபம் வருமென்பது திண்ணம். ஆனால், நியாயபுத்தி மேற்கொண்டு ஜீவகாருண்யங் காட்டும்படி அவரை நான் வேண்டிக்கொள்வேன்; தர்மத்தை எடுத்துரைப்பேன். அதனால் அவருடைய கோபம் தணிந்துபோம். அந்த ராஜகுமாரரை நான் மீட்கவேண்டும்; இல்லையெனின், இறக்கவேண்டும். நீயும் ஸிம்மபுரத்து ராஜகுமாரி. 'ஸிம்மபுரம்' என்றால் என்ன? 'ஸிம்மத்தின் இருப்பிடம்'. சிங்கத்தின் வயிற்றிற் பிறந்து இன்றைக்கு நாம் ஆடுகளாகலாமா? அத்தை, அந்தக் காரியங்களை யெல்லாம் நான் பார்த்துக் கொள்கிறேன். விரைந்தோடத்தக்க இரண்டு குதிரைகளை வெளியே ஸித்தமாக ஓர் ஆள் வசம் வைத்திரு; நகரத்திற்கு வெளியேயுள்ள அடவியினண்டை வேறு ஐந்து குதிரைகளை வைத்திரு. அவ்வடவிக்குப் போய்ச் சந்திரகுப்தனுக்காகக் காத்திருக்கும்படி சாணக்கி

யருக்குச் சொல்லியனுப்பு. ஓ, ராஜகுமாரரது தலைவிதியை நினைத்து என் மனம் நடுங்குகின்றது. அவரை விடுவிக்கும் வரையில் நான் அமைவு கொள்ளமுடியாது" என்று சாந்தவதி சொன்னாள்.

"சாந்தா! எனது கன்னிப்பருவத்தை எனக்கு நீ ஞாபகமூட்டுகின்றாய். இப்போது சந்திரகுப்தனைப்பற்றி உனக்கு மனம் எப்படி அடித்துக் கொள்கிறதோ, அப்படி எனக்கு உன் மாமாவைப்பற்றி அப்போது அடித்துக் கொண்டது. என் அன்பே, உனக்கு என்னாலான உதவி நிச்சயமாகச் செய்வேன். இவ்வாறு தன் உயிரைக் காப்பாற்றியதற்காக அவன் உன்னை விவாகம் செய்துகொள்வானென்று நினைக்கிறேன்" என்று ஸ்வர்ணமயி சொன்னாள்.

"காதல் ஒருபோதும் கைம்மாறு வேண்டாது; பாசம் பிச்சை புகாது. அவர் என்மீது காதல் கொண்டிருக்கிறாரென நினைக்கிறேன். உண்மையிற் காதலிக்கிறவரானால் என்னை விவாகம் செய்து கொள்ளட்டும்; இன்றேல், சாந்தையின் மனத்திற்குச் சமாதானம் ஒருபோதும் ஏற்படாது. ஆயினும், எவரோடும் அதைப்பற்றி ஒரு வார்த்தையும் பேசமாட்டாள் அவள்" என்றாள் சாந்தவதி.

சாந்தையின் மனோபாவத்தைக் கண்டு பெருமை பாராட்டுபவளாய்த் தலையசைத்து ஸ்வர்ணமயி உள்ளே போனாள்.

ஹெபேயிஸ்டியன், பிலிப்பாஸ், 12 கிரேக்கப்போர் வீரர்கள், போரஸினுடைய ஆட்கள் 12 பேர் ஆகிய இவர்களெல்லாரும் சேர்ந்து சந்திரகுப்தனை அந்த இரகசிய இருட்டறைக்குள் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். அது 24 அடி நீளமும் 24 அடி அகலமும் உள்ளது. அதன் சுவர்கள் 24 அடி உயரமும், 6 அடி கனமும் வாய்ந்தவை.

பக்கத்திற்கு இரண்டாக நான்கே பிளவுக் கீற்றுகள் இருந்தன. அவை ஒவ்வொன்றும் இரண்டு அங்குல அகலமானவை. அவைகளும் கிட்டத்தட்ட உச்சியினண்டை இருந்தன. சந்திரகுப்தனை அங்கே வைத்துவிட்டுக் கனத்த கதவுகளைச் சாத்திப் பூட்டுப்போட்டார்கள். அவன் முழு இருளிலேயே அடைபட்டிருந்தானென்று சொல்ல வேண்டும். இனித் தனக்கு என்ன நேருமோவெனத் தெரியாமல் அவன் அங்கே திகைத்துக் கொண்டிருந்தான். அவன் நந்தர்களுடைய தரைக்கீழ்ச் சிறையில் அடைபட்டு அநேக ஆபத்துக்களுக்கு ஈடுகொடுத்தவனானமையின், இந்தச் சிறை அவனுக்குச் சாமானியமாகவே தோன்றியது. தப்பி வெளியேறமாட்டோமென அவன் அதைரியம் கொள்ளவில்லை. எப்படிப்பட்ட சந்தர்ப்பத்திலும் சாணக்கியர் சாமர்த்தியமாக நடந்துகொள்வாரென்னும் நம்பிக்கை அவனுக்குத் திடமாக இருந்தது. தரிசனசாலையின் வெளிப்புறத்திலிருந்து சாணக்கியர் கவனித்துக் கொண்டிருந்ததையும், அங்கிருந்து போய்விட்டதையும் சந்திரகுப்தன் பார்த்திருந்தான். அவர் போகும்போது, மிகவும் அசந்தர்ப்பமான நிலைமையில் துணிந்து எதிர்க்க வேண்டிவரும் சமயம் அவருக்கு வழக்கமாயுள்ள வைராக்கியப்பார்வை அவர் முகத்திற் காணப்பட்டது.

"என்ன அற்புதமான மனிதர்! அவர் என்மீது அவ்வளவு ஆசை கொண்டிருப்பது என்னுடைய நல்லதிருஷ்டமல்லவா! அவரால் விடுவிக்கமுடியாத கஷ்டம் ஒன்றுமே இல்லை. இந்தப் பருத்த சுவர்கள் அவரைத் தடுக்கமாட்டா" என்று அவன் தனக்குத் தானே சொல்லிக்கொண்டான்.

அன்று காலையில் பலமான சாப்பாடு சாப்பிட்டிருந்ததனால் அவனுக்கு உறக்கம் வந்தது. அவன் அரைத்தூக்க

மாயிருக்கும்போது அவ்விருட்டறைச் சுவரின் ஒரு பாகம் மெதுவாக நடுவிற் சுழல்வதைக் கண்டு அவன் ஆச்சரியப் பட்டான். அது சுழன்று குறுக்கு வாட்டமாக நின்று இரு புறத்தும் தாராளமாக வழிவிட்டது. ஆனபோதிலும் முன்னால் அந்தச் சுவர் மிகக் கனமாகத் தோன்றியதனால், அப் படிப்பட்ட சூழ்ச்சி அதில் அமைந்திருக்குமென்று அவன் சந்தேகப்படுவதற்கே இடமில்லாதிருந்தது. இந்த அற்புத மான காரியம் சாணக்கியரே செய்திருக்கவேண்டுமென்று அவன் தீர்மானித்து மெல்லிய குரலில், "பூஜ்யரே, உங் களுக்கு எதுவும் அசாத்தியமன்று" என்று சொன்னான்.

திறந்துவிடப்பட்ட வாசல் வழியே சாணக்கியருடைய வடிவத்திற்குப் பதிலாகச் சாந்தவதியின் மனோஹரமான ரூபம் வந்ததைக் கண்டு அதிசயித்தான். அது கனவோ எனச் சங்கித்துக் கண்ணைத் துடைத்துக்கொண்டு கவ னித்துப் பார்த்தான். இன்னும் அந்தத் தோற்றம் தயங்கிக் கொண்டே இருந்தது.

"நான் கனவு காண்கிறேனா என்ன?" என்று அவன் கொஞ்சம் உரத்து முணுமுணுத்தான்.

"ராஜகுமாரரே! இது கனவன்று. உங்களை இப்படி அவமானப்படுத்தியதைக் கண்டு, உங்களை விடுவிக்கச் சங் கற்பித்துக்கொண்டேன். சற்று முன்னால் யாரை நோக்கிப் பேசிக்கொண்டிருந்தீர்கள்?" எனச் சாந்தவதி சொன்னாள்.

"என் ஆசாரியர் சாணக்கியரென்றெண்ணிப் பேசி னேன். இந்நிலைமையினின்று என்னை அவர் காப்பாற்றுவா ரென எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். என்னை மீட்க நீ வருவாயென்று நான் சொப்பனத்திலும் நினைக்கவில்லை" என்று சந்திரகுப்தன் சொன்னான்.

"அதனால் விசனப்படுகிறீர்களா என்ன?" என அவள் கேட்டாள்.

"அப்படி இல்லை, இல்லை. எனக்கு இரட்டிப்புச் சந்தோஷமாயிற்று. ஒரே காலத்தில் இரண்டு நோய்கள் நிவர்த்தியாயின. உன்னை நான் பார்த்ததும் உன் கண்ணொளியின் வாயிலாக விளங்கிய வர்த்தமானத்தைத் தெரிந்துகொண்டேன். அது முதல் என் மனம் என்னுடையதல்லவாயிற்று. சாந்தா! இன்று காலையில் எனக்காக நீ கீழே போட்ட மலர் இதோ இருக்கின்றது, பார்" என்று சந்திரகுப்தன் சொல்லித் தன் மார்பினண்டை வைத்திருந்த மல்லிகைப் பூவை எடுத்துக் காட்டினான்.

லஜ்ஜை மிகுந்தவளாய்ச் சாந்தவதி, "அலெக்சாண்டருக்கு நீங்கள் ஆண்மையோடு சொல்லிய மறுமொழிகள் எனக்குப் பிடித்திருந்தன. தீரத்தைக் கண்டால் எனக்கு ஆசை" என்று சொன்னாள்.

"அப்படியானால், சாந்தா, உன்மீது நான் மோகங்கொண்டிருக்கிறேனென்பதைத் தைரியமாகச் சொல்வேன். எனக்கு மனைவியாகி, என்றென்றைக்கும் என்னை மகிழ்விப்பாய்" என்றான் சந்திரகுப்தன்.

வாய் பேசாமல் சாந்தை மௌனமாக நின்றாள். அவள் உடம்பில் ஒரு நடுக்கல் எடுத்தது. அவள் மூர்ச்சித்துச் சோர்வாள் போலிருந்தது. அந்தச் சமயத்தில் சந்திரகுப்தன் அவளைத் தன் கரங்களில் ஏந்திக்கொண்டு, "உன்னை நான் காந்தர்வ முறையில் விவாகம் செய்து கொள்ளுகிறேன். இம்முறைப்படியான விவாகம் க்ஷத்திரியர்களுக்கு உரியதே" என்று சொல்லி அவளை மார்போடு அணைத்துக் கொண்டு முத்தமிட்டான்.

அவளும் அவனைத் திரும்ப ஆலிங்கனம் செய்து கொண்டபோது, அவளுடைய முகம் ஆனந்தத்தினால் மலர்ந்திருந்தது. உடனே தன் நினைவு வந்து அவள், "முதலில் இவ்விடத்தினின்று நாம் வெளியேறவேண்டும். இந்தக் கள்ளக்கதவைத் திறந்த வேலைக்காரர்கள் இதை மறுபடி முன் போலத் திருப்பி வைப்பதற்குக் காத்துக்கொண்டிருக்கிறார்கள். வாருங்கள், போவோம்" என்றாள்.

"இந்தச் சுவரில் இப்படிப்பட்ட வழி இருக்குமென்று நான் நினைக்கவே இல்லை" என்றான் சந்திரகுப்தன்.

"அந்த அன்னியநாட்டானான யவனனும் நினைக்கவில்லை. நல்லவேளையாக ஒரு வழி இருந்ததே" என்றாள் அவள்.

அப்படிச் சொல்லிக்கொண்டே அவள் சந்திரகுப்தனை அந்தப்புரத்திலுள்ள தன் அறைக்கு அழைத்துக்கொண்டு போனாள். கள்ளக்கதவு மூடப்பட்டது. அவளுடைய அறைக்குப் போய் ஸ்வர்ணமயி அவர்களைப் பார்த்தாள். காந்தர்வ விவாகம் நடந்ததைப்பற்றிச் சாந்தவதி அவளுக்குக் குறிப்பாகத் தெரிவித்தாள்.

"நீங்களிருவரும் இனிது வாழ்க!" என்று ஸ்வர்ணமயி ஆசீர்வதித்தாள். பிறகு சந்திரகுப்தனைப் பார்த்து, "உன் மீது வைத்துள்ள நம்பிக்கைக்கு மாறு செய்யாதே. இவளை எப்போதும் அன்புடன் ஆதரி" என மொழிந்தாள்.

"அப்படியே செய்வேன்" என்று சந்திரகுப்தன் பிரமாணம் பண்ணினான்.

சாந்தவதியைப் பார்த்து ஸ்வர்ணமயி, "முறைப்படி கலியாணம் வெளிப்படையாக நடக்கிறவரையில் இந்த விவாகத்தை இரகசியமாக வைத்துக்கொள். இப்போது

ராஜகுமாரன் மற்ற ஐவரோடும் போய்ச் சேர்ந்து கொள்ளட்டும். ஸிம்மபுரத்தினின்று புறப்படுவதற்குச் சித்தமாக ஐவரும் அடவியிற் காத்துக்கொண்டிருக்கிறார்களெனச் சாணக்கியரிடமிருந்து இப்பொழுதுதான் செய்தி வந்தது. ஆகையால், நம் தூதர்களுள் ஒருவனுக ஆடையுடுத்து ராஜகுமாரன் குதிரையேறி ஓடிப்போகட்டும். சாணக்கியர் மிகவும் கெட்டிக்காரர். அவர் உன் தகப்பனார் வீட்டு ராஜகுருவோடு பள்ளிக்கூடத்திற் படித்தவர். உன் தந்தையார் இந்த விவாகத்தை ஒப்புக்கொள்ளும்படி செய்வதில் அவருக்குக் கஷ்டமே இல்லை. அன்றி, இவ்விவாகத்தை மிகச் சிறப்பாகவும் ஆச்சரியகரமாகவும் நடத்திவைப்பதாக அவர் சொல்லுகிறார். இந்த விவாகத்தை நிறைவேற்றுவதே நல்லதெனப் பலமாகச் சிபார்சு செய்து விஜயஸிம்மனுக்குக் கடிதம் எழுதி நம் தூதன் வசம் அனுப்பியிருக்கிறேன். இனி உன் மாமாவும் மற்றொரு கடிதம் சிறிது நேரத்தில் எழுதியனுப்புவார். ஆகையால், முறைப்படி விவாகம் நடப்பதற்கு நீ நெடுநாள் காத்திருக்க வேண்டியிராது. அதுவரையில் பொறுத்துக்கொள். இப்போது ராஜகுமாரன் மாறுவேடம் புனைந்துகொண்டு போகட்டும்” என்று சொன்னாள்.

ஸ்வர்ணமயிக்கு நன்றி பாராட்டிச் சந்திரகுப்தன் சில வார்த்தைகள் சொன்னான். பின்பு, இரகசிய விவாகத்தின் அடையாளமாகச் சாந்தவதிக்கு ஒரு மோதிரம் அளித்து, ஸிம்மபுரத்திற்குச் சீக்கிரம் வந்துவிடும்படி அவளுக்குச் சொன்னான். ‘நாளைக்கே வேண்டுமானாலும் நான் புறப்படுகிறேன்’ என்று அவள் மறுமொழி கூறினாள். சந்திரகுப்தன் ஆடை மாற்றிக்கொள்வதற்கு இடங்கொடுத்து ஸ்வர்ணமயியும் சாந்தவதியும் அவ்வறையை விட்டு வெளியே



சாந்தவதியும் சந்திரகுப்தனும்

(பக்கம் 303)

போனார்கள். அவர்கள் திரும்பி வந்தபோது, போரஸினுடைய தூதர்களில் ஒருவனைப்போலவே அவன் அவ்வாடையில் தோன்றியதைக் கண்டு அவர்கள் ஆச்சரியப்பட்டார்கள்.

சாந்தவதி மகிழ்வுற்று, "நாதரே, நீங்கள் விரைவில் வேஷம் மாறும் கலையில் தேர்ந்தவர்கள். அவ்வளவு சீக்கிரமாக உங்கள் மனம் மாறுமென்று நினைக்கிறேன்" என்று சொன்னாள்.

"நிஜமாகவே இந்த ராஜகுமாரன் நம் கடிதங்களை எடுத்துக்கொண்டு போகும் வேலைக்காரனைப்போலவே இருக்கிறான். இப்போது இவனுடன் நீ அளவளாவிக் கொண்டிருப்பதை உன்மாமா கண்டாரானால், தம்முடைய இழிவேலைக்காரனொருவனிடம் தம் மருமகள் நேசம் வைத்திருக்கிறாளென்று எண்ணங்கொண்டு வெட்கப்பட்டு உயிர் துறப்பார்" என்றாள் ஸ்வர்ணமயி.

சாந்தவதி கலகலவெனச் சிரித்தாள்; "நல்லவேளை, இவர் ராஜகுமாரராக இருக்கிறார். கடிதம் கொண்டுபோகிற வேலைக்காரராயிருந்தாலும் இவர்மீது எனக்குப் பாசம் விடாது" என்றாள் சாந்தவதி.

சந்திரகுப்தனுடைய பழைய ஆடைகளை வைப்பதற்கு ஒரு சிறிய துணிப்பை கொண்டுவரும்பொருட்டு ஸ்வர்ணமயி உள்ளே போனாள். அந்தச் சமயம் பார்த்துச் சந்திரகுப்தன் சாந்தவதியைத் தன் கையால் தூக்கிக்கொண்டு அன்பார்ந்த பிரியா விடை பெற்றுக்கொண்டான். ஸ்வர்ணமயி திரும்பி வந்து, "இதோ பை கொண்டு வந்தேன்" என்றாள். சந்திரகுப்தன் தன் ஆடைகளை அதற்குள் அடைத்தான். கங்காதீரத்துரவை சல்லாவினாற்செய்த கைக்குட்டையொன்றை நறுமண மூட்டிச் சாந்தவதி கீழே வைத்தாள்.

அவன் அதை மெதுவாக எடுத்துப் பைக்குள் வைத்துக் கொண்டான். வெளியே போரவஸினுடைய ஆள் ஒருவன் வைத்துக் காத்துக்கொண்டிருந்த குதிரையின் மீதேறி, சாணக்கியரோடு சேர்ந்து கொள்வதற்கு அவன் புறப்பட்டான்.

புக்கிபேலாவுக்கு வெளியே காட்டிலிருந்த மற்ற ஐவரையும் சீக்கிரத்தில் இவர்கள் போய்ச் சேர்ந்து கொண்டார்கள். சாணக்கியர் நகைமுகங்கொண்டு சந்திரகுப்தனைப் பார்த்து, "இங்ஙனம் நீ ஒரே வேளையில் விடுதலையும் பந்தமும் பெற்றாய்" என்று சொன்னார்.

"விடுதலையைக் காட்டிலும், அந்தப் பந்தம் அதிக இனிமையானது" என்றான் சந்திரகுப்தன்.

"இவளைக்காட்டிலும் சிறந்த கன்னிகை வாய்ப்பது துர்லபம்" என்றார் சாணக்கியர். அதன்மீது அவ்வெழுவரும் ஸிம்மபுரத்தை நோக்கிச் சென்றார்கள். வழி தெரிந்த போரவஸின் ஆள் முன் நடந்தான்.

புறப்பட்ட ஒன்பதாம் நாள் அவர்கள் ஸிம்மபுர ராஜ்யத்து எல்லையோரத்திலிருந்த பாலைவனத்தில் சில கூடாரங்களில் ஒருநாள் பிற்பகல் தங்கியிருந்தார்கள். வெயில் கடுமையாக இருந்ததால், அவர்களெல்லாரும் சிறு துயில் மேற்கொண்டனர். சாணக்கியர் கண்ணைத் திறந்து பார்க்கையில் பெரிய சிங்கமொன்று சந்திரகுப்தனண்டை இருக்கக் கண்டார். சடுதியில் அவர் அதை நோக்கிப் பாயவே, அது ஓடிப்போயிற்று. சந்திரகுப்தனும் அப்பொழுதே விழித்துக் கொண்டான். இடையில் நேர்ந்த இந்தச் சங்கதியைச் சாணக்கியர் அரசியற் காரியத்திற்குப் பேருதவியாக்கிக் கொண்டார். படுத்திருந்தவர்களெல்லோரையும் எழுப்பி,

"அந்தச் சிங்கம் சந்திரகுப்தனுடைய உடம்பை அன்புடன் நக்கியது; அவன் விழித்துக்கொள்ளவே அது மெதுவாகத் திரும்பி நடந்து போயிற்று. இந்தச் சம்பவமானது சந்திரகுப்தன் பெரிய சக்கரவர்த்தியாவான் என்பதற்கு நிச்சயமான அறிகுறியாகும்; ஸிம்மபுரத்து அரசனுடைய மருமகனுவான்; ஸுகங்கா அரண்மனையில் நந்தர்களுடைய சிங்காதனத்தின்மீது ஒருநாள் அமர்வான்" என்று சொன்னுர். திரும்பிப் போய்க்கொண்டிருந்த சிங்கத்தை அவர்கள் எல்லோரும் பார்த்தார்கள். இந்த அற்புதமான சம்பவம் காட்டுத் தீயைப் போல, நாடு முழுதும் பரவியது. அதுமுதல் சந்திரகுப்தனை எல்லாரும் நாடாளப்பிறந்தவன் என அழைக்கத் தலைப்பட்டார்கள்.

போரவஸினுடைய வேலைக்காரன் சிங்கத்தைக் கண்ணுரக் கண்டேனென்று இந்த வர்த்தமானத்தை ஸிம்மபுரத்து அரசனிடம் சொல்லிக்கொண்டே ஸ்வர்ணமயி கொடுத்தனுப்பிய கடிதத்தை அவனிடம் நீட்டினுன். சாந்தவதிக்கேற்ற கணவன் சந்திரகுப்தனைக் காட்டிலும் வேறொருவன் கிடைக்கமாட்டானென்று அந்தக் கடிதத்தில் ஸ்வர்ணமயி சொல்லியிருந்த அபிப்பிராயம் சரியேயென்று அரசன் உடனே ஒப்புக்கொண்டான். ஸிம்மபுரத்திலுள்ள பெரிய அரண்மனையொன்றில் சந்திரகுப்தனுக்கும் சாணக்கியருக்கும் வேண்டிய வசதிகளை அமைத்துக் கொடுத்தான். சந்திரகுப்தனேடும், சாணக்கியரோடும், தன் அரண்மனைப் புரோகிதரோடும் சிறிது நேரம் பேசிய பின், இந்த விவாகமே மிகப்பொருத்தமானதென மனத்தில் திடப்படுத்திக் கொண்டான். ஸ்வயம்வர முறையில் விவாகம் நடத்தவேண்டுமென்று சாணக்கியர் சொன்னுர்.

ஏனெனில், க்ஷத்திரிய ராஜகுமாரி அந்த முறைப்படியே கணவனை வரிக்கவேண்டுமென்று அவர் கருதினார். அதற்கு விஜயஸிம்மன் ஆக்ஷேபிக்காமல் உடனே ஒப்புக் கொண்டான்.

சந்திரகுப்தன் வந்தபின் ஏழாம் நாள் சாந்தவதி ஸிம்மபுரம் வந்து சேர்ந்தாள். போரஸினுடைய ஆட்கள் துணைப்படையாக அவளைக் கொண்டுவந்து விட்டார்கள். இந்தக் கலியாணம் முடிப்பதே நல்லதெனப் பலமாகச் சிபார்சுசெய்து போரஸும் ஒரு கடிதம் எழுதியிருந்தான். ஸ்வயம்வர விவாகம் நடக்கப் போகிறதென்பதை அறிந்து சாந்தவதி மிகக் களிப்புற்றாள். "இரகசியமாகக் கொண்ட காதலைப் பகிரங்கமாக வெளியிட்டு வரிப்பதினும் இனிமையானது வேறொன்று மில்லை" என்று அவள் சந்திரகுப்தனுக்கு இரகசியமாக எழுதினாள். பின்பு சில நாளைக்குள் ஸிம்மபுரத்தில் மகத்தான ஸ்வயம்வரம் நடந்தது. பஞ்சாபு, மாளவம், ஸிந்து, கன்னியாகுப்ஜம், ஸௌராஷ்டிரம், மகாராஷ்டிரம் முதலான பிரதேசங்களிலிருந்து ராஜகுமாரர்களும் சிற்றரசர்களும் அநேகர் வந்தார்கள். ஸிம்மபுரத்தார் அவர்களெல்லாரையும் வரவேற்று, ராஜோபசார மரியாதைகளுடன் விடுதியும் வசதியும் அமைத்துக் கொடுத்தார்கள்.

புஷ்யமாசத்தில் ஒரு திங்கட்கிழமை உதயத்தில் (கி. மு. 325 ஜனவரி) மகத்தான ஸ்வயம்வர முகூர்த்தம் கொண்டாடப் பெற்றது. ஸ்வயம்வர ஸபை கூடுமுன்னரே, வெளியூர்களிலிருந்து வந்திருந்த ராஜகுமாரர்கள் 87 பேரும், 'சந்திரகுப்தன் மகத சக்கரவர்த்தியின் வமிச பரம்பரையில் வந்தவன்; பாலைவனத்துச் சிங்கம் வந்து ஜம்பூத்வீபத்திற்குப் பேரரசனாக வரத்தக்கவன்

அவனேயென வாழ்த்தி விளம்பரப்படுத்திப் போயிருக்கின்றது; ஆதலால், சந்திரகுப்தனுக்கே அந்த ராஜ கன்னிகை மாலையிடுவாள்; நமக்குக் கிட்டமாட்டாள்' எனத் தீர்மானித்துக் கொண்டார்கள். ஊர் ஜனங்களெல்லாரும் சந்திரகுப்தனே மணாளனவனென்று ஒரே வாக்காகக் கூறினார்கள். "அவன் ஸரளன் (கூடிக்குலவும் தன்மையுள்ளவன்), கள்ளங்கவடற்றவன், ஸரஸி, தேர்ந்த அசுவாரூடன், விற்பயிற்சியில் விஜயன், யானைகளுக்கு அங்குசம் போன்றவன், ரத ஸாரத்தியத்தில் கிருஷ்ணனைப் போன்றவன்" என்று ஜனங்கள் பேசிக்கொண்டார்கள். அவை யெல்லாவற்றைக் காட்டிலும், ஜனவசீகரமான அவனது புன்முறுவலையும், உள்ளத்தோடு சிரிக்கும் சிரிப்பையுங் கண்டு எல்லாரும் அவன்மீது ஆசை கொள்ளலானார்கள். ஸிம்மபுரத்தில் அடைக்கலம் புகுந்திருந்த கதேயத்துச் சிற்றரசர்களும், மற்றுமுள்ள ஜன நாயகக்குடிகளும் சந்திரகுப்தன்மீது மிக்க நல்லபிப்பிராயங்கொண்டு, அலெக்சாண்டரை எதிர்த்துச் செல்வதாயிருப்பின் தாங்கள் அவன் கீழ்ப் படைகளாக இருப்பதாகவும், தங்களை நடத்துவானாகில் அவனைத் தங்கள் அரசனாக்கிக்கொள்வதாகவும் உறுதியுடன் வாக்குக் கொடுத்தார்கள். அவர்கள் விரும்பியபடி செய்வதாகச் சந்திரகுப்தனும் ஒப்புக்கொண்டான்.

அவ்விடத்தில் பஞ்சாபு, மாளவம், க்ஷுத்ரகம், ஸிந்து முதலான தேசங்களிலிருந்து ஆயிரக்கணக்கான பிராமணர்கள் வந்திருந்த சமயத்தை வீண்போக்காமல் சாணக்கியர் அவர்களை அலெக்சாண்டருக்குப் பரம சத்துருக்களாகவும், சந்திரகுப்தனுக்குப் பரம மித்திரர்களாகவும் செய்தார். பிறநாட்டிலிருந்து வந்தவனுக்கு

எவ்வளவு அசௌகரியமும் பிரதிகூலமும் விளைக்கக்கூடுமோ அவ்வளவும் செய்யும்படி அவர்களைத் தூண்டிவிட்டார். "நம் நாட்டில் அவனுக்கு அமைதி ஒருபோதும் ஏற்படாமற் போகட்டும். கலகம் செய்து எழுந்திருக்கிறவர்கள் விடாமற் கலகம் செய்து கொண்டிருக்கும்படி அவர்களை உற்சாகப்படுத்துங்கள். அவனுக்கு அடங்கிப் போனவர்கள் மறுபடி கலகம் செய்யும்படி அவர்களைக் கிளப்பி விடுங்கள். நம் நாட்டைவிட்டு ஓடிப் போனுற் போதுமென்று அவன் நினைக்கத்தக்க அளவு அவனுக்குத் துன்பம் உண்டாக்குங்கள். அவன் வெல்ல முடியாதவனல்லன். அவனுக்குப் பயமில்லாமலும் இல்லை. விபாஸ[1] நதியினின்று அவன் பின்னிட்டு ஓடிவந்ததனுலேயே, எதிரிகள் பலமாக எதிர்ப்பார்களென்று தெரிந்தால் ஸிந்துக்கரையினின்றும் அவன் திரும்பி ஓடிப்போவானென்பது தெரியவருகிறது" என்று அவர் அவர்களுக்குச் சொன்னுர்.

அவர் விரும்பியவண்ணம் செய்வதாகப் பிராமணர்கள் வாக்களித்தார்கள். வீரர்களான மாளவர்களும் க்ஷுத்ரகர்களும் தங்கள் நாட்டின்மீது படையெடுப்பதற்குச் சித்தமாயிருந்த கிரேக்கர்களை அறை கூவுவதற்கு 'ஸ்வதந்திர கீதம்' என்பதொன்றைக் கவனம்செய்து பாடிக் கொண்டிருந்தார்கள். அந்தக் கீதத்தைப் பிராமணர்களுக்குச் சாணக்கியர் சொல்லிக்கொடுத்தார். ஸிந்துநதியின் முகத்துவாரம் வரையிலுள்ள இந்தியர்கள் எல்லாருக்கும் அதைக் கற்பித்து, அவர்கள் அதைப பிரபலமாகப் பாடிக்கொண்டிருக்கச் செய்யவும், உயிர் போகிறவரையில் எதிர்த்துப் போராடும்

1. ஹைபேஸிஸ் அல்லது பியாஸ்.

படி செய்யவும் அந்தப் பிராமணர்களைக் கேட்டுக் கொண் டார்.

ஸிம்மபுர ராஜனது சபாமண்டபம் மிகச் சிறப்பாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. முகூர்த்த தினத்தன்று 88 சிற்றாசர்களும் ராஜகுமாரர்களும் அதில் வந்து கூடி னர்கள். சந்திரகுப்தன் முதல் வரிசையில் உட்கார்ந் திருந்தான். மணத்தை உத்தேசித்து வந்தவன் ஒவ்வொரு வனும் தனக்கு அடுத்தபடியாகச் சந்திரகுப்தனே மணவாள னாகத் தக்கவனெனச் சொல்லியிருப்பான். ராஜகுமாரி சாந் தவதி அந்த மண்டபத்திற்கு வந்தாள். திவ்வியமான கூறை யுடுத்துத் தக்க ஆபரணங்களையும் அணிந்திருந்ததனால், அவளுக்குள்ள இயற்கையழகு மிகச் சிறந்து விளங்கியது. நிர்த்தோஷமான அழகே உருவெடுத்து வந்திருக்கும் அதிசயமான தோற்றத்தைக் கண்டு அவர்களெல்லாரும் அயர்ந்து போனார்கள். ஐயப்பாடான நிலைமையில் அவர் களை அவள் நெடுநேரம் காத்திருக்கும்படி செய்யவில்லை. நேரே சந்திரகுப்தனண்டை போய், அவன் கழுத்தில் மாலை யைப் போட்டு, அவன் பாதத்திற் பணிந்தாள். தாரை முதலான வாத்தியங்களின் முழக்கத்தினால் சாந்தவதியின் தீர்மானம் விளம்பரப்படுத்தப்பட்டது. பெரிய ஆரவாரத் தினிடையே ஸிம்மபுரத்து ராஜகுரு, "இந்த நக்ஷத்திரங் களுக்குள் இவள் இந்தச் சோமவாரதினம் சந்திரனையே வரித்துள்ளாள். இந்தத் தம்பதிகள் நீடூழி வாழி!" என ஆசி கூறினர்.

குழுமியிருந்த ஜன ஸமூகமெல்லாம், "சந்திரகுப்த ராஜனும் சாந்தவதி ராணியும் வாழி வாழி!" என ஆர்ப் பரித்தார்கள்.

---

## அத்தியாயம் 16

## புக்கிபேலா தர்பார்

புக்கிபேலாவில் அலெக்சாண்டருடைய மாளிகை மிக மிகச் சிறப்பாக விளங்கியது. பெரிய கொடிகளும், கொடிச்சீலைக் கம்பளங்களும், பதாகைகளும் வகை வகையாக நின்று பிரகாசமான சூரிய ஒளியில் உல்லாஸமாக அசைந்து கொண்டிருந்தன. விலையுயர்ந்த பாரவிகத்துக் கம்பளங்கள் தரைமீது விரிக்கப்பட்டிருந்தன. சிற்றரசர்களும் ராஜதூதர்களும் அமருவதற்காக நீண்ட சாய்மணைப் பீடங்களும் மஞ்சங்களும் வரிசை வரிசையாக வைக்கப் பட்டிருந்தன. அவையெல்லாம் மிகச் சௌகரியமாகவும் விசித்திர வகையாகவும் அமைக்கப்பட்டிருந்தன. பளபளப்பான பலவகைப் போர்க்கவசம் தரித்த வீரர்கள் அவ்விடத்தில் எங்கெங்கும் நின்று கொண்டிருந்தார்கள். அலெக்சாண்டருக்கு மகத்தான சிங்காசனமொன்று அமைக்கப்பட்டிருந்தது. அவனுடைய தோழர்களெல்லாரும் பொற்கவசம் பூண்டிருந்தார்கள். லவணபர்வதத்து அரசனை சௌபூதி கொடுத்திருந்த நவரத்தின கசிதமான பத்தரைமாற்றுத் தங்கக்கவசத்தை அலெக்சாண்டர் தரித்துக்கொண்டிருந்தான். தர்பாருக்கு வந்திருந்தவர்களுள் போரஸ், ஆம்பீசு, சௌபூதி, அர்ஷகேசன், பாகேலா என்பவர்களும், அபிசாரன் நைவலியர்கள் கதேயர்கள் காலசூரிகள் முதலானவர்களுடைய ராயபாரிகளும், போர்ப் படையைச் சேர்ந்த தளகர்த்தர்களும் இருந்தார்கள்.

சந்திரகுப்தனோடு நடந்த பிரசண்டமான ஸமாவேசம் கழிந்து தர்பாருக்குப் போனதனால் அலெக்சாண்டருக்கு மனவமைதியும் முகமலர்ச்சியும் இல்லாதிருந்தன. ஆயினும் தனது புகழையே பெரிதும் பாராட்டிகொண்டிருந்த அந்தத் தர்பாரின் மகிழ்ச்சியினால் அவனுக்கு உற்சாகம் உண்டாயிற்று. கிரேக்கம், ஸம்ஸ்கிருதம், பிராகிருதம் என்னும் இப்பாஷைகளில் எண்ணிறந்த கவிதைகளை அந்த அந்தக் கவிஞர்களே வாசித்தார்கள். ஜீயஸின் தனயனென்றும், உலகத்தை வென்றவனென்றும், வெல்லொணு வீரனென்றும் அலெக்சாண்டரைப் புகழ்ந்து அவர்கள் பாடியிருந்தார்கள். அவனுடைய கழுத்திலிருந்து பூமாலைகள் தொங்கிக் கொண்டிருந்தன. முத்துச்சரங்களினாலும், வைர வரிசைகளினாலும், மாணிக்க வடங்களினாலும் அமைந்த கிரீடத்தை அவனுக்குச் சூட்டியிருந்தார்கள். சில பிராமணர்கள் பூர்ண கும்பங்கள் அளித்து ஆலத்தி செய்தார்கள். இவைகளினால் அலெக்சாண்டர் மகிழ்வுற்றவனாய், விரிந்தமனமும் தயாள குணமும் மேற்கொண்டான். போரஸூம் ஆம்பீசும் மனமுவந்து அவனோடு சேர்ந்துழைத்ததனாலும் அவனிடத்து நிலையான விசுவாஸம் பாராட்டியதனாலும் அவர்கள்மீது மிகத் திருப்திகொண்டான். அவர்களைத் தன் அருகிலழைத்து அவரவருடைய ராஜ்யத்திற்கும், புதியனவாக அவற்றோடு சேர்க்கப்பட்ட பிரதேசங்களுக்கும் ராஜாதிபத்தியத்தை அவர்களுக்கு உறுதிப்படுத்தினான். அவர்களிருவரும் சில நாளைக்கு முன் வரையில் பகைவர்களா யிருந்தபோது அவர்கள் ஒருவருக்கொருவர் நண்பர்களாகிச் சமரசமாக ஒத்துவாழவேண்டுமென ஏற்கெனவே அவர்களுக்குப் புத்திசொல்லியிருந்தான். அப்படி அவர்கள் மித்திரத்து

வம் பாராட்டிக்கொண்டிராவிட்டால், அராட்டியர்களாலும் அசுவகணியர்களாலும் அவர்களுடைய புதிய ராஜ்யங்களுக்கு அபாயம் நேரிடுமென்று எச்சரித்திருந்தான். அவன் சொல்லிய வார்த்தையைக் கடைப்பிடித்து அவர்கள் இருவரும் ஒத்துப்போனார்கள். இந்தச் சமயத்தில் அவர்களிருவரும் ராஜியாகி நண்பராய்விட்டார்கள் என அலெக்சாண்டர் அந்தச் சபையில் விளம்பரப்படுத்தினன். அன்றியும், அந்த நட்டை விவாக சம்பந்தத்தினால் அவர்கள் வலியுறுத்தப்போகிறார்களென்றும் அவன் சொன்னான். போரஸினுடைய தம்பியாகிய வைரோசகனுடைய புத்திரியை ஆம்பீசு விவாகம் செய்துகொள்ளப் போவதாகவும் வெளியிட்டான்.

இந்த வார்த்தையைக் கேட்டு ஜனங்கள் சந்தோஷ ஆரவாரம் செய்தார்கள். ஆம்பீசினுடைய ராஜ்யத்தில் பிலிப்பாஸ் என்பவன் அலெக்சாண்டரின் ஸ்தானதிபதியாயிருந்தான். போரஸினுடைய ராஜ்யத்தில் பைதானும் யூடிமாசும் ஸ்தானதிபதிகளாயிருந்தார்கள். ஆம்பீசும் போரஸும் நேசங்கொண்டதனாலும், இனி விவாக சம்பந்தம் செய்துகொள்வதனாலும் அந்த ஸ்தானதிபதிகள் சந்தோஷமடைந்து அவர்களை வாழ்த்தினார்கள்.

சௌபூதி, அர்ஷகேசன் முதலானவர்கள் அவரவருடைய சிறு ராஜ்யாதிபத்தியத்தில் ஊர்ஜிதப்படுத்தப் பெற்றனர். தளகர்த்தர்களுக்குப் பல பல கௌரவப் பட்டங்களும், பதக்கங்களும், பரிசுகளும் அளிக்கப் பட்டன.

பின்பு அலெக்சாண்டர் பிரசங்கம் ஒன்று செய்தான்: "மாஸிடோனியர்களே, துணைவர்களே, அரசர்களே, இந்த மகாஸதஸிற் கூடியிருக்கிற மகாஜனங்களே! மனப்பூர்வ

மாக உங்களுக்குப் பிரதிவந்தனம் செய்கின்றேன். மேனுடும் கீழ்நாடும் என் ஆதிபத்தியத்தில் மனமிசைந்து நட்புக் கொண்டு ஒன்றுகூடியிருக்கிற இன்றைத் தினம் விசேஷமான தினமாகும். கங்காநதிக்கும் உலகத்து எல்லைக்கும் நான் போகவில்லையென்று விசனப்படாதீர்கள். என் போர்வீரர் களைச் சுதேசத்திற்கு அழைத்துக்கொண்டுபோய் அவர் களுக்குச் சிலநாள் ஓய்வு கொடுத்துவிட்டு, இந்தியாவுக்குத் திரும்பி வருவேன். கடைசி மடிப்பில் ஜனங்கள் களைத்துப் போவதும், இலக்கை எட்டும் சமயத்தில் ஆட்டத்தை விட் டோடுவதும் விசனமாயிருக்கின்றன. மானிடருக்குச் சாமா ன்யமாயுள்ள உடற்குற்றங்கள் எனக்கு அவ்வளவு இல்லை யெனினும், மானிடர் எவ்வளவு தூரம் சோர்வுறுமற் பாடு படக்கூடுமென்பதை நான் உணரவேண்டியவனுயிருக் கிறேன். 'அந்தப் பிராச்சியர்களுக்கும் கங்காபுத்திரர்களுக் கும் இப்போது அரசனுயிருப்பவன் மிக இழிதன்மை வாய்ந் தவன்; ஜனங்களால் வெறுக்கப்படுகிறவன். அவனைத் தோல்வியுறச் செய்வது மிகச் சுலபமாயிருக்கும்' என்று அந்தச் சந்திரகுப்தன் சொல்லிய வார்த்தைகளை, என் வீரர்களே, நீங்கள் கேட்டிருந்தால், திரும்பி ஊருக்குப் போகவேண்டுமென்று என்னைக் கட்டாயப்படுத்தியிருக்க மாட்டீர்கள். ஆனல், அந்த ராஜகுமாரன் நாத் தடிப்புற்ற வன். அவனது வாய் பொல்லாதது. அவன் என்னிடம் துடுக் காக எதிர்த்துப் பேசினன். ஆனதனல், அவனைப் போரஸின் அரண்மனையில் இரகசியமான இருட்டறைக்குள் அடைத்து வைத்திருக்கிறேன். அவனை இப்போது இங்கே கொண்டு வரச் சொல்லுகிறேன். அவன் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு என்னிடம் ராஜவிசுவாஸம் காட்டுவதாகப் பிர மாணம் செய்தால், அவனை மன்னித்துவிடுவேன். அவன்

வணங்கி வராவிட்டால், அவனுடைய துடுக்குத்தனத்திற்காக அவனுக்குச் சிரசாக்கினை செய்வேன்."

எல்லாரும் கை கொட்டி ஆர்ப்பரித்தார்கள். குணங்கெட்ட ராஜகுமாரனுக்குத் தகாதெனினும், அவன் விஷயத்தில் அலெக்சாண்டர் பெருங்கருணை காட்டியதைக்குறித்து வியந்து பேசினார்கள். "சிறியோர் செய்த சிறுபிழையெல்லாம் பெரியோராயிற் பொறுப்பது கடனே" என்பது போல, "பெரியோராயிருக்கப்பட்டவர்கள் குற்றங்களை மன்னித்துத் தயைபுரிதல் கூடும்" என்று போரஸை ஓரக் கண்ணாற் பார்த்துக்கொண்டே ஆம்பீசு சொன்னான். தன்னைப் பார்த்துச் சொன்னதனால் போரஸுக்கு அப்போது முகம் சற்று வாடியது.

சந்திரகுப்தனைச் சிறையில் அடைத்திருந்த ஹெபேயிஸ்டியனையும் பிலிப்பாஸையும் மற்றும் பன்னிரண்டு வீரர்களையும் பார்த்து, அவனைத் தர்பாருக்குக் கொண்டுவரும்படி அலெக்சாண்டர் கட்டளையிட்டான். அவர்கள் திகிலுற்றுத் திகைத்து அரைமணி நேரத்தில் திரும்பி வந்து, "சந்திரகுப்தன் இருட்டறையினின்றும் தப்பியோடிப் போய்விட்டான். அவன் வழி செய்துகொண்டு போன விதம் தெரியவில்லை; பூட்டுப் போட்டபடியே இருக்கின்றது; எந்தப் பக்கத்திலும் சந்து அகப்படவில்லை" என்றார்கள்.

இந்த வர்த்தமானத்தைக் கேட்டுத் தர்பாரிலுள்ளவர்களனைவரும் பெருங்கலக்கம் அடைந்தனர். முக்கியமாக, இந்தியர்களுக்குள் பரபரப்பு அதிகமாயிருந்தது. அலெக்சாண்டர் ரௌத்திராகாரமாயினான். "அவனுடைய கூட்டாளியாகிய கறுப்புப் பிராமணனைக் கொண்டுவா! சந்திரகுப்தனை அவன் திரும்பக் கொண்டு வர

வேண்டும். இன்றேல் அவன் உயிருக்கே மோசம் வரும்" என்று பிலிப்பாஸை நோக்கிச் சொன்னான்.

வெகு மும்முரமாகச் சாணக்கியரை எங்கெங்கும் தேடிப் பார்த்தார்கள். அவருடன் அவருடைய ஆட்களும் ஓடிப்போய்விட்டார்கள். அவர்கள் இருந்த இடமும் தெரியவில்லை; போனவழியும் தெரியவில்லை.

"அந்தப் பிராமணன் மந்திரவாதி. தன் மந்திர பலத்தினால் ராஜகுமாரனைச் சிறையினின்று விடுவித்து, அவனோடு ஓடிப்போயிருப்பான். இதற்கு முன்னால் அவன் தக்ஷசிலையில் இருந்தான். மந்திரவித்தையில் தேர்ந்தவனென்னும் பெரும்பெயர் அப்போதே அவனுக்கு உண்டு" என்று ஆம்பீசு சொன்னான்.

"அப்படிப்பட்ட வித்தையொன்று உண்டென்றே நான் நம்பவில்லை. இந்நாட்டில் விபரீதமான கொள்கைகள் நிரம்பியிருக்கின்றன. ஆயினும், ராஜகுமாரன என்னும் இந்தப் பயல் தப்பித்துக்கொண்டு போனதைப்பற்றிக் கவலைப்பட்டு இந்தத் தர்பாரின் குதூகலத்தை நாம் கெடுக்க வேண்டாம். தர்பார் நடக்கட்டும்" என்றான் அலெக்சாண்டர்.

உடனே பலத்த கரகோஷமும் அமளியும் எழுந்தன. அதற்குப் பிறகு ஒரு மணிநேரம் தர்பார் நடந்து, மாலை 5-மணிக்குக் கலைந்தது. இரவில் பெரிய விருந்து சாப்பிடும் போது திரும்பக் கூடலாமென்று எல்லாரும் எழுந்தார்கள்.

போரஸ் தன் அரண்மனைக்குத் திரும்பிப் போனான். ஸ்வர்ணமயியையும் சாந்தவதியையும் தனியே அழைத்துக்கொண்டுபோய், "இரகசிய வழியை உங்களுக்குள் எவரோ திறந்துவிட்டதனால் சந்திரகுப்தன் தப்பித்துக்

கொண்டு போயிருக்கவேண்டும். உடனே உண்மையைச் சொல்லுங்கள்" என்றான்.

அதற்குச் சாந்தவதி, "ஆம், நம் வீட்டுக்கு விருந்தாக வந்தவரை ஊறுபடாமல் வெளியேற்றும் பொருட்டும், நமது பெருமைக்கு இழுக்கு வராதிருக்கும்பொருட்டும் நானே அறையைத் திறந்து விட்டேன்" என்று பதில் சொன்னாள்.

கோபமிகுதியினால் போரஸுக்கு வாயடைத்துப் போயிற்று. தணிவுற்ற பின் அவன், "அலெக்சாண்டருக்கு உண்மையாக நடப்பேனென்று நான் பிரமாணம் செய்து கொடுத்திருக்கிறேனே. நம்பிக்கைக்கேடாகச் செய்த இவ் வடாத காரியத்தை அவனுக்குத் தெரியாமல் எப்படி நான் மறைத்து வைக்க முடியும்?" என வினவினான்.

"வீட்டுக்கு வந்த அதிதியை என்ன பாடுபட்டேனும் ஆதரித்துக் காக்கவேண்டுமெனத் தலைமுறைதத்துவமாக வந்துள்ள தர்மத்தையே பெரிதாகப் பாராட்டவேண்டுமே யல்லாமல், இப்போது புதிதாக நீங்கள் அலெக்சாண் டருக்கு வாக்குக்கொடுத்த ராஜவிசுவாஸத்தைப் பாராட்ட லாகாது" என்றாள் அவனுடைய ராணி.

"அன்றேல், சந்திரகுப்தருக்குப் பதிலாகத் தண்டனை ஏற்கும்படி என்னை அலெக்சாண்டரிடம் ஒப்பித்துவிடுங் கள். அவர்பொருட்டு நான் உயிர் துறக்க ஆசைப்படு வேன். மகாராஜா! நமது குலத்தின் பெருமையும் கௌரவமும் குறையாதிருக்கவேண்டுமென்று உங்கள் குமாரர்கள் மூவர் உயிர் துறந்தனர். என்றென்றைக்கும் இந்தப் பிற நாட்டாருக்கு அடிமைகளாக மானங்கெட்டு நம் குலத்தவர்கள் வாழவேண்டுமென்று விரும்புகிறீர்களா?

ஐயோ! பஞ்சாபுச்சிங்கம், காவலனுக்கு அஞ்சும் பழக்கப் பட்ட சிங்கமாகிவிட்டதோ?'' என்றாள் சாந்தவதி.

உள்ளம் ஊடுருவக் குத்துண்டவனைப் போரஸ் அயர்ந்து உட்கார்ந்தான். "விதஸ்தா நதிக்கரையில் நான் நடந்துகொண்டதைப்பற்றி இந்தப் பெண் இவ்வாறு என்னை ஏசிச் சுட்டிச் சுடவேண்டி வந்ததே!'' என்றான் போரஸ்.

அப்போது அவனுடைய ராணி ஆதரவோடு அவனுடைய தோளைத் தொட்டுக்கொண்டு, "பிராணநாதா! அவள் கிடக்கிறாள் சிறுகுட்டி! அவள் வார்த்தையைப் பொருட்படுத்தாதீர்கள். அவளுக்கென்ன தெரியும்? நீங்கள் எப்படிப்பட்ட தீரர் என்பது எனக்குத் தெரியும். அவள் கோபத்திலைல் படபடத்துப் பேசிவிட்டாள். அவளை நீங்கள் மன்னிக்கவேண்டும்'' என்றாள்.

அங்ஙனம் குத்திக் காட்டியதற்காகத் தன்னை மன்னிக்க வேண்டுமெனச் சாந்தவதியும் வேண்டிக்கொண்டாள்; உடனே தன் அறைக்குள் போய்விட்டாள். "இவ்விளைஞர்களின் சங்கதி எனக்கு ஒன்றும் அர்த்தமாகவில்லை. ஆயிரம் மைல் தூரத்திற்கதிகமாயுள்ள பாடலிபுரத்திலிருந்து தூதனமாக வந்த இளைஞனுக்காக விம்மபுரத்திலிருந்து வந்த இந்தப் பெண் தன் உயிரைக் கொடுக்கிறேனென்கிறாளே!'' என்றான் போரஸ்.

"அதில் அதிசயமொன்றும் இல்லை. ஆயிரம் மைலுக்கு அப்பாலுள்ள ஊரிலிருந்து வந்த அன்னியனென்று அவனை இனிச் சொல்லக்கூடாது. அவன் அவளுடையபதியும் பர்த்தாவும் ஆவன்'' என்றாள் ஸ்வர்ணமயி.

கைகால் அயர்ந்து போய்ப் போரஸ், "நிஜமாகவா?'' என வினவினான்.

"ஆம். இரகசியமான இருட்டறையிலேயே அவன் அவளைக் காந்தர்வ முறைப்படி விவாகம் செய்துகொண்டான்."

"சரி. எல்லாம் வெகு விரைவில் நடந்தேறிப் போயிற்றே; விஜயஸிம்மன் இவ்விவாகத்தை ஒப்புக் கொள்வனோவெனச் சந்தேகிக்கிறேன்" என்றான் போரஸ்.

"இந்த வரனே சரியானவனென்று உங்கள் கடிதத்துடன் இவள் நாளைத்தினம் ஸிம்மபுரத்துக்குப் போகட்டும். ஆனால், அந்தக் கடிதத்தில் விவாகம் ஏற்கெனவே நடந்தேறியதெனச் சொல்லவேண்டாம். நான் ஒரு கடிதம் எழுதிக்கொடுத்து மருமகனை முன்னரே அனுப்பிவிட்டேன்" என்று ஸ்வர்ணமயி சொன்னாள்.

"நான் இந்த விவாகத்தை ஆதரித்துச் சொல்ல வேண்டுமா எனச் சங்கிக்கிறேன். ஆயினும், இந்த ராஜ குமாரன் பெரிய ராஜபரம்பரையில் வந்த சுத்த க்ஷத்திரியனாக இருக்கிறான். இவனுக்கு நற்காலம் வரும் என்பதும் நிச்சயம். இவனுடன் இருக்கிற மிகச் சாமர்த்தியவானான அந்தப் பிராமணன் எந்த விதத்திலும் இவனை அரசனாக்கி விடுவான் என்பதும் உறுதி" என்றான் போரஸ்.

"இதோ ஒரு கடிதம் எழுதிக்கொண்டு வந்திருக்கிறேன். இதற்கு உங்கள் முத்திரையை இடலாமே" என்றாள் ஸ்வர்ணமயி.

போரஸ் அந்தக் கடிதத்தை வாங்கிப் படித்தான்; அதில் தன் கையொப்பமிட்டு ஸ்வர்ணமயியைப் பார்த்து, "இந்நாளில் யுவகயுவதிகள் தங்களுக்குத் தாங்களே மணம் பேசி விவாகம் முடித்துக்கொண்டு வருகிறார்கள். நம்

காலத்திலெல்லாம் இப்படி இல்லையே" என்று சொன்னான்.

"ஆனால், காதல் என்பது அந்நாளில் எப்படியோ, இந்நாளிலும் அப்படியேயாகும். முறைகள் மாறுகின்றனவேயல்லாமல், மூலமான உள்ளக் கிளர்ச்சிகள் ஒரே மாதிரியானவையல்லவா? என் அறைக்குப் போவோம், வாருங்கள். அங்கே நாம் இருவரும் தனியே பேசிக் கொள்வோம்" என்றாள் ஸ்வர்ணமயி.

சாந்தவதியை விளித்துப் போரஸ் அவளுடைய கன்னத்தில் விளையாட்டாக நிமிண்டி, "இனிமேல் சரியாக நடந்துகொள்ள வேண்டும்" எனப் புத்தி சொல்லிவிட்டு, ஸ்வர்ணமயியுடன் அவள் அறைக்குப் போனான்.

---

## அத்தியாயம் 17

## கனலும் கத்தியும்

**மா**ளவக்கோட்டின் மண்டலாதிபதியான தலஜங்கன் என்பவனுக்கு வயது 25. அவன் உக்கிரமான மனோவேகம் உள்ளவன்; தீரம் மிகுந்தவன்; எதற்கும் துணிந்தவன். கி. மு. 326, அக்டோபர் மாதம், ஒரு நாட் காலையில் அவன் தன் பட்டணத்திற்குத் திரும்பி வந்தான். அவனுடைய தாயாகிய பௌலோமி என்பவள் அவனைச் சந்தித்து, "நீ போன காரியம் என்னவாயிற்று?" என வினவினாள்.

"சாணக்கியர் அனுப்பிய பிராமண தூதர்கள் சொல்லியபடி மாளவத் தலைவர்களான நாங்கள் ஐவரும் போய், க்ஷுத்ரகத்தலைவர்கள் ஐவரையும் கண்டு, 'மகாபாரத யுத்தத்தில் பாண்டவர்களும் கௌரவர்களும் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டார்களே யன்றி மூன்றாமவனொருவன் எதிரியாக வந்தால் ஒன்றுகூடி அவனை எதிர்த்ததுபோல, நமக்குள் எவ்வளவு மனஸ்தாபங்கள் இருந்தபோதிலும், நாம் ஒன்று கூடி இந்த யவனர்களை எதிர்ப்போம்' என்றோம். அவர்கள் உடனே ஒப்புக் கொண்டது மல்லாமல், நம்மைக் காட்டிலும் ஒரு படி அதிகமே சென்றார்கள். அவர்களுள் மூத்தவனொருவன், 'நம்மவர்களுக்குள் சாசுவதமான ஒற்றுமை ஏன் அமைத்துக் கொள்ளக்கூடாது? அந்தக் காரியம் சாதிப்பதற்கு விவாகத்திற்குச் சமானமான வழி வேறொன்றுமில்லை. அரசர்க

ளிடையே ஒருவருக்கொருவர் நீடித்த மனஸ்தாபமும் சச்சரவும் இருந்தால், விவாக சம்பந்தங்களினாலே அவைகளைத் தீர்த்துக்கொள்வது வழக்கமாயிருக்கின்றது. ஜனநாயகவாதிகளான நாம் அப்படி ஏன் செய்யக்கூடாது?' என்ருன். அந்த வார்த்தைக்கு அந்தப் பத்துப் பேர்களும் இசைந்தார்கள். உடனே அந்தக் கிழவன் நம் குலங்கள் ஒவ்வொன்றிலிருந்தும் ஐந்நூறு யுவர்களையும் யுவதிகளையும் பொறுக்கி யெடுத்துப் பட்டியொன்றைச் சித்தமாக்கிக் காட்டினான்; நமக்குள் செய்துகொள்ளத்தக்க ஆயிரம் விவாகக் கொள்வினை கொடுப்பினைகளை எடுத்துச்சொன்னான். அந்தச் சம்பந்தங்களையெல்லாம் எல்லாரும் சந்தோஷமாக ஏற்றுக்கொண்டார்கள். அதன்படி க்ஷாத்ரக மண்டலாதிபதியான தாமோதரனுடைய பெண் ரூபமஞ்சரியை நான் மணக்கவேண்டியவனாகிறேன்'' என்று தலஜங்கன் சொன்னான்.

"க்ஷாத்ரக கன்னிகைகளுள் அவளே அழகு மிக்கவளெனச் சொல்கிறார்கள்; மகனே! அவள் உனக்குத் தக்க மனைவியே யாவாள். விவாகங்கள் எப்போது நடைபெறுவதாக நிச்சயித்திருக்கிறார்கள்?'' எனப் பௌலோமி வினவினாள்.

"அடுத்த சுக்கிரவாரம்'' என்று தலஜங்கன் சொல்லவே, "ஆ, நான் போய் ரூபமஞ்சரியையும் அவளுடைய பந்துக்களையும் பார்த்துப் பரிசயம் பண்ணிக்கொள்ள வேண்டும். சீக்கிரத்தில் எனக்குப் பேரன் பிறப்பான். இந்த யவனன் நம் நாட்டின்மீது எப்போது படையெடுத்து வரப்போகிறான்?'' என்றாள் பௌலோமி.

"இன்னும் ஆறுமாதத்தில் வருவானென்று தோன்றுகின்றது. அதற்குள்ளாக அவன் இங்கே வரமுடியாது.

இன்னும் நான்கு மாதங்களுக்குள் நம் சைனியங்களெல்லாம் சித்தமாய்விடும்" என்றான் தலஜங்கன்.

இரண்டுமாதம் கழிந்தபின் ஒரு நாள் நடுநிசியில் தலஜங்கனுடைய மாளிகைக்குத் தூதனொருவன் விரைந்தோடி வந்து, "ஐயா! ஐந்து யவனப் படைகள் மாளவராஜ்யத்தின் மீது படையெடுத்து வந்திருக்கின்றன. அலிகசுந்தரனே நடத்தும் படையொன்று, கமாற்கோட்டு வயல்களில் ஆபத்தை எதிர்பாராமலே போர்க்கோல மின்றி ஜனங்கள் வேலை செய்துகொண்டிருக்கையில், அவர்கள்மீது பாய்ந்து ஆயிரக் கணக்கானவர்களைக் கொன்று மற்றவர்களைக் கோட்டைக்குள் துரத்திக் கோட்டையைத் தாக்கி 2,000 பேரைக் கொன்றது. ஹரப்பா என்னும் பட்டணத்து ஜனங்கள் இவ்வாறு சத்துருக்கள் திடீரென்று வருவார்களெனத் தெரியாமையால், போர்புரியச் சித்தமாயிருக்கவில்லை. அவர்கள் நகரத்தை விட்டுக் காட்டுக்கு ஓடிப் போனார்கள். ஆயினும், அவர்களை விடாமல், மற்றொரு யவனப்படை துரத்திக்கொண்டு போய், நூற்றுக்கணக்கானவர்களை வெட்டிச் சாய்த்தது. மூன்றாம்படை துலம்பாவைத் தாக்கிப் பிடித்துக்கொண்டு குடிகளை அடிமைகளாகப் பற்றியது. நான்காம் படை அவதரிராம்புரி என்பதைத் தாக்கியது. அலிகசுந்தரனும் தன் படையுடன் அவதரிக்குப் போனான். இனி எதிர்த்துப் போராடுவதில் பயனில்லையெனக் கண்டு நம்மவர்கள், ஸ்திரீகள் பிடிபடாதிருக்கும் பொருட்டுத் தங்கள் வீடுகளுக்குத் தீ வைத்து விட்டார்கள். அதற்குப்பின், கத்தியும் கையுமாக யவனர்கள்மீது விழுந்தடித்துப் பிராணன் போகிறவரையிற் போராடினார்கள். அங்கே ஐயாயிரம்பேர் மடிந்தனர்" என்று சொன்னான்.

"நமது துரதிர்ஷ்டத்தை என்னவென்று சொல்வேன்! யவனர்கள் இன்னும் இரண்டுமாதம் தாழ்த்தே வருவார் என்றிருந்தோம்; இப்பொழுதே வந்து விட்டார்களே!" என்றான் தலஜங்கன்.

"அவர்கள் புக்கிபேலாவிலிருந்து 2,000 படகுகளில் விதஸ்தா நதியின் வழியே வந்தார்கள். குதிரைகளும், காலாட்களும், பளபளப்பான போர்க்கவசம் அணிந்த படையாட்களும் பேரிகை முழக்கத்துடன் கொடிகளைப் பறக்கவிட்டுக் கொண்டு வந்தார்கள். அந்த அபூர்வமான காட்சியைக் கண்டு இருகரையிலிருந்த ஜனங்களும் ஓட்டம் பிடித்தார்கள். விதஸ்தா நதியும் அசிக்னி நதியும் கூடுமிடத் தண்டை இருந்த சுழல்களையும் அலைகளையுங் கண்டு யவனர்கள் பயப்பட்டார்கள். அவர்களுடைய படகுகளில் இரண்டு மூழ்கிப் போயின, வேறு பல சேதமுற்றன. ஆனால் சேதமுற்ற படகுகளை அலிகசுந்தரன் செப்பனிட்டுக் கொண்டான். நமது எல்லைக்கு நேரே போகும்படி அந்தப் படகுகளை அனுப்பினான். தன் படைகளை ஐந்தாகப் பிரித்து அவற்றுள் பொறுக்கியெடுத்த ஆட்களும எளிதில் விரைந்து போகக்கூடியவர்களும் அடங்கிய பகுதிக்குத் தானே தலைவனானான். மற்ற நான்கு பகுதிகளுக்கும் பெயர் பெற்ற தளநாயகர் களைத் தலைவர்களாக்கினான். பிறகு அந்தப் படைகள் சிபியைத் தாக்கித் தோல்வியுறச்செய்து விட்டு, மேலே விவரித்தவண்ணம் நம் நகரங்களைப் பாழாக்கின. எந்தப் படைப்பகுதிக்கு உதவி வேண்டுமோ அதற்கு அலிகசுந்தரன், எளிதில் நகரும் தன் படையுடன் போகிறான். அவ்வைந்து படைப்பகுதிகளும் அசிக்னி யாறும் ஐராவதி

யாரும் சந்திக்கு மிடத்தில் இனிக் கூடப் போகின்றன" என்று தூதன் சொன்னான்.

"நாம் உடனே அங்கே போய் ஒவ்வொரு படைப் பகுதியும் வரும்போதே அதை வென்று மற்றவற்றோடு கூடிக்கொள்ளாமல் தடுப்போம்" என்றான் தலஜங்கன்.

இந்தச் சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டிருந்த ரூபமஞ்சரி, "நாதா! நம் துருப்புக்கள் இன்னும் போருக்குச் சித்தமாகவில்லை. அவர்களை ஐராவதி சங்கமத்திற்குக் கொண்டுபோய் அபாயத்திற்கு உள்ளாக்குவதைக் காட்டிலும், அவர்களை அணிவகுத்து அமைத்துக்கொண்டு இவ்விடத்திலிருந்தே ஏன் யவனர்களைத் தடுக்கக்கூடாது?" என வினவினாள்.

"காப்புப்படையை ஒழுங்குபடுத்திக்கொள்ளும் பொறுப்பை உனக்கு ஒப்பித்துவிடுகிறேன். ஜனங்கள் உன்னைப் பெரிதும் போற்றுகிறார்கள். என் சொல்லைப்போல உன் சொல்லையும் மதித்துக் கீழ்ப்படிந்து நடப்பார்கள். யவனப்படைகள் முன்னறிவிக்காமல் நம்மை எப்படித் தாக்கினவோ அப்படியே திடீரென நான் போய் அவர்களைத் தாக்க வேண்டும்" என்றான் தலஜங்கன்.

"அவர்கள் விரைவில் இடம்விட்டு இடம் பெயர்ந்து போகிறார்களென்றால், அவர்கள் பெண்டுபிள்ளையில்லாமல் திரிகிற காலாடிகள். நம் போராட்களோ, மனைவி மக்களோடு கூடிய குடித்தனக்காரர்கள். ஆதலால், அவ்வளவு துரிதமாக இடம் பெயர்ந்துபோக ஒரு போதும் முடியாது; அவர்களைப்போல ஈர இரக்கமில்லாமல் கொல்லவும் மாட்டார்கள், அழிக்கவும் மாட்டார்கள்" என்று ரூபமஞ்சரி சொன்னாள்.

"நீ சொல்வது சிறிது சரியே. ஆனல், நம் குடித் தனக்காரர்கள் தங்கள் குடும்பங்களைக் காலாடிகள் வந்து கொடுமை செய்யாதபடி காத்துக்கொள்ளத்தக்க திற மையுடையவர்களாகிற வரையில் நமது தேசத்திற்குச் சீரும் க்ஷேமமும் இல்லையென்று நினைக்கிறேன்" என்று தலஜங் கன் சொன்னன். ரூபமஞ்சரியிடம் பிரேமையோடு பிரியா விடைபெற்று, அவசர அவசரமாகக் கூட்டிய சேனையைத் திரட்டிக்கொண்டு அவன் போனன். அலெக்சாண்டர் அதற்குள்ளாக வந்து கோட்டையைத் தாக்கும் பக்ஷத்தில் அதைக் காப்பதற்கு ரூபமஞ்சரிக்கு உதவியாகத் திறமை வாய்ந்த வீரர்களை அங்கேயே விட்டுப் போனன்.

சரியான முஸ்தீப்பில்லாத படையுடன் தலஜங்கன் ஐராவதி சங்கமத்தினண்டை போய்ச்சேர்ந்தான். ஆனல், அவனுக்கு முன்னரே அலெக்சாண்டர் அங்கு வந்திருந் தான். கிரேக்கர்கள் இவர்கள்மீது கோரமாகப் பாய்ந்து அடிப்பதைக் கண்டு, "மறுபடி யவனர்களே முதலில் போர் தொடங்கிவிட்டார்களே" என்று ஆச்சரியப்பட்டான். மாளவர்கள் மிகத் தீரமாகவே சண்டை செய்தார்கள். ஆனல், தோற்றுப்போய் மாளவக்கோட்டுக்குத் திரும்பி ஓடவேண்டி வந்தது. இவர்களைக் கிரேக்கர்கள் துரத்திக் கொண்டே வந்தார்கள். மாளவப்படை தோற்றுத் திரும்பி வருவதையும் கிரேக்கர்கள் அவர்களுக்குப்பின்னே துரத்திக் கொண்டு வருவதையும் கோட்டை மதில் மீதிருந்து ரூப மஞ்சரி பார்த்தாள். கோட்டைக்கதவுகளைத் திறந்து தன் ஆட்களை உள்ளே வரவிட்டு, கிரேக்கர்கள் நுழையு முன்னரே கதவுகளை அடைத்துவிட்டாள்.

"பிரியநாயகி! நீ சொல்லியதே சரி. நாங்கள் தோல்வி யடைந்தோம். இங்கேயே தங்கியிருந்தால் நன்ருகப் போர்

புரிந்திருக்கலாம். நாங்கள் தப்பிப் பிழைத்தது உன்னுலேயே'' என்ருன் தலஜங்கன்.

"என் அன்பே! யார் யாரைக் காப்பாற்றினுலென்ன? எல்லோரும் உயிர் தப்பினேம் என்பதேயல்லவாவேண்டும்? யுத்தத்திற்கு நாம் ஸித்தமாயிருக்கிற அளவு கூட க்ஷாத்ரகர்கள் ஸித்தமாயிருக்கவில்லை. கலியாண வைபவங்களை நெடுநாள் நீடித்துவிட்டோம்; யுத்தப்பிரயத்தனங்களை ஆரம்பிக்காமல் நெடுநாள் தாமதப்படுத்திவிட்டோம். ஆயினும், நம்மவர்களில் ஒருவனுவது ஒருத்தியாவது உயிரோடிருக்கிறவரையில், யவனன் இந்தக் கோட்டையைக் கைப்பற்ற முடியாது. நாம் இன்னும் மூன்று மாதகாலம் ஊடாடிக்கொண்டிருப்போமானுல், அதற்குள்ளாக க்ஷாத்ரகர்கள் வந்து நமக்குத் துணை செய்ய முடியும்'' என்று ரூபமஞ்சரி சொன்னுள்.

"பெரிய மாளவப்படைகளைக் கிரேக்கர்கள் திடீரெனத் தாக்கி நசுக்கிவிட்டார்கள். காமற்கோடு, ஹரப்பா, துலம்பா, அவதரிராம்புரி என்னும் பட்டணங்களையெல்லாம் பிடித்துக்கொண்டு அவர்கள் நாசம் செய்துவிட்டார்கள்; மாளவக்கோடு மாத்திரமே மிகுந்திருக்கின்றது'' என்று தலஜங்கன் துக்கத்தோடு சொன்னன்.

"மாளவப்பட்டணங்கள் போனுற்போகட்டும்; மாளவத்தன்மையான வீரம் மாத்திரம் இருந்தாற் போதும். இந்தக்கிரேக்கர்களைப்போலவே நாமும் சாவுக்குத்துணிந்து போர் புரிவோம்; என்னவானுலும் ஆகட்டும். இந்த யவனர்கள் தங்கள் ஸ்திரீ ஜனங்களோடு வந்திருப்பார்களானுல், அவர்களுக்குத் தீமை சிறிதும் இழையாத தேசத்தார்களை வென்று கொலை செய்வதற்கென அவர்களுடைய புருஷர்கள் ஏன் இங்கே வருகிருர்கள் என அவர்களைக்கேட்டிருப்

பேன். இந்த வார்த்தை புருஷரைப் புருஷர் கேட்பது வீர மின்மையாகத் தோன்றும்; ஸ்திரீகள் ஸ்திரீகளைக் கேட்டால் அது சாமானிய புத்திவாதமேயாகும். இப்போது நானும் போர் வீரனது வேஷம் போட்டுக்கொண்டு உமது பக்கத்திலிருந்து போர் புரிவேன்" என்று ரூபமஞ்சரி சொன்னாள்.

சிறிது நேரத்திற்குள் அலெக்சாண்டர் கோட்டையின் முன் வந்து தோன்றினான். தன்னுடைய முற்றுகையந்திரங்களைக்கொண்டு விடாமல் இடித்து வெளி மதில்களில் பிளவு உண்டாக்கினான். ஒரு படையுடன் அலெக்சாண்டரும், மற்றொரு படையுடன் பெர்டிக்கசும் பட்டணத்திற்குள் புகுந்தார்கள். உட்சுவரின் பின்புறத்துக் கோட்டைக்குள் மாளவர்கள் ஓடி யொளிந்தார்கள். தன் ஆட்கள் ஒருவனிடமிருந்து ஏணியை வாங்கிக்கொண்டு அலெக்சாண்டர் அதை மதில்மீது சார்த்தி, ஏறத் தொடங்கினான். இலியத்துப் பவித்திர கேடகத்தை (Sacred Shield of Ilium)[1] எடுத்துக்கொண்டு பியூகேஸ்டாஸ்(Peukestas) என்பவன் அவனையடுத்து ஏறினான். அவனுக்குப் பின் லியோனேடசும் ஏப்ரியாசும் ஏறினார்கள். அலெக்சாண்டர் மதிலின் முகட்டுக்குப் போய்ச் சேர்ந்தான்; அங்கிருந்த

1. இலியம் என்பது டிராய் என்னும் நகரத்திற்குரிய முதற் பெயர். அந்த மாகாணத்தின் பெயரே அந்த நகரத்திற்கு வந்தது. டிராய் என்பது ரோமானியர் வழங்கும் பெயராகும். அதுவே ட்ரோஜா எனவும் வழங்கப்பெறும். அவ்வூர்க்கோட்டை மதில் அபாலோ என்னும் தேவதையினாலும் நெப்டீன் என்னும் தேவதையினாலும் கட்டப்பட்டதெனக் கவிகள் பாடியிருக்கிறார்கள். இலியத்துக் கேடகம் தேவதாரக்ஷையென அலெக்சாண்டர் வைத்திருந்தான்.

மாளவர் சிலரைக் கோட்டைக்குள் தள்ளினன்; வேறு சிலரைத் தன் கத்தியால் வெட்டிக்கொன்ருன். அவன் தனியாக நின்று சண்டை செய்வதைப் பார்த்து, அவனுக்கு என்னவாகுமோவெனக் கவலைகொண்டு, ஹைபாஸ்பிஸ்டுகள் ஏணியின்மீது ஏறுவதற்கு ஒருவரையொருவர் தள்ளி அவசரப்பட்டதில் ஏணியை முறித்து விட்டார்கள்; ஏறிக்கொண்டிருந்தவர்களும் கீழே விழுந்தார்கள்.

பக்கத்து உப்பரிகைகளிலிருந்த மாளவர்கள் அலெக்சாண்டரைத் தாக்கினர்கள்; நகரத்திற்குள்ளிருந்த ஜனங்களும் அவன்மீது அம்புகளை எய்தார்கள். தான் இருக்குமிடத்திலேயே இருந்தால் ஒரு காரியமும் சாதிக்கமுடியாது, தனக்கு ஆபத்து வரும், அந்த இடத்தைவிட்டுக் கோட்டைக்குள் குதித்தால் இந்தியர்களுக்குத் திகிலுண்டாக்கி நிர்வீரியராக்கலாம் என நினைத்தான். அதன் மீது, மதிலிலிருந்து கோட்டைக்குள் குதித்தான். உடனே தலைஜங்கன் தைரியமாகத் தாக்கினன்; ஆனல், போர் செய்து செய்து கைதேர்ந்த அலெக்சாண்டர் எங்கே, இந்தத் தலைஜங்கன் எங்கே? அலெச்சாண்டருக்கு ஈடுகொடுக்கமாட்டாமல், அவனுடைய கத்தியினல் ஊடுருவக் குத்துண்டு மாண்டு வீழ்ந்தான். அவனுக்குச் சகாயமாக வந்த வேறு இருவரையும் அலெக்சாண்டர் கொன்ருன். ரூபமஞ்சரி மாளவப்படைத்தலைமையை மேற்கொண்டாள். தன் ஆட்களைச் சிறிது தூரத்தில் நிறுத்திவைத்து, அலெக்சாண்டர் மீது கையிலகப்பட்ட அஸ்திரங்களையெல்லாம் பிரயோகிக்கச் சொன்னள். அதன்மேல் பியூகெஸ்டாசும் லியோனேடசும் மதிலினின்று கோட்டைக்குள் குதித்துத் தங்கள் அரசனுக்கு முன்னின்று போர் புரிந்தார்கள். மாளவத்தலைவன் ஒருவன் எய்த அம்பினல் அடிபட்டு ஏப

ரியாஸ் மடிந்தான். ரூபமஞ்சரியே எய்த அம்பொன்று அலெக்சாண்டரை அடித்தது. அவன் அணிந்திருந்த இரும்பு மார்புக்கவசத்தைத் துளைத்துக்கொண்டு அது மார்புக்குள் ஆழமாகப் பாய்ந்தது. இரத்தம் அதிகமாக வெளிப்போந்தமையின், அவன் களைத்துப்போனான். இரத்த சோகையினால் அவன் தலை கிறுகிறுத்தது. மூர்ச்சித்துக் கேடகத்தின் மீது சாய்ந்தான். பவித்திரமான இலியத்துக் கேடகத்தை அலெக்சாண்டருக்குக் காப்பாகப் பிடித்துக் கொண்டு அவனுக்கு முன்புறத்தில் பியூகெஸ்டாஸ் வந்து நின்றுகொண்டான். பக்கங்களிலிருந்து அடிப்பவர்களை லியோனேடஸ் எதிர்த்துத் தடுத்துக்கொண்டிருந்தான். பியூகெஸ்டாசுக்கும் லியோனேடசுக்கும் கடுமையான காயங்கள் ஏற்பட்டன. அலெக்சாண்டரைச் சிறைப்பிடித்துவிடுவார்கள் அல்லது கொன்றுவிடுவார்களென்று தோன்றியது. அந்தச் சமயத்தில் மாஸிடோனியர்கள் அநேகர் தங்கள் அரசனைக் காப்பாற்றுங் கவலை மேலீட்டால், மண் மதிலில் முளைகளை படித்து முகட்டுக்கு ஏறிக் கோட்டைக்குள் குதித்தார்கள். வேறு பலர் வாசற்கதவின் குறுக்குச்சட்டத்தை முறித்தெறிந்தார்கள்; படை முழுதும் வாசல் வழியாகவே உட்புகுந்தது. கோட்டை வாசலண்டை சண்டை போட்டுக்கொண்டே ரூபமஞ்சரி மடிந்தாள். நகரத்தைத் தாக்கினார்கள். உக்கிராவேசங்கொண்ட கிரேக்கர்கள் தங்கள் அரசனைக் காயப்படுத்தியதற்குப் பழிவாங்கும் பொருட்டு இந்திய ஆண் பெண் குழந்தைகளெல்லாரையும் சங்கரித்தார்கள். ஒருவரையும் பாக்கி விடவில்லை.

அலெக்சாண்டர் மிகக் கேவலமான ஸ்திதியில் இருந்தான். அவன் பிழைப்பான் என்பது சந்தேகத்திற்கு இடமாயிருந்தது. அம்பு குத்தி அலெக்சாண்டர்

இறந்தான் என்னும் வதந்தியே முதன்முதலில் அவனுடைய போர்ப்பாளையத்திற்கு எட்டியது. எல்லாரும் ஓலமிட்டுப் பெரிதும் அழுதார்கள். உடனே அழுகை தவிர்ந்து ஏக்கமுற்றார்கள்; இனித் தாங்கள் எப்படித் தப்பிப் பிழைப்பதெனக் கவலை கொண்டார்கள். சுற்றுமுற்றும் அலெக்சாண்டரால் இன்னும் ஜயிக்கப்படாதவர்களும் போர்ப்பிரியமுள்ள ஜாதியார்களும் இருந்தார்கள்; பேருக்கு மாத்திரம் அடங்கினார்களென்று சொல்லத்தக்க ஜாதியார்களும் இருந்தார்கள்; அலெக்சாண்டர் இறந்து போனானெனக் கேட்டவுடனே அவர்களெல்லாரும் கலகம் விளைப்பார்களென்பது நிச்சயம். அப்படிப்பட்டவர்களுக்கு இடையில் நாம் என்ன செய்கிறது, நம் கதி என்னவாகும் என்னும் திகில் சைனியம் முழுதுக்கும் பிடித்தது. அந்தச் சைனியத்தில், 'நானே பெரிய தளகர்த்தனாக இருக்கத் தக்கவன்' எனப் போட்டி போட்டுக்கொண்டு பலர் இருந்தார்கள். அவர்களுள் எவரும் இந்தப் படையாட்களைத் தங்கள் தேசத்திற்குத் திரும்ப க்ஷேமமாகக் கொண்டு போய்ச் சேர்க்கத்தக்க திறமையுள்ளவர்களாகத் தோன்றவில்லை. பலநாள் அந்தப் போர்வீரர்கள் மிக்க கவலையிலும் திகிலிலும் ஆழ்ந்திருந்தார்கள்.

இதற்கிடையில், பிரஸித்த ரணவைத்தியனான கிரிடோபுலசும், கோஸ் என்னும் இடத்திலிருந்து வந்த கிரிடோடிமாஸ் என்னும் மற்றொரு ரணவைத்தியனும், பெர்டிக்கசும் காயத்தினின்று அம்பின் கூர்முனையைப் பிடுங்குவதைப்பற்றிக் கலந்து ஆலோசித்தார்கள். பிடுங்குவதனால், இரத்தம் பீரிட்டடிக்கப் பிராணன் போய்விடுமோவென அவர்கள் அஞ்சினார்கள். அவர்கள் இவ்வாறு தயங்கிக் கொண்டிருப்பதைக் கண்டு அலெக்சாண்டர், "சீக்கிரமாகப்

பிடுங்கிவிடு! நான் இறக்கவேண்டுமென்னும் விதி இருந்தால் இறந்துபோகிறேன். அது இன்னும் என் உடம்புக்குள் இருப்பதனால் நான் படுகிற கடுநோவையாவது நீக்கிவிடு" என்று கிரிடோபுலஸைப் பார்த்துச் சொன்னான். அம்பு முனையைப் பிடுங்கியெடுக்கையில், யாராவது சிலர் அலெக்சாண்டரைப் பிடித்துக்கொள்ளவேண்டும் என்றான் கிரிடோபுலஸ். அதைப் பிடுங்கும்போது, அவன் சிறிதும் அசையாமல் இருக்கவேண்டியது அவசியம். ஆனால், "ஒருவரும் என்னைப் பிடித்துக்கொள்ளவேண்டாம். நான் அசையவே மாட்டேன். அதைப்பிடுங்கி எடுத்துவிடு, வா" என்று அலெக்சாண்டர் சொன்னான்.

அவன் சொல்லியபடியே கிரிடோபுலஸ் காயத்தைக் கீறி, அம்பை வெளியே எடுத்துவிட்டான். அரசன் சிறிதும் கூசிப் பதைக்கவில்லை; இம் உம் எனவில்லை. இரத்தம் மிகுதியாகவும் நீடித்தும் ஒழுகலாயிற்று. அலெக்சாண்டர் சோகமுற்றச் சோர்ந்தான். இரத்த ஒழுக்கை நிறுத்துவதற்கு வகையொன்றும் கிடைக்கவில்லை. வைத்தியர்களும் அலெக்சாண்டருடைய சொந்த ஸகாக்களும் அவன் இறந்துபோனானென்றே நினைத்து உரத்துப் புலம்பலுற்றார்கள். ஆனால், ஒரு மணிநேரம் சென்றபின், அரசனுக்குத் தன் நினைவு வந்தது. தன்னைச் சுற்றியிருப்பவர்கள் இன்னாரென்று தெரிந்துகொள்ளலானான். அன்றிரவு முழுதும் சைனியமெல்லாம் போர்க்கோலத்தோடு அவனைச் சூழ்ந்துகொண்டிருந்தது. அவனுக்கு அமைதியான உறக்கம் வருகிறவரையில் அவனை விட்டு அகன்று அவர்கள் போகவில்லை.

ஏழுநாள் வரையில் அரசனை மிக ஜாக்கிரதையாகப் பராமரித்துச் சிகிச்சை செய்து வந்தார்கள். சைனியத்தவர்கள் திகிலுற்றிருப்பதையும், அலெக்சாண்டர் இறந்தான்

என்னும் புரளி இந்தியர்களுக்குள் பரவுவதையுங் கண்டு அலெக்சாண்டர் தன் துருப்புக்களுக்கு ஒரு கடிதம் எழுதினன். சீக்கிரமாகவே சிலநாளில் தன்னுடைய டோராவுக்கு வந்து சேருவதாக அந்தக் கடிதத்தில் தெரிவித்தான். ஆயினும், அவனுக்கு உடம்பு சொஸ்தமாய்விட்டதென்பதை அவனுடைய சொந்தத்துருப்புக்களும் நம்பாதவர்களாய், தளகர்த்தர்களும் மெய்காவலர்களும் சேர்ந்து அந்தக்கடிதத்திற் பொய்க்கையெழுத்து போட்டிருக்கிறார்களென நினைத்தார்கள்.

இன்னும் நிச்சயமின்றி அவர்கள் தடுமாறிக் கொண்டிராமல் தடுக்கும்பொருட்டு அலெக்சாண்டர் தன்னை, அகேஸினீஸ் நதியும் ஹைட்ரோடீஸ் நதியும் சங்கமமாகும் இடத்திற்குத் தூக்கிக்கொண்டு போகச் செய்தான். அங்கே ஒரு புறத்தில் ஹெபேயிஸ்டியனுடைய படையும், மற்றொரு புறத்தில் நியார்க்கஸினுடைய மரக்கலங்களும் இருந்தன. அலெக்சாண்டருடைய படகு அந்த மரக்கலங்களினண்டைபோகையில், தலைப்பக்கத்தின் மீதுள்ள மேற்கட்டியை நீக்கிவிடச் சொன்னன். ஜனங்களெல்லாரும் தன்னைப் பார்க்கட்டும் எனக் கருதி இங்ஙனம் செய்தான். அப்படிச் செய்தும் போர்வீரர்கள் நம்பவில்லை. அவன் கரையண்டை வருகிறவரையில் அது அலெக்சாண்டர் பிணத்தின் கையேயென நம்பியிருந்தார்கள். கரையண்டை வந்தபின் அவன் கையை அந்த ஜனக்கூட்டத்தை நோக்கி நீட்டினன். கண் மூக்குத் தெரியாமல் எல்லாரும் களித்துக் கோஷித்தார்கள். சந்தோஷத்தினற் பலர் கண்ணீர் பெருக்கினர்கள். ஹைபாஸ்பிஸ்டுகள் சிலர் அவனை டோலியில் கரைக்குத் தூக்கிக்கொண்டு போனர்கள். ஒரு குதிரையைக் கொண்டுவரச் சொல்லி, அதன்மீது அலெக்சாண்டர்

ஏறிக்கொண்டான். சைனியத்திலுள்ளவர்களெல்லாரும் அவனுக்கு வந்தனம் செய்து வாழ்த்திப் பெருங்கூச்சற் போட்டார்கள். பின்பு, அவன் குதிரையை விட்டு இறங்கித் தன் ஆட்களின் மத்தியில் நடக்கலானான். பெருங்கும்பல் அவனைச் சூழ்ந்துகொண்டது. சிலர் அவன் கையைத் தொட்டார்கள்; வேறு சிலர் காலைத்தொட்டார்கள்; சிலர் ஆடையைத்தொட்டார்கள்; மற்றுஞ் சிலர் அவனுக்குப் பூமாலை போட்டார்கள்; இன்னுஞ்சிலர் சும்மா நின்று கொண்டு ஆனந்தக்கண்ணீர் பெருக்கிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். தன் பிராணன்மீது அநேக ஆயிரம் பிராணன்கள் சார்ந்துகொண்டிருக்கின்றனவென்பதை மறந்து, அனுவசியமாக அலெக்சாண்டர் அப்படிப் பிராணாபத்துக் களுக்கு இடம் வைத்துக்கொண்டது சரியன்றெனக் கிரேடிராஸ் மெதுவாகக் கண்டித்துப் பேசினான். அதுவே ஜனங்களெல்லாருக்கும் இருந்த அபிப்பிராயமாகும்.

"நீங்கள் தலைமை வகித்து நடத்த, நாங்கள் இத்தனை தூரம் வந்திருக்கின்றோம். திரும்ப எங்களை எங்கள் வீடு வாசல்களுக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கத்தக்கவர் உங்களைத் தவிர வேறு எவருமில்லை" என்று அவன் சொன்னான். டாலமியும் மற்றவர்களும் அதே கருத்தோடு பேசினார்கள். "பேரும் பெருமையுமில்லாமல் நெடுங்காலம் வாழ்வதைக்காட்டிலும், சிறிது காலமேனும் கீர்த்தியோடு ஜீவிப்பதே சிறப்பு எனக் கொள்ளும் வமிசத்தில் நான் பிறந்துள்ளேன். அப்படியிருந்தபோதிலும், இந்தச் சமயத்தில் பிராணன்மீது எனக்கு ஆசை இருப்பதுபோல, வேறு ஒருபோதும் இருந்ததில்லை. முக்கியமாக, உங்களுடைய தோழமை அனுபவிக்கக் கிடைக்கவேண்டுமென்றே

நான் உயிர்த்திருக்க விரும்புகிறேன்" என்று அலெக்சாண்டர் பதில் சொன்னான்.

"ஓ அலெக்சாண்டர்! பெருங்காரியங்கள் செய்வது பெரிய வீரர்களுக்கே தகும்" என்று போயெஷியப் போர் வீரன் ஒருவன் சொன்னான். அவன் அப்படிச்சொல்லியது அலெக்சாண்டருக்கு வெகு திருப்தியாயிருந்தது. உடம்பு பூர்த்தியாகக் குணப்பட்டுத் தேறும் வரையில், அலெக்சாண்டர் பலநாள் அந்தக் கூடாரத்திலேயே தங்கியிருந்தான்.

அப்போதைக்கு வெற்றியோடு எதிர்த்துப் போர்புரிய முடியாதென எண்ணி மாளவர்களும் க்ஷூத்ரகர்களும் தங்களுள் சிறந்த கனவான்களிடம் விலையுயர்ந்த காணிக்கைகளைக் கொடுத்து அலெக்சாண்டரிடம் அனுப்பினார்கள். அவர்கள் அனுப்பிய காணிக்கைகள், நேர்த்தியான தேர்கள், டால்கள், நார்ப்பட்டுகள், எஃகு, முதலைத்தோல்கள், பிரம்மாண்டமான ஆமையோடுகள், சிங்கங்கள், பெரும்புலிகள் என்பனவாம். போர்ப்பிரியமுள்ள இந்தச் சாதியார் வந்து வணங்கியதில் அலெக்சாண்டருக்குச் சந்தோஷம் அதிகமாயிற்று. அவர்களிடமிருந்து வந்திருந்த ராயபாரிகளுக்குப் பெரிய விருந்தளித்தான். அந்த விருந்தில் பொன்னினாலாய 100 மணிமஞ்சங்கள் ஆஸனங்களாக வைக்கப்பட்டிருந்தன. பொன்னினாலும் பட்டினாலும் செய்த ஜாலர்களும் சுவர்ச்சீலைகளும் சுற்றித்தொங்கிக்கொண்டிருந்தன. திவ்வியமான சாப்பாடும் பானவகைகளும் பலமாக இருந்தன. மாஸிடோனியக் குத்துச் சண்டைக்காரனான ஹோரேடஸ் (Horratus) என்பவன் குடித்து வெறித்துத் தன்னோடு எவ்வாயுதமேனும் கைக்கொண்டு போட்டிச் சண்டைக்கு வருமாறு அதீனியக் குத்துச்சண்டைக்காரனை

டயோனிபஸ் என்பவனை அழைத்தான். டயோனிபஸ் அதற்கு ஒப்புக்கொண்டான். ஆனால், அந்தத் தனிப் போரை அலெக்சாண்டரே நேரிலிருந்து நடத்திவைக்க வேண்டுமெனக் கோரினான்.

மறுநாள் கத்தி, ஈட்டி, கேடயம், பல்லியம் என்னும் ஆயுதங்களோடு போர் அரங்கத்திற்குள் ஹொரேடஸ் நுழைந்தான். டயோனிபஸ் உடம்பெல்லாம் எண்ணெய் பூசிக்கொண்டு கதாயுதம் ஒன்று மாத்திரம் கைக்கொண்டு வந்தான். ஹொரேடஸ் தன் ஈட்டியை டயோனிபஸ் மீது வீசியெறிந்தான். கொஞ்சம் குனிந்து கொடுத்து டயோனிபஸ் ஈட்டி தன் மேல் படாதபடி தப்பித்துக்கொண்டான். ஹொரேடஸ்மீது பாய்ந்து அவனுடைய ஈட்டியைத் தன் கதாயுதத்தால் ஒரே அடியில் முறித்து, அவன் காலைப் பிடித்துச் சுழற்றிக் கீழே தள்ளி அவன் கத்தியைப் பிடுங்கிக் கொண்டு தன் காலை அவன் கழுத்தில் ஊன்றிக்கொண்டான். கதாயுதத்தால் அவன் மண்டையைத் தகர்த்துப் பொடிப்பொடியாக்கி இருப்பான். அதற்குள் அலெக்சாண்டர் குறுக்கிட்டுத் தடுத்தான். அதீனிய உஸ்தாது வெற்றியடைந்ததனால், மாஸிடோனியர்களுக்கு, அலெக்சாண்டருக்குங்கூடத் தங்கள் ஊரான் தோற்றனனேயென்னும் மனவருத்தம் உண்டாயிற்று. அதற்குப் பிறகு நடந்த விருந்துச் சாப்பாட்டில் டயோனிபஸ் வெறிக்கக் குடிக்கும் வரையில் காத்திருந்து, தங்கக்கூஜாவொன்றை அவனுடைய ஆஸனத்தின் கீழ் ஒளித்து வைத்தார்கள். தங்கக்கூஜா காணமற் போயிற்றென்று அங்குமிங்கும் தேடிப்பார்ப்பவர்கள் போலப் பாசாங்கு செய்து, எவரோ திருடிக்கொண்டு போய்விட்டார்களெனப் புளுகிக் கடைசியில் அவனுடைய ஆஸனத்தின் கீழிருந்து அதை எடுத்து வெளியாக்கினார்

கள். இவ்வாறு பொய்க்குற்றம் சாட்டப்பெற்ற வெட்கத்தைப் பொறுக்கமாட்டாமல் டயோனிபஸ் அலெக்சாண்டருக்கு எழுதிவிட்டு, தன் கத்தியினல் தன் உயிரைத் தானே போக்கிக்கொண்டான். அதைக் கண்டு அலெக்சாண்டர் துக்கித்தான். அதிலும், பொய்யாக அவனுக்குத் திருட்டுப்பட்டம் கட்டினர்களெனத் தெரிந்து பெரிதும் துக்கப்பட்டான். மாளவத்திலிருந்து வந்திருந்த ராயபாரி ஒருவன், இழிதன்மை வாய்ந்த அந்த மாஸிடோனியர்களை நோக்கி, "நண்பர்காள்! உங்கள் மேல்தோல் வெண்மையாயிருக்கின்றதேயல்லாமல் உங்கள் உள்ளம் தூய்மையின்றிக் கறுப்பாயிருக்கின்றது" என்று சொன்னன்.

பிறகு அந்தக் கப்பற்படை ஆற்றின் வழியே சென்றது. பல நிறக் கொடிகளோடு கூடிய எண்ணிறந்த கப்பல்களையும், ஆயுதங்கள் தரித்த குதிரைப்படையையும், பதாதிப்படையையும், விற்படையையும் பார்த்துப்பயப்பட்டு, அம்பஸ்தர்களும், க்ஷத்திரிகளும், யௌதேயர்களும் வந்து அலெக்சாண்டரைப் பணிந்தார்கள். அகேஸினீஸ் நதியும் ஸிந்து நதியும் சங்கமமாகும் இடத்தையே, பிலிப்பாஸினுடைய மாகாணத்திற்குத் தென் எல்லையாக அலெக்சாண்டர் நிர்ணயித்தான். கிரீஸ்தேசத்துத் திரேஸ் மாகாணத்திலிருந்து கொண்டு வந்த குதிரைப்படை முழுமையையும், அந்த மாகாணத்தைக் காத்துக்கொள்வதற்கு எத்தனை பதாதிகள் வேண்டுமோ அத்தனை பதாதிகளையும் பிலிப்பாஸுக்குக் கொடுத்தான். அவ்விரு நதிகளின் சங்கமத்தில் நகரமொன்று அமைத்து, கப்பற்றுறைமொன்று கட்டவேண்டுமென்றும் கட்டளையிட்டான். பழுதுபட்டிருந்த மரக்கலங்களை அங்கே செப்பனிட்டுக்கொண்டான். ஸிந்துநதியும் அகேஸினீஸ் நதியும் கூடுமிடத்திலிருந்து கடல்வரைக்குமுள்ள

பிரதேசத்தைத் தான் இன்னும் ஜயிக்காவிடினும், அதற்கு மண்டலேசர்களாகப் பைதானையும் ஆக்ஸியார்ட்டீஸையும் நியமித்தான். அப்படி நியமிக்குமளவில், "அடுத்த வருஷத்து விளைபயிர்ப் பயன்களையும் பழங்களையும் குடியானவன் இப்போதே விற்பதற்காகும்" என்று வேடிக்கையாகச் சொன்னான்.

அதன்பின்பு அலெக்சாண்டர் ஸிந்துநதிக்கு மேற்கேயுள்ள மலைநாட்டின் அரசனாகிய சம்பாஸ்[1] அல்லது சப்பாஸ் என்பவன்மீது படையெடுத்துச் சென்றான். அவனுடைய தலைநகரம் ஸிந்துவனம், அல்லது, சைந்தவவனம எனப்படும். அது பலத்த கோட்டையுள்ள பட்டணம். அங்கே அலெக்சாண்டர் தன் படையோடு நன்கு அமர்ந்துகொண்டான். சம்பாஸினுடைய படையும் பிரஜைகளும் சேர்ந்து ஒரு லக்ஷம் ஜனங்களுக்கு அதிகமாவார்கள். ஒரு வருஷத்திற்கு வேண்டிய உணவுப்பொருள்களைப் போதுமான அளவு சேகரித்து வைத்துக்கொண்ட சம்பாஸ், தன்னுடைய நகரத்திலுள்ள உன்னதமான மதில்களைத் தாண்டி உள்ளே சத்துரு வரமுடியாதென எண்ணியிருந்தான். ஆனால், அலெக்சாண்டர் தன்னுடைய ஆட்களைக்கொண்டு கோட்டை மதில்களின் கீழே சுரங்கம் அறுக்கச் செய்து, நகரத்து நடுமையத்திற்குப் போகத் தக்க தரைக்கீழ்ப் பாதையொன்றை அமைத்துவிட்டான். இப்படிச் சுரங்கம் அறுப்பதைச் சம்பாசும் அவனுடைய குடிகளும் அதற்குமுன் பார்த்ததே இல்லையாதலால், நகரத்தின் நடுமையத்தில் தரையின் கீழிருந்து அலெக்சாண்டரும் அவனுடைய சைனியமும் வெளிவரக்

---

1. சம்பு, அல்லது, சபேசன் இரண்டும் சிவனுக்குரிய திருநாமங்களே.

கண்டு திகிலுற்றுப் பலமொடுங்கி நின்றார்கள். அவர்கள் அவ்வாறு திக்கற்றுத் திகைக்கையில், அவர்கள் மீது விழுந்து அலெக்சாண்டர் 80,000 ஆட்களைச் சங்கரித்தான். மற்றவர்களை அடிமைகளாகக் கைக்கொண்டான். பெரும்பீதி கொண்ட சம்பாஸ் பணிவுடன் வந்து வணங்கினான். அலெக்சாண்டருடைய தலைமைக்கு உட்பட்ட அரசனாக அவனை அவனுடைய ராஜ்யத்திற்கே அலெக்சாண்டர் ஸ்திரப்படுத்தினான். ஸிந்து நாட்டில் வடக்குப் பிரதேசத்து அரசனான மூஷிகசேனன் அந்தப் பக்கங்களிலுள்ளவர்களெல்லாரினும் செல்வம் மிக்கவனென்றும் அறிவு மிக்கவனென்றும் பெயர் பெற்றிருந்தான். அவன் அலெக்சாண்டருக்கு ராயபாரம் அனுப்பவில்லை; காணிக்கைகளும் அனுப்பவில்லை. அவன் போருக்குச் சித்தமாகுமுன்னமே அலெக்சாண்டர் நதிவழியாக விரைந்து வந்து அவனுடைய ராஜ்யத்திற்குள் பிரவேசித்தான். கலங்கிப்போன மூஷிகசேனன் எதிர்கொண்டு வந்து விலையுயர்ந்த காணிக்கைளை அளித்து வணங்கினான். அதை ஏற்றுக்கொண்டு அலெக்சாண்டர் மூஷிகசேனனுடைய தலைநகரமாகிய அலாரம்[1] அல்லது அலார் என்னும் கோட்டையைப் பலப்படுத்தி, அங்கே பட்டாளத்தை வைக்கும்படி கிரேடிராசுக்குச் சொன்னான்.

அதற்குப் பிறகு அலெக்சாண்டர் ஸிந்துப்பிரஸ்தத்து ஆஸ்திகசேனன்[2] என்னும் பார்த்திபசேனன் மீது பாய்ந்தான். ஸிந்துப்பிரஸ்தம் என்பது ஸிந்துநதியின் மேற்கே

1. ஸிந்து மாகாணத்துத் "தலைநாயில்" என்று அர்த்தம்.

2. இவனைக் கிரேக்கர் ஆக்ஸிகேனஸ், அல்லது பார்த்திகேனஸ் என்பர். ஆஸ்திகசேனன்=ஆஸ்திகர்களின் தலைவன். பார்த்திபசேனன்=ராஜசேகரன்.

யுள்ள மேட்டுப்பூமி. அவனும் அலெக்சாண்டரும் ராய பாரம் அனுப்பவில்லை; காணிக்கைகளும் அனுப்பவில்லை. அவனுடைய நகரம் மகா ஊர்த்தம்[1] எனப்படும். இதை மூன்றுநாள் முற்றுகையிட்டுப் பிடித்துக்கொண்டு அலெக்சாண்டர் அவனையும் அவனுடைய போர்வீரர்களையும் கொன்றுவிட்டான். கோட்டையை அழித்துக் குடிகளை அடிமைகளாக விற்றுவிட்டான்.

இப்படி இருக்கையில், பிராமணர்களுடைய தூண்டுதலினாலும், தன் சத்துருவாகிய மூஷிகசேனனுக்கு அவனுடைய ராஜ்யத்தை அலெக்சாண்டர் திரும்பக்கொடுத்துவிட்டதனாலும் சம்பாஸ் கலகித்தெழுந்தான் என்னும் வர்த்தமானம் வந்து சேர்ந்தது. "இவ்விடத்துப் பிராமணர்கள் நம்மை எம்மட்டும் தொல்லைப்படுத்தக்கூடுமோ அம்மட்டும் செய்யக் கங்கணங்கட்டிக்கொண்டிருக்கிறார்களெனத் தோன்றுகின்றது. புக்கிபேலாவிலிருந்து அந்தக் கறுப்புப் பிராமணன் தப்பியோடியது முதல் பிராமணர்களுக்குள் ஒரு மனக்கொதிப்பு உண்டாயிருப்பதாகத் தெரிகிறது. இவ்வளவு விஷமமும் அந்தப் பயலாலும், சந்திரகுப்தன் என்னும் அவ்விளைஞனாலுமே விளைகின்றனவெனத் தனக்கு வேண்டிய இந்தியர்கள் சொல்வதாகப் பிலிப்பாஸ் அறிவிக்கின்றான். அவர்களிருவரையும் அந்த முட்டாள்கள் தப்பியோடவிட்டார்களே! அப்பொழுதே நான் அவர்களிருவரையும் கொல்விக்காமற் போனேனே! ஆம்பிசினுடைய ராஜ்யத்திலும் போரஸினுடைய ராஜ்யத்திலும் பிராமணர்களுக்கு அரசியற்காரியங்களில் செல்வாக்கு இல்லையென்றும், மாளவ நாட்டிலும் க்ஷுத்ரக நாட்டிலும் செல்வாக்கு

1. இது 'மிக உன்னதமானது' எனப் பொருள்படும். இந்நாளில் இதை மஹோர்த்தா (Mahorta) என்பார்கள்.

அதிகமென்றும், இந்த ஸிந்துப்பிரதேசத்தில் அவர்களுடைய செல்வாக்கே பிரபலமென்றும் தெரிகிறது" என்று யூமினீஸைப் பார்த்து அலெக்சாண்டர் சொன்னான்.

"சால்டியாவிலும் எகிப்திலும் இருப்பது போல வாகும். செழுமை வாய்ந்த நதிமுகப்பிரதேசங்களில் அரசர்கள் தனவான்களாகவும், வைதிகப்பிராமணர்கள் பலவான்களாகவும் இருக்கிறார்கள்" என்று யூமினீஸ் மறுமொழி கூறினான்.

பிறகு ஸிந்துவனத்தின் மீது அலெக்சாண்டர் படையெடுத்தான். அவ்விடத்தை விட்டுச் சம்பாஸ் ஓடிப் போனான். அப்படிப் போகையில், தன் ராஜ்யத்தையும் பொக்கிஷத்தையும் உறவினர்களிடம் ஒப்பித்தான். அவர்கள் கோட்டைக்கதவுகளைக் கிரேக்கர்களுக்குத் திறந்து விட்டு, நகரத்தை அவர்கள் வசமாக்கினார்கள். பொக்கிஷசாலையிலிருந்த திரவியமனைத்தையும் யானைகளையும் எடுத்துக் கொண்டு அலெக்சாண்டர் பிரம்மஸ்தலத்தின்மீது படையெடுத்தான். அது பிராமணர்களுடைய நகரம். அது சம்பாஸ் என்பவனுடைய ராஜ்யத்தைச் சேர்ந்தது. சம்பாஸினுடைய உறவினர்கள் பணிந்து போனார்கள். சம்பாஸும் மேற்கே ஓடிப்போய்விட்டான். அப்படியிருந்தும், பிராமணர்கள் அந்நகரத்தைக் கைவிடமாட்டோம் என்றார்கள். சம்பாஸினுடைய படைத்தலைவர்களான பலரின் உதவி கொண்டு பிராமணர்கள் நகரத்தின் வெளிப்புறத்திற் பெரும் போர் புரிந்தார்கள். அலெக்சாண்டர் அவர்களைத் தோற்கடித்தான். 600 பேரைக் கொன்றான்; 1000 பேரைப் பிடித்து விற்றான்; மீதியிருந்தவர்களை நகரத்திற்குள் துரத்தியடித்தான்.

ஆனல், பிராமணர்கள் தங்கள் கத்திகளுக்கும் அம்பு களுக்கும் கொடிய ஸர்ப்பவிஷம் பூசியிருந்தார்கள். ஆகை யால், காயம்பட்ட கிரேக்கப் படைவீரர் பலர் கடுநோய்ப் பட்டுச் சீக்கிரத்தில் மரிக்கலானார்கள். மாளவகோட்டிற் செய்தது போல, அலெக்சாண்டர் போர் முனையில் வந்து நிற்பானென்றும், காயம் பட்டுச் சாவானென்றும் பிரா மணர்கள் நினைத்தார்கள். நல்ல வேளையாக அலெக்சாண்ட ருக்குக் காயம் படவில்லை. ஆனல், அவனுடைய ஸகாவும் உறவினனுமான டாலமிக்கு இடது தோளில் விஷக்கத்தியால் வெட்டுக் காயம் பட்டது. அவன் கிரேக்கசேனையிலுள்ள பெரிய தீரர்களுள் ஒருவன். ஆடம்பரமில்லாமல், சாமா னியமாக வாழ்க்கையில் வியவகரித்துக் கொண்டிருந்தத னலும், அடக்க வொடுக்கம், மட்டு மரியாதை உள்ளவ னைதனலும், தயை மிகுந்தவனைதனலும் எல்லாரும் அவன்மீது அன்பு வைத்திருந்தார்கள். அவன் பிழைத்து எழவேண்டுமேயென அலெக்சாண்டரும் சைனியத்தவ ரெல்லாரும் பெருங்கவலை கொண்டிருந்தார்கள். இரவில் அலெக்சாண்டரே போய் அவனைக் கவனித்தான்.

பின்பு பிராமணனெருவன் அலெக்சாண்டரிடம் வந்து ஒரு மூலிகையின் பெயரைச் சொல்லி, அதை வெட்டுக் காயத்தில் வைத்துக் கட்டினல் பாம்பு விஷம் முறிந்து டாலமி தேறுவானென்று சொல்லிக் கொடுத்தான். 'நான் செய்யும் இந்த உபகாரத்திற்குப் பிரதியாக இந்த நகரத்தை அழிக்காமல் விட்டுவிடவேண்டும், இது மறுநாள் அவனுக்கு ஒப்படைக்கப்படும்; அந்த மூலிகையின் பெயரை ஒரு ஸர்ப்பமே தம் கனவில் வந்து சொல்லிக்கொடுத்ததாக அலெக்சாண்டர் பாசாங்கு செய்யவேண்டும்; அப்படிச் செய்யாவிட்டால், இரகசியத்

தைச் சத்துருவுக்கு வெளியிட்ட குற்றத்திற்காக நண்பர்களும் மற்றவர்களும் என்னைப் பகிஷ்கரிப்பார்கள்' என்று அந்தப் பிராமணன் நிபந்தனை கூறினான். அப்படியே செய்வதாக அலெக்சாண்டர் அந்தப் பிராமணனுக்கு வாக்களித்து, மறுநாட்காலையில், தான் கனவு கண்டதாகப் பொய் கூறிப் பிரபலமாக்கி அந்த மூலிகையைத் தருவித்து டாலமியின் காயத்தில் வைத்துக் கட்டினான். நோய் தீர்ந்து டாலமி ஆச்சரியகரமாகச் சௌக்கியமடைந்து எழுந்தான். பாம்பு விஷத்திற்கு முறிவு தெரிந்துபோனதனால், இனித் தங்கள் பிரயத்தனங்கள் பலியாவெனப் பிராமணர்கள் எண்ணி, பிரம்மஸ்தலத்தை அலெக்சாண்டருக்கு ஒப்படைத்தார்கள். அதை அலெக்சாண்டர் ஏற்றுக்கொண்டானாயினும், தலைமையான பிராமணர்கள் பன்னிருவரைத் தூக்கிலிட்டுக் கொன்றான். சம்பாஸையும் அவனுடன் சென்ற பிராமணர்களையும் பிடிக்கும்படி பைதானை அனுப்பினான். "கையில் எத்தனை பேர் அகப்படுகிறார்களோ அத்தனை பேரையும் அருகிலுள்ள மரங்களில் தூக்கிலிட்டுக் கொன்றுவிடு. ஆனால், அவர்களுள் மிகக் கெட்டிக்காரராயிருப்பவர் பதின்மரை என்னிடம் கொண்டுவா. அவர்களைத் தூக்கிலிடுமுன் அவர்கள் பெருமையடித்துக்கொள்கிற கல்வித்திறமையை நான் பரீக்ஷித்துப் பார்க்கவேண்டும்" என்று பைதானுக்கு அலெக்சாண்டர் சொன்னான்.

---

## அத்தியாயம் 18

# அலெக்சாண்டர் அந்தணர் ஸம்வாதம்

சில நாளைக்குள் பைதான் திரும்பிவந்தான். "மகாராஜா! கலகம் விளைக்கும்படி சம்பாஷைத் தூண்டிய திகம்பர ஞானிகள் பதினெண்மரைத் தூக்கிலிட்டுக் கொன்றேன். அவர்கள் மிக்க சாந்தத்தோடு பிராணனை விட்டார்கள். அவர்களுடைய சாந்தம் அதிசயிக்கத் தக்கது; அவர்களுக்குள்ள பெயரும் பெருமையும் அதிலே விளங்கின. அறிவிற் சிறந்தவர்களெனப் பெயர்பெற்ற பதின்மரை இங்கே கொண்டுவந்திருக்கிறேன். அவர்கள் வாலில்லாக் குரங்குகளைப் போல நிர்வாணமாக இருக்கிறார்கள். ஒரு குரங்குக் கூட்டத்துக்குள்ள தந்திரம் வாய்ந்திருக்கிறார்கள்" என்று அவன் சொன்னான்.

"ஹா! நன்று. இவ்வந்தணர்கள் ஒருநாளும் மறவாதிருக்கத் தக்க புத்திமதியைப் பெற்றார்களென்று நினைக்கிறேன்" என்று அலெக்சாண்டர் சொன்னான். பின்பு அந்தப் பதின்மரையும் பார்த்து, "நீங்கள் அறிவிற் சிறந்தவர்களென்று சொல்லிக்கொள்கிறீர்களே; உங்கள் அறிவு எந்தமட்டும் இருக்கிறதென நான் சிறிது மாதிரி பார்த்தபின், உங்கள் தோழர்களைப் போலவே நீங்களும் தூக்கில் தொங்கிச் சாகவேண்டியவர்களே. உங்களுக்குள் புத்திசாலியானவர் ஒருவரை மத்தியஸ்தராக நியமித்துக் கொள்ளுங்கள். மற்றவர்களை நான் கேள்வி கேட்கிறேன்.

"நீங்களாக நியமித்துக்கொள்ளும் மத்தியஸ்தரின் அபிப்பிராயத்தில் உங்களில் எவருடைய மறுமொழி மிகவும் அறிவுக்குறைவானதாயிருக்கிறதோ, அவர் முதன் முதலிற் கொல்லப்பெறுவார். அதற்குப்பின் அறிவுக்குறைவின் அளவுக்குத் தக்கபடி மற்றவர்கள் ஒவ்வொருவராக இறக்கவேண்டியவராவர்" என்று அலெக்சாண்டர் சொன்ஞன். அவர்களுள் ஒன்பதுபேர் சேர்ந்து வைஜயந்தர் என்பவரை மிகப் புத்திசாலியென உடனே தேர்ந்தெடுத்து, மத்தியஸ்தராகத் தக்கவர் அவரே யெனக் கூறினார்கள். "ஓ, இவ்வளவு சீக்கிரமாக நீங்கள் ஒத்து வந்துவிட்டீர்களே!" என்று அலெக்சாண்டர் ஆச்சரியப்பட்டான்.

"ஐயா, ஒளிகளின் காந்தியைக் கண்டுபிடிப்பது போலப் புத்திமான்களின் கல்வித்திறமையை அளவிட்டறிவது அவ்வளவு எளிதாகும்" என்று அந்தணர்கள் சொன்னார்கள்.

பின்பு, அலெக்சாண்டர் தன் கேள்விகளைக் கேட்கத் தொடங்கினன்:

**அலேக்சாண்டர்.**—உயிர்த்திருப்பவர்களின் சங்கியை அதிகமா? இறந்தவர்களின் சங்கியை அதிகமா?

**முதல் அந்தணன்.**—உயிர்த்திருப்பவர்களின் எண்ணிக்கையே அதிகம்; ஏனெனில், மரித்தவர்கள் இல்லையே.

**அலேக்சாண்டர்.**—பிராணிகள் பூமியில் அதிகமா? கடலில் அதிகமா?

**இரண்டாம் அந்தணன்.**—பூமியிலேயே அதிகம்; ஏனெனில், கடலும் பூமியில் அடக்கம்.

**அலேக்சாண்டர்.**—மிருகங்களுக்குள் கபடம் மிகுந்தது எது?

**மூன்றும் அந்தணன்.**—மனிதன் இன்னும் தெரிந்து கொள்ளாதது எதுவோ அது. (அதாவது மனிதன்; தன்னைத் தான் இன்னும் அவன் தெரிந்து கொள்ளவில்லை).

**அலெக்சாண்டர்.**---கலகித்தெழும்படி சம்பாஷணை ஏன் கிளப்பினீர்?

**நான்காம் அந்தணன்.**—இருந்தால் புகழோடு இருக்கட்டும், இல்லாவிட்டால் புகழோடு இறக்கட்டும் என்று எண்ணியே.

**அலெக்சாண்டர்.**—பகல் இரவு என்னும் இரண்டனுள் மூத்தது யாது?

**ஐந்தாம் அந்தணன்.**—இரவு ஓரிரவு மூத்தது; பகல் ஒரு பகல் மூத்தது.

**அலெக்சாண்டர்.**—விபரீதமான மறுமொழியாயிருக்கின்றதே!

**ஐந்தாம் அந்தணன்.**—விபரீத வினவுக்கு விபரீத விடை வரத்தானே வேண்டும்?

**அலெக்சாண்டர்.**—ஒருவன் தன்னை ஜனங்கள் மிக்க அன்புடன் கொண்டாடுவதற்கு என்ன செய்ய வேண்டும்?

**ஆறும் அந்தணன்.**—அவன் மிகுந்த பலபராக்கிரமமுள்ளவனாய் இருக்கவேண்டும். அப்படியிருந்தும், தன்னைக் கண்டு ஜனங்கள் மிக அதிகமாக அஞ்சும்படி நடந்துகொள்ளக் கூடாது. பலவீனனை எவரும் பாராட்டார். அச்சம் அன்பை அழிக்கும்.

**அலெக்சாண்டர்.**—மனிதன் எங்ஙனம் தேவனாகக் கூடும்?

**ஏழாம் அந்தணன்.**---மனிதரெவரும் செய்யமுடியாத காரியத்தைச் செய்வதனால்.

**அலெக்சாண்டர்.**—வாழ்வு வீழ்வு என்னும் இரண்டனுள் பலம் மிக்கது யாது?

**எட்டாம் அந்தணன்.**—சாவினும் ஜீவ்யமே பலம் மிக்கது; ஏனெனில், எண்ணித் தொலையாத் துன்பங்களைத் தாங்கிக் கொண்டு அது இன்னும் இருக்கின்றது. சாவு எதனையும் வெறுமையாக்கி விடுகின்றது.

**அலெக்சாண்டர்.**—மனிதன் எத்தனை நாள் உயிரோடிருக்க விரும்பவேண்டுமென உமக்குத் தோன்றுகின்றது?

**ஒன்பதாம் அந்தணன்.**—ஆழ்ந்து ஆலோசித்துப் பார்க்கும் போது, இருப்பதினும் இறப்பதே சிறப்பெனத் தோன்றும் வரையில்.

**அலெக்சாண்டர்.**—(மத்தியஸ்தரை நோக்கி) உமது தீர்ப்பைச் சொல்லும்.

**வைஜயந்தர்.**—(எவரையுங் கொல்லாது காக்கக் கருதி), ஒவ்வொருவரும் மற்றவர்களைக் காட்டிலும் மதியீனமாகவே மறுமொழி கூறியிருக்கிறார்கள்.

**அலெக்சாண்டர்.**—அப்படியானால், இந்தத் தீர்ப்புச் சொல்லியதற்கு நீரே முதலிற் சாகவேண்டும்.

**வைஜயந்தர்.**—அப்படியாகாது. நானே முதலிற் சாக வேண்டுமென்றால், மிகவும் அறிவுக் குறைவான மறுமொழி கூறினவனே முதலிற் சாகத் தக்கவனென நீர் வாக்குக் கொடுத்ததை மாற்றவேண்டும். ஏனெனில், எங்கள் பத்துப் பேர்களுள் நான் சொல்லியதே மிகவும் மதியற்ற மறுமொழியென நீர் இன்னும் ருஜுப்படுத்தவில்லையே.

அலெக்சாண்டர் கலகலவென நகைத்தான். அந்தப் பத்துப் பிராமணர்களில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வெள்ளி டாலெண்டுப் பணம் சம்மானம் செய்து, அவர்

களை ஊறுபாடின்றி ஒழிந்துபோகச் சொன்னான். அவர்கள் அந்த வெள்ளிப் பணத்தை ஆவலோடு வாங்கிக்கொண்டு புறப்பட்டுப் போனார்கள்.

"இந்த வேதாந்திகள், ஓ கலனஸ், அந்த வெள்ளிப் பணத்தைப் பார்த்துக் களிப்புறுகிறார்களே. இதற்கென்ன காரணம்?" என்று அலெக்சாண்டர் வினவினான்.

"ஐயா, மிகுந்த பக்தியுள்ளவனும் அன்னம் புசிக்கும்போது, தெய்வத்தைத் தியானித்துக்கொண்டிருக்க முடியாது. அந்தக் குறையை நிவர்த்திக்கும் பொருட்டே எங்கள் முன்னவர்கள் அன்னத்தையே தெய்வமென ஆராதித்திருக்கிறார்கள். தைத்திரீயோபநிஷத்து கூறுவதாவது:

அன்னம் பிரஹ்மேதி வ்யஜாநாத்
அன்னாத்யேவ ஃபூதானி ஜாயந்தே
அன்னேன் ஜாதானி ஜீவந்தி
அன்னம் ப்ரயந்த் யபிஸம் விசந்தீதி.[1]

"நம் கொள்கைகளில் எதனையும் கைவிடாதிருந்தோமானால், தானம் ஏற்பதிற் குற்றமென்ன? முக்கியமாக, உம்மைப்போன்ற பெரிய மகாராஜரிடமிருந்து ஏற்பது குற்றமாகுமோ? கொடுப்பது உங்களுக்கு உரிமை, ஏற்பது எங்களுக்கு உரிமை" என்று கலனஸ் சொன்னார்.

---

1. அன்னத்தைப் பிரம்மமென்று அறியவேண்டும். ஏனெனின், அன்னத்தினின்றே இந்தப் பிராணிகள் உண்டாகின்றனர். உண்டானவர்கள் அன்னத்தால் ஜீவிக்கிறார்கள். அன்னத்தை அடைந்து, அன்னத்துடன் ஒன்றாய் விடுகிறார்கள். ஆகையால், அன்னம் பிரம்மம் என்று சொல்லப்பட்டது.

பின்பு பைதான் வந்து, "மகாராஜரே! உங்களைக் கொல்லவேண்டுமென்றிருந்த மண்டலாதிபதியின் தாயாகிய பௌலோமி என்னும் கொடிய ராக்ஷஸி போன்றவளைப் பிடித்து வந்திருக்கிறோம்" என்று சொன்னான்.

அவளை உள்ளே கொண்டு வரும்படி அலெக்சாண்டர் கட்டளையிட்டான். பௌலோமியை அவன் முன்னிலையிற் கொண்டுவந்து நிறுத்தினார்கள். அவள் சாமானியமான சிலையுடுத்து அலெக்சாண்டரின் எதிரில் நின்றாள்; அவளுடைய கண்களில் அச்சத்தின் அடையாளமே இல்லை. "மாதே! நான் ஜீயஸின் தனயன் அல்லவென்று நீ சொன்னாயா?" என அலெக்சாண்டர் அவளை வினவினான்.

"ஆம், நான் சொன்னேன்" என்று அவள் மறுமொழி கூறவே, அலெக்சாண்டர் சீற்றமுற்று, "ஏன் அப்படிச் சொன்னாய்?" எனக் கேட்டான்.

அதற்கு அவள், "கடவுள் மகன் ஒருபோதும் அம்பினாற் குத்துண்ணான்; தடியடி பட்டுத் திகைக்கான்; மூர்ச்சிக்கவும் மாட்டான்; ஒருகாரணமும் இல்லாமல் சிலர் வந்து, தங்களைத் தாக்கியபோது சில க்ஷத்திரியர்கள் தங்கள் வீடுவாசல்களைக் காத்துக்கொண்டார்களென்னும் காரணத்தைக்கொண்டே நிரபராதிகளான ஸ்திரீகளையும் குழந்தைகளையும் கடவுளின் மகனவன் கொல்லமாட்டான்" என்று அவள் மறுமொழி கூறினாள்.

"இங்ஙனம் இவள் நிந்தனையாகப் பேசியதற்கு, யஜமானர் உத்தரவிட்டால், இந்த இழிந்தமாதையும் தூக்கிலிட்டுக் கொல்வேன்" என்று அலெக்சாண்டரை நோக்கிப் பைதான் சொன்னான்.

“என்னை நன்றாகத் தூக்கிலிடுங்கள். என் அருமை மகனைக் கொன்றீர்கள்; மருமகளைக் கொன்றீர்கள்; என் நூற்றுக்கணக்கான சகோதரிகளைக் கொன்றீர்கள். அவர்களுக்கு ஒருவிதம், எனக்கு வேறுவிதம் என்னும் வித்தியாசமே வேண்டாம். அன்றைத்தினம் நான் மாளவக் கோட்டில் இருந்திருப்பேனாயின், மற்றவர்களோடு என்னையும் தீர்த்திருப்பீர்கள். வாருங்கள்; ஆகட்டும்: உடனே தூக்குப்போடுங்கள்” என்று பௌலோமி கூறினாள்.

“அவளை அனுப்பிவிடு. ஜீயஸின் புத்திரன் அவளைப் பொருட்படுத்தாதிருக்க முடியும். நம்மால் அவள் ஒரு மகனை இழந்துள்ளாள். என் தாயும் இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் இவளைப் போலவே நடந்துகொண்டிருப்பாள். போ, மாதே, போ. இனிமேல் வாயை மூடிக்கொண்டிருப்பேனென்று சொல்” என்றான் அலெக்சாண்டர்.

“அது சொல்லவேமாட்டேன்; அப்படி வாக்குக் கொடுக்கமாட்டேன். என்மகனைக் கொன்றதற்குப் பழி வாங்குமளவும் எனக்கு அமைதி ஏற்படாது. என் கணவரது ராஜ்யம் ஸ்வதந்திரம் அடைகிற வரையில் எனக்குச் சாந்தி உண்டாகாது” என்று சொல்லிக்கொண்டே அவள் தைதானுக்குப்பின் போனாள்.

“அந்தக் காரியம் உன்னால் சாதிக்கமுடியுமாக்கும்! ஓடிப்போ, பிதற்றுவாய்க் கிழவி!” என்று தைதான் அவளை நோக்கி ஏளனமாகப் பேசினான்.

“பூ! திடசங்கற்பமுள்ளவனொருவன் எங்களை வெல்லக்கூடுமானால், திடசங்கற்பமுள்ளவள் ஒருத்தி எங்களை விடுவிக்க முடியாதா?” என்று பௌலோமி சொல்லிக்கொண்டே வெளியே போனாள்.

அவள் போவதைக் கவனிப்பதற்காகக் கலனுஸ் வெளியே வந்து எட்டிப் பார்த்தார். "அந்தக் கிழவியால் ஏதாவது செய்ய முடியுமா?" என்று கலனுஸைப் பார்த்துப் பைதான் வினவினான்.

"செய்யமுடியாது; அவள் தானாக ஒன்றும் செய்ய முடியாது" என்றார் கலனுஸ்.

"அப்படியானால், அவள் ஏன் இப்படிப் பெருமை யடித்துக்கொள்கிறாள்?" என்றான் பைதான்.

"நம்மால் சாத்தியமாகக்கூடியதைக் காட்டிலும் அதிக மாகவேநாமெல்லோரும் பெருமையடித்துக் கொள்கிறோம்; இது அலெக்சாண்டருக்கும் உண்டு. ஸ்திரீகளைப் பற்றிக் கேட்கவேண்டியதே இல்லை. தற்புகழ்ச்சியே அவர்களுக்கு ஜீவசத்து" என்று கலனுஸ் உரத்துச் சொன்னார்.

அதைக் கேட்டுக்கொண்டிருந்த அலெக்சாண்டர், "கலனுஸ்! நான் அதிகமாகப் பெருமையடித்துக்கொள் கிறேனென்று நினைக்கிறீரா?" என வினவினான்.

"ஆம், மகாராஜா. முக்கியமாக, மதுமயக்கத்தில். ஆனால், அதற்காக வருத்தப்படவேண்டாம். உளுந்து மாவைப்போல, வீரியம் மிக்க ஸ்வபாவங்கள் பொங்கி வழியும்; ஞானவான்களான மகான்கள் அசங்கதப் பிரசங்கங்கள் செய்கிறார்கள்; போர்வீரர் ஜயகோஷங்களில் தங்கள் பிரதாபங்களை மிகைப்படுத்திக் கூறுகிறார்கள். கலனுஸாகிய நான் எனது ஞானத்தைப் பெருமையாகச் சொல்லிக் கொள்கிறேன். யஜுர்வேதத்தில், 2-ஆம் காண் டம், 5-ஆம் பிரசினத்தில்,

**மனுஷ்யா ஈடேன்யா:**
**பிதரோ நமஸ்யா:**
**தேவா யஜ்ஞயா:**[1]

என்று சொல்லப் பட்டிருக்கின்றது. பிறர் புகழ்வதனு லன்றி மனிதர் தற்புகழ்ச்சியினுலும் பெருமையடைவர். அந்தப் பெருமையெல்லாம்,

**துல்ய நிந்தா ஸ்துதிர் மௌனி**

என்றபடி, என் மூடத்தனத்தை நான் உணருமுன், ஒரு வேளை, நுரையெனப் பொங்கி வழிந்து போம்" என்ருர் கலனுஸ்.

"இந்தாரும், ஒருவாய் மதுவருந்தி உற்சாகங்கொள் ளும். தண்டிமாஸைப் போல மனங்குன்றி விசனத்தில் ஆழ்ந்து போகாமேயும்" என்று அலெக்சாண்டர் அவரிடம் சொன்னுன். ஜீயஸின் புத்திரனுக்கெனச் சேமித்து வைக்கப் பட்டிருந்த, பொறுக்கியெடுத்த சிறந்த மதுவை, அலெக்சாண்டரும் கலனுஸூம் உட்கார்ந்து, நிரம்பப் பருகி னுர்கள்.

"ஞானவான்களோடு இருப்பதே எனக்குப் பிரியம். அரிஸ்டாடில் என்பவர் எனக்கு ஆசிரியராயிருந்தார். கிரீஸ் தேசத்திற்குள் ஞானம் முதிர்ந்தவர் அவரே. என் தந்தை என்னைப் பெற்றடுத்தார்; ஆனல் அரிஸ்டாடில் எனக்கு உயிர் வாழக் கற்றுக்கொடுத்தார். அப்படி யிருந்தும், அரிஸ்டாடில் அத்தனை ஞானமுள்ளவரா யிருந்தபோதிலும், கிரீஸ் தேசத்தவர்களல்லாதவர்கள் மீது நீண்ட துரபிப்பிராயம் கொண்டிருந்தார். அவர்களெல்

---

1. மனிதர்கள் ஸ்தோத்திரப் பிரியர்கள். பிதருக்கள் நமஸ் காரப் பிரியர்கள். தேவர்கள் யஜ்ஞப்பிரியர்கள்.

லாரும் காட்டுமிருண்டிகளென்றும், கிரேக்கர்களுக்கு மிகத் தாழ்ந்தவர்களே யென்றும் அவர் கருதுவார். அவருடைய அபிப்பிராயம் சரியன்றென்பது, பாரஸிகர்களோடும் இந்தியர்களோடும் பழகியதனால் எனக்கு நன்கு புலப்பட்டது. டயோஜினீஸ் எவ்வளவு பெரிய ஞானியோ அவ்வளவு தண்டிஸ்வாமியும், அவருடைய வழியில் பெரிய ஞானியே; போரஸ், தீரத்தில் கிரேக்க தேசத்து அரசர் எவருக்கும் ஈடானவனே" என்று கலனுவிடம் அலெக்சாண்டர் சொன்னான்.

"தம்முடைய சொந்த ஜாதியாரே மேம்பட்டவர்கள் என்ற அபிமானமும், பிற நாட்டார்மீது துரபிமானமும் எல்லா ஜாதியார்களுக்கும் எல்லா ஜனத்தொகுதிகளுக்கும் சர்வசாமானியமாக இருக்கின்றன. தேசாடனமும் உலகானுபவமும் உண்மையான கல்விப் பயிற்சியுமே அவைகளைக் களையவேண்டும். இந்தியாவிலுள்ள நாங்கள் ஆரியர்களென்றும், மற்றவர்களெல்லாரும் மிலேச்சர்களென்றும் நினைக்கிறோம்" என்று கலனுஸ் மொழிந்தார்.

"இந்த மூட நம்பிக்கையை விட்டொழித்து ஜனங்கள் எல்லோரையும் ஒரேமாதிரியாக எப்போது பாவிப்பார்களென நான் ஆசையோடு எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். நான் பாரஸிகத்திற்குத் திரும்பிப் போனவுடனே இப்பெரு நோக்கத்தைச் சாதிப்பதற்குச் சிறிதளவேனும் முயற்சி செய்வேன். இந்தியர்கள் ஜாதிமுறைகளையும் பழைய ஆசாரங்களையும் மிகக் கொண்டாடுகிறார்கள். அவற்றிற்குக் கட்டுப்பட்டிருப்பதனால் அவர்களுக்குத் தாராள புத்தி இல்லை. அவர்களைத் திருத்த முயல்வோமென்றால், நான் இங்கு நெடுநாள் தங்கியிருப்பதற்கில்லை" என்று அலெக்சாண்டர் சொன்னான்.

அந்த வார்த்தையைக் கேட்டுச் சந்தோஷித்துக் கலனுஸ், "அது பெரிய நோக்கமே, நல்ல நோக்கமே; அதைச் சாதிப்பது நல்லதே; ஆனால், சில நூற்றாண்டுகளுக்குப் பின்னரே அதை ஜனங்கள் ஆதரிப்பார்கள்" என்றார்.

# அத்தியாயம் 19

## அரசனுக்கு உறுதியிடல்

அந்தப் பத்துப் பிராமணர்களையும் பௌலோமியையும் சிக்ஷிக்காமல் அலெக்சாண்டர் அனுப்பிவிட்டானல்லவா? அதற்கு மூன்று நாளைக்குப்பின், பிராமணர்களுடைய ஏவலினால் மூஷிகசேனன் கலகித்தெழுந்தான் என்னும் வர்த்தமானம் வந்தது. கோபம் மூண்டு டையதானை விளித்து அலெக்சாண்டர், "இந்தப் பிராமணர்களுடைய உபத்திரவம் பொறுக்கமுடியவில்லை. உலகத்திலுள்ள மக்களுள் அதமருள் மிக்கவர்கள் இவர்களே. ஆனால், அதைப் பலவகைத் தந்திரங்களினால் வெளிக்காட்டாது ஒளிக்கிறார்கள். இவர்களுக்கு எவ்வளவு செல்வாக்கு இருக்கலாமோ அதற்கு மேல் அநேக மடங்கு அதிகமான செல்வாக்கு வாய்ந்திருக்கிறார்கள்" என்று சொன்னான்.

"இந்நாட்டில் எல்லோரும் இவர்களுடைய வார்த்தையைக் கேட்கிறார் போலிருக்கிறது. அப்படி அவர்கள் கேட்கையில், புத்தியையும் சாமானிய உலக ஞானத்தையுங்கூட ஒதுக்கித் தள்ளுகிறார்கள் எனத் தெரிகிறது. அன்று அம்மூடன் சம்பாஸ் இந்தப் பிராமணர்களுடைய சொற்கேட்டுக் கலகம் விளைவித்தான். தன் ராஜ்யத்தையும் பொக்கிஷத்தையும் விட்டுவிட்டு, ஸிந்து நதிக்கு மேற்புறம் ஓடிப்போனான். நம்முடைய ஆதிபத்தியத்தின் கீழ் அரசனாயிருப்பதைக் காட்டிலும், மணற்காட்டில் வெற்றுச்சுதந்திரம் கொண்டாடுவது அதிகமான கௌரவமென அவனை நம்பச் செய்

தார்கள். நாம் போய், அவனுடைய தலைநகரமான ஸிந்துமாஞு[1]வையும் அவனுடைய கஜானாவையும் பிடித்துக் கொண்டோம். பிரம்மஸ்தலத்தையும் பிடித்துக்கொண்டு, சம்பாஸைக் கிளப்பிவிட்ட பிராமணர்களெல்லாரையும் உறியிட்டுக் கொன்றோம். இவ்வளவு நாம் செய்ததைப் பார்த்து இந்தப் பிராமணர்களுக்கும் சிற்றரசர்களுக்கும் புத்தி வந்திருக்க வேண்டுமே? அதுதான் இல்லை. இதோ மூஷிகனைப் பாருங்கள். அன்றைக்குத் தடை சொல்லாமல் வந்து நம்மை வணங்கினன்; தன்னுடைய தலைநகரமான அலாரைக் கிரேடிராஸைக்கொண்டு திடப்படுத்தவும், அங்கே நம் பட்டாளத்தை வைக்கவும் இடங்கொடுத்தான். இப்போது பிராமணர்களின் பேச்சைக் கேட்டு நமக்கு விரோதமாகக் கிளம்பியிருக்கிறன். இவனுடைய நாடு செழுமையானதென்றும், இவனுடைய பிரஜைகள் சன்மார்க்கர்களென்றும், நாட்டுச்சட்டங்கள் யுக்தமானவையென்றும் நற்பெயர் உண்டு. அப்படியிருக்க, இவனுக்கும் இந்தக் கலகப்பித்து ஏற்பட்டிருக்கின்றதே" என்றுடைதான் சொன்ஞன்.

"இதற்கு ஓர் எல்லை இருக்கவேண்டும். நீ அவனைப் பின்தொடர்ந்து போய்ப் பிடித்து என்னிடம் கொண்டுவா. அதற்குள்ளாக நான் அவனுடைய அரணான நகரங்களைத் தாக்கி, அழித்து நிலமட்டமாக்கி, எத்தனை பிராமணர்கள் அகப்படுகிறார்களோ அத்தனை பேர்களையும் தூக்கிலிடுகிறேன். நீயும் அப்படியே செய். இவர்களுக்கெல்லாம் தண்டமே குரு. கொட்டினுல்தான் தேள் என்பார்கள்; வேறுவகையில் இவர்கள் சரிப்பட்டு வரமாட்டார்கள்.

1. இதுவே ஸிந்துவனம், அல்லது, ஸைந்தவவனம் எனப்படும்; இந்நாளில் ஸேவான் (Sehwan) என வழங்குகின்றது.

கொட்டாவிட்டால் பிள்ளைப்பூச்சி என்பார்கள். பணிந்து வருவதும் பின்னர்க் கலகம் விளைவிப்பதும் முடிவில்லாமல் மேலும் மேலும் நடந்துகொண்டே யிருக்கும். ஹஸ்தி, அசுவகர்கள், கதேயர்கள், இளையபோரஸ், பார்த்திகனஸ், சம்பாஸ் என்னும் இவர்களெல்லாரும் நமது ஆதிபத்தியத்தை மீறிக் கலகம் விளைவித்தமையால் நற்புத்தி புகட்டப் பெற்ருர்கள்; தக்கவாறு தண்டிக்கப்பெற்ருர்கள். மூஷிகனஸும் அதைத் தெரிந்துகொள்ளட்டும்" என்று அலெக்சாண்டர் சொன்னன்.

"யூடிமாசினிடமிருந்தும் பிலிப்பாசினிடமிருந்தும் இப்போதுதான் ஓர் ஆள் வந்தான். காட்டுச்சிங்கமொன்று வந்து சந்திரகுப்தனுடைய உடம்பை நக்கிக்கொடுத்து அவன் அரசனென ஒப்புக்கொண்டதுபோற் காட்டித் திரும்பிப் போய்விட்டதாம்; இந்த அசட்டுக்கதையைச் சொல்லி, சந்திரகுப்தனும் அவனுடன் இருக்கும் கறுப்புப்பிராமணனும், ஊரைவிட்டு ஓடிப்போயிருக்கிற கதேயர்களை ஏமாற்றியிருக்கிருர்களென்று அந்த ஆள் சொல்லுகிருன். பிராமணர்கள் வேண்டுமென்று பரப்பிய இந்தக் கட்டுக்கதையை அந்த மூடர்கள் நிஜமெனநம்பிச் சந்திரகுப்தனைத் தங்களுக்கு அரசனுக்கிக்கொண்டார்களாம். அவன் எங்கேயோ ஒரு சிற்றரசனுடைய பெண்ணைக் கலியாணம் செய்துகொண்டிருக்கிருனம். இந்த அராட்டியர்களுக்கு ஓர் அரசனும்! அராட்டி என்ருல் அராஷ்டிரம்; அதாவது, அரசனில்லா நாடு. அரசனில்லா நாட்டுக்கு அவன் அரசனும். என்ன எதிர்மறை! நம்முடைய ஆதிபத்தியத்தினின்றும், போரஸினுடைய ஆதிபத்தியத்தினின்றும் அவர்களெல்லாரையும் விடுவிப்பதாகச் சந்திரகுப்தன் வாக்களித்திருக்கிருனம். எதையும் எளிதில் நம்பும் இந்த மூடஜனங்களை நாம் எவ்

வளவு அடக்கிவைத்திருக்கிறோமோ அதைக்காட்டிலும் அதிகமாகச் சந்திரகுப்தனும் அவனுடனிருக்கும் கறுப்புப் பிராமணனும் இவர்களை அடக்கியொடுக்கிக் கட்டுத்திட்டத்தில் வைப்பார் என்பேன். மாளவர்களுடைய ஸ்வதந்திர கீதத்தை இவர்கள் வெட்கமின்றிக் கொண்டாடி எல்லாரும் பாடத்தலைப்பட்டிருக்கிறார்கள். மூட ஜனங்களின் மனத்தை அது நன்றாகக் கவர்ந்து கொண்டிருக்கிறது. ஆனால், அவையெல்லாம் வெறும் மிரட்டலே. உண்மையில் இவர்களுக்கு ஸ்வதந்திரத்தின்மீது ஆசை இல்லை; நமக்கு விரோதமாகக் கிளம்புவதற்கு அதையொரு கருவியாகக்கொண்டிருக்கிறார்களே யொழிய வேறன்று" என்று பைதான் சொன்னான்.

"நாம் இந்தியாவுக்கு மறுபடி வரும்போது சந்திரகுப்தனையும் இந்தப் பிராமணனையும் சரியானபடி பார்த்துக்கொள்வோம். அதற்கு முன்னரே யூடிமாசும் பிலிப்பாசும் அவர்களை ஒழித்துவிடுவார்களென்று நினைக்கிறேன். அவர்கள் ஒழித்திராவிட்டால், நாம் வந்து பார்த்துக்கொள்வோம்" என்றான் அலெக்சாண்டர்.

அலார் உள்பட மூஷிகசேனனுடைய ஏழு அரண் நகரங்களின்மீதும் அலெக்சாண்டர் படையெடுத்து, அவைகளைப் பிடித்துக்கொண்டு, பிராமணர்களெல்லாரையும் உறியிட்டுக் கொன்றான். மற்றக் குடிகளை அடிமைகளாகப் பிடித்துக்கொண்டான். நகரங்களை அழித்து நிலமட்டமாக்கினான். அந்தப் பிரதேசத்தில் போரணி வகுப்பதற்கேற்ற இடங்களைப் பலப்படுத்திப் பட்டாளங்களை அவைகளில் வைத்தான். இதற்கிடையில், மூஷிகசேனன் குடியானவர்களைத் திரட்டிப் போர்ப்படையாக்கிக்கொண்டு பைதானோடு போர்புரிந்தான். அந்தக்குடியானவர்கள் மண்வெட்டி, கோடரி, தடிக்கொம்பு, கடப்பாரை, அரிவாள்,

விறகுக்கட்டை முதலானவைகளை ஆயுதங்களாகக்கொண்டு சண்டை செய்தார்கள். மூஷிகசேனன் தோற்றுப்போய்ச் சத்துருவின் கையில் அகப்பட்டுக்கொண்டான். அவனை அலெக்சாண்டரின் டேராவுக்குக் கொண்டுபோனார்கள்.

மூஷிகசேனனை நோக்கி அலெக்சாண்டர், "முட்டாளே! ஏன் கலகம் விளைத்தாய்?" என வினவினான்.

"பிராணனைக் காட்டிலும் மானமே பெரிது. வாழ்ந்தால் மானத்தோடு வாழவேண்டும். அப்படி இல்லையெனின், மானத்தோடு சாகவேண்டும் என்று எண்ணியே எதிர்த்தேன். என்னைப்போன்ற க்ஷத்திரியன் போரிற் பொன்றலே தகுதி. அன்றேல், அவனுடைய பௌருஷ ஹீனத்துக்குப் பிராயச்சித்தமாகத் தீக்குளித்துத் துஞ்சல் வேண்டும். அதனால் அவன் அக்கினியினால் பரிசுத்த மாக்கப்பெற்ற 'அக்கினிகுல க்ஷத்திரிய'னாய்ப் பிறந்து, எப்படிப்பட்ட சத்துருவையும் எதிர்க்க வல்லவனாவான். முதற்சொல்லிய முறையே மேன்மையானதெனக் கைக்கொண்டேன். அப்படிச் செய்ததனால், மேனாட்டாராகிய உங்களுக்கு எங்கள் தர்மக்கொள்கைகள் எத்தன்மையன வெனக் காட்டுவதற்கு இடமுண்டாயிற்று" என்று மூஷிக சேனன் மறுமொழி கூறினான்.

"இப்போது என் தர்மக்கொள்கைகளை உனக்குக் காட்டுகிறேன். உங்கள் பிராமணர்களெல்லாரையும் தூக்கி லிட்டுக் கொல்வேன். நீ என்னவோ மானமாகச் சாகவேண்டு மென்று நினைக்கிறாயல்லவா? அங்ஙனமின்றி அவமானத் தோடு இறக்கச்செய்வேன். உன்னுடைய சொந்தத் தலை நக ரத்தில், பொறுக்கியெடுத்த பதினொரு பிராமணர்களுடன் உன்னையும் ஒரு பாதகனைத் தூக்கிலிடுவேன்" என்றான் அலெக்சாண்டர்.

"ஓ, எவ்வளவு பெருமையான மரணம்! இது மான மான மரணம். என் நாட்டு ஸ்வதந்திரத்தின் பொருட்டு என் உயிரைக் கொடுக்கிறேனென்று நான் மகிழ்வுறுகிறேன். ஆனல், நான் உயிர் துறக்குமுன், உமக்கும் உம்மைச் சேர்ந்தவர்களுக்கும் என்ன நேரப்போகிறதென்று ஒரு ஜோஸியம் சொல்கிறேன்:

"கீர்த்தி வாய்ந்த சந்திரகுப்த மகாராஜனேடு சேர்ந்து போற்றற்குரிய சாணக்கியர் என்னும் பெருமான் இந்த யுத்தத்தை விடாமல் நடத்துவார். இன்னும் சில நாளில் உமக்கு இந்நாட்டில் ஊசி குத்துமளவு நிலங்கூட இராது. அம்மட்டேயோ? பிறர் நாடுகளைப் பறிக்கவேண்டுமென் னும் துராசையினல் நீர் நிரபராதிகளான அநேக புருஷர் களையும், ஸ்திரீகளையும், பசுக்களையும், பிராமணர்களை யும் கொன்ற காரணத்தால் அதே இரத்தவெறி உம் குடும்பத்தவர்களையும் உம் சேனநாயகர்களையும் பிடித்து வாட்டும். இது நீர் பாபிலோன் நகரத்தில் ஜ்வரவேகத் தினல் வருந்தி நொந்து மடிந்தபின் நிகழும்; உம் பாரியை கள் இருவருள் ஒருவர் மற்றொருவரைக் கொல்வர்; உமது மரணத்துக்குப்பின் மீந்திருக்கிறவளுக்குப் பிறக்கிற பிள்ளை யும் அவளும் கொலை செய்யப்படுவார்கள்; மீதியாயுள்ள உம் ஏக புத்திரனும் கொலை செய்யப்படுவான்; அதே கதியே உம் ஒன்றுவிட்ட சகோதரனுக்கும் உம் தாய்க்கும் வாய்க்கும். இங்ஙனமாக உமது மரணத்திற்குப் பின் பன்னிரண்டு வருஷத்திற்குள் உமது குலப்பூண்டு அற்றுப் போம். உம் தளகர்த்தர்கள் இந்தப் பிரளய தாண்டவத் தைத் தொடர்ந்து, அவரவரும் ராஜ்ய ஆசை மேலீட்டால், கருணையில்லாமற் கடும்போர் செய்து ஒருவரை யொருவர் கொன்று ஒழிவார்கள்."

கோபாவேசங்கொண்டு அலெக்சாண்டர், "இவனை வெளியே கொண்டு போ. இவனையும் இவனோடுள்ள பிராமணர்களையும் இவனது ராஜதானியிலேயே தூக்கி லிட்டுக் கொல்" என்று பைதானுக்குச் சொன்னான்.

மூஷிகசேனனைப் பைதான் அவனுடைய ராஜதானியாகிய அலார் என்னும் பட்டணத்துக்குக் கொண்டு போனான். அவனுடைய பிராஜைகளிற் பதினாயிரம் பேர் முன்னிலையில் தூக்குப்போடுவதற்காக அவனையும் பதினொரு பிராமணர்களையும் ஒரு வரிசையாக நிறுத்தி வைத்தான். அவர்களைத் தூக்கிலிடுமுன், சிக்ஷை விதிக்கப்பெற்ற அப் பன்னிருவரும் சேர்ந்து ஒரே குரலில் ஸ்வதந்திர கீதம் பாடினார்கள். அது வருமாறு:

சுதந்திர நிமித்தமே உயிர்கொண்டு வாழ்வோம்
சுதந்திரங் கருதிவெம் மரணமும் ஏற்போம்
இதந்தரும் இசையெலாம் சுதந்திரப் பணிக்கே
ஏறுவோம் தூக்கிடும் மேடையும் இசைந்தே!

கருநெஞ்ச வேந்தரின் கொடுமையிற் சிதையோம்
கருதிமற் றவர்தயை நிதிகண்டு துனியோம்
வருவஞ்ச வாள்முனைக் காட்பட்டு முடியோம்
மதியின்றி ஒப்பந்த மாய்கையிற் தலையோம்!

சிறையஞ்சி உறுதிதான் தளர்வுற்று வீழோம்
சேதங்கள் வரஉள்ளம் அயர்வெய்தி முறியோம்
இறைமன்னர் வஞ்சனைக் காளாகி அழியோம்
இயல்கின்ற ஜாதியாற் பிரிவுற்று நில்லோம்!

(வேறு)

திரண்டெழுவீர்! அடிமையாண் சிதைந்தழியத் தோழர்களே!
சேர்ந்து செல்வீர்!
விரைந்துசுதந் திரஜோதி பெறும்வரையும் மெலியாது
முனைந்து நிற்பீர்!

வருத்துதுயர் எதுவரினும் சுதந்திரத்து வீரர்களே!
மகிழ்ந்து செல்வீர்!
பெருத்தஜயம் பெற்றிடுவீர்! நவயுகத்து மைந்தர்களே!
எழுந்து நிற்பீர்!

நெடுந்தூரம் சுதந்திராலயமெனினும் நினைவயர்ந்து
மலைத்து நில்லோம்!
கடுங்கான வழியெனினும், கால்சுடுக்கக் களைப்புறினும்,
கலக்கமேனோ?

சுதந்திரத்தின் சுடரொன்று மேற்படினும் போதுமுயிர்
சுடர்ந்து போகும்!
பதம்பெறுவோம், சுதந்திரத்தி னின்னிசையால் பந்தமெலாம்
அறுந்து போகும்!

அங்குக் குழுமியிருந்த இந்தியர்களெல்லாரும் மன வெழுச்சி மிக்கவர்களாய், அவர்களுடன் சேர்ந்து மேற் குறித்த கீதத்தைப் பாடத் தலைப்பட்டார்கள். அவர்களைக் கிரேக்கப் படைத்தலைவர்கள் பயமுறுத்தித் தடுத்தார்கள். அப்போது அவர்கள், "வேண்டுமானால் எங்களையும் தூக்குப் போடுங்கள்" என்றார்கள். "எங்களாலாவது ஒன்றுமில்லை. எத்தனை பேரைத்தான் நாங்கள் தூக்கிலிட முடியும்?" என்று பைதான் சலிப்புற்றுச் சொன்னான். அதற்குப்பின், மூஷிகசேனனும் பதினொரு பிராமணர்களும் தூக்கிலிடப் பட்டார்கள். அந்த வேளையில் ஜனங்களெல்லாரும், "ஜே, ஸீதாராம்!" எனக் கூவிய கோஷம் ஆகாயமளாவியது. ஒரு கிரேக்கப் படைத்தலைவனை நோக்கிப் பைதான், "இது பெரும் பீடையான காரியம். இப்படியே நடந்துகொண் டிருந்தால், இந்த ஸிந்துக் கழிமுகப் பிரதேசத்திற்கு மண்ட லாதிபதியாக நான் நெடுநாள் இருக்கமாட்டேன்" என்றான்.

---

# அத்தியாயம் 20

## இடி சூடக்கோடல்

ஸிந்து நதியின் கழிமுகப் பிரதேசத்தில் மகாராஜன் என்னும் ஆடம்பரமான பட்டப்பெயர் தரித்த படாலத்து அரசன் அலெக்சாண்டரிடம் வந்து அவனுக்கு உட்பட்டுப் போனதாகப் பணிந்தான். அங்ஙனம் அவன் பணிந்தளித்த காணிக்கைகளை ஏற்று அலெக்சாண்டர் தன்னுடைய ஆதிபத்தியத்திற்குட்பட்டு அவனுடைய ராஜ்யத்தை அவனே ஆளும்படி நியமித்து, தான் செய்யும் விஜய யாத்திரையில் தன்னை வரவேற்பதற்கு வேண்டிய ஏற்பாடு களைத் தக்கவாறு செய்து அமைக்கும்படி படாலத்திற்கு அவனைத் திரும்ப அனுப்பினான். இந்தியாவில் இனிப் பிர மாதமான சண்டை யொன்றும் நேராதென நினைத்துக் கிரேடிராஸைப் போலன் கணவாய் வழியாகவும் ஸீஸ்டன் பாலைவனத்தின் (Seistan desert) வழியாகவும் [1]கார்மேனியாவுக்குப் போகச் சொன்னான். அவனுடன் எல்லா யானைகளையும், இனி வேலைக்கு உதவாத மாஸிடோனியர்களையும், துணைப்படை யொன்றையும் அனுப்பினான். பாக்கியிருந்த படைகளை ஹெபேயிஸ்டியன் வசத்திலும்

---

1. கார்மேனியா என்பது ஆசியாக் கண்டத்தில் பாரசிகத்திற்கும் கட்ரோஷியாவுக்கும் இடையிலுள்ளதோர் தேசம். இப்பொழுது கெர்மான் (Kerman) என வழங்குகின்றது. இதன் தலைநகரம் கார்மேனியா.

யைதான் வசத்திலும் வைத்தான். ஏற்கெனவே, கோட்டை கட்டப்பட்டிருந்த நகரங்களில் ஜனங்களைக் குடியேற்றி, இந்தியர்கள் செய்யும் கலகங்களையெல்லாம் அடக்கிவிட்டு, படாலம் என்னும் பட்டணத்தில் தன்னுடன் வந்து சேரும் படி அவர்களுக்குச் சொன்னான்.

அதற்குப்பின், மிகவும் லேசான படைகளோடு அலெக்சாண்டர் நதியின் வழியே கப்பலிற் சென்றான். தன்னுடைய ஞாதியான மூஷிகசேனனைத் தூக்கிலிட்டுக் கொன்ற பிற நாட்டானுக்குப் படாலத்தரசன் பணிந்து போனானென்று அவன்மீது பயங்காளியெனப் பிராமணர் கள் குற்றஞ் சாட்டித் தூண்டியதனால், அவன் தன்னுடைய குடிகளிற் பெரும்பாலருடன் படாலம் என்னும் பட்ட ணத்தைவிட்டு ஓடிப்போனானென்றும், நிலங்களைப் பயிரிடா மல் விட்டுப்போனானென்றும் அலெக்சாண்டர், பிரயாணப் பட்ட மூன்றாம்நாள் கேள்விப்பட்டான். "இணக்கமும் பிணக்கமும் எல்லையில்லாமல் மாறி மாறி வந்துகொண்டிருக் கின்றனவே. இந்தத் தொல்லையை நினைத்தால் எனக்குத் தலை நோகின்றது. இது என்ன தேசம்!" என்று அலெக் சாண்டர் அலுப்புற்றுச் சொன்னான். பிறகு லேசான படைகளைக் கொண்டு அந்தக் கலகக்காரரைப் பின் தொடர்ந்து பிடிக்கச் சொன்னான். அவர்களிற் பெரும் பாலாரை நகரத்திற்குத் திரும்பிவந்து நிலங்களைப் பயிரிடச் செய்தான். "இப்படிப்பட்ட விஷயங்களில் தூக்கிலிட்டுக் கொல்வது சரியன்று. தூக்கிலிடப்பெற்றவர்களைப் பிராம ணர்கள் தேசபக்தர்களாகக் கொண்டாடி, அவர்கள் உயிரோடிருந்ததைக் காட்டிலும் மிகப் பிரபலமாக்கி விடுகி றார்கள்" என்று அலெக்சாண்டர் சொன்னான். படால நகரத்திற்குப்போய் ஹெபேயிஸ்டியனைக் கொண்டு அங்கே

பலமான கோட்டையொன்று கட்டச் சொன்னான். தன்னுடைய கப்பற் படையினருக்கு வேண்டிய தண்ணீருக்காக அடுத்த கடற்கரையிற் கிணறுகள் வெட்டும்படி சில ஆட்களை அனுப்பினான். அந்த ஆட்களைச் சில இந்தியர்கள் தாக்கி, அவர்களிற் பலரைக் கொன்றார்கள். தன் ஆட்களுக்குச் சகாயமாகத் துணைப்படைகளை அனுப்பினான். அவர்கள் அந்த இந்தியர்களை அடித்துப் பாலைவனத்திற்குத் திரும்ப ஓட்டி விட்டார்கள். "நிலங்களைப் பயிரிடாததனால் நமக்கு உணவின்றிச் செய்யவும், கிணறு வெட்டுவதைத் தடுப்பதனால் நாம் நீரின்றி வருந்தும்படி செய்யவும் பிராமணர்கள் முயன்றார்கள். இவ்விரண்டு காரியங்களும் பலிக்கவில்லை. நம் தொல்லைகள் இனி நீங்கின" என்று ஹெபேயிஸ்டியன் சொன்னான்.

"தொல்லைகள் நீங்கிப் போயிருந்தால் நன்றாகவே இருக்கும். ஆனால், அவை முற்றும் ஒழிந்து போயினவென்று நான் தைரியமாகச் சொல்லமாட்டேன்" என்றான் பைதான்.

"கேடு வருமென்றே நினைத்துக்கொண்டிராதே" என்றான் ஹெபேயிஸ்டியன்.

"நான் இங்கேயே இருக்கவேண்டியவனானமையின், உன்னைப்போல அவ்வளவு திருப்தியாக நினைக்க முடியாது" என்றான் பைதான்.

படாலம் என்னும் பட்டணத்தண்டை ஸிந்து நதி இரண்டு பெருங் கிளைகளாகப் பிரிகிறது. அவை இரண்டுக்கும் ஸிந்துவென்றே பெயர். அந்தப் பட்டணத்தில் துறைமுகம் ஒன்றும் கப்பல் செப்பனிடும் இடம் ஒன்றும் அலெக்சாண்டர் கட்டுவித்தான். அதற்குப்பின், நதியின் வலது கிளையின் வழியே தன் கப்பலைச் செலுத்திக்கொண்டு போனான். வழிகாட்டிக் கப்பல்களைக் கொண்டுபோவதற்கு

இந்தியன் எவனும் கிடைக்கவில்லை. மறுநாள் புயலடித்து அநேகம் கப்பல்களைச் சேதப்படுத்தியது; சிலவற்றை முற்றும் தகர்த்துவிட்டது. சிலவற்றை அலெக்சாண்டர் செப்பனிட்டுக் கொண்டான்; சில புதிய கப்பல்கள் கட்டுவித்துக் கொண்டான். லேசான படைஞர் சிலரை உள்நாட்டுக்கு அனுப்பிச் சில இந்தியர்களைப் பிடித்துவரச் செய்தான். அவ்விந்தியர்கள் அவனுடைய கப்பல்களுக்கு வழிகாட்டிகளாக அமர்ந்தார்கள். முகத்துவாரத்தினண்டை நதி விரிவுற்றிருந்த இடத்தில் துடுப்புகளை அந்த நீர்ப் பெருக்கில் மேலே தூக்கமுடியவில்லை. ஆனதனால், படகுகள் திரும்பக் கரையோரத்திற்கு வந்தன. அவைகளை வழிகாட்டிகள் ஒரு கால்வாய்க்குக் கொண்டுபோய் நிறுத்தினார்கள். இவ்விடத்தில் வெள்ளம் வற்றியது. படகுகள் காய்ந்த தரையில் விடப்பெற்றன. இப்படிப்பட்ட காட்சியைக் கண்டிராததனால், அலெக்சாண்டர் திகிலுற்றான். சிறிது நேரம் கழிந்தபின், திரும்ப நீர் பெருக்குற்று அந்தப் படகுகளிற் பலவற்றை மிதக்கச்செய்தது. இது அவனுக்கு ஆச்சரியமாயிருந்தது. படகுகளைக் காப்பாற்ற வேண்டுமென்னும் கவலைகொண்ட அந்த மூடர்கள் சில படகுகளைக் கரையோரத்தில் நெடுந்தூரம் தள்ளிவைத்திருந்தார்கள். அவையெல்லாம் கரையில் மோதுண்டு சிதைந்தன.

படகுகளை அலெக்சாண்டர் செப்பனிட்டுக்கொண்டான். இரண்டு படகுகளில் ஆட்களை வைத்துக் கிராதம், அல்லது, கில்லேளதம் (Kirata or Killowta) என்னும் தீவு ஸிந்துநதியில் எங்கே இருக்கிறதென்று தேடிப்பார்த்து வரும்படி அனுப்பினான். அந்தத் தீவில் துறைமுகங்களும் குடிநீரும் இருப்பதாகச் சொன்னார்கள். அந்தத் தீவைத்

தாண்டி மேலே நாற்பது மைல் அவன் தன் படகை ஓட்டிக் கொண்டுபோனான். அன்றைத்தினம் அவன் கிராதத் தீவுக்குத் திரும்பிவந்து, தேவர்களுக்குப் பலியிட்டுப் பூஜை போட்டான். மறுநாள் சமுத்திரத்திலுள்ள தீவுக்குப்போய், அங்கும் பூஜை போட்டான். அதற்குப்பின், கரையை விட்டு விலகிக் கடலிற் பிரயாணம் செய்யலானான்.

"இந்தியக் கடலின் அமைதி அற்புதமாயிருக்கின்றது. இந்தியத் தரையில் ஓயாமற் படையெடுத்துப்போன அமளிக்கும், அப்போதைக்கப்போது அடிவயிற்றிற் பகீர் பகீரென எழுந்த திகிலுக்கும், இந்த அமைதிக்கும் எவ்வளவு வித்தியாசம்! இங்கே நமக்கு விரோதமாகக் கலகம் விளைப்பாரும் இல்லை, நம்மோடு சண்டைக்கு வருவாரும் இல்லை" என்று யூமினீஸினிடம் அலெக்சாண்டர் சொன்னான். போஸிடனு (Poseidon)[1] க்குக் காளைகளைப் பலிகொடுத்துக் கடலில் வீசியெறிந்தான். அத்தனை தூரம் அவன் வருவதற்கு அனுகூலம் செய்ததற்காகவும், நியார்க்கஸ் உத்தேசித்தபடி பாரஸிக வளைகுடாக்கடலுக்கு க்ஷேமமாகப் புறப்பட்டுவருவதற்குச் சௌகரியம் அமைத்ததற்காகவும் தேவர்களுக்குப் பிரீதியாகத் தங்கக்கூஜா ஒன்றையும் தங்கப்போகணிகளையும் ஆழ்கடலிற் சமர்ப்பித்தான்.

அதற்குப்பின் அலெக்சாண்டர் படாலத்திற்குத் திரும்பிவந்து ஸிந்துநதியின் இடதுகழியின் வழியே சென்றான். அவ்வழியேபோய் நாராயண ஸரஸ் என்னும் விஸ்தாரமான ஏரிக்கு எளிதிற் போய்ச்சேர்ந்தான். அவ்வேரியில் பெரிய பெரிய மீன்கள் இருந்தன. இந்திய வழிகாட்டி

1. நெப்டியூனுக்குக் கிரேக்கர்கள் சொல்லும் பெயர்; நெப்ட்யூன் - வருணபகவான்.

கள் சொல்லியதோர் இடத்தில் அவ்வேரியிற் படகை நிறுத்திக்கொண்டான். பிறகு மூலபலமான கப்பற்படையையும் தரைப்படையையும் லியோனேடஸ் என்பவனிடம் ஒப்பித்துவிட்டு, சில படகுகளுடன் கடலிற் பிரயாணம் செய்தான். திரும்பிவந்து தன் படகுகளைக் கடற்கரையோரத்தில் நிறுத்திக்கொண்டான். அதன்மீது சிறிய குதிரைப்படையுடன் கடற்கரையோரமாக நெடுந்தூரம் மூன்று நாள்வரையில் அலைந்து திரிந்துபார்த்தான். கடற்கரை நெடுகக் கிணறுகள் வெட்டுவித்தான். பிறகு, தன் கப்பற்படைக்கும் படாலம் என்னும் பட்டணத்துக்கும் திரும்பிவந்தான். கிராதத்தீவில் துறைமுகமும், கப்பற் செப்பணிடும் துறைகளும் கட்டுவித்தான்; நியார்க்கஸி னுடைய ஆட்களுக்கு நான்குமாதங்களுக்கு வேண்டிய உணவுப்பொருள்களை அங்கே வைத்தான். கடற்கரையை யொட்டிச் சமுத்திரயானம் செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் செய்து, அநேகம் கிணறுகளையும் வெட்டுவித்தான். மேற்குத்திக்கில் பிரயாணம் செய்வதற்குக் காற்று அனுகூலமாயிருக்கவில்லை. ஆகையால், நியார்க்கஸும் அவனுடைய ஆட்களும் நறபருவத்தை எதிர்பார்த்துக் கிராதத்தீவிலே தங்கியிருந்தார்கள். அலெக்சாண்டர் பாபிலோனை நோக்கி மேற்புறமாகப் பிரயாணப் பட்டான்.

அரேபியாஸ் (Arabios)[1] என்னும் நதியைக் கடந்து ஓரைடாய் (Orietai)[2] என்னும் தேசத்தின்மீது படையெடுத்து, எதிர்த்தவர்களைக் கொன்று, அநேகரைச் சிறைப்

1. புரலி என்னும் ஆறு.

2. அல்லது, அகோர்த்தாய்; அந்நாட்டில் ஓடுகிற அகோரம் என்னும் நதியை யொட்டிவந்த பெயர்.

பிடித்தான். அதற்குப்பின், அந்தத் தேசத்திலுள்ள முக்கியமான பட்டணங்களுள் ஒன்றாகிய ராம்பாக் என்னும் ஊருக்குப் போனான். அதன் சந்நிவேசம் முதல்தரமாயிருந்தது; அதில் ஜனங்களைக் குடியேற்றும்படி ஹெபேயிஸ்டியனுக்குச் சொன்னான். ஓரைடாய் அரசனும் கட்ரோஸாய் அரசனும் ஓரா (Ora) என்னும் பட்டணத்திற்கு வந்து அலெக்சாண்டருக்குப் பணிந்தார்கள். அவர்களிருவரையும் திரும்பிப் போய்த் தங்கள் பட்டணங்களிலும் கிராமங்களிலும் குடி கொள்ளும்படி அனுப்பிவிட்டான். அந்தப் பிரதேசங்களுக்கு அபோலோபேனீஸ் (Appolophanes) என்பவனை மண்டலாதிகாரியாக்கி, அவனுக்குச் சகாயமாக லியோனேடஸையும் ஒரு சேனையையும் கொடுத்தான்.

பின்பு, அலெக்சாண்டர் ஹெபேயிஸ்டியனையும் மீதியுள்ள சைனியத்தையும் அழைத்துக்கொண்டு, ஓராவிலிருந்து நீரும் நிழலுமில்லாத கெட்ரோஸியன்[1] பாலைவனத்தினூடே பௌரா (Poura) என்னும் ஊருக்குப் பயணமானான். சைனியத்தவர்கள் பட்ட கஷ்டங்கள் சொல்லவொண்ணா. வெயில் அகோரமாயிருந்தது. மணல் தீப்பற்றியது போலக் கொளுத்தியது. உணவுக்கும் நீருக்கும் மிகமிகப் பஞ்சம். நாள்தோறும் குதிரைகளும் கோவேறு கழுதைகளும் பசியினாலும் தாகத்தினாலும் நூற்றுக்கணக்காக வறண்டு மடிந்து விழுந்தன. நூற்றுக்கணக்கான அந்தப் பிராணிகளைப் பட்டினியால் வருந்தும் போர்வீரர்

1. கெட்ரோஸியா (Gedrosia, *mekran*) என்பது பாரஸிக தேசத்தில் ஒரு பொட்டல்காட்டு வெளியான மாகாணம். கார்மேனியாவுக்குத் தெற்கிலும் தென்கிழக்கிலும் உள்ளது. இதன் தலை நகரம் புரா அல்லது, பௌரா (Pura or Poura); இப்போது போக்ரியா (Fokria) எனப்படுகிறது.

கள், தம் உணவின் நிமித்தம் கொன்றார்கள். ஆனால், தாங்கள் கொன்று தின்றதாகச் சொல்லாமல், அவை பசிப்பிணியினாலும் நீர்வேட்கையினாலும் இறந்துபோனதாகச் சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

அவர்கள் செய்யும் மோசம் அலெக்சாண்டருக்குத் தெரியாதிருக்கவில்லை; ஆனால், அவன் தெரியாததுபோல நடித்தான். வழியில் கெட்ரோஸிய கிராமமொன்றில் கொஞ்சம் தானியம் இருக்கக்கண்டான். அதைப் பறித்துக்கொண்டு, அந்தப் பஸ்தாக்களுக்கு (கோணிப்பைகளுக்கு) முத்திரை வைத்து, நியார்க்கஸினுடைய கப்பற்படைக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கும்படி சில காவலாட்களுடன் கடற்கரைக்கு அனுப்பினான். ஆனால், உடன் சென்ற காவலாட்கள் தாமே பட்டினியால் வருந்திக் கொண்டிருந்தார்களானமையின், முத்திரைகளை உடைத்துத் தாமும் மற்றப் போர்வீரர்களுமாக அந்தத் தானியத்தைப் புசித்தொழித்தார்கள். அவர்கள் பட்டினியால் அவ்வளவு வாடியிருந்தார்களென்று தெரிந்தபின், அவர்களை மன்னித்தான். தண்ணீர் கிடைக்குமாவென்று பார்த்துவருமாறு தோவாஸ் (Thoas) என்பவனைக் கீழ்நோக்கிக் கடற்கரைக்கு அனுப்பினான். தோவாஸ் கடற்கரைக்குப் போனான். அங்கே மீன் தின்னும் ஒருவகைச் சாதியார் இருந்தார்கள். அவர்கள் பரம ஏழைகள். கல்விப்பயிற்சி இல்லாதவர்கள். மீனைத் தின்றே ஜீவிப்பவர்கள். கொஞ்சங் கொஞ்சம் குடிநீர் அங்கங்கே வைத்துக் கொண்டிருந்தார்கள். அதுவும் உவர் நீர். அலெக்சாண்டருடைய சைனியத்தில் பினீஷியர்களும், யூதர்களும், எகிப்தியர்களும் இருந்தார்கள். இந்தப் பிரயாணத்தின் முற்பகுதியில் அவர்கள் வெள்ளைப்போளம் இலாமிச்சவேர் முதலான

விலையுயர்ந்த பாலைவனத்து விளைபொருள்களை மூட்டை மூட்டையாகப் பொறுக்கி வைத்துக்கொண்டிருந்தார்கள். இவையெல்லாம் சுகந்த வஸ்துக்கள்.

"பட்டினி கிடப்பவருக்கும் நீர் வேட்கை கொண்டவருக்கும், வாசனைத்திரவியங்களும் நறுமணப் புகைப்பண்டங்களும் சிறிதும் பயன்படா" என அவர்கள், இப்போது அவைகளைக் கொட்டியெறிந்து களைந்தார்கள். அவர்கள் போனவழியில் பயங்கரமான கூரிய முட்கள் நிரம்பியிருந்தன. சிக்கிக்கொண்ட மனிதர்களின் உடலையும் மிருகங்களின் உடலையும், முள்ளாணிகளைப்போல அவை கீறிக் கிழித்தெறிந்தன.

அவர்கள் இரவு வேளைகளிலேயே வழி நடந்ததனால், பெரும்பாலார் பகற்பொழுதில் உறங்கலுற்றார்கள். அவர்கள் நித்திரை நீங்கி விழித்துப்பார்க்கையில், மற்றவர்கள் புறப்பட்டுப் போயிருக்கக் கண்டார்கள். அகோரமான இந்தப் பாலைவனத்தில் பசி தாகம் வெயில் இவைகளால் ஆயிரக் கணக்கானவர்கள் மாண்டார்கள். இந்த விபத்துப் போதாதெனத் திடீரென்ற ஒரு புயலடித்தது. அது ஒரு நீரோடையில் வெள்ளம்பெருக்குற்றச் சைனியத்தைப் பின்பற்றி வருகிற ஆட்கள் ஸ்திரீகள் குழந்தைகள் ஆகிய இவர்களிற் பலரைக் கொன்றது. படைவீரர்களிற் பலர் தப்பிப் பிழைத்தது தம்பிரான் புண்ணியமாயிற்று. கண்ட இடத்தில் ஆரோக்கியமற்ற நீரை மிதமிஞ்சிப் பருகியதனால், அநேகம் வீரர்கள் மாய்ந்தனர்.

தன்னுடைய படைகளுக்கு நேர்ந்த கஷ்டங்களையெல்லாம் அலெக்சாண்டரும் உடனிருந்தே முற்றும் அனுபவித்துக்கொண்டு, படையாட்களுக்கு உற்சாக

மூட்டும் பொருட்டுக் கால்நடையாக அவர்களுக்கு முன்னே சென்றான். ஓர் இடத்தில் போர்வீரர்கள் கொஞ்சம் நீரைக் கண்டு, அதைத் தலைச்சீராவில் எடுத்துக்கொண்டு, ஒரு விலையுயர்ந்த அருமையான வஸ்துவைப்போல, அலெக்சாண்டருக்குக் கொண்டுபோய்க் கொடுத்தார்கள். அதை எற்ற அலெக்சாண்டர் அவர்களுக்கு வந்தனம் சொல்லி, தன்னைச் சூழ்ந்திருந்த ஆயிரக்கணக்கான போர் வீரர்களின் ஆவல் முகத்தை உற்றுப் பார்த்து, அந்த நீரை மணலிற் கொட்டினான். அப்போது, "போதுமான அளவு நீர் கிடைக்கும்போது நாமெல்லோரும் கூடிக் குடிப்போம்" என்று சொன்னான். இதனால் எல்லாருக்கும் அவன்மீது அன்பு மிகுந்தது. என்ன ஆபத்து வந்தாலும் துணிந்து முன் செல்ல வேண்டுமென்னும் சங்கற்பம் எல்லோருக்கும் திடப்பட்டது.

அத்தனை கஷ்டங்களையும் பட்டுக் கடைசியில் அவர்கள் பௌராவுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். ஓராவிலிருந்து பௌராவுக்கு அறுபதுநாள் பிரயாணம். இந்தப் பிரயாணத்தில் அவர்கள் பட்டபாடு சொல்லி முடியாது; நினைக்கவும் முடியாது. சைனியத்திற் பெரும்பாலார் பசியினாலும் வறட்சியினாலும் வெப்பத்தினாலும் பாலை வனத்திலே மடிந்து போனார்கள். அப்படியானபோதிலும், பெரிய காரியம் சாதித்துவிட்டோமென்று அலெக்சாண்டர் பெருமை பாராட்டிக்கொண்டான். ஏனெனில், அவனுக்கு முன்னால் இருவர் மாத்திரமே இந்தப் பாலைவனத்தைக் கடக்க முயன்றார்கள். அவர்களுள் அஸ்ஸீரியா தேசத்து ராணியான ஸெமிராமிஸ் (Semiramis) என்பவள் ஒருத்தி. அவள் இந்தியாவின்மீது படையெடுத்துவந்து, தன் சைனியத்தோடு திரும்பி ஓடிப்போனாள். அந்தச்

சைனியத்தில் இருபதுபேர் மாத்திரமே இந்தப் பாலைவனத்தில் தப்பிப் பிழைத்து அவளுடன் ஊர் போய்ச் சேர்ந்தார்கள்; பாலைவனத்தைக் கடக்க முயன்ற மற்றொருவன் பாரஸிக ராஜ பரம்பரை ஸ்தாபகனான முதல் **ஸைரஸ்** (Cyrus I) என்பவனாவான். இந்தியாவின்மீது படையெடுப்பதற்கு அவன் சைனியத்தோடு போனான். ஆனால் பாலைவனத்தைக் கடக்க முடியாமல், படையாட்களெல்லாம் இறந்துபோக, மிஞ்சிய எழுவரோடு பின்னிட்டுத் தன் தேசத்திற்கு ஓடிப்போனான்.

மிகுந்த கஷ்டங்களை அனுபவித்து வந்து சேர்ந்த தன் சைனியத்தவர்களுக்கு அலெக்சாண்டர் பௌரா பட்டணத்தில் சிரம பரிகாரம் செய்துகொள்வதற்குப் போதிய அவகாசம் அளித்தான். அபாலோபேனீஸ் என்பவன் சரியாகத் தேசபரிபாலனம் செய்யவில்லையென்று அவனை நீக்கிவிட்டு, தோவாஸ் என்பவனைக் கெட்ரோஸியாவுக்கு மண்டலாதிகாரியாக நியமித்தான். சிலநாளைக்கெல்லாம் நோய்ப்பட்டுத் தோவாஸ் இறந்துபோனதனால், ஸிபிர்டியாஸ் (Sibyrtios) என்பவனை, அரக்கோஸியா (Arachosia)வுக்கும் கெட்ரோஸியாவுக்கும் மண்டலாதிகாரியாக்கினான். அதற்குப் பின் கார்மேனியா வழியாக அலெக்சாண்டர் தன் படையோடு சென்றான். அப்படிச் சென்றுகொண்டிருக்கையில், இந்தியாவிலிருந்து தூதனொருவன் ஒரு வர்த்தமானக் கடிதம் கொண்டுவந்து கொடுத்தான். ‘மேலை ஸிந்துப் பிரதேசத்தின் மண்டலாதிபதியான பிலிப்பாஸுக்கு விரோதமாகக் கிரேக்கக் கூலிப்படையினர் சதி செய்து, அவனை மோசடியாகக் கொலை செய்துவிட்டார்கள்; பிலிப்பாஸினுடைய மாஸிடோனிய மெய்காவலர்கள் அந்தக் கொலையாளிகளைக் கையோடு பிடித்துக் கொன்றுவிட்டார்கள்’

என்று அந்தக் கடிதத்தில் வரையப்பட்டிருந்தது. அதைப் பார்த்து அலெக்சாண்டர் யூடிமாஸுக்கும் ஆம்பீசுக்கும் ஓர் உத்தரம் எழுதினன். பிலிப்பாஸ் ஆண்டுகொண்டிருந்த மாகாணத்தை அவர்கள் இருவரும், தான் வேறொரு மண்டலாதிகாரியை அனுப்புகிறவரையில், பரிபாலித்து வரும்படி கட்டளையிட்டான்.

கிரேடிராஸும் அவனுடைய சைனிகரும் யானைகளுடன் கார்மேனியாவில் அலெக்சாண்டரோடு வந்து சேர்ந்துகொண்டார்கள். அவ்விடத்துக் குடிகளைப் பரிபாலிக்கும்படி கிளியாண்டர் (Kleandar) என்பவனையும் ஸிதால்கீஸ் (Sitalkes) என்பவனையும் ஏற்கெனவே நியமித்திருந்தான். அவர்கள் வசத்தில் ஒப்படைத்திருந்த குடிகளை அவர்கள் வருத்தினார்களென அவர்கள் இருவருக்கும் அலெக்சாண்டர் மரண தண்டனை விதித்தான். அப்போது அவர்களை நோக்கி, "நீங்கள் வருத்திய ஜனங்கள் கிரேக்கர்களல்ல என்பதொரு சமாதானம் ஆகாது. இப்போது நான் ஆசியா கண்டத்துக்கெல்லாம் சார்வபௌமனாக இருக்கிறேன். ஆனதனால், ஆசியா கண்டத்தவர்களுடைய பிராணனையும் பொருளையும் காக்கக் கடமைப் பட்டவனாவேன்" என்று சொன்னான்.

அதற்கு ஸிதால்கீஸ், "ஆனால், உங்கள் ஆசிரியரான அரிஸ்டாடில் கிரேக்கர்களல்லாதவரைக் கிரேக்கர்கள் கொள்ளை யடிக்கலாமென்றும், அடிமைப் படுத்தலாமென்றும் சொல்லியிருக்கிறாரே" எனக் கூறினான்.

"ஆசியா கண்டத்தவர்களோடு நெருங்கிப் பழகாததனாலும், அவர்களுக்கு அரசராய் அவர்களைக் காப்பாற்றக் கடமைப்பட்டவரல்லராதலாலும், அவர் அப்படிச் சொன்னார். தன் குடிகளுக்குள் வேற்றுமை பாராட்டிப் பக்ஷபாதம்

செய்கிற ராஜன் ராஜனல்ல, கொள்ளைக்காரனேயாவன் எனக் கலனுஸ் எனக்குச் சொல்லியிருக்கின்றார்" என்று அலெக்சாண்டர் சமாதானம் சொன்னான். அதற்குப் பின் அவர்களிருவரையும் கொண்டுபோய்ச் சிரச்சேதம் செய்து விட்டார்கள்.

பிறகு, அலெக்சாண்டர் கார்மேனியாவின் வழியாகப் பிரயாணத்தைத் திரும்ப மேற்கொண்டான். அவ்விடத்துக் குடிகளெல்லாரும் இணக்கமாயிருந்தார்கள். அவனும் அவனுடைய ஸகாக்களும் இரண்டு பெரிய மூடுவண்டிகளைச் சேர்த்துப் போட்டுக்கொண்டு, அதன்மீது சுகமாகக் காலை நீட்டிக்கொண்டு படுத்திருந்தார்கள். அவர்கள் சயனித்திருக்கையில், புல்லாங்குழல் வாத்தியம் முழங்கியது; இந்தியாவிற் பெற்ற வெற்றிகளைக் கொண்டாடி, டயோனிஸஸ், அல்லது, பாக்கஸ் (Dionysus or Bacchus)[1] என்னும் தேவதையைக் கிரீஸ் தேசத்தில் பலவிடங்களிற் கொண்டாடும் பண்டிகைகளைப்போல, அலெக்சாண்டருடைய போர்வீரர்கள் பூமாலைகள் சூடிக் குதூகலமாகக் கொந்தளித்து வெறிக் கூத்தாடினார்கள்.

அந்தப் போர்வீரர்களுக்குத் திவ்வியமான சாப்பாடும் நேர்த்தியான சாராயமும் கார்மேனியர்கள் யதேஷ்டமாக அளித்தார்கள். அவற்றை அவர்கள் சம்பிரமமாக உண்டு களித்தார்கள். அலெக்சாண்டரும் சங்கீதக் கச்சேரியொன்று வைத்தான். மற்போராட்டமும் நடத்திவைத்

1. பாக்கஸ் என்பது பானகி தேவதை; டயோனிஸஸ் விழாக்களை ரோமானியர் பாக்கனேலியா (Bacchanalia) என்பார்கள். இது மது உற்சவம். இதில் ஆண்களும் பெண்களும் விசித்திரமான ஆடைகள் உடுத்துப் பலவகையான மேளதாளங்களோடு, மலர்மாலைகள் அணிந்து, மனம் வந்தபடி ஒருமித்து ஓடியாடித் திரிவார்கள்.

தான்; மாளவக்கோட்டில் பியூகெஸ்டாஸ் என்பவன் செய்த பேருதவியை எண்ணி, அவனை 'ஸகா' வாக்கினான். நியார்க்கஸனும் கடற்கரையிலுள்ளதோர் கார்மேனிய நகரத்திற்குப்போய், அலெக்சாண்டரைச் சந்தித்து, தன்னுடைய அதிசயமான அனுபவங்களையெல்லாம் விவரித்துரைத்தான். டைகிரிஸ், யூப்ரடீஸ் என்னும் நதிகளின் முகத்துவாரங்களுக்குத் தன் படகுகளைச் செலுத்திக்கொண்டுபோகும்படி அவனுக்கு அலெக்சாண்டர் சொன்னான்.

அங்கிருந்து அலெக்சாண்டர் சௌசா (Sousa)[1]வுக்குப் போனான். போகும்வழியில், இந்தியாவிலிருந்து கார்மேனியாவுக்கு வந்த கடிதத்தைத் திரும்ப எடுத்துப் படித்துப் பார்த்தான். அதில், "கிரேக்கக்கூலிப்படையினர் பணத்தாசையினாலும், 'இடி குடக்கோடியது. பயப்பட வேண்டாம். அவன் இனித் திரும்பிவரமாட்டான். பிலிப்பாஸ் என்னும் இந்த மர்த்தியனை மர்த்தனம் செய்து மாய்த்தொழியுங்கள்' என்னும் கலகக்கிளரொலியினாலும் தூண்டப்பெற்றுப் பிலிப்பாஸை வஞ்சகமாகக் கொலைசெய்தார்கள்" என்று எழுதப்பட்டிருந்தது.

"ஆ! இடி குடக்கோடுகிறதென்பது உண்மையே; ஆனால், அது சின்னாளில் திரும்பிக் குணக்கில் ஓடிக் கலகம் விளைப்பவர்களின்மீதும் இதுவரையில் வெல்லப்பெறாதவர்களின்மீதும் வந்துவிழும். அவர்கள் எச்சரிக்கையாயிருக்கட்டும்" என்று யூமினீஸிடம் அலெக்சாண்டர் சொன்னான்.

---

1. சௌஸா என்பது பார்பரி நாட்டிலுள்ள டியூனிஸ் (Tunis) என்னும் பிரதேசத்தின் கடற்றுறைப்பட்டணம். அந்தப் பிரதேசத்தின் கீழ்ப்பாகத்தில் மத்தியதரைக் கடலோரமாக இருக்கின்றது. இதில் பல புராதனக் கட்டடங்கள் இருக்கின்றன.

## அத்தியாயம் 21

## மன்னவனில்லா மாகாணாதிபதிகள்

கி. மு. 325-ஆம் ஆண்டு புரட்டாசி மாதத்தில் அலெக்சாண்டர் இந்தியாவை விட்டுப் போனபோது, ஸிந்துநதியும் அதன் உபநதிகளும் கூடுகிற இடத்திற்கு மேலே தான் ஜயித்துள்ள பிரதேசங்களுக்கெல்லாம் பிலிப்பாஸை மாகாணாதிபதியாக விட்டுப்போனான். அபிசாரன், அர்ஷகேசன், பெரிய ஆம்பீசு, சிறிய ஆம்பீசு ஆகிய இவர்களை அவரவருடைய ராஜ்யத்திற்கு அதிபதியாகவே வைத்ததன்றி, தான் ஜயித்த நாடுகளையும் அவர்களுடைய ராஜ்யங்களுக்கு அலெக்சாண்டர் கொடுத்தானல்லவா? அந்தச் சிற்றரசர்களுக்கெல்லாம் ஸ்தானாதிபதிபோலவும், அரசியல் தலைவன்போலவும் பிலிப்பாஸை நியமித்து, அவனுடைய ஆலோசனையை அவ்வரசர்கள் கேட்டு நடக்க வேண்டுமென்று அவர்களுக்குச் சொல்லியிருந்தான். அது வல்லாமல், மற்றப் பிரதேசங்களுக்கெல்லாம் பிலிப்பாஸ் முழு அரசுரிமையும் வாய்ந்திருந்தான். அவனுக்குத் துணையாக மாஸிடோனியர்களும் கிரேக்கக்கூலிப்போராட்களும் அடங்கிய பலமான படையொன்றையும், திரேஸியர்கள் எல்லாரையும் கொடுத்திருந்தான். அதுவுமல்லாமல், ஸிந்து நதிக்கு வடக்கேயுள்ள பிரதேசங்களில் யூடிமாஸ் ஒரு பட்டாளத்தோடு இருந்தான். அகேஸினீஸ் நதிக்கரையில் மசகா, அயர்நாஸ், புஷ்கலவதி, உதபாண்டபுரம்,

தக்ஷசிலே, நிகையா, புக்கிபேலா, பிம்பராமம், ஸங்கலம், அலெக்சாண்டிரியா என்னும் பட்டணங்களிலும், ஸிந்து நதியும் உபநதிகளும் சங்கமமாகும் இடத்தில் காமற் கோட்டு, மூல்டான், அலெக்சாண்டிரியா என்னுமிடங்களி லும் பட்டாளங்களோடு படைத்தலைவர்களை வைத்திருந்தா னல்லவா? அந்தத் தலைவர்களெல்லாருக்குமே மேலதிகாரி யாகப் பிலிப்பாஸையே நியமித்திருந்தான்.

பிலிப்பாஸுக்கு யுக்தியும் போதாது, புத்தியும் போதாது; இவன் சாமானியமான மனிதன்; அலெக்சாண் டரின் வடிவத்திற்குள்ள ஆகர்ஷண சக்தி இவனுக்குச் சிறிதும் கிடையாது. அப்படியிருந்தும், இரண்டாம் அலெக்சாண்டர் எனவே நினைத்து இவன் வியவகரித்துக் கொண்டிருந்தான். எந்நாட்டினராயினும் எக்குலத்தவரா யினும் அவர்களிற் பெரியாரிடத்து அலெக்சாண்டர் உண்மையாகவே மரியாதை பாராட்டுவான். உதாரணமாக, பெரிய போரஸினிடத்தும் கலனஸினிடத்தும் அவன் வைத்திருந்த மதிப்பையும் மரியாதையையும் சொல்லலாம். மாஸிடோனியர்களிடத்து அவனுக்கும் பக்ஷபாதம் உண் டெனினும், அதை வெளிக்காட்டாமல் அவன் ஒரு வரம்புக்குள் அடக்கிவைத்துக்கொண்டிருந்தான்.

பிலிப்பாஸோ, மாஸிடோனியர்பால் தனக்குள்ள பக்ஷபாதத்தை வெளிப்படையாகக் காட்டினான்; கூலிப் படையாட்களிடத்தும் மற்றக் கிரேக்கர்களிடத்தும் தனக் குள்ள அருவருப்பையும் இகழ்ச்சியையும் ஒளி மறைவில்லாமல் வெளிக்காட்டி வியவகரித்துக்கொண்டிருந்தான். இந்தியர் களின் விஷயத்தில் இவனுக்கு இகழ்ச்சியும் உண்டு, பகையும் உண்டு; அவர்களுடைய கருநிறத்தையும் கௌரவக் கொள்கைகளையும், நீதி நியமங்களையுங் கண்டு இகழ்ச்சி;

அசுவகனியர் கலகித்தெழுந்தபிறகு அவர்களை முற்றும் அடக்க இவனால் ஆகவில்லை; இவனைவிட ஆஜானுபாகுவாயிருந்த போரஸ் முதலானவர்களோடு ஒப்பிடுமளவில் இவனுடைய சிறுமை புலப்பட்டது; காட்டுமிராண்டியைக் காட்டிலும் ஒன்றும் உயரிய போக்கியதை இல்லாதவனென இவனை அவர்கள் நினைத்துக்கொண்டிருக்கிறார்களென்று இவன் எண்ணினான். இவைகளினால் இந்தியர்களின்மீது பகைமை உண்டாயிற்று. ஆகையால், அற்பனுக்குப் பவிசு வந்தால் அர்த்தராத்திரியில் குடை பிடிப்பான் என்பது போல இவன் வியவகரிக்கத் தலைப்பட்டான். பெரிய போரஸினுடைய உள்நாட்டு வியவகாரங்களிலும் ஆம்பிசினுடைய உள்நாட்டு வியவகாரங்களிலும் அவர்களுக்கு மேலதிகாரியைப்போலத் தலையிடலாயினான்; இவனுடைய ஆதரவை நாடிய அவர்களுடைய பிரஜைகளின் சார்பாக அவர்கள் கக்ஷியை எடுத்துப்பேசலானான். பெரிய போரஸுக்கு இது பொறுக்கவில்லை. இவ்விதமே நடப்பதானால், இவ்விஷயத்தை அலெக்சாண்டருக்கு அறிவிக்கவேண்டிவருமென்று இவனிடம் நேரே போரஸ் சொன்னான். ஆனால், போரஸுக்கு முந்திக்கொண்டான் பிலிப்பாஸ்; ஆம்பீசுனுடைய ராஜபக்தியும் பணிவான ஒழுக்கமும் அதிசயிக்கத் தக்கன, போரஸின் நடவடிக்கையோ அவ்வளவு சரியாக இருக்கவில்லையென ஒருவாறு தோன்றும்படி முன்னதாகவே அலெக்சாண்டருக்கு இவன் கடிதம் எழுதிவிட்டான். இவனுடைய வார்த்தையை அலெக்சாண்டரும் சங்கிக்காமல் நம்பிவிட்டான். அதனால், இனி அளிக்கத் தக்க பொறுப்பும் அதிகாரமும் வாய்ந்த ஸ்தானத்தைப் போரஸுக்குக் கொடாமல் ஆம்பீசுக்கே கொடுப்பதெனச் சங்கற்பித்துவிட்டான்.

ஸிந்துவும் உபநதிகளும் ஒன்றுபடும் இடத்திற்குக் கீழேயுள்ள தேசங்களுக்கெல்லாம் அகனரின் (Agenor) மகனை பைதான் மண்டலாதிபதியாக நியமிக்கப்பட்டிருந்தான். மாஸிடோனியர்களும் கூலிப் போர்ப் படையாட்களும் அடங்கிய பலத்த சைனியமொன்று இவனுக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. இதுவன்றி, சைந்தவனம், மகா ஊர்த்தம், அலார், படாலம் என்னும் இடங்களிலுள்ள கோட்டைகளுக்கும் பட்டாணங்களுக்கும் அதிபதியாயிருந்தான். பரபோமிஸாடையின் (Paropomisadai) மண்டலாதிபதியாயிருந்த ரோக்ஸானையின் தந்தை ஆக்ஸியார்ட்டீஸ் என்பவன், இவனுக்கு வேண்டியபோது உதவி செய்யவேண்டுமென்னும் உத்தரவு இருந்தது. மூஸிகசேனன், சம்பாஸ், ஆக்ஸிகேனைஸ், படாலன் ஆகிய இவர்களுடைய ராஜ்யங்களுக்கு இவன் ஸ்தானாதிபதியாகவும் அரசியல் வியவகார மந்திரியாகவும் இருந்தான். மற்றப் பிரதேசங்களுக்கு ஆட்சித்தலைவனாகவும் இருந்தான். இவன் சாமானியமானவனென்று சொல்வதற்கில்லை. விசேஷ போக்கியதையுள்ளவனே. தன்னைச் சாம்ராஜ்யத்தின் மையத்தில் முக்கியமான நிலைமையில் வைக்காமல் எங்கேயோ ஒதுக்குப்புறமான தொல்லை நிறைந்த பிரதேசங்களுக்கு அதிபதியாக அலெக்சாண்டர் நியமித்தனனே யென்னும் வருத்தம் இவனுக்கு உள்ளூற இருந்தது. ஆயினும், அந்த ஸ்தானத்தில் அலெக்சாண்டர் தன்னை வைத்திருப்பதனால், இவன் அவ்விடத்திலேயே இருந்து, குடியேற்ற நாடுகளில் பிரஜைகளை வைத்துக் காப்பாற்றிக் கலகித்தெழுகிறவர்களை அடக்கிக் கொண்டிருக்கவேண்டியதாயிற்று.

காற்றின் மும்முரம் அடங்குகிற வரையில் ஸிந்து நதியின் மேலை முகத்துவாரத்திலுள்ள கிராதம் என்னும்

தீவுத்துறையிலே தங்கியிருக்கும்படி நியார்க்கசுக்கு அலெக்சாண்டர் சொல்லியிருந்தான். நியார்க்கசுக்கும் அவனுடைய கப்பற்படைக்கும் வேண்டிய சௌகரியங்களையெல்லாம் அமைத்துக் கொடுக்கவேண்டுமென்று பைதானுக்கு உத்தரவாயிருந்தது. ஆனல், அலெக்சாண்டர் இந்தியாவை விட்டு நீங்கின க்ஷணமே இந்தியர்களுக்குக் கிரேக்கப் படையின் பயம் அறவே அற்றுப்போயிற்று.

அலெக்சாண்டர் புறப்பட்டுப் போகு முன்னரே அசுவகனியர்கள் கலகித்தெழுந்தார்கள். அவர்கள் கணவாய்களின் வாயில்களை அடைத்துவிட்டார்கள். கிரீஸ் தேசத்திலிருந்து புதிய ஆட்படையோடும் ஆயுதங்களோடும் அலெக்சாண்டருக்கு உதவியாக மெம்னன் என்பவன் வந்தபோது மாத்திரமே கணவாய்களைத் திறந்து வழிவிட்டிருந்தார்கள். அலெக்சாண்டர் வேறு மார்க்கமாகப் பாபிலோனுக்குப் போகிருனென்னும் சங்கதி முன்னரே இவர்களுக்குத் தெரிந்துவிட்டது. புதிதாக வந்த கிரேக்கப்படையினர் போர்புரிவதற்கு ஆவலாயிருந்தார்கள். அவர்களோடு எதிர்த்துச் சண்டை செய்து இந்தியரெவரும் உயிர் இழக்காமல் இருக்கவேண்டுமென்பது அசுவகனியர்களுடைய எண்ணம்.

அந்தப் பிரதேசத்திற்கு அதிபதியாயிருந்த பிலிப்பாஸ் அவ்வசுவகனியர்களை முற்றும் அடக்கமுடியாமல் வருத்தப்பட்டுக்கொண்டிருந்தானென்று ஏற்கெனவே சொல்லியிருக்கிருேம். விஜயவர்மன் என்பவனும் அவ்வசுவகனியர்களோடு சேர்ந்துகொண்டு, கிரேக்கர்களின்மீது ஒரு நியமமும் இல்லாது சமயம் வாய்த்தபோதெல்லாம் பாய்ந்தடித்து, அவர்கள் கைக்கு அகப்படாமல் ஓடிப்போவதே சரியென நினைத்தான். அங்ஙனமே கிரேக்கர்கள் அயர்ந்து

மறந்திருக்கும் வேளைகளில் அவர்களை அடித்து உபத்திரவப் படுத்திக்கொண்டிருந்தார்கள். அதனால் கிரேக்கர்களுக் குத் திகில் பிடித்தது. இரவில் வெளியே தனித்துத் தலையை நீட்டப் பயப்பட்டார்கள். கிரேக்கர்கள் போர்க் கோலமாயிருக்கும்போது அசுவகர் எவரும் அகப்படார்; அவர்கள் சிறிது திசை தப்பியிருக்கும் சமயம் பார்த்து அசுவகனியர் வந்து விழுந்து அவர்களைக் கொன்று விட்டு, போனவிடம் தெரியாமல் மறைந்து போவார்கள். நாடு செழிப்பற்றது; குன்றுகள் கரடு முரடானவை; அவை களில் ஏறுவது கஷ்டம்; ஜனங்கள் ஒருவரைப்போல எல்லா ரும் பகைவர். பிலிப்பாஸினிடம் இருந்த கிரேக்கக் கூலிப படையாளர்கள், தங்களுக்கே இந்த அசுவகனி தேசத்தின் சண்டைக்கும் பூசலுக்கும் ஈடு கொடுக்கும் கஷ்டத்தைக் கொடுத்தார்களென்றும், மாஸிடோனியர்களை மாத்திரம் உதபாண்டபுரம் தக்ஷசிலை முதலான அமைதிவாய்ந்த இடங்களில் செல்வமாகவும் சௌக்கியமாகவும் காலங் கழிக்க விட்டார்களென்றும் அருவருத்துக் கோபங் கொண்டார்கள். அவர்களிற் சிலர் இங்ஙனம் தங்களை மாத்திரம் கஷ்டப்படுத்துவது தகாதென எடுத்துரைத்த போது பிலிப்பாஸ் அவர்களுக்குச் சவுக்கடி தண்டனை செய்வித்தான். இதனால் அவர்களெல்லாரும் ஒன்றுகூடி இவனைத் தொலைத்துவிடத் தீர்மானித்தார்கள். இந்தத் தீர்மானத்திற்குச் சாணக்கியரும் விஜயவர்மனும் இந்தியக் கூலிப்படையினரும் உளவாயிருந்தார்கள்.

கி. மு. 325-ஆம் ஆண்டு கார்த்திகை மாதத்தில் ஒரு நாள் பிலிப்பாஸ் தன்னுடைய பட்டாளங்களிலொன்றை ஒழுங்கு பார்த்துக்கொண்டிருந்தான். அப்போது அப் பட்டாளத்தில் எண்மர், முன்னிரவு நடந்த சதியாலோ

சபையில் தீர்மானித்தபடி, மறைவாக அவனைத் தாக்கிக் கொன்றார்கள். அவனுடைய மாஸிடோனிய மெய்க் காவலர் உடனே அக்கொலையாளிகளில் நால்வரைப் பிடித்துக் கொலை செய்தார்கள். மற்ற நால்வர்களையும் பின்பற்றிப் பிடித்து, அவர்களையும் கொன்றார்கள். இந்நிகழ்ச்சிகளை விவரித்துப் பிலிப்பாஸுக்கு அடுத்த படைத்தலைவன் அவசரக்கடிதமொன்று எழுதி அலெக்சாண்டருக்கு அனுப்பினான்.

அந்தக் கடிதம் கி. மு. 324-ஆம் ஆண்டு மாசி மாதத்தில் அலெக்சாண்டர் கார்மேனியாவில் இருந்த போது, அவனுக்குப் போய்ச்சேர்ந்தது. உடனே அவன், நாம் ஏற்கெனவே பார்த்தது போல, அந்தக் கடிதத்தின் நகலொன்றை யூடிமாசுக்கும் ஆம்பீசுக்கும் அனுப்பி, தான் வேறு அதிகாரியை அனுப்புகிறவரையில், பிலிப்பாஸினுடைய ஆட்சியிலிருந்த பிரதேசங்களைப் பரிபாலித்து வரும்படி அவர்களுக்குச் சொன்னான். அதனால், பெரிய போரஸுக்கு மனக்கசப்பு உண்டாயிற்று; சின்னாளக்கு முன் வரையில் தனக்கு எதிரியாயிருந்த ஆம்பீசுக்கு அப்பெரும் பதவியளித்துத் தன்னை அலெக்சாண்டர் அவமதித்தானென்று குறைப்படலானான். தானே சிறந்தவன், தனக்கே அவ்வதிகாரம் கொடுக்கத்தக்கது என்பது போரஸின் எண்ணம். அது முதற்கொண்டு யூடிமாஸின் மீதும் ஆம்பீசின்மீதும் பொதுவாகக் கிரேக்கர்களின்மீதும் அபிமானம் குறைந்தவனாகிப் போரஸ் அவர்களிடம் பிடிப்பற்று அனுதரவு காட்டலானான். ஸிந்து தேசத்தில் சந்திரகுப்தனும் அவனைச் சேர்ந்தவர்களும் வெற்றி பெற்று மேலும் மேலும் பிரபலமாவதைக் கண்டு உள்ளூறக் களிக்கலானான். இவனுடைய சகோதரி மகன் இளைய போரஸ்

என்பவனொருவன் இருந்தானல்லவா? அவனுக்கும் அவன் மாமனாகிய பெரிய போரஸுக்கும் உள்ள பகைமையினால் இவனுக்கு விரோதமாக அவன் யூடிமாசுக்கு உற்ற நண்பனானான்.

கி. மு. 325-ஆம் ஆண்டு தை மாதத்தில் சந்திரகுப்தனுக்கு விவாகமானபின், அவனுக்கு ஸிம்ம புரத்து யுவராஜபட்டம் கட்டினார்கள்; பதினாயிரம் ஜாத்துக்கள் (Jats) அடங்கிய படையொன்றுக்கு அவனைத் தலைவனாகவும் வைத்தார்கள். ஜாத்துக்கள் என்பார் இந்தியாவிலுள்ள முதல்தரமான போர்ச்சாதியினருள் ஒரு வகையினர். இப்படி அவனுக்குப் பதவி வாய்த்தவுடனே ஆறாயிரம் மாளவர்களும், மூவாயிரம் க்ஷூத்ரகர்களும், விஜயவர்மனைத் தலைமையாகக் கொண்ட இரண்டாயிரம் முத்ரகர்களும் ஓராயிரம் கதேயர்களும் அவனுடன் வந்து சேர்ந்து கொண்டார்கள். அதுவல்லாமல் மகதத்தி லிருந்து ராஜசேனனும் ஓராயிரம் ஆட்களும் வந்து சேர்ந்தார்கள்.

புக்கிபேலாவிலிருந்து தப்பியோடியது முதற்கொண்டு சந்திரகுப்தனும் சாணக்கியரும் கிரேக்கருக்கு விரோதமாக எல்லா நாடுகளிலுள்ள இந்தியர்களையும் கிளப்பிவிட்டு அவர்களை இத்தேசத்தினின்று ஓட்டிவிடவேண்டுமெனச் சங்கற்பித்திருந்தார்கள். தாமாகவும் தூதர்கள் மூலமாக வும் மாளவர்களையும் க்ஷூத்ரகர்களையும் ஸிந்துப்பிரதேசத் தவர்களையும் எழுப்பிவிட்டுப் படையெடுத்துவந்த கிரேக்கர் களை எதிர்க்கச் செய்தார்கள். ஒரு முறை தோற்றுப் போகவேண்டிவந்தாலும் திரும்பத் திரும்பக் கலகித்துக் கிரேக்கர்களை எதிர்த்துச் சண்டை செய்யச் சொன்னார்கள். அலெக்சாண்டர் தளகர்த்தனாயிருந்து கிரேக்கப் படைகளை

நடத்திவரும்போது அவனைத் தாங்களே எதிர்த்துச் சண்டையிற் சிக்கிக்கொள்ளக்கூடாதென்று அவர்களிருவரும் நேரே வராதிருந்தார்கள்.

"அவன் போய்விடுகிறான். நாம் கொஞ்சம் பொறுக்கலாம். அவன் இங்கே விட்டுப்போகிற படைத்தலைவர்களோடு சண்டை செய்து அவர்களைத் தோல்வியுறச்செய்வது அதைக்காட்டிலும் எளிதாயிருக்கும். அப்படிச் செய்வதனால் பஞ்சாபிலுள்ள போர்வீரர்களுக்குள்ளும் இந்தியா முழுமையிலுமுள்ள அரசர்களுக்குள்ளும் சிற்றரசர்களுக்குள்ளும் நமக்குப் பெயரும் பிரதிஷ்டையும் உயரும். நாம் ஏதோ பெரிய காரியம் செய்து சாதித்தோமென்று காட்டாவிட்டால் நம்மோடு எவரும் வந்து சேரமாட்டார்கள். நாம் தனியே மகதத்தின்மீது படையெடுத்து வெல்வது இயலாத காரியம்" என்று சாணக்கியர் சொன்னார்.

செப்டம்பர் மாதத்தில் அலெக்சாண்டர் இந்தியாவை விட்டு ஒரேயடியாக நீங்கிப்போகிறானென்று கி. மு. 325-ஆம் யாண்டு ஆவணி மாதத்திலே இவர்கள் கேள்விப்பட்டார்கள். அவன் நீங்கிப்போனவுடனே அவன் இங்கே வைத்துப்போகிற கிரேக்கர்களைத் தாக்கவேண்டுமென்று அப்போதே தீர்மானித்தார்கள். கிரேக்கர்கள் வசத்திலுள்ள பிரதேசத்தில் எந்தப் பகுதியை முதன்முதலில் தாக்கலாமென்று இவர்கள் ஆராய்ந்து ஆலோசித்துப் பார்த்தார்கள்.

கதேயாவிலிருந்து ஊரை விட்டு ஓடிப்போனவர்கள் கிரேக்கர்களைத் தாக்கியடித்துச் சங்கலத்தைத் திரும்பக் கைப்பற்றிக்கொள்ளவேண்டுமென்றிருந்தார்கள். ஆனால், அந்தப் பிரதேசங்கள் இப்போது பெரிய போரவின் ராஜ்யத்தோடு சேர்ந்திருந்தன. அங்கே போனால் அவன்

எதிர்த்துப் போராடுவது திண்ணம். நந்தர்களோடு சண்டை செய்வதற்கு அவனுடைய உதவி வேண்டியிருக்கின்றமையின் அவனுக்குக் கோபம் மூட்டச் சாணக்கியருக்கு இஷ்டமில்லை.

"அன்றியும், மகதர்களோடு சமாதானமாயிருப்பதற்காக நந்தர்களிடமிருந்து இப்போது அவன் கப்பம் வாங்கிக் கொண்டிருக்கிறான். அவன் நம்மை எதிர்க்காதிருப்பது நம்மைப் பிடித்த நல்லவேளை. அது அவனுடைய அன்பையும் காட்டுகிறது; அது உனக்கும் அவனுக்கும் இப்போது ஏற்பட்டிருக்கிற உறவு முறையினாலேயேயாகும். அதை விட்டு இப்போது நாம் அவன்மீது சண்டைக்குப் போனால் அவனுக்குத் துணையாக நந்தர்கள் வருவார்கள். அப்போது போரஸை எதிர்த்து வெல்வது சாத்தியமாகாது. திடீரென அவன்மீது நாம் பாய்ந்தடிப்பதும் சரியன்று. நாம் தோற்றுப்போனால் அதோகதியாய்விடுவோம். ஒருவேளை வென்றாலும் நாம் செய்வது அசட்டுக்காரியமாகும். ஏனெனில், நந்தர்களோடு போர்புரிவதற்கு அவனுடைய சகாயம் நமக்கு இல்லாமற் போம். கலிங்கத்தரசனையும் ஆந்திரத்தரசனையும் தவிர்த்து, நந்தர்களை எதிர்த்துப் போர்புரியத் தைரியம் வாய்ந்த சிற்றரசன் அவன் ஒருவனே. ராஜ்யம் அதிகம் சம்பாதிக்கவேண்டுமென்னும் துராசை அவனுக்கு உண்டு. அதைக்காட்டிலும் பேராசைகொண்ட தம்பியாகிய வைரோசகன் அவனைத் தூண்டுவான். அதனால், அவன் நந்தர்களோடு போர்புரிவதற்குக் காலக்கிரமத்தில் நம்மைச் சார்வான். மற்றும், ஸிம்மபுரத்து ஜனங்கள் போரஸோடு போர்புரிய மனங்கொள்ளார்கள். ஏனெனில், அவன் தங்கள் அரசனுக்கு உறவினன். ஆகையால், முதன் முதலில் நாம் ஸிந்துதேசத்திலுள்ள யவனர்களின்மீதே

படையெடுப்போம். மாளவர்களையும் க்ஷுத்ரகர்களையும் ஸௌவீரர்களையும் சைந்தவர்களையும் ஏற்கெனவே கிளப்பி விட்டிருக்கிறோம். சில நாளைக்குமுன் பதினாயிரம்பேர் அடங்கிய படைகளும் நமக்கு வந்து சேர்ந்திருக்கின்றன. அலார், சைந்தவவனம், மகாஊர்த்தம், பிரம்மஸ்தலம், படாலம் என்னும் இடங்களிலுள்ளவர்கள் கலகித்தெழ ஸித்தமாயிருக்கிறார்கள். மூஷிகசேனனைத் தூக்கிலிட்டுக் கொன்றதனால் அலெக்சாண்டர்மீதும் கிரேக்கர்மீதும் மிக்க வெறுப்பும் கடும்பகையும் ஜனங்களுக்கு உண்டாயிருக்கின்றன. மாளவக்கோட்டைக் குடிகளெல்லாரையும் சங்கரித்ததனாலும் அவர்களுக்குப் பகை அதிகமாயிருக்கின்றது. அலெக்சாண்டர் என்பவன் முதல்தரமான பெரிய தளகர்த்தன். ஆனால், பிலிப்பாஸ், பைதான், யூடிமாஸ், கோட்டைகளில் அவன் விட்டுப்போயிருக்கிற படைத்தலைவர்கள் ஆகிய இவர்களெல்லாரும் மூன்றாந்தரத்து ஆட்களே. ஆதலால், நாம ஸிந்துப்பிரதேசத்திலுள்ள கிரேக்கர்களின்மீது படையெடுப்போம். அப்போது முதன் முதலில் எந்தப் பட்டணத்தைத் தாக்குவோம்?" என்று சாணக்கியர் வினவினார்.

"நாம் பட்டணம் எதையும் முதலில் தாக்கவேண்டாம். ஸிந்துப்பிரதேசத்தின் வழியாகச் சென்று ஒவ்வோரிடத்திலும், கிரேக்கர்கள்மீது அருவருப்பும் துரபிமானமும் உண்டாக்கி, நம் பக்கத்துக்கு ஆட்களைச் சேர்த்துக்கொள்வோம். பைதானையாவது படைத்தலைவர்களையாவது முதலில் தாக்காமல், நியார்க்கஸின் கையின் கீழுள்ள படைகளைத் தாக்குவோம். பருவக்காற்றுத் தணிந்தபின் பாரஸிக வளைகுடாக்கடலுக்குப் போகவேண்டுமென்று அவன் கிராதத்தீவில் அமைதியாகக் காத்துக்கொண்டிருக்

கிறுன். இது அலெக்சாண்டருடைய மூன்றும் சைனியம். உத்தேசித்த காலத்திற்குமுன் இந்தச் சைனியத்தை மேற்குத்திக்கில் நகர்ந்துபோகும்படி செய்துவிடுவோம். அலெக்சாண்டரது தலைமையின் கீழுள்ள முதற்படையும், கிரேடிராவின் வசத்துள்ள இரண்டாம்படையும் ஏற்கெனவே புறப்பட்டுவிட்டனவாதலால், அவை முன்னரே நீங்கிப்போயிருக்கும். இதனுல் ஸிந்து தேசத்தவர்களின் மனத்திலும் பஞ்சாபுக்காரர்களின் மனத்திலும் மிக்க தைரியமும் நம்மீது அபிமானமும் உண்டாகும். அதுவன்றி, இந்தியாவில் விடுபட்டுள்ள வீரர்களுள் நேர்மையும் நற்றிறமையும் வாய்ந்தவனுன நியார்க்கஸை நம்நாட்டினின்று அனுப்பிவிட்டவர்களாவோம். கிரேக்கத்தீரர்களுள் இங்கே இப்போது மீந்திருப்பவன் அவன் ஒருவனே. அவனுக்குத் தன்னலக் கருத்துமில்லை, பெரும் பிரதாபம் படைக்க வேண்டுமென்ற ஆசையும் இல்லை. ஆனல், திடசங்கற்பமுடையவன், விடாப்பிடி வாய்ந்தவன். பிரயாணம் செய்வதற்கு ஏற்ற நிலைமையில் கடல் இருக்குமானுல், மனிதனுய்ப் பிறந்தவனுக்குச் சாத்தியமாயிருக்குமானுல், தன் வசம் ஒப்பித்த கப்பல்களை க்ஷேமமாகப் பார்ஷியக்கரைக்குக் கொண்டுபோய்ச் சேர்ப்பேனென்று அலெக்சாண்டருக்கு அவன் முன்னரே வாக்குக் கொடுத்துள்ளான். நாம் அவனைத் தாக்குவோமாயின், நம்மோடு போர்புரிந்து ஜயாபஜய சந்தேகச் சங்கடத்திற் சிக்கிக்கொள்ளாமல், தான் கொடுத்தவாக்கை நிறைவேற்றும்பொருட்டுத் தன் ஆட்களை அழைத்துக்கொண்டு உடனே புறப்பட்டுப்போய்விடுவான்" என்று சந்திரகுப்தன் சொன்னுன்.

"பேஷ்! யுத்ததந்திரத்தில் நிஜமான தளகர்த்தனுக்குரிய தூரதிருஷ்டி உனக்கு இருக்கிறது. நியார்க்கஸி

னுடைய கையின்கீழ் நம் உதும்பரன் வழிகாட்டும் இந்திய னுக அமர்ந்திருக்கிறுன். அவன் நடையுடை ஒழுக்கங் களில் கிரேக்கர்களைப்போல நடித்துக்கொண்டிருக்கிறுன். கப்பலுக்கு வழிகாட்டும் வித்தையில் அவன் வல்லவன். இந்தக் கலையை அவன் தாமிரலிப்தியிற் கற்றுக்கொண்டான். அவன் தன்னுடைய விசித்திரமான வார்த்தைகளினுலும் நயமான நடையினுலும் சரியான சமயம்பார்த்து நியார்க் கஸினுடைய ஆட்களைப் பயமுறுத்திவிடுவான்" என்று சாணக்கியர் சொன்னுர்.

அலெக்சாண்டர் புறப்பட்டுப் போனவுடனே கி. மு. 325-ஆம் யாண்டு புரட்டாசி முதல்தேதியன்று, சந்திர குப்தனையும் சாணக்கியரையும் தலைவராகக்கொண்ட பதிஞ யிரம் குதிரைவீரர், மலையிலிருந்து விழும் பனிக்கட்டியைப் போல ஸிந்துதேசத்தில் பாய்ந்தனர். இவர்கள் சென்றவழி யில், மாளவத்திலிருந்தும் க்ஷுத்ரகத்திலிருந்தும் சைந்த வத்திலிருந்தும் குதிரைவீரர்கள் கூட்டங்கூட்டமாக வந்து இவர்களோடு சேர்ந்துகொண்டார்கள். இருபது தினங்களுக் குள் ஸிந்துதேசம் முழுமையும் கலகித்தெழுந்தது. அங் குள்ள கோட்டை ஒவ்வொன்றையும் பைதான் காக்கவேண் டியவனுனுன். நாற்றிசையிலும் இழுக்கப்பெற்றுத் திகைப் புற்றதனுல், நியார்க்கஸுக்கு உதவி செய்யப்போக முடியா மல், பைதான் அவனுக்கு ஆளனுப்பி, தனக்கு வேண்டிய சௌகரியங்களைத் தன்னுல் இயன்றமட்டும் தானே பார்த் துக் கொள்ளவேண்டுமென்று சொல்லிவிட்டான். புரட் டாசி மாதம் 20-ஆம் தேதி சந்திரகுப்தனும் அவனுடைய குதிரைப்படையும் நியார்க்கஸை எதிர்த்தார்கள்.

அது தக்க தருணமென எண்ணி உதும்பரன் கிரேக் கர்களை நோக்கி, "தடைப்படாமல் அவர்கள் இவ்வளவு

தூரம் வந்துவிட்டார்கள். ஆனால், இது அவர்களுடைய முன்னோடிப்படையேயாகும். சீக்கிரத்தில் இன்னும் அதிகப் படைகள் வந்துவிடும். காட்டிலுள்ள மரங்களின் இலைகளை எண்ணினாலும் எண்ணலாம். அந்தப் படையாட்களின் சங்கியையை எண்ணமுடியாது. அவர்களை நாம் எதிர்த்துப்போராடுவது, குடியானவனொருவன் தன் வயல்களைப் பாழாக்கவரும் பெரிய வெட்டுக்கிளிப் படலத்தை யோட்டித் துரத்தமுயல்வதுபோலவும், சிறு படகு ஒன்று இந்துமகாஸமுத்திரத்து அலைகளோடு போராடி அதைக் கடக்கமுயல்வதுபோலவும் இருக்கும். ஆயினும், சிறிது தூரத்திற்கு அப்பாலுள்ள பந்தோபஸ்தான விரிகுடா ஒன்றில் நான் உங்களைக் கொண்டுபோய்ச் சேர்ப்பதற்காகும்" என்று சொன்னான். நியார்க்கஸினுடைய ஆட்களுக்குத் திகில் பிடித்தது. எதிர்த்துப் போர்புரிவதிற் பயனில்லையென நியார்க்கஸ் கண்டான்; உதும்பரன் அன்போடு செய்ய முன்வந்த உதவியை ஏற்று, உடனே கப்பல்களை ஓட்டிக்கொண்டுபோகத் தீர்மானித்தான். பருவப்பெருங் காற்றானது கோரமாகவே அடித்துக்கொண்டிருந்தது. ஆயினும், கி. மு. 325 யாண்டு செப்டம்பர் 21-ஆம் தேதி கடற்பயண அனுபவம் மிக்க உதும்பரன் வழிகாட்ட நியார்க்கஸ் தன் கப்பல்களை மேற்றிசைநோக்கி ஓட்டிச் சென்றான்.

கரையில் சந்திரகுப்தனுடைய ஆட்களின் கையால் அடிபடுவதைக்காட்டிலும், கடற்காற்றில் அடிபடுவது மேலாகும் என அவனுடைய ஆட்கள் நினைத்தார்கள். அவனுடைய கடைசிக் கப்பல் நகர்ந்து எட்டாத்தூரம் போனவுடனே நியார்க்கஸ் தங்கியிருந்த பாளையத்தில் சந்திரகுப்தனுடைய ஆட்கள் வந்து நின்றுகொண்டு அம்புகளைச் சரமாரியாகக் கப்பல்களின்மீது பொழிந்தார்கள்.

"அவர்கள் எத்தனை அம்புகளை வேண்டுமானாலும் இனி எய்யட்டும். அவ்வம்புகளினால் கடல்நீர் புண் படாது" என்று உதும்பரன் சொன்னான். கடற்சூரைக் காற்று வீசிக்கொண்டேயிருந்தது; அதில் சில நாள்வரை யில் சாதுரியமாகக் கப்பல்களை நடத்திக்கொண்டுபோய்க் கடைசியில் பந்தோபஸ்தானதோர் விரிகுடாவிற் கப்பல்களை அவன் கொண்டுபோய்ச் சேர்த்தான். அவ்விரிகுடாவிற்கு நியார்க்கஸ் 'அலெக்சாண்டரின் தஞ்சம்' (Alexander's Haven)[1] எனப் பெயரிட்டான். அதற்குப்பின் உதும் பரன் கிரேக்கர்களிடம் விடைபெற்றுக்கொண்டான். அவ னுக்கு அவர்கள் மனமார்ந்த வந்தனங்களும் நிரம்பச் சம் மானங்களும் செய்தனுப்பினார்கள்.

நியார்க்கஸைச் சந்திரகுப்தன் வென்று ஓட்டிவிட்டா னென்னும் செய்தி நாட்டுப்புறமெங்கும் காட்டுத் தீப் போற் பரவியது. உடனே எல்லாரும் கலகித்தெழுந் தார்கள். ஸிந்துதேசத்தில் கிரேக்கர்களை எதிர்த்துக் கிளம் பாத கிராமம் ஒன்றுமே இல்லை. ஈட்டி, கோடரி, கத்தி, தடிக்கொம்பு முதலானவைகளையும் விறகுக்கட்டையையும் ஆயுதமாக எடுத்துக்கொண்டு சந்திரகுப்தனுடைய சேனை யோடு சேருவதற்கு ஜனங்கள் ஓடிவந்தார்கள்.

படாலத்தைச் சந்திரகுப்தன் முற்றுகையிட்டான். அங்கிருந்த கிரேக்கப் படைத்தலைவனும் படையினரும் தீரமாக எதிர்த்துப் போராடினார்கள். பைதானே அவர் களுக்குத் தலைமைவகித்துக்கொண்டிருந்தான். மாஸிடோனி யர்கள் இந்தியர்களுக்கு ஈடு கொடுக்கக்கூடியவர்களாகவே இன்னும் இருந்தார்கள். ஆளுக்கு ஆள் பார்த்தால் ஒரு

---

1. கராச்சியினண்டையுள்ள விரிகுடாக்கடல்.

வருக்கொருவர் பின்வாங்குவாரென்று தோன்றவில்லை. போதுமான அளவு உணவுப்பொருள்களையும் அவர்கள் சேகரித்து வைத்துக்கொண்டிருந்தார்கள். சைந்தவவனம், அலார், மகாஊர்த்தம் என்னும் கோட்டைகளை முறையே விஜயஸிம்மன், சாணக்கியர், ராஜசேனன் என்னும் இவர்கள் முற்றுகையிட்டார்கள். ஆனால், அந்தக் கோட்டைகளையும் கிரேக்கர்கள் பலமாகவே காத்துக்கொண்டிருந்தார்கள். தங்கள் நிலைமை இப்படியிருக்கிறதென்று அலெக்சாண்டருக்குத் தெரிந்தால், அவன் உடனே வந்து சகாயம் செய்வானென்று அவர்கள் நம்பியிருந்தார்கள். ஆண்மையில்லாமற் கோட்டையைக் கைவிட்டோமென்னும் அபகீர்த்தி தங்களுக்கு வரக்கூடாதென்றும், அலெக்சாண்டருடைய அதிருப்திக்கு ஆளாகக்கூடாதென்றும் அவர்கள் போராடினார்கள். நாட்டுப்புறம் முழுதும் இப்போது இந்தியர்களது வசமாயிருந்தது. கோட்டைகள் மாத்திரமே கிரேக்கர்கள் கையில் இருந்தது. தனக்குச் சகாயம் செய்ய வரும்படி நியார்க்கஸைப் பைதான் தூண்டிச் சரிப்படுத்திக் கொள்வானோவெனச் சந்திரகுப்தன் பயப்பட்டான். அவ்வெண்ணங்கொண்டு சந்திரகுப்தன் ஐயாயிரம் குதிரைப் படையோடு அலெக்சாண்டர் தஞ்சம் என்னும் துறைக்கு அவசரமாக ஓடினான். இதற்குள்ளாக விஜயவர்மன் இவனோடு வந்து சேர்ந்துகொண்டான். படாலத்து முற்றுகையைக் கவனித்துக்கொள்ளும்படி அவனை விட்டுவிட்டுச் சந்திரகுப்தன் போனான். தன்னை அடிப்பதற்சாக இந்தியர்கள் சிலர் நெருங்கி வந்துகொண்டிருக்கிறார்களெனத் தெரிந்தவுடனே நியார்க்கஸ் கி. மு. 325-ஆம் யாண்டு அக்டோபர் மாதம் 23-ஆம் தேதி திரும்பப் பிரயாணப்பட்டு, இந்தியக் கரையைவிட்டு நீங்கி ஒழிந்து போனான்.

சந்திரகுப்தன் படாலத்திற்குத் திரும்பிவந்தான். முற்றுகையிடுவதற்குவேண்டிய நல்ல கருவிகள் அவனிடம் இல்லை. கிரேக்கர்களோ ஸிந்துதேசத்திலுள்ள கோட்டைகளையெல்லாம் பலப்படுத்தி, சத்துருக்கள் வெல்லவொண்ணு விதமாகக் கெட்டிப்படுத்தியிருந்தார்கள். இப்படியிருக்கின்றதே, என்ன செய்வதென அவன் சாணக்கியரை ஆலோசனை கேட்டான்.

அதற்குச் சாணக்கியர், "கோட்டைகளைப் பிடிக்கும் வகைகள் ஐந்தே உள. அவையாவன,—கபடச்சூது, வேவாட்கள், சத்துருவின் ஜனங்களை வசப்படுத்திக் கொள்ளல், முற்றுகையிடல், மேல் விழுந்தடித்தல் என்பனவாம். இங்கே சூது சரிப்படாது. ஏனெனில், அலெக்சாண்டர் உயிரோடிருக்கிற வரையில் கிரேக்கப் படைத்தலைவன் எவனும் கைக்கூலிக்கு ஆசைப்பட்டுக் கோட்டையை விட்டுக்கொடுக்கமாட்டான்; டிரியாஸ்பீஸ-(Tyriaspes)க்கு நேர்ந்ததுபோலத் தனக்கும் சாவு விதித்தபென்பது அவனுக்குத் தெரியும். பலமும் பிடிவாதமும் உள்ள பிறநாட்டுச் சத்துருக்களை ஏமாற்றுவற்கு வேவுகாரர்கள் பயன்படார். ஏனெனில், இவர்களுடைய நிறத்தைப் பார்த்தவுடனே வேற்றூட்கனெனச் சத்துரு தெரிந்துகொள்வான். கிரேக்கர்களெல்லாரையுமே தானோபாயத்தால் (பொருள்கொடுத்து) வசப்படுத்திக்கொள்வதென்பது அலெக்சாண்டர் உள்ள வரையில் இயலாத காரியம். கோட்டையின்மீது விழுந்தடித்துப் பிடிப்போமென்றால், அதற்குப் பலமான சைனியமும், அநேக யானைகளும், காத்துக்கொண்டிருக்கிற பட்டாளத்தைவிட வலிமை மிக்க படையும் வேண்டும். ஆகையால், நாம் செய்யக்கூடியது ஒன்றேயாகும். அதாவது,

இந்தக் கோட்டைகளுக்கு எதிரில் நாம் ஸ்திரமாக உட்கார்ந்துகொள்ளவேண்டும்; உள்ளே இருக்கிறவர்கள், சேகரித்து வைத்துக்கொண்டிருக்கும் உணவுப்பொருள்களையெல்லாம் புசித்தொழித்தபின், மெல்லமெல்லப் பட்டினியால் வாடி நம் வழிக்கு வரும்படி செய்யவேண்டும். இப்படிச் சாதிப்பதற்குக் குறைந்தபக்ஷம் இரண்டு வருஷங்கள் செல்லும்" என்று சொன்னார். சந்திரகுப்தனும் ஒப்புக்கொண்டான்.

முற்றுகைக் காரியத்திற்கும், பொதுவாகப் போர்க் காரியங்களுக்கும் சில யானைகள் அவசியம் வேண்டும். ஸிம்மபுரத்தில் மூன்றே யானைகள் இருந்தன. ஸிந்து தேசத்து அரசர்களிடமிருந்த யானைகளையெல்லாம் கிரேடிராஸின் மூலமாக அலெக்சாண்டர் கொண்டுபோய்விட்டான். மகதத்தின்மீது படையெடுப்பதற்குத் தேர்ந்த போர் யானைகள் அநேகம் வேண்டும். ஐம்பது யானைகளாவது கொடுத்துதவும்படி பெரிய போரஸைக் கேட்டும், அவன் கொடுத்தனுப்பவில்லை. யானைகளைக் கொடுத்ததினால் பைதானும் பிலிப்பாஸூம் உடனே தெரிந்து அலெக்சாண்டருக்குக் கடிதம் எழுதிவிடுவார்கள், தன்னை அயோக்கியனென்று அலெக்சாண்டர் நினைப்பான் என்று போரஸ் பதில் சொல்லி யனுப்பினான். மற்றும், அலெக்சாண்டர் உயிரோடிருக்குமளவும் தான் கொடுத்த வாக்கைக் காப்பாற்றப்போவதாகவும், அவனுக்கு நண்பனாகவும் துணைவனாகவும் இருக்கப்போவதாகவும் சொல்லியனுப்பினான். அன்றி, கிரேக்கர்களுக்குத் துணை செய்யும்படி அலெக்சாண்டரிடமிருந்து கடிதம் வரும்பக்ஷத்தில் சந்திரகுப்தனுக்கு விரோதமாக ஸிந்துதேசத்திலுள்ள கிரேக்கர்களுக்குத் தான் துணைப்படவேண்டி வருமென்றும் அவன்

சொன்னான். 'அவ்விஷயத்தில் டைதான் சொன்னாலும், பிலிப்பாஸ் சொன்னாலும் யூடிமாஸ் சொன்னாலும் கேட்க மாட்டேன்; அலெக்சாண்டர் நேரே உத்தரவு செய்தால் மாத்திரமே அவர்களுக்குத் துணைப்படுவேன்' என்று போரஸ் சொன்னான்.

சந்திரகுப்தனுக்கு ஆக்கிரோஷம் பொங்கியது. "இந்த ஆள் முழுதும் தன்னலக்கருத்தே மேற்கொண்டு நடக்கிறான். அலெக்சாண்டரைக் கண்டு பயப்படுகிறான். அவனுக்காக இந்தியர்களையும் எதிர்த்துச் சண்டைசெய்வான். விதஸ்தா நதிக்கரையில் இவன் அலெக்சாண்டரோடு சண்டைசெய்தது தன்னுடைய தீரபராக்கிரமத்தையும் ஸ்வதந்திரத்தையும் காட்டும்பொருட்டேயல்லாமல், தன் குலப்பெருமையையாவது நாட்டுக் கலைப்பெருமையையாவது காக்கவேண்டுமென்னும் ஆசை கொண்டல்ல. இப்படிப்பட்டவன் மகதர்களுக்கு விரோதமாகவாவது கிரேக்கர்களுக்கு விரோதமாகவாவது நமக்கு எப்படிச் சகாயம் செய்யப்போகிறானோ தெரியவில்லை" என்று சந்திரகுப்தன் சொன்னான்.

"நல்லது, அவனுடைய மனம் இரண்டு விதத்தில் பதைக்கின்றது. ஒரு பகுதி, அலெக்சாண்டர் என்ன செய்வாரோ என்னும் பீதியினால் பாதிக்கப்படுகின்றது; மற்றொரு பகுதி, அதிகமாக ராஜ்யம் சம்பாதிக்க வேண்டும் என்னும் அபரிமிதமான துராசையினால் பாதிக்கப்படுகின்றது. அவன் பிம்பாரமத்தையும் சங்கலத்தையும் தன் ராஜ்யத்தோடு சேர்த்துக்கொள்ளவேண்டுமென்று பார்த்தான். அந்த யத்தனம் பலிக்கவில்லை. இப்போதோ அவனுடைய ராஜ்யம் ஹைபேஸிஸ் நதிவரையில் வியாபித்திருக்கின்றமையின், இந்தியாவுக்கு அதிராஜனாகவேண்டு

மென மனப்பால் குடித்துக்கொண்டிருக்கிறான். அலெக்சாண்டர் அவனைச் சகோதரனெனத் தழுவியதனாலேயே அந்த முட்டாள் தானும் ஓர் அலெக்சாண்டரெனவே நினைத்துக்கொண்டிருக்கிறான். நந்தர்கள் அவனுக்கு உபசாரமாகக் கொடுக்கும் பணத்தை, அவர்கள் தனக்குக் கட்டும் கப்பம் என்றும், பலவீனத்தினால் அவர்கள் தனக்கு அஞ்சி அப்படி நடந்துகொள்ளுகிறார்களென்றும், அவர்களை எளிதில் தோல்வியுறச் செய்துவிடலாமென்றும் நினைத்துக் கொண்டிருக்கிறான். நந்தர்கள் வருஷந்தோறும் அவனுக்கு ஒரு லக்ஷம் பொன் கொடுத்துவருகிறார்கள். இனி ஐந்து லக்ஷம் பொன் கொடுக்கவேண்டுமென்று சில நாளைக்கு முன் அவன் அவர்களைக் கேட்டிருப்பதாக எனக்குச் சமாசாரம் எட்டியிருக்கிறது. அவனுக்கு ஒன்றுமே கொடுக்கக் கூடாதென்று நக்கரநாஸனும் சகாதலனும் ஏற்கெனவே சொல்லிக்கொண்டிருக்கார்கள். போரஸ் கேட்கிறபடி அதிகப்பணம் கொடுக்க மறுப்பதன்றி இதுவரையிற் கொடுத்து வந்ததையும் நிறுத்திவிட்டுப் போரஸை அவமதித்து நந்தகுமாரர்களைக் கொண்டு போரஸுக்குப் பதில் எழுதுவிக்கும்படி ஜீவஸித்திக்குச் சொல்லியனுப்பியிருக்கிறேன். அந்தக் கடிதத்தைப் பார்த்தவுடன் போரஸும் வைரோசகனும் கோபாவேசம் கொள்வார்கள். அந்தச் சமயத்தில், நம்முடைய ஆளாக அவர்களிடம் இருக்கிற விசாலாக்ஷன் சமத்காரமாக அவர்களுடைய மனத்தை எங்ஙனம் திருப்பவேண்டுமோ அங்ஙனம் திருப்புவான். அதன்மீது, மகதராஜ்யத்திற் பாதிகொடுப்பதாக நாம் வாக்குக்கொடுத்தோமானால், அவர்களிருவரும் நம்முடன் சேர்ந்து நந்தர்களின் மீது படையெடுப்பதற்கு இசைவார்கள். அதுவன்றி, அவர்களுக்கு அதிகத் திருப்தி உண்

டாக்கும் பொருட்டு, ஸிந்து தேசத்தில் நாம் ஜயித்துள்ள தேசங்களையும் அதிகப்படியாகக் கொடுப்போமென்று சொல்வோம். மகதராஜ்யம் முழுமையுமே பறித்துக் கொள்வதற்கும் அவர்கள் நிச்சயமாக முயலக்கூடியவர் களே. ஆனால், அவர்களுடைய உதவியைக்கொண்டு நந்தர்களை வென்றபின், அவர்களைச் சந்தடியில்லாமல் தீர்த்துவிடுவோம். அவற்றையெல்லாம் நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்று சாணக்கியர் சொன்னார்.

"ஆனால், அவர்களுடைய உதவிபெற்ற பின்னர் அவர்களை அழிப்பதனால் நாம் துரோகிகளாகமாட் டோமா?'' என்று சந்திரகுப்தன் வினவினான்.

"நம்மீது தோஷம் சிறிதும் இல்லையென்று தோன்றும் படியாக நான் காரியத்தை முடிக்கிறேன். தனியாக ஒரு வனைச் சதிக்கொலை செய்வது சாமானிய சாமாஜிக தர்மத் தில் குற்றமேயாகும்; ஆனால், இற்றை நாள் அரசியல் வியவகாரங்களில் அது இன்றியமையாதது. முன்னதாக நாம் அவர்களைக் கொல்லாவிடின் நம்மை அவர்கள் கொலை செய்துவிடுவார்கள். ஆகையால், நான் சொல்வது தற்காப்புக் கொலை. ராஜபக்தியினால் தலைவர்களைப் பின்பற்றிச் சூழ்ந்து கொண்டிருக்கிற நிரபராதிகளான பாமர ஜனங்களை ஆயிரக் கணக்காகக் கொல்வதைக் காட்டிலும், இப்படிப்பட்ட தலைவர்கள் சிலரைக் கொல்வதனால் தேசத்திற்கு நன்மையே உண்டு'' என்று சொன்னார் சாணக்கியர்.

"ஆனால், ஆயிரக்கணக்கான ஜனங்களைப் பகிரங்க மாகக் கொல்வார்களேயல்லாமல், இரகசியமாகக் கொலை செய்யமாட்டார்களே'' எனச் சந்திரகுப்தன் வினவினான்.

"எப்போதும் அப்படியே நடப்பதில்லை. மத்ரகர்களைச் சங்கரித்தது எவ்வாறு? காமற்கோட்டு வயல்களில் நிராயுத

பாணிகளாய் வேலை செய்துகொண்டிருந்த மாளவர்களின் மீது அலெக்சாண்டரும் அவனுடைய ஆயுதபாணிகளான கிரேக்கர்களும் பாய்ந்தடித்ததற்கு என்ன சொல்லுகிறாய்? தப்பிப் பிழைக்கும் பொருட்டு ஓடிப்போய்க்கொண்டிருந்த ஸ்திரீகளையும் குழந்தைகளையும் கொன்றார்களே, அதற்கென்ன சமாதானம்? யுத்தத்தில் பதுங்கியிருந்து சத்ருக்களைத் தாக்கிக்கொல்வது போர் முறைகளில் ஒன்றாக இருக்கின்றதே, அது ஏன்? தர்மஸ்வரூபியெனக் கொண்டாடப் பெறுகிற ஸ்ரீராமரும் ஒளித்திருந்தே வாலியை அடித்து வீழ்த்தினார். விஷ்ணுவின் பூர்ணாவதாரம் எனவே பாராட்டப்படுகிற ஸ்ரீகிருஷ்ணரும் ஜயத்ரதனைத் தந்திரமாகவே கொன்றார். இப்படிப்பட்ட காரியங்களிலெல்லாம் அதிக நுட்பம் பார்க்காதே. பார்த்தால் அரசனாகமாட்டாய். இதோ பார், நான் சொல்லுகிற முறையினால் வர்த்தகமும் வியவசாயமும் கெடா. அப்படிப்பட்ட தலைவர்கள் மாத்திரம் மர்மமாகக் கொலை செய்யப்படுவதை ஊர் ஜனங்கள் பொருட்படுத்தமாட்டார்கள். அரசர்களும் ராஜ்ய தந்திரிகளும் எத்தனையோ ஆசைகள் வைத்துக்கொண்டிருக்கிறார்கள்; மூடத்தனமாக எத்தனையோ காரியங்கள் செய்கிறார்கள். அவர்களுடைய குயுக்தியின்பொருட்டும் மடமையின் பொருட்டும் சாமானிய ஜனங்கள் ஏன் கஷ்டப்பட வேண்டும்? அதைத் தவிர்க்கக்கூடுமானால், ஏன் தவிர்க்கலாகாது!” என்று சாணக்கியர் வினவினார்.

“சரி, அதெல்லாம் உங்கள்பாடு. எப்படி வேண்டுமானாலும் என்ன வேண்டுமானாலும் செய்துகொள்ளுங்கள். நம் உபதளகர்த்தர்களை இங்கே வைத்துவிட்டு நாம் இருவரும் கலிங்க தேசத்திற்குப் போவோம். அங்கே வரவேண்டுமென்று அவ்வரசன் நம்மை அழைத்திருக்கிறானே. அங்

கிருந்து நல்ல போர் யானைகள் ஐந்நூறை வாங்கிக்கொண்டு வருவோம். இங்ஙனம் 500 யானைகளுடன் நாம் திரும்பி வருவோமானால் நம்முடைய பேரும் பலமும் பராக்கிரமமும் பிரதிஷ்டையும் நாலுமடங்கு உயரும்; பர்வதேசுவரனும் (போரஸும்) நந்தர்களுக்கு எதிரிடையாக நம்முடன் சேர விரும்புவான்" என்று சந்திரகுப்தன் சொன்னான்.

"அங்ஙனமே ஆகட்டும், கலிங்கத்தரசன் நம்மை அன்புடன் அழைக்கிறானென்று சமித்தார்த்தகனும் அவ்விடமிருந்து எனக்கு எழுதியிருக்கிறான்" என்று சாணக்கியர் சொன்னார்.

விஜயஸிம்மன், விஜயவர்மன், ராஜஸேனன் என்னும் இவர்களை, கோட்டைகளை முற்றுகையிடுங் காரியத்தைக் கவனிக்கும்படி வைத்துவிட்டு, சந்திரகுப்தனும் சாணக்கியரும் கலிங்கத்திற்குப் புறப்பட்டுப் போனார்கள். கலிங்கத்தரசன் அவர்களை மிக்க ஆதரவோடு உபசரித்து, 300 பழகிய போர்யானைகளைக் கொடுத்ததன்றி, இன்னும் வேண்டிய யானைகளைக் காடுகளிற் பிடிக்கும்பொருட்டு அத்தொழிலில் தேர்ந்தவர்களின் படையொன்று கொடுத்தான். விடாமற் கண்ணிவைத்துக் கெட்டாக்கள் (Keddahs) அமைத்து அவ்வாட்கள் ஆறு மாதத்திற்குள் புதிதாக 300 யானைகள் பிடித்தார்கள். அவற்றுள் சந்திரகுப்தனே வகுத்த முறைப்படி பிடித்த யானை யொன்று மகத்தான கம்பீரம் வாய்ந்தது. அது 12 அடி உயரம்; அதன் கொம்புகள் மூன்று அடி நீளம். சந்திரகுப்தனே அதை விரைவிற் பழக்கிச் 'சந்திரலேகம்' என அதற்குப் பெயரிட்டான். அவ்வரசன்மீது அது மிக்க அன்பு கொண்டதனால், அவன் அதைத் தன் சொந்த வாகனமாக வைத்துக்கொண்

டான். அது சக்கரவர்த்திக்கேற்ற மகத்தான யானையென எல்லாரும் மகிழ்ந்தார்கள்.

அந்தச் சந்தர்ப்பத்தை வீண்போக்காமல் அதை ஆதாரமாக வைத்துச் சாணக்கியர், ஒரு கயிறு திரித்து வெளியே வழங்கவிட்டார்: 'சந்திரகுப்தனைக் கண்டவுடனே அந்தக் காட்டானை வலிய வந்து முழந்தாட்பணியிட்டுப் பணிந்து, அவனைத் தன் முதுகின் மீது தூக்கிவைத்துக்கொண்டது. சந்திரகுப்த சக்கரவர்த்திக்கு வாகனமாகும் பொருட்டே தான் பூவுலகிற் பிறந்ததெனக் கருதியே அது இங்ஙனம் செய்தது. அவனது ஹஸ்திரத்தினம் ஆக விளங்கவேண்டு மென்பதே தன் கருத்தென அது தெரிவித்தது.' இது உண்மையெனவே இந்தியர்கள் ஏற்றுக் கொண்டார்கள்.

இந்தக் கதையைக் கேட்டு அவ்யானையையும் தன் கண்ணுற் பார்த்தபின் கலிங்கத்தரசன், இனி ஒரு நாள் சந்திரகுப்தன் மகத சக்கரவர்த்தியாக வருவது நிச்சயம் எனத் திடமாக நம்பினான். அந்த நம்பிக்கையினால் அவன் சந்திரகுப்தனோடு இரகசிய உடன்படிக்கை யொன்று செய்துகொண்டான். சந்திரகுப்தனும் சாணக்கியரும் பாடலிபுரத்தின்மீது படையெடுத்து வருகையில், அவன் 50,000 படையாட்களுடனும் 10,000 காட்டாட்களுடனும் தென்புறமாக வந்து மகதத்தைத் தாக்குவதாக ஒப்புக்கொண்டான். அதற்குப் பிரதியாக, அவன் இதுவரையில் மகதத்தவர்களுக்குக் கட்டிக்கொண்டிருக்கிற கப்பத்தை 60 வருஷங்கள் வஜா செய்யவேண்டும். இந்த வஜா, தன் படையெழுச்சிக்காக அவன் செலவிடும் பணத்திற்கு ஈடுசெய்யும் பொருட்டாகும். இந்த அறுபது வருஷங்கள் கழிந்த பின்னரும் கலிங்கத்தரசன் மகதத்

தவர்களுக்குக் கப்பங் கட்ட மாத்திரமே கடமைப் பட்டவனேயன்றி, அவனுடைய உள்நாட்டு வியவகாரங் களில் மகதத்தவர்கள் தலையிடுவதற்கில்லை எனவும் உடன் படிக்கை செய்துகொண்டான்.

"உம்முடைய பாட்டனார் கலிங்கத்தை அடக்கி மக தத்திற்கு உட்படுத்தினார். அப்படிச் செய்தவரை நன்றி கெட்ட யஜமானர்கள் வஞ்சகமாகக் கொன்றார்கள். கலிங் கத்திற்கு ஸ்வதந்திரம் அளிக்கும் பெருமை அவருடைய பேரப்பிள்ளையைச் சேரட்டும்! ஆனால், பாடலிபுத்திரத்தின் மீது படையெடுப்பதற்கு உங்களுக்குப் போதிய பலம் கைகூடி வருமளவும், உங்களுக்கு உதவி செய்ய நாங்கள் சக்தியற்றவர்களாயிருக்கிறோம். இப்போது நாங்கள் அடங்கியிராவிடில், நந்தர்கள் எங்கள் தேசத்தின்மீது படையெடுத்து நாசமாக்கி விடுவார்கள்" என்றும் கலிங்கன் சொன்னான்.

அவன் சொல்லிய ஷரத்துக்கள் நியாயமானவையே யெனச் சாணக்கியரும் சந்திரகுப்தனும் ஒப்புக்கொண்டு, அவனிடம் விடைபெற்று, ஸிம்மபுரத்துக்குப் போனார்கள். அங்கிருந்து 600 போர் யானைகளும், 1,000 குதிரைப்படை யும், சவரர்களும், காண்டு ஜாதி வீரர்களும், சேர்ந்து 5,000 ஆட்களும் அவர்கள் கொண்டு போனார்கள். சவரர்க ளுடைய தலைவன் **வைரந்தியன்**. காண்டர்களுடைய தலை வன் **காண்டோவீரன்**. இந்தத் தலைவர்களோடு வந்து அவர்கள், சந்திரகுப்தனுடைய படையிற் சேவிக்க ஒப்புக் கொண்டிருந்தார்கள். ஸிம்மபுரத்திற்கு அவர்கள் திரும் பிப் போய்ச் சேர்ந்தபோது கி. மு. 323 ஆம் யாண்டு ஜூலை மாதத்தில் பல நாள் கழிந்துவிட்டது. ஸிம்மபுரத்து ஜனங்

களும் அக்கம்பக்கத்துப் பிரதேசங்களிலுள்ளவர்களும் சாணக்கியரையும் சந்திரகுப்தனையும் அவர்களுடைய யானைகளையும் மிக்க ஆரவாரத்தோடு வரவேற்று உபசரித்தார்கள்.

இவர்கள் கலிங்கத்துக்குப் போய் வருவதற்குள்ளாகப் பெருங்காரியங்கள் பல நிகழ்ந்திருந்தன. விசாலாக்ஷனும் ஸித்தார்த்தகனும் செய்த சூழ்ச்சிகளே பெரிதும் காரணமாக, ஏற்கெனவே நாம் சொல்லியவண்ணம், கி. மு. 325 நவம்பர் மாதத்தில் பிலிப்பாஸ் கொலை செய்யப்பட்டான். அதையடுத்து அலெக்சாண்டர் செய்த ஏற்பாடுகளினால் கிரேக்கர்களிடம் பெரிய போரஸுக்கு மனம் முறிந்து போயிற்று. நந்தர்களிடமிருந்து அவமதிப்பான கடிதம் ஒன்றும் போரஸுக்கு வந்திருந்தது.

அந்தக் கடிதத்தில், "நாங்கள் இதுவரையில் தயா பூர்வகமாக உமக்குக் கொடுத்துவந்த வருஷாசனத்தை அதிகப்படுத்த வேண்டுமென்று நீங்கள் கெஞ்சிக் கேட்டுக் கொண்ட கடிதம் கிடைத்தது. உமது வறுமையை உத்தேசித்து இரக்கப்பட்டு நாங்கள் உமக்குப் பணம் கொடுத்து வந்தோம். உமது வேண்டுகோட்கு நாங்கள் இணங்க மாட்டோம். நீர் அகந்தை பாராட்டிக் கடிதம் எழுதியிருப்பதனால் இதுகாறும் கொடுத்து வந்த பணத்தையும் கொடாமல் நிறுத்திவிட்டோம். ஆயினும், நீர் பாடலிபுரத்திற்கு வந்து முழந்தாட்படியிட்டு எங்கள் அரசனிடம் விண்ணப்பம் செய்து கொள்வீரானால், இப்போது கொடுத்துவருகிறபடி திரும்பக் கொடுப்பதற்காகும்" என்று எழுதப்பட்டிருந்தது.

இது ஜீவஸித்தி செய்த வேலை. அவனுடைய பிரேரணையினாலேயே இந்தக் கடிதம் எழுதப்பட்டது. நக்கரநாஸ

னும் சகாதலனும் வற்புறுத்தியதனால், ராக்ஷஸன் கடைசியில் அப்படிக் கடிதம் எழுத ஒப்புக்கொண்டான். அவர்கள் இருவரும் சேர்ந்து, மகதத்தரசனுடைய பெருமையையும் பிரதாபத்தையும் சாதிக்கவேண்டுமென ராக்ஷஸனுக்குச் சொன்னார்கள். தனக்கு உத்தரவானால் இப்படிப்பட்ட போரஸுகள் பன்னிரண்டு பேரைத் தலையிட்டுப் பிடித்துக் கொண்டு வருவதாகப் பத்தசாலன் பிரதாபம் பேசினான்.

இந்தக் கடிதத்தைப் படித்தவுடன், போரஸுக்கு ரௌத்திராகாரம் வந்துவிட்டது. அதை அவன் தன் ஆப்த நண்பனை விசாலாக்ஷனுக்குக் காட்டினான். அவன் அதைப் படித்துப் பார்த்து, "அலெக்சாண்டரும் உம்மை அரசனெனக் கௌரவித்து மரியாதையாக நடத்தவேண்டி வந்தது. இந்த அம்பட்டன் மகன் உங்களை அடிமையெனப் பாவிக்கவிடலாமா?" என்று அவனும் ஆக்கிரோஷத்துடன் பேசினான். இந்தச் சுடுசொல்லைக் கேட்டவுடன் போரஸுக்குப் புண்ணிற் கோலாற் குத்தியது போலாயிற்று. மகதத்தின்மீது படையெடுக்கும் நோக்கங்கொண்ட சந்திரகுப்தனோடு சேர்ந்துகொள்ள வேண்டுமென உடனே தீர்மானித்துக்கொண்டான். ராணி ஸ்வர்ணமயியை நோக்கி, "நான் உண்மையில் பாடலிபுரத்திற்கே போகிறேன். போவது சரியே. ஆனால், இந்த நாவிதன் மகனிடம் மண்டியிட்டுப் பணப்பிச்சை கேட்பதற்காகவன்று. அவன் மண்டியிட்டு என் காலில் விழுந்து உயிர்ப்பிச்சை கேட்கும்படி செய்வேன். தன்னந் தனியே நான் அவனை எதிர்ப்பேன். ஆனால், அந்த நாட்டுப் பாங்கும் விவரமும் எனக்குத் தெரியா. முக்கியமாக அங்குள்ள ஆறுகளின் ஆழமும் அபாய கட்டங்களும் தெரியா. அன்றியும், அந்த ராஜ பட்டத்துக்கு உரிமையுள்ளவனொருவனைத்

துணைக்கொள்வது உசிதமாகும். சாணக்கியரும் சந்திரகுப்தனும் கலிங்கத்தினின்று திரும்பி வரட்டும். மகதர்களுக்கு எதிராக உடனே அவர்களுடன் உடன்படிக்கை செய்துகொள்வேன்" என்று சொன்னான்.

சாணக்கியரும் சந்திரகுப்தனும் திரும்பி வந்து சேர்ந்த சில நாளைக்கெல்லாம் கி. மு. 323 ஜூன் மாதத்தில், 33-ஆம் வயதில், இளம்பிராயத்திலே, பாபிலோனில் அலெக்சாண்டர் இறந்தானென்னும் செய்தி இந்தியாவுக்கு எட்டியது. ஜ்வரம் மூண்டுகிடந்து இறந்தானென்றும், எவரோ விஷமிட்டதனால் இறந்தானென்றும் சந்தேகமாகச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். எப்படியோ அவன் இறந்தானென்பது உண்மை. இது மின்வீச்சென எல்லாரையும் ஒரு புரட்டுப் புரட்டியது. இந்தியர்கள் களிக்கூத்தாடினார்கள். பைதான், யூடிமாஸ், கிரேக்கப் படைத்தலைவர்கள், கிரேக்கப் பட்டாளங்களிலுள்ளவர்கள் ஆகிய இவர்களெல்லாரும் மனமாழ்ந்து மட்கிப் போனார்கள்.

சந்திரகுப்தனும் சாணக்கியரும் விஜயவர்மனும் சேர்ந்து அலார்க் கோட்டையைத் தாக்கினார்கள். கோட்டைக்குள்ளிருந்த குடிஜனங்களும் இவர்களுக்கு உதவி புரிந்தார்கள். கடும்போர் புரிந்து கோட்டையை இவர்கள் கைப்பற்றிக்கொண்டார்கள்; 800 கிரேக்கப் போர்வீரரை நறுக்கினார்கள். அவர்களுடைய தலைவனையும், பதினொரு உபதளகர்த்தர்களையும், முன்னர் மூஷிகசேனனையும் பிராமணர்களையும் தூக்கிலிட்டுக் கொன்ற இடத்திலேயே தூக்கிலிட்டு வதைத்தார்கள். ஸிந்து மாகாணத்திற் சந்திரகுப்தனால் முற்றுகை போட்டு நிர்ப்பந்திக்கப்பட்ட பட்டாளங்களுக்குத் துணை போம்படி பெரிய போரஸைப் பைதானும் யூடிமாசும் வேண்டிக்கொண்டார்கள். ஆனால்,

முதலில் போரஸ் அவர்களுடைய வேண்டுகோளைச் செவிக் கொள்ளவில்லை. மகா ஊர்த்தத்துக் கோட்டையை விஜயவர்மனும் சந்திரகுப்தனும் பிடித்து இன்னும் ஆயிரம் கிரேக்கர்களைக் கொன்றார்கள். அவ்விடத்திலும் அந்தக் கிரேக்கத்தலைவனையும், பொறுக்கி யெடுத்த பதினொரு கிரேக்கர்களையும் தூக்கிலிட்டார்கள். 7,000 மத்ரகர்களை அலெக்சாண்டர் சங்கரித்ததுபோல, 7,000 கிரேக்கர்களை வெட்டி யெறியவேண்டு மென்று விஜயவர்மன் விரும்பினான். பைதானும் யூடிமாசும் கலகலத்துத் திகில் கொண்டார்கள். ஆம்பீசுக்கு முறையிட்டு உதவிவேண்டுவதனால் பயனில்லை. ஏனெனில், அசுவகர்களின் கையிற் சிக்கி அவனே மிகக் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தான். இவர்களுடைய முறைப் பாட்டை அபிசாரத்தரசனும் காஷ்மீரத்தரசனும் அர்ஷ கேசனும் காதுகொடுத்து மட்டுமே கேட்டார்களேயன்றி ஒன்றும் செய்யவில்லை, உதவி செய்வதற்குப் போதிய பலம் சிறிய போரஸுக்கு இல்லை. ஆகையால், ஸிந்து நதிக்குக் கிழக்கேயுள்ள ராஜ்யத்தையெல்லாம் தனது ஆதிபத்தியத் திற் சேர்த்துக்கொண்டு, படாலத்தினின்றும் சைந்தவவனத் தினின்றும் கிரேக்கப் பட்டாளங்கள் தங்கள் படை கொடி களோடு ஸிந்து நதிக்கு மேற்புறம் ஒழிந்து போக விடும் படி பெரிய போரஸைப் பைதானும் யூடிமாசும் பிரார்த்தித் தார்கள்.

அதனால் போரஸுக்கு உச்சி குளிர்ந்துபோயிற்று. ஆசையும் அகம்பாவமும் மேலிட்டன. சந்திரகுப்தனோடு உடன்படிக்கை செய்துகொள்வதாக வாக்களித்தான். தன் னுடைய சைனியம் முழுவதையும், கிரேக்கர், பாரஸிகர், சகர் முதலான கூலிப்படைகளையும் அழைத்துக்கொண்டு வந்து அவனோடு சேர்ந்து மகதத்தின்மீது படையெடுப்

பதாகச் சொன்னான். அதற்குப் பிரதிபாக மகத ராஜ்யத்திற் பாதி தனக்குக் கொடுப்பதாக வாக்களிக்கவேண்டும், சைந்தவவனத்து முற்றுகையையும் படாலத்து முற்றுகையையும் நீக்கிவிட வேண்டும், ஸிந்து மாகாணம் முழுமையும் சந்திரகுப்தனுடைய ஆட்கள் விட்டு நீங்கித் தன்னுடைய ஆதிபத்தியத்தில் அதை வைக்கவேண்டும் என்று கேட்டான். அந்த நிபந்தனைகளுக்கு ஒப்புக்கொள்ளாவிடில் தன்னுடைய முழுப்படையோடு கிரேக்கர்களுடன் சேர்ந்து, சந்திரகுப்தனுடைய சைனியத்தை நிர்மூலமாக்கி, சந்திரகுப்தனையும் சாணக்கியரையும் கிரேக்கர் கையிற் பிடித்துக் கொடுக்கப் போவதாகப் பயமுறுத்தினான். அப்போது சந்திரகுப்தனை நோக்கிச் சாணக்கியர், "இந்தப் போரஸ் எப்படிப்பட்ட துன்மார்க்கனாக இழிந்தானென்று இப்போது பார்த்தாயா? நீசமாக நம்மைப் பயமுறுத்தியதனால் இவன் ஆததாயி[1] ஆயினன். சரியான காலம் வருகையில் கொஞ்சங்கூடப் பச்சாத்தாபமின்றி இவனைக் கொல்லவேண்டும். இவன் சொல்லுகிற போக்கிரித்தனமான நிபந்தனைகளை இச்சமயம் ஒப்புக்கொள்வோம். எதுபோலவெனின், கொள்ளைக்காரன் கையிலகப்பட்ட திக்கற்ற குடித்தனக்காரன், அரசாங்கச் சேவகர்களும் நீதிபதியும் வந்து சேர்கிறவரையில், அவன் சொல்லுகிற நிபந்தனைகட்கு உட்படுவதுபோலாம். நம்முடைய சைனியங்கள் மகதராஜ்யத்திற்குள் பிரவேசித்தவுடனே மஞ்சுபட்டணத்து அரசனும் காமரூபத்து அரசனும் நம்மோடு வந்து சேர ஒப்புக்கொண்டிருக்கிறார்களென நிபுணகன் எனக்கு எழுதியிருக்கிறான். அதாவது, நந்தர்களை யொழித்தபின், போரஸின்படையோடு போர்

1. கேடுகெட்ட பாதகன். கண்டமாத்திரத்தில் அவனைக் கொல்லலாமென்பது இந்து தர்மசாஸ்திர விதி.

புரிந்து அவர்களை நசுக்குவதற்கு நமக்கு அதிக துருப்புக்கள் உண்டு என்பதாம்" என்றார்.

போரஸினுடைய ஷரத்துக்களுக்குச் சாணக்கியரும் சந்திரகுப்தனும் தடைசொல்லாமல் ஒப்புக்கொண்டார்கள். ஆனால் அலார், சைந்தவவனம், மகாஊர்த்தர், படாலம் என்னும் இடங்களின் அரசர்களுக்கு அவரவருடைய தலைநகரங்களையும் முழு ராஜ்யங்களையும் அவரவருக்குத் திரும்பிக்கொடுத்துவிடவேண்டும், முன்னர் அவர்கள் பாரஸிக சக்ரவர்த்தியான டரயசுச்குக் கட்டிக்கொண்டுவந்த கப்பங்களைமாத்திரம் கட்டிவரச்செய்யவேண்டும் என்று சொன்னார்கள். அப்படியே செய்வதாக உடனே போரஸ் ஒப்புக்கொண்டான். சைந்தவவனத்து முற்றுகையையும் படாலத்து முற்றுகையையும் சந்திரகுப்தனும் சாணக்கியரும் விட்டுவிட்டார்கள். பைதானும் கிரேக்கப் படைவீரரும் பட்டாளங்களும் ஸிந்துநதியின் மேற்புறத்திற்கு க்ஷேமமாக நகர்ந்து போயினர். ஸிந்து மாகாணத்துக் கோட்டைகளை அந்த அந்த அரசருக்குத் திருப்பிக்கொடுத்து, அந்த மாகாணம் பெரிய போரஸின் ஸம்ஸ்தானத்தில் இப்போது சேர்க்கப்பட்டமையின், அவனுடைய அதீனத்தில் அவ்வவ்வரசர்கள் ஆளும்படி விட்டார்கள். சந்திரகுப்தனும் சாணக்கியரும் தங்கள் படைகளுடன் ஸிம்மபுரத்திற்குத் திரும்பிப்போய்ச் சேர்ந்தார்கள். இப்போது மாளவர்களும் க்ஷூத்ரகர்களும் ஸௌவீரர்களும் சைந்தவர்களும் ஆயிரக்கணக்காக வந்து சேர்ந்ததனால், அவர்களுடைய படைப்பலம் 1,50,000க்குப் பெருகியது. அவர்களுடைய கீர்த்தியும் பத்துமடங்கு அதிகரித்தது. அலார், சைந்தவவனம், படாலம், மகாஊர்த்தம் என்பவற்றின் அரசர்கள் அவர்களுக்கு நன்றி

பாராட்டி அவர்களுடைய முழுச் சைனியத்திற்கும் ஐந்து வருஷச் சம்பளத்திற்குப் போதுமான பொன் கொடுத்தார்கள்.

இனி மகதத்தின்மீது படையெடுப்பதற்கு வேண்டிய சன்னாகங்களைச் சந்திரகுப்தனும் சாணக்கியரும் போரஸனும் மெல்ல மெல்லச் செய்யத் தொடங்கினார்கள். அது மகத்தான பெரும்பிரயத்தனம்; அலெக்சாண்டரும் அவனுடைய யுத்த விருத்தர்களும் அசாத்தியமெனக் கைவிட்ட காரியம்; ஆதலால், படையெடுக்குமுன், வேண்டிய ஸாதனங்களையெல்லாம் பூர்த்தியாகச் சித்தப்படுத்திக் கொள்ளத் தீர்மானித்தார்கள். இவ்வாறு அவர்கள் இரண்டு வருஷகாலம் யுத்த ஸன்னாகம் செய்தார்கள். கிடைக்கக்கூடியவர்களில் ஒருவனையும் விடாமல் எல்லாரையும் தம் படையிற் சேர்த்துக்கொண்டார்கள். கி. மு. 321 புரட்டாசி மாதத்தில் ஸன்னாகங்களெல்லாம் பூர்த்தியாயின.

300 யானைகள், 500 தேர்கள், 10,000 குதிரைப் படை, 50,000 பதாதிப்படையல்லாமல், கிரேக்கர்கள், சகர்கள், கிராதர்கள், காம்போஜர்கள், பாரஸிகர்கள், பால்ஹிகர்கள், அசுவகனியர் ஆகிய இவர்களடங்கிய 70,000 கூலிப்படையாட்களையும் போரஸ் திரட்டிக்கொண்டிருந்தான். இந்தக் கூலிப்படையாட்கள், நந்தர்களுடைய அபரிமிதமான ஐசுவரியக்குவியலைக் கொள்ளையடிக்குமளவில் தாங்களும் பங்கு பெறுவோமென்னும் ஆவலினால் வந்து சேர்ந்தவர்கள். 600 யானைகள், 1000 தேர்கள், 25,000 குதிரைப்படை, 1,25,000 பதாதிப்படை சந்திரகுப்தன் சேகரித்துவைத்திருந்தான். இந்தப் பதாதிப்படையில் ஜாட்டுகள் (Jats), க்ஷத்ரகர்கள், மாள

வர்கள், ஸௌவீரர்கள், சைந்தவர்கள், சவரர்கள், கோண்கள் ஆகியோர் சேர்ந்திருந்தார்கள்.

இப்படிப்பட்ட நேர்த்தியான சைனியங்கள் இருப்பதையெண்ணிச் சந்திரகுப்தனும் சாணக்கியரும் போரஸனும் பெருமை அடைந்தார்கள்; நந்தர்களை எதிர்த்து அடித்து விடுவோமென நம்பிக்கை கொண்டார்கள். முக்கியமாகக் கலிங்கத்தரசனும், காமரூபத்தரசனும் மஞ்சுபட்டணத்து அரசனும் துணைக்கு வருவதாக வாக்களித்திருப்பதனாலும் நந்தருடைய படையிலேயே சிலரும் பாடலிபுரத்து ஜனங்களிற் சிலரும் சந்திரகுப்தனுக்குச் சார்பாகக் கலகித்து எழுவார்களென எதிர்பார்ப்பதனாலும் நந்தர்களைத் தோல்வியுறச் செய்வோம் எனத் திடப்படுத்திக்கொண்டார்கள்.

இதற்கிடையில் போரஸனுக்கு உற்சாக மூட்டத்தக்க சங்கதியொன்று நிகழ்ந்தது. அலெக்சாண்டருடைய சாம்ராஜ்யத்தைக் கி. மு. 321-ஆம் யாண்டில் திரிபரடேய்ஸாஸ் என்னுமிடத்தில் ஆண்டிபேடர் (Autipater) என்பவன் இரண்டாம்முறை பங்கிடுமளவில், 'ஹைடாஸ்பெஸனுக்குக் கிழக்கேயுள்ள பிரதேசம், ஸிந்துமாகாணம், ஸிந்துநதிக் கழிமுகப்பிரதேசம் என்னும் இவைகளுக்கெல்லாம் போரஸே அரசனாவன்; ஸிந்துநதிக்கும் ஹைடாஸ்பெஸனுக்கும் இடையிலுள்ள பிரதேசத்திற்கு மாத்திரமே ஆம்பிசு அரசனாவன்; ஸிந்துநதிக்கு மேற்கே பரோபனிசடையின் எல்லைப்புறத்திலுள்ள மாகாணங்களுக்குப் பைதான் மாகாணாதிபதியாவன் என்ற நிர்ணயம் ஏற்பட்டது. இதனால், ஸிந்துமாகாணத்தில் போரஸனுக்கு அரசுரிமை கிடைத்தது. அவனது பதவி பலப்பட்டது; தங்கள் அரசர்களால் அங்கீகரிக்கப்பட்டவனொருவனுடைய படையில் கிரேக்கக் கூலிப் போராட்கள் தாராளமாகச் சேர்ந்துகொள்ள முடிந்தது.

கி. மு. 321 புரட்டாசி மாதத்தில் மித்திர கோஷ்டிகளின் மொத்தத் தளங்களும் படையெடுக்கச் சித்தமாயிருந்தன. இவர்களுடைய படைத்தொகுதியைப்பற்றி ஜனங்கள் மிகப் பெரிதாகவும் பயங்கரமாகவும் நினைத்திருக்கிறார்களென இவர்கள் கேள்விப்பட்டார்கள். நந்தர்களை இவர்கள் நிச்சயமாக ஜயித்துவிடுவார்களென்னும் அபிப்பிராயம் எல்லாருக்கும் உண்டாயிற்று. அதனால், கலிங்கத்தரசன் தென்புறத்திலிருந்து பாடலிபுரத்தைத் தாக்கத் தீர்மானித்துத் தன் படைகளை அணிவகுக்கத் தொடங்கினான்; காமரூபத்தரசன் கீழ்ப்புறத்திலிருந்து படையெடுக்க நிச்சயித்தான்; மஞ்சுபட்டணத்தரசன் இனிச் சிறிதும் காலந் தாழ்க்காமல் வடபுறத்திலிருந்து பாடலிபுரத்தின் மீது பாய்வதற்கு உறுதி கொண்டானென்னும் சுப வர்த்தமானம் இவர்களுக்கு எட்டியது. ஆதலின், மித்திர கோஷ்டியார் மிக உற்சாகத்தோடு, வெற்றி தமக்கே வாய்க்குமென்னும் மனப்பூரிப்புடன் படையெடுக்கத் தலைப்பட்டார்கள். சந்திரகுப்தனும் சாணக்கியரும் ஒரு சைனியத்திற்கு அதிபதிகளாய் அதை நடத்தினார்கள்; மற்றொரு சைனியத்தைப் போரஸ் தன் சகோதரன் வைரோசகனையும் மகன் மலையகேதுவையும் துணையாகக்கொண்டு நடத்தினான்.

சந்திரகுப்தனுக்கு உண்டாயிருந்த உற்சாகம் இவ்வளவு அவ்வளவென்று சொல்வதற்கில்லை.

"கஷ்டப்பட்டகாலமெல்லாம் போக, முடிவில் நான் என் ஊருக்குத் திரும்பிப்போகிறேன்" என்று அவன் சாணக்கியருக்குச் சொன்னான்.

"யமுனையாற்றைக் கடக்கும்போதே, திரும்பிவருவதற்காகவே நாம் புறப்பட்டுப்போகிறோமென்று உனக்கு நான்

சொல்லவில்லையா? இப்போதும் திரும்பிவருவதற்காகவே போகிறோமென்று மறுபடி சொல்கிறேன்" என்று சாணக்கியர் பதில் மொழிந்தார்.

"திரும்பிவருவதற்கா? ஒருபோதுமில்லை! ஜயித்தால் ஜயிப்போம், செத்தால் சாவோம் என்றே போகின்றோம்" எனச் சந்திரகுப்தன் கூறினான்.

புன்னகை கொண்டு சாணக்கியர், "அப்படியன்று. நான் சொன்னதை நீ சரியாகத் தெரிந்துகொள்ளவில்லை. நந்தர்களை வென்று, மன்னவனில்லாதிருக்கிற மாகாணாதிபதிகளுக்கும் இந்துகுஷ்மலைத்தொடரிலிருந்து ஸிந்துநதி முகத்துவாரம் வரையில் இருக்கிற பிரதேசங்களுக்கும் உன்னை அரசனாக்கி அரசுபட்டம் கட்ட இவ்விடத்திற்குத் திரும்பிவருவோம்" என்றார்.

———

## அத்தியாயம் 22

## நந்தர்களின் நலிவு

**நா**ற்புறங்களினின்றும் சத்துருக்கள் படையெடுத்து வரப்போகிறார்களெனத் தெரிந்து நந்தர்களும் மிகத் தீவிரமாகவும் அவசரமாகவும் அவர்களை எதிர்ப்பதற்கு வேண்டிய ஸன்னாகங்களைச் செய்தார்கள். அவர்களுடைய சைனியம் 2,00,000 பதாதி, 20,000 குதிரை, 2,000 தேர், 4,000 யானை கொண்டது. இவைகளுக்கெல்லாம் பத்தசாலன் சேனாதிபதியாகத் தலைமை வகித்திருந்தான்; ராக்ஷஸனும் நந்தராஜனும் ராஜகுமாரர்களும் அவனுக்கு வேண்டிய ஆலோசனைகளைச் சொல்லிக்கொண்டு வந்தார்கள். அவனுக்குக் கீழே, யானைப்படையைப் பத்திரபடனும், குதிரைப்படையைப் புருஷதத்தனும், தேர்ப்படையைப் பலகுப்தனும், காலாட்படையைச் சிம்மபலனும், மாட்டுவண்டி முதலான படைபெயர்ச்சி இலாகாவைச் சந்திரபானுவும், உளவறி இலாகாவைப் பாகுராயணனும் நடத்திவந்தார்கள்.

ராக்ஷஸனுக்கும், நந்தர்களுக்கும் பத்தசாலன் மிக வேண்டியவன். ஆனால் போர்த்திறமை இல்லாதவன். அமைதி குடிகொண்டிருக்குங்காலத்தில் அவனுடைய அழகிய அங்கக்கட்டையும், கம்பீரமான மீசையையும், திடுக்கெனப் பேசி அதட்டும் தன்மையையும் பார்த்தால் எல்லாரும் மிகவும் நல்ல அபிப்பிராயப்படுவார்கள். ஆனால், அவன் யுத்தகாலத்திற் சிறிதும் பிரயோஜனப்படமாட்டான். அவனுக்குச் சாமதந்திரமும் தெரியாது, வியூகாசனு

வித்தையும் தெரியாது. உள்ளுக்குள்ளே பார்த்தால் அவ னுக்குத் தீரத்தன்மையும் இல்லை. அதெல்லாம் போகட்டு மென்றாலும், ராக்ஷஸனும் அரசனும் ராஜகுமாரர்களும் அவனிடத்தில் பரம நம்பிக்கை வைத்திருக்க, அவர்களுக் குத் தெரியாமல் அவன் ஆழ்ந்த அயோக்கியனாக இருந் தான்; கைக்கூலிவாங்கும் கள்வனாயிருந்தான். சைனியத் தவர்களைத் திடமாகவும் திறமாகவும் வைத்திருப்பதற்கு அவர்களுக்கு எவ்வளவு போஷணை வேண்டுமென்பதோர் கனிஷ்டநியமம் உண்டல்லவா? தனநந்தன் பொன்னாசை பிடித்தவனென்று தெரிந்து, அவனைத் திருப்திப்படுத்து வதற்காகப் பத்தசாலன் சைனியபோஷணைக்கு வேண்டிய குறைந்த திரவியத்தைக் காட்டிலும் குறைவாகக் கொடுத் தாற் போதுமெனச் சொல்லி அவனுடைய பிரீதிக் காளானவன். அங்ஙனம் குறைவாகக்கொடுத்த திரவியத்தில், ஆயுதாதிகள் உணவுப்பொருள்கள், மற்றமுள்ள சாமக் கிரிகள் ஆகிய இவைகளைச் சேகரித்துக் கொடுக்கும் குத்தகைக்காரர்களிடம் பாதித்தொகை தனக்குத் தரகுப் பணமாக எடுத்துக்கொள்வான். குத்தகைக்காரர்கள் அவன் மீது குறைகூறாமல், அவன் செய்தது போலத் தாங்களும் கீழ் உத்தியோகஸ்தர்களுக்குச் சில்லறைச் சம்மானங்கள் செய்து திருப்திப்படுத்திவிட்டு, உபயோகமற்ற பண்டங் களைத் தருவர்.

இங்ஙனம் பத்தசாலன் நந்தப்படையின் தலைமைவகித் திருந்த ஒன்பது வருஷகாலத்தில் அந்தச் சைனியம் நாளுக்குநாள் போர்த்திறமை குன்றி இழிவுபட்டது. இதன் பயனைக் கலிங்கர், ஆந்திரர் முதலான கப்பங்கட்டும் அரசர் கள் தாங்கள் செலுத்தவேண்டிய கப்பப்பணத்தைச் சரியான காலத்திற் செலுத்தாமல் தாமதப்படுத்தலானார்கள்.

பத்தசாலன் தன்னுடைய அசம்பாவத்தினால் சைனியத்திலுள்ள அதிகாரி ஒவ்வொருவருடைய மனமும் முறிந்துபோமாறும் பண்ணியிருந்தான். சைனியத்தவர்களெல்லாரும் வெறுப்பும் கசப்பும் வாய்ந்தவர்களாய்ப் பத்தசாலன் தோல்வியுறவேண்டுமென்றே விரும்பிக்கொண்டிருந்தார்கள்.

மகதத்தின்மீது பிரமாதமாகப் படையெடுத்து வருகிறார்களென்று கேட்டவுடனே பத்தசாலன் அவசர அவசரமாகத் தன் தலகர்த்தர்களை அழைத்து ஆலோசனை செய்தான். அவன் பேசியதிலிருந்து தோல்வியுறுவோமென அவன் மிகவும் திகில்பட்டுக்கொண்டிருக்கிறானென்று அவர்களுடைய மனத்திற்கு நன்றாகத் தெரிந்தது. ஆனாலும் அவன், படையெடுத்து வருகிறவர்களை அவலீலையாக அடித்துத் துரத்திவிடுவோமென்று வாய்ச்சளுக்குப் பேசிப் பாசாங்கு செய்கிறானெனவும் அவர்கள் தெரிந்துகொண்டார்கள். இனி நிகழத்தக்க பெரும்போரில் புருஷதத்தன், பத்ரபடன், ஸிம்மபாலன், பல்குப்தன், சந்திரபானு, பாகுராயணன் என்னும் இவர்கள் மகதர்களைவிட்டுச் சந்திரகுப்தனோடு சேர்ந்துகொள்ள ஏற்கெனவே தீர்மானித்திருந்தார்கள். நந்தர்களுடைய கொடுமையையும், பக்ஷபாதத்தையும், திறமையின்மையையுங் கண்டு அவர்கள் அலுப்புற்றுப் போயிருந்தார்கள்.

அதற்கு முதல் நாள் இரவில் அவர்களெல்லாருங் கூடிப் பேசியபோது, “மகதத்தின் பேர்கெடாமல் இருக்கவேண்டுமானால், நந்தர்கள் ஒழியவேண்டும்” என்று பத்ரபடன் சொல்லியிருந்தான். பலகுப்தனும் அது சரியேயென ஒப்புக்கொண்டு, “மகதத்திற்கு இதுவரையில் இல்லாத மகத்துவமும் மரியாதையும் சந்திரகுப்தனால் உண்டாகும்”

என்று சொன்னான். படையெடுத்து வருகிற நான்கு சேனைகளும் பாடலிபுரத்திற்கு வருகிற வரையிற் காத்திருந்து, பின்பு அவர்களில் ஒருவனையும் விடாமல் நசுக்கிச் சட்டினியாக்கிவிடுவோம் என்று பத்தசாலனுக்கு ஆலோசனை சொல்லத் தீர்மானித்துக்கொண்டிருந்தார்கள். அவர்களுடைய கருத்து என்னவெனில், மகதராஜ்யத்திலுள்ள ஜனங்களுக்கு அதைரியமும் அதிருப்தியும் உண்டாக்கிவிடவேண்டும்; 'வரும் வழியிலுள்ள பட்டணங்களையெல்லாம் சத்துருக்கள் பிடித்துக்கொண்டே வந்துவிட்டார்களே; இனி நாம் தோற்றுப் போகவேண்டியவர்களேயாவோம்' என்னுமோர் இளக்காரமான மனவீனத்தைச் சைனியத்தவர்களுக்கு உண்டாக்கிவிடவேண்டும் என்பதேயாம்.

ஆதலின், சத்துருக்களை எவ்விடத்தில் எதிர்த்துப் போர் புரியலாமெனப் பத்தசாலன் வினவியவுடனே, "நமக்கோ வெற்றி வாய்ப்பது திண்ணம். ஆதலால், இந்திரப்பிரஸ்தம் முதலான எல்லைப்புறத்துப் பட்டணங்களுக்குப் போய் நாம் சத்துருக்களை எதிர்ப்பது சரியாகாது. ஏனெனில், அவர்கள் தோற்று அங்கிருந்து தப்பியோடிப்போய்த் திரும்பத் தொந்தரவு கொடுத்துக்கொண்டிருப்பார்கள். எதிர்க்காமலே அவர்களை ஆசைகாட்டி, நமது தலைநகரத்திற்கு வரும்படி செய்துவிட்டால், இங்கே வந்தபின் அவர்களை நசுக்கி நண்டல் வண்டலாக்கி, ஒரு பயல்கூட தப்பியோடிப் போகாமல் கொன்றுவிடுவோம். உம்மைப்போன்ற மிக்க திறமை வாய்ந்த சேனாதிபதிக்கு இது வெறும் விளையாட்டுக் காரியமேயாகும்" என்று பத்ரபடன் சொன்னான். மிக்க திறமை வாய்ந்தவனெனத் தன்னைப் புகழ்ந்து பேசியதனால் பத்தசாலன் உள்ளம்பூரித்தானாயினும், மற்றவர்களைப் பார்த்

தும், அவர்களுடைய அபிப்பிராயம் என்னவென வின விஞன். பத்ரபடன் சொல்லியதே சரியென எல்லாரும் அவனுக்குப் பின்பாட்டுப் பாடிஞர்கள். புருஷதத்தன் மாத் திரம், "சத்துருக்களை அடியோடழித்தபின், மேற்கொண்டு நாம் ஆக்கிரமிப்பதற்காக நமது குதிரைப்படையை நிறுத்தி வைத்துக்கொள்வோம்" என்று சேர்த்துச்சொன்னன். இங்ஙனமாக, சேனநாயகர்களின் மந்திராலோசனை ஸபை யில் எல்லாருமாகக் கூடி, 'எல்லைப்புறத்திலுள்ள பட்டணங் களைக் காத்துச் சண்டை செய்யாமல் சத்துருவைக் கபடோ பாயமாகப் பாடலிபுரத்திற்கு வந்து சேரவிட்டு, நமது கோட்டைக்கு வெளிப்புறத்தில் பெரும்போர் விளைத்து ஒரே அடியில் அமுக்கிவிடுவோம்' எனத் தீர்மானித்தார்கள்.

தன் பிரேரணையினலேயே இவ்வளவு யுக்தியான தீர் மானம்செய்யப்பட்டதெனப் பெருமைபாராட்டிக்கொண்டு பத்தசாலன், அன்றைத் தினமே அவசரமாகக் கூடிய மந்திரி களின் சபைக்குப் போய்த் தன்னுடைய நயதந்திரத்தை வெளியிடலாஞன். ராக்ஷஸன் உட்பட எல்லா மந்திரி களும் நக்கரநாஸனும் சகாதலனும் ஜீவஸித்தியும் அங்கே இருந்தார்கள். அரசனும் ராஜகுமாரர்களும் ஸர்வார்த்த ஸித்தியுங்கூட இருந்தார்கள். மிகவும் யுக்தி யுக்தமாகச் செய்யப்பட்ட போர்முறையென்று பத்தசாலன் தன்னு டைய ஆலோசனையை விவரமாக எடுத்துச்சொல்லித் தள கர்த்தர்களெல்லாரும் இதுவே சரியென ஒப்புக்கொண்டார் களெனவும் கூறிஞன். ராக்ஷஸன் திடுக்கிட்டான்; அவனைத் தூக்கி வாரிப்போட்டாற்போலிருந்தது. ஏனெனில், பத்த சாலன் சொன்ன யோசனையானது, கொக்கின் தலையில் வெண்ணெயை வைத்து, 'அது உருகிவிழும்போது கண்ணிற் படும்; கொக்கு கண்ணை மூடிக்கொள்ளும்; அந்தச் சமயத்

தில் அதன் கழுத்தைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு விடலாம்' என்று சொல்வது போல் இருந்ததல்லவா?

"ஹா! என்ன, என்ன! இந்திரப்பிரஸ்தம், ஹஸ்தினபுரம், கன்யாகுப்ஜம், ராதாபுரம், பிரயாகை, காசி, நந்தன்கர், வைசாலி, வர்த்தமானபுரம், ராம்பூர்வம் என்னும் இடங்களையெல்லாம் பாதுகாக்காமல் விட்டுப் போரின்றியே சத்துருவின் கைவசமாகும்படி செய்யவேண்டுமா? வீசியடிக்கும் வீரனை குதிரைப்படைத்தலைமை வாய்ந்த புருஷதத்தனும், யானைப்படைச்சிரேஷ்டனை பத்ரபடன் என்னும் பிரபலனும் இப்படிப்பட்ட ஆலோசனைக்கு ஒப்புக்கொண்டார்களென நான் நம்பவே மாட்டேன்" என்றான் ராக்ஷஸன். இது அவர்கள் சொல்லிய ஆலோசனையென்றும் அதைத் தான் ஏற்றுக்கொண்டதாகவும் சொல்வதனால் தனக்குப் பெருமை குறையும் என்றெண்ணிப் பத்தசாலன், தான் முதல்தரமான ஆலோசனை சொன்னதுபோலவும், அதை அவர்கள் ஏற்றுக்கொண்டதுபோலவும் காட்டுபவனாய், "அவர்கள் இவ்வாலோசனையை ஆதரித்துப் பேசியதன்றி, இதிலுள்ள நயானுகூலங்களையும் எடுத்துக்காட்டினார்கள்" என்று கூறி, தளகர்த்தர்கள் கலந்து பேசியபோது நடந்த வாதானுவாத விவரங்களை எடுத்துரைத்தான்.

அப்போது ஜீவஸித்தி, "இந்த யுக்தியில் குணாம்சமே இல்லையென்று சொல்லமுடியாதென எனக்குத் தோன்றுகின்றது. நம் முழுப்படையையும் இந்திரப்பிரஸ்தத்திற்குக் கொண்டுபோவோமானால், கிழக்கிலிருந்து வரும் காமரூபத்துப் படையெழுச்சியையும், தெற்கிலிருந்து வரும் கலிங்கத்துப் படையெழுச்சியையும், வடக்கிலிருந்து வரும் மஞ்சுப்பட்டணத்துப் படையெழுச்சியையும் எதிர்த்துத்

தாக்கித் தலைநகரைக் காப்பதற்குப் போதிய ஆட்கள் இங்கு இருக்கமாட்டார்கள். நான்கு திக்குகளுக்கு நான்கு படைகளை அனுப்புவோமென்றால், சத்துருவை நாமெல்லோரும் சேர்ந்து எளிதில் வெல்வதுபோல, அங்கங்கே வெல்வதற்குப் போதிய படைப்பலம் இராது. நம்முடைய சத்துருக்கள் நால்வரும் நமது ராஜ்யத்துக்கு நான்கு மூலைகளில் இருக்கிறார்கள். அவர்களெல்லாரும் ஒன்றுகூடும் இடம் இதுவே என்பதை மறவாதீர்கள். ஏனெனில், அவர்கள் நால்வருக்கும் நடுமையத்திலே நாம் இருக்கிறோம். ஆகையால், நம்முடைய சைனியம் முழுதையும் இங்கேயே வைத்திருந்தால், ஒவ்வொரு சத்துருப்படை வரும்போதும் அதை எதிர்த்துப் பொடிப்பொடியாக்கிவிடலாம். அவர்களெல்லாரும் ஒரே காலத்தில் வருவதாயிருந்தாலும், அவர்கள் தனித்தனியே வேறுவேறு கோட்டை வாயில்களிலேயே எதிர்க்கவேண்டியவர்களாவார்கள். வெல்லமுடியாத இந்நகரத்தில் நாம் இருந்துகொண்டு அவர்களைத் தனித்தனியே எதிர்த்துத் தோல்வியுறச் செய்யலாம். இப்படிச் செய்வதனால், மற்றோர் அனுகூலமும் உண்டு. யாதெனின், பாடலிபுரத்து ஜனங்கள் கலகித்தெழாமற் பார்த்துக்கொள்ளலாம். இங்கே இரகசியமாகச் சந்திரகுப்தனைச் சார்ந்திருப்பவர்கள் அநேகர் இருக்கிறார்களென்று நான் கேள்விப்படுகிறேன். அன்றியும், நமது ராஜாங்கத்துக் கஜானா உலகத்திலுள்ள பொக்கிஷசாலைகளுள் பணம் பெருத்தது. அது இந்நகரில் இருக்கின்றது. படையெடுத்து வருகிற நான்கு சைனியங்களின் லக்ஷ்யமும் அதன்மீதே இருக்கும். அப்படிப்பட்ட பொக்கிஷசாலையைக் காப்பின்றிவிட்டுவிட்டு இங்கே படையெடுத்து வருகிற ஒரு காசுக்குக் கதியில்லாதவர்களை எதிர்ப்பதற்காக நாம் போவது நமக்கு நன்றென்று

எனக்குத் தோன்றவில்லை. மற்றும், சத்துருக்களை எதிர்ப்பதற்காக நான்கு சேனைகளை அனுப்புவோமானால், ஒரு கோடி சுவர்ணங்கள் செலவாகும். இங்கேயே இருந்தால் அத்தனையும் மீதியாகும்" என்று சொன்னான். கஜானாவைப்பற்றிச் சொல்லிய வார்த்தையும் செலவுகளைப்பற்றிச் சொல்லிய விவரமும் நந்தர்களின் மனத்தில் நன்றாகப் பதிந்தன; முக்கியமாக தனநந்தனை மிக உறுத்தின.

"பத்தசாலனும் ஜீவஸித்தியும் சொல்கிற ஆலோசனையே சரி. நம் பணத்தை நாம் மீத்துக்கொள்வதே நன்று. படையெடுக்கிறவர்கள் இங்கே வருகிறவரையில் காத்திருந்து, பிறகு அவர்களை ஒருவனையும் விடாமல், கொன்று தள்ளிவிடுவோம்" என்றான் தனநந்தன்.

"அதுவே சரியென நானும் ஒப்புக்கொள்கிறேன்" என்றான் அரசன். மற்ற ஆறு நந்தகுமாரர்களும் ஒப்புக்கொண்டார்கள். ராக்ஷஸனைக் கண்டால் நக்கரநாஸனுக்கும் சகாதலனுக்கும் ஆகாது. அவன்மீது இவர்களுக்கு க்ஷாத்திரம். ஆதலால், அவனுக்கு வயிற்றெரிச்சல் விளைக்கும் பொருட்டு இவர்களும் ஒப்புக்கொண்டார்கள். ராக்ஷஸனுடைய வார்த்தை எடுபடவில்லை. அவன் சார்பாகப் பேசுகிறவர்கள் எவரும் இல்லை. வேறொன்றும் செய்யமுடியாதவனாய் அவன், "சத்துருக்கள் வருகிற வழியிலுள்ள கோட்டைகளைக் காப்பில்லாமல் கைவிடவேண்டாம். அங்குள்ள பட்டாளங்கள் அவைகளைக் காத்துக்கொள்ளும்படியாவது சொல்லவேண்டும்" என அந்தச் சபையினர் ஒப்புக்கொள்ளும்படி செய்தான்.

"அப்படிச் செய்தால் எல்லைப்புறத்து ஜில்லாக்களிலும் பட்டணங்களிலும் உள்ள நம் பிரஜைகள் அவைகளை எதிர்த்துக் காத்துப் போராடினோம் என்று நம்மீது நம்

பிக்கை கொள்வார்கள். சத்துருக்களும் இவ்விடம் வந்து சேருமுன் அங்கங்கே போர்புரிந்து இளைத்துப் பலவீனப் பட்டிருப்பார்கள். இங்கே வரும்போது போரில் இளைப் புறுத நமது சைனியத்தைக் கொண்டு அவர்களை நசுக்கி விடலாம். அங்ஙனமின்றிக் கோட்டைகளைப் பிடிக்காமல் சத்துருக்கள் நேரே இவ்விடத்திற்கு வருவார்களானால், அவர்கள் திரும்பி ஓடமுடியாது. அக்கோட்டைகளிலுள்ள பட்டாளங்கள் அவர்களை மடக்கி நறுக்கிவிடும்" என்று ராக்ஷஸன் சொன்னான்.

"ராக்ஷஸர் சொல்லிய திருத்த ஆலோசனை நிரம்ப நன்றாயிருக்கின்றதாதலால், அது எனக்குச் சர்வ சம்மதம்; அப்படிச் செய்வதனால், நந்தர்களுடைய பிரதிஷ்டைக்கு லோபம் வராது; அதிகச் செலவும் ஆகாது; அபாயத்திற்கு உள்ளாவோமென்னும் பயமுமில்லை" என்று ஜீவஸித்தி கூறினான்.

அதன்மீது பத்தசாலனும், "அந்தத் திருத்தம் நல்லதே. அதன்படியே நாம் செய்யவேண்டும்" என்றான். எல்லாரும் ஒரு மனமாக அதை ஒப்புக்கொண்டார்கள்.

ஆகையால், நந்தர்களுடைய சைனியம் முழுதும் பாடலிபுரத்திலேயே வைக்கப்பட்டது. அதன் கோட்டை மதில் முதலியவைகளை எவ்வளவு பலப்படுத்தலாமோ அவ்வளவும் பலப்படுத்தினார்கள். சத்துருக்கள் வருகிற வழியிலுள்ள கோட்டைக்காவலரான தலைவர்களும் பட்டாளங்களும் தமக்குத் தாமே அவைகளைக் காத்துக்கொள்ளவேண்டுமேயொழிய, தலைமைத்தானத்தி னின்று உதவி எதிர்பார்க்கக்கூடாது எனத் 'தாக்கீது'கள் பறந்தன. அந்தத் 'தாக்கீது'களைப் பார்த்தவுடன், அவர் களுக்கெல்லாம் இடுப்பு ஒடிந்து போயிற்று; மனம் முறிந்து

போயிற்று; நாம் எதிர்க்கவில்லையென்னும் அபவாதத்திற்கு இடமில்லாமல் நாமும் எதிர்த்துக் காத்தோமெனப் பேருக்குப் போராடுவோம் என அவர்கள் தீர்மானித்துக்கொண்டார்கள்.

நந்தர்களுடைய ஆலோசனையையும் தீர்மானத்தையும் ஜீவஸித்தி இரகசியமாகச் சாணக்கியருக்குச் சொல்லியனுப்பிவிட்டான். சந்திரகுப்தனுடைய சேனையும் பர்வதகனுடைய சேனையும் இந்திரப்பிரஸ்தத்திற்கு வந்து சேர்ந்தன. அங்கே யமுனைத்துறையை நந்தர்படை எதுவும் காத்துக்கொண்டிருக்கவில்லை. அப்போது சாணக்கியரை நோக்கிச் சந்திரகுப்தன், “நாம் முன்னால் இந்த வழி வந்தபோது யமுனைக்கரையில் சேனைகள் நிரம்பிக் கர்ஜித்துக்கொண்டிருந்தனவே. அந்தக் காட்சிக்கும் இப்போது கூட்டங் கலைந்த சந்தைக்கடையைப்போல நிர்மானுஷியமாயிருக்கிற இந்தக் காட்சிக்கும் உள்ள வித்தியாசத்தைப் பாருங்கள்!” என்று சொன்னான்.

இவர்களுடைய சைனியம் ஆற்றைக் கடந்து முற்றுகையிடத் தலைப்பட்டவுடனே, அங்கிருந்த படைத்தலைவனும் பட்டாளமும் இவர்களுக்கு இணங்கிக் கையளித்தார்கள். ஹஸ்தினாபுரம், ராதாபுரம், கன்யாகுப்ஜம், பிரயாகை, காசி என்னும் இடங்களிலும் அவ்வண்ணமேயாயிற்று. எவ்விடத்திலும் எந்தக் குடித்தனக்காரரையும் வருத்தக்கூடாது, எவ்வகையிலும் பீடிக்கக்கூடாது, எவருடைய சொந்த சொத்தையும் பறிக்கக்கூடாது என்று சந்திரகுப்தன் தன் ஆட்களெல்லாருக்கும் கண்டிப்பாக உத்தரவு செய்துவிட்டான். படையாட்களுக்காக வாங்கிக்கொண்ட ‘ரஸ்து’ இலாகா சாமான்களுக்குக் காலக்கிரயப்படி விலைகள் கட்டிக் கொடுத்துவிட்டான். இப்படிச் செய்வதில்

போரஸுக்கு இஷ்டமில்லை. அந்த அந்த ஊரார் இவர்களுடைய சேனைக்கு வேண்டிய உணவுப்பொருள்களையாவது சும்மா கொடுக்கும்படி கட்டாயப்படுத்தவேண்டும் என்றான் அவன். சாணக்கியரும் சந்திரகுப்தனும் நல்ல வார்த்தை சொல்லி அவனையும் கிரேக்கர்களையும் மற்றக் கூலிப்படையாட்களையும் வாளா இருக்கச் சொல்லி, "நந்தர்கள் 80 கோடிப் பொன் குவிந்து வைத்திருக்கிறார்கள். அதைப் பறித்து உங்களெல்லாருக்கும் தாராளமாகப் பங்கிட்டுத் திருப்திப்படுத்துகிறோம்" எனச் சமாதானம் செய்தார்கள். நந்தர்களுடைய பொக்கிஷத்தினின்று எடுக்கும் பணத்தை அவ்வாறு செலவிடுவோமெனக் காட்டும் பொருட்டுத் தங்களுக்கு நேர்ந்த செலவுகளுக்கெல்லாம் விவரமாகக் கணக்குவைப்பதுபோலச் சாணக்கியர் ஆடம்பரம் பண்ணினார். "சந்திரகுப்தனுக்கும் அவனுடைய சைனியத்திற்கும் உண்டான செலவுகளை அவன் சொந்தப் பணத்திலிருந்தே கொடுப்பான்" என்று சாணக்கியர் யாவருமறியச் சாற்றினார். ஊரைக் கொள்ளையடிக்கக்கூடாது, எவரையும் இம்சிக்கக்கூடாதென்று படையாட்களைக் கட்டுப்படுத்தியதற்காகச் சந்திரகுப்தனுக்கும் சாணக்கியருக்கும் ஜனங்கள் மிகவும் நன்றி பாராட்டினார்கள். அந்நன்றி, பர்வதகனுக்கும் கூலிப்படையாட்களுக்கும் அவர்கள் காட்டவில்லையென்று சொல்லவும் வேண்டுமோ?

இதற்குள்ளாகக் கலிங்கத்தரசன், சந்திரகுப்தனுடைய மித்திரனாய், மகதத்தின்மீது படையெடுத்து வந்துவிட்டான். அவன் தன் தலைமையில் 60,000 துருப்புக்களையும், சிற்றரசர்களின் தலைமையில் 10,000 சவரர்களையும் கொண்டுவந்திருந்தான். அவன் வர்த்தமானபுரத்தின்மீது தாக்கினான். கத்தியை உருவவேண்டிய அவசியமின்றியே

அங்குக் காத்துக்கொண்டிருந்த அற்பப்பட்டாளம் அடி பணிந்தது. கலிங்கத்தரசன் அங்கிருந்து பாடலிபுரத்திற்குப் போனான். மற்றோர் மித்திரனாகக் காமரூபத்தரசன் கிழக்கேயிருந்து படையெடுத்துவந்தான். அவன் 50,000 ஆட்களோடு வைசாலிக்கு வந்து, அதைப் பிடித்துக் கொண்டு பாடலிபுரத்திற்குப் போனான். நேபாளத்திலுள்ள மஞ்சுபட்டணத்திற்கும் கர்த்திரிபுரத்திற்கும் அரசனாயிருப்பவன் 40,000 நேபாளப்படையோடு பாய்ந்திறங்கினான். மேலுக்கு அவன் சந்திரகுப்தனுக்குத் துணைசெய்வது போலக் காட்டிக்கொண்டானே யொழிய உண்மையில், நந்தர்களுடைய கோடிக்கணக்கான பொன்னிற் பங்கு கொள்ளவேண்டுமெனவே வந்தான். அவன் நந்தன்கர் என்பதையும் ராமபூர்வாவையும் பிடித்துக்கொண்டு பாடலி புரத்திற்குப் போனான்.

சந்திரகுப்தன் முதலாயினோர் ஒத்துப்பேசிக்கொண்டபடி எல்லாச் சேனைகளும் ஒரு பௌர்ணமி திங்கட்கிழமை நடுராத்திரியில் பாடலிபுரத்திற்கு வந்துசேர்ந்தன. அந்த நகரத்தை எல்லாப்புறங்களிலும் அவர்கள் முற்றுகை இட்டார்கள். சாணக்கியர், போரஸ், வைரோசகன், பாரஸிகர்கள், கிரேக்கர்கள் ஆகிய இவர்கள் வடதிசையில் நகரத்தைத் தாக்கினார்கள்; மஞ்சுபட்டண-கர்த்திரிபுரத்து அரசனும் காமரூபத்தரசனும் கீழ்த்திசையில் தாக்கினார்கள். சந்திரகுப்தனும் கலிங்கர்களும் தென்றிசையில் தாக்கினார்கள்; பால்ஹிகர்களும் கிராதர்களும் மேற்றிசையில் தாக்கினார்கள்.

இந்தியாவிலுள்ள சோதிட சாஸ்திரிகளுள் பிரபலம் மிகுந்தவனென்றும் நந்தர்களிடத்தும் ராக்ஷஸனிடத்தும் பிராணபொஞ்சை வைத்துள்ள பெருந்துறவி யென்றும்

பிரவிசித்திபெற்ற ஜீவஸித்தி, அந்தத் திங்கட்கிழமை சாயங்காலமே பத்தசாலனையும் மற்றுமுள்ள தளகர்த்தர்களை யும் படைத்தலைவர்களையும் தனித்தனியே இரகசியமாகப் போய்ப் பார்த்து, பாடலிபுரத்துக் கோட்டைவாசல்களுக்கு வெளியே மறுநாட்காலையில் மகாயுத்தமொன்று நடக்கப் போகிறது; அன்றைத்தினம் பிரதமை திதி; அங்காரக னுடைய வாரம்; அது நந்தர்களுக்கும் அவனைச் சார்ந்து ஆதரிப்பவர்களுக்கும் மிக அசுபமான தினம்; இவர்கள் கோரமான தோல்வியுறுவது திண்ணம் என்று சொல்லி வைத்தான். தளகர்த்தர்களும் படைத்தலைவர்களும் ஏக்கம் பிடித்துத் தங்கள் கதி என்னவாகுமென அவனைக் கேட் டார்கள். அதற்கு அவன், "நீங்கள் என்ன செய்யமுடியும்? விதியை வெல்வதற்கு யாரால் இயலும்? ஆனால், நான் ஜோஸியம் பார்த்ததில் நீ உயிரோடு தப்புவாயென்று தெரிகிறது" என்று ஒவ்வொருவருக்கும் சொன்னான். இங்ஙனம் ஜீவஸித்தி கண்டு பேசியவன் ஒவ்வொருவனும், "நாளைக்குப் பெரும்போர் நடக்கப்போகிறது, அதில் நந்தர் களுக்கு நிச்சயமாகத் தோல்வியே வாய்க்கும்; ஆனால், நாம் மாத்திரம் தப்பியோடி உயிர்காத்துக் கொள்வோ மென விதி விதித்திருக்கிறது' என உறுதியாக நம்பினான்.

மறுநாட்காலையில் நந்தர்களும் ராக்ஷஸனும் வடக்கு வாசல் வழியாகவும் தெற்குவாசல் வழியாகவும் வெளியே பாய்ந்து முறையே சாணக்கியரையும் சந்திரகுப்தனை யும் அடிப்பதென உத்தேசித்தார்கள். மேற்குவாசலி லும் கிழக்குவாசலிலும் உள்ள துருப்புக்கள் இழிமக்க ளெனவும், எதிரியென மதித்துச் சண்டை செய்யத்தக்க வர்களல்லரெனவும் ராக்ஷஸன் அவர்களைப் பொருட்படுத்த வில்லை.

தெற்குவாசல் யமனுக்குரிய திக்கானதனால், அதன் வழியாக வெளியேபோவது அசுபமாதலின் வடக்குவாயில் வழியாகப் போகவேண்டுமென்ற ஜீவஸித்தி சொல்லிய தனால், நந்தராஜனும் தம்பிகளும் அங்ஙனமே செய்யத் தீர்மானித்தார்கள். சுகல்பன், அவன் தம்பிமார் எழுவர், பாண்டுகதி, பூதபாலன், ராஷ்டிரபாலன், கோவிஷணகன், தாஸஸித்தன், கைவர்த்தகன், தனநந்தன் ஆகிய இவர்கள் சிறந்த குதிரைகள் பூட்டிய திவ்வியமான பொற்றேர்களில் ஆரோகணித்து வடக்குவாயிலின் வழியே வெளிப்போந் தார்கள். அவர்களையடுத்து 1,000 வேறு தேர்களும், 2,000 யானைகளும், 15,000 குதிரைகளும், 1,00,000 காலாட்களும் போனார்கள். இந்தப் படைகளுக்கு முறையே பலகுப்தனும் பத்ரபடனும் புருஷதத்தனும் ஸிம்மபலனும் தலைமை வகித்திருந்தார்கள். இவர்களெல்லாருக்கும் பத்த சாலன் பெரிய சேனாதிபதியாக இருந்தான். சாணக்கியர் சொல்லிக்கொடுத்தபடி, யானைப்படை வந்து பாய்ந்தவுடனே போரஸும் கிரேக்கர்களும் அதற்குப் பயந்து பின்னிடுவது போல ஓடிப் பாசாங்கு செய்தார்கள். அரசனும் அவன் தம்பிமார் எழுவரும், சண்டையில் ஜயித்துவிட்டோமென நினைத்து, தங்கள் இரதங்களை விரைவாக ஓட்டிக்கொண்டு, பின்னிட்டோடும் சத்துருக்களைத் தொடர்ந்துபோனார்கள். அவர்கள் தங்கள் சைனியத்தைப் பின்னே விட்டு வெகு தூரம் சத்துருக்களைத் தொடர்ந்துபோனார்கள். அங் ஙனம் போனமையின், சத்துருக்களின் சேனையின் நடுவில் அகப்பட்டுக்கொண்டார்கள். அவர்களைச் சுற்றிச் சூழ்ந்து கொள்ளும்படி சாணக்கியர் தம் படைகளுக்குக் கட்டளை யிட்டு, 2,00 மாளவ ரதங்களோடு அந்த வட்டத்தை அடைத்துக்கொண்டார். அத்தருணத்தில், மகதர்க

ளுடைய இரதங்களும் பரிகளும் யானைகளும் பதாதிகளும் பின்னிட்டோடுவதைக் கண்டு ராஜகுமாரர்கள் திடுக்கிட்டார்கள். ராஜகுமாரர்கள் சத்துருக்களின் வலையில் சிக்கிக்கொண்டார்கள். இனிப் போர்புரிவதிற் பயனில்லையென்று விளம்பரப்படுத்திப் பத்ரபடன், புருஷதத்தன், பலகுப்தன், லிம்பபலன் ஆகிய இவர்கள் பின்னடைந்து ஓடினார்கள். பத்தசாலனும், தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும்பொருட்டுக் கோழையான நீசபுத்தியோடு அவர்கள் சொல்லியதற்கு இசைந்தான்.

சாணக்கியரும் போரஸும் மலையகேதுவும் அவர்களுடைய படைகளும் தங்களைச் சூழ்ந்துகொண்டார்களெனக் கண்டு ராஜகுமாரர்கள் தங்கள் இரதங்களினின்றும் இழிந்து, கத்தியைக் கைக்கொண்டு தீரமாகச் சண்டை செய்தார்கள். ஆனால், அவர்களுடைய தீரமும் வீரமும் பயன்படவில்லை. சத்துருக்கள் வளைத்து அவர்களைக் கொன்றுவிட்டார்கள். அவர்கள் மரித்தார்களென்னும் செய்தியைக்கேட்டவுடனே அவர்களுடைய சேனை முழுதும் குலைந்து சிதறி நகரத்திற்குள் ஓடிப்போயிற்று. நகரத்திற்குள்ளிருந்த பிராமணர்களும் நந்தர்களின்மீது அருவருப்பாயிருந்தவர்களும் கலகம் விளைத்துக் கிளம்பி அவர்களுடைய துருப்புக்களிற் பலரை நறுக்கினார்கள்.

சந்திரகுப்தனையும் கலிங்கர்களையும் எதிர்த்துப் போர் புரிவதற்காக ராக்ஷஸன் 1,00,000 பதாதி, 1,000 இரதம், 5,000 பரி, 2,000 யானைகளுடன் தெற்குவாசல் வழியே போயிருந்தான். அங்கே கடும்போர் நிகழ்ந்தது. அது நடந்துகொண்டிருக்கையில் 'வடக்கு வாசலுக்கப்பால் அரசனும் ராஜகுமாரர்களும் கொல்லுண்டனர், அவர்களுடைய சைனியம் சிதறிச் சின்னபின்னமாய் ஓடிப்

போயிற்று' என்னும் வர்த்தமானத்தை ராக்ஷஸன் கேள்விப்பட்டான். துக்காக்கிரந்தனுய் அவன் போர்க்களத்தை விட்டு நீங்கி, வடக்குவாசலின் வழியே நுழைந்து தன் யஜமானர்களின் பிணங்களைக் கண்ணுற் காணும்பொருட்டு ஒரு சிறு குதிரைப்படையுடன் நகரத்திற்குள் ஓடினன். அவன் அங்ஙனம் நகர்ந்தவுடனே, தலைவனில்லாத அவனது தானை மனம் முறிந்து குலைந்து நகரத்திற்குள் ஓடலாயிற்று. அங்ஙனம் ஓடிக்கொண்டிருந்தவர்களைப் பின் தொடர்ந்து சந்திரகுப்தன் அநேக ஆயிரவர்களைச் சங்கரித்தான்; ஊருக்குள் கலகித்து எழுந்திருந்த குடிகள் பீதியான படைச்சனத்தில் நூற்றக்கணக்கானவர்களைக் கொன்றார்கள்.

ராக்ஷஸன் வந்தவுடனே, அரசனும் ராஜகுமாரர்களும் வெட்டுண்டுகிடக்கும் பிரேதக்கோலத்தைப் பார்ப்பதற்குச் சாணக்கியர் அனுமதிகொடுத்து, அவர்களுக்கு ராஜாங்கமாக அபரக்கிரியைகளை நடத்தும்படி சொன்னார். அவர்களுடைய தலைவிதியை நினைந்து ராக்ஷஸன் கதறியழுது, அந்தக் களேபரங்களை நகரத்திற்குள் கொண்டு போய், ஸர்வார்த்தஸித்திக்குக் காட்டி, ராஜவைபவமாகப் பலவகைச் சிறப்புக்களுடன் தகனம் செய்வித்தான். ஸர்வார்த்தஸித்தி மனமிடிந்தவன்போலப் பாசாங்கு செய்தான்; முன்னினும் அதிகமாகப் பரலோகசிந்தை மேலிட்ட துறவியெனக் காட்டிக்கொண்டான். குலைந்துபோன நந்தப்படையின் தலைமை மேற்கொண்டு சண்டைசெய்யும்படி ராக்ஷஸன் அவனைப் பலவாறு வேண்டிக்கொண்டான். என்ன சொல்லியும் அவன் இணங்கவில்லை. ஸர்வார்த்தஸித்தி ஊக்கங்குன்றி உற்சாகமற்று, எதனிலும் பற்றிழந்தவனானன். சந்திரகுப்தனும் சாணக்கியரும் போரஸனும்

அவர்களின் மித்திரப்படைகளும் பாடலிபுரத்தைப் பல மாகச் சூழ்ந்துகொண்டார்கள். ராஜபக்தியுள்ள குடிகள் ஊருக்கு வெளியில் எவ்விதமான போக்குவரவும் வியவகாரமும் வைத்துக்கொள்ள முடியாதாயிற்று. வர்த்தக வியாபாரங்கள் பாழாய்ப்போயின. ஊராருக்குக் கோட்டை மதிலுக்கப்பாலுள்ள சொத்துக்களெல்லாம் சூறையாடப் பெற்றன. ஆகையால், அவர்கள் ராக்ஷஸனையும் ஸர்வார்த்த ஸித்தியையும் நோக்கி, "படையெடுத்துவந்துள்ள சத்துருக்களைத் தோற்கடித்து, ஊருக்குள் கிளம்பியிருக்கிற கலகக் காரர்களை அடக்கி, எங்களைக் காப்பாற்றுங்கள்; அல்லது, சந்திரகுப்தனுக்கும் போரஸுக்கும் நகரத்தை ஒப்படைத்து விடுங்கள்" என வேண்டிக்கொண்டார்கள். கடைசியில், நகரத்தை ஒப்படைத்துவிட ராக்ஷஸன் மனமிசைந்தான்; ஒப்படைக்கச் சித்தமாயிருக்கிறேனெனச் சந்திரகுப்தனுக்கும் சாணக்கியருக்கும் போரஸுக்கும் சொல்லியனுப்பினன். ஸர்வார்த்தஸித்தி காவியாடை தரித்துத் தபோவனத்திற்குப் போனன். அவனைப் பின்பற்றி ராக்ஷஸனும் சென்றான். அப்போது ராக்ஷஸனுடைய மூளையில் பலபல வகையான ஆலோசனைகளும், யுக்திகளும், சதிச்சூழ்ச்சிகளும் குடிகொண்டு குழப்பிக்கொண்டிருந்தன.

நகரத்து அஜாரவாசல்கள் திறக்கப்பெற்றன. சாணக்கியரும் சந்திரகுப்தனும் போரஸும் தங்கள் சைனியங்களுடன் நகரப்பிரவேசம் செய்தார்கள். 'ஸுகங்கா' மாளிகைக்குச் சுபக்கோலமாகக் கிருஹப்பிரவேசம் செய்யுமுன் தாற்காலிகமாகப் போரஸும் சந்திரகுப்தனும் தங்கியிருப்பதற்குப் பெரிய மாடமொன்றைச் சாணக்கியர் தேர்ந்தெடுத்தார். அவரும் அவருடைய எண்ணிறந்த ஒற்றர்களும் மாற்றலர் செய்யத்தக்க வஞ்சக வியவகாரங்களைக்

கண்டுபிடித்துக் கண்டிக்கும்பொருட்டுக் கண்ணுங் கருத்து மாய் விழிப்புற்றிருந்தார்கள். சந்திரகுப்தனைக் கொல்வதற்கு ராக்ஷஸனும், போரஸனும், வைரோசகனும், மலையகேதுவும் சூழ்ச்சி செய்வார்களென்று அவர்கள் அனுமானங் கொண்டிருந்தார்கள். அதுவல்லாமல், அவர்களையும் ஸ்வார்த்த ஸித்தியையும் ஒழிப்பதற்குத் தாங்கள் செய்துள்ள கபடோபாயங்களை நிறைவேற்றுவதற்குத் தக்க தருணம் எதுவெனவும் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அந்த மாளிகையிற் சந்திரகுப்தனை ஒரு பாரிசத்திலும், போரஸை மற்றொரு பாரிசத்திலும் தங்கியிருக்க வைத்துச் சாணக்கியர், "நந்தர்களை ஒழித்துவிட்டேன். இனி நான் செய்யத் தக்க காரியம், உனக்கு மகுடஞ் சூட்டித் தராபதியாக்க வேண்டியதே" என்று சந்திரகுப்தனுக்கு அந்தரங்கமாகச் சொன்னார்.

---

## அத்தியாயம் 23

## சந்திரகுப்தனுக்கு முடிசூட்டல்

பாடலிபுரத்துச் சண்டையில் நந்தராஜகுமாரர்கள் தோல்வியுற்று மடிந்தனர். நந்தவமிசத்தில் ஸர்வார்த்தஸித்தி என்பவனைத் தவிர மற்றவர்களெல்லாரும் அழிந்துபோனார்கள். இதனால், மிகவும் சிக்கலான நிலைமை ஏற்பட்டது. இந்தச் சிக்கல்களையெல்லாம் விடுவித்துக் குழப்பங்களைத் தவிர்த்துச் சந்திரகுப்தனைச் சாணக்கியர் அரசனாக்கவேண்டியிருந்தது. அவருக்கு இயற்கையாயுள்ள பொறுமை, எச்சரிக்கை, பரிஷ்காரபுத்தி என்னும் இத்தன்மைகளோடு அவர் அந்தக் காரியத்தைச் சாதிக்கத் தலைப்பட்டார். போரஸுக்கு வாக்களித்திருந்தபடி அவனுக்குப் பாதி ராஜ்யம் கொடுக்க அவருக்கு மனமில்லை; உண்மையில், அவனுக்கு ஒன்றுமே கொடுக்க இஷ்டமில்லை. இப்போது போரஸ் பர்வதேசுவரனென்னும் பெயரோடு வியவகரிப்பதன்றிச் ‘சார்வபௌமன்’ என்றும் ‘சக்கரவர்த்தி’ என்றும் சொல்லிக்கொள்ளலானான். அவனுக்குக் கட்குடியும் ஜம்பமும் படாடோபமும் அதிகமாயின. ஒரு பக்கத்தில் போரஸையும் வைரோசகனையும், மலயகேதுவையும், அவர்களுடைய பிரபலமான சைனியத்தையும் ஒழிக்கவேண்டும்; மற்றொரு பக்கத்தில் ராக்ஷஸனையும் ஸர்வார்த்தஸித்தியையும் ஒழிக்கவேண்டும். இவை இரண்டும் எளிதிற் சாதிக்கக்கூடிய காரியங்களல்ல; விளையாட்டுமல்ல. பாடலிபுரத்துக் குடிகளிற் பெரும்பாலார் ராக்ஷஸ

விடத்தில் மிக்க அபிமானம் உள்ளவர்கள். அவர்களை ஒரே அடியில் திருப்பமுடியாது. கலிங்கம், காமரூபம், மந்த பட்டணம் முதலான தேசங்களின் அதிபதிகளுக்கும் வழி சொல்ல வேண்டும். ஆகையால், சாணக்கியர் காலத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தார்; கூடுமாயின், தம் காரியத்தை நிறைவேற்றுவதற்குத் தாமே நேர்படாமல், அந்தப் பல்வகையான பகைவர்களும் தாமாகவே முன்வந்து வழி விடட்டுமென விரும்பிக்கொண்டிருந்தார்.

ஸர்வார்த்தஸித்தியை அரசனாக்கவேண்டுமென்பது ராக்ஷஸனது முதற்கருத்து. ஆனால், அந்தப் பதவியை வகிப்பதற்குப் போதிய பலம் அவனுக்கு இல்லை; ஸாஹஸ புத்தியும் இல்லை; பரலோக சிந்தையே அதிகமாயிருந்தது. எவளேனும் ஒருத்தியை விவாகம் செய்துகொண்டு அவன் ஒரு பிள்ளையைப் பெறுவானாயின், அவனைச் சந்திரகுப்தனுக்கு எதிராகப் பட்டத்திற்குரிய சரியான வாரிசென நிறுத்தலாமென்று பார்த்தான். ஆனால், அவனுடைய ஆலோசனைப்படி செய்ய ஸர்வார்த்தஸித்திக்கு வயதும் இல்லை; பிரதாப நோக்கமும் இல்லை; அதிக ஆசையும் இல்லை.

“மணம்புரிந்து கொள்வதற்கேனும், போர்புரிவதற்கேனும் எனக்கு மனமில்லை. சிங்காதனம் எனக்கு வேண்டாம். சந்திரகுப்தனேனும் பர்வதேசுவரனேனும் வேண்டுமானால் அதைக் கைக்கொள்ளட்டும். என்னைச் சும்மா விட்டாற் போதும்” என்று ஸர்வார்த்தஸித்தி சொன்னான். ஆகலின், அவனை ஒரு வனத்தில் வசிக்கவைத்து, அவன் பெயரைக்கொண்டு சந்திரகுப்தனைக் கொல்வதற்கு ராக்ஷஸன் பிரயத்தனப்பட்டான். மகதமன்னர்களின் பரம்பரையில் சந்திரகுப்தன் தோன்றியிருப்பதனால், தானும்

பார்ப்பாரைப் பிரதான மந்திரியாக இருக்க விரும்புவதாகவும் பர்வதேசுவரனிடம் இருக்கப் பிரியமில்லையென்றும், அவனுக்குப் பாதி ராஜ்யம் கொடுப்பதில் தனக்குச் சம்மதமில்லையென்றும் சந்திரகுப்தனிடம் போய் இரகசியமாகச் சொன்னான். அதைப்பற்றிச் சந்திரகுப்தன் சாணக்கியரோடு ஆலோசித்து, அவருடைய சம்மதத்தின்மீது ராக்ஷஸனைத் தன் பிரதான மந்திரியாக்கினான்.

ஒருநாள் ராக்ஷஸன் விஷமிட்ட இலந்தைப் பழமொன்றைச் சந்திரகுப்தனுக்கு அனுப்பினான். பிறரை விஷமிட்டு வதைப்பாரென்று அனுமானிப்பதற்கு ஆஸ்பதமில்லாத ஸர்வார்த்தஸித்தி, அதைப் பிரசாதமாக அனுப்பினானெனப் பொய் சொன்னான். ஸித்தார்த்தகன் மூலமாக இந்த மோசடியைச் சாணக்கியர் தெரிந்துகொண்டு, அது வந்து கொண்டிருக்கும் வழியிலே அதற்குப் பதிலாக வேறு நல்ல இலந்தைப்பழமொன்றை வைத்துவிட்டார். அது வந்தவுடன் ராக்ஷஸனுடைய முன்னிலையில் சந்திரகுப்தனுக்குக் கொடுத்துத் தின்னச் சொன்னார். ராக்ஷஸன் அனுப்பிய விஷமிட்ட பழத்தை, அவன் ஸர்வார்த்தஸித்திக்குத் தேவதாப்பிரசாதமனுப்பியதாக, அனுப்பிவிட்டார். அதைத் தின்று ஸர்வார்த்தஸித்தி உடனே மரித்தான். சந்திரகுப்தனோ, தனக்கு வந்த பழத்தைத் தின்று எப்போதும் போல ஆரோக்கியமாக இருந்தான். அதைக் கண்டு ராக்ஷஸன் அதிசயித்திருந்தான். சிறிது நேரத்திற்குள் தூதனொருவன் ஓடிவந்து, ஏதோ இலந்தைப்பழத்தைத் தின்று ஸர்வார்த்தஸித்தி இறந்துபோனானெனச் சாவோலை சாற்றினான். தந்திரமாக இலந்தைப்பழம் மாற்றிக் கொடுக்கப்பட்டதை நினைந்து ராக்ஷஸன் துக்கம்மூண்டு பாழ்பட்ட

வனைப் போல் ஆனன். தான் இட்ட விஷம் தனக்கே தீம் பாயிற்றே எனப் பிரலாபித்தான்.

பின்பு அவன் போரஸோடு சேர்ந்து கிருத்திரிமம் பண்ணத்தொடங்கினன். சந்திரகுப்தனைக் கொலை செய்வதற்குத் தன்னோடு கலந்து சதிசெய்தால் அவனை மகத நாட்டின் அரசனாக்குவதாக அவனுக்கு வாக்களித்தான். மகதத்தரசனாவதற்கு அந்தப் போரஸ் ஆசைகொண்டு இசைந்தானேயொழிய, "சந்திரகுப்தனைக் கொலை செய்வதற்கு உடன்படேன்" என்றான்.

"அவன் என் சகோதரியின் மாப்பிள்ளை. என் விருந்தினனாகவும் இருந்தான். அவனுக்குப் பட்டங்கட்டாமல் ஏமாற்றித் தப்பித்துவிடலாமே, கொல்வானேன்?" என்று போரஸ் வினவினன். அது சரியெனத் திருப்திப்பட்டவன் போல ராக்ஷஸன் பாசாங்கு செய்து, போரஸுக்குச் சொல்லாமலே சந்திரகுப்தனைக் கொல்ல நிச்சயித்தான். பட்டத்துக்கு வரும் அரசருக்குப் பணிப்பெண்ணாக அழகிய மாது ஒருத்தியை அளிப்பது தொன்று தொட்டு வரும் வழக்கம். அவ்விதமாகச் சந்திரகுப்தனுக்கு அளிப்பதற்குச் சுதந்திரம் மிகுந்த ஸ்திரீ ஒருத்தியை ஜீவஸித்தி மூலமாக அவன் சம்பாதித்தான். அவளுடைய லாவண்யத்தைக் கண்டு மயங்கி மோகியாத புருஷனே உலகத்தில் இருக்கமாட்டான். "அவளுடைய உடம்பு முழுவதும் விஷமயமாகச் செய்யப்பட்டிருக்கின்றது; அவளைத் தொட்டவன் உடனே பட்டுப்போவான்' என்று ராக்ஷஸனுக்கு ஜீவஸித்தி உறுதி கூறினன். ஒன்று தப்பினாலும் மற்றொன்று இருக்கட்டுமென்று ராக்ஷஸன், சந்திரகுப்தனுக்கு மதுபானம் முதலியன கொடுக்கும்போது, அவனுக்குத் தெரியாமல், அதிற் கலப்பதற்காகக் காலகூட

விஷப்பொடியொன்றை ஜீவஸித்தியைக் கேட்டு வாங்கி, மோகினிபோன்ற அம்மாதினிடம் கொடுத்துவைத்தான். பிறகு அச்சுந்தராங்கியைச் சந்திரகுப்தனும், போரஸனும் இறங்கியிருந்த அரண்மனைக்கு அழைத்துக்கொண்டு போனான். தன் உறவினனும் நண்பனுமான சந்திரகுப்தனைக் கொலை செய்வதற்கு விரும்பாமையாற் போரஸ், சந்திரகுப்தனுக்கேனும் சாணக்கியருக்கேனும் உளவறிவித்துவிடுவானோ என அஞ்சி ராக்ஷஸன் இவ்விஷயத்தைப்பற்றி அவனுக்கு ஒன்றுமே சொல்லவில்லை.

அவனது துரதிருஷ்டவசமாக ஜீவஸித்தி இந்த விஷயங்களையெல்லாம் சாணக்கியருக்கு அறிவித்துவிட்டான். ராக்ஷஸன் அவ்வரண்மனைக்குப் போனபோது சந்திரகுப்தனும் போரஸனும் இரண்டு சிம்மாசனங்களில் அமர்ந்திருந்தார்கள். சாணக்கியரும் ராஜசேனனும் அருகில் இருந்தார்கள். உயர்தரமான கிரேக்கச் சாராயங்களைப் போரஸ் எப்போதும் நிரம்பக் கைபோடு வைத்திருப்பான். அவைகளை அளவுக்கு மிஞ்சிக் குடித்துப் போரஸ் மதம்பிடித்திருந்தான்; சந்திரகுப்தனும் சாணக்கியரும் சேர்ந்து அவனை முகஸ்துதி செய்து தூபம்போட்டு இன்பமூட்டியிருந்தமையின், அவன் குசாற் குணமுங் கோலமுங் கொண்டிருந்தான். சந்திரகுப்தனிடம் தன் சொந்தமாகிய மலயகேதுவினிடம் போலவே தான் அன்பு வைத்திருப்பதாகவும், சந்திரகுப்தன் வாய் திறந்து கேட்டமாத்திரத்தில், தன் சக்தியிலுள்ளதெதையும் அவனுக்குக் கொடுத்துவிடச் சித்தமாக இருப்பதாகவும் போரஸ் உரத்துக் கூவி அட்டகாசம் பண்ணிக்கொண்டிருந்தான். ராக்ஷஸன் அந்த மோகனாங்கியைக் கொண்டு வந்து சந்திரகுப்தனுக்குக் காணிக்கையாக அளித்த

போது, அவளைப் போரஸ் அகமகிழ்ச்சியோடும் ஆசையோடும் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். போரஸ் கேளாதிருக்கையிலேயே அவனுக்கு அந்த மதனசுந்தரியைக் கொடுத்துவிடும்படிச் சந்திரகுப்தனிடம் சாணக்கியர் சொன்னார். கேட்டதெல்லாம் கொடுப்பேனென்று போரஸ் பெருமை பேசியதற்குத் தான் சிறிதும் பின்னடையவில்லையெனச் சந்திரகுப்தன் காட்டவேண்டுமென்று சாணக்கியர் இங்ஙனம் மறு சுரை பாய்ச்சினார்.

தடைசொல்லாமற் சந்தோஷமாகச் சந்திரகுப்தன் அவளைப் போரஸுக்கு அளித்தான். உடனே மற்றவர்களிடம் விடைபெற்றுப் போரஸ் சாணக்கியருக்கும் சந்திரகுப்தனுக்கும் நன்றி மிகுதியாற் குளறிக் குளறி வந்தனம் சொல்லிவிட்டு, அவளை அழைத்துக்கொண்டு தன் பள்ளியறைக்குப் போனான். தான் செய்த கொலைச் சதி வழிமாறித் திரும்பி விபரீதமானதைக் கண்டு ராக்ஷஸன் அதை மாற்றமுடியாதவனாய்த் தவித்தான்.

அவ்விஷமாதுடன் கூடப்போகிறவன் யமனுடனே செல்லுகிறானென்னும் யதார்த்தத்தைச் சாணக்கியர் எதிரிலும் சந்திரகுப்தன் எதிரிலும், போரஸுக்கு அவனால் சொல்லமுடியவில்லை. ஊக்கமழிந்து துக்கம்மூண்டு முகத்தைத் தொங்கவிட்டுக்கொண்டு ராக்ஷஸன் விடைபெற்று வீட்டுக்குச் சென்றான். அங்ஙனம் அவன் விடைபெற்றுக் கொள்ளுமுன், சாணக்கியர் அவனைப் பலவந்தமாக உட்கார வைத்து, ஒரு மணி நேரம் வம்பும் தும்பும் வேடிக்கையுமாகப் பேச்சுக் கொடுத்தார். அவ்விஷமாதின் வேலை சரிவர நிறைவேறாமல் அவன் தடுக்காதிருக்கும்பொருட்டுச் சாணக்கியர் அங்ஙனம் அவனை அத்தனை நேரம் தம்மருகிலேயே இருத்தி வைத்துக்கொண்டார்.

மறுநாட்காலையில் போரஸ் செத்துக்கிடந்தான். விஷமாது ஓடிப்போயிருந்தாள். போரஸின் அனுசரர்களுக்கு அசாத்தியமான திகில் பிடித்தது. விஷமாது ஒருத்தியைப் போரஸுக்கு ராக்ஷஸன் கொண்டுவந்துவிட்டு அவள் மூலமாகப் போரஸைக் கொலைசெய்து விட்டானென யாவருமறியச் சாணக்கியர் சாற்றிவிட்டார். தன்னுடைய ஆலோசனைகளுக்குப் பெரிய விரோதி அவனேயென்று ராக்ஷஸன் அவனை அங்ஙனம் கொல்லுவித்தான் என வெளிப்படையாகக் கூறினர். ராக்ஷஸனுக்குப் பயம் பிடித்தது. போரஸுக்குத் தெரியாமல் சந்திரகுப்தனைக் கொல்லவேண்டுமென்று நினைத்து அவன் செய்தானுயினும், விஷமாதை அனுப்பியவன் அவனேயாதலின், அவனுக்கு மனச்சாக்ஷி உறுத்தியது; மூளை கலங்கிப் போயிற்று; திகில்கொண்டு அவன் பாடலிபுரத்தை விட்டே ஓடிப் போனுன். போகுமுன் தன் ஆப்த நண்பனுன சந்தனதாசன் என்னும் பெரிய வைரவியாபாரியின் வீட்டில் தன் மனைவியையும் மகனையும் விட்டுப் போனுன். அவன் ஓடிப்போனது சாணக்கியரின் ஒற்றர்களுக்குத் தெரியுமாயினும், அவர்கள் தடுக்காதிருந்தனர். ஏனெனில், ராக்ஷஸனைப் பிடித்துத் தண்டித்தால் பெருஞ் சிக்கலான விஷயங்கள் பல முளைக்கும். பாடலிபுரத்து ஜனங்களுக்கு மிக்க அதிருப்தி உண்டாகும். அவனை ஓடிப்போக விடுவதனுல் நந்தர்களிடத்தில் அபிமான முள்ளவர்களைப் புத்திசாலித்தனமாகவும் தைரியமாகவும் நடத்தக்கூடிய தலைவன் இல்லாமற்போகும்; சாணக்கியர் தமது எண்ணப்படி காரியஸித்தியடைவதற்கு எதிரியொருவன் இல்லாமல் தாராளமாக வியவகரிப்பதற்கும் ஆகும்.

ராக்ஷஸனோடு சேர்ந்து சந்திரகுப்தனுக்கு விரோதமாகப் போரஸும் வைரோசகனும் சதி செய்ததனால், அவர்கள் இருவரையும் கொல்லச் சாணக்கியர் சங்கற்பித்திருந்தார். மலயகேதுவையும் ஒழித்துவிடவேண்டுமெனத் தீர்மானித்திருந்தார். இப்போது போரஸ் ஒழிந்தான். மற்ற இருவரும் இருந்தார்கள். அவ்விருவருள் வைரோசகன் சூதுவாது வாய்ந்த கெட்டிக்காரன். யுக்த வயது வந்தவன். மலயகேதுவோ, உலகானுபவமும் திறமையும் இல்லாத இளைஞன். ஆதலின், வைரோசகனையே முதலில் கவனிக்கவேண்டும். ராக்ஷஸனுக்கு எவ்விதமான தொந்தரவும் இல்லாமல், அவனைத் தப்பியோடவிட்டுச் சாணக்கியர், கோபாவேசங்கொண்ட போரவரின் துருப்புக்களுடன் ராக்ஷஸனுடைய வீட்டுக்குப் போய், அதனைச் சூழ்ந்துகொண்டார். வீட்டில் எவருமே இல்லை. ராக்ஷஸன் ஓடிப்போனதனால், விஷமாதின் மூலமாகப் பர்வதேசுவரனைக் கொல்வித்தவன் அவனேயென்ற சாணக்கியர் சொல்லிய வார்த்தை உறுதிப்பட்டது.

இங்கே இப்படிச் செய்துகொண்டிருக்கையிலேயே சாணக்கியர் தம் தூதன் பாகுராயணனை மலயகேதுவினிடம் அனுப்பினார். அவன் பயமுற்று நடுங்கிக் குழம்பிக்கொண்டிருந்தான். 'பர்வதேசுவரனைக் கொல்வித்தவர் சாணக்கியரே. உன்னையும் கொல்வதற்குரிய யுக்தி ஏதேனும் சீக்கிரம் அவர் செய்துவிடுவார்; ஆதலால் நீ உன் ராஜ்யத்திற்கு இப்போதே ஓடிப்போய்த் தப்பித்துக் கொள். அங்கே சேர்ந்தபின், சந்திரகுப்தன்மீதும் சாணக்கியர்மீதும் பழிவாங்குவதற்கு வழி வகைகளை ஆலோசித்துக்கொள்ளலாம்' என்று மலயகேதுவுக்கு இரகசியமாகச் சொல்லச்செய்தார். மலயகேதுவுக்கு

வேறு பேதிமருந்து வேண்டியிருக்கவில்லை. நம்பிக்கை யான சில ஆட்களுடன் அவன் புக்கிபேலாவுக்குக் கம்பி நீட்டினுன்; தன் தந்தைக்கு அபரக்கிரியையும் செய்யாமல் ஓடினுன். அவன் தப்பியோடுவதையும் தடுக்கச் சாணக் கியர் முயல வில்லை. அவருடைய காரியாலோசனைகளுக்கு அது அனுகூலமாயிருந்தது.

பாடலிபுரத்துப் பெரிய தச்சுமேஸ்திரியாகிய தாரு வர்மன் என்பவன் ராக்ஷஸனேடு கூடி ஏதோ சதி செய்து கொண்டிருப்பதாக ஒற்றர்கள் சாணக்கியருக்குச் சொல்லி யிருந்தார்கள். முடிசூடுவதற்காகச் சந்திரகுப்தன் 'ஸுகங்கா' அரண்மனைக்குள் ராஜபவனி வந்து பிரவேசிக் கும் சமயத்துக்கென அவன் பொன்னிலொரு 'கமான்' செய்திருப்பதாகச் சொல்லியிருந்தார்கள். அப்படிக் 'கமான்' செய்யும்படி எவரும் வேண்டாதிருக்கையிலே அவன் அதைச் செய்துவைத்திருந்தான். வைரவாரகன் என்பவன் மகதத்து யானைகளுக்குப் பெரிய மாவுத்தன். ஆதலின், ராஜகோலமாகச் சந்திரகுப்தன் தனது சந்திரலேகம் என் னும் யானையின்மீது ஆரோகணித்து அரண்மனை யிற் பிரவேசிக்கப்போகும் ஊர்வலத்தில் அவ்யானையை நடத்திக்கொண்டு போகத்தக்கவன் அவனே. அவனும் ராக்ஷஸனேடு கூடிக்கொண்டிருப்பதாக அனுமானம் உள தெனவும் ஒற்றர்கள் சாணக்கியருக்குச் சொல்லி யிருந்தார் கள். தம்மீது குற்றமில்லாமலே சிறிதும் சிரமமின்றி வைரோசகனை ஒழிப்பதற்கு இதுவே தருணமென்று சாணக்கியர் தீர்மானித்துக் கொண்டார். வைரோசகனிடம் போய் அவர், "பர்வதேசுவரனை நான் கொல்லுவித்தே னென்றும், தன்னையும் சீக்கிரத்திற் கொல்விப்பேனென்றும் நினைத்து அந்த முட்டாள் மலயகேது ஓடிப் போய்

விட்டான். ஆனால், பர்வதேசுவரனை நான் கொல்வித்திருந்தால், அந்தப் பையன் தப்பியோட விட்டிருப்பேனா? அவன் தன் அனுசரர்களோடு ஓடுகையில், அவனைப் பிடித்துக் கொல்வது எனக்கு மிக எளிதான காரியமாயிருக்குமல்லவா? ஆயினும், ஆனது ஆய்ப்போயிற்று, நிகழ்ந்தது நன்மைக்கே ஆயிற்று. அனுபவமில்லாத மலயகேதுவை மகதத்திற்கு ஸம்யுக்த ராஜனாக்குவதற்குப் பதிலாக, அனுபவசாலியான நீ எங்களுக்குக் கிடைத்தாய். நீ பரிபாலிக்க வேண்டிய ராஜ்யம் வேறொன்றும் உனக்கு இல்லை. ஆதலின், இவ்விராஜ்யத்தில் உன் முழு மனத்தையுஞ் செலுத்திக் கொண்டிருக்கலாம். குடிகள் இரண்டு ஆக்ஷேபணைகள் செய்யக்கூடும். முதலாவது,— ராஜ்யத்தை இரண்டு பாகமாகப் பிரிக்கக்கூடாது; அன்னியன் எவனுக்கும் அதனிற் பகுதி கொடுக்கக்கூடாது; பாதி ராஜ்யம் கொடுப்பதாகப் பர்வதேசுவரனுக்கு அளித்த வாக்கு அவனது மரணத்தோடு மாறிப்போயிற்று என்னலாம். இரண்டாவது,—அவன் இறந்த பின்னும் அவ்வாக்கு இருக்கின்றதெனின், அவனுக்குரிய பாதி ராஜ்யத்தை அடைய வேண்டியவன் மலயகேதுவே யன்றி, நீ அன்று என்னலாம். ஆகையால், இதற்கு நாம் ஒரு யுக்தி செய்ய வேண்டும். தந்திரமாக வியவகரிக்கவேண்டும். காரியம் மிஞ்சிப்போயிற்று என அவர்களுக்குக் காட்டவேண்டும். பர்வதேசுவரன் இறந்துபோனான்; மலயகேது ஓடிப்போனான். ஆகையால், பர்வதேசுவரனுக்கு ராஜ்யப்பகுதி கொடுப்பதாகச் சொல்லியிருந்ததைப் பற்றிப் பின்னர் ஆலோசித்துக்கொள்வோம்; இப்போது சந்திரகுப்தனுக்குப் பட்டங் கட்டிவிடுவோம் என நான் பிரகடித்துவிடுகிறேன். அதற்குமேல் உனக்குச் சந்திரகுப்தனுடைய ஆடை

களை அணிவித்து, அவனுடைய ஆபரணங்களைப் பூட்டி, சந்திரலேகம் என்னும் அவனுடைய குஞ்சரத்தின்மீது உன்னை ஏற்றி வைக்கிறேன். இங்ஙனம் சந்திரகுப்தனுக உனக்கு முடி சூட்டுவிக்கிறேன். இவ்வாறு செய்தபின், நீ இன்னுனென்று வெளியிட்டுப் பாதி ராஜ்யத்திற்கு அரசனுக அனைவரும் அங்கீகரிக்கச் செய்வேன். அதற்குப் பின் சந்திரகுப்தனை மற்றெரு பகுதிக்கு அரசனுக்கி அவனுக்கு முடி சூட்டுவேன்" என்று இரகசியமாகச் சொன்னுர்.

அவர் சொல்லிய யுக்தி மிக உத்தமமானதென வைரோசகன் நினைத்தான். ஆயினும், அவனது கள்ளம் அவனை விட்டுப் போகவில்லை. மகத ராஜ்யத்திற்கெல்லாம் தானே ஏகாதிபதியாகிவிடலாமென்றும், சந்திரகுப்தனை முற்றமே ஒதுக்கிவிடலாமென்றும் அவன் மனக்கோட்டை கட்டினுன். அரண்மனைப் பிரவேசத்திற்காக ஊர்வலம் போகையில், பர்வதேசுவரனுடைய துருப்புகள் தன்னைச் சூழ்ந்து வரவேண்டுமென்னுமொரு நிபந்தனை செய்தான். அதற்குச் சாணக்கியர் சரேலென ஒப்புக்கொண்டார்.

சந்திரகுப்தனுடைய ஆடையாபரணங்களை யெல்லாம் வைரோசகனுக்கு அணிவித்து அலங்கரித்து அவனைச் சந்திரலேகத்தின்மீது ஏற்றுவித்தார்கள். நிதானம் காணுத தீவட்டி மத்தாப்பு வெளிச்சத்தில் அவன் சந்திரகுப்தனைப் போலவே தோன்றினுன். எல்லாரும் அவன் சந்திரகுப்தனே என நினைத்தார்கள். வைரவாரகனும் தாருவர்மனுங்கூட அவ்வண்ணமே நினைத்தார்கள். மித்திரப் படையாகப் பர்வதேசுவரனுடைய துருப்புகளுக்கு அக்கிரஸ்தானம் அளிக்கப்பட்டமையின், அவர்கள் வைரோசகனுக்கு அண்மையில் இடம் பெற்றுர்கள். மகதத் துருப்புக்

களும் பின் சென்றன. பர்வதேசுவரனுடைய படையினர் உற்சவக் குதூகலத்தில் மூழ்கி யிருந்தார்கள்; போராயுதங்களைத் தரிக்கவில்லை; போர் புரியவும் சித்தமாயில்லை. அங்ஙன மிருக்க, பத்ரபடன், புருஷதத்தன், டிங்கரதன், பலகுப்தன், ராஜஸேனன், ஸிம்மபலன், பாகுராயணன், சந்திரபானு என்பவர்களின் தலைமை வாய்ந்த மகதப் படையினர் இரகசியமாகச் சகல ஆயுதங்களையும் தரித்துக்கொண்டு, சாணக்கியர் சைகை செய்தவுடனே, பர்வதேசுவரனுடைய படைகளின்மீது விழுந்தடிக்கச் சன்னத்தமா யிருந்தார்கள்.

சந்திரலேகத்தின்மீது வைரோசகன் வீற்றிருந்த சிறப்பான ஊர்வலம் மகத்தான வைபவத்தோடு தெருக்களினூடே 'ஸுகங்கா' அரண்மனைக்குச் சென்றது. தாரை முதலான வாத்தியங்கள் விமரிசையாக முழங்கின. தீவட்டிகள் தெரு முழுதும் தெள்ளொளி நிரப்பின. அந்த ஊர்வலச் சிறப்பைக் கண்டு களிப்பதற்கு ஜனங்கள் ஆயிரம் ஆயிரமாகக் குழுமினார்கள். கடைசியில் 'ஸுகங்கா' அரண்மனையின் எதிரில் தாருவர்மன் நிர்மித்த பொன்கமானண்டை வைரோசகன் வந்து சேர்ந்தான். அந்தக் கமான் உச்சியில் தாருவர்மன் தன் நண்பர்களுடன் வெற்றிக்கொடிகளை விசிறிக்கொண்டு நின்றிருந்தான். குலைந்து விழுந்து போகக்கூடிய அவ் வஞ்சகமான கமானைச் சநதிரகுப்தன் எனக் கருதப்பட்டவன்மீது தற்செயலாக நேர்ந்ததுபோலத் தள்ளி உடனே கொன்றுவிட அவன் சித்தமா யிருந்தான். ஆனால், அவன் அங்கு நிற்பதை வைரவாரகன் கண்டான். அவன் என்ன செய்யப்போகிறானென்பது அவனுக்குத் தெரியும். அவனுக்குத் தான் முந்திக்கொண்டு காரியத்தைச் செய்து முடித்துக் கீர்த்தி பெற்று, ராக்ஷஸனிடம் அதற்காகப் பரிசு பெற விரும்பினான். யானை அக்கமானைக்

கடக்கப்போகும் தருணத்தில், சந்திரகுப்தன் எனப்பட்டவனைக் குத்துவதற்காக, வைரவாரகன் தன் கட்டாரியை உருவினான். திடீரெனக் கட்டாரியைக் கண்டவுடன் சந்திரலேகமென்னும் யானை மருண்டு நடை மெலிந்தது. 'சந்திரகுப்தன்' அந்தக் கமானுக்கு நேர்கீழே வரும் தருணத்திற் கமானைத் தள்ளி வீழ்த்தத் தாருவர்மன் குறியிட்டுக் காத்துக்கொண்டிருந்தான். நால்வாயின் நடை சற்று நிதானப்பட்டமையின், கனமான அந்தக் கமான் வைரவாரகன் தலைமேல் விழுந்து அவனை மாய்த்தது. குறி தப்பியதே யெனக் கவலையுற்ற தாருவர்மன் கோடரியுங் கையுமாகச் சந்திரலேகத்தின் முதுகின்மீது குதித்து, சந்திரகுப்தனெனக் கருதப்பட்டவனை வெட்டிச் சாய்த்தான்.

பர்வதேசுவரனுடைய வீரர்கள் தாருவர்மனை அடித்துக் கொன்றார்கள். பின்பு, கோபாவேசத்தினால் முன்பின் தெரியாமல், நிராயுதபாணிகளான ஜனங்களின் மீது விழுந்து அவர்களைக் கொல்லத் தலைப்பட்டார்கள். தங்களைக் காப்பாற்றும்படி திக்கற்ற அந்த ஜனங்கள் சாணக்கியரிடம் முறையிட்டார்கள். அதன்மீது சாணக்கியர் போர் புரிவதற்கு ஆயத்தப்படாத பர்வதேசுவரனுடைய படைஞர்களின்மீது பாய்ந்தடிக்கும்படி சந்திரகுப்தனுடைய படைகளுக்குக் கட்டளை யிட்டார். பர்வதேசுவரனுடைய படையினருள் அநேகர் அவ்வடிதடியில் மடிந்துபோக, மற்றவர்கள் குலைந்து நாற்றிசையும் ஓடினார்கள். தாருவர்மனாற் கொல்லப்பெற்றவன் வைரோசகனே யெனவும், சந்திரகுப்தனல்லன் எனவும் பின்பு சாணக்கியர் அனைவர்க்கும் அறைந்தார். அவ்வறிக்கையை ஜனங்கள் கைகொட்டிக் களி மிகுந்து ஏற்றுச் சந்திரகுப்தனை முடி சூட்டுவதற்காக 'ஸுகங்கா' அரண்மனைக்கு

அழைத்துவரும் பொருட்டுப் பல்லாயிரவர்களடங்கிய திரளாகப் போனார்கள். முன்னர் அவர்களுக்கிருந்த உதாரஸீன புத்தி ஒழிந்து போயிற்று. கிரேக்கர்களுடைய கையிற் பட்டழியாமல் தங்கள் பிராணன்களையும், பண்டங்களையும், பல்கலைப்பயிற்சிகளையும் பாது காத்துக் கொள்வதற்குச் சந்திரகுப்தனுக்கு முடிசூட்டுவதொன்றே வழியென அவர்கள் மனந் தேர்ந்தார்கள்.

விஜயவீரர்களான படைஞர் புடை சூழச் சந்திரகுப்தனுக்கு அவர்கள் மிக்க ஆரவாரத்தோடு தெருக்களினூடே திவ்வியாலங்காரமாக ஊர்வலம் நடத்தினார்கள். வாரண விசை சூழச் சந்திரன் வலம் செய்தான். பூரணப் பொற்குடம் வைத்துப் புரமெங்கும் தோரணம் நாட்டியிருந்தனர். பாளை, கமுகு, பரிசுடைப் பந்தல்கள் பரத்தியிருந்தனர்.

அவனும் சாணக்கியருமாகச் சேர்ந்து புதிதாக ஒரு முடி முத்திரை கற்பனை செய்திருந்தார்கள். அந்த முத்திரையில் பர்வதத்தின்மீது பூர்ண சந்திரோதயமாக, முன்புறத்தில் வர்ண மயில் விநோதமாக நர்த்தனம் செய்து கொண்டிருந்தது. இது பர்வதேசுவரனைச் சந்திரகுப்தனும் மௌரியர்களும் வென்று மேலெழுந்ததற்கு அறிகுறியாம். இம் முடி முத்திரை தீட்டப்பெற்ற கொடிகள் ஆயிரம் தீவட்டி வெளிச்சத்தில் துலங்கி அசைந்து ஆடின. வேழங்களின்மீது முரசுகள் அதிர்ந்தொலித்தன. குதிரைகள் கனைத்தன. 'ஸுகங்கா' அரண்மனைக்குச் சந்திரலேகக்களிற்றின்மீது சந்திரகுப்தன் ஊர்ந்து சென்றான்.

அங்கே மத்தளங்கொட்ட, வரிசங்கம் நின்றூத, அவன் முடிசூடப் பெற்றான். அந்தணர் நல்ல மறையோதி

மந்திராக்ஷதை ஈந்து ஆசி கூறினர். நாற்றிசைத் தீர்த்தம் கொணர்ந்து நனி நல்கிப் பார்ப்பனச்சிட்டர்கள் பல்லாரெடுத்தேத்தினர். மகதத்துச் சிம்மாசனத்தின்மீது சந்திரகுப்தனை அமரச்செய்து, அவன் சிரசில் மாந்தாதா[1]வின் கிரீடத்தைச் சாணக்கியர் சூட்டியபோது, "வேந்தன் நீடூழி வாழ்க! வேந்தனுக்கு விஜயம் வந்தெய்துக!" என ஜனங்கள் செய்த வாழ்த்தொலி காது செவிடுபடச் செய்தது.

"யதோக்தமான மகுடாபிஷேகம் அடுத்தமாதம் நம் ஸாமந்த ராஜர்களும் ராஜகுமாரர்களும் மகா ஜனங்களும் கூடிய ஸதஸில் நடைபெறும். இது மகதத்துப் பிரஸித்தமான ஜனபத[2]த்து வரணமேயாகும். ஸ்வர்ணங்களையும் ரூப்ய ரூப்ய மென்னும் நாணயங்களையும்[3] ராஜாங்

---

1. மாந்தாதா.—இவன் யுவனாசுவனது குமாரன். புருகுச்சன், அம்பரீஷன், முசுகுந்தன் என்பவர்கள் இவனுடைய புத்திரர்கள். இவன் ராஜசூய யாகம் செய்து 'சம்ராட்' என்னும் பட்டம் அடைந்தவன். இவன் தன் தந்தையின் உடலின் வாமபாகத்தைப் பிளந்து வெளிப்பட்டவன். இச்சிசு யாரை ஸ்தன்யபானம் செய்யத் தக்கதென ரிஷிகள் சங்கை யடைகையில், புருஷன் கருவுற்றுப் பிள்ளை பெறுதல் மூவுலகத்தும் இல்லையாதலால், அவ்விடம் வந்திருந்த இந்திரன் தன் கைக் கட்டைவிரலைப் பானம் பண்ணக் கடவதெனக் கரத்தை நீட்டினான். இந்திரன் இவனுக்கு இட்ட பெயர் தீரிசநகு. அவன் நீட்டிய விரலின் வழி ஒழுகிய அமிர்தத்தைப் பானம் செய்தமையின் 'மாந்தாதா' என்னும் பெயர் அடைந்தனன்.

2. ஜனபதம்.—மகாஜன சபை.

3. மௌரியர் காலத்து நாணயங்கள் பெரிதும் மாறுபாடின்றியே இன்றைக்கும் இந்தியாவில் இருக்கின்றன. ஸ்வர்ணத்துக்குப் பதிலாக இந்நாளில் ஸவரன் வழங்குகிறோம் என்பதே

கத்துப் பொற்கொல்லர் இன்றுமுதல் அச்சிடத்தொடங்குவார்களாக" எனச் சாணக்கியர் பணித்தார்.

கலிங்கத்தரசனோடு ஆதியிற் செய்திருந்த உடன்படிக்கையை உறுதிப்படுத்திப் புதிதாக அச்சிட்ட நாணயத்தொகுதியும் வேறு பல சம்மானங்களும் நிரம்பக்கொடுத்துச் சந்திரகுப்தனும் சாணக்கியரும் மறுநாள் அவனை ஊருக்கு அனுப்பினார்கள். காமரூபத்தரசனுக்கும் மஞ்சுபட்டணத்தரசனுக்கும் ஒரு கோடி ஸ்வர்ணங்கள் வீதம் கொடுத்து அவர்களையும் அனுப்பினார்கள். அதற்குப் பிரதியாக அவர்கள் தாங்கள் கைப்பற்றியிருந்த மகதப் பிரதேசங்களையெல்லாம் உடனே விட்டுப்போகவும், மகதத்தரசர்களுக்கு என்றென்றைக்கும் மித்திரர்களாய் இருக்கவும் உடனே ஒப்புக்கொண்டார்கள்.

அன்று மாலையில் சந்திரகுப்தன் தனது நன்றியின் அறிகுறியாக ஒரு லக்ஷம் ஸ்வர்ணங்களை ராஜஸேனன் வசமாகச் சாணக்கியர் வீட்டுக்கு அனுப்பினான். இப்போது அவர் வசித்துக்கொண்டிருக்கிற சிதிலமான வீடு பெரிய

---

வித்தியாசம். **ஸ்வர்ணம்** என்பது செம்புகலந்த பொற்காசு; ஏறக்குறைய பத்து ரூபாய் பெறும். **ரூப்ய ரூப்யம்** (ரூபாய்)— என்பது **பணம்**, அல்லது, **கர்ஷ பணம்** என அந்நாளில் வழங்கியது; செம்பும் ஈயமும் கலந்த வெள்ளிக்காசு; ஏறக்குறைய 12 அணாமுதல் ஒரு ரூபாய் வரையில் பெறத்தக்கது என்னலாம். **மாஷம்** என்பது ஒரு ரூபாயில் வீசம் ஆகும். அதாவது, இற்றைநாள் **அணா**. காலணா என்பது அந்நாளில் **காகணி**, அல்லது, **காணி** என வழங்கியது. காணி என்னும் சொல் முன்னர் மௌரியர்களுக்கு அதீனமாயிருந்த ஆந்திர நாட்டில் இன்றும் வழங்குகிறது.

சாம்ராஜ்யத்துப் பிரதான மந்திரியின் வாஸத்திற்கு ஏற்ற தன்றாதலின், நேர்த்தியான அரண்மனையொன்று ஸித்தமாக்கியிருக்கிறதாகவும், அந்த மாளிகைக்கு அவர் உடனே குடிப்போகவேண்டுமென்றும் சொல்லியனுப்பினன். அவன் போனவேளையில் சாணக்கியர் கங்காஸ்நானத்திற்குப் போயிருந்தார். ராஜஸேனன், கொண்டு போன பணத்தை ஸ்ரீமதி கௌதமியிடம் கொடுத்துவிட்டு, அரசன் சொல்லியனுப்பிய சமாசாரத்தையும் அறிவித்து வந்தான்.

"நீ திரும்பிவந்து இந்தப் பணமூட்டையை எடுத்துக்கொண்டு போகவேண்டியவனே" என்று அவள் புன்னகையோடு புகன்றாள்.

"நான் ஒருபோதும் மீண்டும் எடுத்துப் போகமாட்டேன்" என்று ராஜஸேனன் மொழிந்தான்.

"அப்படியானால், ஆரியபுத்திரரே அதை அரண்மனைக்கு எடுத்துக்கொண்டு வரவேண்டியவராவர்" என அவள் சொல்லி நகைத்தாள்.

ஒருமணி நேரத்திற்குள் சாணக்கியர் ஸ்நானம் செய்து வீட்டுக்குத் திரும்பிவந்தார். சந்திரகுப்தன் பணம் அனுப்பியதையும், சமாசாரம் சொல்லியனுப்பியதையும், ராஜஸேனனுக்குத் தான் சொல்லிய வார்த்தைகளையும் ஸ்ரீமதி கௌதமி அவருக்கு அறிவித்தாள். அவர் புன்னகைகொண்டு, அந்தப் பணத்துடன் அரண்மனைக்குப் போனார். நேரே சக்கரவர்த்தியினிடம் போய், "விருஷலா! பொன்னினாலும் பொருளினாலும் எனக்கு என்ன பிரயோஜனம்? நான் வசிப்பதற்கு அரண்மனை வேண்டாம்; நான் இருக்கிற குடிசையே எனக்குப் போதும். எனக்கு

அனுப்பிய இவ்வளவு பணத்தையும் ஏழைகளுக்குக் கொடுத்துதவலாமே" என்று சொன்னார்.

"இப்படிச் சொல்வீர்களென்றே நான் எதிர்பார்த்தேன். தங்களைப்போன்ற மகான்கள் தமக்கென எதுவும் வேண்டார். ஆனால், நான் அரசனாயிருக்கின்றமையின், கைவிட்டுக் கொடுத்ததை மீண்டும் ஏற்றுக்கொள்ளலாகாது. இந்தப் பணத்தை விநியோகிப்பதற்குத் தயை செய்து வழியொன்று வகுத்தருளுங்கள்" என்று சந்திரகுப்தன் வேண்டினான்.

"வித்தியா தானமே தானங்களுள் சிறந்தது. ஆகலின் நமது ஸம்ஸ்தானத்திலுள்ள ஏழை வித்தியார்த்திகளுக்கு அன்னமளிக்க இந்தப் பணத்தை உபயோகப்படுத்துவாயாக. முக்கியமாக, பாடலிபுரம், காசி, தக்ஷசிலை என்னும் வித்தியா நிலயங்களிலுள்ள மாணவர்களுக்கு விநியோகிப்பாயாக" என்று சாணக்கியர் அவனுக்கு உபதேசித்தார்."

"அங்ஙனமே செய்வேன். வித்தியா தானத்தின் பெருமைமிக அதிகமென்று தாங்கள் பகர்வதனால் இதைப்போன்ற இரட்டிப்புத் திரவியம் அவ்வித்தியா தானத்திற்கு விநியோகிப்பேன். அது நிற்க, இந்தச் சுப முகூர்த்தக் காணிக்கையாக மகாலக்ஷ்மி ஸ்வரூபியாகிய ஸ்ரீமதி கௌதமி அம்மைக்கு நான் ஏதேனும் சமர்ப்பிக்க வேண்டுமென்று இருக்கிறேன்" என்று சந்திரகுப்தன் விண்ணப்பித்துக்கொண்டான்.

"அது சரியே; ஆனால், அவள் என்ன கேட்கிறாளோ அதை மாத்திரம் கொடு" என்று சாணக்கியர் அனுமதித்தார். தம் மனைவியின் தன்மையைத் தெரிந்து, அவள் படாடோபத்தை விரும்பாளெனவும், பேராசையுடையாட்

டாளெனவும், பிறர் பொருளை இச்சிக்காளெனவும் தெரிந்து அவர் அங்ஙனம் கூறினார்.

அவர்களிருவரும் சாணக்கியருடைய வீட்டுக்குப் போனார்கள். “தாயே! நம் பெரியோராகிய இம்மகானது அனுக்கிரக விசேஷத்தினால் நான் சக்கரவர்த்தியென முடி சூடப்பெற்றேன். இது என் வாழ்க்கையில் வாய்க்கத்தக்க சிரேயஸ்கரமான வைபவங்களுள் மிகச் சிரேஷ்டமானது. ஆதலின், மிகப்பெரிய சுபமுகூர்த்தம். இந்தச் சுபமுகூர்த்தத்தில் தங்களுக்குப் பாதகாணிக்கையாக என்னால் இயன்றதைச் சமர்ப்பிக்கவேண்டுமெனச் சங்கற்பித்துள்ளேன். அன்பு கூர்ந்து தங்களுக்கு இஷ்டமானதை இயம்புவீர்களாக” என்று கௌதமியை வணங்கிச் சந்திரகுப்தன் கூறினான்.

உடனே அவள், “எனக்கேனும் என் பர்த்தாவுக்கேனும் ஒன்றும் வேண்டாம். ஆனால், அவர் தினந்தோறும் சிவபூஜை செய்கின்றார். அத்தகைய மகானுபாவர் ஈசுவர கைங்கரியத்திற்கு இப்போது தாமிர பஞ்சபாத்திரமும் உத்தரணியும் உபயோகித்துக் கொண்டிருப்பதற்குப் பதிலாக, வெள்ளி பஞ்சபாத்திரமும் உத்தரணியும் உபயோகிப்பது உசிதமாயிருக்குமென நினைக்கிறேன். மகாராஜா அவர்களுக்கு இஷ்டமானால், அவைகளை எனக்குத் தரலாம்” என்று நவின்றாள்.

“ரொம்ப நன்றாயிருக்கின்றது! பூஸுரோத்தமரான சாணக்கியமூர்த்தி இதற்குச் சிறிதும் ஆக்ஷேபிக்கமுடியாது” என்றுரைத்துச் சந்திரகுப்தன் அரண்மனைக்குத் திரும்பிப்போய், நேர்த்தியான வெள்ளிப் பஞ்சபாத்திரமும் உத்தரணியும் அனுப்பினான்.

அன்றிரவு சந்திரகுப்தன் இங்ஙனம் நிகழ்ந்ததெனத் தன் ராணி சாந்தவதியிடம் சொல்லலானன். சாணக்கியருக்கும் கௌதமிக்கும் சுய அபேக்ஷை இல்லாமையை அவள் வியந்து பாராட்டிப் பெரிதும் மகிழ்ந்தாள். "பிராண நாதா! அவர் சுயநலங் கருதாத ஸத்புருஷரெனவும், எதையும் அவர் லோகோபகாரார்த்தமாகவே செய்கிறரென வும், சொந்தப் பிரயோஜனத்தைக் கருதி ஒன்றும் செய்வ தில்லையெனவும் இப்போது கண்டேன். ஆதலின், என் மாமன்மாரையும் மருமகனையும் கொடுமைக்குள்ளாக்கிய குரூரரென அவரை நான் நினைத்திருந்தேனாயினும், இனி அவர்மீது குறை கூறேன்" என்று சாந்தவதி இசைந்து தன் ஸத்தியசீலத்தைக் காட்டினள்.

"அங்ஙனமெல்லாம் அவர் ஏன் செய்தார்? எனக்கு முடிசூட்டும் பொருட்டேயல்லவா?" என்றான் சந்திர குப்தன்.

"ஆம். அது எனக்குத் தெரியும். ஆனல், இதுவரை யில் நான் என்ன நினைத்துக்கொண்டிருந்தேனெனின், நந் தர்களுடைய போஜனசாலையில் தாம் செய்த சபதத்தை நிறைவேற்றவும், தம் தருக்கைத் திருப்திப்படுத்திக்கொள் ளவுமே உங்களுக்கு முடி சூட்டலானர் என்றிருந்தேன். அந்தச் சபதம் அவர் செய்ததே உலகோர் உய்யும் பொருட்டு; தம் செருக்குப்பெருக்கத்தினற் செய்ததன்று; தம்மை நந்தர்கள் பழித்ததற்குப் பழி வாங்கும் பொருட் டன்று என இப்போது தெளிந்து தேறி மகிழ்கின்றேன்" எனச் சாந்தவதி மிழற்றினள்.

---

# அத்தியாயம் 24

## துரோகிகளுக்குத் தண்டனை

பட்டாபிஷேகம் நடந்தேறியபின், 'ஸுகங்கா' அரண்மனையிலுள்ள பிரதான மந்திரியின் தனி அறையில் சாணக்கியர் இரகசியக்கூட்டமொன்று கூட்டினார். நகரின் பொக்கிஷாதிகாரியும் அரண்மனைப் பரபத்தியக்காரனுமான வைகினாரி, அரண்மனைக்காவலர்க்கும் அந்தப்புரக்காவலர்க்கும் தலைவனான ராஜஸேனன், அரண்மனைப் பராமரிப்புக்காரனான பலகுப்தன், அரண்மனைக் காவல் அதிகாரியான டிங்கரதன், அரண்மனையொற்றர் தலைவனான பாகுராயணன், பிரவகண இலாகாத்தலைவனான சந்திரபானு என்னும் இவர்கள் அங்கு வந்து கூடினர். அவர்களை நோக்கிச் சாணக்கியர், "சாத்தியமான எல்லாச் சத்துருக்களினின்றும் அரசனைக் காப்பாற்றுவதற்கான வழி வகைகளை அறிவிக்கும்பொருட்டு உங்களை நான் இவ்விடம் வரவழைத்துள்ளேன். அதற்குமுன், இன்று காலையில் உங்களுக்குச் சொல்லியபடி காரியங்களைச் செய்திருக்கிறீர்களாவென விளம்புங்கள்" என்றார்.

ராஜஸேனன்: ஏவிய வண்ணம் செய்துள்ளேன். மெய் காவற்படையிலும் அந்தப்புரக் காவற்படையிலும் இருந்த பிறநாட்டார், சக்கரவர்த்தியாரிடம் சம்மானமாவது விருதாவது படைக்காதவர்கள், நம் நாட்டாருள் அரசனிடம் இரகசியமாய்ப் பகை கொண்டுள்ளாரென அனுமானிக்கப் பட்டவர்கள் ஆகிய இவர்களையெல்லாம் நீக்கிவிட்டேன்.

பலகுப்தன்: தற்செயலாகவேனும் சூழ்ச்சியினாலேனும் தீவிபத்து நேராதபடி வேண்டிய ஜாக்கிரதையெல்லாம் செய்

துள்ளேன்; அரண்மனைக்குள் விஷப்பாம்புகள் வராமலும் பிறர் புகுத்தாமலும் பார்த்துக்கொண்டிருக்கிறேன்.

வைகிநாரி: பொறுக்கியெடுத்திருக்கிற அரண்மனை ஸ்வயம்பாகிகளெல்லாரும் நம்பிக்கையானவர்கள். பாக சாலைத் தலைவன் அரசருக்கு அமுதுபடைக்குமுன் என் எதிரில் அடிசிலைச் சுவைத்துச் சோதிக்கின்றான். மகா ராஜா அமுது அருந்துமுன் அதிற் சிறிதெடுத்து முதலில் அக்கினிக்கும், பின்பு பறவைகளுக்கும் அளிக்கும்படி கேட்டுக்கொண்டிருக்கிறேன். அந்தச் சாக்ஷி போஜனத்தின் பொருட்டே சில நேர்த்தியான கிளிகளையும் கோகிலங்களை யும் ஸித்தமாக வைத்திருக்கிறேன். துயிலெழுந்தவுடன் மகாராஜா அவர்களைத் தனுர்ப்பாணிகளான பூவையர் கூட்டம் எதிர்கொள்ளும்; இரண்டாம் அறையில் நான் வரவேற்று, அவருக்குக் கஞ்சுகம் அளிப்பேன்; மூன்றும் அறையில் குள்ளர்களையும் குரூபிகளையும் அவர் காண்பார்; நான்காம் அறையில் முட்கூர்மை வாய்ந்த அஸ்திரபாணி களான துவாரபாலகர்களின் முன்னிலையில் மந்திரிகளும் உறவினர்களும் அவரை வரவேற்பார்கள். அந்தப்புரத்து வாயிலாளரும், அங்கு நடமாடுகிறவர்களும் ராஜஸேவா ஸக்தியிற் சிறந்தவர்கள்; நம்பிக்கையானவர்கள். அவர் களைப் பலகுப்தனும் நானுமாகத் தெரிந்தெடுத்துள்ளோம்.

டிங்கரதன்: அரண்மனைக்குள் வருகிறவர் போகிறவர் ஒவ்வொருவரையும் கவனித்துப் பார்ப்பதற்குத் தக்க ஏற் பாடுகள் செய்திருக்கிறேன்.

பாதுராயணன்: மகாராஜா அவர்களுக்குச் சேவை செய் கிறவர்கள் எல்லோருடைய பூர்வ சரிதைகளையும் கிரமமாக எழுதி வைத்திருக்கிறேன்.

சந்திரபானு: வேலையாட்களும் கூலியாட்களும் எல்லாரும் நம்பத்தக்கவர்களே.

சாணக்கியர்: அந்தப்புரத்துப் பணிப்பெண்களை யெல்லாம் சரியாகப் பார்த்துப் பொறுக்கியெடுத்திருக்கிறீர்களா?

வைகினாரி: ஆம். சரியாகவே பார்த்து எடுத்திருக்கிறோம். அந்தக் காரியத்தை நானே கவனித்தேன்.

மேற்கண்டவாறு விசாரணைசெய்து திருப்தியடைந்தவராய்ச் சாணக்கியர், "நல்லது. நீங்கள் செய்யவேண்டியது என்னவெனில், எல்லாரும் எப்போதும் விழிப்புற்றிருக்க வேண்டும். நம் சத்துருக்கள் மிக்க சாமர்த்தியமுள்ளவர்கள்; ஸாகஸம் செய்யக்கூடியவர்கள்; ஒன்றுவிட்டொன்றாகப் பலவகையான உபாயங்கள் செய்யத்தக்கவர்கள். நந்தர்களை ஆதரிப்பவர்களெல்லாரையுமே நாம் ஒழித்துவிட முடியவில்லை. முன்னர் நந்தர்களிடம் உத்தியோகம் செய்தவர்களிற் பலர் இப்பொழுது சந்திரகுப்தனிடம் வேலைக்கு அமர்ந்து ராஜவிசுவாசப் பிரமாணம் செய்திருக்கிறார்கள். அவர்களெல்லாரையும் ஜாக்கிரதையாகக் கவனிக்கவேண்டும். அவர்கள் ராஜவிசுவாசம் பாராட்டுகிறோமென்று சொல்லிக்கொண்டு வரும்போது நாம் மறுப்பது கஷ்டம். ஏனெனில், துரைத்தனம் மாறுபடுங்கால் முன்னர் நிலையாயிருந்த உத்தியோகஸ்தர்கள் நூற்றுக்கணக்கானவர்களை அப்படியப்படியே பின்னரும் வைத்துக்கொண்டு வியவகாரம் நடத்துவதே முறையாகும். அவர்களிற் பெரும்பாலோரைப்பற்றி நாம் கவலைப்படவேண்டியதில்லை. அவர்களுக்கு ராமன் ஆண்டாலும் ஒன்றே, ராவணன் ஆண்டாலும் ஒன்றே; எவன் அரசனாயினும் புல்லுக்கட்டுக்காரிக்குப் புல் சுமப்பது தப்புமோ என நினைந்து, அவர்கள் எந்த ராஜாங்கத்திற்கும் இசைந்து தம் வயிற்றுப்பாட்

டையே பாராட்டிக்கொண்டிருப்பார்கள்; சிலர் புதுத் துரைத்தனத்தாரிடத்து உண்மையிலேயே பக்தியும் சிரத்தையும் மேற்கொண்டவர்களாவார்கள். ஆனால், வேறு சிலர் எப்பொழுது சமயம் வாய்க்குமென்று காத்துக்கொண்டிருந்து இரகசியமாகவும் தீர்க்கமாகவும் நமக்குத் தீமை செய்துவிடுவார்கள். ஜாக்கிரதையாக எல்லாரையும் கவனித்துக்கொண்டிருங்கள். எவர்மீதேனும் சந்தேகம் தோன்றினாலும், எவ்விடத்தில் என்ன விபரீதவொழுக்கம் கண்டாலும், விசாரணை செய்யவேண்டுமென ஏது தென்பட்டாலும் எனக்கு உடனே தெரிவியுங்கள். விசாரணையில், நீங்கள் சந்தேகப்பட்டது தவறெனத் தெளிவதாயிருந்தாலும், அது குற்றமில்லை. விசாரணை வீண் போகாது. அதற்குரிய பயன் எப்போதும் உண்டு. நாம் விழிப்புற்று ஒழுங்காயிருப்பதற்கு அவ்விசாரணைகள் ஏதுவாகும். அங்ஙனம் நாம் இடைவிடாது எப்பொழுதும் எச்சரிக்கையாக இல்லையெனின், நாம் அசதிமறதியாயிருக்கும் சமயம் பார்த்து நம் தலையைக் கொண்டுபோய்விடுவார்கள்" என்று சொன்னார். அங்கு வந்திருந்தவர்களில் ஒவ்வொருவரும் எச்சரிக்கையுற்றிருப்போமென உறுதி கூறிப் பெயர்ந்து சென்றனர்.

மறுநாள் சந்திரகுப்தனுக்குச் சற்று அதிசாரபேதி கண்டதுபோலிருந்தது. அரண்மனை வைத்தியனை அபயதத்தன் அதற்குப் பிரஸித்தமான கஷாயமொன்றை உடனே செய்து தங்கக்கிண்ணத்தில் எடுத்துக்கொண்டு அரசனிடம் கொண்டுபோனான். கரவற்ற மனத்தினனாய்ச் சந்திரகுப்தன் அதை ஏற்றுக்கொள்ளக் கையை நீட்டினான். ஆனால், சாணக்கியரும் அங்கே இருந்தார். அவருக்கு அக்கஷாயத்தில் சந்தேகம் தட்டியது; அதன்

நிறம் மாறுபட்டதுபோலத் தோன்றியது; கிண்ணத்தின் ஓரத்தில் கலங்கல் காணப்பட்டது. அபயதத்தனை நோக்கி, "அரசருக்கு அளிக்குமுன் அதை என்னிடம் ஈவாய். ஓரங்களில் நிறம் மாறுபட்டிருப்பதேன்?" என வினவினார். அபயதத்தனுக்கு இடி இடித்தாற்போலிருந்தது, இடுப்பு ஒடிந்தது; கஷாயக் கிண்ணத்தை அவரிடம் கொடுக்கக் கை நடுங்கியது; உடல் வியர்த்தது; உள்ளம் ஒடுங்கி ஒளிந்தது. அவர் அந்தக் கஷாயத்திற் சிறிது ஒரு கோப்பையில் வார்த்துக் கிளிக்குக் கொடுத்தார். அதைக் குடித்தவுடனே கிளி பொட்டெனப் பொன்றியது.

"இதனிற் கொடிய விஷம் கலந்துள்ளாய், அபயதத்தா! இக்கிண்ணத்துக் கஷாயத்தை நீயே குடிப்பாய். இன்றேல், சண்டாளர் தொட்டிழுத்துச் சாவு மேடைக்குக் கொண்டுபோய்ச் செதிள் செதிளாக உன்னைச் சேதிப்பதற்குச் சித்தமாகுவாய்" எனச் சாணக்கியர் அமைதியாகக் கூறினர். மறுபேச்சின்றிக் கஷாயத்தைக் குடித்து அபயதத்தன் வீழ்ந்தான்.

ராஜஸேனனை நோக்கிச் சாணக்கியர், "இப்படியாக நம் காலத்துப் பிரபல வைத்திய சிரேஷ்டர்களுள் ஒருவன் அழிந்தொழிந்தான். அவன் உண்மையான ராஜவிசுவாசத்தோடு இருக்க மனங்கொண்டிருந்தானெனவே நினைத்திருந்தேன். ருஜுவின்றி அவனை உத்தியோகத்தினின்று விலக்கியிருப்பினும், தண்டித்திருப்பினும் யுக்தமாயிராது. அவனை எல்லாரும் நன்கு மதித்துக் கொண்டாடிக்கொண்டிருந்தார்கள். இவ்வளவு வஞ்சகமான வேலை செய்தபின்னும், அவனைச் சாமானிய குற்றவாளியைப்போலக் கடிந்தெறிய எனக்குப் பிரியமில்லை. கல்வியையும் அறிவையும் கௌரவித்தல் வேண்டும். ஆனல்,

வியாதிக்காரருக்கு விஷமிட்டுக் கொல்லும் வைத்தியர் வாழலாகாது; மரித்தலே மரபு. அவன் சவத்தைக் கொண்டுபோய், சுற்றத்தாருக்கு ஒப்பித்துச் சரமக்கிரியை சரியாகச் செய்யச் சொல். அவன் வினையே அவனைச் சுட்டது; தானிட்ட விஷத்தையே தானுண்டு அவன் மாண்டான். ஆனமையின், அவர்களில் எவரும் நம்மீது குறைகூறுவதற்கில்லை" என்று கூறினார்.

இரண்டு நாளைக்குப் பிறகு ராஜசேனன் வந்து, "அரசனுடைய பள்ளியறைப் பராமரிப்புக்காரனான பிரமோதகன் என்பவன் இருந்திருந்தாற்போல் இப்போது திடீரென மிக்க ஔதாரிச் செலவுகள் செய்கிறான். எங்கிருந்தோ இவனுக்கு மிக்க பெருந்தொகைப்பணம் கிடைத்திருக்கிறதெனத் தோன்றுகின்றது" என்று சாணக்கியருக்குச் சொன்னான். அந்த வார்த்தையைப் பாகுராயணனும் டிங்காதனுங்கூட ஊர்ஜிதப்படுத்தினார்கள். தம் வேவுகாரனான உதும்பரனை அழைத்துச் சாணக்கியர் அவன் கையிற் பதினாயிரம் பொற்பணங் கொடுத்து, ராக்ஷஸன் கொடுத்ததாக அதைக் கொண்டுபோய்ப் பிரமோதகனுக்குக் கொடுக்கச் சொன்னார். ஆனால், அவன் கையிற் பணம் கொடுக்குமுன், 'எண்ணிய காரியத்தை இன்னும் ஏன் நிறைவேற்றாதிருக்கின்றனை? பணத்தையெல்லாம் வீண் செலவுகளிலும் சிற்றின்ப விஷய விநோதாதிகளிலுமே வாரி இறைத்துக்கொண்டிருக்கிறாயே' என வினவச் சொன்னார். பிரமோதகன் இவ்வலையில் வீழ்ந்தான். "தக்க தருணம் வாய்க்கவேண்டுமெனக் காத்துக்கொண்டிருக்கிறேனேயல்லாமல், நான் வீண் பொழுது போக்கவில்லை; நாளை ராத்திரியே சந்திரகுப்தனைக் கொலை செய்துவிடுகிறேன். அன்றைத்தினம், சென்ற வருஷம் இறந்துபோன

தம் தாயார் தேவகியின் பிரதம ஆப்திகம் செய்வதற்காக அசுர சொரூபியான சாணக்கியர் ஊரைவிட்டு வெளியே போயிருப்பார்'' என்று உதும்பரனுக்குப் பிரமோதகன் சொன்னான். அவன் வாயினின்றும் அம்மொழியை வாங்கிக்கொண்டு உதும்பரன் பதினாயிரம் பொற்பணத்தை யும் அவன் கையிற்கொடுத்து, அவனைச் சிறைப்படுத்திச் சாணக்கியரிடம் கொண்டுபோனான். அவனைச் சித்திர வதைசெய்து கொல்வித்துச் சாணக்கியர் அவனுடைய சொத்துக்களையெல்லாம் பறிமுதல் செய்து ராஜஸேனன், டிங்கராதன், பாகுராயணன், உதும்பரன் என்னும் நால்வருக் கும் பங்கிட்டுக்கொடுத்தார்.

அரண்மனையிலுள்ள ஒவ்வோர் அறையையும் சாணக் கியர் ஒவ்வொரு நாளும் சுற்றிச் சோதித்துப் பார்ப்ப துண்டு. ஐந்து நாளைக்குப்பின், பலகுப்தன், டிங்கராதன், ராஜஸேனன், பாகுராயணன் என்னும் இவர்களுடன் வழக் கம்போல அவர் ஒவ்வோர் அறையாகப் பார்த்துக்கொண்டு வருகையில், சந்திரகுப்தனுடைய சயனக்கிருகத்தின் சிறப் பான தளவரிசைக்கும் சுவருக்கும் இடையிலுள்ளதோர் வெடிப்பினின்று எறும்பு வரிசையொன்று வாயில் உண வணுக்களோடு ஊர்ந்து செல்வதைக் கண்டார். சாணக் கியரைத் தவிர மற்றவரெவரும் அதைக் கவனிக்கவில்லை. அவர் மனத்திற் சந்தேகம் தோன்றியது. பள்ளியறையில் உணவுப்பொருள்களேனும் பதார்த்தங்களேனும் இல்லை; ஆதலின், கீழே ஒளித்து வைத்திருக்கிற பண்டங்களி னின்றே அவ்வெறும்புகள் உணவைக் கொணர்ந்திருக்க வேண்டும் என அவர் ஊகித்தார். ஆயினும், அத்தளத் தின்கீழ் நிலவறையொன்று உளதென எவருக்கும் தெரி யாது. தளத்தைச் சாணக்கியர் மெதுவாகத் தட்டிப் பார்த்

தார். வங்கின்மீது தட்டினால் எழத்தக்க மந்தத்தொனி கேட்கக் கண்டார்; அதன்கீழ் நிலவறை ஒன்று இருக்க வேண்டுமென நிச்சயித்தார். பாகுராயணனையும் டிங்கரதனையும் பலகுப்தனையும் அனுப்பி அவ்வறையின் சுற்றுப் புறத்தைப் பார்த்துக் காத்து, அதற்குள் ஒளித்திருக்கிற கொலையாளிகள் தாங்கள் செய்து வைத்திருக்கும் இரகசிய வழிகளின் வழியே தப்பியோடாமல், தடுக்கச்சொன்னார். அதன்மீது அவரும் ராஜஸேனனுமாகத் தளவரிசையைத் தோண்டுவித்தார்கள். உண்மையாகவே, அதன்கீழ் ஒரு குடைகால் இருந்தது. அதில் பிடத்ஸகனும் வேறு இருவரும் இருந்தார்கள்; அவர்களெல்லாரும் ராக்ஷஸனுடைய ஆட்கள். அவர்கள் கொலைசெய்வதற்கான கட்டாரிகளை வைத்திருந்தார்கள்; இரவு வருமளவும் அவர்கள் பொழுது போக்கிக்கொள்வதற்குப் போதிய அளவு உணவும் இறைச்சியும் மற்றுமுள்ள இனிய தின்பண்டங்களும் அங்கே வைக்கப்பட்டிருந்தன. அவர்களெல்லாரையும் சாணக்கியர் அந்தக் குடகிலேயே உயிரோடு தீயினுக்கு இரையாக்கி மாய்த்தார். அதற்குப்பின், சந்திரகுப்தன் ஒவ்வோர் இரவும் வேறு வேறு அறையில் சயனிக்கவேண்டுமெனக் கட்டளையிட்டார். அவன் எந்தவேளையில் எவ்வறையில் பள்ளிகொள்ள வேண்டி வருமோவென அரண்மனையில் வேறு வேறாக எட்டுச் சயனக்கிருகங்கள் அமைத்தார்.

"அரசன் எவ்வறையிற் படுக்கவேண்டுமென ஒவ்வொரு நாளும் அந்தியில் நான் வந்து சொல்வேன்" எனச் சாற்றினார். அதற்குப்பின் ராக்ஷஸனுடைய பள்ளியறைக் கொலைபாதகரின் வாதை ஒழிந்தே போயிற்று.

பதினைந்து நாளைக்குப்பின், பெரிய சோதிட சாஸ்திரியொருவன் சந்திரகுப்தனண்டை வந்து, கடந்த விஷயங்கள்

பலவற்றை உள்ளபடி கணித்துச் சரியாகக் கூறினன். அவன்மீது சாணக்கியருக்குச் சந்தேகம் உதித்தது. ஆதலின், அவனை மிகவும் ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொண்டிருந்து, என்ன அவசரம் எந்த வேளையில் நேருமோ அதற்கு ஈடுகொடுக்கச் சித்தமாயிருக்கும்படி ராஜஸேனனை அங்கு நிறுத்தினர். ஜாதகம் பார்த்து வருங்காலப் பலன்களைச் சொல்வதெல்லாம் வழக்கம்போலச் சொல்லி முடிந்தபின், அந்தச் சோதிடன் சாமுத்திரிக சாஸ்திரத்திலும் வல்லவனெனக் கூறிச் சக்கரவர்த்தியின் கரத்தைப் பார்க்கவேண்டுமென்றான். சந்திரகுப்தன் கையை நீட்டியபோது, உள்ளங்கை ரேகைகளை உற்றுப் பார்ப்பான்போலச் சோதிடன் அண்மையில் நெருங்கினன். ஆனல், தன் ஆடைக்குள்ளிருந்து சரேலெனக் கட்டாரியை எடுத்துச் சந்திரகுப்தனுடைய மார்பிற் குத்தத் தன் கையை ஓங்கினன். சந்திரகுப்தன் ஜாக்கிரதையுள்ளவனாய், அடி கீழே இறங்குமுன், அவன் கையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டான். உடனே ராஜஸேனன், அப்போலிச் சோதிடனது தலையைத் தன் வாளினல் வீசித் துண்டித்தெறிந்தான்.

"இந்த முட்டாளுடைய சோதிடம், இங்ஙனம் நிகழுமென இவனுக்குச் சொல்லாமற் போயிற்றே! அன்றி, திடீரென்று இவன் கட்டாரியாற் கீறவேண்டுமாயின், அடிவயிற்றிற் குத்தி மேலே கீறவேண்டுமேயல்லாது மார்பிற் குத்திக் கீழே இழுக்கக் கூடாதென்னும் சாமானிய அறிவுகூட இவனுக்கு இல்லாமற் போயிற்றே! மேலே குத்துவதனல் தன் கையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு தடுத்து விடலாமென்று இவனுக்குத் தோன்றவில்லையே!" என்றார் சாணக்கியர். அதுமுதல், அரசனண்டை எவர் போவதாயிருந்தாலும், அவருடைய உடம்பைச் சோதித்துப்

பார்த்தபிறகே உள்ளே விடவேண்டுமெனச் சாணக்கியர் திட்டம் பண்ணினர்.

ஒரு மாதத்திற்குப் பின், 12 பேர் அடங்கிய ஒரு குதிரை வியாபாரிக் கூட்டத்தார் சக்கரவர்த்தியினண்டை போய், நேர்த்தியான குதிரைகள் பல அராட்டி, ஸைந்தவம், காம்போஜம், வனயு என்னும் இடங்களிலிருந்து கொண்டு வந்திருப்பதாகவும், குதிரைப் பரீக்ஷையில் தேர்ந்தவரான சக்கரவர்த்தியார் தமக்கு இஷ்டமானதைப் பொறுக்கி யெடுத்துக் கொள்ளலாமென்பதாகவும் கூறினர். சாணக்கியர், பலகுப்தன், ராஜஸேனன், புருஷதத்தன் என்பவர்களுடன் சந்திரகுப்தன் அவைகளைப் பார்க்கப்போனன். அவை யெல்லாம் சிறந்த ஜாதிக் குதிரைகளாயிருந்தன. ஆனல், சந்திரகுப்தன் அவைகளை உற்று நுட்பமாகப் பார்க்கத் தலைப்பட்டவுடன், அந்த ஸாயங்களில் ஒளித்து வைக்கப்பட்டிருந்த ஆயுதங்களைக் கைக்கொண்டு குதிரை வியாபாரிகளெல்லாரும் திடீரெனச் சந்திரகுப்தனையும் அவனுடன் வந்தவர்களையும் தாக்கத்தொடங்கினர்கள். சந்திரகுப்தன் குதிரைச் சவாரியிற் கைதேர்ந்தவன். சாணக்கியர் சொற்படி அவன் ஒரு குதிரைமீதேறிக்கொண்டு விரைந்து சென்றுவிட்டான். ஏமாந்து போன குதிரை வியாபாரிகளோடு சாணக்கியர், பலகுப்தன், புருஷதத்தன், ராஜஸேனன் என்னுமிவர்கள் சண்டை செய்தார்கள். தப்பியோடிப்போன சந்திரகுப்தன் இவர்களுக்குத் துணை செய்ய ஆட்களை அனுப்புவானெனக் குதிரை வியாபாரிகள் பயந்து, தங்கள் குதிரைகளின்மீது ஏறிக்கொண்டு ஓட்டம் பிடித்தார்கள். ஆயினும், சந்திரகுப்தன் அவர்களைத் தொடர்ந்து பின்பற்றும்படி புருஷதத்தன் வசமாக ஒரு சிறு குதிரைப் படையை அனுப்பினன். அவர்களெல்லா

ரும் பிடிபட்டனர். அவர்களைச் சித்திரவதை செய்து கொன்றார்கள். அதுமுதல் எந்தக் குதிரை வந்தாலும் அதைப் புருஷதத்தன் பார்த்து, அதற்குமேல் சக்கரவர்த்தியிடம் கொண்டுவரவேண்டுமெனச் சாணக்கியர் விதித்தார்.

ஆறு வாரங்கள் கழிந்த பின், அரண்மனையிலுள்ள ஸங்கர்ஷணாலயத்திற் சந்திரகுப்தன் தொழுது கொண்டிருக்கையில், அங்குள்ள அர்ச்சகப் பிராமணன் கொடிய விஷங்கலந்து அவனுக்குத் 'தீர்த்தம்' அளித்தான். ஆனால், 'தீர்த்த'த்தின் அடியில் வண்டல் ஏதேனும் படிந்துளதோவென அந்தப் பிராமணன் தங்கக் கிண்ணத்துக்குள் உற்று நோக்கியதைச் சோணோத்தரை கவனித்திருந்தாள். ஆதலின், அவள் சந்திரகுப்தன் கையினின்றும் அக்கிண்ணத்தைப் பிடுங்கி, அங்கொரு பூனையினண்டை வைத்தாள். அதைப் பருகியவுடன் பூனை இறந்தது. பெரிய ராஜத்துரோகத்துக்காக அந்தப் பிராமணனைச் சாணக்கியர் கங்கையிலாழ்த்திக் கொல்லுவித்தார். ஆலயப்பிரசாதமாயினும், பறவைக்கோ மிருகத்திற்கோ அல்லது அவ்வர்ச்சகனுக்கோ கொடுத்துக் கொஞ்சம் பருகச் சொல்லாமல், சக்கரவர்த்தி உட்கொள்ளலாகாதெனச் சாணக்கியர் ஏற்பாடு செய்தார்.

மற்றும் ஒரு வாரத்திற்குப்பின், ஒரு நாள் இரவு குரங்கு ஒன்று அரண்மனையின் கூரைமீது அவிழ்த்துவிடப் பெற்றிருந்தது. அதன் வாலில் எளிதில் தீப்பற்றக் கூடிய சிலை முதலியன அதிகமாகச் சுற்றிக் கொளுத்திவிடப்பெற்றிருந்தது. அது திகிலினாலும் குழப்பத்தினாலும் எரிவினாலும் வெருண்டு அங்குமிங்கும் தாவி அரண்மனை முகட்டின்மீது ஓடிக்கொண்டிருந்தது. நல்லவேளையாக அச்சமயம் காற்று வீசவில்லை. அதனால் தீ பரவவில்லை.

பாகுராயணன் கூச்சற்போட்டு எச்சரித்தமையின், சந்திர குப்தனும் சாணக்கியரும் விழித்துக்கொண்டு உடனே தீயை அவிக்கச் செய்தார்கள். சுரங்குக்கு உடையவன் அரண்மனை வட்டாரத்திற் பதுங்கிக் கொண்டிருந்தான். அவனைப் பிடித்து அவ்விடத்திலேயே தீயிட்டு எரித்துக் கொன்றார்கள். அதுமுதல் சுரங்குகளின் மீதும் கண் வைத்திருக்கவேண்டுமெனப் பலகுப்தனுக்கு உத்தரவாயிற்று.

சிலநாளைக்குப் பின், அந்நகரில் நடந்த யாகமொன்றைத் தரிசிப்பதற்குச் சந்திரகுப்தன் போனான். அத்வர்யு[1] வாயிருந்த பிராமணன் சுவரினண்டை போட்டிருந்த திவாசியின்மீது சந்திரகுப்தனை எழுந்தருளச் செய்தான். சிறிது நேரத்திற் கெல்லாம் சக்கரவர்த்திக்குப் 'புஸ்' என்னும் சத்தம் கேட்டது. திரும்பிப் பார்க்கையில் பெரிய ஸர்ப்பமொன்று படம் விரித்துக்கொண்டு தன்னைத் தீண்டச் சித்தமாயிருப்பதைக் கண்டான். சந்திரகுப்தன் உடனே முன்புறம் தாவியதனால், பாம்பு அவனைக் கடிப்பதற்குப் பதிலாக மெத்தையைக் கடித்தது. அதைப் பிடித்துக் கொன்றார்கள். அந்தப் பிராமணனை விஷ ஸர்ப்பங்களும் விரியன்களும் தேள்களும் நிறைந்த கூட்டிக்குள் அடைத்தார்கள். சிறிது நேரத்திற்குள் அவை அவனைக் கொன்றன. அதுமுதல் அரசர் அமரும் இடங்களில் அமைக்கப்பட்டிருக்கிற ஆஸனங்களை முன்னதாகப் பரீக்ஷித்துப் பார்ப்பது ராஜஸேனனுடைய பொறுப்பாயிற்று.

இங்ஙனமாக, சந்திரகுப்தனைக் கொல்வதற்கு ராக்ஷஸன் செய்த சதி ஒவ்வொன்றும் சாணக்கியருடைய

1. யஜ்ஞ புரோகிதன்.

பரம ஜாக்கிரதையினாலும், அவருடைய சாமர்த்தியசாலிகளான துணைவர்களின் தூங்காத் தீவிரத்தன்மையினாலும் வியர்த்தமாயிற்று. துரோகிகளுக்கு விதிக்கப்பெற்ற கடுந் தண்டனைகளினால் ராக்ஷஸன் இனி வேறு கொலையாளிகளைத் தேடிப் பிடிப்பது இயலாதாயிற்று. சாணக்கியர் செய்த ஜாக்கிரதையான ஏற்பாடுகளினால் இனி எவ்விதச் சூழ்ச்சியும் நிறைவேறாதெனத் தெரிந்தது. ஆதலின், சந்திரகுப்தனைப் பட்டத்தினின்றும் நீக்கி, அவனையும் சாணக்கியரையும் கொல்லவேண்டுமெனக் கொண்டிருந்த எண்ணத்தை நிறைவேற்றுவதற்கு இனிச் சதிக் கொலை பயன்படாதெனக் கண்டு ராக்ஷஸன், வெளிப்படையாகப் போர் புரிவதற்கு வழிதேடவேண்டியவனாயினன்.

---

## அத்தியாயம் 25

## வலை வீசியது

**மு**ன் அத்தியாயத்தில் விவரித்த சம்பவங்கள் நிகழ்ந்து இரண்டு மாதத்திற்குப் பின் ஒரு நாள் ஸுகங்கா மாளிகையிற் சந்திரகுப்தனுடைய தனியறையிற் சாணக்கியர் ராஜாங்க விஷயங்களைப்பற்றி அவனுடன் பேசிக்கொண்டிருந்தார்.

"ராக்ஷஸனுடைய பிடிவாதமும் ராஜபக்தியும் உண்மையில் அதிசயிக்கத் தக்கவை. நந்த வமிசத்தைச் சேர்ந்தவர்களிற் கடைசியானவனும் இறந்துபோன பின், அவன் வேறு முயற்சிகள் செய்யாமல் விட்டுவிடுவானென நினைத்திருந்தேன். ஆனதனாலேயே நந்த வமிசப் பூண்டின் வேர் ஒன்றுகூட இல்லாமல் அழிக்கச் செய்தேன். ஆனால், அதற்குப் பின்னும், தன் சதிக்கொலை முயற்சிகளெல்லாம் தவறிப்போன பின்னும், ராக்ஷஸனுடைய முயற்சிகள் தளரவில்லை. மலயகேதுவானவன் தன் தந்தை இறந்துபோனதன் நிமித்தம் ஏற்கெனவே நம்மீது கோபங் கொண்டிருக்கிறான். அவனுக்கு மகத ராஜ்யம் முழுமையும் அளிப்பதாகச் சொல்லி, அவனை ராக்ஷஸன் கிளப்பி யிருக்கிறானென்று இப்போது கடைசியாகச் சமாசாரம் வந்திருக்கின்றது. குலூதத்துச் சித்திரவர்மன், மலயத்துச் சிம்மநாதன், காசுமீரத்துப் புஷ்கராக்ஷன், ஸிந்துமாகாணத்துச் சுசேனன், மேகநாதன் என்னும் பாரஸிகன் என்பவர்களின் உதவியைக் கொண்டும், காந்தாரர், யவனர், காம்

போஜர், சகர், ஹூணர், கிராதர் ஆகிய இந்தப் படைகளின் உதவியைக் கொண்டும், மலயகேதுவும் ராக்ஷஸனும் வெகு சீக்கிர காலத்திற் பாடலிபுரத்தின்மீது படையெடுத்து வருவார்கள்" என்று சாணக்கியர் விளம்பினார்.

"இது பிரமாதமாயிருக்கின்றதே! இதற்கென்ன செய்யப்போகிறீர்கள்?" என்று சந்திரகுப்தன் வினவினான்.

"பூ! நந்தர் குலத்தை அறவே அழித்தொழிப்பேனெனச் சபதஞ் செய்து, அங்ஙனமே சாதித்த அசகாய சூரனுக்கு இவையெல்லாம் எம்மாத்திரம்? இவை அவனுக்குக் கொசுக்கடியும் ஆகா. இவைகளைப் பொருட்படுத்தி அவன் சிறிதும் கவலைப்பட மாட்டான். எனது கோபத்தீயானது, மூங்கில் முளைகளைப்போல எண்ணிக்கையற்று எங்கெங்கும் நிரம்பி நின்ற நந்தக் கிளைகளை யெல்லாம் எரித்துச் சாம்பராக்கியது. பயத்தினாற் பதறும் பறவைகள் போன்ற பிரஜைகளை மாத்திரம் அத்தீ தீண்டாது தவிர்த்தது. போஜனசாலையில் அக்கிரஸ்தானத்தினின்றும் என்னை இழுத்தெறிந்ததைக் கண்டு, 'என்ன வெட்கக்கேடான காரியம் செய்துகொண்டான் இந்தப் பிராமணன்' என்று தமக்குள் என்னை இகழ்ந்தவர்கள், கஜராஜமொன்றைப் பர்வத சிகரத்தினின்று சிங்கம் அடித்துருட்டியது போல நந்தராஜனைச் சிங்காதனத்தினின்று தலைகீழாகப் புரட்டியடித்துத் தள்ளியதை அந்தக் கண்ணாலேயே இப்போது கண்டனர். எனக்குள்ள கடமைகளிரண்டையும் நிறைவேற்றிவிட்டேன். அவர்களை அழித்ததோடு எனது ஆக்கிரோஷம் அடங்கி அவிந்து ஆறியது; உனக்கு முடி சூட்டிப் பாடலிபுரத்துச் சிம்மாசனத்தில் உன்னை நிலைநிறுத்தியதனால் எனது ஆசை ஈடேறியது.

"ஆனால், எனது கோபம் காட்டுத்தீயைப் போலத் தணிந்திருக்கிறதேயல்லாமல், அதன் தீக்ஷண்யம் குறைந்து போனதனாலன்று; மேலும் எரிப்பதற்கு வஸ்து வொன்றும் இல்லாமையினாலே அடங்கியிருக்கின்றது. இப்போது எரிப்பதற்கேற்ற வேறு வஸ்துக்கள் என் கோபாக்கினி வாடையில் வந்துகொண்டிருப்பதாகத் தெரிகிறது. அவ் வக்கினி திரும்ப ஜ்வலித்தெழுந்து அதற்குரிய காரியத்தைச் செய்யவேண்டும். ராக்ஷஸனை வசப்படுத்தி உனக்கு மந்திரியாக்கி, இச்சிற்றரசர்களையெல்லாம் நசுக்கித் தேய்க்கிறவரையில் என் காரியம் முற்றுப்பெறாது. ஆயினும், இவைகளெல்லாம் கௌடலியனுக்கு விளையாட்டுமாத்திரமேயாகும். மருள்கொண்ட இச்சிற்றரசர்கள் சிங்கத்தின் வாயில் தாமாகத் தாவி விழுகிறவர்களேயாவார்கள். எனது உச்சிக்குடுமி முடிக்கப்பெறாமல் இன்னும் தொங்கியாடிக் கொண்டிருக்கவேண்டுமென, விதி முடிந்த இவர்கள் என் விரும்புகிறார்களோ? எனது ஆண்மைக்கு இவர்களுடைய பலம் உறைபோடவுங் காணாதென்பதை இவர்கள் அறியார்" என்று சாணக்கியர் சொன்னார்.

"அதைப்பற்றி நான் ஐயுறவேயில்லை, ஐயனே! ஆனால், மற்றவர்களைப்போல ராக்ஷஸனையும் அழித்தொழிக்காமல், அவனை வசப்படுத்திக்கொண்டு, எனக்கு மந்திரியாக்க வேண்டுமென ஏன் விரும்புகிறீர்களோ? அன்பு கூர்ந்து சொல்லுங்கள்" என்று சந்திரகுப்தன் கேட்டான்.

"ஏனெனில், அவன் மானிடரத்தினம்; புருஷர்களுள் உத்தமன். அவனை வசப்படுத்திவிட்டால், மனமொப்பி அவன் இணங்கிப்போனால், நமக்குப் பெரிய பலக்குன்று போல்வான்; அவனது ராஜபக்தி அதியாச்சரியகரமானது. சாமானிய மனிதர்கள் தம் யஜமானரை அவர்கள் அரசரா

யிருக்குமட்டும் ஸேவித்துக்கொண்டிருப்பார்கள்; தேசப் பிரஷ்டராய் ஓடிப்போன அரசர்களைப் பின்பற்றுகிறவர் களும், 'நல்லகாலம் திரும்பி அவர்கள் மறுபடி அரசராவார்; அவராற் சம்மானங்கள் பெறலாம்' என்னும் ஆசை யினாலேயே தொடர்வார்கள். அரசர்களிடம் முன்னர்த் தாம் பெற்ற உபகாரங்களை யெண்ணி, அவ்வரச பரம் பரையே இனித் தோன்றாவண்ணம் அடியோடழிந்து போன பின்னரும் தம் அரசர்களுக்குச் சத்துருவானவர் களை எதிர்த்து அவ்பாஜபக்தியுடன் ராக்ஷஸனைப்போல உழைத்துப் போராடுகிற புருஷர் அருமையினும் அருமை. இத்தகையோரை, சந்திரா, நயரீதியிலோ பயரீதியிலோ வசப்படுத்திக்கொள்ள வேண்டுமேயல்லாமல், உபயோகமற்ற காட்டுச்சிற்றரசர்களையும் மேட்டுச்சிற்றரசர்களையும்போலக் கொல்லலாகாது" என்று சாணக்கியர் கிளத்தினார்.

"ஆனால், ஸ்வாமி! தாங்களே எப்போதும் தலைமை யமைச்சு வகித்திருக்கவேண்டுமென விரும்புகின்றேன். தங்கள் ஸ்தானத்தில் ராக்ஷஸன் இருப்பது, பூ விற்குங் கடையிலே புல் விற்பதுபோலிருக்குமே" என்று சந்திர குப்தன் கூறினான்.

சாணக்கியர் உள்ளங்குளிர்ந்து சற்று முகமலர்ந்து, "சந்திரா! உனக்கு வேண்டியபோதெல்லாம், நோயாளிக்கு ஔஷதம்போல, உதவ நான் ஸித்தமாயிருப்பேன். ஆனால், முதன் மந்திரியாக எப்போதும் இருக்கமுடியாது. எனக்குரிய ஆசிரியத் தொழிலை நான் கவனிக்கவேண்டும். வைதிக தர்மத்தை நடத்தவேண்டும். ஆதலால், என்னை விட்டுவிடு. ராக்ஷஸன் உத்தமமான அமைச்சனாவான். அன்றியும், அவன் மகதர்களுள் சிறந்த மகதன். பல தலை முறைகளாக அவனுடைய முன்னோர்கள் மகத மன்னர்

களிடம் ஸேவித்திருக்கிறார்கள். அப்படிப்பட்டவன் மந்திரியானால் பெரிய ஆதாரமாயிருப்பான்; எங்கெங்கேனும் உன் பிரஜைகளுள் அதிருப்தித்தழற்புகை சிறிது சிறிது தலைகாட்டுவதாயிருந்தாலும், அதை அணைத்து ஆற்றிவிடுவான்" என்று சொன்னார்.

"ஆனால், இத்தனை தடவை எனக்கு விரோதமாகச் சண்டைசெய்து, ஸாத்தியமான வகைகளிலெல்லாம் என்னைக் கொல்ல வழி தேடியவனிடம் நான் பூர்ண நம்பிக்கை எங்ஙனம் வைக்கலாம்?" எனச் சந்திரகுப்தன் வினவினான்.

"ராஜ்ய தந்திரத்தில் அது இன்றியமையாததாகும். நேற்றைச் சத்துரு இன்று மித்ரனாவான். அரசனானவன் தன் ஆட்களோடு, அப்போதைக்கப்போது இருக்கும் சந்தர்ப்பத்தை அனுசரித்து நடந்துகொள்ளவேண்டும்" என்றார் சாணக்கியர்.

"அரசனாயிருப்பவன், எவனையும் நண்பனெனத் தீர்க்கமாக நம்பக்கூடாது; ஏனெனில் இனியொரு நாள் அவன் பகைவனாகக்கூடும்; எவனையும் சத்துருவென வைரம் பாராட்டக்கூடாது; ஏனெனில், அவன் இனியொரு காலத்தில் மித்ரனாகப் பரிணமிப்பன் என்று கொள்ளும்படியாகுமோ?" எனச் சந்திரகுப்தன் வினவினான்.

"அது அப்படித்தான். அரசியல் வியவகாரங்களில் ஒருவன்மீது எப்பொழுதும் சங்கையின்றிப் பூர்ண நம்பிக்கை வைப்பவன் மூடனே. ஆனதனாலேயே, ஊர் வியவகாரங்கள், உத்தியோகஸ்தர் சங்கதிகள், மற்றவர்களின் விஷயங்கள் முதலிய எல்லாவற்றையும் ஒற்றர்களின் மூலமாக அரசர்கள் தெரிந்துகொள்ளவேண்டும். ஒற்றர்

களை மூன்று வேறு வேறு இனங்களாக வகுத்துவைக்க வேண்டும். அவர்களில் ஒருவருக்கொருவர் தெரிந்து கொள்ளாமலும், ஒருவருக்கொருவர் சம்பந்தமில்லாமலும் இருக்கும்படி அமைக்கவேண்டும். ஆனால், ராக்ஷஸனை உண்மையில் நாம் சரிப்படுத்திக்கொள்ளும் பக்ஷத்தில் அவன் எல்லாவகைகளிலும் மனப்பூர்வமாகவும் உண்மை யாகவும் நடப்பானென நான் உறுதிகூறுவேன். உன் மற்ற மந்திரிகளிலெவருக்கும் அவனுக்குள்ள யோக்கிதையிற் பாதிகூட இல்லையென்பேன். அவனுடைய தீரமும், புத்தியும், ராஜபக்தியும் ஒப்புயர்வற்றன. முன்னர் உனக்குச் சத்துருக்களாக இருந்தவர்களிடம் மந்திரியாய் இருந்தவனென்பதனால், அவனுடைய யோக்கியதையைக் குறைத்துக் கூறலாகாது. அதனால் அவனுக்கு ஒரு தோஷமும் ஏற்படாது. அரசர்கள் மாறுவார்கள்; ஆனால், பிரஜைகளும் ராஜாங்க உத்தியோகஸ்தர்களும் மாறார். ஆனால், அவன் இன்னும் நமக்குக் கொடிய சத்துருவாயிருக்கிறான், நம்மை நசுக்குவதற்குத் தன்னாலான பிரயத்தனங்களை யெல்லாம் செய்கிறான். முதன் முதலில் அவனுடைய தந்திரங்களை யெல்லாம் பாழாக்கி, அவனுடைய மித்திரகோஷ்டிகளை யெல்லாம் வேரறுத்து, அவர்களுடைய ராஜ்யங்களனைத்தையும் நம் ஸம்ஸ்தானத்திற் சேர்த்துக்கொள்வோம்'' என்று சாணக்கியர் சொன்னார்.

''ஸ்வாமி, இதற்கு என்ன ஏற்பாடுகள் இதுவரையிற் செய்திருக்கிறீர்களோ; எனக்குச் சொல்லலாகுமோ?'' என்று சந்திரகுப்தன் வினவினான்.

''அவசியம் சொல்லுகிறேன். என் வலையை ஏறக்குறைய முற்றமே வீசிவிட்டேன் என்னலாம். எனக்கு மூலபலமான பர்வதேசுவரன், சந்திரகுப்தன் என்னும்

இருவருள் ஒருவரைக் கொன்றுவிட்டால், எனக்குத் தீரா நஷ்டம் விளைக்கலாமென்றெண்ணி, ராக்ஷஸன் மோகினி வடிவமான விஷமாதொருத்தியை யனுப்பி, நம் மித்திரர்களுள் உறுதிவாய்ந்த உத்தமனை பர்வதேசுவரனைக் கொல்லுவித்தானென நாடெங்கும் புரளி எழுப்பியிருக்கிறான். பர்வதேசுவரனுடைய மரணத்திற்கு நானே காரணமென மலயகேதுவுக்குச் சொல்லி, அவனைப் பந்தோபஸ்தான இடந்தேடி ஓடிப்போம்படி செய்யப் பாகுராயணனை நானே அனுப்பினேனென்பது உனக்குத் தெரியும். இந்தச் சமயத்தில் உனக்குப் பட்டாபிஷேகம் செய்விக்கவேண்டியிருந்தது. மலயகேதுவின் தந்தைக்குப் பாதி ராஜ்யம் கொடுக்கிறோமென நாம் வாக்களித்திருந்தமையின், முடிசூட்டுங்காலத்தில் மலயகேது சுற்றுப்புறத்திற் சமீபமாக வட்டமிட்டுக்கொண்டிருப்பது நமக்கு இடைஞ்சலாயிருக்கும். வைரோசகன் பேராசை கொண்டவன், கிருத்திரிமக்காரன்; ஆனதனால், அவனுக்கும் தக்க பிராயச்சித்தம் செய்யவேண்டுமென்றிருந்தேன். ஆனால், பர்வதேசுவரனுடைய சாவுக்கு நாம் எவ்வகையிலும் காரணபூதர்களல்லரெனக் காட்டுவதற்கு மலயகேது 'பாரி'யானதைச் சாக்ஷியாகக் கைக்கொண்டேன். பர்வதேசுவரனை நாம் வேண்டுமென்றே கொன்றிருந்தால், அவனுடைய மகன் தப்பியோடிப்போகவிட்டிருப்போமா என்று ஜனங்களுக்குச் சொல்லுமாறு ஒற்றர்களுக்கு உபதேசித்திருந்தேன். மலயகேது உலகானுபவம் இல்லாதவன், சூதுவாது தெரியாதவன்; கொல்வதற்குக்கூடத் தகாத அற்பப்பிராணி. அவன் என்ன குயுக்திகள் பண்ணினாலும் அவைகளையெல்லாம் நாம் எளிதில் தடுத்துவிடலாம். நமது நகரத்தில் ராக்ஷஸனிடம் சம்பளம் பெற்றுக்கொண்டு

நமக்கு விரோதமாகச் சதி செய்துகொண்டிருக்கிறவர்கள் இருவரை நம் ஒற்றர்கள் ஏற்கெனவே கண்டு பிடித்திருக்கிறார்கள். அவர்களாவார், சகடதாஸன் என்பவனும் சந்தனதாஸன் என்பவனுமாகும். சீக்கிரத்தில் அவர்களை நான் வழிக்குக் கொண்டுவந்துவிடுவேன். ஏதோ ஒரு வகையில் சூதுவாது செய்து அவர்களை நமது நோக்கத்தைச் சாதிப்பதற்குச் சாதனமாக்கிக் கொள்வேன். அபயதத்தன், பிரவீரகன், விபத்ஸகன் முதலானவர்களை முன்னரே ஒழித்துவிட்டேன். பாகுராயணன், பத்ரபடன், புருஷதத்தன், டிங்கரதன், பலகுப்தன், ராஜஸேனன், லோகிதாக்ஷன், விஜயவர்மன் என்பவர்கள் நம்மிடத்துப் பூர்ணாபிமானமும் பக்தியும் நம்பிக்கையும் உள்ளவர்களென்று பலநாட்பழக்கவொழுக்கங்களினால் கண்டிருக்கிறோம். சகடதாஸன் விஷயத்திலும், சந்தனதாஸன் விஷயத்திலும், இவர்களின் விஷயத்திலுங்கூட நான் கொடுங்கோன்மையான தண்டனைகள் செய்வதைக் கண்டு மனம் வெறுத்ததாகச் சாக்குச்சொல்லி, இவர்களெல்லாரும் நம்மைவிட்டு நீங்கிப் பகைவருடன் போய்ச் சேர்ந்து கொள்வார்கள். ஜீவஸித்தி நமக்காக இதுகாறும் பெரிய பெரிய காரியங்கள் எத்தனையோ செய்திருக்கிறானல்லவா? அவனும் இப்பொழுது போய்ச் சேர்கிற நம்மாட்களும் ராக்ஷஸனது புத்தியைப் பேதித்துப் பாடலிபுரத்தின்மீது துணிந்து படையெடுக்குமாறு செய்வார்கள். நீயும் நானும் அடிக்கடி அபிப்பிராயபேதத்தினால் சண்டையிட்டு மனஸ்தாபப்படுவதாகக் காட்டிச் சத்துருவுக்கு உரமூட்டுவோம். முடிவில், கௌமுதித் திருவிழாத்தினத்தன்று கைகலந்த சச்சரவு செய்து நாம் இருவரும் மாற்றமுடியாத மனஸ்தாபமடைந்ததாக நடிப்போம். அந்தத் திருவிழாவைச் சிறப்பாகக் கொண்டாட வேண்டுமென்று நீ தெளிவாகக்

கட்டளையிட, அதற்கு நேர்மாருக நான் அவ்விழா வைக்கொண்டாடக்கூடாதென எதிராகக் கட்டளையிடு கிறேன். அதனுல் நீ என்மீது கசந்து வெறுப்புற்று இகழ்ந்து பகைகொண்டவனைப்போல, ஆக்கிரோஷத்தோடு பல பல விதமாக நிந்தித்து என்னை உத்தியோகத்தினின்றும் நீக்கிவிடு. இந்தச் சச்சரவுகளையும் வேலையினின்று நீக்குநிலையும் சாதக மாகக்கொண்டு நம்மவர்கள் மலயகேதுவினிடம் வேலை செய் வார்கள். மலயகேதுவைவிட்டு ராக்ஷஸன் உன்னிடம் வந்து சேர்ந்து பிரதான மந்திரியாகும் நோக்கங்கொண்டிருக்கிரு னென மலயகேதுவின் மனத்தில் அவர்கள் சங்கையெழுப்பி விடுவார்கள். அவனுக்குத் துணையாக இருக்கிற ஐந்து சிற்றரசர்கள்மீதும் சந்தேகமுண்டாகி அவர்களை அவன் கொல்வதற்கும் வழி வகுக்கிறேன். மற்றவர்களெல்லாரும் கிள்ளுக்கீரைகளே; அவர்களைப்பற்றிச் சிந்திக்கவேண்டாம்" என்று சாணக்கியர் தம் தந்திராலோசனைகளைச் சந்திரகுப்த னுக்கு எடுத்துச் சொன்னர்.

"விளையாட்டுக்காகவும் தங்களை நான் நிந்திப்பதும் நீக்குவதும் எளிதிற் செய்யத்தக்க காரியமல்லவே! என் மனம் ஒப்பாதே! அந்த நாடகத்தை நான் எப்படி நடிப் பேன்?" என்று சந்திரகுப்தன் குரலிறங்கிக் கூறினன்.

"ஆனல், அது அவசியம்; அப்படிச் செய்தே தீர வேண்டும். அந்நாடகத்தை நன்ருக நடி. இச்சூழ்ச்சிகளின் நுண்ணிய விவரங்களை அப்போதைக்கப்போது உனக்கு நான் அறிவிப்பேன்" எனச் சாணக்கியர் வற்புறுத்திஞர்.

அதற்குப் பிறகு சோணேத்தரை கதவைத்தட்டி, உள்ளே வந்தாள். "சாந்தவதி மகாராணியார் பூஜ்யராகிய சாணக்கியரைப் பார்க்க வந்திருக்கிருர்" என்று அவள் சந்திரகுப்தனிடம் அறிக்கை செய்துகொண்டாள்.

"நிரம்பச் சந்தோஷம்; எனது பாக்கியம்" என்றார் சாணக்கியர். "உள்ளே வரச்சொல்லு" என்றான் சந்திர குப்தன். சோணோத்தரை வெளியேபோய், மகாராணி சாந்த வதியை அழைத்து வந்து கதவைச் சாத்திக்கொண்டு போய் விட்டாள். தன் கணவனுக்கும் சாணக்கியருக்கும் நமஸ் காரம் செய்து சாந்தவதி ஓர் அலங்காரமான திவாசியின் மீது கீழே உட்கார்ந்தாள். அவளுடைய கண்களில் நீர் ததும்பிக்கொண்டிருந்தது.

"குழந்தாய்! என்ன சங்கதி?" எனச் சாணக்கியர் வினவினார்.

அப்போது சந்திரகுப்தன், "ஸ்வாமி, தங்களிடம் ஒரு சங்கதி சொல்ல மறந்துவிட்டேனே. இவளுடைய ஜாத கத்தை அரண்மனை ஜோஸியருக்கு அனுப்பியிருந்தேன். இவளுக்குச் சந்தானம் இல்லையென அவர் ஜோஸியம் பார்த்துச சொன்னார்" என்றான்.

"அவனைச் சவுக்கடி அடிக்கவேண்டும். அவன் ராக்ஷஸ னுடைய வேவுகாரனாயிருப்பினும் இருக்கலாம். அவனை நான் தகுந்தபடி பார்த்துக்கொள்கிறேன்" என்றார் சாணக்கியர்.

அப்போது சாந்தவதி, "ஆனால், ஸ்வாமீ, அவன் சொல்லியது சரியாயிருப்பினும் இருக்கலாமே. என் கர்ம தோஷத்திற்கு அவன் என்ன செய்வான்? அவனை அநியாய மாகத் தண்டிப்பானேன்?" என வினவினாள்.

"ஊளாதே! அவன் சொல்லியது உண்மையாகவே பலிப்பதாயிருப்பினும், அப்படிப்பட்ட அசுபமான வார்த் தையை எடுத்துச்சொல்லியதற்காக அவனைத் தண்டித்தல் வேண்டும். துன்பம் உண்டாக்குவதற்காக அவனுக்கு நாம் சம்பளம் கொடுத்து வைத்திருக்கவில்லையே? முக்கியமாக

இந்தத்தறுவாயில் இப்படிப்பட்ட ஜோஸியங்கள் நம் மனத்தைக் கெடுத்துவிடும். அவனுக்குப் பதிலாக நன்குணர்ந்தவனொருவனை அந்தஸ்தானத்திற்கு நியமிக்கவேண்டும். அதுவும் இப்போதே செய்யவேண்டும். ஆனால், இந்த முட்டாள் சொன்ன அசட்டு ஜோஸியத்தை நினைத்துத் துன்பப்படாதே. பெரிய முனிவரொருவரைக் கொண்டு சந்திரனுடைய ஜாதகத்தை நானே பார்த்திருக்கிறேன். சந்திரனுக்குக் கீர்த்திவானான புத்திரன் பிறப்பானென்றும், அவனினும் சிறந்த கீர்த்தி வாய்ந்த பேரன் தோன்றுவானென்றும், இவனுடைய சந்ததியார் அநேக தலைமுறைகள் ஆட்சி புரிவார்களென்றும் அவர் எனக்குச் சொன்னார். அது பொய் போகமாட்டாது" என்று சாணக்கியர் சொன்னார்.

சாந்தவதி தன் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, "தாங்கள் சொல்லிய வார்த்தையே எனக்குப் பிரமாணம். அதையே நான் உறுதியாகக் கொள்வேன். என் கணவரது ராஜபரம்பரை யருமல் க்ஷேமமாக நீடித்திருக்குமானால், எனக்குப் போதும். அதுவே என் ஆசை" என்றாள்.

பின்பு அவள் கணவனுக்கும் சாணக்கியருக்கும் மறுபடி நமஸ்காரம் செய்து வெளியே போய்விட்டாள். அவள் போனவுடனே சாணக்கியரும் சந்திரகுப்தனிடம் விடைபெற்றுக்கொண்டார். அவர் செல்லும்போது, "மேலே என்ன என்ன காரியம் எவ்வாறு பரிணமிக்கிறதென்பதைப் பற்றி மூடி முத்திரையிட்ட கடிதங்கள் உனக்கு வரும். அவைகளைச் சாரங்கரவன் கொண்டு வருவான்" என்று சொன்னார்.

அதற்குச் சந்திரகுப்தன், "உங்கள் சீடன் சாரங்கரவன் கேவலம் மடையனாயிருக்கிறானே!" என ஆச்சரியப்பட்டுக் கேட்டான்.

"அவன் சூதுவாது அறியாத சுத்தாத்மா. பரிபூர்ண பிரபு பக்தி வாய்ந்தவன்; ஆயினும், புத்தியில்லாதவனல்ல. ஆனால் அவனுக்குக் கபடம் தெரியாது. ஒருபோதும் ஒரு பொய்யும் பேசான்" என்று சாணக்கியர் பதிலுரைத்தார்.

பின்பு சாணக்கியர் ராஜாங்கப் பல்லக்கேறிப் பிராமணத் தெருவிலுள்ள தமது கூரை வீட்டுக்குப் போனார். போகும் வழியில் அவரை ஜனங்கள் பார்த்துப் புகழ்ந்து மகிழ்ந்துகொண்டிருந்தார்கள். "அதோ சாணக்கியரென்னும் மகாபுருஷர் போய்க்கொண்டிருக்கிறார். சாணக்கியர் உயிரோடுள்ள அளவும், சக்கரவர்த்தியினிடம் சுமுகமாய் இருக்குமளவும் எப்படிப்பட்ட சத்துருபயமும் நமக்கு இல்லை. எல்லாரும் இவர் வலையிற் சிக்கிக்கொள்வார்கள்" என்று ஜனங்கள் பேசிக்கொண்டனர்.

சாணக்கியர் வீடு போய்ச் சேர்ந்ததும் பல்லக்கை அனுப்பிவிட்டார். வெளித்திண்ணையில் சாரங்கரவன் என்னும் சிஷ்யன் உட்கார்ந்திருந்தான். தம் அனுமதியின்றி எவரையும் உள்ளே விடலாகாதென அவனுக்குப் பணித்துப் பின், தனியே அவர் உள்ளே போனார். ஸ்நானம், மாத்தியாந்நிகம், ஜபம், தேவதார்ச்சனை முதலியவை கழிந்தபின், போஜனம் செய்ய அமர்ந்தார். அவருடைய உணவு மிகச் சாமானியமானது; பல பதார்த்தங்களோடு கூடியதன்று. ஸ்ரீமதி கௌதமியே அவருக்கு அன்னம் பரிமாறினாள். அவருக்குப் பிரியமாயுள்ள மிளகு ரஸமும் பப்படப்பொரியலும் உண்கையில், அரண்மனை ஜோஸியனைப்பற்றியும், அவனுக்குப் பதிலாக வேறொருவனை நியமிக்கவேண்டிய ஆவசியகத்தைப்பற்றியும் தம் மனைவிக்குச் சொன்னார். அவள் முகத்தில் ஆச்சரியக்குறி தோன்றியதைக் கண்டு, "அது ராஜ்ய தந்திரம். அரசன் சம்பளம் கொடுத்து ஜோஸியரை

வைத்துக்கொண்டிருப்பது இத்தகைய அனிஷ்ட விஷயங்களை உரைப்பதற்காகவன்று. அவன் சொல்வது சரியோ தப்போ நாம் பார்க்கவேண்டியதில்லை. ஏனெனில், அது உண்மையென்று அவனுக்கு நிச்சயமாகத் தெரியுமெனவே சொல்லமுடியாது" என்று சாணக்கியர் சொன்னார்.

"உங்கள் கொள்கைகளெல்லாம் எனக்கு எட்டா. எனக்கு நம் பண்டைக்கதைகளே தெரியும். மரணபரியந்தம் கணவனிடத்துச் சலனமில்லாத பக்தி மனைவிக்கு இருக்க வேண்டும் என நம் சாஸ்திர புராணாதிகள் சொல்லக் கேட்டிருக்கிறேன். கணவனே மனைவிக்குத் தெய்வம். வேறொரு தெய்வத்தை அவள் தொழவேண்டியதில்லை. ஆதலின், தாங்கள் எது செய்யினும், அது எனக்குச் சரி" என்று ஸ்ரீமதி கௌதமி பணிவுடன் பகர்ந்தாள்.

"இம்மைப்பயனையும் மறுமைப்பயனையும் அளிப்பதற்கு ஸ்திரீகளுக்கு அந்தப் போதனையே போதும். அவ்வழியே அவர்கள் நடப்பார்களாயின், ராஜர்களும் ராஜ்யவியவகார தந்திரிகளும் கைக்கொள்கிற கோணல் வழிகளைப் பின்பற்றுவதைக்காட்டிலும், அவர்களுக்கு மனவமைதி மிகும். வாஸ்தவத்தில், அப்படிப்பட்ட மாதர்கள் இல்லையெனின், நாம் கெட்டுச் சீரழிந்து போவோம். நம் வீட்டாரைத் தவிர வெளியார் எவரையும் நாம் நம்பமாட்டோம். சிறிதும் களங்கமில்லாமல், நாம் நம்பத்தக்கவர் ஒருவரேனும் நம் வீட்டில் இருக்கவேண்டாமா? அதற்குப் பிரதியாக அவர்களுக்கு நாம் உண்டியுடுக்கையளித்துப் பாதுகாக்கின்றோம்; வளமையிலும் வறுமையிலும் ஒரே மாதிரியாக அவர்களிடம் அன்பு பாராட்டுகின்றோம்; வாழ்விலும் தாழ்விலும் பிரேமை குன்றாதிருக்கின்றோம். அவர்களுக்குற்றது நமக்கேயுற்றதென இன்பமும் துன்பமும் அனுபவிக்கின்

மேனும்" என்று சாணக்கியர் தம் மனைவிக்கு அறிவு புகட்டினர்.

பச்சைமிளகு ஊறுகாயுடன் தயிருஞ் சோறும் உண்டு அவர் போஜனம் முடித்தார். அவ்வூறுகாயில் அவருக்குப் பிரியம் அதிகம். பின்பு அவர் வாயிற் கதவினண்டை ஓர் அறையில் உட்கார்ந்து, நாட்டுப்புறங்களிலிருந்து உத்தி யோகஸ்தர்களும் ஒற்றர்களும் அனுப்பியிருந்த அறிக்கைகளைப் படித்துப் பார்க்கலானர். ஸ்ரீமதி கௌதமி உணவுண்ண உள்ளே போனள்.

தாசரி யொருவன் யமதர்மராஜனுடைய படத்தை வைத்துக்கொண்டு தெருவோடு வந்தான். அந்தப் படத்தில் யமன் குரூரமான பார்வையுள்ள நீரெருமையை வாகனமாகக் கொண்டிருந்தான். சாணக்கியரின் வீட்டு வாசலுக்கு வந்து அந்தத் தாதன், "யமனை வணங்கி வழிபடுங்கள்! மற்றத் தெய்வங்களெல்லாம் தங்கள் பக்தர்களை நமன் வாயினின்றும் மீட்கச் சக்தியற்றவர்களாயிருப்பதனல், அவர்களைப் பிரார்த்தித்துப் பயனென்ன? அன்றியும், ஜனங்கள் நினைக்கிறதுபோல யமன் அவ்வளவு பயங்கரமான தெய்வமன்று. அவனைப் புகழ்ந்து பாடியே நான் வயிறு வளர்க்கிறேன். இங்ஙனம், மற்றவர்களைச் சாகச்செய்கிறவன் என்னை வாழச்செய்கிருன். இம்மனைக்குள் புகுந்து யமனுடைய பெருமைகளைப் பாடுவேன்" என்று கூவி வாசற்படிக்கு ஏறிப்போனன்.

அவனைச் சாரங்கரவன் பார்த்து, "அப்பா! நீ உள்ளே போகக்கூடாது" என்றான்.

"ஏன்? இது யார் வீடு?" எனத் தாதன் வினவினன்.

"என் ஆசாரியராகிய சாணக்கியர் என்னும் பெரியார் வீடு" என்று சாரங்கரவன் சொன்னன்.

அந்த வார்த்தையைக் கேட்டுத் தாசரி புன்முறுவல் கொண்டு, "ஓ! அப்படியானால், என்னைப்போன்ற யமபக்த ரொருவருடைய வீடாயிற்று. உள்ளே போய் யமதர்ம ராஜனைக் குறித்துச் சில விஷயங்கள் அவருக்கு நான் சொல்லவேண்டுமாகையால், என்னை உள்ளே போகவிடு" என்று கேட்டான்.

சாரங்கரவனுக்குக் கோபம் மூண்டது; "மடையா! என் ஆசாரியருக்குப் போதிக்கிற அளவு அகம்பாவமா உனக்கு?" என அவன் கடிந்து சொன்னான்.

"ஐயனே! கோபப்படாதே. எல்லாருக்கும் எல்லாமே தெரிந்திருக்கமுடியாது. உன் ஆசாரியரும் அவருக்குத் தெரியாத சில விஷயங்களை என்னிடம் தெரிந்துகொள்ள லாம்" எனத் தாசரி பதில் சொன்னான்.

"அடே, அடிமுட்டாள் பயலே! மகாத்மாவான சாணக்கியர் எப்படிப்பட்டவரென்று உனக்குத் தெரியாது. உன்னைப்போன்றவனொருவன் அவருக்குக் கற்பிக்கக்கூடிய விஷயம் ஏதேனுமுண்டோ?" எனச் சாரங்கரவன் வினவினான்.

"ஆம், உண்டு. நீ சொல்கிறபடியே அவர் அவ்வளவு புத்திசாலியாயிருந்தால், என்னிடமிருந்தும் அவர் தெரிந்து கொள்ளத்தக்க விஷயம் உண்டென அறிவார். 'சந்திரனை விரும்பாதவர் யார்?' என அவரைப் போய்க் கேள்" என்று தாசரி சொன்னான்.

"இந்தப் பயனற்ற சங்கதி தெரிவதனால் என்ன பிரயோஜனம்? சந்திரனை யார் விரும்பினால் என்ன, யார் விரும்பாவிட்டால் என்ன?" எனச் சாரங்கரவன் வினவினான்.

"அதனால் என்ன பிரயோஜனமென்று உன் ஆசாரியருக்குத் தெரியும். அஃதிருக்கட்டும். தாமரை மலர்களுக்குச் சந்திரனைக் கண்டால் ஆகாது என நீ தெரிந்துகொள். சந்திரனைப்போல மண்டலமாக மலர்ந்திருப்பினும் மனோஹரமான இம்மலர்கள் சந்திரனைப் பகைக்கின்றன" என்று தாதன் மொழிந்தான்.

தாம் இருந்த இடத்திலிருந்தே சாணக்கியர் மேற்கூறிய சம்பாஷணையை உற்றுக் கேட்டு, வந்திருப்பவன் தம் ஒற்றர்களுள் ஒருவனான நிபுணகன், ராஜ்யத்தில் அதிருப்தி வாய்ந்து பகை கொண்டிருப்பவர்களைப் பற்றிச் சமாசாரம் சொல்ல வந்திருக்கிறானென உடனே தெரிந்துகொண்டார். ஆதலின், "பேதாய்! போ! இந்த அசட்டுப்பிதற்றல் இவ்விடத்திற் செல்லாது. வேறு எங்கேனும் போய்ச்சொல்லிக்கொள்" என்று தாசரிக்குச் சாரங்கரவன் பதில் சொல்லியனுப்பிக்கொண்டிருக்கையில், சாணக்கியர் போய்த் தாதனை நோக்கி, "தம்பி! உள்ளே வா, உனக்குத் தெரிந்ததைச் சொல். எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ தெரியாது. எவருக்கு என்ன விஷயம் தெரிந்திருக்குமென்று சொல்லமுடியாது. அறிவு அகண்டமானது. ஆதலின், எவரிடத்திருந்தும் நாம் தெரிந்துகொள்ளத் தக்க விஷயம் இருக்கக்கூடுமென்னுமளவு அறிவு எனக்கு உண்டு" என்று சொன்னார்.

பின்பு அவர் அவனைத் தமது தனியறைக்கு அழைத்துக்கொண்டு போனார். அங்கே அவனை நோக்கி, "குடிகளெல்லாரும் குறைகூறாமல் திருப்திவாய்ந்திருக்கிறார்களா?" என வினவினார்.

"ஸ்வாமீ! மிக்க ஆராய்ச்சியோடு தாங்கள் செய்து வரும் பரிபாலனமுறையினாலும், அப்போதைக்கப்போது

தக்க பரிகாரங்களைத் தாங்கள் செய்து வருவதனாலும் பிரஜைகளெல்லாரும் நம்மிடத்துப் பிரியங்கொண்டிருக்கிறார்கள்; நமக்குச் சார்பாகவே இருக்கிறார்கள். நல்ல துரைத்தனத்தினாலும் ஸமரஸ ஸாமோபாயத்தினாலும் சமாதானப்படுத்தி வசப்படுத்தமுடியாதவர்கள் மாத்திரமே அரசனிடத்து இன்னும் அதிருப்தி வாய்ந்திருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்கள் இந்நகரில் மூவர் உண்டு.''

"அந்த அபமிருத்தியுவுக்காளாவார் யார் யார்?'' எனச் சாணக்கியர் வினவினார்.

"முதல்வன், ஜீவஸித்தி என்னும் பௌத்த பிக்ஷு; அவன் பில்லி சூனியவித்தையில் கைதேர்ந்த கொடியன், ராக்ஷஸனுக்கு மிகவும் ஆப்தமாயுள்ளவன்; அவனிடத்தில் ராக்ஷஸனுக்கும் பரம நம்பிக்கை உண்டு. பர்வதேசுவரன் மரணத்திற்குக் காரணமாயிருந்த விஷமாதை யனுப்பும்படி ராக்ஷஸனைத் தூண்டியவன் அவனே. நமக்கு இணங்காச் சத்துரு அவனே'' என்று நிபுணகன் கூறினான். ஜீவஸித்தியின் உண்மையான தன்மை இன்னதெனத் தம் சொந்த ஒற்றனுக்கே தெரியாமையைக் கேட்டுச் சாணக்கியர் தமக்குள் மிக்க திருப்தியும் சந்தோஷமும் எய்தினார்.

ஆயினும், கோபங்கொண்டவரைப்போல நடித்து, "காலக்கிரமத்தில் அவனுக்குத் தக்கபடி மரியாதை நடத்துவேன். மற்ற இருவர் யார்?'' எனக் கேட்டார்.

"இரண்டாமவன், ஒரு காயஸ்தன்; மனுக்கள் எழுதிக் கொடுத்து ஜீவிக்கிற எழுத்துக்கூலி. அவன் பெயர் சகடதாஸன்.''

"காயஸ்தன் ஒரு பொருட்டல்ல. அற்ப குமாஸ்தா ஒருவன் செய்யக்கூடிய காரியங்களுக்கோர் எல்லையுண்டு.

ஆயினும், அவனையும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டியதே" என்று சாணக்கியர் தமக்குத் தாமே சொல்லிக்கொண்டார். அதன்பின், "மூன்றாமவன் யாவன்?" என நிபுணகனைக் கேட்டார்.

"மூன்றாமவன், சந்தனதாஸன் என்பவன். இந்நகரத்துக்குள் பிரஸித்தமான பெரிய நகை வியாபாரி; ராக்ஷஸனுக்குப் பிராண ஸ்நேகிதன். ராக்ஷஸன் தன் மனைவியையும் மகனையும் அவனிடமே ஒப்பித்துப் போயிருக்கிறான்" என்று நிபுணகன் செப்பினான்.

"என்ன! அதை எப்படிக் கண்டு பிடித்தாய்?" எனச் சாணக்கியர் அதிசயமாகக் கேட்டார்.

தான் அந்த ரகஸியத்தைக் கண்டுபிடித்ததைத் தன் யஜமானர் வியந்து பாராட்டுகிறாரென உள்ளம் மிக மகிழ்ந்தவனாய் நிபுணகன் தன் இடுப்பு வேஷ்டியினின்று ஒரு மோதிரத்தை எடுத்துக்காட்டி, "மகாப்பிரபோ, தங்கள் சித்தம்! இதோ ராக்ஷஸனுடைய முத்திரை மோதிரம்" என்று நீட்டினான். சாணக்கியர் அதை ஆவலுடன் வாங்கிச் சோதித்துப் பார்த்தார். உண்மையில் அது ராக்ஷஸனுடைய முத்திரை மோதிரமே. அவன் பெயர் அதன்மீது தெளிவாகச் செதுக்கப்பட்டிருந்தது.

"போர் தொடங்குமுன்னரே வெற்றி வாய்த்துவிட்டது" என்று தமக்குத் தாமே சொல்லிக்கொண்டு அவர் நிபுணகனை நோக்கி, "இது உனக்குக் கிடைத்த வகையை விவரமாகச் சொல்" என்றார்.

"தங்கள் உத்தரவுப்படி, இந்நகரத்தில் அதிருப்தி வாய்ந்தவர்கள் எவரெவர் இருக்கிறாரெனக் கண்டுபிடிப்பதற்காகப் புறப்பட்டேன். இந்த வேஷம் போட்டுக்

கொண்டேன். இதனால், எந்த வீட்டுக்குள்ளும், எவருக்கும் சந்தேகம் உண்டாக்காமல், நான் நுழையமுடியும். சந்தனதாஸன் வீட்டுச்குள் புகுந்து என் பாட்டுக்களைப் பாடத் தலைப்பட்டேன். என் கையிலுள்ள படத்தைப் பார்ப்பதற்கும் பாட்டுக்களைக்கேட்பதற்கும் ஐந்து வயதுப் பையனொருவன் உள்ளிருந்து திடீரென வெளியே ஓடி வந்தான். அவனுடைய முகத்தில் கம்பீரமான தேஜசு தெரிந்தது. அவன் நற்குலத்தில் உதித்தவனாயிருக்கவேண்டுமெனத் தோன்றியது. வீட்டுக்குள்ளிருந்து ஒருமாது, 'ஓ, அவன் வெளியே போய்விட்டானே!' எனப் பயந்து படபடத்த குரலில் கூவினாள். அதன்மீது, அழகிய மங்கையொருத்தி ஓடிவந்து, அந்தப் பையன் வாயிற்படியைத் தாண்டி வெளியே வருகையில் அவனைப் பிடித்துக்கொண்டாள். அவளுடைய அவசரத்தில், அவளுக்குத் தெரியாமலே, அம்மோதிரம் நழுவி விழுந்து உருண்டு எனது இடது பாதத்தினண்டை வந்தது. அது புருஷனுடைய கைவிரலுக்குச் செய்யப்பட்ட மோதிரமானமையின், அவளுடைய மெல்லிய விரலுக்குப் பொருந்தவில்லை. விரலுக்குப் பெரியதாயிருந்தது. அம்மோதிரத்தின்மீது என் பாதத்தை வைத்து மெதுவாக மறைத்துக்கொண்டேன். அவர்களெல்லாரும் உள்ளே போய்க் கதவை அடைத்துக் கொண்டபின், என் படம் தற்செயலாக விழுந்ததுபோல, அதைக் கீழேபோட்டுப் படத்தை எடுக்கும்போது மோதிரத்தையும் எடுத்துப் பத்திரப்படுத்திக்கொண்டேன். அங்கிருந்து புறப்பட்டு மோதிரத்தைத் தங்களிடம் கொண்டு வந்து சேர்த்தேன்" என்று நிபுணகன் விவரம் உரைத்தான்.

"நல்ல காரியம் செய்தாய்! இனி நீ போகலாம், சீக்கிரத்திலேயே உனக்குத் தகுந்த வெகுமதி கிடைக்கும்"

என்று சாணக்கியர் சொன்னர். நிபுணகன் தன் படத்துடன் வெளியேறித் தெருக்களில் முன்போலச் சிறிதுநேரம் திரிந்துகொண்டிருந்து, தன் வீட்டுக்குப் போனன்.

இது கழிந்த சிறிதுநேரத்திற்கெல்லாம் சோனேத்தரையைச் சாரங்கரவன் உள்ளே அழைத்துக் கொண்டு வந்தான். சாணக்கியரை நமஸ்கரித்து அவள், "பர்வதேசுவரருக்குரிய அபரக்கிரியைகளைச் செய்வதற்கும், அவருடைய ஆபரணங்களைப் பிராமணர்களுக்குத் தானம் செய்வதற்கும் தங்கள் ஆலோசனையைத் தெரிந்துகொள்ளச் சக்கரவர்த்தி விரும்புகிருர்" என மொழிந்தாள்.

சந்திரகுப்தன் செய்துள்ள ஆழ்ந்த கருத்தமைந்த இவ்வபினயத்திற்குச் சாணக்கியர் மெச்சி, "இந்த எண்ணம் மிக்க ஏற்புடையது. மிகச் சிறந்தது, எனக்கு இது ஸர்வ ஸம்மதம். ஆனல், பர்வதேசுவரனுடைய ஆபரணங்கள் விலே மதிப்புக்கு எட்டாதவை. அவைகளைத் தானம் செய்வதனல், உத்தமப்பயன் விளையவேண்டுமாயின், தகுந்த யோக்கியதையுடைய பிராமணர்களுக்கே அவைகளே ஈதல் வேண்டும். 'அத்தகைய யோக்கியதையுடைய சரியான பிராமணர்களைத் தெரிந்தெடுத்து நானே அனுப்புவேன்' என்று நான் சொன்னதாகச் சக்கரவர்த்தியிடம் அறிவி" என்று அவளுக்குப் பகர்ந்தார்.

வந்தனம் செய்துவிட்டுச் சோனேத்தரை நீங்கிப் போனள். சந்திரகுப்தனிடம்போய்ப் பர்வதேசுவரனுடைய ஆபரணங்களைத் தானமேற்றுப் பின்பு, அங்நகைகளுடன் தம்மை வந்து பார்க்கும்படி விசுவாவசுவுக்கும் அவன் சகோதரர்கள் இருவருக்கும் சாணக்கியர் சொல்லியனுப்பினர்.

பின்பு, சாரங்கரவனைக் கேட்டு மைக்கூடும் கடுதாசியும் வாங்கிக்கொண்டு சாணக்கியர், ராக்ஷஸனுடைய யுக்திகளையும் மலயகேதுவின் ஆலோசனைகளையும் பங்கப்படுத்துவதற்கு என்ன எழுதவேண்டுமென ஒரு நிமிஷநேரம் ஆலோசித்தார். முடிவில், தமக்குத் தாமே பின்வருமாறு சொல்லிக்கொண்டார் :—"மலயகேதுவுக்குள்ள முக்கியமான பலமும் ஆதாரமும் என்னவெனின், குலூத்தர்களின் அரசனான சித்திரவர்மன், மலயத்துச் சிம்மநாதன், காசுமீரத்துப் புஷ்கராக்ஷன், ஸிந்துதேசத்து ஸிந்துசேனன் என்னும் ஸுசேனன், நேர்த்தியான குதிரைப்படையுள்ள பாரஸிகத்து மண்டலாதிகாரியான மாகன் என்னும் மேகநாதன் ஆகிய இவர்களுடைய உதவியின் தைரியமே. இவர்களெல்லாரும் மலயகேதுவுடன் மிக அன்யோன்யமாயிருக்கிறார்கள். இவர்களெல்லாரும் ரகஸியமாய் மலயகேதுவுக்கு விரோதமாகச் சதி செய்து கொண்டிருக்கிறார்களென அவன் நம்பும்படிசெய்து, அந்தக் காரணத்தினால் இவர்களெல்லாரையும் உடனே கொல்லும்படி பண்ணினால் இந்த யுத்தத்தில், வெற்றி பெறுவதற்கு வேறொன்றும் செய்யவேண்டியதில்லை; வெற்றி தானே வரும். ஆ! அது தான் செய்யவேண்டிய காரியம். அதைக் காகிதத்தில் எழுதுவேன். இவ்வைந்து அரசர்களையும் இப்போது எதனாலும் மீட்க முடியாது."

மேற்கண்டவாறு ஆலோசித்துச் சாணக்கியர் அந்தக் கடிதத்திற்கு ஒரு குறிப்பு எழுதினார். அதைப் பார்த்து விட்டு, "இது சரிப்படாது. என் கையெழுத்தானது சகடதாசனுக்குத் தெரியும். இதைப் பார்த்தவுடன் அவனுக்கு அநுமானம் தோன்றும். அதனால் காரியமெல்லாம் கெட்டுப்போம். யுக்தியெல்லாம் வீணாய்ப் போம். வேறு

உபாயம் கைக்கொள்வேன்" என்று தமக்குத் தாமே சொல்லிக்கொண்டார். சாரங்காவனை விளித்து, "பையா! நான் சுரோத்திரியப்[1] பிராமணன் தானே? நான் எவ்வளவு ஜாக்கிரதையாக எழுதினாலும் என் கையெழுத்துக் குழறு படியாயிருக்கும், தெளிவாகப் படிப்பதற்காகாது. ஆகையால், இதைக் கொண்டுபோய் ஸித்தார்த்தகனிடம் கொடு. இந்த வாசகத்தின்படி சகடதாசனைக் கொண்டு ஒரு கடிதம் எழுதுவிக்கச் சொல். அவனுக்கு இந்தக் குறிப்பைக் காட்டாமல் எழுதுவிக்கச் செய். சாணக்கியர் இதை அனுப்பினாரென்றும் சகடதாசனுக்குத் தெரிவிக்கக் கூடாது. இது முக்கியமாகக் கவனிக்கத்தக்கது. கடிதம் எழுதுகிறவன் பேரும் வேண்டாம், கடிதம் பெற்றுக் கொள்ளத்தக்கவனுடைய பேரும் வேண்டாம்" என்று சொன்னார்.

"அப்படியே செய்கிறேன்" என்று சொல்லிச் சாரங் கரவன் அதை வாங்கிக்கொண்டு போனான்.

"மலயகேது! உன்னைத் தீர்த்துவிட்டேன்" என்று சாணக்கியர் தமக்குத் தாமே சொல்லிக்கொண்டார்.

ஒருமணி நேரத்திற்குள் கடிதத்தை எடுத்துக்கொண்டு ஸித்தார்த்தகன் வந்தான். அதை வாங்கிச் சாணக்கியர் கவனமாகப் படித்துப்பார்த்தார்.

"இவன் கையெழுத்து எவ்வளவு அழகாயிருக்கின்றது!" என்று சொன்னார்.

---

1. சுரோத்திரியன்—வேதம் என்பது சுருதி. சுருதியிற் சொல்லப்பட்ட யக்ஞயாகாதி கர்மங்களை அனுஷ்டிப்பவன் சுரோத் திரியப் பிராமணன். அப்படிப்பட்டவனுக்குத் தானமாகக் கொடுக் கப்படும் கிராமம் சுரோத்திரியம் எனப்படும்.

"நல்லது, இது சரியாயிருக்கின்றது. இதை மடித்து மூடி, இதனால் முத்திரைபோடு" என்று சொல்லி, ராக்ஷஸனுடைய முத்திரையைக் கொடுத்தார். ஸித்தார்த்தகன் அப்படியே செய்தான்.

மேலே இதை என்ன செய்யவேண்டும் என ஸித்தார்த்தகன் வினவ, "உன்னை ஒரு முக்கியமான காரியமாக அனுப்பப்போகிறேன். அதற்கு அஞ்சா நெஞ்சன் வேண்டும். அவன் மிக்க நம்பிக்கையுள்ளவனுயிருக்கவேண்டும். ஆனதனாலே, நீதான் சரியானவனென்று உன்னைப் பொறுக்கியெடுத்திருக்கிறேன்" என்று சாணக்கியர் சொன்னார்.

அந்த வார்த்தையைக் கேட்டு, ஸித்தார்த்தகன் மனம் பூரித்தான். மகிழ்ச்சியால் அவன் முகம் மலர்ந்தது.

"அது என்னவென்று சொல்லுங்கள். அந்தக் காரியத்தைக் கோணமற் குறையாமல் உண்மையாகவும் நன்ருகவும் செய்வேன்" என்ருன் அவன்.

"அது எனக்குத் தெரியும். இன்று ஸாயங்காலம் சண்டாளரை[1]க்கொண்டு சகடதாசனைக் கொலைக்களத்திற்கு இரகசியமாகக் கொண்டுபோய்த் தூக்கிலிட்டுக் கொல்லும்படி நியாயாதிபதிகளுக்கு உத்தரவு செய்திருக்கிறேன். நீ கொலைக்களத்திற்குப்போய், சகடாதாசனை அங்கே கொண்டு வருகிறவரையில் பதுங்கி ஒளித்திரு. உருவின கத்தியுங் கையுமாகப் பெருங் கூக்குரல் போட்டுக் கொண்டு திடீரெனப் பாய்ந்து கொலையாளிகளைப் பயமுறுத்தி, சகடதாசனைக் கொண்டுபோய் ராக்ஷஸனிடம் விடு. தன் நண்பனது உயிரைக் காப்பாற்றியதற்காக ராக்ஷ

1. **சண்டாளர்.**—இழிகுலத்தவரான கொலையாளிகள்.

ஸன் உனக்கு வெகுமதியளிப்பான். அவன் அளிப்பதை ஏற்றுக்கொண்டு, அவன் நண்பனைப்போல நடித்துக் கொண்டு, அதுமுதல் அவனிடத்திலேயே வேலைக்கு அமர்ந்திரு. இந்த முத்திரை மோதிரத்தை அவனிடத்திலேயே கொடுத்து வைத்திருக்கச் சொல். இது உன் கைக்கு எப்படி வந்ததென்பதற்கு, சந்தனதாசனது வீட்டுவாசற் கதவினண்டை கண்டெடுத்தேன் என்பதுபோன்ற, ஒப்பத்தக்க காரணம் ஏதேனுமொன்றைப் புளுகி இதை அவனிடம் கொடு. எனக்குச் சத்துருவைப்போல மாய்மாலம் பண்ணிக்கொண்டிரு. சத்துருக்கள் பாடலிபுரத்தினண்டை வரும்போது இவ்வாறு செய்" என்று அவன் காதில் சாணக்கியர் இரகசியமான வார்த்தைகள் சில ஓதினர்.

அப்படியே செய்கிறேனென்று சொல்லி ஸித்தார்த்தகன் புறப்பட்டுப் போனன்.

பின்பு, சாரங்கரவனை விளித்துச் சாணக்கியர், "நகரத்து நியாயாதிபதிகளாகிய காலபாசிகன், தண்டபாசிகன் என்பவர்களிடம்போய், 'சக்கரவர்த்தியாரின் கட்டளைகளைச் சரியானபடி நிறைவேற்றவேண்டும்; ஜீவஸித்தியை மிகவும் அவமானப்படுத்தி அகௌரவமாக நகரத்தை விட்டுத் துரத்தவேண்டும்; அங்ஙனம் துரத்துமுன், சந்திரகுப்தனுக்கும் பர்வதேசுவரனுக்கும் விரோதமாக அவன் செய்த வெறுக்கத்தக்க பாதகப் பிரயத்தனங்களையும், துரோகியான அந்த ராக்ஷஸனுடைய ஏவலின்படி சந்திரகுப்தனையாவது பர்வதேசுவரனையாவது கொல்லும்படி விஷமாதை அவன் அனுப்பியதையும் ஊரார் அறியச் சாற்றிப் பிரகடனம் பண்ணவேண்டும்' எனத் தெரிவி" என்று சொன்னர்.

"இதோ அப்படியே செய்கிறேன்" என்று சாரங்கரவன் சொல்லிப்போனான். சில நிமிஷங்களுக்கெல்லாம் திரும்பிவந்து அவன், சகடதாசன் விஷயமாகவும் ஜீவஸித்தியின் விஷயமாகவும் பிறப்பித்த கட்டளைகளை நிறைவேற்றுவதற்குக் காலபாசிகனும் தண்டபாசிகனும் ஏற்பாடு செய்துவிட்டார்களெனக் கூறினான்.

சில நிமிஷங்களுக்குப் பின், சாணக்கியரது உத்தரவுப்படிச் சந்தனதாசனைச் சாரங்கரவன் அவரிடம் அழைத்துக் கொண்டு போனான். ராக்ஷஸனோடு சேர்ந்து சதி செய்து கொண்டு, அவன் மனைவியைத் தன் வீட்டில் இடங்கொடுத்து வைத்துக்கொண்டிருக்கும் ராஜத்துரோகத்திற்காகத் தனக்கு என்ன கதி வாய்க்குமோவெனச் சந்தனதாசன் அச்சப்பட்டுக்கொண்டிருந்தான். ஆயினும், ராக்ஷஸனுடைய மனைவியைக் காட்டிக்கொடுப்பதைக் காட்டிலும் தன் பிராணனை இழப்பதே நன்றெனத் தீர்மானித்துக் கொண்டிருந்தான். ஆதலின், ராக்ஷஸனுடைய மனைவியையும் மகனையும் தனக்கு நம்பிக்கையான நண்பனொருவனுடைய வீட்டுக்கு இரகசியமாகக் கொண்டுபோய் விட்டுவிடும்படி தன் மனைவிக்குச் சொன்னான்.

சந்தனதாசன் வந்தவுடனே சாணக்கியர், தமக்கருகிலிருந்ததொரு மெத்தையின்மீது அவனை உட்காரச் சொன்னார்.

சந்தனதாசன்: என்னைப்போன்றவனுக்குத் தரையே போதிய ஆசனமாகும். தகாத கௌரவம் காட்டுவது, வேண்டுமென அவமதிக்கிற அளவு குற்றமாகும்.

சாணக்கியர்: ஆனால், இந்தக் கௌரவம் தகாததன்றே. என் பக்கத்தில் இந்த மெத்தையின்மேல் உட்கார்.

அவர் சொல்லியபடி சந்தனதாசன் அவ்வாசனத்தின் மீது அமர்ந்தான்.

சாணக்கியர் (மரியாதையாக): உன் வியாபாரம் எப்படி இருக்கிறது? நன்ருக நடந்து வருகின்றதா?

சந்தனதாசன்: தங்கள் தயவினுல் நன்ருகவே நடைபெறுகின்றது.

சாணக்கியர்: சந்திரகுப்தனுடைய தோஷங்களைப் பார்க்கையில், பூர்வத்து அரசர்களும் அவர்களுடைய நற்குணங்களும் உனக்கு ஞாபகத்திற்கு வருகின்றன வல்லவா?

சந்தனதாசன் (காதைக் கையினுற் பொத்திக் கொண்டு): சிவசிவா! சரத்காலத்துச் சந்திரனைப்பார்த்து ஜனங்கள் களிப்பதுபோல, சந்திரகுப்தனுடைய துரைத்தனத்தைக் கண்டு நாங்களெல்லோரும் களிக்கின்ருேம்.

சாணக்கியர்: அப்படியானுல், திருப்திவாய்ந்த பிரஜையொருவரிடமிருந்து அதற்குப் பிரதி ஏதேனுமொன்றை அரசர் எதிர்பார்ப்பது அதிகமாகுமோ?

சந்தனதாசன்: தங்களுக்கு என்ன உசிதமென்று தோன்றுகிறதோ அந்தத் தொகை செலுத்தவேண்டுமென எனக்கு நியமியுங்கள்.

சாணக்கியர்: சந்தனதாசா! இது சந்திரகுப்தனுடைய துரைத்தனம், நந்தர்களுடையதன்று; பேராசை பிடித்த நந்தர்களுக்குப் பணமொன்றே குறி. சந்திரகுப்தனே தன் குடிகளின் திருப்தியையும் சந்தோஷ சௌக்கியத்தையும் அதிகமாகப் பாராட்டுகிறவன்.

சந்தனதாசன்: அந்த வார்த்தையைக் கேட்க என் மனம் மகிழ்வுறுகின்றது.

சாணக்கியர்: ஆனல், திருப்தி என்பது தன் குடிகள் அரசனுக்கு விரோதமான காரியமொன்றும் செய்யாதிருக்க வேண்டுமென்பதையும் குறிக்கின்றதன்றோ?

சந்தனதாசன்: எந்தச் சண்டாளன் அரசன்மீது பகை கொண்டிருக்கிறான்?

சாணக்கியர் (அமைதியாக): நல்லது, முதலாவது நீயே.

சந்தனதாசன் (மறுபடி தன் காதைப் பொத்திக் கொண்டு): ராமராமா! நெருப்போடு புல் பொருதலாகுமோ? அரசனை எதிர்த்து வர்த்தகனொருவன் சண்டை செய்யமுடியுமோ?

சாணக்கியர் (சாந்தமாக): பகைத்து நீ செய்யும் காரியம் போர்புரிவதன்று. ராக்ஷஸனுடைய மனைவியை உன் வீட்டில் வைத்துக்கொண்டிருப்பதனல், அவனுக்குத் துணை செய்கிறாய். அரசனுக்குப் பரம சத்துருவாயிருப்பவனுடைய மனைவிக்கு அடைக்கலமளித்திருப்பதே நீ செய்யும் ராஜத்துரோக காரியம்.

சந்தனதாசன் (திகிலடைந்து): அது பொய்.

சாணக்கியர்: திகிற்படாதே. புரட்சிகள் நேரும் போதும், முன்னர் அரசர்களாயிருந்தவர்களிடம் உத்தியோகம் வகித்திருந்தவர்கள் தேசாந்தரம் ஓடும்போதும் அவர்கள் தங்கள் மனைவியரை நண்பர்களின் வீட்டில், அவர்களுடைய இஷ்டத்திற்கு விரோதமாகவே, விட்டுப் போவது சகஜம். அது குற்றமாகாது. அவர்களை நீடித்து வைத்துக்கொண்டிருப்பதும், ஒளித்து வைத்துக் கொண்டிருப்பதுமே குற்றமாகும்.

சந்தனதாசன்: தாங்கள் அந்த வார்த்தை சொல்லியது எனக்கு ஆறுதலாயிருக்கின்றது. ராக்ஷஸன் போனபோது, தாங்கள் சொல்லியதுபோலவே, தன் ஸம்ஸாரத்தை என் வீட்டில் விட்டிருந்தான். அவன் மனைவி என் வீட்டில் சிறிது காலம் இருந்தாள். இப்போது நீங்கிப் போய் விட்டாள்.

சாணக்கியர்: அதனால், ஒரேயடியாக இல்லையென்று மறுத்தபோது நீ பொய் சொன்னாயல்லவா? பொய் சொல்லு கிறவர்களெல்லாரையும் சந்திரகுப்தன் கடுமையாகத் தண் டிக்கிறான். ஆயினும், அந்தக் குடும்பத்தை இப்போதே எங்களிடம் ஒப்பித்துவிட்டால் நீ தப்பித்துக்கொள்ளலாம்.

சந்தனதாசன்: ராக்ஷஸனுடைய ஸம்ஸாரம் முன்னர் என் வீட்டில் இருந்தாளென்று தங்களுக்கு நான் சொல்ல வில்லையா?

சாணக்கியர்: அவர்களெல்லாரும் இப்போது எங்கே போயிருக்கிறார்கள்?

சந்தனதாசன்: எனக்குத் தெரியாது.

சானக்கியர் (புன்னகையோடு): அது உனக்கு எப் படித் தெரியாமல் இருக்கக்கூடும்? நான் சொல்லுகிறபடி செய். அவர்களைக் கொணர்ந்து ஒப்பித்துவிடு. உன் தலைக்குத் தீது தொங்கிக்கொண்டிருக்கிறது. நந்தர்களை நான் வெறுத்ததுபோலச் சந்திரகுப்தனை ராக்ஷஸன் களையக்கூடுமெனக் கனவிலும் கருதாதே. சினங்கொண்ட சிங்கத்தின் வாயினின்று இரையைப் பிடுங்குவது எவ் வளவு அசாத்தியமோ சந்திரனிடமிருந்து நிலவொளியை நீக்குவது எவ்வளவு அசாத்தியமோ, அதுவும் அவ்வளவு அசாத்தியமாகும். நந்தர்கள் மிகவும் துன்மார்க்கர்களாக

வும் வக்கர புத்தியுள்ளவர்களாகவும் இருந்தார்கள். அதனால், நக்கரநாஸனைப்போன்ற திறமைசாலிகளான மந்திரிகளாலும் அவர்களைக் காப்பாற்ற முடியவில்லை.

அத்தருணத்தில் தெருவில் சந்தடியொன்று உண்டாயிற்று. அது என்னவென்று பார்த்துவரும்படி சாரங்கரவனைச் சாணக்கியர் ஏவினார். அவன் திரும்பிவந்து, "சந்திரகுப்த மகாராஜனுடைய கட்டளைப்படி பௌத்த பிக்ஷுவான ஜீவஸித்தி என்னும் துரோகியை அவமானப் படுத்தி நகரை விட்டுத் துரத்தியோட்டிக் கொண்டிருக்கிறார்கள்" என்று அறிவித்தான்.

"என்ன கதி!" என்று சொல்லிச் சாணக்கியர் சந்தனதாசனைத் திரும்பிப் பார்த்து, "ராஜத்துரோகிகளுக்கு என்ன நேருகிறதென்று கண்டாயா? ஆதலால், என் வார்த்தையைக் கேள். உனக்கு நன்மையாகும்படி நான் சொல்வதை எடுத்துக்கொள். ராக்ஷஸனுடைய குடும்பத்தவரை எங்களிடம் ஒப்பித்துவிடு" என்றார்.

அவர்கள் தன் வீட்டில் இல்லையென்று சந்தனதாசன் கூறினான்.

அவர்கள் அப்படிப் பேசிக்கொண்டிருக்கையில், தெருவில் மற்றோர் அமளி எழுந்தது. எதற்காக அந்த ஆரவாரமெனச் சாரங்கரவனைச் சாணக்கியர் விசாரித்து வரச் சொன்னார். விசாரித்துவந்து சாரங்கரவன், "மற்றொரு ராஜத்துரோகியாகிய சகடதாசன் என்பவனைத் தூக்கிலிட்டுக் கொல்வதற்காகக் கொலையாளிகள் இழுத்துக்கொண்டு போகிறார்கள்" என்றான்.

"அவன் செய்த ராஜத்துரோகத்திற்குத் தகுந்த தண்டனை அவன் அடையட்டும்" என்று சாணக்கியர் சொல்லிய

பின், சந்தனதாசனை நோக்கி, "வணிகச்சிரேஷ்டா! ராஜத் துரோகம் செய்கிறவர் விஷயத்தில் சந்திரகுப்தன் எவ்வளவு கடுமையாயிருக்கிறானென்பதைப் பார்த்தாயா? ஆகையால், மற்றொருவனுடைய மனைவியையும் மகனையும் காட்டிக் கொடுத்து, உன் மனைவி மக்களைக் காப்பாற்றிக்கொள்" என்று சொன்னார்.

"ஸ்வாமீ! அவர்கள் என் வீட்டில் இருந்தாலுமே, எனக்கு என்ன சிக்ஷை வாய்ப்பதாயிருப்பினும், அவர்களை நான் காட்டிக்கொடுக்கமாட்டேன். அங்ஙனமாக, அவர்கள் என் வீட்டிலே இல்லாதபோது அவர்களை நான் எங்ஙனம் காட்டிக்கொடுப்பேன்?" என்று சந்தனதாசன் தடுத்துக் கூறினன்.

வேகம் கொண்டவராய்ச் சாணக்கியர், "அந்த வார்த்தை நீ தீர்க்கமாக ஆலோசித்துச் சொல்கிற வார்த்தையா?" என வினவினர்.

"ஆம், தீர்க்கமாக ஆலோசித்துத் திடமாகச் சொல்கின்றேன். அது மாற்றுது. எனக்கு என்ன தண்டனை விதித்தபோதிலும், ஏற்கச் சித்தமாயிருக்கிறேன்" என்று சந்தனதாசன் பிடிவாதமாகப் பேசினன்.

இவ்வருமையான சத்தியசீலத்தையும் சிநேக விசுவாசத்தையும் கண்டு சாணக்கியர் உள்ளுக்குள்ளே மிக்க மகிழ்ச்சியுற்றார். ஆனபோதிலும், வெளிப்பார்வைக்கு அத்தியந்த கோபாவேசங் கொண்டவரைப்போலப் பாவனை காட்டி, "அப்படியானல், குணங்கெட்ட துரோகி! அரசனுடைய கோபத்திற்கு ஆளாவாய்" என வைதார்.

"நான் ஸித்தமாயிருக்கிறேன். எனக்கு என்ன தண்டனை வேண்டுமாயினும் விதியுங்கள்" என்று சந்தனதாசன் கூறினன்.

சாரங்கரவனை விளித்துச் சாணக்கியர், "பாபியான இவ்வர்த்தகனுக்கு உடனே விலங்கிடும்படி காலபாசிகனுக்கும் தண்டபாசிகனுக்கும் நான் சொன்னதாகப் போய்ச் சொல். ஆயினும், பொறு. இவ்வர்த்தகனையும் இவன் மனைவியையும் சிறையிலடைத்து வைத்து இவனுடைய சொத்துக்களையெல்லாம் பறிமுதல் செய்யும்படி சிறை அதிகாரியான விஜயபாலனுக்குச் சொல்லு. இதைப்பற்றிச் சந்திரகுப்தனுக்கு நான் சொல்லுகிறேன். இவ்வர்த்தகனுக்கு மரணதண்டனை அரசனே விதிக்கட்டும்" என்று கட்டளையிட்டார்.

சந்தனதாசனைச் சாரங்கரவன் அழைத்துக்கொண்டு போய்விட்டான்.

சாணக்கியருக்குப் பரம திருப்தியுண்டாயிற்று. ராக்ஷஸன் பொருட்டுச் சந்தனதாசன் தன் உயிரைக்கொடுக்க முன் வந்தது போலச் சந்தனதாசன் பொருட்டு ராக்ஷஸனும் தயங்காமல் என்னவேண்டுமானாலும் செய்யச் சித்தமாயிருப்பானென்று அவர் தமக்குள்ளே நிச்சயப்படுத்திக் கொண்டார்.

சில நிமிஷங்கள் கழிந்தபின், சாரங்கரவன் திரும்பி வந்தான். உடனே தெருவில் மற்றொரு கூக்குரல் எழுந்தது. சாரங்கரவன் ஓடிப்போய்ப் பார்த்து வந்து, "ஸித்தார்த்தகன் துரோகியாகத் திரும்பிவிட்டான். கொலைக்களத்தினின்று சகடதாசனை மீட்டுக்கொண்டு அவனுடன் ராக்ஷஸனைப் போய் அடைந்துவிட்டான்" என்று அறிக்கை செய்தான்.

சாணக்கியருக்கு உள்ளுக்குள் சந்தோஷமே. ஆயினும், துளகர்த்தனை விம்மபலனது தம்பி பாகுராயணன் அவர்

களை உடனே தொடர்ந்து போய்ப் பிடித்து வரும்படி அவ னுக்குச் சொல்லக் கட்டளையிட்டார். சாரங்கரவன் மீண் டும் வந்து பாகுராயணனும் துரோக புத்திகொண்டு ராக்ஷஸனோடு சேர்வதற்கு ஓடிப்போனானென்னும் திடுக் கிடக்கூடிய வர்த்தமானத்தைச் சொன்னான். சாணக்கியர் ஆக்கிரோஷத்துடன் பாகுராயணன், ஸித்தார்த்தகன், சகடதாசன் என்பவர்களைத் தொடர்ந்துபோய்ப் பிடித்து வரும்படி பத்ரபடன், புருஷதத்தன், டிங்கரதன், பலகுப் தன், ராஜஸேனன், லோகிதாக்ஷன், விஜயவர்மன் என்பவர்க ளைப் போகச்சொல்லிச் சாரங்கரவனை அனுப்பினார். அவர்க ளெல்லாருமே நம்மைவிட்டு ராக்ஷஸனோடு சேர்ந்துகொள்ள ஓடிப்போனார்களென்னும் அதிக திகிலைத்தரும் செய்தியைச் சாரங்கரவன் திரும்பி வந்து சொன்னான். "இவர்களெல் லாரும் விட்டோடியதைக் குறித்து ஊரெல்லாம் ஓரே கோஷமாயிருக்கின்றது. எல்லாரும் ஆத்திரப்பட்டுக்கொண் டிருக்கிறார்கள். ஸ்வாமி! பலமான பெரும்படையோடு ராக்ஷஸன் நம்மீது படையெடுத்து வரப்போகிறானென்று சொல்லிக்கொள்கிறார்கள். அந்தப் படைக்குத் தலைமை வகித்திருப்பவன் மலயகேதுவாம். அவனுக்குத் துணையாக வருகிறவர்கள் ஸிந்துஸேனன், புஷ்கராக்ஷன், ஸிம்ம நாதன், சித்திரவர்மன் என்பவர்களாம். இவர்களல்லாமல், சகர்கள், யவனர்கள், காந்தாரர்கள், ஹூதர்கள், கிராதர் கள் என்பவர்கள் தத்தம் சிற்றரசர்களோடு வருகிறார் களாம். இவ்வர்த்தமானத்தைக் கேட்டு ஊரில் ஒவ்வொரு வரும் மிகக் கவலைப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள்" என்று சாரங்கரவன் சாற்றினான்.

"கவலைப்படவேண்டாமென்று அவர்களுக்குச் சொல். நம்மைவிட்டு ஓடிப்போன பயல்கள் தங்களாலானதைச்

செய்யட்டும். சத்துருவோடு சேர்ந்துகொள்ள விருப்பமுள்ளவர்களெவரேனும் இன்னும் உண்டானால் அவர்களும் போய்க்கொள்ளட்டும். என் மூளை இன்னும் மழுங்கிப் போகவில்லை, தந்திரோபாயம் செய்யும் வன்மை வேண்டிய மட்டும் இருக்கின்றது. நந்தர்களையும் அவர்கள் எண்ணிறந்த படைகளையும் எங்ஙனம் மாட்டி மயக்கி மாய்த்ததோ அங்ஙனமே இவர்களையும் இழுத்து இழவுபடுத்தும். இந்தா! இந்தக் கடிதத்தைச் சந்திரகுப்தனிடம் கொண்டு போய்க் கொடு" எனச் சாணக்கியர் நவின்றார்.

இப்போது நடந்துள்ள உபார்தா வேலைப்பாடமைந்த விளையாட்டு மோசத்தின் விவரங்களையெல்லாம்பற்றி ஒரு கடிதம் எழுதி அதை மடித்து மூடி முத்திரையிட்டுச் சாரங்கரவனிடம் ஒப்பித்து, சக்கரவர்த்தியின் கையில் நேரே கொண்டு போய்ச் சேர்ப்பிக்கவேண்டுமெனப் புகன்றார். பத்திரமாக அதைக் கொண்டுபோய்ச் சாரங்காவன் அங்ஙனமே சேர்ப்பித்துவிட்டான்.

மறுநாள் சாணக்கியர் போய்ச் சந்திரகுப்தனைப் பார்த்து, ஒவ்வொரு விஷயத்தையும் நேரில் விளக்கினார். மலயகேதுவின் தானையை எல்லைப்புறத்துப் பட்டணமாகிய இந்திரப்பிரஸ்தத்தில் எதிர்க்கவேண்டுமென்றும், ராஜ்யபத்தியுள்ள கோட்டை ஒவ்வொன்றையும் திறமாகப் பந்தோபஸ்து பண்ணி ஒரு வருஷமளவும் முற்றுகை தாங்குமாறு அமைக்கவேண்டுமென்றும் சந்திரகுப்தன் விரும்பினன். கோட்டைகளைப் பந்தோபஸ்து செய்வது சரியெனச் சாணக்கியர் இசைந்தாராயினும், பாடலிபுரத்திலேயே தம் சைனியத்தோடு காத்திருப்பதே உத்தம யுத்தோபாயமாகுமென முடிவில் சந்திரகுப்தனுக்குப் போதித்தார். சத்துருப்படைகள் பாடலிபுரத்திற்கு வந்து சேருமுன்னரே, தம் சூழ்ச்சிச்

சமரினால் பெரும்பாலும் தொலைந்துபோமெனவும், மற்ற வர்களை எளிதிற் கசக்கிப் பிழியலாமெனவும், மலயகேது வின் நண்பர்களெனப் பாவனை காட்டிக்கொண்டிருக்கிற தம் ஆட்களைக்கொண்டே அவனைச் சிறைப் பிடிக்கலாமெனவும் அவனுக்கு உறுதி கூறினார்.

"வழியிலுள்ள கோட்டைகளைப் பிடித்துக்கொள்ளா மலே பாடலிபுரத்திற்கு வருமளவு, மலயகேது மூடனா யிருப்பானா?" எனச் சந்திரகுப்தன் சங்கித்தான்.

"அங்ஙனம் செய்வதே சரியான காரியமென்று மலய கேது ஒப்புக்கொள்ளத்தக்க காரணந்தரங்களைப் பாகு ராயணனுக்குக் கற்பித்திருக்கிறேன்" என்று சாணக்கியர் அவைகளைச் சந்திரகுப்தனுக்கு எடுத்தோதினார்.

அவனும் அதுவே சரியென அங்கீகரித்துக்கொண் டான். "இங்ஙனமாக, வலையை வீசிறிவிட்டேன். பறவை கள் பிடிபடுவது திண்ணம்" என்றார் சாணக்கியர்.

"ஆனால் எனக்குக் கொஞ்சம் விசனமே. என்னை யெனின், உண்மையான போர் புரிவதற்கில்லையே. இப்படிப் பட்ட வெற்றியினால் மகிழ்வுறுவதற்காகுமோ?" என்றான் சந்திரகுப்தன்.

"நிரபராதிகளான ஆயிரக்கணக்கான ஜனங்கள் அழி யாமல் உயிர் தப்பினார்கள்; தலைவர்களான சிலர் மாத் திரமே தொலைவார்கள் என நினைத்து மகிழ்வுறு" என்று சாணக்கியர் கூறினார். பின்பு அவ்விடம் விட்டுச் சாணக் கியர் நீங்கினார்.

---

## அத்தியாயம் 26

## ராக்ஷஸனது முகாமில் ஒரு முற்பகல்

பாடலிபுரத்திற்கு நெடுந்தூரத்திற்கப்பால் ஹைடாஸ்பஸ் நதிக்கரையிலுள்ள புக்கிபேலாவை மலயகேது தலைநகரமாகக் கொண்டிருந்தான். அவ்விடத்தில், முன்னர் நந்தர்களுக்குப் பிரதான மந்திரியாயிருந்த ராக்ஷஸன், சாணக்கியருக்கும் சந்திரகுப்தனுக்கும் விரோதமாயிருப்பவர்கள் எத்தனைபேருண்டோ அத்தனைபேரையும் ஒன்று கூட்டிக் கொள்வதற்கு அகடவிகட சாமர்த்தியங்கள் செய்து கொண்டிருந்தான். பிரபலமான சிற்றரசர்களையும், படைத்தலைவர்களையும் அவர்களுக்குத் தாராளமாகப் பொருள் முதலியன கொடுத்து, மேலும் வேண்டுவன கொடுப்பேனென வாக்களித்து, அவர்களைத் தன் கக்ஷியில் சேர்த்துக் கொள்வதற்குப் பெருமுயற்சி செய்துகொண்டிருந்தான். இப்போது சந்திரகுப்தனுக்கு விரோதமாக ஒரு பந்துக் கட்டு வைக்கும் விஷயத்தில் மிக அக்கரையாகப் பாடு பட்டுக்கொண்டிருந்தான்; சந்திரகுப்தனைக் கொல்வதற்கு அவன் செய்துள்ள பல பல சூழ்ச்சிகளும் என்ன வாயினவோ, எங்ஙனம் பலித்தனவோ வெனத் தெரிந்து கொள்ள ஆவலுடன் காத்துக்கொண்டிருந்தான். நந்தர்களெல்லாரும் அழிந்துபோனமையினாலும், சந்திரகுப்தனையும் சாணக்கியரையும் எதிர்த்துப் போராடத்தக்க பலம் வாய்ந்தவன் மலயகேது ஒருவனேயென நினைக்கத்தக்கவனாயிருக்கின்றமையினாலும், அவனுக்கு மகதசக்ரவர்த்தியென

மகுடன் கூட்ட மனமிசைந்திருந்தான். அவனுடன் தினந் தோறும் பழகி, அவனுடைய கர்வமற்ற நடவடிக்கையை யும் விசுவாசத்தையும் பார்த்துப் பார்த்து அவனிடம் பிரேமை கொள்ளவும் தலைப்பட்டான்.

“இவன் தன் தந்தையைப்போல மாதர் போகங் கொண்ட காமுகனன்று; ராஜ்யத்தை அதிகமாக வைத்து அதிகாரம் செலுத்தவேண்டுமென்று பேராசை பிடித்த வனுமன்று; தன்னுடைய சிற்றப்பன் வைரோசகனைப் போலக் கபடம் வாய்ந்தவனன்று, சூதுவாது செய்பவனு மன்று; மிக்க நம்பிக்கைக்குப் பாத்திரமானவன். சிறிதும் சந்தேகப்படாமல் உறுதியாக இவனை நம்பலாம்” என்று சந்தனதாஸனுக்கு எழுதிய கடிதத்தில் ராக்ஷஸன் சொல்லி யிருந்தான்.

அந்நாட்களில் ராக்ஷஸனுக்குத் துக்கமும் ஆத்ம நிந்தனையும் ஏக்கமுமே அதிகமாயிருந்தன. நந்தர்கள் அழிந்துபோனது முதற்கொண்டு, அவன் ஆடையாபரணங் களையெல்லாம் வெறுத்து மிகவும் கேவலமான மனிதனைப் போல வியவகரித்துக்கொண்டிருந்தான். ஆனால், அன் றைத்தினம் காலையில் மலயகேதுவின் அரண்மனைப் பரபத்தி யக்காரனான ஜாஜாலி என்பவன் சில ஆபரணங்களைக் கொண்டுவந்து, “தாங்கள் துக்கத்திலாழ்ந்து ஆபரணங்க ளணியாமல் மனம் வாடியிருப்பதைக் கண்டு, மலயகேது மகாராஜர் மிக வருத்தப்படுகிறார். தாம் அணிந்துகொண் டிருந்த இவ்வாபரணங்களைத் தம் உடம்பினின்று கழற்றித் தாங்கள் தரித்துக்கொள்ளவேண்டுமென அனுப்பியிருக் கிறார்” என்று சொன்னான்.

அதற்கு ராக்ஷஸன், “பாடலிபுரத்து ஸுகங்கா அரண்மனையிலுள்ள சிம்மாசனத்தின்மீது மலயகேதுவை

ஸ்திரமாக அமரச்செய்தபின் இவைகளை அணிந்துகொள்வேன்" என்று மறுமொழி கூறினன்.

அதற்கு ஜாஜாலி, "மலயகேதுவைப்போன்ற அரசனும், தங்களைப்போன்ற மந்திரியும் இருக்கையில், நீங்கள் வெற்றி பெறுவீர்களென்பதில் ஐயப்பாடு எத்துணையேனும் உளதோ? அங்ஙனம் மலயகேதுவைச் சிம்மாசனமேற்றியதாகவே கொண்டு, தாங்கள் இவ்வாபரணங்களை அணிந்து, மகாராஜா முதன்முதலாகச் செய்துகொள்ளும் இவ் விண்ணப்பத்திற்கு இணங்குவீர்களாக" என்று வற்புறுத்தினன்.

"அப்படியானல் சரி" என்று சொல்லி ராக்ஷஸன் அவ்வாபரணங்களை அணிந்துகொண்டான். பிறகு பரபத்தியக்காரன் திரும்பிப்போய்விட்டான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் ராக்ஷஸனுடைய ஒற்றனை விராதகுப்தன் என்பவன் பாம்பாட்டி வேஷந் தரித்து ஜீர்ணவிஷன் என்னும் பெயர் பூண்டு, தெருவோடு வந்து, ராக்ஷஸனுடன் இரகசியமாகப் பேசிக்கொண்டிருந்தான். அவன் பாடலிபுரத்திலிருந்து திரும்பிவந்தவன். வைரோசகன், தாருவர்மன், வைரவாரகன், அபயதத்தன், பரவீரகன், விபத்ஸகன், அவனுடைய தோழர்கள், ஜோஸியன், குதிரை வியாபாரிகள், ஆலயத்து அர்ச்சகன், சூரங்காட்டி, யாகம் செய்த பிராமண அத்வரியு ஆகிய இவர்களுக்கு நேர்ந்த கதி இத்தன்மையதென வேறுவேருக அவன் விவரித்து ராக்ஷஸனுக்கு உரைத்தான். அதைக் கேட்டு ராக்ஷஸன் துயரமேலீட்டால், "நான் செய்வது ஒவ்வொன்றும் தவறிப்போவதன்றிச் சாணக்கியனுக்குச் சாதகமாகவும் முடிகின்றதே!" என ஆர்ப்பரித்தான்.

பின்பு, ஜீவஸித்தியைத் துரத்தியோட்டியது, சந்தன தாஸனையும் அவன் மனைவியையும் சிறையிலிட்டு அவன் சொத்துக்களையெல்லாம் பறிமுதல் செய்தது, சகடதாஸனைக் கழுவிலேற்றிக் கொல்லக் கட்டளையிட்டது ஆகிய இவைகளையும் விராதகுப்தன ராக்ஷஸனுக்கு ஒன்றன்பின் ஒன்றாகச் சொன்னான். ராக்ஷஸனுக்கு உண்டான துன்பத்திற்கு அளவேயில்லை.

"என் நண்பர்களுக்கு இவ்வளவு கொடிய கஷ்டங்கள் நேர்ந்தபின்னும் நான் இன்னும் உயிர் வைத்துக்கொண்டிருக்கிற மகா பாபியானேனே! ஓ நண்பா, சகடதாஸா! நீ ஏதோ எளிய எழுத்துக் கூலிக்காரனாக இருந்தாய். ஆனால், பிரதான மந்திரியாக இருந்த என் மனம் கன்மனம்; உன்னுடையது பொன் மனம்" என்று அலறினான்.

அந்தச் சமயத்தில், சகடதாஸன் தங்களைக் கண்டு பேசுவதற்காக வெளியே வந்து காத்திருக்கிறானென்று வேலைக்காரன் ஒருவன் வந்து சொன்னான். ராக்ஷஸன் திடுக்கிட்டு, "விராதகுப்தா! ஈதென்ன?" என வினவினான்.

"கழுமரத்தினின்று தப்பிக்கொள்ளும்படி அவனது அதிர்ஷ்டம் ஒருவேளை பெரிதாயிருந்ததோ என்னவோ" என்று விராதகுப்தன் அதிசயத்தோடு சொன்னான்.

சகடதாஸனை ராக்ஷஸன் உள்ளே வரச்சொன்னான். அவன் ஸித்தார்த்தகனுடன் உள்ளேபோய்க் கொலையாளிகளை மிரட்டியோட்டித் தன்னை ஸித்தார்த்தகன் காப்பாற்றினானென்று ராக்ஷஸனுக்குச் சொன்னான்.

"என்னைக் கொண்டுபோய், பயங்கரமான கழுமரத்தின்முன் நிறுத்தி, எனக்கு இட்டிருந்த தளைகளை அவிழ்த்தார்கள். கொலையாளிகள் என் தலையில் மரணமாலை

சூட்டி இழவுக்கோலமிட்டு, சந்திரகுப்தனும் சாணக்கியரும் ஆட்சிபுரியுங் காலத்தில் எவரும் துணிந்து வந்து என்னை விடுவிக்கமாட்டாரென்னும் திடமான நம்பிக்கையுடன், தங்கள் பக்கத்தில் என்னை நிற்கவைத்துக்கொண்டு, என்னைக் கொல்லப்போகிறோமெனக் கொலைப்பறை அடிக்கலானார்கள். அந்த நிமிஷத்தில் நண்பனான இந்த ஸித்தார்த்தகன் எங்கிருந்தோ திடீரென வெளிப்போந்து, உருவின கத்தியுங் கையுமாகப் பயங்கரமான ராக்ஷஸக் கூக்குரலொன்று போட்டுக்கொண்டு, திகைத்து நின்ற கொலையாளிகளின்மீது பாய்ந்தடித்தான். அவர்கள் ஓட்டம் பிடித்தார்கள். நான் தப்பி வந்தேன்" என்று சகடதாஸன் விவரம் உரைத்தான்.

சகடதாஸனைத் தழுவிக்கொண்டு ராக்ஷஸன் அவனைத் தன் சொந்த ராயஸக்காரனாக நியமித்துத் தன்னண்டை உட்காரவைத்துக்கொண்டான். ஸித்தார்த்தகன் செய்த தீரச் செயலுக்குப் பரிசாக ராக்ஷஸன் அன்றுகாலை ஜாஜாலி தனக்குக் கொண்டுவந்துகொடுத்த ஆபரணங்களை ஸித்தார்த்தகனுக்கு அளித்தான். ஸித்தார்த்தகன் நன்றிபாராட்டி ராக்ஷஸனுடைய காலிற் பணிந்து, தான் கேட்கும் வரையில் அவ்வாபரணங்களை முத்திரையிட்டுப் பத்திரமாக வைத்திருக்கும்படி ராக்ஷஸனை வேண்டினான். உடனே இசைந்து ராக்ஷஸன் அவ்வாபரணங்களை வாங்கி ஜாக்கிரதையாகக் காப்பாற்றிவைக்கும்படி சகடதாஸனை ஏவினான். அவ்வாபரணங்களை ஸித்தார்த்தகன் பொட்டணமாகக் கட்டித் தன்னிடமிருந்த ராக்ஷஸனுடைய முத்திரை மோதிரத்தால் அதற்கு முத்திரைவைத்து, அந்தப் பொட்டணத்தைச் சகடதாஸன் கையிற் கொடுத்தான். முத்திரையை உற்றுப்பார்த்துச் சகடதாஸன் தனிமையாக ராக்ஷ

ஸனிடம், "அவன் போட்டிருக்கிற முத்திரையில் தங்கள் பெயர் இருக்கிறதே" என இரகசியமாகச் சொன்னான்.

ராக்ஷஸன் அதை ஆராய்ந்துபார்த்து, "உண்மையில் இது என் முத்திரை மோதிரம். என் மனைவியை விட்டு நான் பிரிந்து வந்தபோது அவளுக்கு என் ஞாபகச் சின்னமாயிருக்கும்பொருட்டு, அவள் எனக்கு எழுதும் கடிதங்கள் அவளே எழுதினவென நான் தெரிந்துகொள்ளும் பொருட்டு இதை அவளுக்குக் கொடுத்துவந்தேன். இது இவன் கைக்கு எப்படி வந்தது?" எனத் தனக்குத் தானே சொல்லிக்கொண்டான்.

ஸித்தார்த்தகனை நோக்கி, "நண்பா! இந்த மோதிரம் உனக்கு எங்கே கிடைத்தது?" என வினவினான்.

"பாடலிபுரத்திற் சந்தனதாஸன் என்னும் செல்வம் மிக்க வர்த்தகனொருவனுடைய வீட்டு வாயிலினண்டை இது தெருவிற் கிடக்கக் கண்டெடுத்தேன்" என்று ஸித்தார்த்தகன் பதில் மொழிந்தான்.

"அது சரியே" என்றான் ராக்ஷஸன்.

"எது சரி?" என ஸித்தார்த்தகன் வினவினான்.

தன் மனைவி அவன் வீட்டில் இருந்தாள் என்னும் உண்மையை வெளியிட மனமில்லாதவனாய் ராக்ஷஸன், "ஒரு செல்வனுடைய வீட்டினண்டை அது கிடைத்ததென்பதுதான் சரி" என மறைவாகச் சொன்னான்.

ஸித்தார்த்தகனை நோக்கிச் சகடதாஸன், "நண்ப! இந்த மோதிரத்தில் ராக்ஷஸருடைய பெயர் பதிந்திருக்கின்றது. இதை அவருக்குக் கொடுத்துவிடு. இதன் மதிப்புக்கு அதிகமான பரிசு அவர் அளிப்பார்" என்றான். ஸித்தார்த்தகன் அந்த மோதிரத்தை ராக்ஷஸ

னிடம் நீட்டிக்கொண்டே, "மந்திரியாரவர்கள் இதைத் தயை செய்து ஏற்றுக்கொள்வாரானல், அதுவே எனக்குப் பெரிய பரிசாகும். மந்திரியார் எனக்கு அளித்த ஆபரணங்கள் இம்மோதிரத்தினும் ஆயிரமடங்கு பெறுமாதலின் இதற்காக வேறொன்றும் வாங்கிக்கொள்ளமாட்டேன். ஆனல், எனக்கொரு வேண்டுகோள் மாத்திரம் உண்டு" என்முன்.

அவனுடைய நடவடிக்கையினல் மனம் பூரித்தவனாய் ராக்ஷஸன், "தாராளமாகக் கேள்" என்று சொன்னன்.

அப்போது ஸித்தார்த்தகன், "சாணக்கியன் கொடிய அரக்கனென்று தங்களுக்குத் தெரியுமே. சகடதாஸனை விடுவித்ததற்காக என்னை அவன் கணுக்கணுவாக நறுக்கி விடுவான். தங்களுடைய நேர்பாதுகாப்பில் இருந்தாலன்றி, நான் அவன் கையில் அகப்படாமல் தப்பித்துக் கொள்ள முடியாது. ஆதலால், இனி என் வாழ்நாளைத் தங்கள் சேவையிலேயே கழிக்க அனுமதியளிக்கவேண்டுமெனப் பிரார்த்திக்கிறேன்" என வேண்டினன்.

"நீ என்னுடன் இருப்பது எனக்குப் பரம சந்தோஷம். எனக்கு இப்படிப்பட்ட ஆட்களே வேண்டும். ஆனல், ஆசையழிந்து கலங்கிப் போகாதே. சீக்கிரத்தில் நாம் பாடலிபுரத்தின்மீது படையெடுத்துச் சந்திரகுப்தனையும் சாணக்கியரையும் தொலைத்துவிடுவோம். நீங்கள் இருவரும் களைப்புற்றிருப்பீர்கள்; போய்ச் சற்று ஓய்வுகொண்டு இளைப்பாறுங்கள்" என்று ராக்ஷஸன் கம்பீரமாகவும் அன்பாகவும் நவின்முன். ஸித்தார்த்தகனும் சகடதாஸனும் இளைப்பாறப் போனர்கள்.

விராதகுப்தனேடு ராக்ஷஸன் திரும்பப் பேசிக்கொண்டிருந்தான்.

"சாணக்கியருக்கு அகங்காரம் அதிகமாய்விட்டது; சந்திரகுப்தன் தன் இஷ்டம்போல வியவகரிக்கப் பார்க்கிறான்; அதனால், அவர்கள் இருவருக்கும் மனஸ்தாபம் நாளுக்கு நாள் முதிர்ந்துகொண்டிருக்கிறதென மகதத்து ஜனங்களெல்லாரும் சொல்லுகிறார்கள்" என விராதகுப்தன் அறிவித்தான்.

ராக்ஷஸன் மகிழ்வுற்று, "என்ன! என்ன! அதைப் பற்றி எவ்வளவு தெரியுமோ அவ்வளவையும் நன்றாகச் சொல்" என்று கேட்டான்.

"நல்லது; மலயகேதுவை ஓடிப்போகவிட்டதனால் இத்தனை ஆபத்துக்களும் நேர்ந்தனவென்று சாணக்கியர்மீது சந்திரகுப்தன் குறைகூறுகிறான்" என விராதகுப்தன் சொன்னான்.

"சந்திரகுப்தன் சொல்வது ஒருவகையிற் சரியே. ஆனால், வைரோசகன் பிரபலமான சைனியத்தோடு அப்போது ஜீவித்துக்கொண்டிருந்தானே; மலயகேதுவைச் சந்திரகுப்தன் எப்படிப் பிடித்துக் கொல்லமுடியும்?" என ராக்ஷஸன் வினவினான்.

"தாங்கள் இருந்தால் அதற்குரிய காரணங்களை எடுத்துக் கூறி, நிலைமையை விளக்கியிருப்பீர்கள். சாணக்கியர் அங்ஙனமல்லாது, 'உனக்கு ஸிம்மாஸனம் வாய்த்ததே என்னாலென்பதை ஞாபகப்படுத்திக்கொள்' எனக் கர்வத்துடன் பேசினார். சந்திரகுப்தனுக்கு ஆக்கிரோஷம் பொங்கியதெனச் சொல்லவும் வேண்டுமோ? அது முதற்கொண்டு சந்திரகுப்தனுடைய வார்த்தைக்கு விரோதமாக நடப்பதனால், சாணக்கியர் நாளுக்கு நாள் சந்திரகுப்தனுக்குக் கோபத்தை அதிகப்படுத்தி, அவன் மனத்தைப் புண்ணாக்கிக் கொண்டிருக்கிறார். சந்திரகுப்தனுக்கு இது சிறிதும்

பிடிக்கவில்லை. அவன் எங்ஙனமாயினும், ராஜவம்சத்தவனல்லவா? இயற்கையில் அவன் தன் பிரதாபத்தையும் பெருமையையும் பாராட்டத்தக்கவனேயல்லாமல், வணங்கிப்போகத் தக்கவனல்லவே? அவனுக்குக் கோபம் மூண்டது. அவர்கள் இருவரும் மகா சமர்த்தர்கள்; அதிகார ஆசை இருவருக்கும் அதிகம். அத்தன்மையினர் இருவர் ஒரே ராஜ்யத்தில் இருப்பதற்கு இடமில்லை; இருவர் இருப்பதும் பொருந்தாது. ஆனதனால், மிகப் பிரபலமாயிருக்கிற தன் மந்திரியைச் சந்திரகுப்தன் வேலையினின்றும் என்றைக்கு நீக்கி, ராஜ்யாதிகாரத்தைத் தானே கைக்கொள்கிறானோ, சொல்வதற்கில்லை. அது சில நாட்களுக்குள் நிழகத்தக்கதேயாகும்" என்று விராதகுப்தன் விவரங்களைச் சொல்லலானான்.

"பெரிய சமாசாரம்! இந்த வேஷத்துடனேயே நீ இப்போதே பாடலிபுரத்துக்குப் போய்ச் சாணக்கியரோடு சந்திரகுப்தன் சச்சரவு செய்து கலகம் விளைத்துக்கொண்டிருக்கும் சமயம் பார்த்து, சந்திரகுப்தனைத் துதித்துக் குத்தித் தூண்டியெழுப்பத்தக்க பாடல்களைப் பாடவேண்டுமென, அங்கே தர்பார்ப் பாணையுள்ள ஸ்தானகலசனுக்குச் சொல். போன மாதத்திலிருந்து அவன், சாணக்கியருக்குத் தெரியாமல், நம்மிடம் சம்பளம் வாங்கிக்கொண்டிருக்கிறான். ஆதலால், நாம் சொல்கிறபடி செய்வான். அப்போதைக்கப்போது நடக்கிற காரியங்களைக் கரபகன் மூலமாக எனக்கு அறிவிக்குமாறும் அவனுக்குச் சொல்" என்றான் ராக்ஷஸன்.

இந்தக் காரியத்தை நிறைவேற்றுவதற்கு விராதகுப்தன் உடனே பாடலிபுரத்திற்குப் புறப்பட்டான்.

அவனுக்கு ராக்ஷஸன் தாராளமாக வெகுமதி கொடுத்து அனுப்பினான்.

அதற்குப் பிறகு, ராக்ஷஸனுடைய வேலைக்காரன் தோன்றி, "மூன்று விலையுயர்ந்த ஆபரணங்களைச் சில வியாபாரிகள் விற்பனைக்குக் கொண்டுவந்திருக்கிறார்கள். அவைகளைச் சோதித்துப் பார்த்து, வாங்கலாமா வேண்டாமா வென உத்தரவு செய்யும்படி சகடதாஸன் அவைகளை இதோ அனுப்பியிருக்கிறான்" என்று சொன்னான்.

அவை உண்மையில் பர்வதேசுவரனுடைய ஆபரணங்களே. அவைகளை ராக்ஷஸனிடம் விற்பனைக்குக் கொண்டு போகும்படி சாணக்கியர் தம் ஒற்றர்களான விசுவாவஸுவையும் அவன் தம்பிமாரையும் வியாபாரி வேஷத்தோடு அனுப்பியிருந்தார். அவ்வாபரணங்கள் எவருடையவை என்பது ராக்ஷஸனுக்குத் தெரியாது. அவைகளை வாங்கி அவன் பரீக்ஷித்துப் பார்த்ததில் அவை முதல்தரமான நுண்ணிய வேலைப்பாடமைந்த மிக விலையுயர்ந்த நகைகளெனக் கண்டான். அவைகளை வாங்குவதே சரியெனத் தீர்மானித்தான். நியாயமான விலைக்குக் கிடைக்குமானால், சகடதாஸன் அவைகளை வாங்கட்டும் என அந்த வேலைக்காரன் மூலமாகவே சொல்லியனுப்பினான். சிறிதும் சந்தேகப்படாமல் சகடதாஸன் அவைகளை நல்ல நியாயமான விலைக்கே வாங்கினான். அவைகளை வாங்கும்படிச் சகடதாஸனுக்குச் சொல்லியனுப்பிவிட்டு ராக்ஷஸன் சாணக்கியருக்கும் சந்திரகுப்தனுக்கும் சீக்கிரத்தில் மனமுறிவு ஏற்படுமென்னும் எண்ணத்தினால் ஆனந்தப்பட்டுக் கொண்டே ஸ்நானம் செய்து சாப்பிடப்போனான்.

———

# அத்தியாயம் 27

## பிணக்கு

சரத்ருதுவில் பௌர்ணமி தினத்தில், கார்த்திகைப் பண்டிகையைத் தென்னுட்டார் கொண்டாடுவதுபோல, வடதேசத்தில் கௌமுதிப் பண்டிகை கொண்டாடுவது வழக்கம். பாடலிபுரத்தில் அந்தப் பண்டிகைத் தினம் வந்தது. வருஷந்தோறும் அந்நகரத்தில் எங்கே பார்த்தாலும் உற்சாகமும் உல்லாசமும் நிறைந்திருக்கும்; பாட்டுக்கச்சேரிகளும் நாட்டியக்கச்சேரிகளும் நிகழும்; கோமாளிக் கூத்துக்களும் நாடகங்களும் நடைபெறும்; செப்பிடுவித்தை ஜாலவித்தை முதலான வேடிக்கைகளும் விநோதங்களும் நிரம்பியிருக்கும். ஆண் பெண் குழந்தைகளடங்கலும் தெருக்கள் தோறும் நல்லாடை யுடுத்து உவப்புடன் ஆடிப்பாடி நகைத்து நையாண்டி பண்ணிக்கொண்டு திரிவார்கள். ஜனங்கள் தம் தொல்லைகளையெல்லாம் மறந்து முழுமனத்தோடு விநோதத்திற் காலங்கழிக்கும் விழாப் பருவம் அதுவே. இந்த வருஷம் அந்த விழா சந்திரகுப்தன் பட்டத்திற்கு வந்த முதல்வருஷம் கொண்டாடப் பெறுவதனல் மிக மிகச் சிறப்பாக அதை அநுஷ்டிக்க வேண்டுமென அவன் கட்டளையிட்டிருந்தான். தோரணங்கள், கொடிகள், சாமரங்கள், மயிற்றோகைகள் முதலியவைகளினல் ஸுகங்கா மாளிகையைத் திவ்வியமாக அலங்கரிக்கச் செய்தான். பின்பு, பூர்ண சந்திரோதயமானதும் மாயாதீபம்போல அது பிரகாசிக்கத் தொடங்கின வுடனே,

அரண்மனையின் மேல்மாடிச்சந்திரசாலைக்குப் போய், ஊரின் உல்லாசக் காட்சியைக் காண அவன் விரும்பினான்.

பாபத்தியக்காரனான வைகிநாரியின் மனம் கலங்கிக் குழம்பியது. அரசனுடைய கட்டளைக்கு மாறாக அவ் விழாக் கொண்டாட்டத்தைச் சாணக்கியர் தடுத்துவிட்டா ரென அரசனுக்குச் சொல்வது எங்ஙனம்? அரசன் மாடியின்மீது போய்த் தானே கண்ணாரப் பார்த்தபின், இவ் விஷயத்தை மெதுவாக எடுத்துரைப்பதே யுக்தமென அவன் தீர்மானித்துக்கொண்டான். ஆதலின், சந்திர சாலைக்கு அரசனுக்குமுன் நடந்தான்.

உன்னதமாயிருந்த அழகிய சந்திரசாலைக்குப் போய் அரசன் நகரத்தின் கோலத்தை உற்றுப் பார்த்தான். ஒரு விதமான மகிழ்ச்சியும் இல்லை, மனோஹரக் காட்சியும் இல்லை, உல்லாசமும் இல்லை. அவனுக்குக் கோபம் தாங்கக் கூடவில்லை.

"இவ்வாண்டில் கௌமுதி விழாவை விசேஷச் சிறப் பாகக் கொண்டாடவேண்டுமென்று கட்டளையிட்டிருக்க வில்லையா? வைகிநாரி! இவ்வருஷ விழா முன்போலல்லாமல் மிக விமரிசையாகவும், மிக மேன்மையாகவும் கொண் டாடப் பெறவேண்டுமென்பது நமது விருப்பமென்று ஊராருக்கு அறிவிக்கவில்லையா?" எனச் சந்திரகுப்தன் வினவினான்.

வைகிநாரி நடுநடுங்கி, "ஆம், மகாராஜா! ஆனால் விழாக் கொண்டாடவேண்டா மென்று சாணக்கியர் தடுத்து விட்டார்" என்று சொன்னான்.

"என்ன! அப்படிச் செய்வதற்கு அவருக்கு என்ன தைரியம்? அவரை உடனே இங்கே அழைத்துவா" என்று சந்திரகுப்தன் கர்ஜித்தான்.

இந்த உத்தியோகத்தில் நாம் ஏன் அகப்பட்டுக் கொண்டோமெனப் பரபத்தியக்காரன் தன்னைத் தானே நிந்தித்துக்கொண்டு சாணக்கியருடைய குடில் போன்ற கிருகத்திற்குப் போனான். அங்கே வறட்டிகள் தட்டிக் காய வைக்கப்பட்டிருந்தன; தர்ப்பைப்புல் அங்கும் இங்கும் கிடந்தது; வீட்டுச்சுவர்கள் தட்டினால் விழுவனபோல் இருந்தன. அவைகளைப் பார்த்து அந்தப் பரபத்தியக் காரன், "இந்தப்பிராமணர், அற்புதங்கள் செய்ய வல்லார் என்பது அதிசயமன்று. தம் நலத்திற்காக இவர் செய்யுங் காரியம் ஒன்றுமே இல்லை" என்று தனக்குத்தானே சொல் லிக்கொண்டான்.

சாணக்கியர் கோபாவேசத்தோடு உட்கார்ந்திருப்பதை அவன் கண்டான். மிகப் பணிவாக விழுந்து அவரை நமஸ்கரித்து, அரசர் அவரை அவசரமாகப் பார்க்கவிரும்பு கிறாரென அறிவித்தான்.

"இரவு இந்த வேளையில் அரசர் என்னை அவசரமாகப் பார்க்க விரும்புகிறாரா? விழாக்கொண்டாட்டத்தை நான் தடுத்திருக்கும் சங்கதி அவருக்குத் தெரியாது போலும்!" எனச் சாணக்கியர் வினவினார். அவருக்கு வர்த்தமானம் எட்டியிருக்கிறது என்று வைகிநாரி சொன்னான்.

"யார் சொன்னார்?" எனச் சாணக்கியர் கோபமாகக் கேட்டார்.

"மகாராஜாவே இப்போது மாடிக்குப் போய்ப் பார்த்து, விழாக் கொண்டாடப்பெறவில்லையெனக் கண் டார்" என்று அவன் மறுமொழி கூறினான்.

"இம்ம்ம்! நீயும் மற்ற வேலைக்காரர்களும் மெல்ல இரகசியமாகக் கிளப்பி விட்டீர்களோ? அரண்மனை வேலைக் காரர்களாகிய உங்களை எனக்குத் தெரியுமே. சக்கரவர்த் தியார் எங்கே இருக்கிறார்?" எனச் சாணக்கியர் வினவினார்.

"இன்னும் ஸுகங்கா மாளிகையில் சந்திரசாலையிலேயே இருக்கிறார்" என்று வைகிநாரி பதில் சொன்னான்.

"நல்லது, அங்கே போவோம்" என்று அவர் புறப் பட்டார். வைகிநாரியும் அவருமாக ஸுகங்கா அரண் மனைக்குப் போனார்கள்.

**சாணக்கியர்** (சந்திரகுப்தனை யணுகி): ராத்திரி இந்த வேளையில் இவ்வளவு அவசரமாக என்னை ஏன் வரச் சொன்னாய்?

**சந்திரகுப்தன்:** நான கொண்டாடச் சொல்லியிருந்த கௌமுதி விழாவைத் தடுத்தீர்களாமே; தங்கள் உத்தேசம் என்ன வென அறியவிரும்புகிறேன்.

**சாணக்கியர்:** எனக்கோர் உத்தேசம் உளது. அந்தக் காரியம் செய்ததற்கு நானே முழு ஜவாப்தாரி.

**சந்திரகுப்தன்:** காரணம் இன்னதெனத் தெரிந்து கொள்ளும் உரிமை எனக்கு உண்டல்லவா?

**சாணக்கியர்:** இல்லை. துரைத்தனங்கள் மூன்று வகைப்படும்: 1. அரசனைச் சார்ந்தவை, 2. அரசனையும் அவன் மந்திரிகளையும் சார்ந்தவை, 3. அவன் மந்திரி களையே சார்ந்தவை. அவற்றுள், நம் ராஜாங்கம் மூன்றும் வகையைச் சார்ந்தது. ஆகையால், தலைமை அமாத்திய ஞகிய நானே எல்லாவற்றிற்கும் அதிகாரி. எதற்கும் காரணம், உனக்கு நான் சொல்லக் கடமைப்பட்ட வனல்லன்.

சந்திரகுப்தன் கோபங்கொண்டு முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

அவ்விடத்தில் அருகிலிருந்து மேற் சொல்லிய வாதானுவாதத்தைக் கேட்டுக்கொண்டிருந்த ஸ்தானகலசன் என்னும் ஸம்ஸ்தானப் பாணன்,

"சந்திரன் விசும்பில் வந்தெழ எந்தும்
பேரொளி பரவும், காரிருள் சிதறும்,
சந்திர குப்தன் வெந்திறற் கையில்
செங்கோல் உயரத் தீப்பகை சிதறும்.

மாண்புறு மகத மன்னவன், நாட்டின்
கதியையும் மாந்தர் விதியையும் வகுப்பான்
அரச கேசரி, ஆண்மையிற் சிறந்தோன்
வஞ்சகம் புரிவார் அஞ்சிடும் காலன்!

மக்களில் வேந்தர் வரிப்புலி யாவார்,
துகையினிற் றுழறும் கோளரி அன்னூர்
வநம்பகை மாய்ப்பார் மன்னவர், கடிதில்
உறுந்துயர் யாவும் ஒதுக்குவர் உடனே!"

எனப் பாடினான்.

அந்தப் பாட்டைக் கேட்டு அதிசயப்பட்டுச் சாணக்கியர், அதில் ராக்ஷஸனுடைய கைவரிசை இருக்கிறதென உடனே தெரிந்து புன்னகை கொண்டு, இரகசியமாகச் சைகை செய்தார். அதை அறிந்து சந்திரகுப்தன் வைகிநரியை விளித்து, அந்தப் பாணனுக்கு ஒரு லக்ஷம் பொற் பணம் சம்மானம் அளிக்கும்படி உத்தரவு செய்தான்.

சாணக்கியர்: (வைகிநரியைத் தடுத்துச் சந்திரகுப்தனை நோக்கி) இந்த முட்டாள்தனமான பாட்டுக்கு இவ்வளவு அபரிமிதமான சம்மானம் ஏன்?

சந்திரகுப்தன்: எடுத்ததெற்கெல்லாம் தடைசொல்லி என்னை அடக்கக்கூடாது; இவ்வளவு நிர்ப்பந்தத்திற்குட் பட்டிருக்கும் அரசு அரசன்று; சிறைவாஸம் போன்றதே யாகும்.

சாணக்கியர்: நீ ஸ்வதந்திரனாக இருக்க விரும்பினால், உன் ராஜ்யபாரத்தை நீயே வகித்துக்கொள். நீ செய்கிற காரியம் ஒவ்வொன்றும் என் அனுமதியோடு செய்வதாயில்லாவிட்டால், உன் ராஜ்யத்தின் பரிபாலனத்திற்கு நான் உத்தரவாதியாகமாட்டேன்.

சந்திரகுப்தன்: இனி ராஜ்யத்தை நானே பரிபாலனம் செய்துகொள்ளப்போகிறேன்.

சாணக்கியர்: அப்படியே செய்துகொள். நான் இதுவரையிற் செய்யாமல் விட்டிருந்த என் வைதிக காரியங்களையே இனிக் கவனிக்கத் தொடங்குவேன்.

சந்திரகுப்தன்: அப்படியே செய்துகொள்ளுங்கள். அது நிற்க, கௌமுதி விழாவை என் தடுத்தீர்கள்?

சாணக்கியர்: அதைக் கொண்டாடவேண்டுமென்று நீ என் இவ்வளவு பிடிவாதமாயிருக்கிறாய்?

சந்திரகுப்தன்: முதற்காரணம் என்னவெனில், என் உத்தரவுகள் நிறைவேறவேண்டுமென்பதே.

சாணக்கியா: இதைத் தடுப்பதில் எனக்குள்ள முதல் நோக்கம் யாதெனின், இவ்வற்ப விஷயத்தில் உன் உத்தரவை மீறி நடக்கவேண்டுமென்பதே. இந்தியா தேசம் முழுதும் உன் உத்தரவுகளை எவரும் தடையின்றி நிறைவேற்றுவதனால், நீ வரவரக் கொடுங்கோலனாகக் கூடும்; அவ்வாறு ஆக்க கூடாதென்பதே எனது கருத்து. அரசனுடைய ஆஜ்ஞைகளை அவ்வப்போது மீறியே நடக்க

வேண்டும். அங்ஙனம் செய்தால்தான் அவனுக்கு ஸ்வேச்சா வியவகார நோக்கம் சிறிதாவது தணியும். இரண்டாம் காரணமோவெனின், உற்சவம் கொண்டாடுவதற்கேற்ற சமயம் இதுவன்று. மிகப் பிரபலமான சைனியத்தோடு சத்துருக்கள் நம் நகரத்தின்மீது படையெடுக்கப் போகிறார்கள். நந்தர்களை எதிர்ப்பதற்கு நமக்குத் துணையாயிருந்த முக்கியமான அதிகாரிகள் பலர் நம்மை விட்டுச் சத்துருக்களோடு போய்ச் சேர்ந்து கொண்டார்கள். அவர்களாவார்,—தளகர்த்தனை ஸிம்மபலனது தம்பி பாகுராயணன், யானைப்படைத் தலைவனை பத்ரபடன், குதிரைப்படைத் தலைவனை புருஷதத்தன், பிரவுகண இலாக்காத் தலைவனை சந்திரபானுவின் மருகன் டிங்கரதன், மகாராஜனின் சுற்றத்தானை பலகுப்தன், சிறுபிராயத்திலிருந்து மகாராஜனுக்குத் தொண்டனாயிருந்த ராஜசேனன், மாளவராஜனுடைய புத்திரனை லோகிதாக்ஷன், மத்ரகப்படைத் தலைவனை விஜயவர்மன் என்பவர்கள். இவர்களெல்லாருக்கும் நம் சைனிய பலாபலம், கோட்டையின் பலாபலம் முதலான உளவுகள் நன்றாகத் தெரியும்.

"அவர்களனைவரும் ஏன் போனார்கள்?" என அரசன் வினவியதற்குச் சாணக்கியர், "பத்ரபடனும் புருஷதத்தனும் மதுபானிகளாகவும் ஸ்திரீலோலர்களாகவும் இருந்தார்கள். அவர்கள் நம் யானைப்படையையும் குதிரைப்படையையும் சரியாகக் கவனிக்கவில்லை. ஆகையால், அவர்களை நான் சிறிது காலத்திற்கு வேலையினின்றும் விலக்கி வைத்து, ஜீவனாதாரத்திற்குப் போதிய பணம் மாத்திரமே படிச்செலவாகக் கொடுத்துவந்தேன். ஆதலின், அவர்கள் மலயகேதுவினிடம் ஓடிப்போய் அவனுடைய யானைப்படைக்கும் குதிரைப்படைக்கும் தலைவர்களானார்கள். டிங்கரதனும்

பலகுப்தனும் அதிகச் சம்பளம் கேட்டார்கள். மறுத்ததனால், மலயகேதுவினிடம் அவர்கள் வேலைக்கு அமர்ந்தார்கள். இதைக்காட்டிலும் அதிகச் சம்பளம் கொடுக்கிறேனென்று சொல்லி அவன் அவர்களை இழுத்துக்கொண்டிருக்கிறான். ராஜசேனனுக்கு நீ அபரிமிதமான பொன்னும் பொருளும் நகையும் நட்டும் யானையும் குதிரையும் இனமாகக் கொடுத்தாய். அந்தக் கொடையை நான் ரத்து செய்துவிடுவேனெனப் பயந்து, அவன் மலயகேதுவினிடம் போய்ச்சேர்ந்தான். பாகுராயணன் எப்பொழுதுமே நமக்கு விரோதமான துரோகியாயிருந்திருக்கிறான். ஆனால், அந்தச் சங்கதி சில நாளைக்கு முன்னால்தான் எனக்குத் தெரிந்தது. பர்வதேசுவரனை நானே கொல்வித்தேனென்று மலயகேதுவினிடம் இரகசியமாகச் சொல்லி, அவனை உயிர் தப்பி ஓடிப்போம்படி தூண்டினவன் அவனே. சகடதாஸனுக்கும் சந்தனதாஸனுக்கும் துரோக சிந்தனைக்காக நான் விதித்த கடுஞ்சிக்ஷையைப் பார்த்துப் பயப்பட்டு அவன் மலயகேதுவினிடம் ஓடிப்போனான். அவன் தன் உயிரைக் காப்பாற்றினானென்று மலயகேது நன்றி பாராட்டி அவனைத் தனக்கு அந்தரங்க மந்திரியாகவும் சொந்த ராயஸக் காரனாகவும் வைத்துக்கொண்டிருக்கிறான். லோகிதாக்ஷனுக்கும் விஜயவர்மனுக்கும் பொறாமை அதிகமாயிருந்தது. தங்களைக் காட்டிலும் குறைவாக வேலை செய்தவர்களுக்கு நீ அதிகமான கொடைகள் கொடுத்தாயென வயிற்றெரிச்சற்பட்டு அவர்களும் ஓடிப்போனார்கள்" என்று சொன்னார்.

"அவர்களுடைய அதிருப்திக்குக் காரணம் உங்களுக்குத் தெரிந்திருந்ததென்றால், முன்னராகவே நீங்கள் தக்க பரிகாரம் ஏன் செய்யவில்லை?" எனச் சந்திரகுப்தன் வினவினான்.

"அவைகளைப் பரிகரிக்க முடியவில்லை. அதிருப்தி வாய்ந்த பிரஜைகளோடு வியவகரிக்கவேண்டிய வகைகள் இரண்டே உள. அவையாவன, சம்மானமும் சிக்ஷையு மாம். பத்ரபடனையும் புருஷதத்தனையும் போன்ற அக் கரையில்லா ஆட்களைத் திரும்ப உத்தியோகத்தில் வைத்துக் கொள்வது இயலாதாயிற்று. தமக்குள்ளது போய்விடுமோ வெனப் பீதிகொண்ட ராஜசேனனுக்கும் பாகுராயணனுக் கும் அச்சந் தவிர்ப்பது ஆகாத காரியம். பொறாமை யினால் தமக்குத் தாமே பரிந்து வருந்திய விஜயவர்மன் லோகிதாக்ஷன் என்பவர்களுடைய அசூயையை அகற்று வதற்கு மருந்து இல்லை. டிங்கரதனையும் பலகுப்தனை யும் திருப்திப்படுத்துவதற்கு நமது கஜானாப் பணம் முழு வதையும் கொடுத்தாலும் போதாது. நந்தர்களை நாம் வெல்வதற்குப் பெருஞ் சாதகமாயிருந்த இவர்களைத் தண் டித்தால் நாம் நன்றி கொன்றவர்களென ஜனங்கள் சொல் வார்கள்; அன்றி, ராக்ஷஸனையும் அவன் படைகளையும் எதிர்த்து நாம் வெல்லவேண்டியிருப்பதால், இவர்களைத் தண்டிப்பது அபாயகரமாக முடியும்; இருக்கிற பகைவர் களின் தொல்லை போதாதென்று இவர்களையும் பகைவர் களாக்கிக் கொண்டவர்களாவோம். இது நமக்குப் பிரதி கூலமான காலமெனத் தீர்மானித்தேன். நமது கோட்டை யைப் பலப்படுத்துவதிலும், ஜனங்களை யுத்தத்திற்குத் தயாராயிருக்கும்படி செய்வதிலுமே நாம் மனத்தைச் செலுத்தவேண்டுமேயல்லாமல், முக்கியமல்லாத மூடத்தன மான இவ்விழாக்கொண்டாட்டத்தில் மனம் செலுத்துவது தகுதியன்றெனத் தீர்மானித்தேன்" என்று சாணக்கியர் விவரமாகக் காரணங் கூறினார்.

"இன்னும் சில கேள்விகள் கேட்கலாமோ?" எனச் சந்திரகுப்தன் வினவச் சாணக்கியர் தாராளமாகக் கேட்கும்படி சொன்னர்.

"மலயகேது தப்பியோடும்படி ஏன் விட்டீர்கள்? நீர் அப்படிச் செய்யாதிருந்தால் இந்த ஆபத்து நமக்கு வந்தேயிராது" எனச் சந்திரகுப்தன் வினவினன்.

"நாம் வேறு என்ன செய்திருக்கக்கூடும்? இரண்டு காரியந்தான் செய்திருக்கலாம். ஒன்று அவனுடைய தந்தை பர்வதகனுக்கு வாக்களித்த பாதி ராஜ்யத்தை மலயகேதுவுக்குக் கொடுப்பது; மற்றென்று, அவனைச் சிக்ஷிப்பது. சிக்ஷித்தால் நாம் நன்றிகெட்ட பாதகர்களெனப் பகிரங்கமாக ஒப்புக்கொண்டது போலாகும்; பர்வதகனைக் கொல்வதிற் சம்பந்தப்பட்டவர்களென்றும் பறையறைந்தது போலாகும். பாதிராஜ்யத்தைக் கொடுப்போமென்றால், பர்வதகனைக் கொன்றது பயனற்ற குற்றமாகும். ஆதலால், மலயகேதுவை ஓடிப்போகவிட்டேன்" என்று சாணக்கியர் சமாதானம் கூறினர்.

"நல்ல சமாதானம்! அது போகட்டும், ராக்ஷஸன் இங்கே இருந்தபோது அவனைக் குறித்துத் தக்க நடவடிக்கை ஏன் மேற்கொள்ளாதிருந்தீர்? சிக்குச்சிணுக்கில்லாமல் அமைதியாக அவனை ஏன் போகவிட்டீர்?" என்று சந்திரகுப்தன் கேட்டான்.

"அவன் உயர்தரமான அறிவும் வாய்மையும் வீரமும் வாய்ந்தவன். நகரத்திலுள்ள ஜனங்களெல்லாம் அவனிடத்து அன்பும் மரியாதையும் வைத்திருந்தார்கள். தன் யஜமானரிடத்துப் பிறழாத பக்திகொண்டிருந்தான் என்பதொன்றே அவன்மீது சொல்லத்தக்க குற்றம். அவனை இவ்விடத்திலேயே வாழ்ந்திருக்க விட்டிருந்தால்

பெருங்கலகம் எழுவதற்கு இடமாகும். அவனை எதிர்த்துச் சண்டையிட்டால் அநேக ஆட்கள் மடிவதற்குக் காரணமாவோம். அன்றியும், சிறந்த யோக்கியதையுள்ள அந்தப் புருஷனும் இறந்துபோவான். அவனை இழக்க எனக்கு மனமில்லை; அவனை இனியொருசமயம் நம் வழிக்குக் கொண்டுவந்து உன்னிடம் அவனை உத்தியோகத்தில் அமர்த்தவேண்டுமென்றிருக்கிறேன். நகரத்தினின்றும் நோவாமல் அவன் நீங்கிப் போகும்படி விட்டு அவனைப் படுகுழியில் வீழ்த்த நினைத்தேன். அந்நரிப்பள்ளத்தில் அவன் விழுந்து, பட்டணத்தை விட்டுப் போனான். அதனால், நம்மை எதிர்த்துப் போராடி வெற்றி பெறுவதற்கிருந்த ஓரே சந்தர்ப்பத்தை இழந்தான். அவன் இங்கே இருந்திருப்பின் அவனுக்குச் சார்பாகப் போர்புரிந்திருக்கக் கூடிய ஜனங்களும், அவன் பயங்கொள்ளியென இப்போது நினைத்து அவனை ஆதரியாதொழிந்தனர்" என்று சாணக்கியர் பதில் சொன்னார்.

"அடடா! ராக்ஷஸன் எவ்வளவு பெரிய மனிதன், அப்பா!" எனச் சந்திரகுப்தன் ஏளனமாக இரைந்தான்.

"ஏன் அப்படிச் சொல்லுகிறாய்?" என்று சாணக்கியர் கோபமாகக் கேட்டார்.

"ஏனெனில் அவன் இங்கே இந்நகரத்தில் நம் படைகளின் மத்தியில் அரசனைப்போல வாழ்ந்துகொண்டிருந்தான்; நமது ஜயப்பிரதாபப் பிரகடனத்திற்கும் குறுக்கிட்டான். அவனைப் பிடித்துச் சிறையில்வைக்க எவரும் துணியவில்லை. அவன் தனக்கு இஷ்டப்பட்டபோது ஊரைவிட்டு நீங்கிப்போனான்" என்று அரசன் சொன்னான்.

"ஓ, இவ்வளவுதானா? நான் உன்னைச் சக்கரவர்த்தியாக்கியதுபோல, அவன் மலயகேதுவை ஜம்பூத்வீபத்திற்

கெல்லாம் சக்ரவர்த்தியாக்கிவிட்டானே வென நினைத்தேன்" என்று சாணக்கியர் உறைப்பாகக் குத்திச் சொன்னார்.

"நீர் என்னை ஜம்பூத்வீபத்துச் சக்கரவர்த்தி ஆக்க வில்லை" என்று சந்திரகுப்தன் எதிர்த்து இகழ்வாகப் பேசினான்.

"மற்று யார் ஆக்கினார்?" எனச் சாணக்கியர் கடுத்துக் கோபித்துக் கேட்டார்.

"என் நல்விதியின் வலி" என்று சந்திரகுப்தன் மறு மொழி கூறினான்.

"மதியீனர்களே விதியை நம்புவார்கள்" என்றார் சாணக்கியர்.

"மதியீனர்களே பெருமை யடித்துக் கொள்வார்கள்" என்றான் சந்திரகுப்தன்.

கண்களிற் பொறிபறக்கச் சாணக்கியர் தரையை உதைத்து மிதித்துக்கொண்டு, "நந்தகுலத்தை அழிக்கச் சபதம் செய்ததுபோல, உன் வமிச பரம்பரையை அழிக்கச் சபதம் செய்யவேண்டுமென எனக்குத் தோன்றுகிறது. ஆனால், உன்மீது குறைகூற எனக்கு உரிமையில்லை. நீ இவ்வளவு ஏறுவாயென்று முன்னராகவே நான் தெரிந்து கொண்டிருக்கவேண்டும். இதோ என் ராஜாங்க உத்தி யோகம்! இதை ராக்ஷஸனுக்கோ, அல்லது உனக்கு இஷ்ட மான வேறு எவருக்கோ அளித்து, அவனை முதன் மந்திரி யாக்கிக்கொள்" என்று சொல்லி அவர் தம் கையிலிருந்த கோலை வீசியெறிந்தார். அப்போது, "ராக்ஷஸா! நீ வெற்றி பெற்றனை" எனக் கூவி, அவ்விடத்தை விட்டு நீங்கினார்.

"இனிமேல் சாணக்கியருடைய உதவியின்றிச் சந்திர குப்தன் தானாகவே ராஜ்யத்தை ஆள்வானென என் பிரஜை

களெல்லாருக்கும் பறையறை" என்று சந்திரகுப்தன் வைகிநாரியை ஏவினன்.

சங்கதி எப்படிப் போய் எப்படி முடிந்ததெனப் பர பத்தியக்காரன் திகைத்துச் சிறிது நேரம் தயங்கி நின்றான்; "என்ன ஆலோசித்துக்கொண்டிருக்கிறாய்?" என அவனைச் சந்திரகுப்தன் அதிர்ந்து கேட்டான்.

"ஒன்றுமில்லை; கடைசியில் தாங்கள் நிஜமான மகா ராஜா ஆகிவிட்டீர்களென்று சந்தோஷிக்கிறேன்" என்று பரபத்தியக்காரன் மொழிந்தான்.

"சோனோத்தரே! இந்தச் சச்சரவினால் எனக்குத் தலைநோவு எடுக்கிறது. நான் போய்ச் சிறிது நேரம் இளைப் பாறவேண்டும்" என்று சந்திரகுப்தன் சொன்னான். அவனைச் சோனோத்தரை பள்ளியறைக்கு அழைத்துக் கொண்டு போய்விட்டாள்.

---

## அத்தியாயம் 28

## சாணக்கியரது சாதுரியச்செய்கை

மகதத்தின் மீது படையெடுப்பதற்கு வேண்டிய சன்னாகங்களெல்லாம் மலயகேதுவின் முகாமில் பெரும்பாலும் ஸித்தமாகிவிட்டன. புறப்படுவதற்கு உத்தரவு எப்போது வருமெனப் படையினர் காத்துக்கொண்டிருந்தனர். நாளுக்கு நாள் அவர்களுக்கு ஆத்திரம் அதிகமாகிக்கொண்டிருந்தது. சந்திரகுப்தனுக்கும் சாணக்கியருக்கும் மனமுறிவு ஏற்படுமென எதிர்பார்த்துக்கொண்டிருந்த விஷயம் என்னவாயிற்றென்று பாடலிபுரத்தினின்று வர்த்தமானம் வருவதற்கு ராக்ஷஸன் காத்துக் கொண்டிருந்தான். படையெடுப்பதற்கான நுண்ணிய விவரங்களை இரவும் பகலும் அவன் சிந்தித்துச் சீர்ப்படுத்திக் கொண்டிருந்தான். குறிப்பிட்ட அன்றைத்தினம் காலையில் அவனுக்குப் பிரமாதமான தலைநோவு உண்டாகி அவனை வாட்டியது.

சைனியத்தவர்கள் எவ்வளவு ஆத்திரப்பட்டுக் கொண்டிருந்தார்களோ அவ்வளவு மலயகேதுவும், எப்போது புறப்படுவோம் எப்போது புறப்படுவோமென ஆவல் கொண்டிருந்தான். பன்னிரண்டு சந்திரகுப்தர்களும் சாணக்கியர்களும் சேர்ந்த போதிலும் தன் பெரும்படையினர் அவர்களை மிகச் சுலபமாக நசுக்கிவிடக்கூடுமென்னும் எண்ணத்தினால் அவன், பாடலிபுரத்தின்மீது படையெடுப்பதற்குச்

சந்திரகுப்தனும் அவன் மந்திரியும் மனஸ்தாபப்பட்டுப் பிரிந்த சமாசாரம் வருமளவும் காத்திருக்கவேண்டியது அவசியமில்லையென நினைத்தான். தன் தந்தையைக் கொன்று அவர்கள் தன் மாதாவையும் விமாதாக்களையும் விதவைகளாக்கினமையின், சந்திரகுப்தனையும் சாணக்கியரையுங் கொன்று அவர்கள் மனைவியர்களை விதந்துக்களாக்கிய பின்னரே தன் தந்தையின் அபரக்கிரியைகளைச் செய்யப்போவதாக மலயகேது பிரதிஜ்ஞை செய்திருந்தான். அவன் அந்த வீண் ஜம்பமடித்துக் கிட்ட முட்டப் பத்து மாதங்கள் கழிந்தன. இதுவரையில் அது நிறைவேறவில்லை. அவன் தந்தைக்கு இதுகாறும் ஒரு கையளவு நீர் கூட இறைக்கவில்லை. அதனால் அவன் தாய் அவனை நிந்தித்து ஏசி இம்சைப்படுத்திக்கொண்டிருந்தாள். அவளுக்குப் பதில் சொல்ல அவனால் முடியவில்லை; அவளுடைய கடும்பார்வையையும் காணச் சகிக்கமுடியவில்லை.

மலயகேது மிகவும் துர்ப்பலமானவன், மனத்திடனற்றவன், அதிக யுக்தி புத்தியும் சாமர்த்தியமும் அட்டகாசமும் இல்லாத சாமானியத் தன்மையுடையவன். ஆதலின், மலயகேதுவினிடம், ராக்ஷஸனுக்குள்ள ராஜபக்தியைச் சங்கிப்பதற்கு ஏதுவான சொற்களைத் தந்திரசாலியான பாகுராயணன் மெதுவாக அவ்வப்போது ஜாடைமாடையாக நழுவவிடுவது அவனுக்குக் கஷ்டமான காரியமாக இருக்கவில்லை. இங்ஙனம், அவன் மலயகேதுவுக்கு ராக்ஷஸன் மீது சந்தேக புத்தியை வளர்த்து வந்தான். ஒரு நாள் அவன் பேச்சோடு பேச்சாக, “என்ன சொல்லினும், என்ன செய்யினும், பரம்பரை மந்திரியானவன் தன் பரம்பரை யஜமானரிடத்தே அபிமானம் வைத்திருப்பான். ஆதலின், ராக்ஷஸன் ஒருவேளை சந்திரகுப்தனோடு ராஜியாய்ப்போக மனங்

கொள்வானுல், அவன்மீது குற்றஞ் சொல்வதற்காகாது. சந்திரகுப்தனும் நந்த வமிசத் தோன்றலே. அவனுடன் இணங்குவதனல், ராக்ஷஸன் மகதராஜ்யத்துப் பழைய பிரதம மந்திரி ஸ்தானத்தை மீண்டும் பெறுவதற்காகும். ஆனல், என் சொந்த அபிப்பிராயத்தைச் சொல்வேனுயின், இது ராக்ஷஸன்மீது அபாண்டமான கோள் எனவே நான் நினைக்கிறேன்” என்று சொன்னன்.

“அங்ஙனமாயின், ‘அள்ளாமற் குறையாது, சொல்லா மற் பிறவாது’ என்னும் வழக்கச் சொல்லை மறந்தனையோ? ராக்ஷஸன்மீது குற்றஞ் சொல்வதற்கு ஆகாரமே இல்லை யென்று நீ சொல்வதை நான் ஏற்கும் பக்ஷத்தில், இவ்வனு மான வார்த்தை எங்ஙனம் பிறந்தது? அன்றியும், இதை நீ இப்போது எடுத்துக்காட்டுவதனல், பத்ரபடன், புருஷதத் தன், டிங்கரதன், ராஜசேனன், லோகிதாக்ஷன், பலகுப்தன், விஜயவர்மன் என்பவர்கள் என்னையடைந்து உத்தியோகம் வேண்டியபோது மொழிந்த கூற்று எனக்கு ஞாபகத்திற்கு வருகின்றது. சாணக்கியருடைய அநீதியான ஆஜ்ஞை களுக்குப் பொறுக்கமாட்டாது வந்தவர்களானமையின், அவர்கள் ராக்ஷஸனைச் சார்ந்தவர்களாக இங்கே உத்தியோ கம் ஏற்கவில்லையெனவும், என்னை மெச்சி மதித்து என்னி டம் ஸேவைக்கு இணங்கினதாகவும் அவர்கள் உறுத்திக் கூறினர்கள். அவ்வுறுத்தலுக்கு அர்த்தமென்ன?” என்று மலயகேது கேட்டான்.

“சந்திரகுப்தனும் ராக்ஷஸனும் ஒருவேளை ராஜியாயி னும் ஆகக்கூடும்; ஆதலால், தங்களை ராக்ஷஸனுடைய அனுசரர்களென நீங்கள் கருதக்கூடாதெனவே அவர்கள் குறிப்பிட்டார்களென்பது தெளிவு” என்றான் பாகு ராயணன்.

"நீ சொல்வதே சரி; ஆனால், ராக்ஷஸன் என்னைவிட்டு நீங்கிச் சந்திரகுப்தனைச் சார்ந்துகொள்ள விருப்பங்கொண்டிருக்கிறானென ஐயுறுவதற்குக் காரணமொன்றும் இது வரையிற் காணவில்லை" என்றான் மலயகேது.

"சிறிதும் காரணமே இல்லை" என்றான் பாகுராயணன்.

"ஐயோ பாவம்! இன்று காலையிலிருந்து மண்டையிடியினால் அவன் மிக நொந்து வருந்திக்கொண்டிருக்கிறானாம். நாம் போய்ப் பார்த்து உற்சாக மூட்டி அவனைத் தேற்றுவோம்" என்று மலயகேது சொன்னான்.

மலயகேதுவும் பாகுராயணனும் புறப்பட்டு ராக்ஷஸனுடைய டேராவுக்குப் போனார்கள். ஸிந்துசேனன், மேகநாதன், புஷ்கராக்ஷன், ஸிம்மநாதன், சித்திரவர்மன் என்பவர்களும் அவர்களுடன் சேர்ந்து, ராக்ஷஸனைத் தேற்றி ஊக்கத் தாங்களும் மிக ஆவலாயிருப்பதாகச் சொன்னார்கள். ராக்ஷஸனுடைய கூடாரத்தினண்டை போன போது மலயகேது, தான் ராக்ஷஸனை, அவன் எதிர்பாராதிருக்கையில் திடீரெனத் தனிமையாகப் பார்க்க விரும்பியதனால், பாகுராயணனைத் தவிர மற்றெல்லாரையும் பிரிந்து போகச் சொன்னான்.

சில நிமிஷங்களுக்கு முன்னர்க் கரபகன் வந்து ராக்ஷஸனோடு தனியே ஓர் அறையிற் பேசிக் கொண்டிருந்தான். சந்திரகுப்தனுக்கும் சாணக்கியருக்கும் உண்டான சச்சரவையும், சாணக்கியரை உத்தியோகத்தினின்று சந்திரகுப்தன் நீக்கியதையும் விவரமாக அவன் சொல்லிக் கொண்டிருந்தான். உண்மையான மனோபாவத்தைத் தெரிந்துகொள்ளும்பொருட்டு, அவர்கள் இருவரும் பேசிக் கொண்டிருந்ததை ஒளிந்து நின்று ஒற்றுக்கேட்போ

மென்று பாகுராயணனுக்கு மலயகேது சொன்னான். அப்படியே அவர்கள் நின்று ஒற்றுக்கேட்டார்கள்:—

ராக்ஷஸன்: (கரபகனை நோக்கி) வேலையினின்று நீக்கப் பெற்றபின், சாணக்கியர் எங்கே இருக்கிறார்?

கரபகன்: பாடலிபுரத்தில் இருக்கிறார்.

ராக்ஷஸன்: அவரைத் திரும்பச் சந்திரகுப்தன் அழைத்து மந்திரி ஸ்தானம் கொடுக்கமாட்டானென்று நிச்சயமாகச் சொல்வாயா?

கரபகன்: நிச்சயம், நிச்சயம். அதற்குச் சந்தேகமே இல்லை.

ராக்ஷஸன்: அவரை வேலையினின்று நீக்கியதற்குக் கௌமுதி விழாவைத் தடுத்ததொன்றுதானா காரணம்?

கரபகன்: இல்லை, இல்லை. கோபம் முற்றியதற்கு அது கடைசிக் காரணம். மகாராஜனாகிய மலயகேதுவைச் சாணக்கியர் தப்பியோடவிட்டாரென்று சந்திரகுப்தன் அவர் மீது மிக்க ஆக்கிரகங்கொண்டிருந்தான். அவன் தங்களை மிக மிகப் புகழ்ந்து பேசி, சாணக்கியரைக் காட்டிலும் தாங்கள் பன்மடங்கு சாமர்த்தியம் மிக்கவரென ஏற்றமாகச் சொன்னான். அங்ஙனம் அவன் சொல்லியவுடனே, சாணக்கியர் தம் கோலைக் கீழே வீசியெறிந்து, தங்களையேனும் மற்றெவரையேனும் முதன் மந்திரியாக்கிக் கொள்ளும்படி சந்திரகுப்தனுக்குச் சொன்னார்.

அந்த வார்த்தைகளைக் கேட்டு மலயகேது, "அப்படியானால், நாம் அப்போது கேள்விப்பட்டது போல, என் தந்தையைக் கொல்வதற்கு விஷமாதை யனுப்பியவர் சாணக்கியர் அல்லவோ, என்னவோ? ராக்ஷஸனைத் தன்

பிரதானியாக்கிக் கொள்ளவேண்டுமென்று சந்திரகுப்தன் மிக ஆவலாயிருப்பதாகவும் தோன்றுகின்றதே" என்று பாகுராயணனுக்குச் சொன்னான். அதற்குப் பாகுராயணன், "இந்த விஷயங்களையெல்லாம் மகாராஜா பாடலிபுரத்தைப் பிடித்துக்கொண்டபின்னர், நிதானமாக ஆலோசித்துக்கொள்ளலாம். ராக்ஷஸன் இப்போது நமக்கு விரோதமாக ஏதேனும் செய்தாலன்றி, அவனோடு முரணிக் கொள்வதற்கு இது தருணமன்று. ராஜ்ய தந்திரிகள் அவ்வப்போது செய்யுங் காரியங்களைக்கொண்டே அவர்களுடைய மன நிலையை நாம் தெரிந்துகொள்ளவேண்டும்" என்று சொன்னான்.

காபகன் புழைக்கடை வழியாகப் புறப்பட்டுப் போனான். அதற்குப்பின், ராக்ஷஸனுடைய கதவை மலயகேது தட்டி, ராஜாங்கமுறைப்படியல்லாமல், தான் வந்திருக்கிறதாகச் சொன்னான். ராக்ஷஸனை நோக்கி, "பாடலிபுரத்தின்மீது நாம் எப்போது படையெடுக்கிறது?" என்று மலயகேது கேட்டான்.

"உடனே, இந்த க்ஷணமே புறப்படுவோம். இனி எதற்காகவும் நாம் காத்திருக்கவேண்டியதில்லை. சாணக்கியருக்கு மந்திரிவேலை போய்விட்டது; நமக்கிருந்த பெருந் தடை நீங்கிப்போயிற்று" என்று ராக்ஷஸன் சொன்னான்.

"சாணக்கியர் மந்திரியாயிருந்தாலென்ன, அவரை வேலையினின்று நீக்கிவிட்டாலென்ன? அதற்கும் நமக்கும் என்ன சம்பந்தம்? அதை ஏன் அவ்வளவு பெரிதாகப் பாராட்டிப் பேசுகின்றீர்களோ எனக்குத் தெரியவில்லை. ஆயினும், இவ்வளவு தாமதித்தேனும் இப்போழுது படையெடுக்கிறோமேயென்று திருப்தியடைகிறேன்" என்று மலயகேது சொன்னான்.

உடனே மலயகேதுவின் விஸ்தாரமான சைனியங்கள் நகர்ந்து செல்லலாயின. யானைப்படை, குதிரைப்படை, தேர்ப்படை, பதாதிப்படை ஆகிய இவையனைத்தும் மிக்க தீரக்கோலமாகவே தோன்றின. நல்ல நாளென்று ஜீவஸித்தி குறிப்பிட்டிருந்த தினத்தில் அவர்கள் புறப்பட்டார்கள். அதாவது, மார்கழி மாதம் பௌர்ணமி திருவாதிரை நாளன்று, சந்திரோதயமானபின், புறப்பட்டார்கள். பிரயாணத்திற்குச் சாதாரணமாக விலக்காயுள்ள பௌர்ணமி தினத்தில் புறப்படுவது யுக்தமோவென ராக்ஷஸன் ஐயுற்றான். ஆயினும், ஜீவஸித்தியினிடம் அவனுக்கிருந்த பரம நம்பிக்கையினால் அவ்வையப்பாடுகளைப் பாராட்டாது புறக்கணித்தான்.

சந்திரகுப்தனுக்கும் சாணக்கியருக்கும் வேண்டிய ஆட்களிற் பலர் மலயகேதுவினிடம் வந்து சேர்ந்திருக்கிறார்களல்லவா? அவர்களின் விசுவாஸ விஷயத்திலும் ராக்ஷஸனுக்கு ஏதோ ஒருமாதிரியான சமுசயங்கள் தோன்றிக்கொண்டிருந்தன. தனக்குள்ள சந்தேக புத்தியினாலேயே அவர்கள்மீது சந்தேகம் தோன்றுகிறதென நினைத்து அவன் அச்சமுசயங்களை ஒதுக்கிவிட்டான். அவன் தன் சேனையைக் கீழ்க்கண்டவாறு பட்டாளம் பட்டாளமாக அணிவகுத்திருந்தான். முன்னணியில் தன்னண்டை சாஸியர்களையும் (Khasias) மகதர்களையும் நிறுத்திக்கொண்டான்; நடுவில் காந்தாரர்களையும் யவனர்களையும் வைத்தான்; அவர்களுக்குப்பின், சகர்கள், கிராதர்கள், ஹூதர்கள், காம்போஜர்கள் இருந்தார்கள்; புஷ்கராக்ஷன், மேகநாதன், ஸிம்மநாதன், ஸிந்துசேனன், சித்திரவர்மன் என்பவர்கள் தத்தம் பட்டாளங்களுடன் மலயகேதுவைச் சுற்றி நின்றுகொண்டார்கள்.

சைனியம் புறப்பட்டது. யமுனை நதியைக் கடக்க வேண்டிய இடத்தை எதிரியின் படையெதுவும் காத்துக் கொண்டிருக்கவில்லை. ஆனால் இந்திரப்பிரஸ்தத்துக் கோட்டைமாத்திரம் காக்கப்பட்டிருந்தது. அந்நகரத்தைப் பிடிக்கவேண்டுமா, அல்லது, பிடிக்காமல் முன் செல்ல வேண்டுமா என்னுமொரு தர்க்கம் நடந்தது.

"நாம் முன் செல்வோம். நம்மை எதிர்ப்பதற்குச் சத்துருவுக்குத் தைரியம் இல்லை. சாணக்கியரைத் தனியே விட்டுச் சந்திரகுப்தன் பாடலிபுரத்தினின்றும் வெளியேறும் படியாக அவ்வளவு துணிவு அவனுக்கு இல்லையென்று தெளிவாகத் தோன்றுகிறது. இப்போது இந்தக் கோட்டைகளைப் பிடிப்பதிற் காலங்கழிக்காமல் நாம் நேரேபோய்ப் பாடலிபுரத்தைத் தாக்குவோம். அடிமரம் விழுந்தால் கிளைகள் தாமாகவே விழுந்துவிடும். அன்றியும், நாம் காலத்தைக் கவனிக்கவேண்டியது முக்கியம்; ஒரு நிமிஷங்கூட வீண் போக்கலாகாது. 'சுபஸ்ய சீக்கிரம்' என்னும் பழமொழியை நாம் கடைப்பிடிக்கவேண்டும். சந்திரகுப்தன் இச்சமயம் மந்திரியொருவரும் இல்லாதிருக்கின்றான்; சாணக்கியரோடு அவன் சண்டைபோட்டுப் பிரிந்து சில நாட்களே யாகின்றன. அவனைப் பிடிப்பதற்கு இதுதான் தருணம். நாம் காலவிளம்பம் செய்வோமானால், தேசத்திற்கே ஆபத்து வந்ததெனெ நினைத்துச் சந்திரகுப்தனும் சாணக்கியரும் சமரஸப்பட்டு ஒன்றுசேர்ந்து கொள்ளக்கூடும். நம் உத்தேசம் நிறைவேறுவது கஷ்டமாகும்" என்று பாகுராயணன் சொன்னான்.

இந்த ஆலோசனை சரியானதேயென்று ராக்ஷஸனுக்கும் தோன்றியது.

ஆதலின், இந்திரப்பிரஸ்தம், ஹஸ்தினபுரம், கன்யா குப்ஜம், ராதாபுரம், பிரயாகை, காசி என்னும் இடங்களைப் பிடிக்காமல், சேனையானது நேரே பாடலிபுரத்திற்குப் போயிற்று. அவர்கள் பாடலிபுரத்திற்கருகில் போனவுடனே மலயகேதுவை நோக்கிப் பாகுராயணன், “இப்போது நாம் பாடலிபுரத்தினண்டை வந்திருக்கிறோம். ஒற்றர்களின் மூலமாகச் சந்திரகுப்தன் நமக்குத் தீங்கிழைக்கப் பிரயத்தனப்படலாம். ஆதலால், நமது பாளையத்திற்குள் அனுமதிச்சீட்டின்றி எவரும் வரக்கூடாதென்றும் பாளையத்தினின்று எவரும் வெளியே போகக்கூடாதென்றும் கட்டுப்பாடு செய்வது நன்றெனத் தோன்றுகின்றது” என்றான்.

“அப்படியே செய். ‘சீட்டு’ உன் கையாலேயே கொடு. வேறு எவரையும் நான் நம்பமாட்டேன்; ராக்ஷஸனையும் நம்பமாட்டேன். அவன்மீது எனக்கு உண்டாயிருக்கிற அனுமானங்கள் ஆதாரமற்றவையானால் நல்லதுதான். ஆனால், அவ்வனுமானங்கள் ஒழிந்துபோகாமல் மேலும் மேலும் ஞாபகத்திற்கு வந்துகொண்டிருக்கின்றன” என்று மலயகேது சொன்னான்.

சிறிதுநேரம் பொறுத்துப் பாகுராயணனண்டைபோய் ஜீவஸித்தி பாளையத்தை விட்டு வெளியே போவதற்குத் தனக்கு ‘ரகதாரி’யொன்று கொடுக்கவேண்டுமெனக் கேட்டான். பாகுராயணன் இருந்த இடத்திற்குப் பக்கத்தறையில் மலயகேது உட்கார்ந்திருந்தான். ஜீவஸித்தியை நோக்கிப் பாகுராயணன், “ராக்ஷஸனுடைய காரியமாகப் பாடலிபுரத்திற்குப் போகின்றாய்போலும்?” என்றான்.

“இல்லை, இல்லை. ராக்ஷஸனுக்கும் எனக்கும் விட்டுப் போயிற்று. ராக்ஷஸனைப்போன்றவன் ஒருவனோடு இன்னும் சகவாஸஞ் செய்துகொண்டிருக்கின்றேனேயென

நெடுநாளாக என் நெஞ்சம் என்னைக் குத்திக்குடைந்து கொண்டிருக்கிறது" என்று ஜீவஸித்தி சொன்னான்.

"ஏன்? அவன் என்ன செய்தான்?" எனப் பாகு ராயணன் வினவ, "அதை உன்னிடம் சொல்லமுடியாது" என்றான் ஜீவஸித்தி.

"அப்படியானால், உனக்கு நான் 'ரகதாரி' கொடுக்க மாட்டேன்" என்றான் பாகுராயணன்.

அதன்மீது, "அப்படியா? நல்லது, நான் சொல்வதை மர்மமாக வைத்துக்கொள். அவன் மாயமான விஷமாதைக் கொண்டு பெருமைவாய்ந்த பர்வதேசுவரனைக் கொலை செய்வித்தான்" என்று ஜீவஸித்தி சொன்னான்.

"என்ன! வாக்களித்தபடி பாதிராஜ்யம் கொடாது தவிர்க்கக் கருதிச் சண்டாளராகிய அந்தச் சாணக்கியனே அவனைக் கொலை செய்வித்தானென நாங்களெல்லோரும் கேள்விப்பட்டோமே" என்றான் பாகுராயணன்.

"அது பொய். அவ்விஷமாதின் பெயர்கூடச் சாணக் கியருக்குத் தெரியாது. ராக்ஷஸனுக்கு நான் உதவிபுரிந்தே னென்று என்னைத் துரத்தினர். சந்திரகுப்தன் சாணக்கியர் ஆகிய இருவரைக்காட்டிலும், பர்வதேசுவரனே பெரும் பராக்கிரமசாலி; அவனைக் கண்டே அஞ்சவேண்டியிருந்தது. ஆகலால், அவனை ஒழித்துவிடவேண்டுமென ராக்ஷஸனே அந்தப் பாதகியை அனுப்பினான்" என்று ஜீவஸித்தி மர்மம் உரைத்தான்.

"இதோ 'ரகதாரி' வாங்கிக்கொள். இவ்வுண்மையை நமது ராஜகுமாரனுக்குச் சொல்" என்றான் பாகுராயணன்.

உடனே மலயகேது அவ்விடத்திற்குப் போய், "எல்லாம் நான் கேட்டுக்கொண்டே இருந்தேன். ஓ! பாசாங்குக்காரப்

பாவி! ஓ கொலை பாதகா!" என அலறினன். அநுமதியைப் பெற்றுக்கொண்டு ஜீவஸித்தி போய்விட்டான்.

உடனே ராக்ஷஸனை வருவித்துக் கேட்கவேண்டும், ஜீவஸித்தி சொல்லியது உண்மையாயிருப்பின், அவனுக்குச் சிரசாக்கினை செய்யவேண்டும் என்று மலயகேது முதலில் நினைத்தான். ஆனல், "ராஜ்யவியவகாரங்களில் நம் மனம் போனபடி எதையும் நாம் சடுதியிற் செய்துவிடக் கூடாது. மிகவும் யுக்தமான காரியமாயிருப்பினும், அதை நிறைவேற்றுவதற்கு உற்றகாலம் வருமளவும் பொறுத்திருக்க வேண்டும். சந்திரகுப்தனையும் சாணக்கியனையும் எளிதில் வென்றுவிடலாமென ராக்ஷஸன் பெரிதும் நம்பிக் கொண்டிருந்தான். ஆனல், பெருமைவாய்ந்த பர்வதேசுவரனை எதிர்த்து வெல்வது அவனுக்கு அசாத்தியமாயிருந்தது. ஆதலால், அவனைக் கொல்வதற்கு இவ்விழிதகையான கள்ளவழியைக் கைக்கொண்டான்; பாதகனை சாணக்கியன் மீது பழியைச் சுமத்தித் தான் தப்பித்துக் கொண்டான். ஆயினும், அதற்காக ராக்ஷஸனைத் தண்டிப்பதற்கு இது சமயமன்று. இப்போது நாம் பாடலிபுரத்தைக் கிட்டி வந்துவிட்டோம். அந்நகரில் அவனுக்குச் சாய்கால் அதிகம். நகரத்தைப் பிடித்துக்கொண்டு, பின்னர் அவனைத் தக்கபடி கவனிப்போம்" என்று பாகுராயணன் சொன்னன்.

அத்தருணத்தில் சகடதாசனிடம் தான் ஒப்படைத்திருந்த முத்திரையிட்ட நகைச் சிப்பத்தை வாங்கிக் கொண்டு ஸித்தார்த்தகன் பாளையத்தினின்றும் 'ரகதாரி'யின்றி வெளியேற முயன்றனென அவனைத் தீர்க்கரகன் என்னும் படைத்தலைவன் சிறைப்பிடித்து, பாகுராயணனண்டை அனுப்பினன். அவனைச் சோதனை போட்டதில்

ராக்ஷஸனுடைய சொந்த முத்திரை வைத்ததொரு பொட்டணமும் கடிதமும் கிடைத்தன. முத்திரையை உடைக்காமல் மலயகேது அக்கடிதத்தைப் பிரித்துப் பார்த்தான். 'மகாகனம் பொருந்திய ஐயா அவர்களுக்குப் பொங்கும் மங்களம் எங்கும் ஓங்குக! சத்திய சீலராகிய நீங்கள் தங்கள் வாக்கைப் பரிபாலித்து நம் எதிரியை உத்தியோகத்தினின்றும் தள்ளிவிட்டீர்கள். நம் நண்பர்கள் நமக்குச் செய்யும் பேருபகாரத்திற்காக அவர்கள் கேட்டபடி அவர்களுக்கு நாம் கொடுக்கவேண்டியதே பாக்கி. அதற்குப் பிரதியாக அவர்கள் தங்களுக்கு இப்போது யஜமானனாயிருப்பவனைப் பிடித்துக் கொன்றுவிட்டு மேன்மை தங்கிய தங்களிடம் வந்து சேர்ந்துகொள்ள ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். இம்மித்திரர்களுள் சிலர் சத்துருவின் பொக்கிஷமும் யானைகளும் வேண்டு மென்கிறார்கள். வேறு சிலர் அவனது ராஜ்யம் வேண்டுமென்கிறார்கள். தாங்கள் அனுப்பிய மிக விலையுயர்ந்த மூன்று ஆபரணங்களையும் பெருநன்றியோடு பெற்றுக்கொண்டேன். அதற்குப் பிரதியாக இதனுடன் நானும் ஏதோ அனுப்பியிருக்கிறேன். அதைப் பரிவுடன் பெற்றுக்கொள்ளப் பிரார்த்திக்கிறேன். இந்தக் கடிதம் கொண்டு வருகிற நம்பிக்கையான மனிதன் வாய்மொழியாக ஒரு வர்த்தமானம் சொல்வான். அதைக் கேட்டுத் தாங்கள் அதன்படி செய்யவேண்டும்' என அக்கடிதத்தில் வரையப்பட்டிருந்தது.

"ஆ! அந்தப் பொட்டணத்தில் என்ன இருக்கின்றது? அதையும் திறந்து பார்; ஆனால், முத்திரை முறியாமல் திற" என்று மலயகேது சொன்னான். சிப்பத்தைத் திறந்து பார்க்க, அன்று காலையில் ஜாஜாலியின் மூலமாக ராக்ஷஸனுக்குப் பரிசளித்த மூன்று ஆபரணங்கள் இருந்தன.

"இந்தப் படுமோசமான கடிதம் சந்திரகுப்தனுக்கு ராக்ஷஸனால் எழுதப்பட்டதெனத் தெளிவாகின்றது. உண்மை உரைக்குமளவும் இந்தப் பயலைக் கட்டி அடியுங்கள்; வாய்மொழியான வர்த்தமானம் என்னவென்று தெரிந்து கொள்ளுங்கள்" என்று மலயகேது ஆஜ்ஞை செய்தான்.

பாசுரகன் என்னும் வீரன் ஸித்தார்த்தகனை வெளியே கொண்டுபோய்ச் சித்திரவதை செய்தான். அதன் மீது ஸித்தார்த்தகன் மலயகேதுவின் காலடியில் வீழ்ந்து, உண்மையை உள்ளபடி சொன்னால், தன்னை மன்னித்துக் காப்பாற்றவேண்டுமென மன்றாடினான். மலயகேது அங்ஙனமே வாக்களித்தான். பிறகு ஸித்தார்த்தகன், "என் யஜமானனாகிய ராக்ஷஸன் இந்தக் கடிதத்தைச் சகடதாஸனைக் கொண்டு சந்திரகுப்தனுக்கு எழுதுவித்து இதையும் முத்திரையிட்ட இச்சிப்பத்தையும் கொண்டுபோய் அவரிடம் சேர்ப்பிக்கும்படி கொடுத்தான். நான் வாய்மொழியாகச் சொல்லவேண்டிய சமாசாரம் வருமாறு: 'எனக்குப் பிரியமான நண்பர்கள் இங்கே ஐவர் இருக்கிறார்கள். அவர்களெல்லாரும் உங்கள்மீது மிக நேசம் பாராட்டுகிறார்கள். அவர்களாவார், குலுததேசாதிபதியான சித்திரவர்மன், மலயத்து ஸிம்மநாதன், காசுமீரத்துப் புஷ்கராக்ஷன், ஸிந்துதேசத்து ஸிந்துசேனன், கச்சுக்கும் சௌராஷ்டிரத்திற்கும் தலைவனான மேகநாதன் என்னும் பாரஸீகன். இவர்களுள் முதல் மூவர் மலயகேதுவின் ராஜ்யங்களுக்கு ஆசைப்படுகிறார்கள். கடை இருவர் யானைகளையும் பொக்கிஷத்தையும் கோருகிறார்கள். சாணக்கியரை நீக்கிவிடவேண்டுமென நான் வேண்டிய வரத்தை எனக்களித்தது போல, இவர்கள் கேட்கும் வரங்களையும் அளிக்க

வேண்டுமெனத் தங்கள் மேலான கனத்தைப் பிரார்த்திக்கிறேன்' என்பதே" என்றான்.

"ஆ, ஆ! இவ்வைந்து சிற்றரசர்களும் ராக்ஷஸனைக் காண்பதற்கு நம்மோடு வந்து அவனுக்கிருந்த தலை நோவை விசாரிக்க ஏன் அவ்வளவு ஆவல் கொண்டார்களெனவும், அவர்கள் ஏன் என்னைச் சுற்றியே நிறுத்திவைக்கப்பட்டிருக்கிறார்களெனவும் இப்போது தெளிவாகத் தெரிகின்றது. துரோகியான ராக்ஷஸனைக் கூப்பிடு" என மலயகேது கூவினான்.

மெய்காவல் மாதான விஜயை என்பவள் ராக்ஷஸனிடம் போய், மலயகேது அவசரமாகப் பார்க்கவேண்டுமென்கிறார் என்று சொன்னாள். அவனண்டைபோகும் போது தான் உடம்பில் ஆபரணங்கள் அணிந்துகொண்டு போனால், அவனுக்குத் திருப்தியாயிருக்குமென்று ராக்ஷஸன் எண்ணி, நகை வியாபாரிகளாக வேஷம் போட்டுக் கொண்டுவந்த விசுவாவசுவின் காரியஸ்தர்களிடமிருந்து வாங்கிய விலையுயர்ந்த ஆபரணங்களுள் ஒன்றைச் சகடதாசனிடம் கேட்டு வாங்கி அணிந்துகொண்டு மலயகேதுவைப் பார்க்கப்போனான்.

ஸித்தார்த்தகனிடமிருந்து பறித்துக்கொண்ட கடிதத்தில் அடங்கிய விஷயத்தையும், அவன் சொல்லிய வாய்மொழி வர்த்தமானத்தையும் மலயகேது எடுத்துரைத்து, ராக்ஷஸனுடைய ராஜத்துரோக வியவகாரத்திற்குச் சமாதானம் ஏதேனும் சொல்லமுடியுமானால் சொல்லும்படி கேட்டான்.

"அது கள்ளக்கடிதம்; நான் சந்திரகுப்தனுக்கு எழுதவேயில்லை. ஸித்தார்த்தகா! என்ன இது?" என்றான் ராக்ஷஸன்.

அப்போது ஸித்தார்த்தகன், "மந்திரி துரையே! அடி பொறுக்கமாட்டாமல் அங்ஙனம் கூறினேன்" என்றான்.

"சித்திரவதை செய்தால் ஒருவன் என்னதான் சொல்லமாட்டான்?" என்றான் ராக்ஷஸன்.

"சகடதாஸன் இத்தன்மையான கடிதம் ஏன் எழுத வேண்டும்?" என மலயகேது வினவினான்.

"நான் சம்பந்தப்பட்ட வரையில் சகடதாஸன் வாய்மைவடிவமேயாவன். அவன் எழுதினானெனின், அது நான் எழுதியதுபோலவேயாகும்" என ராக்ஷஸன் மொழிந்தான்.

"சகடதாஸனை வரவழை; முத்திரையையுங் கொண்டு வரச்சொல்" என மலயகேது கட்டளையிட்டான்.

அந்தச் சமயத்தில் பாகுராயணன், "சகடதாஸனை வர வழைப்பதிற் பயனில்லை. அவன் ராக்ஷஸனது அந்தரங்க சிநேகிதன். சகடதாஸன் கையால் எழுதிய வேறு காகித மொன்றை வரவழையுங்கள்" என்றான்.

எந்தச் சந்தர்ப்பத்திற் சகடதாஸன் அக்கடிதம் எழுதினானென்னும் விவரத்தை வெளியிடாது தடுக்கும் பொருட்டு அவன் இங்ஙனம் சொன்னான். அங்ஙனம் செய்வது சரியேயென மலயகேது இசைந்தான். சகட தாஸன் எழுதியதேயென ஒப்புக்கொள்ளப்பட்ட காகித மொன்றைக் கொண்டுவந்து இந்தக்கடிதத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தார்கள். அது விவாதத்திலுள்ள கடிதத்தின் எழுத்தை முற்றும் ஒத்திருந்தது. அவ்விரண்டையும் ராக்ஷஸனுக்கு மலயகேது காட்டினான். அவையிரண்டும் ஒரே கையெழுத்தென ராக்ஷஸன் ஒப்பவேண்டியதாயிற்று.

திடீரென ராக்ஷஸனது மனம் உள்ளுக்கு வாங்கியது. இவையெல்லாம் சாணக்கியருடைய கிருத்திரிமமெனத் தெரிந்துகொண்டான். ஆனால், அதை எடுத்துக்காட்ட முடியவில்லை. 'ஓஹோ! சகடதாசனும் சாணக்கியரது வலையிற் சிக்கிக்கொண்டானென ஏற்படுகின்றதே? ஒரு வேளை அவன் தன் மனைவிமக்களோடு பாடலிபுரத்தில் அமைதியாகக் காலங்கழிக்க விரும்பி, சாணக்கியருக்குச் சாதகமாக இச்சதி செய்ய உடன்பட்டு அவரை நட்புக் கொண்டான் போலும்; விதிவசத்திற்கு இணங்கித் தோல்வியேற்றுச் சாகச் சித்தமாவதே நன்று. நந்தர்கள் நிர்மூலமாகிச் சாணக்கியரும் முழுவெற்றி பெற்றபின், மரணமே மனத்திற்கு இனிமையாம்' என்று ராக்ஷஸன் நினைத்தான். ஆதலின், தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு அவன் மௌனமாய் நின்றான்.

"நான் உனக்களித்த ஆபரணங்களை நீ என் சந்திரகுப்தனுக்கு அனுப்பினை?" என மலயகேது வினவினான்.

"சகடதாசனை மீட்டதற்காக அவைகளை ஸித்தார்த்தகனுக்குப் பரிசாகக் கொடுத்தேன். சந்திரகுப்தனுக்கு அனுப்பவில்லை" என ராக்ஷஸன் பதில் சொன்னான்.

"ஒரு ராஜகுமாரன் தான் அணிந்துகொண்டிருந்த விலையுயர்ந்த ஆபரணங்களைக் கழற்றிச் சம்மானமாக அளித்ததை, எழுத்துக்கூலியொருவனைக் கழுவேற்றுமற் காத்த பையல் ஒருவனுக்குக் கொடுத்துவிட்டேனென்றால் எவரேனும் நம்புவரோ?" என்று பாகுராயணன் கேட்டான்.

"நீர் இப்போது அணிந்துகொண்டிருக்கும் ஆபரணம், சந்திரகுப்தன் உமக்கு அனுப்பிய மூன்றனுள் ஒன்றேயோ?" என மலயகேது கேட்டான்.

அதன்மீது அதை நெருங்கி உற்றுப்பார்த்து மலயகேது, "ஓ தெய்வமே! பெருமைவாய்ந்த என் தந்தை பர்வதேசுவரரது ஆபரணங்களுள் இஃது ஒன்ருயிற்றே! விஜயா! வந்து இதைப் பார்" என்ருன். விஜயையும் இதை ஆய்ந்து பார்த்து, "கீர்த்திசேஷரான பர்வதேசுவர மகாராஜாவிடம் அவ்விஷமாது சென்ற அந்தப் பாழிரவில் அணிந்திருந்த ஆபரணங்களுள் இதுவும் ஒன்றென்பது திண்ணம்" எனக் கூறினுள். அதிசயமும் திகிலும் ஒருங்கே மூண்டு ராக்ஷஸன் கல்லாய்ச் சமைந்து நின்ருன். அம் மூன்று ஆபரணங்களையும் தனக்கு விற்ற கள்ளவியாபாரிகள் சாணக்கியரின் ஆட்களாய் இருக்கவேண்டுமென்று அப்போது அவன் உணர்ந்தான். எல்லா வகையிலும் ஏமாந்து தோற்றுப் படுகுழியில் விழுந்தோமென அறிந்து ராக்ஷஸன் விதி விட்ட வழியாகட்டுமெனச் சோர்ந்து நின்ருன்.

"சொல்லுமையா! இவ்வாபரணத்தைச் சந்திரகுப்தன் உமக்கு அனுப்பவில்லையெனின், இது உமது கையில் எப்படி வந்தது?" என்ருன் மலயகேது.

"சில வர்த்தகர்களிடம் மூன்று ஆபரணங்களைச் சகடதாசன் என் உத்தரவின்மீது வாங்கினுன். அவை பர்வதேசுவரருடையவையென நாங்கள் தெரிந்துகொள்ளவேயில்லை" என்ருன் ராக்ஷஸன்.

"மூன்று நகைகள்! வர்த்தகர்கள்! சகடதாசன் வாங்குகிறது! ஓ ராக்ஷஸா! ராக்ஷஸா! உமது செய்கைகளினுல் நீர் கொடிய ராக்ஷஸனேயா யிருக்கின்றீர். உமது இழிச்சுட்டுக்கு இன்னும் பொய்யுங் கூட்டிக்கொள்ளாதேயும். ஜம்பூத்வீபத்திற்குச் சக்கரவர்த்தியாயிருக்கிற சந்திரகுப்தன், நவகோடி நாராயணனெனத் தக்கவன், இவ்

வாபரணங்களை விற்க வந்தானா! யாருக்குக் காது குத்து கின்றீர்?" என்றான் மலயகேது. அந்த வார்த்தை அசங்கத மேயென ராக்ஷஸனும் உணர்ந்து, வாயை மூடிக்கொண் டான்.

உடனே சேகரசேனனை விளித்து மலயகேது, "புஷ் கராக்ஷன், ஸிம்மநாதன், சித்திரவர்மன் என்னும் மூவரை யும் பிடித்து அவர்கள் என் ராஜ்யத்தைக் கவர்ந்ததற்காக உயிரோடு குழிவெட்டிப் புதை; மேகநாதனும் ஸிந்து சேனனும் என் யானைகளையும் குதிரைகளையும் பறித்துக் கொள்ளப் பார்த்ததற்காக அவர்களைப் பிடித்து யானைக் காலால் இடறிக் கொல்வி" என்று ஆக்ஞை செய்தான். களங்கம் சிறிதுமில்லாமற் களிப்புற்றிருந்த அவ்வைவரை யும் சேகரசேனன் சரேலெனப் பிடித்து, அக்கொடுந் தண் டனையைக் கோணாமற் குறையாமல் நிறைவேற்றி, அவ் விஷயத்தை மலயகேதுவுக்கு அறிவித்தான்.

பின்பு மலயகேது, "உன் சந்திரகுப்தனோடு போய்ச் சேர்ந்துகொள். எதற்காக நீ உன் மானத்தையும் மரி யாதையையும் விட்டு என்னைக் காட்டிக்கொடுக்கப் பார்த் தாயோ, அந்த மந்திரி பதவியைப் பெற்றுக்கொள். பன்னி ரண்டு சந்திரகுப்தர்களும் ராக்ஷஸர்களும் சாணக்கியர் களும் ஒருங்கே எதிர்த்தபோதிலும் அவர்களுக்குத் தக்க வாறு ஈடுகொடுத்து வெல்வேன்" என்று சொல்லி ராக்ஷ ஸனை வெறுத்து இகழ்ந்து தன் பாளயத்தினின்றும் துரத்தினான்.

ராக்ஷஸன் மனம் முறிந்து, தலை குனிந்து தள்ளாடிப் பாடலிபுரத்திற்குள் பிரவேசித்தான். தான் பிரவேசித் தது எவருக்கும் தெரியாதெனவே அவன் நினைத்துக் கொண்டான். ஆனால், உண்மையிற் சாணக்கியருடைய

ஒற்றனை உதும்பரன் அவனுடன் கூடவே வந்துகொண்டிருந்து, அதைச் சாணக்கியருக்கு முன்னரே அறிவித்து விட்டான். உடனே சாணக்கியர் சந்தனதாசனைச் சிரசாக்கினை செய்யப்போவதாகக் காட்டி, விசாலாக்ஷனை யனுப்பி, ராக்ஷஸனை வலையில் மடக்கும்படி சொன்னார்.

ராக்ஷஸன் அவ்விடம்விட்டுப் புறப்பட்டவுடனே, அவ்வைந்து சிற்றரசர்கள் சடுதியிற் கொல்லப்பெற்றதையும், ராக்ஷஸன் நீக்கப்பெற்றதையுங் கேட்டு யவனப்படையினரும் மலயகேதுவை விட்டு ஓடிப்போனார்கள். ஏனெனில் அதுவரையில் ராக்ஷஸனே அந்தச் சேனைமுழுவதற்கும் மூலபுருஷனாக இருந்துவந்தான். மூலபுருஷனும் போய், தம் தலைவர்களும் போனபின், நாமிருந்து என்ன செய்கிறதென்று அவர்கள் கலகலத்து, விட்டோடினார்கள். அவர்கள் இங்ஙனம் செய்தது மலயகேதுவின் தலையில் மற்றோர் இடி விழுந்ததுபோலாயிற்று. இந்தக் கலகத்தினின்றும் மலயகேது தெளியுமுன்னரே பத்ரபடன், புருஷதத்தன், டிங்கரதன், ராஜஸேனன், பலகுப்தன், பாகுராயணன், லோகிதாக்ஷன், விஜயவர்மன் என்பவர்கள் அவனைப் பிடித்துச் சந்திரகுப்தனிடம் கொண்டுபோவதாகக் கையையுங் காலையுங் கட்டிவிட்டார்கள். பின்பு சந்திரகுப்தனும் சாணக்கியரும் மௌரியப்படைத் தலைமையில் வந்து, தலைவனில்லாது தத்தளித்துக்கொண்டிருந்த மலயகேதுவின் சேனையைத் தாக்கியடித்து ஓட்டினார்கள்.

இதற்கிடையில், விசாலாக்ஷன் வேடிக்கை பார்ப்பவனைப்போல வேஷம்போட்டுக் கொண்டுபோய், ராக்ஷஸனுடைய மனைவியைக் காட்டிக்கொடுக்க மறுத்த குற்றத்திற்காகச் சந்தனதாசனைத் தூக்கிடுங்களத்திற்குக் கொண்டு

போகிறார்கள் என்னும் செய்தியை ராக்ஷஸனுக்குச் சொன்னான். அவனைக் காப்பாற்ற எண்ணி ராக்ஷஸன் அவ்விடத்திற்கு ஓடினான். சந்தனதாசனைப் பலவந்தமாக விடுவிக்கலாமெனக் கத்தியுங் கையுமாகப் போக அவன் நினைத்தான். அந்தச் சமயத்தில் மலயகேது பிடிபட்டான். அவனது சேனை அடிபட்டுக் குலைந்து சிதறிப்போயிற்று என எழுந்த ஜயகோஷம் அவனுக்குக் கேட்டது. அவனுக்கு விசாலாக்ஷன் மற்றொரு சங்கதியும் சொல்லியிருந்தான. முன்னர்ச் சகடதாசனைக் கொலைக்களத்தினின்றும் பலவந்தமாக ஒருவன் விடுவித்துக்கொண்டு போகவிட்டதனால், அக்கொலையாளிகள் அசட்டையாகவும் கோழையாகவும் இருந்தார்களென அவர்கள் சித்திரவதைசெய்து கொல்லப்பட்டார்கள்; ஆதலால், ஆயுதபாணியாக எவனேனும் கொலைக்களத்தண்டை வரக்கண்டால் கொலையாளிகள் உடனே குற்றவாளியைக் கொன்றுவிட்டுத் தாம் சித்திரவதையினின்றும் தப்பித்துக்கொள்ளத் தீர்மானித்திருக்கிறார்கள் என்று விசாலாக்ஷன் ராக்ஷஸனுக்குச் சொல்லி வைத்தான். ஆதலின் ராக்ஷஸன் நிராயுதபாணியாகவே கொலைக்களத்திற்குப் போனான்.

சந்தனதாசன் கண்ணீர் தாரைதாரையாகப் பெருகத் தன் மனைவியிடமும் மகனிடமும் விடைபெற்றுக்கொண்டிருக்க ராக்ஷஸன் கண்டான். கொலையாளிகளான வில்வபாத்திரன் என்பவனும் வஜ்ரசோமன் என்பவனும் அவனைத் தூக்கிக் கழுவிலேற்றுவதற்காக உற்சாகத்தோடு அவன் மீது கைபோடக் கண்டான். அந்தக் கழுமரத்தைக் கூராக்கிப் பளபளப்பாகத் தேய்த்து மெருகிட்டிருந்தார்கள். அந்தி வெளிச்சத்தில் அது பளபளவென மின்னிக் கொண்டிருந்தது.

உடனே ராக்ஷஸன் தான் இன்னானெனச் சொல்லிக்கொண்டு, தௌர்ப்பாக்கியனான அந்நண்பனுக்குப் பதிலாகத் தான் கழுவிலேற முன்வந்தான். கொலையாளிகளாக வந்தவர்கள் உண்மையில் ஸித்தார்த்தகனும் ஸமித்தார்த்தகனுமேயாவர். மாறுவேஷம் பூண்டிருந்த அவர்கள் சாணக்கியருக்கு வர்த்தமானம் அனுப்பிவிட்டார்கள். அவர் சந்திரகுப்தனையும் அவனுடைய தளகர்த்தர்களையும் அழைத்துக்கொண்டு அவ்விடம் விரைந்து வந்து சேர்ந்தார். 'சந்தனதாசனை மீட்கவேண்டுமானால், சந்திரகுப்தனிடம் ராக்ஷஸன் பிரதான மந்திரிவேலையை ஒப்புக்கொண்டு, அதுமுதல் உண்மையாகவும் விசுவாசமாகவும் இருக்கவேண்டும். அப்படி இல்லையானால், சந்தனதாசன் மீளமுடியாது' என்று அவனுக்குச் சொன்னார்கள். 'நாம் செய்த பிரயத்தனங்களெல்லாம் பலியாமற் போயின; யுக்திகளெல்லாம் அவலமாயின; சாகஸங்களெல்லாம் நிறைவேறாவாயின; எவ்வகையிலும் தோற்றுப்போனோம்; இனி நம் வீரியமும் வைரமும் செல்லா' என ராக்ஷஸன் தெரிந்துகொண்டான். சந்தனதாசனைக் காப்பாற்றவேண்டுமென்னும் ஆவலும் அவனுக்கு அதிகமாயிருந்தது; சாணக்கியருக்கும் சந்திரகுப்தனுக்கும் உள்ள நல்ல புத்தியையும் பெருந்தன்மையையும் உள்ளூற உணர்ந்து ராக்ஷஸன், அவர்கள் சொல்லிய நிபந்தனைகளுக்கு உட்பட்டு ராஜாங்கக் கட்கத்தை யேற்று, மனத்திற் சிறிதும் களங்கமேனும் கல்மஷமேனும் கரவடமேனும் இல்லாமல், மனப்பூர்த்தியாகச் சந்திரகுப்தனுக்குப் பரிபூர்ண பக்திவிசுவாஸத்தோடு அமைச்சுத்தொழில் புரிவதாகப் பிரமாணம் செய்தான்.

ராக்ஷஸனை நோக்கிச் சந்திரகுப்தன், "இனி மலய கேதுவை என்ன செய்யவேண்டுமென்று தோன்றுகிறதோ அப்படிச் செய்யும்" என்று சொன்னான்.

"அவனுக்கு உயிர்ப்பிச்சை கொடுங்கள்" என ராக்ஷஸன் மனுச்செய்தான்.

"உயிர் மாத்திரமேயன்றி, அவனது ராஜ்யத்தையும், நமக்கு அடங்கிய சிற்றரசனாக ஆளும்படிக் கொடுத்தோம். இவ்வண்ணமே, தலையிழந்த ஐந்து சிற்றரசர்களின் சந்ததியாரும் நமக்குட்பட்ட சிற்றரசர்களாகத் தத்தம் ராஜ்யங்களை ஆள்வாராக. நமது சாம்ராஜ்யத்திலுள்ள சிரேஷ்டிகளுள் சந்தனதாசன் வைசிய சிரேஷ்ட பதம் வாய்ந்து, பாடலிபுரத்திற்குப் புராக்ரண்ய (Lord Mayor) உத்தியோகஸ்தானமும் பெறுவானாக. சகடதாசனையும் பந்தத்தினின்று விடுவித்து ராஜாங்கச் சாஸனாதிகாரியாக நியமித்திருக்கிறோம்" எனச் சந்திரகுப்தன் கனகமாரி பொழிந்தது போலக் கழன்றான்.

"இத்தயாளம் தெய்வத்தன்மையானது" என்றான் ராக்ஷஸன்.

"ஆனால், இக்கருணை வீண் போகாது. இது கிளைவிட்டோங்கித் தழைத்துச் செங்கனி பயக்கும். கருணையென்பது இருபுறமும் சுணை வாய்ந்தது. கருணைபுரிந்தார்க்கு மகத்துவமும், புரியப் பெற்றார்க்கு நன்றியும் வளர்க்கும். செய்த உதவியின் பெருமை அவ்வுதவியின் அளவோடு நில்லாமல், உதவி செய்யப்பெற்றவரின் தன்மையைத் தழுவி விரிந்து மிகப் பெரிதாகவும் தீர்க்கமாகவும் கொண்டாடப்பெறும். இப்போது சக்கரவர்த்தியார் அவர்கள் காட்டிய கருணையைப் பாராட்டி எம்போலியர் எங்

நாளும் வணங்கிவாழ்த்தி விசுவாஸங் கொள்வோமாக" என்று மலயகேது மகிழ்ச்சியுடன் கூறினன்.

இதற்குள்ளாக, சாணக்கியரும் அவருடைய ஒற்றர் களுமாகச் சூதுவாதுகள் செய்து சாதித்த கதை முழுமை யும் அவனுக்கு விவரமாகச் சொல்லியிருந்தார்கள். அந்த விருத்தாந்தங்களையெல்லாம் கேட்டறிந்த மலயகேது, "சந்திரகுப்தனை எதிர்க்க இனி நான் கனவிலும் கருதேன். இது முதல் அவருடைய சத்துருக்கள் என் சத்துருக் களேயாவர்" எனத் திடமாகக் கூறினன்.

"மகாபுருஷராகிய சாணக்கியர் இனி என்ன செய்யப் போகிறார்? அவர் தமக்கு வழக்கமாயுள்ளது போலத் தன் னயக் கருத்தின்றி, ஒப்பும் உயர்வுமில்லாத தம் மேலான புத்தி வாதங்களை உரைத்துக்கொண்டே இன்னும் நம்மை ஆசிர்வதித்தருளவேண்டுகின்றேன்" என்றான் ராக்ஷஸன்.

"ஆயுளுள்ள அளவும், விருஷலனும் அவன் சந்ததி யாரும் உள்ள அளவும் அவர் அங்ஙனமே செய்வாரென் பது உறுதி" எனச் சந்திரகுப்தன் சொன்னான்.

"தேவானும் பிரியனான சந்திரகுப்த சக்கரவர்த்தி நீடூழி வாழி!" எனச் சாணக்கியர் குரலெடுத்துக் குதூகல மாக ஆசிர்வதித்தார்.

மலயகேது, ராக்ஷஸன், போர்க்கைதிகள் உள்பட அங்கே குழுமியிருந்த ஜன சமூகமெல்லாம் சேர்ந்து அவ் வாழ்த்து மொழியைப் பலகாலும் கூவிக் கோஷித்தார்கள். அவ்வொலியால் அகிலம் அதிர்ந்தது. "போரிற் சிறைப் பட்டவர்களெல்லாரும் இப்போது என் பிரஜைகளேயான மையின், விடுதலை பெற்றவர்களாவார்கள்" என்று சந்திர குப்தன் சொன்னான்.

உடனே சாணக்கியர், "அடுத்த பௌர்ணமி தினத்தில் கௌமுதி விழா முன்னினும் மும்மடங்கு சிறப்பாகக் கொண்டாடப்பெறுமாக!" எனக் ஜயகோஷத்தினிடையே சாற்றினர்.

—— ——

## அத்தியாயம் 29

# வெற்றிமேல் வெற்றி

“ராக்ஷஸனுடைய மனத்தை முற்றும் திருப்பி, அவனை நம்முடைய ஆளாக நிலையாய் வசப்படுத்திக் கொண்டோம்; நந்தர்கள் பக்ஷமாக அவர்களை ஆதரித்துக் கொண்டிருந்தவர்க ளெல்லாரும் இறந்தொழிந்தார்கள்; அல்லது, நம் பக்கம் மாறினார்கள். இந்தியாமுழுமையும் வெல்லவேண்டுமென்னும் பெருநோக்கத்தைச் சாதிக்க முற்படத்தக்க தருணம் இதுவே. உன்னைச் சக்கரவர்த்தியாக்கியது முதல் ஜம்பூத்வீபத்துக்கெல்லாம் உன்னை அதிராஜனாக்க வேண்டுமென்றே ஆசைப்பட்டுக்கொண்டிருக்கிறேன்.

“சேனை முழுமையையும் திருத்தியமைத்துள்ளேன். யௌவனர்களாயும், திறமையுள்ளவர்களாயும், ராஜ விசுவாசமுள்ளவர்களாயும் இருக்கிற உத்தியோகஸ்தர்களைப் படைத்தலைவர்களாக நியமித்துப் படைகளைப் பலப்படுத்தியுள்ளேன். வைசியர்களுக்கும் சூத்திரர்களுக்கும் பற்பல இலாகாக்களில் தாராளமாக உத்தியோகங்கள் கொடுத்துள்ளேன். இதனால், நமது பலம் பெரிதும் அதிகமாயிருக்கின்றது.

“நம் சேனையில் இப்போது 6,00,000 பதாதி, 30,000 குதிரைப்படை, 6,000 தேர்ப்படை, 9,000 யானைப்படை உண்டு. இந்தியாவுக்குள் இவ்வளவு வன்மையும் திறமை

யும் வாய்ந்த போர்ப்படை வேறெதுவும் இல்லை. இந்தப் படைக்கு உத்தமோத்தமமான போர்ப் பயிற்சி கொடுக்கப் பட்டிருக்கின்றது. இந்தப்படை பல பல வியூகங்களாக நின்று போர்புரியப் பயின்றுள்ளது. அணி அணியாக வகுத்து நின்றேனும், நாகவடிவாக நெளிந்து நின்றேனும், வட்டமாக வளைந்து நின்றேனும், தனித்தனியே வேறு வேருகப் பிரிந்து நிலை தோன்ருமல் வந்துவிழுந்து 'அடித் தான் பிடித்தான் எடுத்தான் ஓட்டம்' எனவேனும் நம்மவர் கள் போர்புரிய வல்லார். இவர்கள் நல்ல சிக்ஷையும் வாய்ந்துள்ளார். அதாவது, பலவந்தமாக இவர்களுக்கோர் முறை கற்பிக்கவேண்டியிராமல் இவர்கள் இயல்பாகவே ஒழுங்காக நிற்கவும் நடக்கவும் ஒருமித்து உழைக்கவும் தெரிந்துள்ளார். நம் தண்டில் பரம்பரைப் போர்வீரக் குடும்பத்தவர்கள் பலர் இருக்கிருர்கள்; அன்றி, கொள்ளை யின் மீதே திருஷ்டி வைத்துள்ள காட்டுச் சாதியார் சிலரும் இருக்கிருர்கள். அவர்களுக்கு அதிருப்தி எளிதில் வந்து விடும்; அவர்கள் வெகு சீக்கிரத்தில் திகிலும் அடைவார் கள்; அவர்கள் பதுங்கியிருக்கும் பாம்பு போல நடந்து கொள்வார்கள்.

"இந்த முதல்தரமான சைனியத்தைக்கொண்டு ஜம்பூ த்வீபம் முழுமையும் நாம் எளிதில் வென்றுவிடலாம். தடையின்றி நாம் நீதிக்கும் நியாயத்திற்கும் கட்டுப்பட்ட வெற்றியாளராகவே வியவகரிப்போம், பேராசை பிடித்த வர்களாகவேனும், பேய் போன்ற கொடியர்களாகவேனும் இருக்கமாட்டோமென்பது திண்ணம். ஞாலம் முழுதை யும் நீ பரத சக்கரவர்த்தியின் அபராவதாரமெனவே வென்று செங்கோல் செலுத்துவாயேயன்றி, அலெக்ஸாண்

டரைப்போல் அட்டூழியம் செய்யலாகாது" என்று சாணக்கியர் சொன்னார்.

"அதுவரையில் நாம் செய்துவந்த சூதுவாது கிரித்திரிமம் திரிசிரமம் தந்திரம் முதலானவைகளைக் காட்டிலும், இந்தக் காரியம் எனக்கு இனிமையாயிருக்கும்" என்று சந்திரகுப்தன் பதில் மொழிந்தான்.

மேற் சொல்லிய விஷயத்தை மந்திரிகளும் தளகர்த்தர்களும் கூடிய பரிபூர்ண சபையில் ஆலோசித்து முற்றும் தர்க்கித்தார்கள். தெற்கே யுள்ள சேர சோழ பாண்டிய சத்திபுத்திர சிங்கள ராஜ்யங்களைத் தவிர்த்து இந்தியாவில் மற்றெல்லாப் பிரதேசங்களையும் வென்று வசப்படுத்திக் கொள்வதற்காகச் சந்திரகுப்தனையும் சாணக்கியரையும் தலைமையாகக் கொண்டு பிரம்மாண்டமான படையொன்று உடனே புறப்படவேண்டுமென எல்லாரும் ஒரு மனமாக நிச்சயித்தார்கள்.

இங்ஙனம் நிச்சயித்த உடனே, "நாம் வெற்றி பெறுவோமென்பதற்கு மற்றோர் அத்தாட்சியும் உண்டு. பண்டைநூல் வழக்கின்படி வேற்றரசரை வெல்வோமா என்று அறிவதற்கு நம் முன்னோர் ஒரு சோதனை சொல்லியிருக்கிறார்கள். எங்ஙனமெனின்;

'ஒருவரை யொருவர் வெல்ல உபாயம தறிய வேண்டில்
அவரவர் பெயரி லுள்ள இயலெழுத் ததனை யெண்ணிப்
பெருகிய பத்தி னாலே பெருக்கிய எட்டிற் கீயச்
சிறியவர் பெரிய வர்க்குத் தோற்பது திண்ணந் தானே.'

"இங்ஙனம் கணக்கிட்டுப் பார்த்தால், நாம் குறிப்பிட்டுள்ள தேசம் ஒவ்வொன்றையும் வெல்வோமென்பது திண்ணம்" எனச் சாணக்கியர் கூறினார்.

மற்றும் தென்னாடுகளைக் குறித்து, "அவைக ளெல்லாம் சீராகவும் தர்மமாகவும் ஆளப்படுகின்றன. போர்புரிய வேண்டிய ஆவசியகமும் அதனால் விளையும் நாசமும் இல்லாமலே சக்கரவர்த்திக்கு என்ன வேண்டுமோ அதையெல்லாம் அவ்வரசர்களைக் கொண்டு நான் செய்விக் கிறேன். அது ஒருபால் இருக்க, அவர்கள் ஒருநாளும் மகதத்திற்குட்பட்ட அரசர்களாயல்லாமல், தனி யரசுக ளாகவே இருந்தார்கள். அன்றியும், நமது அகில இந்திய நாயகத்துவத்தை அவர்கள் ஆக்ஷேபிக்கக்கூடியவர்களாக வும் இல்லை" என்று சாணக்கியர் சொன்னார்.

சந்திரகுப்தன் தேசப்பிரஷ்டனாயிருந்தபோதும், நந் தர்களோடு போர்புரிந்தபோதும் கலிங்கத்தரசன் பேருதவி புரிந்திருப்பதால் அந்நாட்டையும் இப்படையெழுச் சிக்கு விலக்காக்கினார்கள். அவ்வரசனுக்கு அவனுடைய ராஜ்யத்தில் ஸ்வதந்திராதிபத்தியம் அளிப்பதாகவும், கி. மு. 261-ஆம் யாண்டுவரையில், அவன் கப்பம் கட்ட வேண்டியதில்லையென்றும் உறுதிமொழி கொடுத்திருப்ப தாலும் அந்நாட்டின்மீது படையெடுக்க வேண்டாமெனத் தீர்மானித்தார்கள்.

இந்தப் பிரபலமான சைனியம், சாம்ராஜ்யத்தின் எல்லை வரையில் வெற்றிக்கோலமாக மேனோக்கிச் சென்றது. சென்றவிடமெல்லாம் அவர்களை ஜனங்கள் மனமகிழ்ந்து வரவேற்றார்கள். பிரயாகை, காசி, ராதாபுரம், கௌசாம்பி என்னுமிடங்களில் ஜனங்கள் பெருமிதமாகத் திரண்டு, தங்கள் அரசனையும் மந்திரியையும் சந்தோஷமாக வாழ்த்தி ஆர்ப்பரித்தார்கள். கௌசாம்பியில் சந்திரகுப்தனுக்கும்

துர்த்தரை* என்னும் ராஜகுமாரிக்கும் விவாகம் நிச்சயிக்கப் பட்டது.

சாந்தவதியை மணம் புரிந்துகொண்டு ஐந்து வருஷங்கள் கழிந்தனவாயினும், அவளுக்குச் சந்தானோற்பத்தி இல்லாமையின், சந்திரகுப்தனும் சாணக்கியரும் மிக்க கவலை கொண்டிருந்தார்கள். சக்கரவர்த்திக்குப் பின் பட்டமேற்பதற்குரிய புத்திரனொருவன் இருக்கவேண்டியது மிக முக்கியமான விஷயம். சாந்தவதிக்கு இனிப் பிள்ளை பிறக்காதெனத் தோன்றியது. அவளுக்கு மக்கள் உண்டாகாரென ஜோஸியன் ஜாதகம் பார்த்துச் சொல்லியபின், சந்திரகுப்தன் மற்றோர் இராணியை மேற்கொள்வது தகுதியெனச் சாந்தவதியும் அவனை வற்புறுத்திக்கொண்டிருந்தாள். அவள் தன்னலங் கருதாத புண்ணியவதி. அவள் சொல்லிய வார்த்தையைக் கேட்டுச் சந்திரகுப்தன் மனம் வருந்தித் துக்கப்பட்டபோது, அவனை நோக்கி அவள், “நாதா! நீங்கள் அரசர். கிருகக்ருத்திய விஷயங்களைக் கவனிக்காமல் நீங்கள் ராஜாங்கத்து க்ஷேமத்தையே பெரிதும் பாராட்டவேண்டும். அன்றியும் உங்கள்மீது எனக்குப் பிரேமை மிக அதிகமாக இருக்கின்றமையின், உங்களுக்குப் பின் தலைவனாதற்குரிய ஒரு மகன் தோன்றக் கண்டு, நீங்கள் களிக்கும் பாக்கியத்தைத் தடுக்க எனக்கு மனம் வரவில்லை. அந்த மகன் என் மகனும் வார்சும் ஆவனே! நான் சீராட்டுவதற்குக் குழந்தை யொன்று வேண்டுமென்று எனக்கு ஆசையாயிருக்கின்றது. ஆதலால் தயங்காதீர்கள். நமக்கு முன்னால் தர்ம சீலமுள்ள அரசர்கள் எத்தனையோ பேர் இங்ஙனம் செய்துள்ளார்” என்று சொன்னாள்.

---

* துர்த்தரை—எளிதில் பரிப்பதற்கு இயலாதவள்.

இங்ஙனம் அவள் சொன்னாளெனத் தெரிந்து சாணக்கியர் பற்பல இடங்களிலும் ஆய்ந்து ஆய்ந்து கடைசியில் துர்த்தரையைப் பொறுக்கியெடுத்தார். அவள் உதயண மகாராஜனது வமிசத்தில் உதித்தவள்; சுத்த க்ஷத்திரியக் குடும்பத்திற் பிறந்தவள்; அக்காலத்துச் சுந்தரவனிதைகளுள் சுந்தராங்கியெனப் பிரஸித்தமாகக் கொண்டாடப் பெற்றவள். அவளுடைய தந்தையான வத்ஸநாட்டரசன் இந்தச் செய்தியைக் கேட்டு மனம்பூரித்து, அவ்விவாக சம்பந்தம் தனக்குச் சம்மதமெனக் குறித்தான். வத்ஸ நாட்டு உதயணமகாராஜனும் மகத நாட்டுப் பத்மாவதியும் ஸ்தாபித்த வமிசவழியிற் பிறந்த ராஜகுமாரி, பிம்பிஸாரனும் தர்சகனும் ஸ்தாபித்த வமிசவழியில் தோன்றிய புருஷனை மணந்துகொள்வதில் இயற்கைப்பொருத்தமும் அமைந்திருக்கிறதென அச் சித்திராங்கியின் தந்தையான வத்ஸத்தரசன் மெதுவாகவும் மரியாதையாகவும் குறிப்பிட்டான். அதன்மீது அந்த ராஜகுமாரியைச் சந்திரகுப்தன் பார்த்தான். அவளுடைய ரூபலாவண்ணியத்தை ஊரார் எவ்வகையிலும் மிகைப்படுத்திக் கூறவில்லையெனச் சந்திரகுப்தன் அவளைப் பார்த்தவுடனே தெரிந்துகொண்டான். அப்படையெழுச்சியின் முக்கியமான நோக்கங்களை முடித்துக்கொண்டு கௌசாம்பிக்குத் திரும்பி வந்து விவாகம் நடத்திக்கொள்வதாக அவனும் சாணக்கியரும் வாக்குக் கொடுத்தார்கள்.

படையெழுச்சி அதற்குமேல் தன் போக்கிற் போகலாயிற்று. ஹஸ்தினாபுரத்திலும் இந்திரப்பிரஸ்தத்திலும் ஜனங்கள் மிக்க உற்சாகத்தோடு வரவேற்றார்கள். பிறகு அப்பெரும்படை யமுனையாற்றைக் கடந்து விபாஸாநதி என்னும் பீயாஸுக்குப் போயிற்று. அவ்விடத்திலுள்ள

அலெக்சாண்டர்கிரி என்னும் நகரத்தில், யமுனைக்கும் ஹைடாஸ்பஸுக்கும் இடையிலுள்ள ராஜ்யாதிபதிகள், மலயகேது, பாகேலா, சௌபூதி என்னும் இவர்களைத் தலைமையாகக்கொண்டு சந்திரகுப்தனை வணங்கி விசுவாசப் பிரமாணம் பண்ணினார்கள். பத்தரை மாற்றுத் தங்கத்தினாற் செய்து நவரத்தினங்கள் இழைத்த நிறையணிக்கவசங்கள் இரண்டும், பெயர் பெற்ற அவனுடைய வேட்டை நாய்களில் இருபத்து நான்கும் சந்திரகுப்தனுக்குக் காணிக்கையாகச் சௌபூதி சமர்ப்பித்தான்.

அப்போது சாணக்கியர் அவ்வூரின் பெயராகிய அலெக்சாண்டர்கிரி என்பதை மாற்றி 'ராஜகிரி' என நாமகரணம் செய்தார். மற்றும், "யவனர் வெற்றிபெற்ற துஷ்காலமெல்லாம் ஒழிந்து போயிற்று. அலெக்சாண்டரையாவது, அவனுடைய கொடுஞ்செயல்களையாவது, அவன் செய்த அநியாயங்களையாவது நினைப்பூட்டத் தக்கது எதுவும் நம் நாட்டில். இருக்கவேண்டாம். 'இங்கே அலெக்சாண்டர் தங்கினான்' என்னும் கட்டுரை பொதிந்த இவ்வெண்கலத் தூணைப் புதைத்து விடுவோம். ஆனால், அப்பலிபீடங்கள் மாத்திரம் இருக்கட்டும். அவைகளிலுள்ள தேவதைகளை மாற்றி அம்பிகை, சிவன், ஸரஸ்வதி, பிரும்மா, காவேரி, சூரியன், நாராயணன் என அமைத்துவிடுவோம். 'அலெக்சாண்டிரியா' என்னும் பெயருள்ள பட்டணங்களுக்கெல்லாம் வேறு பெயர் வைத்துவிடுவோம். அதுவன்றி, நம் நாட்டிலுள்ள நூலாசிரியர் எவரும் எந்தப் பாஷையிலும் அலெக்சாண்டரின் பெயரையும் அவன் படையெழுச்சியையும் எவ்விடத்திலும் குறிப்பிடக்கூடாதென விரும்புகின்றேன். இதற்கு மாறாக நடப்பவர் யாராயினும் தக்கவாறு

தண்டிக்கப்பெறுவாரென ராஜ்யம் முழுமைக்கும் உத்தரவு அனுப்புகிறேன்" என்று சாணக்கியர் சொன்னார்.

பின்பு சந்திரகுப்தனது சேனை சௌபூதியின் தலைநகருக்கு நகர்ந்தது. அவ்விடத்தில் சைனியத்தவர் அனைவர்க்கும் மகத்தான விருந்துகள் இரண்டு நாள் அளிக்கப்பட்டன.

பின்பு அவர்கள் சங்கலத்திற்குப் போனார்கள். அந்தக் கோட்டை திரும்ப நன்றாகக் கட்டப்பட்டிருந்தது. சந்திரகுப்தனை ஏற்கெனவே தங்களுக்கு அரசனாகக்கொண்ட கதேயர்கள் லக்ஷக்கணக்காகக் கூடித் தங்கள் சக்கரவர்த்தியை வரவேற்று உபசரித்தார்கள். அவ்வூர்க் கோட்டையைப் புதிப்பிப்பதற்குச் சந்திரகுப்தன் பத்துலக்ஷம் பொற்பணங்கள் கொடுத்திருந்தான். அவனை நெருங்கிப் பார்ப்பதற்கு மாதர்களும் மக்களும் கூட்டங் கூட்டமாக அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். சக்கரவர்த்தியார் அந்நகரத்திற்கு விஜயம் செய்ததைப் பாராட்டிச் சாணக்கியர் அங்குள்ள ஏழைகள் அனைவர்க்கும் பஞ்சபக்ஷ்ய பரமான்னங்களோடு சுகபோஜனமும், குழந்தைகளுக்குப் பெரிய விருந்தும் செய்வித்தார். "உங்கள் நகரம் பாழ்பட்டுப் புத்துயிர் கொண்டு சிறந்து விளங்கலாயிற்று. இனித் திரும்ப இதனை இழவாதிருப்பீர்களாக" என்று அவர் கதேயர்களுக்குச் சொன்னார்.

சந்திரகுப்தனை மலயகேது தனது புதிய ராஜதானியில் வரவேற்று உபசரித்து அவனுக்கு விருந்தளித்தான். அத்தலைநகருக்கு 'விதஸ்தநகரி' எனப் பெயரிட்டிருந்தான். இரண்டு மாதங்களுக்கு முன்னால் ஸ்வர்ணமயி காலகதி அடைந்திருந்தனள். அவள் சந்திரகுப்தனுக்கும் சாணக்கிய

ருக்கும் மிக்க உபகாரம் செய்தவள். அவளுடைய கணவனும் மைத்துனனும் இவர்களுடைய சூழ்ச்சியினால் பிராணனை இழந்திருந்தனர். அப்படிப்பட்ட ஸ்வர்ணமயியை நேரிற் காண்பது இவர்களுக்கு இனிமையாயிராது; மனங்கலங்கிக் குழப்பும்; அருவருப்பும் தோன்றும். அப்படிப்பட்டவளை இவர்கள் நேரிற் பார்த்துச் சங்கடப்படாதிருக்கும்படி அவள் இறந்துபோனதே இவர்களுக்கு நல்லதாயிற்று.

சந்திரகுப்தன் தான் அடைபட்டிருந்த இருட்டறையைச் சாணக்கியருக்குக் காட்டினன். அதைப் பார்த்தவுடன், “நல்லவேளை! உன்னை இதனின்றும் ராணி சாந்தவதி மீட்க நேர்ந்ததே தெய்வாநுகூலம். ஒரே நாளைக்குள் இவ்விருட்டறையினின்று உன்னை நான் வெளியேற்றி இருக்க முடியாது. அவர்கள் உன்னைச் சிறையிட்ட இடத்திலேயே நீ இருந்திருப்பின், உன்னைக் கொன்று மாய்த்திருப்பார்கள்” என்று விசனமும் வியப்புங் காட்டிப் பேசினர்.

பின்பு, சந்திரகுப்தனது படை ஹைடாஸ்பஸைக் கடந்து தக்ஷசிலையின்மீது படையெடுக்கச் சித்தமாயிற்று. ஆம்பீக வணங்கிச் சந்திரகுப்தனுக்குப் பிரமாண பூர்வகமாக விசுவாஸம் பாராட்டுவதாகத் தூதர்கள் மூலமாக வர்த்தமானம் அனுப்பித் தனக்காகப் பரிந்துபேசும்படி சாணக்கியரை வேண்டினன். அவனுடைய வேண்டுகோட்கு இணங்கச் சாணக்கியர் இசைந்தார். ஆனல், இந்தியாவென்னும் பூட்டுக்குத் திறவுகோல்போன்ற சந்நிவேசத்தில் அமைந்துள்ள தக்ஷசிலை என்னும் பட்டணத்தை விட்டுக்கொடுத்து மற்றப் பிரதேசங்களைச் சந்திரகுப்தனுடைய ஆதிபத்தியத்தின்கீழ் ஆள அவன் ஒப்புக்கொள்ள வேண்டுமென்றார். ஆம்பீக இதற்குச் சம்மதிக்கவில்லை.

யூடிமாஸனும் கிரேக்கப்படைகளும் தனக்குத் துணை செய்யு மென்னும் தைரியத்தினால் மௌரியச்சேனையோடு போர் புரியத் தீர்மானித்தான். மலயகேதுவினால் ஊரினின்றும் துரத்தப்பெற்ற நிகையத்துக் கிரேக்கர்களும் புக்கிபேலா கிரேக்கர்களும் அவனிடம் வந்து சேர்ந்திருந்தார்கள். கிரேக்கர்களும் ஆம்பீசுமாகத் தக்ஷசிலைக்கோட்டையை நீடித்தகாலம் முற்றுகை தாங்குமாறு பலப்படுத்திக் கொண்டார்கள்.

"பட்டணங்களைப் பிடிப்பதில் அவர்களுக்கு வன்மை போதாது. எத்தனை வருஷமானாலும், நாம் இவ்விடத் திலே இருந்துகொண்டு க்ஷேமமாகவும் சௌக்கியமாகவும் காலங்கழிக்கலாம்; நமக்கு இஷ்டமானபோது சத்துருக் களின்மீது பாயலாம்" என்று ஆம்பீசுக்கு யூடிமாஸ் சொன்னான்.

தக்ஷசிலையில் 60,000 முதல்தரமான துருப்புகள் உண்டு, கோட்டைமதில்கள் பேதிக்க முடியாதவை, அதில் இருப்பவர்களுக்கு 6 வருஷகாலம் தாங்கக்கூடிய உணவுப் பொருளும் இருக்கின்றது, அதுவன்றி, கணக் கிறந்த பொருளும் இருக்கின்றது, அப்படிப்பட்ட தக்ஷ சிலையை முற்றுகையிட்டுப் பிடிப்பதற்குக் குறைந்தபக்ஷம் இரண்டு வருஷமேனும் செல்லுமெனச் சந்திரகுப்தன் ஊகித் தான். சாணக்கியரை நோக்கி, "நம்மிடம் முற்றுகைத் தள வாடங்கள் சொற்பமாயிருக்கின்றன. ஓரே தடவையிற் பாய்ந்தடிக்கக்கூடாத அளவு இந்நகரம் பலமாயிருக்கின்றது. உள்ளே இருக்கிறவர்கள் சோற்றுக்கில்லாமற் சோர்ந்து வணங்கிவரும்படியே செய்யவேண்டும். இனி நம் முற்று கைத் தளவாடங்களைச் சீராக்கிப் பலப்படுத்திக்கொள்வ தில் நாம் கவனம் செலுத்தவேண்டும். அதற்கிடையில்

இப்போது இப்பட்டணத்தைச் சூழ்ந்துகொண்டிருக்கும்படி ஒரு பெரும்படையை இவ்விடத்தில் விட்டுவைத்து, மீதியுள்ள துருப்புக்களுடன் முன் சென்று நம் காரியத்தை முடிப்போம்" என்று சந்திரகுப்தன் சொன்னான். அதற்குச் சாணக்கியரும் இசைந்தார். தக்ஷசிலையை முற்றுகை செய்வதற்குப் பலகுப்தன் வசமாக 1,00,000 ஆட்களையும் 1,000 யானைகளையும் அங்கு வைத்தார்கள். மற்றப் படையுடன் சந்திரகுப்தனும் சாணக்கியரும் காசுமீரத்திற்குப் போனார்கள். காசுமீரத்தரசர்களும், அபிசாரனும், அர்ஷகேசனும் வணங்கிவந்து பணிந்தார்கள். அவர்கள் சாம்ராஜ்யத்துச் சிற்றரசர்களாக்கப் பெற்றனர்.

காசுமீரத்துப் பள்ளத்தாக்கின் அழகையும் அவ்விடத்துக் குடிகளின் வனப்பையுங் கண்டு சக்ரவர்த்தியும் அவன் பிரதானியும் மிக்க மகிழ்ச்சியுற்றார்கள். பரமூலக் கணவாயின் வழியாகக் காசுமீரத்திற்குள் அவர்கள் பிரவேசித்திருந்தார்கள். அவர்கள் மலையின்மீதுள்ள பகல்காம் என்னும் கிராமத்திற்குப் போய், அங்கிருந்து சில ஆட்களை மாத்திரம் தேர்ந்தெடுத்துக்கொண்டு குதிரையின்மீது அமரநாதத்திற்குப் போயினர். போகும்வழி செங்குத்தான குன்றுகள் அடர்ந்தது. அக்குன்றுகளின்மீது உறைபனி படிந்திருந்தது. குதிரைகள் ஒற்றையடிப்பாதையிற் செல்லவேண்டியதாயிருந்தது. அப்பாதையின் இருபுறத்திலும் 600 முதல் 800 அடி ஆழமுடைய அகாதமான பள்ளங்கள் இருந்தன. அம்மார்க்கத்தில் சேஷநாகம் என்னும் மனோஹரமான நதியொன்று இருந்தது. அது மாரிக்காலத்தில் உறைபனிக் கட்டியாகப் படர்ந்திருக்கும். அந்த ஸ்தலத்திற்குச் சக்ரவர்த்தியின் ஞாபகார்த்தமாகச் "சந்திரவதி" எனச் சாணக்கியர் பெயரிட்டார். அது இப்போது

'சந்தன்வாடி' என வழங்கப்பெறுகின்றது. அங்கிருந்து அவர்கள் அமரநாதத்திற்குச் சென்றார்கள். அங்கே உலகப் பிரஸித்தமாயுள்ள சிவலிங்கத்தைச் சந்திரகுப்தனும் சாணக்கியரும் தரிசித்து வணங்கி வழிபட்டார்கள்.

அவ்விடத்தில் பக்தியும் உயர்நினைவும் ஊட்டத்தக்க அமைதி குடிகொண்டிருந்தது; தெய்விகத்தன்மை விளங்கியது; பாரமார்த்திக புண்ணிய புத்தி மேலிட்டது. உறைபனியால் மூடப்பெற்ற குன்றுகள் திவ்விய தூய்மையாய்த் தோன்றின. அங்கு நிறைந்திருந்த பரம சாந்தத்தின் இடையிடையே சந்நியாசிகள் பாடும் ஸ்தோத்திர கீதங்களின் இன்னிசைத் தொனிமாத்திரமே எழுந்துகொண்டிருந்தது. அவ்விடத்திற்குப் போவதிலுள்ள கஷ்ட நிஷ்டூரங்களுக்கும் ஆபத்துக்களுக்கும் துணிந்து அச்சந்நியாசிகள் அவ்விடம் செல்வதற்கு அவர்களுக்குள்ள நிஜமான திடபக்தியே ஆதாரமாகும். எல்லாவகையிலும் மனிதன் ஆத்ம சாம்ராஜ்யம் அடைவதற்கு வேண்டிய அநுகூலங்களமைந்த அத்தலத்தைக் கண்டு சக்கரவர்த்தி விரக்தி வாய்ந்து மனமுருகி நின்றான்.

"போர்கள் புரிந்துகொண்டிருப்பானேன்? மேலும் மேலும் எழுந்துகொண்டிருக்கிற ஆசாபாச அலைகளின்மீது தாவி ஏறுவானேன்? செல்வத்தையும் சாம்ராஜ்யத்தையும் துறந்து இப்புண்ணிய பூமியிலேயே நாம் ஏன் பொழுது போக்கலாகாது?" எனச் சாணக்கியரைச் சந்திரகுப்தன் வினவினான். அதற்குச் சாணக்கியர், "நீ சொல்லியபடி இருத்தல் தகாது. அரசனயுள்ளவன் தனக்குரிய க்ஷத்திரிய தர்மத்தையே பரிபாலிக்கவேண்டும். ஓய்வும் அமைதியும் தியானமும் அவனுக்கு அரியனவல்ல. ரஜோகுணம் வாய்ந்து காரியம் செய்யச் சித்தமாயிருத்தலே அவனது 'தர்மம்'. ஓய்வின்றி

யுழைத்தலே அவனுக்குரிய 'கர்மம்'. அவனுடைய குடிகளை அன்னிய நாட்டார் வென்று சங்கரித்துக்கொண்டிருக்க, காட்டாட்களும் கொள்ளைக்காரர்களும் ஊரைச் சூறையாடிக்கொண்டிருக்க, ஆழ் கடலிலுள்ள பெரிய மீன்கள் சிறிய மீன்களைத் தின்று ஜீவிப்பதுபோல வலியார் மெலியாரை வருத்திவாழும் அராஜகம் நாட்டிற் குடிகொண்டிருக்க, அரசனாயிருப்பவனுக்கு அமைதி ஏற்படுமோ? இவ்வுறைபனியே அப்போது அவனைத் தீப்போன்று எரிக்கும். இவ்விடத்திலுள்ள அமைதி அப்போது அவனுக்குச் சிறைவாஸத்து அமைதிபோன்றிருக்கும், அல்லது, சவக்குழியின் அமைதிபோன்றிருக்கும்" என்று சாணக்கியர் சொன்னார்.

அவர் கூறியது நியாயமானதே யெனச் சந்திரகுப்தன் ஏற்றுக்கொண்டான். காசுமீரத்தை ஆள்வதற்கு மண்டலாதிகாரியை நியமித்து அவனுக்குத் துணையாகப் பலமான சைனியமொன்றையும் அங்கே வைத்தான். அதற்குப்பின் சந்திரகுப்தனும் சாணக்கியரும் பனிஹால் கணவாய் வழியாகப் பஞ்சாபுக்குத் திரும்பிவந்தார்கள். அந்தக் கணவாய்க்குக் காசுமீர்க் கதவு (The Kashmir Gate) எனச் சாணக்கியர் பெயரிட்டார். அங்கிருந்து சைனியம் ஸிம்மபுரத்திற்குப் போயிற்று. அங்கே மிகச் சிறப்பாக இவர்களை வரவேற்றார்கள். தங்களுடைய சொந்த ராஜகுமாரனை சந்திரகுப்தனை வரவேற்று வாயார வாழ்த்தி ஆனந்திப்பதற்கு அப்பட்டணத்தாரெல்லாரும் விஜயஸிம்மனோடு எதிர்கொண்டு வந்தார்கள். ஸிம்மபுரத்தில் ஒரு வாரம் தங்கியிருந்தபின், சைனியம் ஸிந்து நதிப் பள்ளத்தாக்கின் வழியாக இறங்கிப் படாலத்திற்குப் போயிற்று. ஸிபிகள், மலயர்கள், க்ஷுத்ரகர்கள், ஸிந்துப் பள்ளத்தாக்

கிலும் கழிமுகத்திலும் உள்ள ஜனங்கள், அவர்களுடைய சிற்றரசர்கள் ஆகிய எல்லாரும் உடனே வந்து வணங்கிச் சந்திரகுப்தனுடைய ஆதிபத்தியத்தை ஏற்றுக்கொண்டனர். அவைகளெல்லாவற்றையும் சந்திரகுப்தன் உத்தர பதம் என்னும் மாகாணத்திற் சேர்த்தான். மூல்தான், மாளவக்கோடு, பிரம்மஸ்தலம், படாலம் என்னும் இடங்களிலுள்ள கோட்டைகளைப் பலப்படுத்தி, அவைகளுக்கு அதிபதிகளாக நம்பிக்கையான படைத்தலைவர்களை நியமித்துப் போதிய பட்டாளங்களையும் தளவாடங்களையும் அவர்களுக்குக் கொடுத்தான்.

அதற்குப் பிறகு சந்திரகுப்தனது சைனியம் வலிந்து நதிக் கீழ்க்கிளையின் கரையோரமாகச் சென்று கச்சு தேசத்திற்கும் சௌராஷ்டிரத்திற்கும் போயிற்று. மேகநாதனுடைய மகனான அரசகன் வந்து பணிந்தான். அவனுடைய ராஜ்யத்திற்கு அவனையே அதிபதியாக உறுதிப்படுத்தி வருஷந்தோறும் ஒரு சிறு தொகை கப்பங் கட்டவேண்டுமென்றும், சந்திரகுப்தனுடைய சைனியத்திற்கு ஒரு பட்டாளம் கொடுக்கவேண்டுமென்றும் நிபந்தனை விதித்தான். சௌராஷ்டிரத்தை மேகநாதன் பலவந்தமாகத் தன் ஆட்சிக்கு உட்படுத்திக்கொண்டிருந்தான். அந்தப் பிரதேசத்திலுள்ள க்ஷத்திரியகுலத் தலைவர்கள் சந்திரகுப்தனை வேண்டிக்கொள்ள, அவன் சௌராஷ்டிரத்தை அரசகனுடைய ஆட்சியினின்றும் பிரித்தெடுத்து ராஜவைசிய புஷ்யகுப்தன் என்பவனுக்கு ஒப்பித்தான்.

அவ்வைசியன் மிக்க செல்வவான், பலவான், காத்தியாவாடியிலுள்ளவர்களெல்லாராலும் நன்கு கௌரவிக்கப்பட்ட நாயகன். வேளாண்மைக்கு வேண்டிய நீர் எந்நாளும் குறைவில்லாமல் சேமிக்கும்பொருட்டுச் சுதர்சன ஏரி

என்னும் பெயரால் கிர்நார் என்னும் ஸ்தலத்திற்குச் சமீபத்தில் நீர்ப்பாசனத்திற்கு உபயோகமான பெரிய ஏரி யொன்று கட்டிச் சௌராஷ்டிரத்தில் க்ஷாமநிவாரணம் செய்யவேண்டுமென்னும் பெரிய ஆசைகொண்டு அவ்வைசியன் தன்னுயுள் முழுதும் அந்நோக்கத்தை நிறைவேற்ற முயல்பவன். அவனை மண்டலாதிபதியாக நியமித்தவுடனே அந்தப் பிரம்மாண்டமான வேலையை அவன் தொடங்கலானுன். "எனது சொந்த தனமாயுள்ள 10 லக்ஷம் பொற்பணங்களை இந்த மகத்தான காரியத்திற்கே விநியோகிப்பேன்" என்று அவன் கூறினுன். "ராஜாங்கப் பொக்கிஷத்தினின்றும் உனக்குப் பத்துலக்ஷம் பொற்பணங்கள் கொடுத்துதவப் படும்" என்று ஜனங்களுடைய ஆரவாரத்தினிடையே சந்திரகுப்தன் சாற்றினுன்.

பின்பு சந்திரகுப்தன் உஜ்ஜயினிக்குச் சென்றுன். கத்தி எடுக்காமலே அவ்வூரும் வணங்கி வந்தது. உஜ்ஜயினியில் ஒரு ராஜப்பிரதிநிதியை நியமித்தான். அந்த ராஜப் பிரதிநிதியின் ஆட்சிக்குச் சௌராஷ்டிரம், ஸிம்மபுரம், கச்சுக்கும் சட்லஜுக்கும் யமுனைக்கும் நர்மதைக்கும் இடையிலுள்ள பிரதேசங்கள் ஆகிய இவைகளையெல்லாம் உள்ளாக்கினுன். ஆண்டுதோறும் சிறு கப்பத்தொகை கட்டவேண்டுமென்றும், சாம்ராஜ்யச் சைனியத்திற்கு ஒரு படைப் பகுதி கொடுக்கவேண்டுமென்றும் நிபந்தனை செய்து, லோகிதாக்ஷனை மாளவத்திற்கு அரசனுக்கினுன். வேதிசாகிரி என்னும் பட்டணத்தை ராஜப்பிரதிநிதியின் உபராஜதானியாக்கினுன். உஜ்ஜயினி நகரத்தைச் சாம்ராஜ்யத்தின் இரண்டாம் தலைநகராக்கவேண்டுமென்றும், அவ்விடத்தில் நியமிக்கும் ராஜப்பிரதிநிதி இயன்றமட்டும் இளவரசுப்பட்டத்திற்கு உரியவனுகவே இருக்கவேண்டு

மென்றும், அப்போதைக்கப்போது சக்கரவர்த்தியார் அவ்விடத்தில் தங்கியிருக்கவேண்டுமென்றும் புஷ்யகுப்தனும் லோகி தாக்ஷனும் கேட்டுக்கொண்டார்கள். அவர்கள் சொல்லிய விஷயங்களைச் சாதகமாகவே ஆலோசிப்பதாகச் சந்திரகுப்தன் வாக்களித்தான். பாகுராயணனை உஜ்ஜயினியில் ராஜப்பிரதிநிதியாக நியமித்தான்.

தென்னிந்தியாவில் பற்பல அரசர்களிடமிருந்து ராயபாரிகள் காணிக்கைகளுடன் உஜ்ஜயினிக்கு வந்து, சந்திரகுப்தனுக்குத் தங்கள் தேசம் அடங்கியதாகக் கொள்ள வேண்டுமென விண்ணப்பித்துக் கொண்டார்கள். அங்ஙனம் வந்தவர்களுள், குந்தலத்தரசன், அதன் தெற்கேயுள்ள கோசர்கள், கடம்பர்கள், கங்கர்கள், வடுகர்கள், கொங்கணியர்கள் ஆகிய இவர்களின் அரசர்கள், மகாராஷ்டிரத்துச் சிற்றரசன், எரண்டபல்லிச் சிற்றரசன் ஆகிய இவர்கள் சேர்ந்தவர்கள். அவர்கள் கொண்டுவந்த காணிக்கைகளையும் ராஜவிசுவாசப் பிரமாண வசனத்தையும் ஏற்றுச் சந்திரகுப்தன், குந்திறைபுரம், நந்தகேரா, நாவலிகை, குந்தலம், விஜயதுர்க்கம் என்னும் இடங்களுக்குத் தளகர்த்தர்களையும் பட்டாளங்களையும் அனுப்பினான். சத்தியஸ்ரீ சதகர்ணி என்னும் ஆந்திர தேசத்துப் பிரபல ராஜன் தானே உஜ்ஜயினிக்கு நேரே போய்ச் சந்திரகுப்தனுக்குப் பணிந்து, தன் ராஜ்யத்தையும் சைனியத்தையும் அவனிடம் ஒப்பித்தான். சந்திரகுப்தன் மகிழ்ந்து அவ்வணக்கத்தை யேற்று அவனைத் தழுவிக் கௌரவித்தான்.

"'தர்மம் சர' என்பதே எங்கள் குல விருது. தர்மங் காத்தலே நாங்கள் செய்யுங் காரியம். உணவின்றி உறங்குவார் எங்கள் நாட்டில் இல்லை. பாண்டித்தியமில்லாப் பிரா

மணர் இல்லை என்பதே எங்கள் சிறப்பு" என்று சத்தியஸ்ரீ சொன்னான்.

"நிரம்பச் சந்தோஷம். அவ்வுயர் நோக்கங்கொண்டு நீங்கள் ஒழுகுமட்டும் மகதர்களுக்கு உங்கள் மீது துவேஷமே இல்லை. அம்மகத்தான மனோரதத்தைச் நாம் இருவரும் சேர்ந்தே உழைப்போமாக. ஜம்பூத்வீபத்தில் எல்லோரும் வயிறு வாடாமல் பசியார உண்டு, மனப்பயிற்சியும் பாரமார்த்திக ஞானப்பயிற்சியும் வாய்ந்து விளங்குவாராக. அவர்களுக்கு இவ்வம்சங்களில் எவ்விதக் குறையும் இல்லாமற் செய்வோமாக. என் குருமூர்த்தியாகிய சாணக்கியர் என்னும் மகா புருஷரது உபதேச மொழியைக் கடைப்பிடித்து, நம் பிரஜைகளின் சந்தோஷமே நமது சந்தோஷம், அவர்களின் சௌக்கியமே நமது சௌக்கியம், அவர்களின் வாழ்வே நம் வாழ்வு என்னும் பாவனை மேற்கொண்டு அவர்களுடைய க்ஷேமாபிவிருத்தியையே நாடுவோமாக" என்று சந்திரகுப்தன் கம்பீரமாகக் கழறலானான். சத்தியஸ்ரீ ஆனந்தபூரிதனாகத் தன் ஊருக்குத் திரும்பிப்போனான்.

சந்திரகுப்தனும் சாணக்கியரும் உஜ்ஜயினியிலுள்ள பிரஸித்தமான மகாகாளியின் கோவிலுக்குப் போய்த் தரிசித்தார்கள். அங்கே ஒரு சுவரின்மீது காலச்சக்கரம் எடுப்பாகச் செதுக்கப்பட்டிருந்தது. அதைக் கண்டு அதிசயித்துச் சந்திரகுப்தன், "இது ஏன் இவ்வளவு எடுப்பாக இங்குக் காட்டப்பட்டிருக்கின்றது? இதற்குப் பதிலாகத் தர்ம சக்கரத்தைப் போட்டிருந்தால் நன்றாயிருக்குமல்லவா?" என வினவினான். அதற்குச் சாணக்கியர், "ஆ, அப்படியாகாது. தர்மாதர்ம காலங்கள் இரண்டும் காலத்தினுள் அடங்கியிருக்கின்றன. ஆதலின், தர்மசக்கரம் இன்ன

தென்று ஜனங்கள் சாதாரணமாகத் தெரிந்து கொண்டிருப் பதைக்காட்டிலும் காலச்சக்கரமே விரிபொருள் வாய்ந்தது" என்று சொன்னூர்.

அவர்கள் பாருகச்சா என வழங்கப்பெறும் பிருகு கச்சா என்னும் இடத்திற்குப் போய், நருமதா நதியிலுள்ள புண்ணியப் புனலான சுக்கில தீர்த்தத்தில் ஸ்நானம் செய் தார்கள். சியாமா சாஸ்திரியும் மீனுக்ஷியும் முன்னரே இறந்துபோயிருந்தனர். சுக்கிலதீர்த்தத்தின் அண்டை யில் பாவனகரமான அமைதி நிறைந்திருப்பதைக் கண்டு சந்திரகுப்தன் மிக மகிழ்ந்து அவ்விடத்தில் தூர்த் தரையோடு வந்து ஆனந்தமாசம் (மணம்புரிந்துகொண்ட முதல் மாதம்) கழிப்பதற்காக அங்கோர் அரண்மனை கட்டு வித்தான். அவ்விடத்தில் கருத்தரித்துப் பிறக்கும் குழந்தை தீர்க்காயுள் வாய்ந்து ஆரோக்கியமாகவும் ஆனந்தமாகவும் வளமையுடன் வாழுமென்பது ஜனங்களின் கொள்கை. அந்தக் கொள்கை சந்திரகுப்தனுக்கும் உண்டு. தபதி நதிக்கரையிலுள்ள சூரத்து நகரம் சண்டை செய்யாமலே இவனுக்கு வசப்பட்டது. அங்கிருந்து சந்திரகுப்தனும் சாணக்கியரும் தங்கள் படையுடன் கௌசாம்பிக்கு ஏகினூர் கள். அங்ஙனம் ஏகுமுன், தெற்கேயுள்ள தேசங்களைப் பிடிப்பதற்காக ஸிம்மபலன், புருஷதத்தன், சந்திரபானு, டிங்கரதன் என்னும் இவர்கள் வசமாக நால்வகைப் படை களுமுள்ள பலமான சேனையொன்றை அனுப்பினூர்கள்.

கி. மு. 318 ஜனவரி மாதத்தில் கௌசாம்பி நகரத்தில் சந்திரகுப்தனுக்கும் தூர்த்தரைக்கும் விவாகம் சிறந்த வைபவங்களோடு சம்பிரமமாக நடந்தேறியது. பிராமணர் களுக்கும் ஏழைகளுக்கும் வாரி வாரிக் கொடுத்த பொற் பணம் எத்தனையோ குவியல்களாகும். பாரதநாட்டின்

பற்பல இடங்களினின்று அரசர்களும் சிற்றரசர்களும் அம்முகூர்த்தத்திற்கு விஜயம் செய்திருந்தார்கள். அவர்களுள் ஆந்திரதேசாதிபதியும் கலிங்கதேசாதிபதியும் பிரமுகர்கள். அவர்கள் இருவருக்கும் விருந்தினர்களுள் அக்கிரஸ்தானம் அளிக்கப்பட்டது. நேபாளம், மஞ்சுப்பட்டணம், கர்த்திரிபுரம் என்னும் பிரதேசங்களுக்குக் கிராதராஜனான தங்கோ என்பவனும் விவாக முகூர்த்தத்திற்கு வந்திருந்து, தன் ராஜ்யமும் சந்திரகுப்தனுடைய ஆதிபத்தியத்திற்குட்பட்டதென விசுவாஸ பூர்வமாகப் பிரமாணம் செய்தான். இக்கலியாணக் காட்சியைக் கண்டு களிக்கும்பொருட்டு ஸ்ரீமதி கௌதமியும் பாடலிபுரத்தினின்று வந்திருந்தாள். அவள், ஆடம்பராபிலாஷையில்லாத மனோஹரத்தன்மையும், ஸுசீலமும் நற்பாங்கும் உள்ளவளானமையின், வெகு சீக்கிரத்தில் துர்த்தரையோடு பழகி அவளுக்கு மிக்க பிரியமுடையவளாயினள்.

கலியாணவைபவங்களெல்லாம் கழிந்து, வந்த விருந்தினர்களையும் ஓம்பி வழியனுப்பியபின், துர்த்தரையுடன் சந்திரகுப்தனும், ஸ்ரீமதி கௌதமியுடன் சாணக்கியரும் சுக்கிலதீர்த்தத்திற்குப் போய் நான்கு மாதகாலம் தங்கி அமைதியாகவும் ஆனந்தமாகவும் வாழ்ந்தார்கள். அடிவயிறு கனத்துத் துர்த்தரை கர்ப்பசின்னங் கண்டு, மகப்பேறு அடைவோமென்னும் மகிழ்ச்சியால் உள்ளம் பூரித்து மார்பு துடிக்க மசக்கைக்குறி காட்டினள். இந்தச் சுபச்செய்தியை ஸ்ரீமதி கௌதமியின் வாயிலாகக் கேட்டுச் சாணக்கியர், பிள்ளைத்தாய்ச்சியான துர்த்தரை எங்ஙனம் உண்ணவேண்டும் உறங்கவேண்டும் ஒழுகவேண்டும் என்று போதித்தார்.

துர்த்தரையுடனும் ஸ்ரீமதி கௌதமியுடனும் சந்திர குப்த சாணக்கியர்கள் பாடலிபுரத்திற்குத் திரும்பிவந்தார்கள். கர்ப்பவதிக்குச் செய்யத்தக்க பூ முடித்தல், வளை காப்பு, ஸீமந்தோந்நயனம் முதலான ஸம்ஸ்காரங்களை 'ஸுகங்கா' மாளிகையிலேயே செய்ய நிச்சயித்தார்கள். ராணி துர்த்தரையோடு வரும் அரசனை வரவேற்று வாழ்த்துவதற்கு நகரமுழுதும் ஒருங்கே திரண்டது. வமிசோத்தாரகனை ராஜகுமாரன் பிறக்கப்போகிறனெனக் கேட்டு நகரவாஸிகளும் குடிகளும் பெருமகிழ்ச்சியில் மூழ்கினர்கள். ஆரம்பமாதத்திற் செய்யத்தக்க ஸீமந்த முகூர்த்தம் சாஸ்திரோக்தமாகவும் சிறப்பாகவும் நடைபெற்றது.

பத்துத்திங்களானபின், அழகும் ஆரோக்கியமும் வாய்ந்த ஆண்குழந்தையைத் துர்த்தரை கருவுயிர்த்தனள். அம்மகவுக்குப் பத்திரசாரன் எனவும் பிந்துசாரன் எனவும் சாணக்கியர் நாமகரணம் செய்தார். சாம்ராஜ்யம் முழுதும் களிவெறிகொண்டு கூத்தாடியது. பாடலிபுரமெங்கும் சிரிப்பும் சல்லாபமும் உல்லாசமும் உத்ஸவமும் சந்தோஷமும் நிறைந்திருந்தன. ராஜகுமார ஜனனப்பெருமையைக் கொண்டாட மூன்றுதின விடுமுறை எல்லாருக்கும் அளிக்கப்பட்டது; ஆயிரக்கணக்கான கைதிகள் விடுதலை செய்யப்பட்டனர். இந்தியாவின் நாலுபக்கங்களினின்று அரசர்களும் சிற்றரசர்களும் தூதர்களின் மூலமாக வாழ்த்துப் பாக்களும் காணிக்கைகளும் அனுப்பினர்கள். பிந்துசாரனது ஜனனதினத்தன்றே புஷ்யகுப்தனுக்கும் ஒரு குமாரன் ஜனனமாயினன். அப்புதல்வனுக்கு அவன் சந்திரகுப்தன் எனச் சக்கரவர்த்தியின் பெயரையே சூட்டினன். அங்ஙனம் அவன் செய்ததைச் சக்ரவர்த்தியும் இன்புடன் ஏற்றன்.

இதற்கிடையில் சந்திரகுப்தனுடைய சைனியத்தவர்கள் மகாராஷ்டிரம், தேவராஷ்டிரம், எரண்டபள்ளி, கொங்கணம், குந்தலம், மகிஷமண்டலம் என்னும் ராஜ்யங்களை ஜயித்து, ஈசிலே, சுவர்ணகிரி, சந்திர ராயபட்டணம் என்னும் இடங்களில் தக்க கோட்டைகளையும் நிருமித்தனர். தென்னாடுகளை ஆள்வதற்குச் சுவர்ணகிரியில் புருஷதத்தனை ராஜப்பிரதிநிதியாகச் சந்திரகுப்தன் அமைத்தான்.

சுவர்ணகிரி ராஜப்பிரதிநிதியின் ஆட்சிக்கு உட்பட்ட தென்னாட்டு மாகாணங்களின் எல்லைகளை நிர்ணயம் பண்ணி வரைகோலுவதற்குச் சந்திரராயபட்டணத்திற் கருகில் விம்மபலன் போயிருந்தான். அந்தச் சமயத்தில் அவனிடம் ஒரு சிறிய காலாட்படைமாத்திரமே இருந்தது. தென்னார்க்காடு ஜில்லாவில் மோகூர் என்னும் பட்டணத்தாசனுடைய துருப்புக்கள் அங்கே எதிர்ப்பட்டன. அவ்வரசனும் படைகளும் மௌரியத்துணைவர்களான சில கோசர்களையும் வடுகர்களையும் வென்று பின் தொடர்ந்து போய்க்கொண்டிருந்தனர். அங்ஙனம் தொடர்ந்து பின் பற்றாமல் தவிர்த்துத் தெற்கேயுள்ள தன் ராஜ்யத்திற்குத் திரும்பிப்போம்படி அவ்வரசனுக்கு விம்மபலன் அதிகாரப் பாங்காகச் சொன்னான். அவ்வார்த்தையை இகழ்ந்து அவ்வரசன் மறுத்ததன்றி மௌரியர்களை நிந்தனையாக 'நவோதயர்கள்', 'வம்பர்கள்' எனச் சுட்டியும் பேசினான்.

இதனால் விம்மபலனுக்குக் கோபம் மூண்டது. மூலபலச் சைனியம் வந்துசேரவேண்டுமெனச் சக்கரவர்த்திக்கு அவன் 'ஜரூர் யாதாஸ்து' அனுப்பினான். உடனே புருஷதத்தனும், டிங்கரதனும் சந்திரபானுவும் வந்துசேர்ந்தார்கள். 2,00,000 காலாட்களையும், 10,000 குதிரைவீரர்

களையும், 2,000 யானைகளையும், 1,000 தேர்களையும் அவர்கள் கொண்டு வந்தார்கள். பெரும்படையை வரவழைக்க விம்மபலன் ஆள் அனுப்பியிருக்கிறனெனக் கேட்டவுடனே மோகூர் அரசன் தன் துருப்புக்களுடன் பின் நோக்கிப் போனான். அவன் பொதியில் மலைகளுக்குப் பின் புறம் போய் ஒளிந்துகொண்டான். சத்துருவின் சைனியம் அவ்விடத்திற்கு வந்து சேரமுடியாதென அவன் நம்பியிருந்தான். முக்கியமாக, அவ்வுன்னத மலைகளின் மீது நடைவழி இல்லாததனால் தேர்கள் அவ்விடத்திற்குச் செல்ல முடியாதென நிச்சயித்துக் கொண்டான். ஆனால், அங்ஙனம் அவன் எண்ணியது பிழை. உடனே சந்திர பானு வல்லவர்களை ஒன்று கூட்டி அம்மலையின்மீது தேர் ஓடத்தக்க திவ்வியமான பாதை யொன்றைச் சீக்கிரமாக வெட்டுவித்தான். அந்தப் பாதையின் வழியாகப் பொற் சக்கரம் வாய்ந்த மௌரியத் தேர்கள் விரைந்து செல்லலாயின; பிரபலமான மௌரியக் குடையைத் தாங்கி ஒரு யானை முன் சென்றது. மௌரியக் கொடிகள் பறந்து கொண்டிருந்தன. ரணபேரிகைகள் முழங்கின. இவைகளையடுத்துக் கோசர்களும் வடுகர்களும் முன் நடந்தனர். மோகூர் அரசனும் அவன் படையாட்களும் பேச்சு மூச்சுக் காட்டாமல் தென் திசைநோக்கி ஓடலானார்கள். விம்மபலன் தன் துருப்புக்களை அவ்விடத்திலேயே நிறுத்திக்கொண்டு பொதியில்மலையையே மௌரிய சாம்ராஜ்யத்து எல்லையாக்கினான். ஏனெனில், தென் புறத்திலுள்ள தமிழ் நாடுகளின்மீது படையெடுக்கக்கூடாதென்று சந்திரகுப்தனும் சாணக்கியரும் கட்டளையிட்டிருந்தார்கள்.

"இப்போது நமது சாம்ராஜ்யத்திற்குப் பொதியில் மலையே எல்லையாயிருக்கின்றது. நாங்கள் தென்கடல்

வரையிற் செல்லலாமா? மோகூர் அரசனிடமிருந்தும், தமிழ் வேந்தர்களிடமிருந்தும் காணிக்கைகள் வந்து பொழிந்துகொண்டிருக்கின்றன. அவர்கள் இப்போது நமது ஆதிக்கியத்தை ஒப்புக்கொண்டு, மௌரியர்களையும் சாணக்கியரையும் மிகமிகப் புகழ்ந்து தலைக்குமேற் கொண்டாடுகிறார்கள்" என்று சந்திரகுப்தனுக்கு ஸிம்ம பலன் விண்ணப்பம் செய்தான்.

ஆறு மாதத்திற்குப்பின் சக்கரவர்த்தியிடமிருந்து, "நீ இருக்கும் இடத்திலேயே நிற்பாய். அதற்குத் தெற்கே செல்லவேண்டாம். தமிழ் நாடுகளிலிருந்தும் சிங்களத்தி லிருந்தும் தூதர்கள் கப்பல் வழியாக நேரே இவ்விடம் வந்து சக்கரவர்த்தியாரது ஆதிக்கியத்தை ஒப்புக் கொண்டு பிரமாணம் பண்ணி, இனி நம் படைகள் அவர்களை வருத்தவேண்டாமென வேண்டிக்கொண்டிருக்கிறார்கள்" என்னும் உத்தரவு கிடைத்தது.

அந்தத் 'தாக்கீ'தை ஸிம்மபலன் படித்துப்பார்த்து, "அது நியாயமே. முக்கடற்சந்தியான கன்னியாகுமரியில் உயரிய மௌரியக்கொடியை நாட்ட ஆவல் கொண்டிருந் தேன்" என்று சொன்னான்.

இப்போது கி. மு. 317-ஆம் ஆண்டு ஆரம்பமாயிற்று. பலகுப்தனும் அவனது சேனையும் தக்ஷசிலையை மிகவும் நெருக்கிக்கொண்டிருந்தார்கள். இரண்டு வருஷ காலம் முற்றுகையிட்டதில், உள்ளிருந்து காத்துக் கொண்டிருந்தவர்களின் மனம் சலித்துச் சளைத்துப் போயிற்று; செழிப்புற்ற அந்நகரத்தின் வர்த்தகம் பாழா யிற்று. நகரவாஸிகள் பொறுக்காமல் முரணலானார்கள். ஆசியா மைனர் என்னும் பிரதேசத்தில் அலெக்சாண்டரின்

தளகர்த்தர்களுக்குள் சண்டை நடந்துகொண்டிருந்தது. அந்தச் சண்டையில் யூடிமாசும் கிரேக்கர்களும் அதிக அக்கரை கொண்டார்களேயல்லாமல், மௌரியர்களை எதிர்த்து ஆம்பிசின் தலைநகரத்தைக் காப்பதில் சிரத்தை காட்டவில்லை. யூடிமாசுக்கு மேலதிகாரியான யூமீனீஸ் என்பவன் கி. மு. 321-இல் கிரேடிராஸைக் கொன்றவன். அவன் இப்போது அன்டிகோனுஸ் என்பவனுடன் கடும் போர் புரிந்துகொண்டிருந்தான். அன்டிகோனுவின் பக்கம் சார்ந்து டாலமி, கிரேடிராவின் மகனான டைதான், சலூகஸ், நிபார்க்கஸ் என்பவர்கள் அவனுக்குத் துணை செய்துகொண்டிருந்தார்கள். அவர்களை எதிர்த்துப் போர் புரியும்பொருட்டுச் சில போர்யானைகளுடன் வந்து தனக்கு உதவி செய்ய வேண்டுமென யூடிமாஸை அந்த யூமீனீஸ் வற்புறுத்தி வேண்டிக்கொண்டிருந்தான். ஆம்பிசினிடம் 30 யானைகளே இருந்தன. அவைகளைக் கொடுத்தனுப்ப அவனுக்கு மனமில்லை. அப்படி அவன் 30 யானைகளை அனுப்பினும், அவைகளால் யூமினீஸுக்கு அதிக சாதகம் ஏற்படாது. மௌரியர்களிடம் 9,000 போர் யானை கள் உண்டு; தக்ஷசிலையை முற்றுகை இடுவதற்குப் பல்குப்தனே 1,000 யானைகள் வைத்திருந்தான். அவர் களுடைய யானைகளில் ஒன்றையேனும் யூடிமாசு பிடிக்க முடியாததாயிற்று; ஒரு யானையும் விலைக்கு வாங்க முடியா திருந்தது. ஏனெனில், இந்தியாவுக்குள் அரசரைத் தவிர வேறெவரும் போர்யானை வைத்திருக்கக்கூடாதென்னும் விதி வழங்கியது. இளைய போரசு போர்யானைகளை எல்லா விடங்களிலிருந்தும் சேகரித்துக்கொண்டிருந்தான். அவ னிடம் அப்போது 120 யானைகளே இருந்தன. அவன் யூடி மாஸோடு மிக அந்நியோன்னியமாகவே இருந்தான்; அவன்

மாமனான பெரிய போரஸின் மீதும், அவன் இறந்துபோன பின்பு அவன் மகனான மலயகேதுவின் மீதும் அவனுக்கிருந்த பொறாமையினாலே அவன் யூடிமாசுடன் நெருங்கிய நட்புப் பாராட்டிக்கொண்டிருந்தான்.

அலெக்சாண்டரைப்போல யுத்ததந்திரங்கள் செய்து பலகுப்தனைத் தோல்வியுறச்செய்து அவனிடமுள்ள 1,000 யானைகளையும் பிடித்துக்கொள்ளலாமென யூடிமாசு முதன் முதலில் எண்ணினான். ஆனால் கி. மு. 317 புத்தாண்டுத்தினம் கோட்டைக்குள்ளிருந்து யூடிமாஸ் திடீரெனப் பாய்ந்தடித்ததில் அவன் துருப்புக்களும் ஆம்பீசின் துருப்புக்களும் நல்ல தோல்வியடைந்தன. தக்ஷசிலையின் மதில்கள் பலமாயிருந்ததனாலேயே அவர்கள் அடியோடு அழியாமல் மீந்தார்கள். இந்தப் போரினால் யூடிமாசுக்குப் புத்தி வந்தது. இந்தப் பிராச்சியர்களை எதிர்த்துப் போர் புரியாமல் அலெக்சாண்டர் தவிர்த்ததே நன்றென அவன் தெரிந்துகொண்டான்.

"அவர்களுக்கு இவ்வாயிரம் யானைகள் போயினும் வேறு 8,000 இருக்கின்றனவே!" என நினைத்து நடுங்கலுற்றான்.

மறுநாள் யூடிமாசு மிக்க ஏக்கம் பிடித்து மனமாழ்ந்திருக்கையில், ஆம்பீசின் மந்திரிகளில் ஒருவன் வந்து, பர்வதகனையும் வைரோசகனையும் சூழ்ச்சியினாற் சாணக்கியர் கொல்லுவித்த கதையைச் சொல்லிக்கொண்டிருந்தான். அப்போது அவனுக்கோர் எண்ணம் தோன்றியது. இளைய போரசுக்கு அவன் ஒரு கடிதம் எழுதினான். ஸிந்து நதிக்கரையில் உதபாண்டபுரத்தினருகில் தன் போர்யானைகளோடு வந்து தன்னுடன் சேர்ந்துகொண்டால், பின்னணியிலிருந்து மலயகேதுவைத் திடீரெனத்

தாக்கிவென்று, அவனுடைய ராஜ்யங்களையெல்லாம் இளைய போரசுக்கு அளிப்பதாக அக்கடிதத்தில் உறுதி கூறினன். இளைய போரசின் நாவில் நீர் ஊறியது. தன்னுடைய 120 போர் யானைகளையும் 2,000 குதிரைப்படையையும், 3,000 பதாதிப்படையையும் கைக்கொண்டு குறிப்பிட்ட இடத்திற்குப் போய்ச்சேர்ந்தான். இளைய போரசோடு சேர்ந்து மலயகேதுவைத் தாக்கினல், பலகுப்தனது சைனியம் இங்கே முற்றுகையை நீக்கி மலயகேதுவுக்குத் துணை செய்யப்போகுமென ஆம்பீசுக்குச் சொல்லி, யூடிமாசு தக்ஷசிலையைவிட்டு 20,000 கிரேக்கத் துருப்புக்களுடன் போனன். துணிந்து மேற்கொண்ட இப்படையெழுச்சியின் செலவுகளுக்காக அவன் ஆம்பீசினிடமிருந்தும் தக்ஷசிலை வியாபாரிகளிடமிருந்தும் ஒருகோடி சுவர்ணங்கள் வாங்கிக்கொண்டான். அவ்வாறு பொருளுதவி செய்ததன்றி, துணையரசு ஒருவன் பொருட்டுக் கிரேக்கப் படைகளை இங்ஙனம் போருக்குரிய ஆபத்துக்களுக்கு உள்ளாக்க முன்வந்த தயாளத்திற்காக யூடிமாசுக்குத் தக்ஷசிலையார் பெருநன்றி பாராட்டி வந்தனுபசாரமும் செய்தார்கள்.

யூடிமாசு தன் படைகளோடு மிக்க யுத்த அட்டகாசமாகக் குறிப்பிட்ட இடத்திற்குப் போய்ச் சேர்ந்தான். அத்தகைய சிறப்பான படைகளுடன் தன் நண்பன் வந்ததைக் கண்டு இளைய போரசு களிப்புற்றான். இரகசியமாகச் சில விஷயங்களை ஆலோசிக்கவேண்டுமென்று போரசை யூடிமாசு தன் டேராவுக்கு அழைத்தான். சிறிதும் சந்தேகப்படாத போரசு உள்ளே போனவுடன், யூடிமாசு சரேலென ஈட்டியொன்றை யெடுத்து அவன் மார்பில் ஆழக் குத்தித் தக்ஷணமே அவனைக் கொன்று

சாய்த்தான். போருச்குச் சித்தமாயிராத இளைய போரசின் படைகள்மீது கிரேக்கர்கள் விழுந்து அநேகரைக் கொன்று மற்றவர்களைத் துரத்தினர்கள்; அவனுடைய 120 போர் யானைகளையும் பிடித்துக்கொண்டார்கள். அவ்யானைகளை யும், ஒரு கோடிச் சுவர்ணங்களையும் எடுத்துக்கொண்டு யூடிமாசும் கிரேக்கர்களும் அங்கிருந்துபோய்ப் பான்டாஸ் (Pontos) என்னுமிடத்தில் யூமினீசுடன் சேர்ந்து கொண்டார்கள்.

அன்டிகோனஸ், சலூகஸ், பைதான், நியார்க்கஸ் என்பவர்களை எதிர்த்துப் போர் செய்வதற்கு யூடிமாசு கொண்டுபோன படைகளும் யானைகளும் பணமும் யூமினீசுக்குப் பெரிதும் பயன்பட்டன. ஆனல், இத்தனை சகாயம் கூடிவந்தும் யூமினீஸ் தன் சத்துருக்களை அடித்து வெல்வது அசாத்தியமாயிருந்தது. அவனுடைய சொந்தப் படைகளே தமக்கு வெற்றி வாய்க்காதெனத் தெரிந்து ஏக்கம் பிடித்து, அவனைக் கி. மு. 316-இல் அன்டிகோன சுக்குக் காட்டிக்கொடுத்து அவன் வசமாக்கிவிட்டார்கள். நியார்க்கஸ் வேண்டியமட்டும் தடுத்துரைத்தும் அன்டி கோனஸ் கேளாமல் உடனே யூமினீசைக் கொன்றான். யூமினீசுக்குத் துணையாயிருந்த யூடிமாசை அன்டி கோனஸ் கொன்றபோது எவரும் ஆக்ஷேபிக்கவில்லை. இங்ஙனம் இளையபோரசை வஞ்சகமாகக் கொலைசெய்த யூடிமாசுக்குக் கைமேற் கூலி கிடைத்தது.

இளைய போரசைக் கொலைசெய்து யூடிமாசு அவனு டைய யானைகளைப் பிடித்துக்கொண்டு, தம் படைகளையும் ஒரு கோடி ஸ்வர்ணங்களையும் வாரிக்கொண்டு, தம்மை விட்டு நீங்கினனெனத் தெரிந்தவுடனே தக்ஷசிலையார் கிரேக்கர்களின்மீதும் அவர்களுக்குப் பெருந்துணையா

யிருந்த ஆம்பீசின்மீதும் சீற்றங்கொண்டு பெருங்கூச்சலிட்டார்கள். நகரவாசிகள் கோட்டைக்கதவுகளைத் திறந்து மௌரியச்சேனை உள்ளே வர வழிவிட்டார்கள். பலகுப்தன் தன் சேனையுடன் நகரத்திற்குள் பிரவேசித்த போது, ஆம்பீசு தன் அரண்மனையின் மேற்றளத்தினின்று கீழே குதித்துத் தற்கொலை செய்துகொண்டான். அவனது சவத்தை ராஜாங்கப் பெருமைகளோடு கொண்டுபோய்த் தகனம் செய்யப் பலகுப்தன் அநுமதியளித்தான். ஆம்பீசுக்குப் பிள்ளை இல்லை. வேறு நெருங்கின வார்சும் இல்லை. தக்ஷசிலையையும் அதைச் சேர்ந்த ராஷ்டிரங்களெல்லாவற்றையும் மௌரிய சாம்ராஜ்யத்தோடு சேர்த்துக் கொண்டதாகப் பலகுப்தன் ராஜப்பிரகடனம் செய்தான். பின்பு வெற்றியாளரான அவன் படையினர் ஸிந்து நதி வரையிற் சென்று அதனையுங் கடந்து அக்கரையிலுள்ள புஷ்கலவதியையும் பிடித்துக்கொண்டார்கள். பலகுப்தன் படைகள் வரக்கண்டவுடனேயே அங்கிருந்த பலவீனமான கிரேக்கப்பட்டாளம் கைவிட்டது.

பலகுப்தனைத் தக்ஷசிலைக்கு ராஜப்பிரதிநிதியாகச் சந்திரகுப்தன் நியமனம் செய்தான். அவனது ராஜ்யாதிகாரம் சட்லஜ் நதிக்கு மேற்கிலும் கசசுமாகாணத்திற்கு வடக்கிலுமுள்ள பிரதேசம் முழுமைக்குஞ் செல்வதாயிற்று. காசுமீரம், பஞ்சாபு, பிஷாவர், தக்ஷசிலை, புஷ்கலவதி, மூல்தான், கடல்வரையிலுள்ள ஸிந்துநதிப் பள்ளத்தாக்கு ஆகிய இவையெல்லாம் அவனுடைய ஆட்சிக்கு உட்பட்டவையாயின. பலகுப்தன் ஆரியபுத்திரன்; எனவே, சக்கரவர்த்தியின் உறவினன். ஆதலின், அவனை ராஜப்பிரதிநிதியாக நியமனம் செய்ததில், மலயகேது, சௌபூதி, அபிசாரன், அர்ஷகேசன் ஆகிய இவர்களுக்கும், காசு

பீரத்தரசன், வஸிந்துமாகாணுதிபதி, இளையபோரசின் மகன் ஆகிய இவர்களுக்கும் பரமதிருப்தி உண்டாயிற்று. பல்குப்தனை ராஜப்பிரதிநிதியாகக்கொண்டு அவன் கையின் கீழ் ஆட்சிபுரிவது அவர்களுக்குச் சம்மதமாகவே இருந்தது. அவனிடத்தில் அவர்கள் பிரியமாகவே நடந்துகொண்டார்கள். ஒரு வருஷத்திற்குள் பல்குப்தனும் அவனுடைய மந்திரிகளும் இந்தியாவின் வடதிசையில் தக்ஷிசிலையைப் பலமான மௌரிய துர்க்கமாக்கினார்கள்.

சாணக்கியர் சொற்படி சந்திரகுப்தன், தான் வென்று கைக்கொண்ட ராஜ்யங்களில் எங்ஙனம் வியவகரிக்கவேண்டுமென்று எல்லா மௌரிய ராஜப்பிரதிநிதிகளுக்கும், மண்டலாதிகாரிகளுக்கும், அதிகாரிகளுக்கும் 'பர்வாறு' (ராஜாக்கினை) ஒன்று அனுப்பினான். அப்'பர்வாறு' வருமாறு: "வென்று வசப்படுத்திய தேசத்து மக்களை ஒரு போதும் இகழ்ச்சியாகப் பாராதீர்கள். மகதத்துப் பிரஜைகளின் விஷயத்தில் எங்ஙனம் நடந்துகொள்வீர்களோ அங்ஙனமே அக்குடிகளின் விஷயத்திலும் நடந்துகொள்ளுங்கள். அவர்களுக்குத் தீமை செய்வாரனைவரையும் தக்கவாறு தண்டியுங்கள். அவர்களுடைய பூமிகளையேனும், பொருள்களையேனும், பெண்டிர்களையேனுங் கவராதீர்கள். அவர்களுடைய தேசச் சட்டங்களையும், வழக்க பழக்க ஆசாரங்களையும், விடுமுறைத்தினங்களையும், வைதிக வியவகாரங்களையும் உள்ளபடியே அநுசரியுங்கள்."

இவ்வாக்கினைப் பிரகடனத்தைக் கேட்டவுடனே வெல்லப்பட்ட ஜனங்களெல்லாரும் களிப்புற்றார்கள். புதிய ராஜனான சந்திரகுப்தனிடம் மிக்க பற்றுடையவர்களானார்கள். தங்கள் பரம்பரை அரசனெனவே அவனை மதிக்கலானார்கள். தோல்வியுற்ற அரசர்களையும், சந்திரகுப்தனும்

அவனுடைய அதிகாரிகளும் தக்க மரியாதையோடும் பெருமையோடும் தாக்ஷிண்யத்தோடும் பாராட்டினார்கள். அதனால் அவர்கள் மௌரியச் சக்கரவர்த்தியின் காரியஸ்தர்களெனத் தங்களைச் சொல்லிக்கொள்வதிற் பெருமை கொள்ளலானார்கள். இவ்வெற்றிகள் பெற்றுப் பத்து வருஷங்களுக்குள் மௌரிய சாம்ராஜ்யம் கிழக்கு மேற்கில் புஷ்கலவதியினின்று தாமிரலிப்திவரையிலும், தெற்கு வடக்கில் காசுமீரத்தினின்று பொதியில் மலைவரையிலும் வியாபித்து நிலைகொண்டது.

---

## அத்தியாயம் 30

# வென்றியாளன் வெல்லுண்டான்

அலெக்சாண்டர் மரணத்தறுவாயிலிருந்தபோது, 'உன் ராஜ்யத்தை எவருக்குக் கொடுக்கப்போகிறாய்' என அவனுடைய ஸகாக்கள் வினவ அவன் கடைசி மூச்சில், "பலம் மிக்கவனுக்கு. என்பிராணன் போனவுடனே, பெரும் போட்டிச்சண்டை நிகழுமென எனக்குத் தோன்றுகின்றது" எனச் சொல்லியிருந்தான். அந்தப் பெரிய வெற்றியாளனுடைய மனைவிமாரும் மக்களும் உடன் பிறந்தாளும் தாயும் கொலை செய்யப்பெற்றபின், அவன் தளகர்த்தர்கள் தம்முள் பலம் மிக்கவன் எவனெனத் தெரியும்பொருட்டு ஒருவரோடு ஒருவர் சண்டையிட்டுக்கொண்டிருக்கையில், சந்திரகுப்தன் ஸிந்துநதிக்குக் கிழக்கேயுள்ள பிரதேசத்தில் தென்கோடியில் ஒரு சிறு துண்டு நீங்கலாக மற்றெல்லாவற்றிற்கும் தானே அதிபதியாயினன். ஆயினும், கி. மு. 306-ஆம் யாண்டுக்குள் சலூகஸ் நிகேடார் என்பவன் பாபிலோன் பட்டணத்துச் சிம்மாசனத்தில் ஸ்திரமாகவும் க்ஷேமமாகவும் அமர்ந்திருக்கலானான். தளகர்த்தர்களுள் ஏற்பட்ட பெரும் போட்டிக் குழப்பத்தில் அவன் தேறி முன்வந்தவன். சோக்டியான (Sogdiana) என்னும் பிரதேசத்தின் அதிபதியான ஸ்பிதாமினீஸ் (Spitamenes) என்னும் வீரன் மகள் அபமா என்பவளைச் சலூகஸ் விவாகம் செய்துகொண்டிருந்

தான். அலெக்சாண்டரின் மற்றத் தளகர்த்தர்களும் ஆசியா கண்டத்து மாதர்களையே மணம் புரிந்து கொண்டிருந்தார்களாயினும், அவர்களுக்குச் செலூகஸுக்கு வாய்த்தது போல, ஆசியா கண்டத்துப் பற்றும் ஒற்றுமையும் உரிமையும் ஏற்படவில்லை. அவர்களுக்கு இருந்த உறவுமுறை சிறிது காலத்திலேயே அற்றுப்போயிற்று. அங்ஙனமன்றி, செலூகஸின் உறவு முறையும் ஒற்றுமைக்கட்டும் பலப்பட்டன. மற்றத் தளகர்த்தர்களின் செல்வாக்கு நிலையில்லாதொழிந்து போக, இவனுடைய செல்வாக்கும் ஆதிக்கமும் ஆசியா கண்டத்தில் அதிகரித்து வேரூன்றின. அதனால் இவனுடைய சந்ததியாருக்கும் ஆசியாகண்டத்தில் ஒரு சாம்ராஜ்யம் ஸித்திக்கலாயிற்று.

செலூகஸ் முதன்முதலில் பெர்டிக்காஸுக்கும் அவனுடைய குதிரைப்படைக்கும் உதவிசெய்த மெலீகரையும் (Meleager) அவனுடைய பதாதியையும் எதிர்த்துப் போர்புரிந்திருந்தான். அதற்காக அவன் அலெக்சாண்டரின் ஸகாக்களுள் சில்லியார்க்கு (Chilliarch) என்னும் உயரிய அதிகாரஸ்தானம் அளிக்கப்பட்டான். 'சில்லியார்க்கு' ஸ்தானம் வகித்த பெரியாஸை அவன் பெர்டிக்காஸுடன் எகிப்துக்குப் போய் அங்கே பெர்டிக்காஸைக் கொலை செய்த கலகக்காரரின் தலைவனாயினன். அலெக்சாண்டர் இறந்தவுடன், அவனுடைய ராஜ்யங்களைத் தளகர்த்தர்கள் ஒரு மாதிரியாகப் பங்கிட்டுக்கொண்டிருந்தார்கள். அந்தப் பாகுபாட்டை 'ரத்து' செய்து இரண்டாம் முறை திரிபாரடிஸாஸ் (Triparadeisos) என்னுமிடத்தில் கி. மு. 321-ஆம் ஆண்டில் மற்றொருவிதமாக ராஜ்யங்களைப் பங்கிட்டுக்கொண்டார்கள். இங்ஙனம் இரண்டாம் முறை பங்கிட்டதில் பாபிலோன் மண்டலாதிகாரியின் ஸ்தானம்

செலூகஸுக்குக் கிடைத்தது. யூமினேஸோடு சண்டை செய்வதற்கு அவன் அன்டிகோனஸுக்கு உதவி செய்திருந்தான். அதற்குப் பின் டாலமியோடு சேர்ந்து அன்டிகோனசுக்கு விரோதியானான். கி. மு. 306-ஆம் ஆண்டுக்குள் அவன் அலெக்சாண்டருடைய பழைய மாகாணங்கள் எல்லாவற்றிற்கும் அதிபதியாயினன். அவனுடைய ராஜ்யம் ஸிரியாவின் எல்லைப்புறத்தினின்று கிழக்கே ஸிந்து நதி வரையில் வியாபித்தது. அவனது ராஜ்யத்திற்குள் பாக்டிரியா, சோக்டியானா, அரியா, அரகோஸியா, பரபமாசாடை, கெட்ரோஸியா என்னும் பிரதேசங்களும், பாரஸீகம்முழுதும், பாபிலோனியாமுழுதும் அடங்கினவாயின. இத்தனை விஸ்தாரமான ராஜ்யத்திற்கு அதிபதியானமையின், அன்டிகோனசும் டாலமியும் செய்ததுபோல அரசனென்னும் பட்டத்தை மேற்கொண்டான். அத்தருணத்தில் அன்டிகோனசு முதலான போட்டிக்காரர்களுடன் வைரமில்லாமல் நட்புப் பாராட்டிக்கொண்டிருந்தான். ஆனதனால் சந்திரகுப்தன் கைப்பற்றிக்கொண்டிருந்த பஞ்சாபு மாகாணத்தில் ஹைபேஸிஸ் நதிக்கு மேற்குப் பிரதேசத்தையும் ஸிந்துநதிப் பள்ளத்தாக்கையும் இந்தச் சமயத்தில் மீட்டுத் தன்வசமாக்கிக்கொள்ளவேண்டுமெனச் சங்கற்பித்தான்.

சந்திரகுப்தனது ராஜ்யம் எவ்வளவு விஸ்தாரமானது, சைனியம் எவ்வளவு பெரியது என்னும் விவரங்களைச் செலூகஸ் ஒருமாதிரியாகக் கேள்விப்பட்டிருந்தான். ராஜதானியாகிய பாடலிபுரத்தின் சிறப்பைப்பற்றியும், மாகாணத் தலைநகர்களாகிய தக்ஷசிலை உஜ்ஜயினி என்பவைகளின் சிறப்பைப்பற்றியும் அதிகமாகக் கேள்விப்பட்டிருந்தான். அவை பெருமையிலும் மகத்துவத்திலும் ஸூஸா

வையும், பாபிலோனையும்விட மிஞ்சினவை யெனக் கேள்விப்பட்டிருந்தான்.

சந்திரகுப்தனுடைய ராஜ்யத்தின் விரிவையும் செல்வப் பெருக்கத்தையும் சலூகஸ் திருப்தியோடு கேட்டுக் கொண்டான். ஏனெனில், 'சில நாளைக்கு முன்னால் அலெக்சாண்டரின் உதவியை நாடிப் புக்கிபேலாவுக்கு வந்திருந்த சிறுவன்தானே; அவனை எளிதில் தோல்வியுறச் செய்யலாம்' எனத் தன் மனத்தில் உறுதிகொண்டிருந்தான். 'இவனைக்காட்டிலும் பெரிய போரசு மிகப் பிரபலமானவன்; அவனை எதிர்ப்பது கஷ்டம்; அப்படிப்பட்டவனையே அலெக்சாண்டரும் நானுமாகத் தோற்கடித்து நமக்குட் படச்செய்தோமல்லவா' என அவன் நினைத்துக்கொண்டான். இப்போது பெரிய போரசோ போய்விட்டான். அவனை அந்தக் கறுப்புப் பிராமணன் மாயமாகக் கொலை செய்துவிட்டான். அன்றி, இருட்டறையினின்றும் சந்திரகுப்தனை அக்கரியன் அவ்வளவு மாயமாகவே வெளியேற்றி விட்டான். அந்தக் கறுப்புப் பிராமணனுடைய மந்திரப் பிரயோகங்களுக்குப் பயப்படவேண்டுமென்று சலூகஸுக்கு ஆம்பீசு சொல்லியிருந்தான். ஆனால், சலூகஸ் தேகபலத்திலும் தீரத்திலும் கர்வமுற்று நகைத்து ஆம்பீசை எளனம்பண்ணி, 'உலகத்திலுள்ள எல்லாக் கறுப்புப் பிராமணர்களையுங் கொண்டு எனக்கு என்ன தீமைவேண்டுமானாலும் செய்து பாருங்கள். நான் அஞ்சமாட்டேன்' என்று சொன்னான். அப்போது ஆம்பீசு, "அங்ஙனம் மந்திரசக்தியை அசட்டை செய்யாதே" என்று போதித்தான்.

அலெக்சாண்டரும் இவ்வண்ணமே அத்தருணம் மந்திரசக்தியில் நம்பிக்கையில்லாமல் நையாண்டி பண்ணி

னன். இப்போது ஆம்பீசும் போய்விட்டான்; தற்கொலை புரிந்து ஒழிந்து போனன். வாழ்க்கையில், மிக்க வாஞ்சை வைத்திருந்த ஆம்பீசு இங்ஙனம் தற்கொலை செய்து கொண்டது என்ன ஆச்சரியம்! 'நல்லது. காலதேச வர்த்த மானம் எங்ஙனம் அமைந்ததோ? இந்தியச் சீதோஷ்ணஸ்திதி உற்சாகமளிக்கத் தக்கதன்று; மனத்தை ஆழ்த்தி மங்கச்செய்யும்; இரவுகள் பயங்கரமாயிருக்கும்; சாவுகள் அடிக்கடி நேரும். ஆம்பீசு என்ன கனவு கண்டானே? அவனுக்கு என்ன திகில் பிடித்ததோ, அவன் தன் உயிரைத் தானே போக்கிக்கொண்டான்' என்று சலூகஸ் தனக்குத் தானே சொல்லிக்கொண்டான். இந்தியாவிலேயே வாழ்ந்து காலங் கழிப்போமென்னும் எண்ணம் கூடாதெனச் சலூகஸ் தீர்மானித்துக்கொண்டான். 'இவ்விடத்து ஜனங்கள் அந்நியர்களாகவும், விபரீதப் போக்குள்ளவர்களாகவும், பித்தரெனச் சொல்லத்தக்கவாறு நடப்பவர்களாகவும் இருக்கிறார்கள்' என்று அவன் எண்ணமிட்டான். தான் செய்யக்கூடிய உத்தமமான காரியம் என்னவெனில், பஞ்சாபிலும் ஸிந்துப் பிரதேசத்திலும் அலெக்சாண்டர் பிடித்திருந்த மாகாணங்களைத் திரும்பக் கைப்பற்றித் தன் ராஜ்யத்திற் சேர்த்துக் கொண்டு, இந்தியாவின் மற்றப் பாகங்களைச் சந்திரகுப்தனிடம் விட்டு அவனைத் தனக்குக் கப்பங்கட்டும் சாமந்த ராஜனகச் செய்துவிடுவதேயெனச் சலூகஸ் தீர்மானித்துக் கொண்டான். இந்தத் தீர்மானங்கொண்டு சலூகஸ் அகங்கரித்துத் தனக்குத் தானே பெருமை பாராட்டிக் கொண்டான். ஏனெனில், அலெக்சாண்டரும் பிராச்சிய மன்னனிடமிருந்து கப்பம் வாங்கக் கையாலாகா திருந்தானே; தன்னல் முடியும் என்ற தைரியம்.

ஆதலின், கி. மு. 305-ஆம் ஆண்டின் துவக்கத்தில் பாக்டிரியாவிலிருந்து சந்திரகுப்தனுக்கு ஒரு முடிவான

செய்தி அனுப்பினான். 'ஸிந்து நதிப்பள்ளத்தாக்கையும் ஹைபேஸஸ் நதிக்கு மேற்கேயுள்ள பிரதேசங்களையும் எனக்கு ஒப்பித்துவிடவேண்டும். மற்றப் பிரதேசங்களை நீ, என்னை அதிராஜனாக அங்கீகரித்து அடங்கி ஆண்டு கொள்ளவேண்டும். ஆண்டுதோறும் ஒரு கோடி சுவர்ணங்கள் கப்பங்கட்டவேண்டும். இன்றேல், உன்மீது படையெடுத்து வந்து வெல்வேன்' என்று சலூகஸ் எழுதினான்.

சாணக்கியரோடு கலந்து ஆலோசித்துச் சந்திரகுப்தன் கீழ்க்கண்டவாறு மறுமொழி எழுதியனுப்பினான்:— "'தேவானாம்பிரிய' சந்திரகுப்த மகாராஜன் வந்தனம்செய்து பாபிலோன் அரசரான சலூகஸுக்கு எழுதிய யாதாஸ்து என்னவெனில்,—சலூகஸ் கேட்பது ஒவ்வொன்றும் பரிகசிக்கத் தக்கதாயிருக்கின்றது. அவைகளுக்கு இணங்க முடியாதென்று சந்திரகுப்த மகாராஜர் மறுக்கின்றார். ராஜ்யத்தைத் திருப்பிக் கொடுக்கவேண்டுமென்றும், கப்பங் கட்டவேண்டுமென்றும் சந்திரகுப்தரை அவர் கேட்பது எப்படியிருக்கின்றதெனின், சலூகஸ் தமது ராஜ்யத்தை விட்டுக்கொடுக்கவேண்டுமென்றும், தமக்குக் கப்பங் கட்டவேண்டுமென்றும் சந்திரகுப்தன் கேட்கும் நியாயம் போன்றதாம். இத்தகைய அவிவேகமான உரிமைகளைக் கொண்டாடி வற்புறுத்திச் சலூகஸ் திரும்ப இந்தியாவின் மீது படையெடுக்குமளவு மூர்க்கங்கொள்ளலாகாது; சலூகஸின் யஜமானனை அலெக்சாண்டர் படையெடுத்துப் பட்ட அவஸ்தைகளையும் அழிவுகளையும் அதிக தரமாக அநுபவிக்கவேண்டி வரும்; அலெக்சாண்டர் தன்னுடைய சைனியத்தில் முக்கால்வாசி ஜனங்களின் சரீரங்களை இந் நாட்டு நரிகளுக்கும் கழுகுகளுக்கும் இரையாக அளித்துப் போனான். அதை எண்ணுமற் சலூகஸ் இன்னும் மூர்க்கங்

கொண்டு பிடிவாதமாக இந்தியாவின்மீது படையெடுத்தால், அந்தப் படையில் உயிரோடுள்ளவர்களை இந்தியத்துருப்புக்கள் எதிர்த்து அடிக்கச் சித்தமாயிருக்கின்றன. உயிரிழந்தவர்களைக் கொத்தித் தின்ன நரிகளும் கழுகுகளும் சித்தமாயிருக்கின்றன."

இம்மறுமொழியைப் படித்துப்பார்த்தவுடன், சலூகஸ் கடுங்கோபங்கொண்டான். அலெக்சாண்டரோடு ஹைடாஸ்பஸ் நதியைக் கடந்து, பெரிய போரசைத் தோற்கடித்த பராக்கிரமவானை, நேற்று வந்த பையன் இங்ஙனம் இகழ்ந்து எழுதுகின்றானே! சந்திரகுப்தன் ஒரு நாளும் மறவாதிருக்கும் வண்ணம் அவனுக்கொரு பாடம் கற்பிக்கவேண்டுமெனச் சலூகஸ் சங்கற்பித்தான். பாடலிபுரத்திற்கே நேரே படையெடுத்துச்சென்று, அதைப் பிடித்துக்கொண்டு, நந்தர்களுடைய பெரும் பொக்கிஷத்தைக் கைப்பற்றத் தீர்மானித்துக்கொண்டான். ஒரு லக்ஷம் கிரேக்கர்களையும், இரண்டு லக்ஷம் சோக்டியர்கள், பாக்டிரியர்கள், பாரஸீகர்கள், ஸ்கிதியர்கள், சகர்கள், இன்னும் இந்தியக்கொள்ளையில் பங்கு கொள்ள விரும்பிய மற்றவர்கள் ஆகிய இவர்களைப் பெரும் படையாகத் திரட்டிக்கொண்டான். நல்ல போர்த்தளவாடங்களோடு கூடிய இப்பெரும்படையுடன் பாக்டிரியாவினின்று பரபாமிசாடைக்குப் போனான்.

யுத்தம் செய்யவேண்டிய முறையைப் பற்றிச் சாணக்கியருடன் சந்திரகுப்தன் ஆலோசித்தான். "நமக்குப் பலம் அதிகமாயிருக்கின்றது. ஆதலின், சத்துருவை ஸிந்து நதியைக் கடந்து உள்ளே வர விடுவோம். அதற்குப் பின் அவன் படைகளை அடித்து அறைத்துவிடுவோம். இந்தத் தடவை மெய்யாகவே போர்க்களத்தில் நின்று சண்டை செய்

வோம்: இது வெறும் கிருத்திரிமப் போராயிராது" என்று சந்திரகுப்தன் சொன்னான்.

அதற்குச் சாணக்கியர், "புஷ்கலவதியை விட்டுக் கொடுத்து, ஸிந்துநதி கடக்குமிடத்தைக் காக்காமல், நேற்று நீ ஆலோசித்தவாறே நம் 4,00,000 பதாதிப் படையையும், 20,000 குதிரைப்படையையும், 4,000 தேர்களையும் 6,000 யானைகளையும் தக்ஷசிலையிலேயே நிறுத்தி வைப்பது எனக்குச் சம்மதமே. ஆனால், போர்க்களத்துச் சண்டையன்றிச் சூழ்ச்சிப்போர் ஒன்றும் இதில் நடைபெறும். அலெக்சாண்டரின் தளகர்த்தர்களான அவர்கள் நம் அரசர்களின் வழிவகைகளைக் கைக்கொண்டு, கபட மார்க்கத்தையே பெரிதும் சார்ந்திருக்கின்றனர். இதோ பார், தக்ஷசிலையிலிருந்து ஸித்தார்த்தகன் வியவகார ஸந்தேச* பத்திரமொன்று எழுதியனுப்பி யிருக்கிறான்; அதன்மீது பல்குப்தன் ஒரு குறிப்பு எழுதியிருக்கின்றான். அபிசாரன், அர்ஷகேசன், புஷ்கராக்ஷனது குமாரனை புஷ்கரதத்தன், மலயகேது என்னும் இவர்களைச் சலூகஸ் நமக்கு விரோதமாகத் தன்னோடு சேர்ந்து போர்புரிய வேண்டினனாம். அவர்கள் நாணயஸ்தர்களானமையின், உடனே இந்தச் செய்தியைப் பல்குப்தனுக்கு அறிவித்தார்கள். என் உத்திரவுப்படி பல்குப்தன், அவர்கள் சலூகஸுக்கு இணங்கியதுபோல நடிக்கவிட்டான். இங்ஙனமாக கிரேக்கர்களிற் சிலரை ஆடு மாடுகளைப்போலப் பட்டியில் அடைப்போம். இப்போதிருக்கிற நிலைமையைப் பார்த்தால் மெய்ப்போர் நடக்குமோ நடக்கவேண்டி வராதோவென ஐயுறுகின்றேன்" என்று மறுமொழி கூறினார்.

* ஸந்தேசம்—வர்த்தமானம்.

"என் கைக்குக் காரியம் சிறிதளவேனும் இருக்க வேண்டுமெனக் கோருகிறேன். இந்தப் படையெழுச்சிகளெல்லாம் இப்படி ஒன்றும் நேராமல் புகையாய்ப் போகின்றனவே" என்று சந்திரகுப்தன் கூறினான்.

தனது பிரம்மாண்டமான படையோடு சலூகஸ் புஷ்கலவதியின் மீது பாய்ந்தான். அவனுடைய மகள் டயோபான்டீஸ் என்பவளும் அவனுடன் இருந்தாள். அவள் மீது அவனுக்கு வாஞ்சை அதிகம். அவளும் வீரியம் வாய்ந்தவள். மனவெழுச்சியும் சாகஸ காரியங்களும் அவளுக்குப் பிரியமானவை. புருஷனைப்போல அவள் நன்றாகக் குதிரைச் சவாரி செய்வாள். வெகு சுலபமாக வெற்றி பெறலாமென்று சலூகஸ் நம்பி, தன் வெற்றிக் கோலத்தை மகள் கண்டு களிக்கவேண்டுமென விரும்பினான். ஆனால், போர்புரிந்து வெற்றி பெறாதவாறு புஷ்கலவதியை எதிரிகள் காக்காது விட்டிருந்ததைக் கண்டு சற்று ஏமாற்றமடைந்தான். தன்னைக் கண்டு எதிரி பயப்பட்டிருக்கிறானெனச் சலூகஸ் சொன்னான். அந்தப் பட்டணத்தைப் பிடித்து, அவ்விடத்தில் ஒரு பட்டாளத்தை வைத்தபின், அவன் உதபாண்டபுரத்துக்குப் போனான். ஸிந்துநதித் துறையும் காப்பில்லாதிருந்தது. அவன், தன் மகள் டயோபான்டீஸை நோக்கி, "சண்டை செய்வதற்கே அவகாசம் இராதுபோலிருக்கின்றதே. போரஸ் இறந்துபோனபின், இவ்விந்தியர்கள் போர்த் தொழிலையே கை விட்டார்களா என்ன?" என்றான்.

"ஆனால், அலெக்சாண்டருக்குச் செய்ததுபோலத் தக்ஷசிலையிலிருந்து எவரும் எதிர்கொண்டுவந்து உன்னை இன்னும் வரவேற்கவில்லையே" என்றாள் டயோபான்டீஸ்.

"அதற்குக் காரணம் சொல்வது எளிது. இக் கீழ் நாட்டு இந்தியர்கள், ஆம்பியையும் அவனுடைய ஆட்களை

யும் போலல்லாமல் வருத்தம் மூண்டு பழைய நினைவுடனே இருப்பவர்கள். தாங்கள் தோல்வியுறுவதாகத் தெரிந்த போதிலும் அவ்வுண்மையைச் சந்தோஷமாக ஏற்காமல், அதை நினைத்துத் துக்கித்துக்கொண்டிருப்பார்கள். அப்படிப்பட்ட ஜனங்கள் எதிர்கொண்டுவந்து நம்மை வரவேற்பார்களா?" என்று சலூகஸ் சொன்னான்.

தக்ஷசிலேயில் சத்துருக்களின் வரவை எதிர்பார்த்துக் கொண்டு சந்திரகுப்தன் 4,00,000 காலாட்படை, 20,000 குதிரைப்படை, 4,000 தேர்கள், 6,000 யானை இவற்றுடன் காத்திருக்கிறானென்னும் வர்த்தமானம் வந்தது. "எவ்வளவு பிரம்மாண்டமான படை!" என்று டயோபான்டீஸ் ஆச்சரியப்பட்டாள்.

பார்த்துப் பயப்படவேண்டாம். 'ஆயிரங் காக்கைக்கு ஒரு கல் என்பதுபோல, நாம் சண்டை செய்யத் தொடங்கினவுடனே அத்தனை ஆட்களும் அலறிப் பதறிப் புடைத்துப் பல திக்கிலும் சிதறிப்போவார்கள். அவர்கள் மெய்யாகவே தைரியசாலிகளாயிருந்து தமக்கு வெற்றி வாய்க்குமென்னும் நம்பிக்கை யுள்ளவர்களாயின் புஷ்கலவதியையும் ஸிந்துநதித் துறையையும் காக்காமல் விட்டிருக்கமாட்டார்களே" என்றான் சலூகஸ்.

அவனுடைய வார்த்தையை ஒட்டிப்பேசாமல் டயோபான்டீஸ், "அங்ஙனமேயாயினும், அத்தனை யானைகளும் துருப்புக்களும் அடர்ந்து நெருங்கி நிற்கும் வியூகத்திற்குள் புகுவது கஷ்ட சாத்தியமாகவே இருக்கும்" என வெட்டிப் பேசினாள்.

"முதல்தரமான வியூக மொன்று வகுத்திருக்கிறேன். அவர்களுடைய பெரும் படைமுழுதும் நம் இரண்டு சேனைகளின் இடையிற் பிடிபட்டு நமக்கு அடங்கிப் போக

வேண்டி வரும். நமது சேனையும் மலயகேதுவின் துருப்புக் களும் சேர்ந்து பாடலிபுரத்தினின்று சந்திரகுப்தனுக்கு வர்த்தமானப் போக்குவரவு இல்லாமல் தடுத்துவிடும். காப்பில்லாத இந்தத் துறையை நாம் கடந்து சென்றபின், இந்நாடகம் நடைபெறும். அந்தத் 'தமாஷை' நீ காண்பாய்" என்று அவள் காதில் இரகசியமாகச் சொன்னான்.

கிரேக்கச் சேனை சௌக்கியமாக ஆற்றைக் கடந்து அக்கரை சேர்ந்தது. அலெக்சாண்டர் முன்னர்ப் பாளையம் இறங்கியிருந்த இடத்திலேயே சலூகஸ் தன் படைகளுடன் தங்கினான். க்ஷேமமாக ஆற்றைக் கடந்து வந்ததற்காகத் தேவதைகளுக்குப் பலிகள் சமர்ப்பித்தான். மல் யுத்தம் முதலான போட்டியாட்டங்களும் குதிரைச் சவாரிப் போட்டி வேடிக்கைகளும் நடத்தினான்.

அவ்விடத்தில் 15 நாள் ஓய்வு கொண்டு தங்கியிருந் தான். அபிசாரன், அர்ஷகேசன், புஷ்கரதத்தன், மலயகேது என்பவர்களுடன் இரகசியமாக ஓர் ஏற்பாடு செய்து கொண்டிருந்தான். அதன்படி சலூகஸின் படைப் பகுதி பரமூலக் கணவாயின் வழியாகக் காசுமீரப் பள்ளத் தாக்குக்குப் போய், 'காசுமீரக் கதவு' என்னும் பனிகல் கணவாயினூடே சென்று மௌரியப் படையைப் பின் னணியில் தாக்கவேண்டுமென்பது நோக்கம். அதற்காக, 50,000 கிரேக்கர்களையும் ஒரு லக்ஷம் கூலிப் படையாட் களையும், தன் மகன் அண்டியாகஸ் வசமாக அனுப்பினான். காசுமீரத்தின் வண்மையைப்பற்றிக் கேள்விப்பட்டிருந்த டயோபான்டீஸ், அதைப் பார்க்க ஆவல்கொண்டு தன் தமையனுடன் சென்றாள். ரம்மியமான காட்சிகள் நிறைந்த நீண்ட மலைக் கணவாயின் வழியே செல்லுகையில், கிரேக்க தேசத்துத் தெஸ்ஸலி மாகாணத்துக்கும் மாஸிடோனியா

வுக்கும் இடையிலுள்ள தேவதாவாஸமான ஆகாயத்தை யளாவிய ஒலிம்பஸ் என்னும் தேவலோகத்திலிருப்பதாக அவளுக்குத் தோன்றியது. நாற்புறத்திலும் உறைபனி மூடிய மலைகள் சூழ்ந்த காசுமீரப் பள்ளத்தாக்கைக் கண்டவுடனே அவளுக்கு உண்டான ஆனந்தம் அளவு கடந்தது. "இஃது உண்மையிற் சொர்க்க லோகமே. இவ்வேரிகளோ அசாத்திய அழகாயிருக்கின்றனவே?" என்றாள் அவள். பார்த்தவுடனேயே அப்பிரதேசத்தின்மீது அவளுக்கு ஆசையுண்டாயிற்று. கிரேக்கப் படையோடிருந்த அர்ஷகேசன், "காசுமீரம் என்பது 'கசியப மாமுனிவரது நாடு' எனப் பொருள்படும்; அத் தவமுனியின் தலமாதலின் அது சிறந்த புண்ணிய பூமி" என டயோபான்டீஸுக்கு விவரம் கூறினான். அதற்கு, "அவள் ஒவ்வொரு ஸ்தலமும் அவ்வவ் வூராருக்குப் புண்ணிய பூமியேயாகும். ஒவ்வொருவருக்கும் தம் உயிர் வெல்லமன்றோ? அவரவருக்குத் தம் ஆன்மா பாவனமானதே. ஆனால், மற்றெல்லாப் பிரதேசங்களைக் காட்டிலும் இந்நாடு வனப்பு மிகுந்ததென்பதிற் சந்தேகமில்லை" என்று சொன்னாள். அந்நாட்டு ஜனங்கள் பார்வைக்கு மிக அழகாக இருந்தார்களேயல்லாமல், போர்வீரமுள்ளவர்களாகத் தோற்றவில்லை. "காசுமீரத்தைப் பராக்கிரமம் வாய்ந்த போர்வீரர்களே ஆள்வது வழக்கம். ஆனால், இங்குள்ள ஞானவான்கள் கங்காதீரங்களுக்குக் குடிபோய், அங்கே மந்திரிகளாகவும் மகா கவிகளாகவும் விளங்குகிறார்கள்" என்று அர்ஷகேசன் விவரம் சொன்னான்.

திவ்வியமாயிருந்த தேசப்பாங்கை அநுபவித்து, அங்குள்ள பழங்களையும் புஷ்பங்களையும் வேண்டிய மட்டும் புசித்து அணிந்து கண்குளிரக் கண்டு மகிழ்ந்துகொண்டு, அன்டியாகஸும் அவனுடைய துருப்புக்களும் காசுமீரப்

பள்ளத்தாக்குகளில் இரண்டு வாரங்கள் கழித்தனர். இவர்கள் முன் செல்வதற்குப் பனிகற்கணவாய் வழியை ஒழுங்குபடுத்தும் வியாஜமாக அர்ஷகேசன் இவர்களை விட்டு நீங்கிப்போனான். இரண்டு வாரங்களுக்குள் திரும்பி வருவதாகச் சொன்னானாயினும், அவன் அப்படி வரவில்லை. அவனுக்காக அன்டியாகஸ் தூதனொருவனை அனுப்பினான். தூதன் திரும்பிவந்து, அர்ஷகேசன், அபிசாரன், மௌரியர்கள் ஆகிய இவர்களின் ஒரு லக்ஷம் துருப்புக்கள் பனிகற்கணவாயை அடைத்துவிட்டனவென அறிவித்தான். அதைக் கேட்டவுடன் அன்டியாகஸுக்குத் திகில் பிடித்தது. பரமூலக்கணவாயின் வழியாக உதபாண்டபுரம் போகப் பிரயத்தனப்பட்டான். ஆனால், அதுவும் அடைபட்டுப் போயிற்றெனத் தெரிந்து ஏங்கிக் கலங்கினான். கிரேக்கச் சைனியம் காசுமீரப் பள்ளத்தாக்கில் இறங்கினவுடனே, தக்ஷசிலையினின்று மற்றொரு லக்ஷம் மௌரியத்துருப்புக்கள் வந்து அவ்வழியையும் அடைத்துக் காத்து நின்றன.

“நாம் வலையில் அகப்பட்டுக்கொண்டோம். நீண்ட இவ்விருகணவாய்களுள் எதன் வழியாகவும் நாம் தப்பிபோட முடியாது. அவைகளைப் பலமான சத்துருப்படைகள் காத்துக்கொண்டிருக்கின்றன” என்று டயோபான்டீஸுக்கு அன்டியாகஸ் சொன்னான்.

“அப்படியானால், நாம் இவ்விடத்திலேயே தங்கியிருப்போமே. இவ்விடம் அழகாகவும் ஆனந்தமாகவும் சிறப்பாகவும் இருக்கின்றது. ஆனால், அண்ணா, மெய்யாக நாம் வெளியேற முடியாதா?” என டயோபான்டீஸ் வினவினாள்.

“முடியாது, முடியாது. வெளியேற நாம் பிரயத்தனப்படுவதற்குத் தடையில்லை. ஆனால், அதனால் அநேக ஆயிரம்

ஆட்கள் சேதமாவார்கள். அவ்வளவு சேதமாயினும், நாம் தப்பிப்போவோமென்று நிச்சயமாய்ச் சொல்வதற்கில்லை. யுத்தம் முடிந்தபின் நாம் இங்கிருந்து விடுவிக்கப்பெறுமளவும் நமது சௌக்கியத்திற்கு ஒரு குறைவுமில்லாதிருக்கும்படி ஏற்பாடு செய்வதாகப் புஷ்கரதத்தனும் அர்ஷகேசனும் சொல்லியனுப்பியிருக்கிறார்கள். ஆனால், இவ்விடத்துக் குடிகளுக்கு அதுவரையில் நாம் எவ்விதத் தீங்கும் செய்யாதிருக்கவேண்டும். 'குடிகளில் எவர்மீதேனும் விரலை நீட்டினால், உங்களை எலிகளை யொப்பக் கொன்று ஒழிப்போம்!" என்று அவர்கள் சொல்லுகிறார்கள்" என்றான் அன்டியாகஸ்.

"ஆனதனால், நீ என்ன செய்யப்போகிறாய்?" என டயோபான்டீஸ் கேட்டாள்.

"நம் தந்தையார் போரில் வென்றிவாய்ந்து வந்து நம்மை விடுவிக்குமளவும் இங்கே காத்திருப்போம். இந் நாட்டுச் சிற்றரசர்களின் வார்த்தையை நம்பியதால் அவர் நம்மை இவ்வாபத்திற்காளாக்கினார். அவர் வந்தே நம்மைத் தப்பிக்கவேண்டும். இவ்வர்த்தமானத்தை அவசரத் தூதனொருவன் மூலமாக அவருக்குச் சொல்லியனுப்பியிருக்கிறேன்" என்று அன்டியாகஸ் பதில் சொன்னான்.

"அத்தூதன் எங்ஙனம் போவான்?" என அவள் கேட்க, "நம் தூதன் ஒவ்வொருவனையும், அவனிடமுள்ள கடிதத்தை ஆய்ந்துபார்த்து, வெளியே போக விடுகிறார்கள்" என்று அவன் சொன்னான்.

"இம்! மறுபடி அந்தக் கறுப்புப் பிராமணன் வேலை போலும்!"

"அப்படியன்று, மோகனசுந்தர சந்திரகுப்த மகாராஜனே நமக்கு அநுகூலமாக இங்ஙனம் அநுமதியளித்

துள்ளான். உன்னைப்பற்றி அர்ஷகேசன் மிகச் சிறப்பாக வர்ணித்து அவனுக்குச் சொல்லியிருக்கிறான். அதனால், அவ்வரசனுக்கு உன்மீது காதல் உண்டாயிருக்கிறதெனத் தோன்றுகிறது. இன்றைக்கு உனக்கு அவன் சுகபோகத்திற்குரிய அநேக வஸ்துக்களை அனுப்பியிருக்கிறான். மிக மேன்மையான மரத்தினாற் செய்து தந்தச் சித்திரங்களிழைத்த நேர்த்தியான மஞ்சமொன்று அனுப்பியிருக்கிறான். இவ்வளவு அழகான வேலைப்பாட்டை நான் இது வரையிற் பார்த்ததில்லை. அதன்மீது பரப்புவதற்கு நல்ல இலவம் பஞ்சு அடைத்த மெத்தை அனுப்பியுள்ளான்; ஆச்சரியப்படத்தக்க நாணயமான சில பருத்திநூற் புடைவைகளும் பட்டுப் புடைவைகளும் அனுப்பியிருக்கிறான்" என்று அன்டியாகஸ் சொன்னான்.

அவைகளை டயோபான்டீஸ் ஆய்ந்து பார்த்து, "ஓ எவ்வளவு நேர்த்தியாயிருக்கின்றன! ஆனால், இவைகளை ஏன் அனுப்பினான்?" என வினவினாள்.

"சுந்தர வனிதைகளுக்குப் புருஷர் சொகுசான வஸ்துக்களை ஏன் அனுப்புவார்கள்?" என்று அன்டியாகஸ் வினவினான்.

மௌரியப்படையின் பின்னணியை அன்டியாகஸ் போய்த் தாக்குவதற்குச் சித்தமாயினான் என்னும் வர்த்தமானம் வந்தபின், முன்புறத்தில் தான் போய்த் தாக்குவதற்காகச் சலூகஸ் தன் 1,50,000 ஆட்படையோடு ஸிந்து நதிக்கரையிற் காத்திருந்தான். நெடுநாள் இங்ஙனம் காத்திருந்தபின், சந்திரகுப்தனிடமிருந்து கீழ்க்கண்டவாறு ஒரு கடிதம் வந்தது:—

"'தேவானும் பிரிய' சந்திரகுப்த மகாராஜன் வந்தனம் செய்து சலூகஸ் மகாராஜருக்கு எழுதிக்கொண்டது: ராஜகுமாரனை அன்டி

யாகஸூம் ராஜகுமாரி தேவப்பிராங்தையும் (டயோபான்டீஸ்) தங்கள் முழுப்படையோடு காசுமீரத்தில் க்ஷேமமாயிருக்கிறார்கள். யுத்தம் முடிகிற வரையில் அவர்கள் அங்கேயே இருப்பார்கள். அவர்களுடைய பிராணனுக்கு ஒருவிதமான மோசமும் வராதாதலால், அதைப்பற்றிச் சிறிதும் கவலைப்பட வேண்டாம். ஆனால், அவர்கள் மிக துராக்ருதமாக அவ்விடத்துக் குடிகளை அடித்துப் பிடித்து எவ்விதத்திலும் தொந்தரை செய்யாதிருக்க வேண்டும். கணவாய்களின் வழியாக வெளியேறி ஓடிப்போக முயலாதிருக்கவேண்டும்."

அந்தக் கடிதத்தைப் படித்துப் பார்த்தவுடன் கோபமும் தாபமும் அதிகரித்துச் சலூகஸ் தன் உதட்டைக் கடித்துக்கொண்டான். சந்திரகுப்தன் எழுதியது உண்மையே என அன்டியாகஸிடமிருந்து மறுநாள் வந்த கடிதம் உறுதிப்படுத்தியது. "என்ன முட்டாள்! என்ன முட்டாள்! கணவாய்க்குள் நுழைந்து போனபோது சௌகரியமான இடங்களில் அங்கங்கே தன் ஆட்களை வைக்காமல், எல்லாம் அர்ஷகேசனும் அபிசாரனும் பார்த்துக் கொள்ளட்டுமென விட்டுப் போனானே! நல்லது, அவ்விரியன்களை நம்பிய குற்றம் எனக்கும் கொஞ்சம் உண்டு!" எனச் சலூகஸ் அலறினான்.

உடனே தக்ஷசிலையின் மீது படையெடுத்துச் சந்திரகுப்தனைத் தோல்வியுறமாறு செய்து தன் மகனையும் மகளையும் விடுவிப்பது சரியேயல்லாமல், நெடுநீளமான பரமூலக் கணவாயைத் தாக்குவது பயனற்ற பிரயத்தனமாகுமெனத் தீர்மானித்தான். ஆனால், தம்மைக்காட்டிலும் மிகப் பெரிதாகவும் பலமாகவும் இருக்கிற சத்துருவின்மீது படையெடுப்பதில் அவனுடைய கிரேக்கப்படைக்கும் கூலியாட் படைக்கும் உற்சாகம் இல்லாதிருந்தது. முக்கியமாக, அன்டியாகஸுக்கும் அவனுடைய சைனியத்திற்கும் நேர்ந்த கதி

இன்னதென்று தெரிந்தபின், அவர்கள் மனம் ஒடிந்து போயினர். அப்படியிருந்தும், அவ்வாட்களைச் சலூகஸ் தக்ஷசிலையின்மீது நடத்திச் சென்றான். தக்ஷசிலைக் கோட்டை மதில்களின் வெளிப்புறத்தில் பெரும்போர் நிகழ்ந்தது. மௌரியப்படையில் 2,50,000 ஆட்களும் 6,000 யானைகளும் இருந்தன. அந்தப் படையைச் சந்திர குப்தன், சாணக்கியர், பிந்துசாரன், பலகுப்தன் என்னும் நால்வர் நடத்தினர். சலூகஸின் படையில் 1,50,000 ஆட்களே இருந்தனர். போர் எவ்விதம் முடியுமென்பது ஏற்கெனவே எல்லாருக்கும் தெரிந்த விஷயமாயிருந்தது. சந்திர குப்தனுடைய சொந்த யானையாகிய சந்திரலேகம் முன் நடக்க, மௌரிய யானைகளெல்லாம் மிக உக்கிரமாகப் பாய்ந்தடித்துச் சலூகஸினுடைய கிரேக்கப்படையையும் கூலி யாட்படையையும் நசுக்கி நண்டுவண்டலாக்கின. ஆயிரக் கணக்கான ஜனங்கள் யானைக்காலால் மிதிபட்டனர்; மற்றவர்கள் பயந்து சிதறிப்போயினர். அங்ஙனம் ஓடியவர்களை மௌரியக் குதிரைப்படை துரத்திக்கொண்டுபோய் நூற்றுக்கணக்கானவரைக் குத்திக்கொன்றது. மௌரியப் பதாதிப்படை (முக்கியமாக மாளவ க்ஷுத்ரக கதேய சைந்தவத் துருப்புக்கள்) கிரேக்கர்களையும் கூலிப்படையாட்களையும் மிக்க ஊக்கத்தோடு தாக்கிப் பட்டாளம் பட்டாளமாக வெட்டி வீழ்த்தியது.

இந்தப் போரில் கூலிப்படையாட்களுக்கே சேதம் அதிகம். கிரேக்கர்களைக் காட்டிலும், தங்களையே அதிகக் கஷ்டத்திற்குச் சலூகஸ் ஆளாக்கினனெனக் கண்டு, மனம் வருந்தி அவர்கள் அணிதெறித்து ஓடிப்போனார்கள். கிரேக்கர்கள் மாத்திரம் உயிருக்குத் துணிந்து மிக மூர்க்கமாகவும் மும்முரமாகவும் போர்புரிந்தார்கள். ஆனால்

அரயர், அரகோவஸியர், கெட்ரோஸியர், பரபாமிசாடையர் ஆகிய இவர்களுக்குச் சந்திரகுப்தனும் சாணக்கியரும் 10 லக்ஷம் சுவர்ணங்கள் கொடுத்து அவர்களைக் கிளப்பி விட்டு அங்கங்கேயுள்ள கிரேக்க மாகாணாதிபதிகளையும் பட்டாளங்களையும் சங்கரித்து விட்டார்களென்றும், புஷ்கலவதியைப் பிடித்துக்கொண்டு கணவாய் வழிகளை அடைத்துவிட்டார்களென்றும், ஸிந்துநதியைக் கடப்பதற்குப் போட்டிருந்த படகுப்பாலத்தை எரித்துவிட்டார்களென்றும், இங்ஙனமாகச் சலூகஸுக்கும் பர்ஷியாவுக்கும் பாபிலோனுக்கும் எவ்விதமான போக்கு வரவுமில்லாமல் நன்றாகத் தடுத்துவிட்டார்களென்றும் தெரிந்து, மும்முரமாகப் போர்புரிந்துகொண்டிருந்த கிரேக்கர்களும் மனமுடைந்தார்கள்.

“இனிப் போராடுவதிற் பயனில்லை. நாம் சத்துருவோடு சமாதானம் செய்துகொண்டு இச் சிக்கலினின்றும் விடுபட்டுப்போய்க் காசுமீரத்திலுள்ள நம் துருப்புக்களை வெளியேற்றுவோம். இம்மிருகங்களுக்கு எதிரே மனிதர்கள் நிற்கமுடியாது. போரஸின் யானைகள் சரியாகப் பழக்கப் பெற்றிருக்கவில்லை, அவனுடைய மாவுத்தர்களும் கை தேர்ந்தவர்களல்லர். ஆகையினாலே, ஹைடாஸ்பஸ் சண்டையில் போரஸ் தோற்றுப்போனான். சந்திரகுப்தனுடைய யானைகளோ நல்ல போர்ப்பழக்கம் வாய்ந்தவை; அவைகளின் மாவுத்தர்களும் மிகச் சமர்த்தர்கள். அவனுடைய யானைகளிலும் மாவுத்தர்களிலும் 500 கிடைக்குமானால், அன்டிகோனஸை ஒரு நொடியில் நசுக்கிவிடுவேன். கடைசியிற் பார்க்கப்போனால், சந்திரகுப்தனை எதிர்த்துச் சண்டை செய்வதைக்காட்டிலும் அன்டிகோனஸை வென்று ஸிரியாவையும் ஆசியா மைனரையும் சம்பாதித்

துக்கொள்வதே நமக்கு முக்கியமான காரியம். இப்படிப் பட்ட யானைகளில் 500 சந்திரகுப்தன் நமக்குக் கொடுப்பானயின், அரயா, அரகோஸியா, பரபாமிசாடை, கீழ்க் கெட்ரோஸியா என்னும் இந்தத் தொல்லை மிகுந்த மாகாணங்களை அவனுக்கு நாம் தாராளமாகக் கொடுத்து விடலாம்" என்று சலூகஸ் தன் தளகர்த்தனை டெமீடிரியஸ் என்பவனுக்குச் சொன்னன்.

அவ்வாலோசனை சரியானதேயென்று டெமீடிரியஸும் ஒப்புக்கொண்டான். மேற்கண்டவாறு சந்திரகுப்தன் 500 போர்யானைகளையும் மாவுத்தர்களையும் தனக்குக் கொடுக்கக்கூடுமானல், மேலே குறிப்பிட்ட அரயா, அரகோஸியா, பரபாமிசாடை, கீழ்க்கெட்ரோஸியா என்னும் தன் மாகாணங்களைச் சந்திரகுப்தனுக்கு விட்டுக்கொடுத்துச் சமாதானம் செய்துகொள்வதாகத் தூதர்களைச் சலூகஸ் அனுப்பினன். அங்ஙனமே செய்வதாகச் சந்திரகுப்தனும் சாணக்கியரும் உடனே ஒப்புக்கொண்டனா. சலூகஸின் புதல்வியாகிய டயோபான்டீஸ் என்பவளின் ரூபலாவண்யாதி விசேஷங்களைப்பற்றி மிகச் சிறப்பாகப் பலரும் சொல்வதைச் சந்திரகுப்தன் கேட்டு, அவளைக் கண்ணாரக் காண்பதற்கு முன்னரே அவள்மீது மோகங்கொண்டிருந்தான். அவளைத் தனக்குப் பாணிக்கிரகணம் செய்து கொடுக்க வேண்டுமெனச் சலூகஸை அவன் கேட்டான். அதற்குச் சலூகஸ், "நிரம்ப ஸந்தோஷம். அங்ஙனமே செய்வேன். இவ்விவாகத்தினல் நம்மிருவருக்கு முள்ள உறவும் உற்ற நட்பும் நிரந்தரமாக நிலைத்திருக்கும்" என்று கனிவுடன் கூறினன்.

இங்ஙனம் கி. மு. 303-ஆம் யாண்டில் தக்ஷசிலை உடன்படிக்கையில் இருதிறத்தாரும் கையொப்பமிட்டனர்.

அன்டியாகஸும் அவனுடைய துருப்புக்களும் காசுமீரப் பள்ளத்தாக்கினின்று விடுவிக்கப்பெற்றனர். அவர்கள் அவ்விடத்திற் பழகி அவ்வூரினிடத்தும் அவ்வூராரிடத்தும் அபிமானங்கொண்டிருந்ததனால், அவர்களை விட்டுப் பிரிய மனமில்லாமல் மன வருத்தத்தோடு அங்கிருந்து நீங்கினர். சலூகஸ் இப்போது புதிதாக அளித்த நான்கு மாகாணங்களுக்கும் மௌரியத்துருப்புக்கள் போய், அவைகளை வசப்படுத்திக்கொண்டு தக்ஷசிலை ராஜப்பிரதிநிதியின் ஆட்சிக்கு உட்படுத்தின. அபிசாரன், அம்ஷகேசன், மலயகேது, புஷ்கரதத்தன் என்னும் நால்வரும் பெருந்துணை புரிந்ததைப் பாராட்டிச் சந்திரகுப்தன் அவர்கள் கட்டும் கப்பப்பணத்திற் சரிபாதியை 50 வருஷங்களுக்கு 'வஜா' செய்தான்.

இனி நடக்கப்போகும் விவாகத்தைப் பற்றிக் கேள்விப்பட்டுத் தேவப்பிராந்தை மிகக் களிப்புற்றாள். சந்திரகுப்தனை நேரில் பார்த்த பின் அவளுக்கு ஏற்கெனவே உண்டாயிருந்த சந்தோஷம் மிக அதிகரித்தது. சந்திரகுப்தனும் அவளைக் கண்ணுற் கண்டவுடன் மோகக்கடலில் மூழ்கினான்.

பின்பு தேவப்பிராந்தைக்கும் சந்திரகுப்தனுக்கும் விவாகம் தக்ஷசிலா நகரத்திலேயே மிகச்சிறப்பாகவும் சந்தோஷமாகவும் முறைவழுவாது நடைபெற்றது. நிஷேக (சாந்தி) முகூர்த்தத்திற்குத் தேவப்பிராந்தை அன்றிரவு பள்ளியறை புக்கபோது அவளை நோக்கிச் சந்திரகுப்தன், "நம் மாளிகைக்கு வெளிப்புறத்தில் ஜனங்கள், 'வென்றியாளன் வெல்லுண்டான்' எனக் கூவுகின்றார்களே. உன் தந்தையாரை நான் வென்றதை அவர்கள் குறிக்கின்றார்களா, அல்லது சுந்தராங்கியாகிய நீ

என்னை வென்று வசப்படுத்தியதைக் குறிக்கின்றார்களா?" என்று வினவினான்.

அப்போது அவள் ஆர்வத்தோடு அவனை ஆலிங்கனஞ் செய்துகொண்டு, "இரண்டையுமே குறிக்கின்றனர் போலும்" என நவின்று மகிழ்ந்தனள்.

---

## அத்தியாயம் 31

## தக்ஷசிலை வித்யாபரிஷத்து

**த**க்ஷசிலைச் சர்வகலாசாலை மண்டபத்தின் எதிரிலுள்ள விஸ்தாரமான வெளிநிலம் முழுதும் மாவிலை முதலியவைகளினாலும், மலர்வகைகளினாலும், தோரணங்களினாலும், சிறு கொடிச் சீலைகளினாலும் மிக ரம்மியமாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. இந்தியாவின் பற்பல பாகங்களிலிருந்தும் சுற்றுப்புறத்துச் சீமைகளிலிருந்தும் வந்த ஒரு லக்ஷம் வித்துவான்களும், வித்தியார்த்திகளும், புலவர்களும், கவிஞர்களும், மற்றவர்களும் அங்குக் குழுமியிருந்தனர். ஏனெனில், அன்றைத்தினம் தக்ஷசிலைச் சர்வகலைக் கழகத்து மகாபரிஷத் கூடும் தினமாகும். திக்விஜயஞ் செய்து சிறந்த வெற்றிகள் பெற்று தேசங்களை ஜயித்து அப்போதே வந்துள்ள சந்திரகுப்த சக்கரவர்த்தி அந்த மகா ஸதஸில் தலைமைஸ்தானம் வகித்துத் தம் கையாலேயே சம்மானங்களும் சன்னதுகளும் கொடைகளும் அளிக்கப் போகிறான்; பரீக்ஷைகளில் தேறிக் கழகத்தினின்றும் வெளிப் போகிற கல்வியாளருக்குக் கல்விக்களஞ்சியமாகிய சாணக்கியர் நற்போதப் பிரசங்கம் செய்யப்போகிறார்; அத்தினத்திற்கு முன் ஒரு மாதத்திற்கதிகமாகவே சக்கரவர்த்தியினுடைய செலவில் நாள்தோறும் சம்பிரமமான விருந்துச் சாப்பாடு நடந்துகொண்டிருந்தது; புலவர் புலிகளுக்கும் கல்விக் காளைகளுக்கும் சிற்பகலைச் சிங்கங்களுக்கும் ஒருவருக்கொருவர் மும்முரமான வித்யா விவாதங்கள் நடந்து

கொண்டிருந்தன; தக்ஷசிலா நகர சரித்திரத்தில் அவ்வளவு அமளியும் ஆனந்தமும் அதுவரையில் ஒருபோதும் இருந்ததில்லை.

சரியாகக் காலை 8-மணிக்குப் பெரிய பேரிகைகளும் தாரைகளும் சப்திக்கலாயின. சக்கரவர்த்தி அவ்விடத்திற்கு எழுந்தருளினன். அவனுடன் சாணக்கியர், பலகுப்தன், ராஜசேனன், ராஜகுமாரனை பிந்துசாரன் என்பவர்கள் வந்தார்கள். "கருணைவடிவாகிய நம் சந்திரகுப்த மகாராஜர் நீடூழிவாழ்க!" என்னும் ஜயகோஷம் உரத்து ஒருமித்தெழுந்து விண்ணைப் பிளந்தது. கழகத்தலைவரான தர்மரத்தினம் என்பவர் எதிர்கொண்டு அவர்களை வரவேற்று, வேதிகையின் மையத்தில் அமைந்த சிங்காதனத்தின்மீது சக்கரவர்த்தியாரை எழுந்தருளச் செய்தார்; அவருக்குப் பின்புறத்திற் பலகுப்தனையும், சக்ரவர்த்தியின் வலப்புறத்திற் பிந்துசாரனையும், சக்கரவர்த்தியின் இடப்புறத்திற் சாணக்கியரையும் எழுந்தருளச் செய்தனர். அதற்குப்பின் தர்மரத்தினர் சாணக்கியருக்கு இடதுபுறத்தில் தமது ஆசனத்தில் அமர்ந்தனர்.

சபையினரனைவரும் அமளியடங்கி அமைதியுற்றபின், தர்மரத்தினர் எழுந்து, "நமது காரியக்கிரமத்தில் முதல் அம்சம் தேவப்பிரார்த்தனை. வழக்கம்போல நான் பிரார்த்தனை செய்யத்தொடங்குவேன்" என மொழிந்தார். உடனே சபையினரெல்லாரும் எழுந்து, வழக்கமாகவும் பிரஸித்தமாகவுமுள்ள பிரார்த்தனவசனத்தைத் தர்மரத்தினரைப் பின்பற்றி ஓதினர்கள்:—

"ஆயிரம் முகமுடையான் —அவன்
ஆயிரம் ஆயிரம் அருள் விழியான்

ஆயிரம் பதமுடையான்—அவன்
ஆதிஅநாதியாய்த் தனியோளிர்வான்!
கனிவுறும் கருணையினால்—முதற்
காரணன், அகிலமும் அணைத்தருள்வான்!
இனியவன், எல்லையிலான்—புகழ்
இறையவன், நெடியான், தனியோளிர்வான்!''

மேற்கண்டவாறு பிரார்த்தனை செய்தபின், கழகத் தலைவரான தர்மரத்தினர் சபையினரை நோக்கிப் பின் வருமாறு கூறினர்:—

“பாரதவர்ஷத்துப் பற்பல இடங்களினின்றும் பிற நாடுகளினின்றும் விஜயஞ்செய்துள்ள புலமைத் தோழர்களே! இப்புராதன ஸர்வகலாசாலையின் சரித்திரத்தில் இது மிக மிக அபூர்வமான சம்பவம். இன்றைத்தினம் இந்தச் சாம்ராஜ்யத்துச் சக்கரவர்த்தியாரே இச்சதசில் தலைமை பூண்டுள்ளார். இவர் சக்கரவர்த்தி என்னும் பெயர் படைத்திருப்பதேயல்லாமல், மானிடர்களுள் சக்கரவர்த்தி எனத்தக்க புருஷச் சிரேஷ்டராகவும் இருக்கின்றார். இவர் க்ஷத்திரியோத்தமர்; தமது க்ஷத்திரிய வீரத்தை இப் பல யாண்டுகளாகக் காட்டியுள்ளார்; முக்கியமாக, பல பராக்கிரமமும் தீரமும் மிக்க யவனர்களோடு கடைசியில் நடந்த யுத்தத்தில் இவரது க்ஷத்திரியத்தன்மை தெற்றெண விளங்கியது. போரில் இவர் துணிவுற்று முன் பின் பாராது வாள் வீசுவதேயன்றிக் கொடையளிப்பதிலும் முன் பின் பாராது வண்மை வீசும் வள்ளல் பெருமான் ஆவர். நம் மகாராஜர் அவர்கள் நல்கிய ஆதித்திய உபசாரவிசேஷத்தினால் மிக அதிகமாக உண்டு அயர்ந்து அவதிப்படுகிறவர்களுக்கு உற்ற சிகிச்சைகள் செய்வதி

லேயே நமது வைத்தியர்களெல்லாரும் கடந்த 30 நாட்களாக அமர்ந்திருக்கின்றூர்கள். (சிரிப்பு) இன்றைத்தினம் அவரவர்க்கு மகாராஜர் அவர்கள் அளிக்கப்போகிற வெகுமதிகளின் பெருமதியும், ஈயப்போகிற மானியங்களின் மதிப்பும் உங்களுக்கு நன்கு தெரிந்தேயிருக்கும். அவையெல்லாம் இத்தகைய வேந்தருக்கே உற்றவையென்னுமொரு வார்த்தைமாத்திரமே நான் சொல்லவல்லேன். சக்கரவர்த்தியாரும் இளவரசராகிய பிந்துசாரரும் நம்மிடை எழுந்தருளியிருப்பதை மகிழ்வுடன் கொண்டாடி, அவர்களுக்கு நல்லாயுளும் நல்வாழ்வும் நற்சீரும் பெருகிப் பொங்குக வெனப் பிரார்த்திப்போமாக! இச்சர்வகலைச் சங்கத்து மூப்பவையினர் சக்கரவர்த்தியாருக்கு 'ராஜ நரேந்திரர்' என்னும் பட்டத்தையும், இளவரசருக்கு 'அமித்திரகாதர்'[1] என்னும் பட்டத்தையும அளிக்க விரும்புகின்றனர். அவ்விருதுகளை அவர்கள் மனமுவந்து ஏற்க ஒப்பியதற்கு நாம் நன்றிபாராட்டுகின்றோம். இச்சர்வகலாசாலையார் அரசியற் பட்டங்கள் அளிப்பது இதுவே முதன்முறையாகும். அப்பட்டங்களை முதன் முதல் ஏற்பவர்கள் மானிடருள் மதிப்புயர்ந்த மகாபுருஷர்களாவர். நம் அரசரோ மண்ணுலக மாந்தர்களுள் இந்திரனேயாவர்; நம் இளவரசரோ 15 பிராயத்துப்பிள்ளையேயாயினும், கடந்த மகாயுத்தத்தில், சாக்ஷாத் அபிமன்யுவே போன்று, சத்துருக்களோடு பொருது பலரை மாய்த்த மாசூரர்.

"இன்றைக்கு எனக்கு அதிகமான திருப்தியளிக்கும் மற்றொரு விஷயம் உண்டு. அது யாதெனின், இக்கலாசாலை

1. அமித்திரகாதன்—மித்திரரல்லாத சத்துருக்களைக் கொல்பவன்.

யில் ஆதியிற் கல்வி பயின்ற மாணவரும் என் நண்பரும் ஆகிய போற்றற்பாலரான கனம் மிக்க சாணக்கியப் பெருமான் இவ்விடம் எழுந்தருளி உங்களுக்குப் போதமோத மனமிசைந்துள்ளாரென்பதேயாம். அவரைப்பற்றி நான் உங்களுக்குச் சொல்லவேண்டியதே இல்லை. அவரது புலமை அபாரமானது; ஆன்றோரும் அறிஞரும் கலைஞருங் கூடிய இப்பெருங் குழாத்துள் அர்த்த சாஸ்திரப்பரிசுக்காக அவருடன் போட்டி புரியத் துணிவார் எவரும் இலராயினர். ஆதலின், அவர் பெருந்தன்மையோடு ஒதுங்கி நின்று, நடு நிலை யேற்று, இங்கு நிகழ்ந்த கூரிய வித்யாவிவாதங்களை நடத்தினர். அவரது வேத பாரகத்துவம் உலகப்பிரஸித்தமானது; நந்தராஜனது வசப்பட்டிருந்த வேதசாஸ்திராதிகளையும் உலகத்தவர்களையும் விரைவில் மீட்டதனாலும், உள்நாட்டு வில்லங்கங்களையும் வெளிநாட்டுப் படையெழுச்சிகளையும் விதரணையோடும் வென்றியோடும் எதிர்த்து அடக்கி அமர்த்தியதனாலுமே அவருடைய வியவகாரவல்லமை வெளிப்படுகின்றது. அவரது தன்னய மறப்பின் பெருமை நம்மாற் புகழவோ புகலவோ முடியாது. உலகத்துட் சிறந்த பெரிய சாம்ராஜ்யத்துப் பிரதான மந்திரியாயிருக்கும் அவர் வசிக்கும் வீட்டைப் பார்த்தால், நம்முள் தாழ்மையுற்ற சாமானிய புருஷனுடைய வீட்டினும் அது மிகக் கேவலமாயிருக்கின்றது. அநாதியாயுள்ள நமது சநாதன தர்மத்தை நிலைநாட்டுவதே அவரது ஒரு நோக்கம்; அதைச் சாதிக்க உழைப்பதே அவரது வாழ்க்கை வேலை; அத்தகையாரது உபதேசமொழிகள் விலையில்லா மாணிக்கவாசகமேயாகும்.

"இனி இங்கு நடந்த போட்டிப்பரீக்ஷைகளைப்பற்றிச் சிறிது சொல்வோம். இன்றைத்தினம் 128 முதற் பரிசு

கள் அளிக்கின்றோம். இவற்றுள் 64 சாஸ்திரங்களுக்கும், 64 சிற்பக்கலைகளுக்கும் ஆகும். இவைகளைக் குறித்து விவரமாகப் பேசுவதற்குப் போதிய அவகாசம் இல்லை. மனவெழுச்சிக்குரியனவாக நிகழ்ந்த போட்டிகளின் அருமை பெருமைகளைக் குறித்து இங்குள்ளவர் எவருக்கும் திரும்ப ஞாபகப் படுத்தவேண்டியதும் இல்லை. வழக்கம்போல, இவ்வாண்டில் நம் புத்தகங்களிற் பதிவு செய்யப்பட்ட 8 சிறந்த சூத்திர வாக்கியங்களை எடுத்துரைப்பேனாக:

1. **கரணஸாம்யமேவ ஆரோக்யம்.**—உடற்றூய்மை மனத்தூய்மை, அறநேறி (அகக்கரணமும் புறக்கரணங்களும்) நீதி முறைப்படி ஒருமித்திசைந்திருத்தலே ஆரோக்யம்.

இது நம் ஆரோக்கிய சாஸ்திர நிபுணரின் கூற்று.

2. **அஸாத்யஸாதனதயா அமானுஷ்யம்.**—வேறு மனிதர் செய்யமுடியாததைச் செய்வதனாலே ஒருவன் தேவனாவன்.

ஸிந்து தேசத்துப் பிராமணனொருவன் அலெக்சாண்டருக்கு உரைத்தது.

3. **ஸர்வேஜனா: அன்னம் ஆச்ரயந்தி.**—உதரநிமித்தமே உலகம் உழல்கின்றது; வயிற்றைப் பொறுத்ததே வாழ்வு.

இது சாணக்கியரது சொந்த சூத்திரம் (அவையின் ஆர்ப்பு).

4. **பிராணம் வாபி பரித்யஜ்ய மானமேவாபிரக்ஷது.**—மானத்தோடு வாழ், இன்றேல் மானத்தோடு மரி. பிராணத்தினும் மானம் பெரிது.

இது சம்பாஸ் என்னும் அரசனுக்குப் பிராமணர்களின் உபதேசம்.

5. **பிரஜாஸுகமேவ ராஜஸுகம்.**—குடிகளின் சுகமே தன் சுகம், அவர்களின் துக்கமே தன் துக்கம் என்னும் அபேத பாவனையுள்ளவனே அரசன்.

இதுவும் சாணக்கியர் கூற்று.

6. **வித்யாவிக்கிரயம் செய்யாதே.**

இது விஷ்ணுசூரியின் வாக்கியம்.

7. அனந்தாவை **முக்திபத:**—கடவுளை யடையும் வழிகள் எண்ணித்தொலையா. விண்ணிற் பறக்கும்பாதை எத்தனையோ, ஆழ்கடலினடியில் மீன் போம்வழி எத்தனையோ, கடல் புகும் ஆறுகள் எத்தனையோ?

இது தண்டிஸ்வாமியின் வாக்கியம்.

8. உள்ளூர்நீர் ஊறும்வரையிலேயே பிறநாட்டார் பிற நாட்டாராவர்; அரசாகும் வரையிலேயே வென்றியாளர் வென்றியாளராவர்.

இது கல்யாணஸ்வாமியின் வாக்கியம்.

"சாஸ்திர விசாரத்தைப்பற்றிச் சொல்லியதுபோதும். இனிச் சிற்பக்கலைகளைப் பார்ப்போம். ஜால வித்தைக்காரன் சக்கரவர்த்தியாரின் கையினின்று, அவர் விழிப்புற்றிருக் கையிலேயே, அவர் அறியாமல் மோதிரத்தை எடுத்துக் கொண்டதையும், அதே மோதிரத்தைச் சாணக்கியரிட மிருந்து எடுக்க முடியாமற் போனதையுங் கண்டு நான் மிக வியப்புற்றேன். அவ்வண்ணமே நீங்களும் ஆச்சரியப்பட்டி ருப்பீர்கள். க்ஷத்திரியனிடமிருந்து பணம்பெயர்ப்பது எளிதாகும். பிராமணனிடமிருந்து பெயர்ப்பது அரிதா கும் (ஆர்ப்பு). அதே வித்தையாடி பட்டப்பகலில் எல்லார் எதிரிலும் பலஅதிசயமான வேலைகள் செய்து காட்டி னன்: ஆதாரமின்றி ஆகாசத்திற் சயனித்தான். கயிற்றுற் கட்டுண்டு தானகை விடுபட்டு வெளிவந்தான். மூன்று நாள்

தரையின்கீழ்ப் புதையுண்டு பிழைத்தெழுந்தான். பாதரஸமும் பாம்புவிஷமும் விழுங்கினான். அவையன்றி, வேறு சில அரிய செயல்களும் செய்தான்: மூடி முத்திரையிட்ட கடிதங்களிலுள்ள விஷயங்களை வாசித்தான்; என்ன வாசனைத்திரவியம் வேண்டினும் வருவித்தான்; மரித்த பறவையை உயிர்ப்பித்துச் சிறிது நேரம் இருக்கச் செய்தான். இவையும் குறிப்பிடத்தக்கனவே. இவையெல்லாம் கலைஞர்களுக்குத் தெரிந்த சாமானிய விஷயங்களாகலாம். வித்தியாவாதங்களில் அவர்களுக்குண்டான அளவு சிரத்தை இவைகளில் ஒருவேளை இல்லாதிருக்கலாம். ஆயினும், இவைகளுக்கு ஒருவகைப் பெருமை உண்டு.

"அது நிற்க, ஒருமுறை ஒருவரைப் பார்த்த மாத்திரத்திலே அவருடைய அங்க ஆகிருதிச் சாயைகளை உள்ளபடி படம் எழுதிக்காட்டிய சித்திரகாரனையும், தேள்களினாலும் பாம்புகளினாலும் கடியுண்டு தன் மருந்துகளினாலேயே குணப்பட்டுத் தேறிய வைத்தியனையும் பார்த்து நீங்கள் இறும்பூதுற்றிருப்பீர்கள். பெருமை வாய்ந்த நம் சக்கரவர்த்தியார் ஸிம்மாரூடராய்க் கையில் தாமரை மலர் பிடித்திருப்பதாவும், அவர்க்கருகிற் சலூகஸும் ஸிம்மாரூடனாய்க் கையில் திராக்ஷைக் கொத்துப் பிடித்துக்கொண்டிருப்பதாகவும், அரியவேலைப் பாடமைந்த கருங்கற் பதுமைகளை யமைத்துள்ள சிற்பியின் திறமையைக் கண்டு மெச்சாதவர் எவரேனுமுளரோ? நுண்மை ஏற்காத கருங்கல்லுக்கு அத்தகைய பளபளப்பும் பிரகாசமும் பாங்கும் அவன் எங்ஙனம் ஊட்டினனோ அவனுக்கே தெரியும்.

"சிங்கம், புலி, காட்டுப்பன்றி, மதயானை ஆகிய இவைகளை மல்லரங்கத்தில் ஒன்றன் பின்னொன்றாகத் தனியே

நின்று எதிர்த்துப் போராடி அவைகளையெல்லாம் வென்றவனுக்கு அளித்த பரிசு ஏற்றதேயென்பதை எவரும் ஒப்புவீர்கள்.

"அதுபோன்று, சங்கீத வித்துவானுக்களித்த பரிசும் தகுதியானதே என்பீர்கள். அவன் வேறு வேறு விதமான நூறு வாத்தியக் கருவிகளை மிக்க லாகவத்தோடு வாசித்துப் பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் என்னும் பஞ்சபூதங்களும் அவ்வின்னிசை கொண்டொலிக்குமாறு செய்தனன். அவனுக்கு உபாங்கமாகக் கானம் செய்த அவனுடைய மனைவி அவ்வவ்வாத்தியத்வனிகளுக்கு ஏற்றவாறு தன் குரலை இசைத்துப் பாடியது அருமையெனவே விம்மிதங் கொள்வீர்கள்.

"வீரன் செய்த பல காரியங்களும் அற்புதமாகவே இருந்தன. 18 மட்பாண்டங்களை வரிசையாக வைத்துக் கண்ணைக் கட்டிக்கொண்டு 9-ஆம் பாண்டத்தை எய்யச் சொன்னபோது, அவன் சரியாக அதனையே அம்பினால் எய்தான்; வாவியின் அடியிலிட்ட மரக்குண்டை அம்பினால் எய்து விண்ணில் 60 அடி உயரம் கிளம்பச் செய்தான்; பருத்த எருமைக்கடாவின் தலையை ஒரே வீச்சில் வெட்டினான்; அதே வாள்கொண்டு ஒரு மனிதனது முன்கையின் மீது வைத்த எலுமிச்சம்பழத்தை, அவன் கையில் ஒரு கீறலும் விழாமல், துண்டித்தான்.

"கடைசியாக நாம் குறிக்கத்தக்கவன் ஜீவஸித்தியே. அவன் சாரச்சிரேட்டன், ஒற்றர்களுள் ஒற்றன். குறிப்பிட்ட நேரத்திற்குள் நம் இரகசியங்களையெல்லாம் எங்ஙனம் அவன் கண்டுபிடிக்கிறானோ எவரும் சொல்ல முடியவில்லை. அவனது யுக்தியும் யூகையும் நம் புத்திக்கு எட்டவில்லை. அவ்வளவு எளிதாகவே அவன் இயற்கை

யின் இரகசியங்களைக் கண்டுபிடித்து உலகத்திற்கு உப காரம் செய்வானென்று நாம் விரும்புகின்றோம். உதாரண மாக, மழைபெய்விப்பது எங்ஙனம், மானிடர்க்குரிய நோய் நொடிகளைத் தீர்ப்பது எங்ஙனம் என்று அவன் ஊகித்துச் சொல்வானாயின், உலகத்திற்குப் பேருபகாரம் செய்த புண்ணியவானாவான். ஆரியர்களே! நம் கருணைமிக்க சக்கர வர்த்தியாராகிய ராஜநரேந்திரர் இனி அவரவர்க்குரிய பரிசுகளை அளிப்பார்.”

சந்திரகுப்தன் எழுந்து, “ஆரியர்களே! இந்த வித்வத் மகா சபையின் மத்தியில் நான் இருக்க நேர்ந்ததனால், பெருமகிழ்ச்சி கொள்கின்றேன். நான் ஒருபோதும் போர் முனைக்குப் பின்வாங்கவில்லையென்பது உங்களுக்குத் தெரி யும். ஆனால், வித்துவான்கள் செய்யும் வாக்கியார்த் தங்களையும் வாதாநுவாதங்களையும் கேட்டுக் களிப்பதில் (வாக்குப்போரில்) எனக்கு எப்போதும் ஆசை அதிகம். கடந்த ஒருமாதகாலமாக உங்களுக்குள் நிகழ்ந்த அதிசய மான கல்விக்கிளர்ச்சிகளிலும், போட்டிப் பரீக்ஷைகளிலும் சிற்சிலவற்றை அப்போதைக்கப்போது கண்டு மகிழ் வுற்றேன். அவைகளையெல்லாம் உங்கள் கழகத்தலைவரான தர்மரத்தினர் மிக அழகாக எடுத்துரைத்துள்ளார். உங்கள் கழகத்து க்ஷேமத்தை நானும் என் சந்ததியாரும் எந்நாளும் மிக அக்கரையோடு கவனிப்போமென்பது உறுதி. இப்போதே அர்த்த சாஸ்திர கலாசாலை யொன்று இங்கு அமைக்கப்பெறும். இதற்கென 50 கிராமங்களின் வருமானத்தை மானியமாக அளித்துள்ளேன். (ராஜ நரேந்திரர் நீடூழி வாழி! இளவரசர் பிந்துசார அமித்திர காதர் நீடூழி வாழி!’ என்று சபையினர் ஆரவாரம் செய் கின்றனர்.) எனக்கும் உங்கள் இளவரசனுக்கும் நீங்கள்

அன்புடன் கௌரவப் பட்டமளித்ததற்காக நன்றி பாராட்டுகின்றேன். உண்மையில் அவ்விருதுகளை நாங்கள் பெரிதும் மதித்து ஏற்கின்றோம். உங்களிடம் எனக்குள்ள வாஞ்சையைக் காட்டும்பொருட்டு அமித்திரகாதனுக்கு 16 வயது நிரம்பியவுடன் அவனைத் தக்ஷசிலையில் ராஜப்பிரதிநிதியாக நியமிப்பேன் (பேரார்ப்பு).

"இனிப் பரிசுகளை அளிப்பேனாக. போற்றற்பாலரான தர்மரத்தினருக்குக் குலபதி என்னும் விருதும், அவ்விருதைத் தாங்கப் பத்துக்கிராமங்களின் அரசிறையும் மானியமாக அளிக்கின்றேன்" என்றான் சந்திரகுப்தன்.

இறும்பூதும் இன்பமுமுற்றுத் தர்மரத்தினர் எழுந்து நின்றனர். 'ராஜ நரேந்திரர் நீடூழி வாழி!' 'அமித்திரகாதர் நீடூழி வாழி!' 'குலபதி தர்மரத்தினர் நீடூழி வாழி!' என எல்லாரும் ஆர்ப்பரித்தனர். "ராஜநரேந்திரருக்கு வந்தனம். அமித்திரகாதருக்கு வந்தனம். சாணக்கியப் பெருமானுக்குப் பிரணமம். சபையோருக்கு வந்தனம். இன்றைத்தினம் நான் பெற்ற பெரும் பட்டத்திற்குப் போதிய யோக்கியதையைத் தேவர்கள் எனக்கு அருள்வார்களாக" என்றார் தர்மரத்தினர்.

அதன்மீது சக்கரவர்த்தியார் மற்றப் பரிசுகளையும் பட்டங்களையும் அவரவருக்கு அளித்தார். அப்போது ஜனங்கள் மகிழ்வுற்று ஆரவாரித்துக்கொண்டிருந்தார்கள். "கொடுக்கையில், இவனது கண்ணொளி எங்ஙனம் மிளிர்கின்றது! இவன் கொடைப்பிரியமுள்ளவன்; உண்மையான க்ஷத்திரியன்; இழிகுணமும் பேராவலும் மிக்க நந்த ராஜனுக்கும் இவனுக்கும் எவ்வளவு வித்தியாசம்!" என்று அவையினர் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டனர்.

பின்பு சாணக்கியர் பேச எழுந்த போது, அவையினர் செய்த கரகோஷத்தினாற் காது செவிடுபட்டது. "ராஜ நரேந்திரரே, ராஜகுமார பிந்துசார அமித்திரகாதரே, குல பதி தர்மரத்தினரே, அறிஞர்களே, ஆரியர்களே! மாணவனாக நான் கல்விபயின்ற இப்புராதன சர்வகலாசாலையின் ஸம்வத்ஸர பரிஷத்திற் பிரசங்கஞ் செய்யும் பெருமையைப் பெற்றதற்கு நான் மிக மகிழ்வுறுகின்றேன். எனக்கு முன் இம் மகா சபையில் நற்போதம் செய்துள்ள பேரறிவாளர்களையெல்லாம் நினைக்கும்போது என்னையும் அவர்கள் கூட்டத்திற் சேர்க்கத் தெரிந்தெடுத்தீர்களேயென இன்புறுகின்றேன். இப்பெரிய சாம்ராஜ்யத்தின் அமாத்தியனாயிருக்கும் பெருமையினும் இது அரும் பதவி யென மதிக்கின்றேன். தலைமை அமைச்சனாயிருப்பவன் மனத்திற் கினிமையற்ற காரியங்கள் எத்தனையோ செய்யவேண்டியவனாகின்றான். ராஜ்ய விரோதிகளை இரக்கமின்றி வேரோடு களையவேண்டியவனாகின்றான். இது அவசியமேயாயினும், பெரும்பாலும் கொடுஞ்செயலே. ஜனங்களின் க்ஷேமாபிவிருத்திக்கு இடைஞ்சலாயிருக்கிற மூர்க்கர்களையும் வஞ்சகர்களையும் விளைநிலத்துக் களைப்பூண்டுகளெனப் பிடுங்கியெறிந்தொழிக்கவேண்டியவனாகின்றான். ராஜ்யக்கவலைகளினால் தலை வெகு சீக்கிரம் நரைத்துப் போகின்றது. ககனத்தின் மர்மங்களைக் காணும்பொருட்டு இரவுதோறும் நக்ஷத்திரங்களை உற்றுப்பார்ப்பதனாலும் நாள்தோறும் வியாகரணம் ஓதுவதனாலும் அவ்வளவு சீக்கிரத்தில் நரைமூளாது. இந்தச் சந்தர்ப்பத்திலேயே நான் கூச்சமில்லாமல், புதை பொருளேனும் ஆழ்கருத்தேனும் இல்லாமல், நண்பர்களுடன் சரசமாகவும் தாராளமாகவும் பேசுவதற்காகும். இவ்விசேஷ சம்பவத்திற்கேற்ற

பிரசங்கமொன்று நானுகச் செய்யவேண்டுமென்றிருந்தேன். வியவகார லேகபத்திரங்கள் எழுதுவதுபோல எழுமுறை ஒரு வாசனம் எழுதிப் பார்த்தேன். ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு குற்றங்குறை இருக்கக் கண்டேன். ஒன்றிற் கம்பீரம் குறைவாயிருந்தது. மற்றொன்றில் இனிமை போதாதிருந்தது. வேறென்றில் தெளிவு காணப்படவில்லை. பின்னுமொன்றில் முன்பின் தொடர்ச்சியும் வாக்கின் போக்கும் இசையவில்லை. வேறு சிலவற்றில் விஷயபூர்த்தி ஆகவில்லை. முடிவில், நானுக எழுதக்கூடியது ஒன்றுமில்லை; என்ன எழுதினுலும் இத்தன்மையானதொரு சமயத்தில் பெரிய மகானெருவர் உபநிஷத்துக்களிற் கூறியிருப்பதற்கு ஈடாகாது; அவர் அங்கே சொல்லியிருப்பதையே நான் திரும்ப எடுத்து உங்களுக்குச் சொல்வதே உத்தமமான காரியம்; அவருடைய கருத்தை விளக்கச் சிற்சில வார்த்தைகள் அங்கங்கே கூட்டிக்கொள்ளலாம், உதாரணங்கள் காட்டலாம், அவசியமான இடங்களில் விரித்துரைக்கலாமென்று தீர்மானித்தேன். அங்ஙனமே செய்யத் தொடங்குகின்றேன்.

“‘ஸத்யம் வத’ (உண்மை உரை). கல்விக்கும் தர்மத்திற்கும் இதுவே அடிப்படையான ஆதாரம். உங்கள் படிப்பெல்லாம் உண்மையைக் காண்பதற்கான முயற்சியேயாகும். உண்மை என்பதே கடவுள். புராதனமான இந்த விதியை ஒருபோதும் மறவாதீர்கள். நீங்கள் எவ்வாறேனும் க்ஷேமப்படவேண்டுமானுல், உண்மையே பேசவேண்டும்; உங்களுக்கும் உண்மையாயிருக்கவேண்டும், மற்றவர்களுக்கும் உண்மையாயிருக்கவேண்டும். ஆனுல், பார்ப்பதற்கு இந்த வார்த்தை எளிதாயிருக்கின்றதேயன்றி, ஆய்ந்து அளாவின் இது அவ்வளவு எளிதான

காரியமாகாது. மகாபாரதத்திற் சொல்லியபடி, 'மெய்க்கும் பொய்க்கும் உள்ள வித்தியாசத்தைப் பற்பல வியவகாரத் திருஷ்டியாகவும் உள்ளபடி தெரிகிறவனே நல்லறிஞன்.' கௌசிக சத்தியவாதி என்னும் முனிவர் 'உண்மையுரைப்போர்' எனத் தமக்கு வாய்த்துள்ள புகழில் மிதமிஞ்சிப் பிரியங்கொண்டிருந்தார். அதனால், உலகத்தில் தம்மோடு பிறந்துள்ள நிரபராதிகளான பிராணிகளின் உயிரைக்காட்டிலும் தம் புகழ் முக்கியமானதன்றென்னும் உண்மையை உணராராயினர். ஒருநாள் அவர் காட்டில் தவம்புரிந்துகொண்டிருக்கையில், திக்கற்ற வழிப்போக்கனொருவனைப் பத்துப் பன்னிரண்டு கொலையாளிகளான கொள்ளைக்காரர் பின்தொடர்ந்து வரக்கண்டார். அவ்வழிப்போக்கன் ஓடிவந்து, முனிவரண்டையிருந்த புதர்களில் ஒளிந்துகொண்டான். கொள்ளைக்காரர் முனிவரிடம் வந்து, ஓடிவந்த மனிதன் எங்கொளிந்தானென வினவினர். அவர் தமது சத்தியவிரதப் பெருமையைப் பாராட்டிப் பொய்பேச மனங்கொள்ளாதவராய், அவனது ஒளிப்பிடத்தைத் காட்டிக்கொடுத்தார். கொள்ளைக்காரர் அவ்வெளியவனை வெளியில் இழுத்து உடனே கொன்றனர். இக்குற்றத்திற்காகக் கௌசிக சத்தியவாதி, மிக்க ஆர்வத்தோடு ஆயுள் முழுதும் சத்தியத்தையே கடைப்பிடித்தவராயினும், 10,000 வருஷகாலம் நரகவாதனை அனுபவிக்க வேண்டியவராயினர். ஸ்ரீ கிருஷ்ண பகவானை நோக்கி அவர் ஆக்கிரகத்தோடு, "கடவுள் சத்தியஸ்வரூபி; ஆதலால், எது எங்ஙனமாயினும் நான் உண்மையே பேச வேண்டியவனல்லவா? இதற்காக என்னைத் தண்டிப்பானேன்?' என வினவினர். அதற்குக் கிருஷ்ணபகவான், 'ஆயினும், துஷ்டர்களிடமிருந்து நிரபராதிகளைக் கடவுள்

காப்பாற்றக்கூடும். நீரோ, அப்படிக் காப்பாற்ற முடியாதென்பது தெற்றென விளங்குகின்றது. ஆகையால், நீர் மௌனம் சாதித்து, அதனால் வரத்தக்க அபாயத்திற்கு ஆளாயிருக்கவேண்டும்; அன்றேல், தீதற்ற வெண்பொய்யேனும் பேசி அம்மனிதனைக் காப்பாற்றியிருக்கவேண்டும்; பெரும் பாபத்தைத் தவிர்க்கவேண்டி அச்சிறு பாபம் செய்திருக்கலாம். உமது அகம்பாவத்திமிரினால் அச்சாமானிய ஸத்தியத்தை மறந்து, சத்தியஸ்வரூபியான கடவுளுக்குச் சமானரெனப் பிதற்றிக்கொண்டிருக்கிறீர்' எனப் புத்திபுகட்டினார். மறுத்துக் கூறமாட்டாமற் கௌசிகர் வாயை மூடிக்கொண்டார்.

"ஆகையால், ஆரிய நண்பர்களே! போர், காதல், ஸரஸ விநோத கோஷ்டிகள், சூதாட்டம், பரிகாசம், விளையாட்டு, குழந்தைச்சமாதானம் ஆகிய இவைகளில் மெய்ம்மை நோன்பைச் சற்று இளக்கிக்கொள்வது யுக்தமாகும்; *கற்பனைக்கிரந்தரசனையில் அவ்விரதத்தைப் பாராட்டலாகாதெனச் சொல்லவும் வேண்டுமோ? அதனாற் சிறிது பாபம் சம்பவிக்குமென்பது திண்ணமாயினும், பெரும்பாபங்கள் தவிர்க்கப்பெறும். இக்காரணம் பற்றியே

**'ஸத்யம் வத,**
**ந ப்ரூயாத் ஸத்யமப்ரியம்,**
**அப்ரியம் ப்ரூயாத்,**
**நாந்ருதம் ப்ரூயாத்'**

[மெய் பேசு; அனிஷ்டமான மெய் பேசாதே. அனிஷ்டமானதானாலும் சொல்; ஆனால் பொய் சொல்லாதே.]

என்று நம் ஆன்றோர் சாற்றியுள்ளார். உண்மையிற்

* கதைகட்டுதல்.

சொல்லுவோமாயின், மெய் இன்னது பொய் இன்னது எனப் பகுத்தறிவது முனிவர்களுக்கும் கஷ்டமான விஷயமே. அங்ஙன மிருப்பினும், மேற் சொல்லிய விலக்கு வேளைகளைத் தவிர்த்து மற்றெல்லாக் காலங்களிலும் நாம் உண்மையே பேச முயலவேண்டும். ஒரு சமயத்தில் கடவுள் தமது ஸ்வரூபத்தினின்று ஸத்யத்தை எடுத்துத் தராசின் ஒரு தட்டிலும், தம்மில் மற்றப் பாகத்தை மற்றோர் தட்டிலும் இட்டுத் தூக்கினர். ஸத்யம் கனத்து, மற்றத்தட்டு லேசானமையின், ஏற்றமாம் போல் உயர்ந்தது. பின்னரே, 'கடவுள் ஸத்ய ஸ்வரூபி' என்றனர் முனிவர்கள்.

"நீங்கள் ஒவ்வொருவரும் உங்களுங்கள் வருணத்திற்குரிய தர்மத்தை அனுஷ்டியுங்கள். ஒவ்வொருவரும் இன்னாரென்றும் இன்ன குலத்தில் இன்னகாரியத்திற்காகப் பிறந்திருக்கிறோ மென்றும் இனி எங்கே போவோமென்றும் ஆய்ந்துணர்ந்து, தத்தம் ஜாதிக்கு விதிக்கப்பட்டுள்ள காரியங்களைச் செய்து ஆத்மானுபூதி அடைவாராக. ஸ்வதர்மமே ஒருவனுக்கு மேன்மையானது, அதுவே முக்தி பயப்பது; பிறர் தர்மத்தைக் கைக்கொள்வதனால், ஒவ்வொரு நிமிஷமும் அபாயமும் ஆபத்துமே விளையும். ஆசான் கல்வி கற்பிக்கவேண்டும்; நாவிதன் க்ஷெளரம் செய்யவேண்டும்; வீரன் போர்புரியவேண்டும்; அம்பட்டன் ஆசானுனும், ஆசான் அம்பட்டனுனும் வியவகாரப் பயன் அவ்வளவு இனிமையாயிராமற் போகலாம்.

"தினந்தோறும் நீங்கள் வேதபாராயணம் செய்வதை மறவாதீர்கள். உங்களுக்குப் பெருமையும் பலமும் பரகதியும் வேதத்தினாலேயே வாய்க்கும். அதனால் தேவராவீர்கள்.

வேதத்தைப் புறக்கணித்தால் நீங்கள் பலமற்றக் கேவல மானிட ராவீர்கள்.

"கல்வி பயின்று நீங்கள் ஆசானை விட்டு நீங்கும்போது அவருக்குப் பிரியமானது ஏதேனுமொன்றை அவருக்குக் கொடுங்கள். அப்படிப்பட்ட பொருட்கொடையினாலேயே அன்பும் நன்றியும் பெரிதும் விளங்கும். இங்ஙனம் நீங்கள் ஆசான் செய்த பேருபகாரத்திற்கு நன்றி காட்டுவதற் காகும். நீங்கள் கொடுப்பது உங்கள் சக்தியைப் பொறுத்து இருக்கலாம். ஆயினும் ஏதேனுமொன்று கொடுங்கள். போட்ட புல்லையெல்லாம் ஆவலுடன் தின்று பால் கொடாத வறட்டுப் பசுவாகாதீர்கள்.

"வீட்டுக்குத் திரும்பிப் போய், விவாகம் செய்து கொண்டு, இல்லறம் நடத்தி உங்கள் சந்ததி அற்றுப் போகாவண்ணம் பார்த்துக்கொள்ளுங்கள். உலகத்துப் பிராணி வர்க்கங்களுள் நீங்கள் தனித்துத் தோன்றிய துண்டுகளல்ல. நீங்கள் உங்கள் முன்னோர்களின் சந்ததி யார். உங்கள் சந்ததியாருக்கு முன்னோர்கள். வாழ்க்கைத் தொடரை விள்ளாதீர்கள். சந்தான தீபத்தை அவிக்காதீர் கள். நீங்கள் தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் பிதருக் களுக்கும் கடமைப்பட்டிருக்கிறீர்கள். யஜ்ஞ தர்ப்பணாதி களைத் தவறுமற் செய்து தேவர்கடனைத் தீருங்கள். வேத சாஸ்திரங்களை ஓதி ரிஷிகளின் கடனைத் தீருங்கள். உங்களுக்குப் பின் ஒரு குழந்தையேனும் இருக்கும்படி செய்து பிதருக் கடனைத் தீருங்கள்.

"தேவர்களுக்குச் செய்யவேண்டிய வைதிக கர்மாக் களைப் புறக்கணிக்கலாகாது. வேதமோதுவதைப் புறக் கணிக்கலாகாது. பிதருக்களுக்குரிய கர்மாக்களைப் புறக் கணிக்கலாகாது. உங்கள் சொந்த க்ஷேமத்தையும் புறக்

கணிக்கலாகாது. மாதாவைத் தெய்வமெனப் போற்றுங்கள். பிதாவைத் தெய்வமெனப் போற்றுங்கள். ஆசானைத் தெய்வமெனப் போற்றுங்கள். அதிதியைத் தெய்வமெனப் போற்றுங்கள்.

"நிந்தைக்கிடமில்லாத காரியங்களையே நீங்கள் செய்யக் கடவீர்கள்; மற்றக் காரியங்களைச் செய்யலாகாது. நாம் செய்யும் காரியங்களுள் நன்மையானவைகளையே ஆய்ந்துணர்ந்து, அவைகளைப் பின்பற்றுங்கள். மற்றவைகளை மேற்கொள்ளாதொழியுங்கள். நமக்கு மேம்பட்டவர்களான பிராமணர்களாகிய புண்ணிய புருஷர்கள் வந்தவுடன் எழுந்து அவர்களுக்கு உங்கள் ஆசனத்தையளித்துச் சிரமபரிகாரம் செய்து அவர்கள் சொல்லும் அறிவுரைகளைச் சிரத்தையாகவும் விநயமாகவும் பணிவாகவுமிருந்து பயபக்தியோடு கேளுங்கள்.

"தான தர்மங்களை நீங்கள் பக்தி சிரத்தையோடு செய்யவேண்டும். பக்தி சிரத்தையில்லாமல் கொடுக்கலாகாது. ஆனல், ஒன்றும் கொடாதிருப்பதைக் காட்டிலும் பக்தியில்லாமலேனும் கொடுங்கள். உங்கள் சக்திக்குத் தகுந்தபடி தானதருமம் செய்யுங்கள். நீங்கள் பிறருக்குக் கொடாவிட்டால், எல்லாருக்கும் படியளிக்கிற பகவான் உங்களுக்குக் கொடாமற் போவனே என்னும் அச்சத்தினுற் கொடுங்கள். நட்பைப் பாராட்டிக் கொடுங்கள்; உடன்பிறந்தாரென்னும் அநுதாபத்தைப் பாராட்டிக் கொடுங்கள். நம்மைப்போன்ற மற்றவர்கள் தானதருமங்கள் செய்துகொண்டிருக்க நாம் மாத்திரம் பிறருக்குக் கொடாமற் கையை இறுக மூடிக்கொண்டிருக்கிறோமேயென வெட்கப்பட்டேனும் கொடுங்கள்.

"எந்தக் காரியமேனும் செய்யலாமா செய்யலாகாதா என்னும் ஐயம் உங்கள் மனத்தில் நிகழ்ந்தக்கால், தீர்க்கமாகவும் யுக்தமாகவும் ஆலோசிக்கத் தக்கவர்களையும், நிதான புத்தியுடையவர்களையும் பின்பற்றி நடவுங்கள்; உழைப்பாளிகளாகவும் காரியத்திற் கண்ணுள்ளவர்களாகவும் இருப்பவர்கள் செய்வது போலச் செய்யுங்கள். ஸாதுக்களாகவும் கோபதாபங்களினால் அலைப்புறாதவர்களாகவும் இருக்கிறவர்கள் சொல்கிறபடி செய்யுங்கள்; தமக்குரிய தர்மத்திலும் கர்மாக்களிலும் சிரத்தை யுள்ளவர்களைக் கேட்டுச் செய்யுங்கள். இவர்களெல்லாரும் எங்ஙனம் நடந்துகொள்வார்களோ அங்ஙனம் நடந்து கொள்ளுங்கள்.

"குற்றஞ்சாட்டப்பெற்றவர் விஷயத்திலும், தோஷயுக்தர் என்பார் விஷயத்திலும், பாபிகளாவார் விஷயத்திலும் தீர்க்கமாகவும் யுக்தமாகவும் ஆலோசிக்கத் தக்கவர்களையும் நிதானபுத்தியுடையவர்களையும் பின்பற்றி நடவுங்கள்; உழைப்பாளிகளாகவும் காரிய திருஷ்டியுள்ளவர்களாகவும் இருப்பவர்கள் செய்வது போலச் செய்யுங்கள்; ஸாதுக்களாகவும் கோபதாபங்களினால் அலைப்புறாதவர்களாகவும் இருக்கிறவர்கள் சொல்கிறபடி செய்யுங்கள். இவர்கள் அத்தோஷிகளின் விஷயத்தில் எங்ஙனம் நடந்து கொள்கிறார்களோ அங்ஙனம் நடந்துகொள்ளுங்கள்.

"இதுவே தேவாக்ஞை, இதுவே உபதேசம், இதுவே வேதரகசியம், இதுவே நற்போதம், இதுவே ஸந்தேசம்[1].

---

1. ஸந்தேசம்—செய்தி.

இங்ஙனம் பக்திசிரத்தையோடு இது அனுஷ்டிக்கத்தகும். ஓம் சாந்தி, சாந்தி, சாந்தி!"

சாணக்கியர் திரும்பத் தம் ஆசனத்திலமர்ந்தார். தர்ம ரத்தினர் எழுந்து, "ஆரியர்களே! புராதனமாகவும் நமக்கு வழக்கமாகவுமுள்ள ஞானமொழிகளைச் சாணக்கிய பகவான் தமக்கு இயல்பாயுள்ள இனிமையுடனும் தெளிவுடனும் புதுமாதிரியாக விளக்கியெடுத்துச் சொல்லியதை நாமெல்லோரும் கேட்டு இன்புற்றோம். அப்பெரியார் நம்மீது அன்புகூர்ந்து இங்கே எழுந்தருளி இந்தப் பிரசங்கம் செய்ததற்கு அவருக்கு நாம் என்ன கைம்மாறு செய்ய வல்லோம். நமது பிரேமை மிக்க மகாராஜா அவர்களுக்கும் இளவரசருக்கும் பெருநன்றி செலுத்த நாம் எவ்வளவு கடமைப்பட்டிருக்கின்றோமென்பதையும் வாயால் விளக்கமுடியாதன்றோ? முடிவுரைத் தோத்திர மோதிப் பூர்த்தி செய்வோம்" என்று மொழிந்தார். பிரஸித்தமாயுள்ள பிரார்த்தனாவாக்கியங்களை அவர் இங்ஙனம் உச்சரிக்கலானார்:

"அஸதோ மா ஸத் கமய
தமஸோ மா ஜ்யோதிர் கமய
ம்ருத்யோர் மா அம்ருதம் கமய"

[காரிருள் நீக்குக, பேரொளி தருக!
காட்டுக மெய்ப்பொருள், வீழ்த்துக பொய்ம்மை!
ஆருயிர் நாயக! அகற்றுக மரணம்!
அருளுக அமரநன் னிலை!பெரு மானே!]

அவரைப் பின்பற்றிச் சபையினரெல்லாரும் பாடினார்கள்.

பின்பு சக்கரவர்த்தியார் எழுந்து பரிஷத்து முடிவுற்ற தெனச் சாற்றினர். எல்லாரும் கீழ்க்கண்ட மங்கள கீதம் பாடினர்:

எதுவரினும், எதிர்கால நிலைஎதுவா னாலும்,
ஏறுகடல் நிரீர்இமயம் அரன்புரியும் தெய்வ
நிதி,எமது புண்ணியபா ரதபூமி, அணுவும்
நீங்காது தருமநெறி தழுவுகஎந் நாளும்!

---

## அத்தியாயம் 32

## மீகாமன் மீண்டனன்

தாமிரலிப்தியினின்று கப்பற்படை மீகாமனான சமுத்திரநாதன் என்பவன் பாடலிபுரம் வந்துசேர்ந்தான். அவன் இந்தியக்கடற்கரையோரங்களையும் சுற்றுமுற்றுமுள்ள தீவுகளையும் போய்ப் பார்த்து வென்று அவைகளில் மகத சாம்ராஜ்யக் கொடியை நாட்டிவந்தனன். அவன் வருவதற்கு ஒருமாதம் முன்னரே சந்திரகுப்தன், பரீக்ஷைக் காரியங்களைப் பார்த்துக்கொண்டு, தக்ஷசிலையினின்று திரும்பிவந்திருந்தான். சமுத்திரநாதனை வரவேற்பதற்கெனச் சந்திரகுப்தன் விசேஷ ஸதஸ் ஒன்று கூட்டி, அதற்கு ராஜகுமாரனான பிந்துசாரனையும், சாணக்கியரையும், ராக்ஷஸனையும், மற்ற மந்திரிகளையும், பிரபுக்களையும், நகரத்துக் கனவான்களையும் வரவழைத்தான். அந்தச் சதசில் தனது கடற்பிரயாண சம்பந்தமான வர்த்தமானங்களை விரித்துரைக்கும்படி சமுத்திரநாதனுக்குச் சொன்னான். சாந்தவதி, துர்த்தரை, தேவப்பிராந்தை என்னும் ராணிகள் மூவரும் ஒரு திரைக்குப்பின் வந்து அமர்ந்திருந்தார்கள். சமுத்திரநாதன் சொல்லத் தொடங்கினான் :—

"மகாராஜா! தாங்களும் சாணக்கியப்பெருமானும் கட்டளையிட்டவண்ணம் நான் நூறு கப்பல்களுடன் பயணப்பட்டேன். அம்மரக்கலங்கள் இவ்யாத்திரைக்கெனவே நூதனமாக அமைக்கப்பட்டவை. ஆயிரம் மானுமி

களையும், ஆயிரம் வர்த்தகர்களையும், இரண்டு வருஷத்திற்குப் போதுமான உணவுப்பொருள்களையும் கொண்டு போனேன். முதன் முதலாக நாங்கள் போய்ச்சேர்ந்தது கலிங்கப்பட்டணமாகும். அது கலிங்கர்களுடைய கடற்றுறை. அங்கே தசார்ண (ஒட்ர) தேசத்திலிருந்து வந்திருந்த மிக நேர்த்தியான யானைத்தந்தம் கண்டோம். அவ்விடமிருந்து கடல்மார்க்கமாக அதிகக்கிழக்கேயுள்ள சுமத்திரா, சாவகம், மதுரை, பலி முதலான தீவுகளுக்கும் சுவர்ணபூமி (பர்மா), மலயம், சிங்களம் அல்லது நாகத்வீபம் என்னும் தேசங்களுக்கும் அநேக கப்பல்கள் போய்க்கொண்டிருந்தன. சிங்களத்தினின்று அற்புதமான நல்முத்துக்கள் அவ்விடத்திற்கு வந்துகொண்டிருந்தன. கடலடியில் உறையும்பிரும்மாண்ட ஜந்துக்கள், கடற்பாம்புகள், திமிங்கிலங்கள், கடல் நாய்கள், கடல் முபல்கள், கடல் ஓநாய்கள், கடற் பன்றிகள், கடற் பசுக்கள் முதலானவைகளைப்பற்றிக் கலிங்கத்துக் கப்பற்றலைவர்கள் சிலர் எங்களுக்கு அதிசயமான கதைகள் சொன்னார்கள். கலிங்கத்துக் கடலின் (வங்காளக்குடாக்கடலின்) நடுவிலுள்ள தீவுகளைப் பற்றியும் சொன்னார்கள்; அவற்றுள் வடக்கேயுள்ளவை அந்தமான் தீவுகள் எனவும், தெற்கேயுள்ளவை நக்னத்வீபம் எனவும் (நிக்கோபார்ஸ்) பெயர் பெறுமென்றார்கள். இத்தீவுகளிலுள்ள ஆண்களும் பெண்களும் கரிய நிறம் உடையவர்களாய் ஆடையின்றி அம்மணத்தோடிருப்பார்களென்றும், தூரத்தினின்று பார்த்தால் அவர்களைப் பகுத்தறிய முடியாதென்றும், சில இடங்களிலுள்ளவர்கள் நரமாமிசம் பக்ஷிக்கிறார்களெனவும் கேள்விப்பட்டோம்.

“அவ்வதிசயங்களைப் பார்க்கவேண்டுமென்னும் ஆசை எங்களுக்கு உண்டாயிற்று. நாங்கள் கேள்விப்பட்ட விஷ

யங்கள் உண்மையானவையே எனக் கலிங்கத்துத் தலைநகராகிய பார்த்திவபுரத்தில்[1] விசாரித்தறிந்தோம். அத்தீவுகளுக்குப் போகத் தீர்மானித்தோம். கலிங்கத்திலிருந்து வழி காட்டிகள் சிலரை அழைத்துக்கொண்டு வடக்கேயுள்ள தீவுத்தொகுதிக்குப் போனோம். அத்தீவுகள் நாங்கள் கேள்விப்பட்டிருந்தவாறே இருந்தன. வழி காட்டிகளின் மூலமாக நாங்கள் மகாராஜா அவர்களுடைய பிரதாபத்தைப் பிரகடித்தோம். பர்வதத்தின் பின்புறத்தில் சந்திரன் உதயமாக, முன்புறத்தில் வெண்ணமயில் நர்த்தனம் செய்துகொண்டிருக்கும் நம் சக்கரவர்த்தியாரவர்களுடைய மேன்மையான கொடியை நாட்டினோம். வர்ணம் தீட்டப்பெற்ற நமது சாம்ராஜ்யக் கொடியைப் பார்த்து ஆசைப்பட்டு அத்தீவினர் தங்கள் தலைவர்கள் உபயோகித்துக்கொள்ளும்பொருட்டு அம்மாதிரிக் கொடிகள் சில கொடுக்கவேண்டுமெனக் கேட்டார்கள். அங்ஙனமே அவர்களுக்குக் கொடுத்தோம். நிர்வாணிகளாயிருந்த மாதர்களுக்குச் சில ஆடைகளும் கொடுத்தோம். அவ்வஸ்திரங்களை அவர்கள் இடுப்பில் அணிந்துகொள்ளாமல் தலையிற் சுற்றிக்கொண்டு பெருங்களிப்புற்றுக் கூத்தாடினார்கள்!"

அப்போது, "காட்டுமிருண்டிகளும் மர்க்கடங்களும் ஒரே மாதிரியாகும். ஆடை என்பது ஆபரணமென அவர்கள் கொள்கின்றனரேயல்லாது, மானங்காக்கும் வஸ்துவெனக் கருதவில்லை" என்றான் ராக்ஷஸன்.

"நாகரிகமுற்ற நாரிகள் அவர்களினும் அதிகமாக மாறுபட்டிருக்கவில்லையே!" என்றார் சாணக்கியர்.

---

1. இதை மெகாஸ்தனீஸ் என்னும் கிரேக்க யாத்திரிகர் Parthalis எனக் குறித்திருக்கின்றார்.

சமுத்ரநாதன் பின்னுஞ் சொல்வான்: "வடதீவுத் தொகுதியினின்றும் தென்தீவுத் தொகுதிக்குப் போனோம். வடதீவினர் சோம்பேறிகள்; நக்னத்வீபத்தவர்கள் மிகக் கொடியவர்கள். இவ்விடத்தில் நரமாமிசம் புசிப்பவர்கள் சிலரைப் பார்த்தோம். எங்கள் ஆட்களிலொருவன் படுகையிலுள்ள தென்ன மரங்களினின்று தேங்காய் பறிக்கப் போனதும், தீவினர் சிலர் அவனைச் சூழ்ந்து கொன்று, நாங்கள் படைதிரண்டுபோய் அவனை மீட்குமுன்னரே பச்சையாகத் தின்று ஒழித்துவிட்டார்கள். கடைசியில் நாங்கள் அவர்களெல்லாரையும் அடித்து அவர்களில் நூற்றுவரைக் கொன்றோம். வெறுப்புற்று அத்தீவைத் துறந்து நீங்கினோம். ஆனால் அதனை யடுத்து மற்றோர் தீவு இருந்தது. இவ்விரண்டினுக்கும் இடையில் ஒடுங்கிய நீர்க்கால் ஒன்றிருந்தது. திடீரெனத் தோன்றிய புயலினால் அந்த ஜலசந்திக்குள் எங்கள் கப்பல்கள் இழுப்புண்டன. அவைகளில் 18, பாறைகளில் மோதிச் சிதைந்தன. எங்கள் ஆட்களில் 250 பேரும் கொல்லுண்டனர். மீதியான கப்பல் களுள் ஒன்றில் இருந்த பிராமணப்புரோகிதர் ஒருவர், 'நிர் மூடரான அம்மாமிச பக்ஷிணிகள் தங்களுக்குத் தொன்று தொட்டு வந்துள்ள வழக்கத்தைத் தழுவி நடந்துகொண்ட தற்காக அவர்களைக் கொன்றதற்கு நமக்கு இத்தெய்வ தண்டனை வாய்த்தது' என்றார். மாலுமிகளுக்கு ஆக்கிரோசம் மிகப் பொங்கியது. அக்கப்பற்றலைவன் கோபாவேசத்தில் அந்தப் பிராமணரைக் கப்பலினின்றும் நீக்கிக் கரையில் தள்ளிவிட்டு, 'உம் மாமிச பக்ஷிணிகளோடு வாழ்ந்து உம்முடைய பரம்பரைப் பழக்க வழக்கங்களை அனுஷ்டித்துக்கொண்டிரும்' என்றான். அந்தப் பிராமணன் கதறினான். ஓலமிட்டான்; ஆயினும், கப்பல்கள் புறப்பட்டுப் போய் விட்டன."

"அந்தப் பிராமணனது கதி என்னவாயிற்று" என ராக்ஷஸன் வினவினன்.

"அதைத் தெரிந்துகொள்ள நாங்கள் திரும்ப அத் தீவுக்குப் போகவேண்டும்" என்று சமுத்திரநாதன் சொல்லவே, எல்லோரும் நகைத்தார்கள்.

"பின்பு நாங்கள் கிழக்கு நோக்கிச் சுமத்திரா, ஜாவா, மதுரா, பலி, மாதான் (போர்னியொ), சம்பா (அனம்), காம்போஜம் (கம்போடியா) என்னும் இடங்களுக்குப் போனோம். அங்கே விஸ்தாரமான வெளி நிலங்களைக் கண்டோம். அவைகளை வங்கம், கலிங்கம், திராவிடம், சிங்களம், கேரளம், சௌராஷ்டிரம் என்னுமிடங்களிலிருந்து அங்குக் குடியேறியவர்கள் பண்படுத்திப் பயிர் செய்யத் தலைப்பட்டிருந்தார்கள். அந்நாட்டுக்குடிகள் பெரும்பாலார் வியவசாயத்தில் ஊக்கங்கொண்டு அவர்களுக்குத் துணை செய்துகொண்டிருந்தார்கள். அத்தீவுகளில் நரபக்ஷிணிகள் இல்லை. ஆனால், சுமத்திராவிலும் மாதானிலும் உள்நாட்டில் அப்பான்மையினர் சிலர் இருந்தார்கள். மலயத்தில் வெள்ளீயமும் துத்தநாகமும் கனிகளினின்று ஏராளமாக வெட்டியெடுத்துக்கொண்டிருந்தார்கள்; இத்தீவுகளிலெல்லாம் லவங்கப்பட்டை, லவங்கம், ஏலக்காய், கிராம்பு, ஜாதிக்காய் என்னும் இவை மிகுதியாக விளைகின்றன. விசித்திரமான மரமொன்று இருக்கின்றது. அதனின்று ஒருவிதப் பசையுள்ள கெட்டியான பால் பொசிகின்றது. அந்தப் பாலை உலர்த்திப் பந்தாக உருட்டினால், ஜீவ வஸ்துவைப்போல அது மேலுங் கீழும் துள்ளுகின்றது. அந்தப் பந்துகளில் மூன்று கொண்டுவந்திருக்கிறேன்." அங்ஙனம் சொல்லி சமுத்திரநாதன் கிச்சிலிப்பழப் பருமனுள்ள மூன்று ரப்பர்ப் பந்துகளை அவர்களுக்குக்

கொடுத்தான். அவற்றிலொன்றைச் சக்கரவர்த்தி வீசித் தரையில் எறிந்தார். அது மச்சு மேட்டு வரையில் கிளம்பியது. அதைப் பார்த்து அங்கிருந்தவர்களெல்லாரும் அதிசயித்துக் களிகொண்டனர். திரைகளுக்குப் பின்னிருந்து அதைப் பார்த்துக்கொண்டிருந்த தேவப்பிராந்தை, மற்ற ராணிகளுக்குக் காட்டிவிட்டுக் கீழ்நாட்டு அதிசய வஸ்துக்களில் ஒன்றெனத் தன் தந்தை சலூகஸுக்கு அனுப்பக் கருதி, ஒரு பந்தைக் கேட்டு வாங்கிக்கொண்டனள். சாணக்கியர் ஒரு பந்தைக் கம்பீரமாக எடுத்துக் கையால் அமுக்கி மோந்து பார்த்து மெதுவாகத் தரையில் எறிந்தனர். அது பலதடவை மேலே கிளம்பிக் கிளம்பி விழத் தட்டினர். பின்பு, அவர் அதை ராக்ஷஸன் கையிற் கொடுத்தனர். அதைத் தொட்டுப்பார்த்து ராக்ஷஸன், "இது அதிசயமான வஸ்துவே. ஆயினும், சலூகஸுக்கு அனுப்பத் தக்கதோவென்று அனுமானிக்கிறேன்" என்றான்.

அதற்குச் சாணக்கியர், "எந்நாளும் இது அதிசய வஸ்துவாகவே இருக்கும். இனி வருங்காலத்திற் பெரிதும் வழங்கும் வஸ்துவாகும் இது" என்றார்.

சமுத்திரநாதன் மேலும் சொல்லலானான்: "கீழைத் தீவுகளினின்று நாங்கள் மேற்கு நோக்கிச் சிங்களம் போனோம். சிங்களத்தை நாகத்வீபமென்றும் தாமிரபரணியென்றும் சொல்வார்கள். அதன் தலைநகரம் அநுராதபுரம் எனப்படும். அந்நாட்டரசன் எங்களுக்குச் சம்பிரமமாக விருந்தளித்துச் சக்கரவர்த்தியாரைக் குறித்துக் குசலப் பிரசினைகள் பற்பல கேட்டான். அவன் மகதத்திற்கனுப்பிய சிங்கத்தைக் கூட்டைத் திறவாமல் வெளிவிட்ட புத்திமானென மகாராஜா அவர்களை எத்தி எத்திப் புகழ்ந்தான். அவன் மகாராஜா அவர்கள் விஷயத்தில் கொண்டிருக்கும் மதிப்புக்

கும் மரியாதைக்கும் அறிகுறிக் காணிக்கையாகப் பன்னிரண்டு விலையில்லா முத்துச் சரங்களும், $7\frac{1}{2}$ அடி நீளமுள்ள ஒரு ஜதை யானைக்கொம்புகளும் கொடுத்துள்ளான். அக்கொம்பு ஒவ்வொன்றிலும் $2\frac{1}{2}$ படி நீர் கொள்ளும். மகாராஜா அவர்களுக்குள்ள 'தேவானாம் பிரிய' என்னும் விருதுப் பெயரைக் கண்டு அவன் மிக மகிழ்வுற்றான். அது நல்ல விருதாயிருக்கின்றமையின், தன் வமிசத்து அரசர்களும் அவ்விருதைத் தரித்துக் கொள்வதற்கு அனுமதி தரவேண்டுமெனவும் வருந்திக் கேட்டுக்கொண்டிருக்கிறான்." இங்ஙனம் சொல்லிய பின், முத்துச் சரங்களையும் யானைக் கொம்புகளையும் சமுத்திரநாதன் கொடுத்தான். அவைகளைப் பார்த்து எல்லாரும் மிக வியந்தனர். அம்முத்துக்கள் பாண்டிய நாட்டு முத்துக்களினும் மிக நேர்த்தியானவையென்றும், அந்த யானைக்கொம்புகள் கேரளத்துள்ளவைகளினும் கலிங்கத்துள்ளவைகளினும் சிறந்தவை யென்றும் சாணக்கியர் அபிப்பிராயப்பட்டார்.

"சிங்களத் தீவு மிகச் செழிப்புற்றதோ" என ராக்ஷஸன் வினவினன்.

"மிகச் செழிப்புற்றதே! இன்றைக்கு ஓர் இரும்புக் குச்சியை நட்டாலும் நாளைக் காலையில் அது தளிர்த்துப் பூக்குமெனச் சொல்கிறார்கள்" என்று சமுத்திரநாதன் மறுமொழி கூறினன்.

"இத்தகைய முத்துக்களும் யானைக் கொம்புகளும் அங்கே கிடைக்கின்றன வென்றால், அது வளம் மிக்க நாடாக இருக்கவேண்டுமே" என்றார் சாணக்கியர்.

"இவையன்றி, தெங்கும் கமுகும் லக்ஷக்கணக்காக அங்கே பயிராகின்றன" என்றான் சமுத்திரநாதன்.

மற்றும் அவன் சொல்வான்: "இலங்கையினின்று (கொழும்பினின்று) நாங்கள் இந்தியாவின் மேல் கரையோரமாகப் போனோம். முதன் முதலில், குமாரி (கன்னியா குமாரி) என்னுமிடம் வந்தது. அது நம்நாட்டின் தென் கோடி. அவ்விடத்தில் உலகப் பிரஸித்தமான கன்னியா குமாரி ஆலயம் உளது. அம் முனையில் மூன்று சமுத்திரங்களும் ஒன்று கூடுகின்றன. அங்கே சிவபிரானை மணம் புரியக் கருதி ஸ்ரீ குமாரி, அரிசி பருப்பு உளுந்து காய்கறி பதார்த்தங்கள் மற்றுமுள்ள உணவுப் பண்டங்கள் ஆகிய இவைகளை, ஜீவராசிகளுக்கெல்லாம் மணவிருந்தளிக்கும் பொருட்டு, மிகுதியாகச் சேகரித்துவைத்திருந்தனள்; அன்றியும், பிராமணர்களுக்குப் பூரிதக்ஷிணை கொடுக்கும் பொருட்டுப் பொற்சன்னங்களும் குவித்திருந்தாள். சிவபிரானைப் பிரார்த்தித்துக்கொண்டு, தன் எண்ணம் ஈடேற வேண்டுமென மிகக் கடுந்தவம் புரிந்தனள். அடுத்துள்ள பாண்டிய நாட்டு ராஜகுமாரியாகிய மீனாக்ஷியைச் சிவபிரான் ஏற்கெனவே மணந்துகொண்டிருந்ததனால், இவளை ஏற்க இயலாராயினர். ஆதலின், அவர் 'கன்னியாகுமாரி!' (மகளே! நீ கன்னிகையாகவே இருப்பாயாக!) என அவளுக்கு விஷ்ணுமூர்த்தியின் மூலமாக வர்த்தமானம் சொல்லியனுப்பினர். அம்மொழியைக் கேட்டு அவள் துக்கமேலீட்டால் சிலையாகச் சமைந்தனள்; அவள் சேகரித்துவைத்திருந்த உணவுப் பண்டங்களும் மற்றப் பொருள்களும் கல்லாய்த் திரிந்தன. இந்தச் சம்பவத்தினால் அவ்விடத்திற்குக் கன்னியா குமாரி என்னும் பெயர் வழங்கலாயிற்று. அவ்வாலயத்திலுள்ள அழகிய விக்கிரகத்தையும், அக்கடலோரத்தில் அரிசியைப்போலவும், உளுந்தைப்போலவும், பொற்சன்னத்தைப் போலவும், காய்கறிப் பதார்த்தங்

களைப் போலவுமுள்ள மணல்களையும் பார்த்தால், மேற் சொல்லிய கதை உண்மையெனவே தோன்றும். குமாரி என்பது கேரள புத்திரப் பிரதேசத்தில் உள்ளது. அது தமிழகம் அல்லது தமிழ் நாடு என்பதைச் சேர்ந்தது. அந்தப் பிரதேசத்தினின்றே நமது சாணக்கியப் பெருமான் வந்துள்ளார். சேரசோழபாண்டிய ராஜ்யங்கள் மூன்றும் சேர்ந்து 'தமிழகம்' எனப்படும். அவ்விடத்து விஷயங்களெல்லாம் இவ்விடத்திலுள்ளவை போலல்லாமல் மிக வித்தியாசமாக இருக்கின்றன. அங்கே அநேக விநோதமான புதிய வழக்க பழக்கங்கள் நடைபெறுகின்றன. அது நமக்கு வேறு உலகம் போலவே இருக்கின்றது."

"அவ்விடத்து மதாசாரங்களையும் ஜனாசாரங்களையும் சற்று விவரமாகச் சொல். நமது ஆசாரியர் சாணக்கியருடைய ஜன்மபூமியின் வர்ணனையைக் கேட்க விரும்புகிறோம்" என்று சந்திரகுப்தன் சொன்னான்.

"மகாராஜாவின் உத்தரவுப்படியே யாகுக. பாண்டிய நாட்டுக்குக் குமாரர் அல்லது ஆண்டி என்பவர் இஷ்ட தேவதையாய் இருப்பது போலவும், சிவன் அல்லது பசுபதி என்பவர் சோழநாட்டுக்கு இஷ்டதேவதையாக இருப்பது போலவும் குமாரி அல்லது பகவதி என்பவள் சேரநாடு என்னும் கேரளத்திற்கு இஷ்ட தேவதை. நம் நாட்டிலுள்ள காளியைப் போலன்றிக் குமாரி விவாகமாகாதவள். நம் கார்த்திகேயரைப் போலாது குமாரன் வேட்டுவகுலக்கன்னி (வள்ளி)யை மணம் புரிந்துகொண்டவன். நம் சிவன் சங்கார கருத்தாவாக மாத்திரமே இருக்கின்றார்; அவர்களது பசுபதி சிருஷ்டி, ஸ்திதி, சங்காரமென்னு மூன்றுக்கும் கருத்தாவாயிருக்கின்றார். இவ்விடத்துப் பெயர்களே தென்தேசத்தில் வழங்கினபோதிலும், அவ்விடத்தில் அப்

பெயர்களுக்குப் பொருள் வேறாயிருக்கிறது. இது தேவதைகளின் விஷயத்தில் மாத்திரமேயல்லாமல் மானிடரின் விஷயத்திலும் ஆகும்.

"நம்நாட்டில் நிறையணியுடுப்பு உயர்ந்த அந்தஸ்தைக் குறிக்கின்றது; அந்நாட்டில் அது சேவகனுக்குரிய அடையாளமாகும். அவர்களுடைய இழிவான அங்கவுறுப்புக்கள் பிரபுக்களின் கண்ணை யுறுத்தாதிருக்கும்பொருட்டுச் சேவகர்களைத் தலைமுதல் கால்வரையில் உடுப்புப்போட்டிருக்கச் சொல்கிறார்கள்! பிராமணர்களும் பிரபுக்களும் இடுப்பு வேஷ்டி மாத்திரமே தரிக்கிறார்கள். அவ்விடத்துப் பிராமணர்கள் பெரும்பாலும் நம் நாட்டுச் சூத்திரர்களைக் காட்டிலும் கறுத்திருக்கிறார்கள்; ஆனால், புலாலாவது மீனாவது முட்டையாவது தொடுவதில்லை. தமிழகத்துப் பாஷை தமிழ் எனப்படும். அது அகஸ்தியர் என்னும் ஆரிய முனிவரால் அமைக்கப் பெற்றதென்பர். ஆனால், அது கரோஷ்டி, பாரஸீகபாஷை, அல்லது யவனபாஷை என்னுமிவைகளைக் காட்டிலும் ஸம்ஸ்கிருதத்திற்கு முற்றும் மாறான விதமாகவே பேசவும் எழுதவும் பெறுகின்றது.

"தமிழ் நாட்டிலுள்ள சேர சோழபாண்டியமென்னும் ராஜ்யங்களை மூன்று அரசர்கள் ஆள்கின்றனர். தத்தம் நாடுகளை அவர்கள் நன்றாகப் பரிபாலிக்கின்றனரேயல்லாமல், ஒருவரோடொருவர் எப்பொழுதும் சண்டை யிட்டுக் கொண்டிருக்கின்றனர். வியவகாரத்துணையாக அவர்கள் ஐந்து சபைகளை அமைத்துக் கொண்டிருக்கின்றனர்:— 1. குடிப் பிரதிநிதி சபை, 2. வைத்தியர்களின் சபை, 3. சோதிடர்களின் சபை, 4. வைதிகர்களின் சபை, 5. சர்க்கார் அதிகாரிகளும் நீதிபதிகளும் அமைந்த சபை.

கௌரவத்தின் பொருட்டு ராஜாங்கரீதியாக ஏதேனும் காரியம் செய்ய, அல்லது நடப்பிக்க அரசன் விஜயம் செய்யும்போது ராணியும் உடன் அமர்ந்திருப்பது வழக்கம். நிலவரி, கடற்சுங்கம், தரைச்சுங்கம் என்னும் இவையே ராஜாங்கத்துக்கு முக்கிய வருவாய்களாகும். பாண்டிய நாட்டில் அடிமைகளையும் கொலைத்தண்டனை விதிக்கப்பட்டவர்களையும் கடலில் மூழ்கி முத்துக்கள் எடுத்துவரும்படி செய்கிறார்கள். சேர நாட்டில் யானை விற்பனை போலவும், சோழ நாட்டிற் சிற்றரசர் கட்டும் கப்பம் போலவும், பாண்டிய நாட்டில் முத்துக்கள் விலையுயர்ந்த வருமான மூலமாகும்.

"நம் நாட்டில் வழங்குகிற வர்ணாசிரம முறை அங்கே இல்லை. அங்கே பிராமணர், தமிழர், பறையர் என்னும் மூன்று பெரிய வகுப்பினர் உளர். பிராமணர்களுக்கு மரியாதை உண்டு; ஆனால், அவர்கள் தனி இனமாக நிற்கின்றனர். தமிழர்கள் ஐந்து இனங்களாகப் பிரிபட்டிருக்கின்றனர்; 1. தவத்தோர், 2. குடியானவர், 3. இடையர், 4. வீரர், 5. கடலர், தோட்டி. ஸ்திரீகள் ஆடவர்களோடு தாராளமாக நடமாடுகிறார்கள்; இளைஞர்கள் பெரும்பாலும் தாமாகவே விவாக நிச்சயம் செய்துகொள்கிறார்கள்.

"சங்கீதம், நாட்டியம், விழாக்கள், காடைப்போர் (பறவைச் சண்டை) என்பவை அவர்கள் விநோதமாகப் பொழுதுபோக்குவதற்கானவை. நாடகங்கள் பார்க்க அநேகர் போகிறார்கள். அவைகளில் பாட்டும் கூத்தும் அதிகமாயிருக்கும். இந்திரனுக்கும், குமாரனுக்கும், சிவனுக்கும், குமாரிக்கும் உற்சவங்கள் நடத்துகிறார்கள். நமக்குள்ளதுபோலவே அவர்களுக்கும் தேர், கரி, பரி, பதாதி

என்னும் நால்வகைப் படைகளும் உண்டு. ஆனால், அம் மூன்று தமிழ் ராஜ்யங்களுக்கும் நல்ல பலமான கப்பற் படைகள் இருக்கின்றன. முக்கியமாக, பாண்டியரின் கப்பற் படை பிரபலமானது. தாங்கள் 'கடலிறை' என்பதற்கு அறிகுறியாக அவர்கள் மீனக்கொடி போட்டுக்கொண்டிருக் கின்றனர். தரைப்போரில் நேர்ந்த தோல்வியை அவர்கள் பொருட்படுத்தாராயினும், கடற்போரிலும் தோல்வியுற்றால் வருந்தி வாடுவார்கள். அவ்வரசர்கள் தங்களைக் கலியுக ராமர் எனச் சொல்லிக்கொள்கிறார்கள். ராமரைப்போலவே அவர்கள் அப்போதைக்கப்போது இலங்கையின் மீது படையெடுத்து வெற்றியும் பெற்றுள்ளார்கள். சோழர்கள் பதாதிப்படையினாற் பிரபலமுற்றவர்கள். ஆதலின், அவர் கள் புலிக்கொடி போட்டுக்கொண்டிருப்பது அவ்வீரத் திற்கு உரிமையானதே. சேரமன்னர்கள் யானைப் படை யினாற் பிரபலமெய்தியவர்கள். அவர்கள் தங்களுக்குள்ள போர்த்திறற் குறையை வார்த்தைகளினாற் சரிக்கட்டிக் கொள்கிறார்கள். உதாரணமாக, அம்மன்னர்களில் ஒருவன், மேலைக் கணவாய் மலைத் தொடருக்குக் கேரளத்திமயம் எனப் பெயரிட்டு, அதைக் கடந்துபோய், 'இமயம் வென் றேன்' என்று விருதுப்பெயர் சூடினன்.

"அம் மூன்று தமிழ் ராஜ்யங்களிலும் பரிப்படைப் பலம் போதாது. 'குதிரைகளுக்கும் குன்றுகளுக்கும் கொம்பு வைக்காது விட்டது கடவுளின் கருணையே' என்று அவர்கள் சொல்வார்கள். இந்த வழக்கச் சொல்லினாலே, வீரியம் வாய்ந்த குதிரைகளைக் கண்டால் அவர்களுக்குள்ள அச்சம் விளங்குகின்றது. நல்ல உயர் ஜாதி அரபிக் குதிரை களை வரவழைக்கிறார்கள். ஆனால், அவைகளின் மீது ஏறிச் சவாரிசெய்வது அரிது. அங்ஙனம் ஏறினாலும் மிகச் சாவ

தானமாக இருப்பார்கள். அவைகளின் மீது சவாரிசெய்வதற்கு அரபிக்காரர்களையே வழக்கமாக அமர்த்திவைத்திருக்கிறார்கள்.

"ஆனல், அவர்களின் படையாட்கள் தீரம் மிக்கவர்கள். ஒரு சமயத்தில் ஒரு வீரன் படையாளாகப் போருக்குப் போயிருந்தான். போர்முனையினின்றும் அவன் பின்னிட்டு ஓடினனெனக் கேள்வியுற்று அவனுடைய தாய், அவ்வார்த்தை உண்மையாயிருப்பின் அவனுக்குப் பால் கொடுத்து வளர்த்த தன் தனங்களை வெட்டிக் களைவதாகச் சபதம் செய்து கத்தியுங் கையுமாகப் போர்க்களத்திற்குப் போய், அவனது பிணத்தைத் தேடியெடுத்து, அவன் முன்புறத்தில் காயமுற்றிருப்பதைக் கண்டு பெருமகிழ்வுற்றனள்.

"அரசர்கள் தம் படையாட்களினூடே தாராளமாக நடமாடி அங்கங்கே காயமுண்டு கிடப்பவர்களை ஊக்குகிறார்கள். கொற்றவர்க்கும் குடிகளுக்கும் நெருங்கிய உறவு இருக்கின்றது. ஆதலினாலே, நமக்கு விரோதமாகவுங்கூட அவர்கள் தங்கள் ஸ்வதந்திரத்தைப் பாராட்டிப் போர் புரியச் சித்தமாயிருக்கின்றனர். 'ஐயா, தூரத்திலுள்ள சக்கரவர்த்தி ஒருவருடைய மாகாணத்தவர்களா யிருப்பதைக் காட்டிலும், எங்களுக்கென ஓர் அரசனைக்கொண்டு அவன் கீழ் இருப்பதற்கே நாங்கள் விரும்புவோம்' என்று காவிரிப்பூம்பட்டினத்தில் ஒருவன் எனக்குச் சொன்னான்.

"பொதியில் மலையில் நமக்கு வாய்த்த வெற்றிகளுக்குப் பின், தமிழ் அரசர்களிடம் நமது பிரதிஷ்டை அதிகரித்துள்ளது. இப்போது அவர்கள் மௌரியர்களைக் குறித்து மரியாதையாகப் பேசுகிறார்கள். அதோடு, 'இதற்கெல்லாம்

நம் சாணக்கியரும் காரணபூதராவர்' என்று சொல்கிறார்கள்."

"அஃது உண்மையே. தென்தேசத்தைக் குறித்து நீ சொல்லிய விவரங்கள் இனிமையாயிருக்கின்றன" என்று சந்திரகுப்தன் சொன்னான்.

"அவை சரியாகவும் நிஷ்பக்ஷபாதமாகவும் இருக்கின்றன" என்றார் சாணக்கியர்.

"சேர நாடு செல்வம் மிகுந்ததோ?" என ராக்ஷஸன் வினவினன். "ஆம் என்றே சொல்லவேண்டும். அங்கே கருங்காலி, செம்மரம், தேக்கு மரம், சந்தன மரம் முதலான அதிசயமான பெரிய மரங்கள் இருக்கின்றன; தெங்கு, கமுகு, வாழை, பலா முதலிய கனிமரங்கள் பல இருக்கின்றன; மிளகு, திப்பிலி, ஜாதிக்காய், ஏலக்காய், லவங்கப்பட்டை, கிராம்பு முதலான விலையுயர்ந்த சம்பாரத் திரவியங்கள் இருக்கின்றன. கோமேதகம், வைரம் முதலான விலையுயர்ந்த ரத்தினங்கள் இருக்கின்றன; நாட்டுப்புறங்களினின்று வருகிற இரும்பு முதலான பல பண்டங்களில் வியாபாரமும் நடக்கின்றது. பாக்கரை, முசிறி, புறக்காடு, நீலகண்டம், கடலுண்டி, கண்ணனூர் என்னும் பல அழகிய துறைமுகங்கள் இருக்கின்றன. அவ்விடத்து ஜனங்கள் பரிசுத்தர்களாகவும் அழகாகவும் இருக்கிறார்கள். அநேக நேர்த்தியான கடற்கழிகளும் தோப்புக்களும் இருக்கின்றன. பலவகைக் கப்பல்கள் எத்தனையோ அங்கு இருக்கின்றன. அரேபியா முதலான பல தூர தேசங்களுக்கும் அங்கிருந்து பெரிய வியாபாரம் மும்முரமாக நடைபெறுகின்றது.

"கோளத்தினின்று நாங்கள் சத்திய புத்திர தேசத்திற்குப் போனோம். இதன் தலை நகர் மங்களூர் எனப்படும்.

கேரளத்திலுள்ளனபோன்ற வஸ்துக்களே சத்தியபுத்திரத்தில் இருக்கின்றனவாயினும், அவ்வளவு அதிகமாயில்லாமல் அளவிற் குறைவாயிருக்கின்றன. அவ்விடத்துப் பாஷை தமிழன்று. ஆயினும் தமிழ்வர்க்கத்தைச் சேர்ந்ததே. இங்கே ஒரு துறைமுகம் இருக்கின்றது. இத்தேசமே சிறியது.

"பின்பு நாங்கள் கன்னடதேசத்திற்குப் போனோம். கார்வார், ஹொனாவர், பிரஸித்த சிவாலயமுள்ள கோகர்ணம், கன்னடித் தீவுகள், அஞ்சித்வீபம்[1], சசிக்ரீவத் தீவுகள்[2], கோவாத் துறைமுகம் என்னும் இடங்களைப் பார்த்தோம். இந்தக் கடற்கரையில் கடற்கொள்ளைக்காரர்கள் அதிகம். ஆயினும், நமக்கு ஆட்பலம் அதிகம் இருக்கக் கண்டு நம்மை அணுகாமல் அவர்கள் ஒதுங்கிப்போயினர். கேரளத்துக் கடற்கரையிற் கொள்ளைக்காரர் தலைகாட்டா வண்ணம் அவ்வரசரது கப்பற்படை காத்துக்கொண்டிருந்தது. பாண்டியக் கடற்கரையிலும் சோழக் கடற்கரையிலும் அங்ஙனமே அரசர் பாதுகாப்பினால் கொள்ளைக்காரருக்கு இடம் இல்லாதிருந்தது. சேரசோழபாண்டியமென்னும் மூன்றும் 'தக்ஷிணபதம்' என்பதிலொரு தனிப் பகுதியாகும். இம்மூன்றும் அடங்கிய நாட்டிற்குத் தமிழகம் என்று பெயர். இது வடபெண்ணையாற்றுக்கும் வேங்கடமலைக்கும் தெற்கேயுள்ள பிரதேசம். இந்நாட்டிற் பாயும் பெரிய ஆறுகள் வடபெண்ணை, பாலாறு, தென்பெண்ணை, காவேரி, வைகை, தாமிரபர்ணி, பெரியாறு என்பனவாம். கேரளத்திலும் சத்தியபுத்திரநாட்டிலும் உள்ள ஆறுகள்

1. Oyster Islands.
2. Vengurla rocks.

பெரியவையல்ல; ஆனால், மழைக்காலத்தில் அவை வெள்ள மெடுக்கும்.

"கொள்ளைக்காரர் குடிகொண்ட கன்னடக் கடற் கரையினின்று வடக்குநோக்கி நாங்கள் அரணியவாகம்[1] என்னும் மகாலவணம், ரத்தினகிரி, பரிபடனம், மந்தரகிரி, விஜயதுர்க்கம், தேவக்கிருகம், சம்பாவதி என்னும் இடங் களுக்குப் போனோம். இது ஆந்திர தேசத்திற்குள்ள பெரிய (மேற்குக்) கடற்றுறை. தானியகேதம், பிரதிஷ் டானம் என்னும் இரண்டு பெரிய உள்நாட்டுப் பட்டணங் கள் இருந்தன. அவைகளினின்று தானியமும் வஸ்திர வகைகளும் கல்யாண் என்னும் துறைமுகத்திற்கு வந்து கொண்டிருந்தன. ஆந்திரர்களும் தங்கள் கடற்றுறை களிற் கொள்ளைக்காரர்கள் வாராமற் காத்துக்கொள்கிறார்கள்.

"கல்யாண் என்னும் துறையினின்று தபதி நதியின் முகத்துவாரத்திலுள்ள சூரத்துக்கும், நர்மதா நதியின் முகத்துவாரத்திலுள்ள பாருகச்சாவுக்கும் போனோம். அவையிரண்டும் நம் சொந்தத் துறைமுகப்பட்டணங்கள். அங்கிருந்து உஜ்ஜயினிச்குப் போனோம். அதன் பின், நமது ஸம்ஸ்தானத்திலுள்ள சோமநாதம், துவாரகை, மாண்டவி, படாலம் என்னும் இடங்களுச்குப் போனோம். அங்கிருந்து திரும்பி மேலைக்கரை முழுவதையும் சுற்றிக் கொண்டு கீழ்கரைத்துறைமுகங்களுக்கு வந்தோம்.

"பாம்பன் ஜலசந்திவழியாகவும் பாக்கு ஜலசந்தி வழியாகவும் வந்து தனுஷ்கோடியிலும் தலைமன்னாரிலும் ஸ்நானம் செய்து ராமேசுவரத்தில் ஈசுவரசேவை செய் தோம். அவ்விடத்துக் காட்சியும் அனுபவமும் மிக அற்புதம்! அங்குள்ள நுரைத்தொகுதியைப் பார்த்தால்

1. Malwan.

பாற்கடல் என அதனைச் சொல்லுவது சரியேயெனத் தோன்றியது. அங்கிருந்து பாண்டிநாட்டுப் பெருந் துறை முகமாகிய கொற்கைக்குப் போனோம். உலகத்துப் பற்பல தேசங்களினின்றும் கப்பல்கள் வந்து அங்கே நிரம்பி யிருந்தன. செங்கல்லினாலும் மரத்தினாலும் அமைந்த மகத்தான கட்டடங்கள் அதிசயமாக விளங்கின. அவற் றின் உட்புறங்கள் முத்துக்களும் பவழங்களும் பொதியப் பெற்றிருந்தன. அங்கிருந்து மதுரைக்குப் போய் அங் குள்ள பிரஸித்தமான தேவாலயத்தில் வழிபட்டோம்.

"பின்பு காவிரிப்பூம்பட்டினத்திற்குப் போனோம். பாண்டித்துறைமுகத்தைப்போலவே இந்தச் சோழத் துறைமுகமும் சிறப்பாக விளங்கியது; வியாபார முடுக்கும் அதிகமாயிருந்தது. உள்நாட்டிற் புகுந்து சோழரின் தலை நகராகிய உறையூருக்கும் ஆர்க்காட்டுக்கும் போனோம். அவை கம்பீரமான பெரிய கட்டடங்கள்வாய்ந்த நேர்த்தி யான நகரங்களாகும். பின்பு, சோழர்களுடைய வேறு இரண்டு கடற்றுறைகளாகிய நாகபட்டினத்திற்கும் புதுச் சேரிக்கும் போனோம். பாண்டியர்களைக்காட்டிலும் சோழர் களுக்குக் கடற்றுறைகள் அதிகமாயிருப்பினும் சோழர்கள் தரைவீரர்களேயல்லாமல், கடலோடும் திறமை அவ்வள வாக வாய்ந்தவர்க ளல்ல. நம் சைனியங்கள் சில நாளைக்கு முன்னர் ஜயித்த காஞ்சிமாநகருக்குப் போய் அங்கே விசேஷமாகக் கொண்டாடப்படும் காமாக்ஷியம்மன் ஆலயத்தில் தரிசனாதிகள் செய்தோம். முன்னர் இந் நகருக்கு அதிபதியாயிருந்த மோகூர் அரசன் இப்போது அடங்கி மிக அமைதியாக இருக்கின்றான்.

"பின்னர் ஆந்திர தேசத்திலுள்ள மசிலிப்பட்டணம் போனோம். அங்கே நேர்த்தியான பருத்திநூல் வஸ்திரங் கள் அதிகம். இவ்விடத்துப் பாஷை தமிழன்று; கிட்ட

முட்ட நமது பாஷையைப் போன்றது. அவ்விடம் விட்டு அமராவதி, ராஜபுரம், தந்தபுரம் என்னும் பெரிய நகரங்களுக்குப் போனோம். அவ்விடத்து ஜனங்கள் தமிழர்களைப்போலன்றிப் பெரிதும் நம்மைப்போன்றிருந்தனர். மசிலிப்பட்டணத்திலிருந்து கப்பலேறித் தாமிரலிப்திக்குப் போனோம். நாங்கள முதன் முதல் கப்பற்பிரயாணம் தொடங்கியபின், 16 மாதம் 3 நாள் கழித்து அவ்விடத்திற்கு வந்தோம். ஆரம்பத்தில் 1,000 மாலுமிகளுடனும், 1,000 வர்த்தகர்களுடனும் புறப்பட்டோம். தாமிரலிப்திக்கு வந்துசேர்ந்தபோது 345 மாலுமிகளும் 840 வர்த்தகர்களும் மாத்திரமே மீந்தனர். படாலம் முதல் பாடலி[1] வரையில் ஆட்சி செலுத்துகிற மகாராஜர் இனிமேல் எனக்கு என்ன உத்தரவு செய்வரோவெனக் காத்துக்கொண்டிருக்கிறேன்" என்று சமுத்திரநாதன் தன் யாத்திரை விருத்தாந்தத்தை முடிவுகட்டினன்.

"அந்த யாத்திரையில் மடிந்த மாலுமி ஒவ்வொருவனைச் சார்ந்தவர்களுக்கும் ஓராயிரம் பொற்பணங்கள் அளிக்கப்படும். உயிரோடு வந்துள்ள மாலுமி ஒவ்வொருவனுக்கும் ஐந்நூறு பொற்பணங்கள் வழங்கப்படும். ராஜாங்கக் கப்பற்படை பலப்படுத்தப்பெறும். இது முதல் அதில் 1,000 கப்பல்கள் இருக்கக்கடவது. உனக்குச் சிரேஷ்டி என்னும் பட்டம் அளிக்கப்பட்டிருக்கின்றது; இன்னும் பத்து வருஷகாலம் நீயே நமது கப்பற்படைக்கு மீகாமனாவாய். உனக்கு வருஷந்தோறும் 24,000 பொற்பணங்கள் படியளிக்கப்படும்' என்று சந்திரகுப்தன் மொழிந்தான். அரசருக்கு வணங்கி வந்தனம் செய்து சமுத்திரநாதச் சிரேஷ்டி ராஜசதசினின்றும் நீங்கினன்.

---

1. பாடலிபுரம்—Patna.

## அத்தியாயம் 33

## மகதத்தில் மெகாஸ்தனீஸ்

தக்ஷசிலேயில் உடன்படிக்கையானபின், இரண்டு வருஷங் கழித்து, கி. மு. 301-ஆம் ஆண்டில், டாலமி, லைஸிமேகாஸ், காஸண்டர் என்பவர்களுடன் கூடிக் கொண்டு சலூகஸ் இப்ஸாஸ் என்னுமிடத்தில் அன்டிகோனஸையும் அவன் மகன் டெமிட்ரியாஸையும் எதிர்த்துப் பெரும்போர் புரிந்தான். சந்திரகுப்தன் கொடுத்திருந்த யானைகளின் பலத்தினல் அந்த யுத்தம் சலூகஸுக்கு அனுகூலமாயிற்று. அன்டிகோனஸ் தோற்றுப் போனன். அவனைக் கொன்று அவன் வசத்திலிருந்த ராஷ்டிரங்களை அவனுக்குப் போட்டியாயிருந்தவர்கள் பங்கிட்டுக்கொண்டிருந்தார்கள். சலூகஸின் பங்குக்கு ஸிரியா முழுதும், ஆசியாமைனரில் பெரும்பாகமும் கிடைத்தன. அதற்குப்பின் சிறிதுநாளில் கி. மு. 300-ஆம் ஆண்டில் அவன், தன் நண்பனும் தோழனுமாகிய மெகாஸ்தனீஸ் என்பவனைப் பாடலிபுரத்திலுள்ள மௌரிய ஸம்ஸ்தானத்திற்குத் தூதனுக அனுப்பினன். அரகோஷியா மாகாணத்தைச் சந்திரகுப்தனுக்கு ஒப்படைக்கிறவரையில் அங்கே மண்டலாதிகாரியாயிருந்த ஸிபிர்ட்டியாஸ் என்பவனிடம் மெகாஸ்தனீஸ் உத்தியோகத்தில் அமர்ந்திருந்தவன். அவன் பாடலிபுரத்திற்குப் போன போது, அவன் வசமாக அத்திப்பழம், திராக்ஷைகள், ஜலத்தைலம் ('ஆலிவ்' எண்ணெய்), பேரீச்சம்பழம், சில

அருமையான கிரேக்கக் கலசங்கள் ஆகிய இவைகளைக் காணிக்கையாகக் கொடுத்தனுப்பினான். அப்போது தக்ஷ சிலையில் பிந்துசாரன் ராஜப்பிரதிநிதியாக இருந்தான். மெகாஸ்தனீஸ் வரும்வழியில் சந்திரகுப்தனுடைய ராஜ் யத்து எல்லை மாகாணம் அரியானா (ஹரிவனம்) எனப்படும். அதன் எல்லைப்புறத்துப் பட்டணமாகிய ஹெராத்தில்[1] அம் மாகாணத்து மௌரிய மண்டலாதிபதியான ஆரியமித்திரன் என்பவன் மெகாஸ்தனீஸை, பிந்துசாரனது பிரதிநிதியாக வரவேற்று உபசரித்தான். அது முதல் அவன் சந்திரகுப்த னுடைய ராஜ விருந்தினனாக உபசரிக்கப்பெற்றான். பிற நாட்டிலிருந்து வருகிறவர்களைப் பராமரிக்கும் சபைக்குத் தலைவனான விித்தார்த்தகன் என்பவன் மெகாஸ்தனீஸுக்கு வேண்டிய காரியங்களை யெல்லாம் கவனிக்க மேற்கொண் டான். அவனை உதபாண்டபுரத்தின் வழியாக விித்தார்த் தகன் தக்ஷசிலைக்கு அழைத்துக்கொண்டு போனான். விிந்துநதியை அவர்கள் ரம்மியமான ராஜாங்கத் தோணி யில் ஏறிக் கடந்தார்கள். தோணியிற் பொழுதுபோக்குக் காக வாத்திய விசேஷங்கள் அமைக்கப்பட்டிருந்தன. 'விருந் தினரை நாங்கள் வரவேற்கும் முறை இதுவாகும்' என்று விித்தார்த்தகன் சொன்னான். மெகாஸ்தனீஸைத் தக்ஷ சிலையில் பிந்துசாரன் எதிர்கொண்டழைத்து, அவன் பொருட்டுப் பெரிய விருந்தும் அமைத்தான். அதற்குப் பிரதியாக மெகாஸ்தனீஸ் கொடுத்த அத்திப்பழத்தையும் பேரீச்சம்பழத்தையும் புசித்தான். அவை மிக ருசிகரமா யிருக்கின்றன வெனக் கொண்டாடினான்; அவ்வத்திப் பழத்தைப்போன்ற சுவை மிக்க கனி அதுவரையில் தான் தின்றதேயில்லை யெனக் கூறினான்.

1. ஹரிஸ்தலம்.

தக்ஷசிலையினின்று மெகாஸ்தனீஸ் பெரிய ராஜ பாட்டையின் வழியாகப் பாடலிபுரத்திற்குப் போனான். அந்தச் சாலையின் அழகைப் பார்த்து அவன் மிக மகிழ்ந்தான். அதன் அகலம் 48 அடி; இருபுறத்திலும் நிழல் தரு மரங்கள் நிரம்பிநின்றன; 1¼ மைல் தூரத்திற்கு ஒரு குத்துக்கல் நாட்டப்பட்டிருந்தது; 8 மைலுக்கு ஒரு கிணறும் சத்திரமும் அமைக்கப்பட்டிருந்தன. "இந்தச் சாலை மிக நேர்த்தியாக இருக்கிறது; ஆனால், யுத்தகாலத்தில் அபாயகாரணமாக இருக்குமே" என்றான் மெகாஸ்தனீஸ். "சத்துருவின்மீது பாய்வதற்காக இந்தச் சாலை ஏற்பட்டதன்று; சத்துருவைத் தாராளமாகப் பின்பற்றித் தொடர்வதற்கென ஏற்பட்டதாகும்" என்று விஸ்தார்த்தகன் அதற்கு மறுமொழி கூறினான். ஹைடாஸ்பஸ் என்னும் ஜீலம் நதியை மெகாஸ்தனீஸ் கடந்தான். அவனது இரதம் புக்கிபேலா பட்டணத்தைத் தாண்டிச் செல்லுகையில் அலெக்சாண்டர் தர்பார் கூட்டிய இடத்தை அவனுக்கு விஸ்தார்த்தகன் காட்டினான். அலெக்சாண்டர் வீரச் செயல்கள் புரிந்த அவ்விடங்களை அந்தக் கிரேக்கத் தூதன் அக்கரையோடு உற்றுப் பார்த்தான். ஆனால் கிரீஸ் தேசத்திலிருந்து வந்து குடியேறியிருந்தவர்களெல்லாரும் நிகையாவினின்றும் புக்கிபேலாவினின்றும் நீங்கிப் போயினரெனக் கேட்டு விசனித்தான். ஹைபேஸிஸ் என்ற பியாஸ் நதிக்கரையிலுள்ள ராஜகிரி என்னும் பட்டணத்தில் அலெக்சாண்டர் கட்டுவித்த வேதிகைகளை (பலி பீடங்களை) அவன் பார்த்தான். அவை சிதைவுறாமல் நன்னிலையிற் சேமித்துவைக்கப்பட்டிருந்தன. ஆனால் அவை இந்துக்கள் தேவாராதனை செய்யும் இடங்களாக மாற்றிக்கொள்ளப் பட்டிருந்தன. மௌரிய அரசர்களும்

அவ்வழிச் செல்லும்போது அங்கே தெய்வத்தை வழி படுவார்கள். "கிரேக்கர்களும் இந்தியர்களும் வழிபடுதற்குரிய சின்னங்களைச் சேர்த்து அமைத்திருப்பது நல்ல காரியமே. எவர் என்ன வாதிக்கினும் தெய்வங்களெல்லாம் ஒரே மாதிரியானவையே. வழிபடுகிறவர்கள் மாத்திரமே வேறுபடுகிறார்கள். அவர்களும் இனிச் சீக்கிரத்தில் ஒருவரோடொருவர் விருப்புற்றிசைவார்களென நம்புகிறேன்" என்று மெகாஸ்தனீஸ் சொன்னான்.

யமுனைக்கரையிலுள்ள இந்திரப் பிரஸ்தத்திற்கும், அதற்குப் பின் கங்கைக்கரையிலுள்ள ஹஸ்தினாபுரத்திற்கும் அவர்கள் போனார்கள். அத்தலங்களின் சரித்திர விசேஷங்களை எடுத்துச் சொல்ல ஸித்தார்த்தகன் முயன்றான். ஆனால் அவ்விடங்களில் தரைமீது விசேஷமான ஞாபகக் குறிகளேனும், புராதனக் கீர்த்திக் குறிகளேனும் காணாமையின் அவ்விரு நகரங்களின் வரலாற்றில் மெகாஸ்தனீஸ் அக்கரை காட்டவில்லை. அவர்கள் போகும் வழியில் அடுத்தபடியாக இருந்தது ராதாபுரம்.[1] அங்கிருந்து கன்யாகுப்ஜத்திற்கும், அதைவிட்டுக் கங்கா யமுனா சங்கமத்திலுள்ள பிரயாகைக்கும், அங்கிருந்து வாரணாசிக்கும் போனார்கள். இப்பட்டணங்களின் விஷயத்திலும் மெகாஸ்தனீஸ் சிரத்தை கொள்ளமாட்டானென நினைத்து ஸித்தார்த்தகன் இவைகளைப்பற்றிச் சொல்லவில்லை. கடைசியாக அவர்கள் பாடலிபுரம் போனார்கள். தக்ஷசிலையினின்று புறப்பட்ட 6-ஆம் நாள் இங்குவந்து சேர்ந்தார்கள். வழி நெடுகச் சுற்றுப்பக்கங்களில் நெற்பயிர்களும், தினைப் பயிர்களும் நிரம்பிநின்றன; பலவகைக் கனிவர்க்கங்களும் கிழங்குச் செடிகளும் அடர்ந்திருந்தன; மரங்களின் கிளை

1. இதனைக் கிரேக்கர்கள் Rhodopha என்பார்கள்.

கள் எளிதில் வளையக்கூடியவைகளாய் அழகாயிருந்தன. பொதுவாகவே கங்காதீரம் முழுதும் மிகச் செழிப்பாயிருந்தது. இவைகளை யெல்லாங் கண்டு மெகாஸ்தனீஸ் இன்புற்றான். யமுனை, கோமதி, கோகரா, கண்டகி என்பன ஒவ்வொன்றும், தனித்தனியே பெரிய நதியாயிருந்தும், இவையெல்லாம் கங்கைக்கு உபநதியாயிருப்பதையும் பற்பல இடங்களில் அமைந்துள்ள பெரிய ஏரிகளையும் பார்த்து அவன் மிக மகிழ் வெய்தினன். காசியில் கங்கையாறு பெருக்குற்று மூன்று மைல் அகலமாயிருந்தது. கங்கைக்கு மேற்புறத்துள்ள ஜனங்களை வித்தார்த்தகன் கங்கா புத்திரர்[1] எனக் குறிப்பிட்டுவந்தான். இந்தியர்கள் உயரமாக வளர்ந்து, மெல்லிய உடல் வாய்ந்து, சுறுசுறுப்பு மிகுந்து பெருமையோடு கம்பீரமாகத் தோன்றுவதை மெகாஸ்தனீஸ் கண்டான். ஒழுங்கில்லா ஜனக்கும்பல்களோடு பட்டணங்களில் வாழ்வதினும் கிராமாந்தரங்களில் வாழ்வதே அவர்களுக்குப் பிரியமாயிருந்தது. அவர்களிற் பெரும்பாலார் கல்வி வாசனையில்லாதவர்களாயினும், சத்தியத்தையும் தர்மத்தையும் பிடிவாதமாகச் சாதிக்கிறவர்கள். அவர்கள் தம் வார்த்தையை மதிப்பர்; சீட்டு நாட்டு ஆதாரமில்லாமலே, வாக்கு நாணயமாகப் பொன்னையும் விலைமிக்க வஸ்துக்களையும் பிறரிடம் ஒப்பிப்பர். அவர்களுடைய நடையுடை வாழ்க்கை வியவகாரங்களிற் செட்டாகக் குடித்தனம் செய்கிறவர்களெனப் பொதுவாகச் சொல்லலாமாயினும், சிங்காரத்திலும் ஆபரணத்திலும் ஆசை கொண்டவர்கள். செல்வச் சீரியரின், முக்கியமாக ஸ்திரீகளின் ஆடைகள், சிறந்த பொற்சரிகை வேலை செய்யப்பெற்றவை. நவரத்தினங்களினாலும் அவர்கள் அலங்கரித்துக் கொண்டிருந்தார்கள்.

---

1. Gangaridas என மெகாஸ்தனீஸ் குறித்துள்ளான்.

மிக மெல்லிய ரவை சல்லாக்களில் சித்திரப்பூ வேலை செய்த வஸ்திரங்களையும் அவர்கள் அணிந்துகொண்டிருந்தார்கள். அவர்களுக்குப் பின் செல்லும் பரிசாரகர்கள் அவர்களுக்குக் குடைபிடித்துக்கொண்டு போவார்கள். அழகான தோற்றத்தில் அவர்களுக்கு ஆசை அதிகம். தங்களை அழகுபடுத்திக் கொள்வதற்கு என்ன என்ன சாதனங்கள் கிடைக்குமோ அத்தனையும் அவர்கள் கைக்கொள்வார்கள். வீட்டையும் சொத்தையும் பெரும்பாலும் காப்பின்றியே விட்டுப் போவார்கள். ஆயினும், அவை திருட்டுப்போகா. அநாதி காலமாக வந்த சட்டமுறைகளையே அவர்கள் அநுசரித்து வந்தார்கள். அந்தச் சட்டங்கள் என்பவை தர்ம சாஸ்திரம் என்னும் ஸ்மிருதிகளினின்று பிராமணர்கள் ஒப்பிக்கும் வாக்கியங்களாம். அங்கே அடிமைகள் எவரையும் மெகாஸ்தனீஸ் காணவில்லை. அடிமைத்தனமே இந்தியர்களுக்குப் பிரியமில்லை யென்று அவன் கேள்விப்பட்டான். அதற்குக் காரணம்: உத்தம வாழ்க்கையின் லக்ஷணம், ஒருவன் மற்றொருவனிடம் கெஞ்சிக்கொண்டிருக்கலாகாது, மற்றொருவன்மீது ஆதிக்கங்கொண்டாடலாகாது என்பதே இந்தியரின் கொள்கை என அவன் அறிந்தான். அங்குக் கட்டப்பட்டிருந்த கோரிகள் அலங்காரமற்று மிகச் சாமானியமாயிருந்தன. அநேக ஜாதியார் சவங்களைத் தகனம் செய்வது வழக்கமாயிருந்தது. இறந்தவர்களுக்கு அவர்கள் கோரிகள் கட்டுவதேயில்லை. ஜீவதசையில் அவர்கள் செய்த நற்காரியங்களே போதுமான ஞாபகக்குறியென அவர்கள் நினைத்தார்கள். ஜனங்கள் சாமானியமாக உண்பது சோறும் கறியுமே. அவரவருணத்தார் அரிசியினின்றும் இறக்கிய ஒருவகைச் சாராயம் குடிப்பார்கள்: வேறு ஜாதியார் அதைப் பருகுவதில்லை. யஜ்ஞ

யாகாதிகள் செய்யும்போது மாத்திரமே சிறிது மதுபானம் செய்வது வழக்கமென்று மெகாஸ்தனீஸுக்கு ஸித்தார்த்தகன் சொன்னான். இதை யெல்லாம் கேட்டு மெகாஸ்தனீஸ் களித்தனன். ஆனால், ஜனங்கள் தனித்தனியே மறைவாக அன்னம் புசிப்பதையும், போஜன வேளை என்பதொன்று நியதமாயில்லாமல் அவரவர் இஷ்டமான போது உண்பதையும் அவன் கவனித்தான். இது விசித்திர வழக்கமென நினைத்து, "எல்லாரும் ஒருமித்து ஒரேவேளையில் உணவருந்துவதனால் ஒருவருக்கொருவர் அந்நியோன்னியமும் சரசமும் சந்தோஷமும் அதிகமாகுமே" என்று சித்தார்த்தகனுக்கு அவன் சொன்னான். "அத்தகைய விதி ஜனங்களின் ஸ்வதந்திரத்தைப் பெரிதும் குறைக்கும்; இந்தியர்களின் ஆசார முறைக்கு முரணாகும்; அதை ஒப்பாமல் இந்தியர்கள் கலகித்தெழுவார்கள்" என்று ஸித்தார்த்தகன் அவனுக்குச் சொன்னான்.

அவர்கள் பாடலிபுரம் போய்ச் சேர்ந்தவுடன் மெகாஸ்தனீஸை ராஜவிருந்துமாளிகைக்கு அழைத்துக்கொண்டு போய்ச் சித்தார்த்தகன் அவனுக்கு வேண்டிய சௌகரியங்களை அமைத்தான்.

மறுநாட்காலையில் தீபாவளிப் பண்டிகை. அன்றைத் தினம் சக்கரவர்த்தி பெரிய சதசில் உட்கார்ந்து நீராடிக் குடுமியையும் நனைத்துக் கசக்கிக்கொள்வான். அந்தச் சதசுக்குப் பிரபுக்களும் கனவான்களும் பெரிய துரைத்தனதிகாரிகளும் பிறநாட்டு ராயபாரிகளும் வந்திருப்பார்கள்; சாமந்த ராஜர்கள் விலையுயர்ந்த காணிக்கைகளைக் கொணர்ந்து கொடுப்பார்கள். அந்தச் சுபவேளையில் மெகாஸ்தனீஸைச் சக்கரவர்த்தியிடம் கொண்டுபோக வேண்டுமென்றே அவனைச் சித்தார்த்தகன் அப்பெரிய வருஷ விழா

வுக்கு முன்தினம் பாடலிபுரத்திற்கு அழைத்துவந்தான். மறநாட் காலையில் 6 மணிக்கு மெகாஸ்தனீஸைப் படுக்கையினின்றும் எழுப்பி ராஜ சதசுக்கு அழைத்துக் கொண்டு போனார்கள். அப்போது சாமந்த ராஜர்கள், பிரபுக்கள, மந்திரிமார்கள், துரைத்தனதிகாரிகள் இன்னும் பெருந் திரளான ஜனங்கள் ஆகிய எல்லாரும் நீராடிப் புத்தாடையுடுத்துவந்து வீற்றிருந்த சதசின் நடுவில் சக்கரவர்த்தி அமர்ந்திருக்க அவன் கண்டான். கங்கை நீரினல் சக்கரவர்த்திக்கு ஸ்நானம் செய்வித்துக் குடுமியை அலம்பிக்கொண்டிருந்தார்கள். அதற்குப்பின் சாமந்த ராஜர்களும் பிரபுக்களும் அவருக்குக் காணிக்கைகள் கொடுத்து, அவரால் திருப்பிக்கொடுக்கப்பெற்ற இனங்களை ஏற்றுக்கொண்டனர். சலூகஸ் கொடுத்தனுப்பிய காணிக்கைகளை எடுத்துக்கொண்டு மெகாஸ்தனீஸும் போனன். அவைகளைப் பரிவுடன் ஏற்றுச் சந்திரகுப்தன், பிரதியாக இரண்டு பொற்கிண்ணங்கள் கொடுத்தான். கிண்ணங்களின் உட்புறத்தில் மரகதங்கள் இழைக்கப் பெற்றிருந்தன; சலூகஸ் கேட்டிருந்த சில அபூர்வமான வாஜீகரண வஸ்துக்களும் கிண்ணங்களில் வைக்கப்பட்டிருந்தன. சலூகஸைப் பற்றியும், மாஸிடன், எபிரஸ், எகிப்து, கோரிந்து என்னும் இடங்களிலுள்ள மற்றக்கிரேக்க மன்னர்களைப்பற்றியும் சந்திரகுப்தன் பல பல க்ஷேமம் விசாரித்தான். பின்பு, ஸித்தார்த்தகனுடன்போய் அரண்மனையையும் பட்டணத்தையும் மெகாஸ்தனீஸுக்குச் சுற்றிக்காட்டும்படி ராஜஸேனனையும் காத்தியாயனன் என்னும் துவிபாஷியையும் அனுப்பினன். அதற்குப் பிறகு அரசன் மனுதாரர்களின் விண்ணப்பங்களைக் கேட்பதற்கும், அவனுடைய உத்தரவுக்காக நிறுத்திவைக்கப்

பட்டிருந்த வழக்குகளைத் தீர்ப்பதற்கும் நியாய சபைக்குப் போனான்.

மெகாஸ்தனீஸ் அரண்மனையைச் சுற்றிப் பார்த்தான். அதன் அழகையும் சிறப்பையுங் கண்டு அதிசயித்தான். ஒரு மூலையில் சோமயாஜிப் பிராமணரொருவர் பசுபந்த யாகம் செய்துகொண்டிருக்கக் கண்டான். அந்தப் பசுவை (வெள்ளாட்டை), கிரீஸ் தேசத்திற் செய்வதுபோலக் குத்திக் கொல்லாமல் திக்குமுக்காடச் செய்து பிராணன் போக்குவதைப் பார்த்து ஆச்சரியப்பட்டான். அங்ஙனம் செய்வது ஏனென்று காத்தியாயனனை வினவியதற்கு அவன், "அங்கச் சேதம் செய்யப் பெற்றது எதுவும் தேவதைக்கு அர்ப்பிக்கலாகாதென, அம்முறையைக் கைக் கொண்டுள்ளார்" என மறுமொழி கூறினன்.

மெகாஸ்தனீஸ் நியாய சபைக்குள் நுழைந்து பார்த்தான். அங்கே சந்திரகுப்தன் வழக்குகளைப் பொறுமையாக இன்னுங் கேட்டுக்கொண்டே இருந்தான். நான்கு ஆட்கள் மரக்குழவிகளினாற் சக்கரவர்த்தியின் உடம்பைத் தேய்த்து 'மாலீஸ்' செய்துகொண்டிருந்தார்கள். "இங்ஙனம் 'மாலீஸ்' செய்து கொள்வதற்கு அரசன் தனி அறைக்கு ஏன் போவதில்லை?" என மெகாஸ்தனீஸ் வினவ, "வழக்குகளைக் கேட்டுக்கொண்டே இக்காரியமும் நடைபெறுதல் கூடுமாதலால், இதை விட்டுத் தனி அறைக்குப் போவது காலத்தை வீண் போக்குவதாகும்" என்று காத்தியாயனன் பதில் சொன்னான். "வெப்பம் மிகுந்த இவ்வேளையில் அவர் சற்றுப் படுத்து உறங்குவதில்லையோ?" என்று மெகாஸ்தனீஸ் கேட்டான். "ஒருநாளும் அவர் பகலில் துயிலார்" என்று காத்தியாயனன் கூறினான்.

அரண்மனையில் சந்திரகுப்தனுடைய பள்ளியறைகள் எட்டு வேறு வேறு இடங்களில் இருப்பதை மெகாஸ்தனீஸ் பார்த்தான். "இத்தனை பள்ளியறைகள் ஏன்?" என வினவினன். "ஒவ்வொரு நாளும் அரசர் தம் பிராணனுக்கு எவரேனும் செய்யும் சதியைத் தவிர்த்துத் தப்பும் பொருட்டு அவர் நாள்தோறும் வேறு வேறு இடத்தில் மாறி மாறிச் சயனிப்பர்" எனக் காத்தியாயனன் மறுமொழி பகர்ந்தான். "அரசர் தமக்கு ஸ்திரீகளைத் துவாரபாலகராக வைத்துக்கொண்டிருப்பதும், மெய்காவலரும் பணியாட்களுங்கூடப் பெண் பிள்ளைகளாய் இருப்பதும் ஏனோ?" என்றதற்கு, "ஏனெனில், அரசருடன் ராணிமாரும் இருத்தல் கூடும்; ஆதலின், பணியாளரும் காவலாளரும் பெண்டிராயிருப்பதே தகுதியாகும்" எனக் காத்தியாயனன் கூறினன்.

மெகாஸ்தனீஸ் போய்ப் பார்த்ததோர் அறையில் சில மதுக்குப்பிகளும் கிண்ணங்களும் இருந்தன.

"அரசருக்கு மதுபானத்திற் பிரியமோ?"

"இல்லை, இல்லை. எப்போதேனும் சிறிது அருந்துவர். முக்கியமாக விசேஷக் களியாட்டுச் சம்பவம் நிகழும்போதும், பெரியார் எவரேனும் விருந்துக்கு வரும்போதும் கொஞ்சங் கொள்வர். எங்கள் வேந்தர்கள் ஒருபோதும் அதிகமாகக் குடிக்கமாட்டார்கள். வெறிக்கக் குடிப்பது மானக்கேடென்பது எங்கள் கொள்கை. உடனிருக்கும் மெய்காவல் மாது, அரசர் அதிகமாக மதுவுண்ணுமற் காக்கும் கடமையுடையவள். ஒரு சமயத்தில் ஓர் அரசன் வெறிக்கக் குடித்துவிட்டான். குடிவெறியில் உடனிருந்த க்ஷத்திரிய மெய்காவல் மாதைப் பெண்டாளப் பார்த்தான். அங்ஙனம் அவன் தன் சிங்கா

தனத்திற்கும் தன் தேசத்திற்கும் அபகீர்த்தி விளைவிக்க முயன்றதனுல் அம்மாது அவனை அக்கணமே கொன்ருள். அதற்குப்பின் பட்டத்துக்கு வந்த அரசன் அவளைத் தண்டியாமல் அவளுடைய உத்தமக் கொள்கைகளுக்காக மெச்சி அவளை விவாகம் செய்துகொண்டான்" என்று காத்தியாயனன் விவரமுரைத்தான்.

பின்பு, ராணி தேவப்பிராங்கையைப் பார்த்துப் பேசுவதற்கு மெகாஸ்தனீஸ் போனுன். அவளை இளம்பிராயத்திலிருந்து அவனுக்குத் தெரியும்; தன் மகளைப் போலவே அவளைப் பாவித்துக் கொண்டிருந்தான். அவளோடு கிரேக்க பாஷையில் திருப்தியாகச் சம்பாஷித்தான். ராஜசேனனும் ஸித்தார்த்தகனும் காத்தியாயனனும் மரியாதையின் பொருட்டு, அவர்கள் பேசுவது காதிற்படாத தூரத்தில் வெளியே ஒதுங்கி நின்றனர்.

மகாராணிக்குப் பணிவிடை செய்ய மூன்று மாதர்கள் அவளண்டை இருந்தார்கள். அவளுக்கெதிரில் ஒரு திவாசியின்மீது அமர்ந்து மெகாஸ்தனீஸ் பின்வருமாறு சம்பாஷிக்கலானுன்:

**மெகாஸ்தனீஸ்:** மகாராணி! இவ்விடத்தில் உனது வாழ்க்கை எங்ஙனம் இருக்கின்றது?

**தேவப்பிராங்கை:** மிகவும் நன்ருகவே இருக்கின்றது.

**மெகா:** மற்ற ராணிமார் உன்னுடன் சமரசமாகவும் அன்பாகவும் இருக்கிருர்களா?

**தேவ:** ஆமாம். அவர்கள் என்விஷயத்தில் மிக்க அன்புடையவர்கள். என் முகம் கோணுமாறு செய்யப் பெரிதும் அஞ்சுவர். எனக்குச் சிறிதும் ஆயாசம் விளைவியார். எனக்கு ஏலாதது எதுவும் செய்யார். ராணி

சாந்தவதி உயர்குலத்திற் பிறந்த உத்தம ராஜஸ்திரீ. தன்னயம் கருதாத அவ்வளவு பெருமனமுடைய நங்கையரைக் காண்பதரிது! அவளே பட்டத்தரசி. ஆயினும், ராணி துர்த்தரையும் நானும் முதலில் உண்கிறவரையில் அவள் அன்னம் ஏற்காள்; தனக்குக் குழந்தை வேண்டுமென்னும் ஆசை அவளுக்கு உண்டு. ஆனால், அவளுக்குக் குழந்தை பிறக்கவில்லை. மிகச் சீராட்டிச் செல்லங்கொடுத்து அவள் பிந்துசாரனைக் கெடுத்துவிட்டாள். அவன் பிறந்தது முதல் அவளண்டையே அதிகமாக இருப்பனேயன்றி, தாயாகிய துர்த்தரையினண்டை இருந்ததில்லை.

மேகா: அவன் நல்ல நேர்த்தியான ராஜகுமாரன். அவனைத் தக்ஷசிலையிற் கண்டேன். இன்னும் என்ன விசேஷமெனின், நமது அத்திப்பழமும் திராக்ஷை மதுவும் அவனுக்கு இஷ்டமெனத் தெரிகிறது; அன்றியும், சந்திரகுப்தனினும் அவனுக்குக் கிரேக்க பாஷையில் நல்ல பயிற்சி இருக்கின்றது.

தேவ: அந்தப் பெருமை எனக்கே உரியது. அவன் என் கண்மணி. அவன் என் மகனே எனப் பாராட்டுகின்றேன்.

மேகா: அவன் தாயார் எத்தன்மையினள்?

தேவ: உயர்குலத்துதித்தவள்; இந்தியாவிற் பெருந்தன்மை மிக்க குடும்பத்தவள்; ஸாதுஸ்வபாவமுடையவள்; அன்புமிக்கவள்; ஆனால், எளிதிற் சிணுங்குவள். பிந்துசாரனுக்கு எந்த வேளையில் என்ன நேருமோ என்னும் திகில் அவளுக்கு அதிகம் உண்டு. ஸ்திரீகளுள் மிக்க இனிமை வாய்ந்த சரஸி, அன்பியலுள்ளவள் என்பதற்கு ஐயமில்லை.

மேகா: அரசன் எங்ஙனம்?

தேவ: ஓ! அன்புமிக்க பெருந்தன்மையினர். என் தந்தையாரைக் காட்டிலும் பெருமை மிக்கவரெனக் கருதுகின்றேன்.

மேகா: அங்ஙனம் நீ கருதுவது இயல்பேயன்றோ?

தேவ: என் கணவர் என்பதனால் அவ்வாறு சொல்லவில்லை. அவர் சாமர்த்தியம், நிதான புத்தி, தீர்க்காலோசனை, தாக்ஷிண்யம், செய்கை, தெய்வபக்தி யனைத்தும் ஒருங்கே திரண்ட வடிவமாவர். சோர்வுறுச் செய்கையினரென எல்லாருக்கும் அவர் தோன்றுகிறார். ஆனால், தெய்வத்தியானச் சார்பே அவரது மெய்த்தன்மை யென நான் நம்புகின்றேன். அவருக்கு எத்தனையோ சுகபோக சாதனங்கள் இங்கு உளவாயினும், மண்தரைமீது உட்கார்ந்து அந்தணருடன் சல்லாபத்தில் அமர்ந்திருப்பதிலேயே அவருக்கு ஆனந்தம் அதிகம்.

ராணிகளாகிய எங்களிடம் அன்பாயிருக்கின்றார்; தம் மகனையும் குடிமக்களையும் அன்புடனே பாராட்டி ஆதரிக்கின்றார்; ஆனால், இவை யெல்லாவற்றினும், சிற்சில சிலா விக்கிரகங்களின் மீதே அவருக்கு ஆசையும் பாசமும் பக்தியும் பரமார்த்த நம்பிக்கையும் அதிகமென்று நான் சொல்ல வேண்டும். ஒரு நாள் ஒரு சிறு சிவலிங்கத்தினண்டையிருந்து பரவசராகி ஆனந்தக் கண்ணீர் சொரியக் கண்டேன். ராணிகளாகிய எங்களில் எவரிடத்தும் அவர் அவ்வளவு அந்தரங்க அன்பும் ஆனந்தமுங் காட்டியதில்லை. அந்தச் சிவலிங்கத்தினிடத்தே மக்கினராகி மெய்ம்மறந்திருந்தமையின், அவரருகில் நான் சென்றிருந்ததையும் அவர் அறிய மாட்டாராயினர்.

ராணி துர்த்தரை அவர் இருக்கும் அறைக்குள் வந்து அவருக்கும் அச்சிறு கல்லினிற்கும் பணிந்து நமஸ்கரித்

தாள். அது அருமையான சமாதிக் காட்சி நிலையாம். அந்தக் காட்சியைக் காண்பதற்குச் சாந்தவதி ராணியை நான் அழையாதது பெருந்தவறென அவள் என்னை இன்னும் சுட்டிக்காட்டிக் கொண்டிருக்கின்றாள். 'நம் கணவர் ஒரு நாள் நம்மனைவரையும் துறந்து நீங்கித் தண்டி ஸ்வாமியையும் கலனுஸையும் போன்ற அவதூத சந்நியாசியாதல் கூடும்' என அவளிடம் வேடிக்கையாகச் சொன்னேன். அங்ஙனம் நான் மொழிந்ததைக் கேட்டு மனங் குன்றிச் சிந்தை கொள்ளாமல் அவள், பய பக்தியுடன் 'உண்மையில் அவர் தியான சீலரே. ஆத்மாவலோகனத்திற் கெனவே பிறந்துள்ளார்' என்று எழிலுற நவின்றனள். அவருக்குள்ள அத்தன்மையினாலேயே அவளுக்கு அவரிடம் அதிகப் பெருமையும் கௌரவமும் இருக்கின்றன போலும்.

மேகா: கிரீஸ் தேசத்திற்குத் திரும்பிப் போய்ப் பார்க்கவேண்டுமென்னும் ஆசை உனக்கில்லையா?

தேவ: போக வேண்டியதே, பழகிய முகங்களையும் ஸ்தலங்களையும் பார்க்க விருப்பமுண்டு. ஆனால், நான் இந்தியப் பெண்ணாகிவிட்டேன். மாய மயமான இவ்விந்தியாவில் இருப்புண்டு நான் பழகிப் போனேன். இப்போது கிரேக்கத்தாலத்தினும் வாழை இலையே எனக்கு இனிமை. அத்தியினும் ஆமிரமே அருஞ்சுவை. ஜிதத்தைலத்தினும் கேளித்தைலமே குணம். சலூகவினும் சந்திரகுப்தரே சிறந்தவர். குளிரினும் வெப்பமே விருப்பம். அசுவத்தினும் பசுவே பிரியம். கோழியினும் மயிலே மனோஹரம். வானம்பாடியினும் கோகிலக்குரலே குதூஹலம். ஒலிம்பஸினும் மேருவே தேவரிருக்கை. நான் பிறந்த ஊரினும் பாடலிபுரமே பாவனமானது. (என மொழிந்து கண்ணீர் உதிர்த்தனள்).

மேகா: (கண்ணில் நீர்ததும்ப) டயோபான்டீஸ்! கிரீஸ்தேசம் உன்னை இழந்துவிட்டதா?

தேவ: (கண்ணீரைத் துடைத்துக் கொண்டு) ஆம், நான் இனி டயோபான்டீஸ் அல்லேன், தேவப்பிராங் தையாயினேன்.

மேகா: கிரீஸ்தேசத்துச் சிறு தீவுகளைக் கண்டவுடனே அவை உன்மனத்தைக் கவர்ந்து திரும்ப மயக்கிவிடும்.

தேவா: ஒரு நிமிஷநேரம் அங்ஙனம் மயக்குமோ என்னவோ? உடனே என் மனம் இந்திய நன்னிலக்காட்சி யையே திரும்ப நாடி வருந்தும்.

மேகா: இந்த நாட்டைப் பற்றிய விஷயங்கள் இன்னும் சொல். இந்நாட்டைக் குறித்து ஒரு புத்தகம் எழுதிக் கொண்டிருக்கிறேன்.

தேவ: அதற்கு என்னினும் காத்தியாயனன் தகுதி யானவன். இந்திய பாஷைகளிலும் பரிசயமுள்ளவன். அவ னுக்குக் கிரேக்கப் பாஷைகளிலும் நல்ல பழக்கம் உண்டு. எந்த விஷயத்தைப்பற்றியும் அவன் வேண்டியவளவு விசேஷ மெடுத்துக் கூறவல்லான். அவன்சொல்வது அசாதாரண மாகத் தோன்றினும் அதிசயிக்கத் தக்கது. விருந்து மாளி கைக்கு வந்து நீர் கேட்கிறவற்றிற்கெல்லாம் விவரம் உரைக்கு மாறு அவனுக்கு உத்தரவு செய்கிறேன்.

தேவ: காத்தியாயனா! மெகாஸ்தனீஸிடம் போய், அவர் என்னென்ன சங்கதிகள் கேட்கிறாரோ அவைகளுக் கெல்லாம் ஏற்றபடி விவரங்கள் சொல்.

காத்தியாயனன்: மகாராணி! சந்தோஷமாக அவ் வாறே செய்வேன். எனக்குத் தெரிந்தவற்றை யெல்லாம் அவருக்குச் சொல்கிறேன். எனக்குத் தெரியாதவைகளையும் விசாரித்துத் தெரிந்து சொல்கிறேன்.

தேவ: பேஷ்!

அதன்பின்பு ஸித்தார்த்தகனும் ராஜசேனனும் காத்தியாயனனும் மெகாஸ்தனீஸை அழைத்துக்கொண்டு நகரத்துப் பெரிய சிறைச்சாலைக்குப் போனார்கள். அங்கே ஒருவன் ஒரு பெண்ணைத் துராகிருதமாக அடித்துத் தாக்கினானென்று கெட்டியான செங்கல்லினால் அவன் தலையைத் தேய்த்துக் கொண்டிருந்தார்கள்; மற்றொருவனுடைய கண்ணைப் பிடுங்கிய குற்றத்திற்காக ஒருவனுடைய கையை நறுக்கிக் கொண்டிருந்தார்கள்; பிரஸித்தி பெற்ற சிற்பியொருவனுடைய கைகள் இரண்டையும் வெட்டினானென்று ஒருவன் தூக்குத்தண்டனை பெற்று மரணத்திற்காகக் காத்துக் கொண்டிருந்தான்; ஒரு தெருவில் ஒரு வீட்டில் தீப்பிடித்தது. அந்தத் தெருவிலுள்ள இருவர், திடசரீரம் வாய்ந்தவர்கள், நகரசபைச் சட்டத்தின்படி தீயை அவிக்கத் துணைப்பட்டிருக்கவேண்டும். அங்ஙனம் துணைப்படாத குற்றத்திற்காக அவர்கள் இருவரையும் சவுக்கினால் அடித்துக்கொண்டிருந்தார்கள்.

சிறை அதிகாரியாகிய விஜயபாலனை நோக்கி, "இவர்களுக்கெல்லாம் தண்டனை விதித்தது யார்?" என மெகாஸ்தனீஸ் வினவினான். "தீ அவிக்கத் துணை செய்யாதவர்களையும், செங்கல்லினாற் சித்திரவதை செய்யப்பெற்றவனையும் நகரத்து நியாயாதிகாரிகள் தண்டித்தார்கள். கையை வெட்டினவனையும், மரணதண்டனை ஏற்றவனையும் மேல் நீதி நிலயத்தார் சிக்ஷித்தார்கள். அந்தத் தண்டனைகளை நிறைவேற்று முன் அவைகளை அரசர் உறுதிப்படுத்த வேண்டும்" என்றான் விஜயபாலன்.

"இங்கே களவுகள் அதிகமாக நடக்கின்றனவோ?" என மெகாஸ்தனீஸ் வினவினான். "இல்லை, இல்லை. நான்கு

லக்ஷம் ஜனங்களடங்கிய இம் மகாபட்டணத்திற்குள் ஏறக்குறைய 200 பணங்கள் திருட்டுப்போகக் கூடும்" என்றான் விஜயபாலன். "அதாவது ஏறக்குறைய 200 டிராக்மா[1] ஆகும்" என்றான் காத்தியாயனன்.

பிறகு மெகாஸ்தனீஸைப் பௌரமந்திரத்திற்கும் நகரசபை மண்டபத்திற்கும் அழைத்துக்கொண்டு போனார்கள். அங்கே ஆறு ஆயங்கள் வியவகரித்துக் கொண்டிருந்தன. ஒவ்வோர் ஆயத்திலும் ஐந்து அங்கத்தினர்கள் இருந்தார்கள். அந்தச் சபையார் கைத்தொழிற் கலைகள், பிற நாட்டார், ஜனன மரணம், வர்த்தக வியாபாரம், புதிய கைவினைப் பண்டங்களும் பழையனவும், நகரத்திற்குள் விற்பனையாகும் வஸ்துக்களின் விற்பனை விலைத் தொகையில் பத்தில் ஒரு பங்கு வரி வசூல் செய்தல் என்னும் இக்காரியங்களை முறையே தனித்தனியே கவனித்துக் கொண்டிருந்தார்கள். இந்த ஏற்பாட்டைப் பார்த்து மெகாஸ்தனீஸ் மிகச் சந்தோஷித்தான். அந்தச் சபையார் எல்லாருமாகச் சேர்ந்து பொதுக் கட்டடங்களையும் ரஸ்தாக்களையும் பராமரித்துக் கொண்டிருந்தார்கள், விலைத் திட்டங்கள் அமைப்பதும், சந்தைகளைக் கவனிப்பதும் அவர்களுடைய பொறுப்பே; துறைமுகங்களையும் தேவாலயங்களையும் அவர்களே பராமரித்து வந்தார்கள்.

அதற்கு மேல், அவனைப் போர் இலாகாக் கச்சேரிக்கு அழைத்துக்கொண்டு போனார்கள். அவ்விடத்தும் ஆறு ஆயங்கள் வேலை செய்து கொண்டிருந்தன. ஒவ்வோர் ஆயத்திலும் ஐந்து அங்கத்தினர்கள் இருந்தார்கள். அவ்வாயம் ஒவ்வொன்றும் முறையே, கப்பற்படைத் தலை

1. டிராக்மா=10 பென்னி = சுமார் 10 அணா.

வன், ரஸ்து இலாகா மேற்பார்வையாளர் ஆகிய இவர்களுக்கும், பதாதிப் படையினர், குதிரைப் படையினர், தேர்ப் படையினர், யானைப் படையினர் ஆகிய இவர்களுக்கும் துணை செய்வதாகும்.

யானைகளின் விஷயத்தில் அவன் மிக்க அக்கரை கொண்டான். அவைகளைப் பிடிக்கும் வகை விவரத்தை அவனுக்குச் சொன்னார்கள். போர்க்காலத்தில் ஒரு போர் யானையின்மீது மாவுத்தன் ஒருவனும், மூன்று யானைப் போர் வீரர்களும் எங்ஙனம் உட்கார்ந்திருப்பார்களெனக் காட்டினார்கள். வீரியம் மிக்க நான்கு குதிரைகள் பூட்டிய தேர்களை அனுபவம் மிக்க சாரதிகள் அதிவேகமாக எங்ஙனம் சுழன்று சுழன்று ஓட்டி வருவார்களெனவும் காட்டினார்கள்.

சைனியத்தில் பற்பல அந்தஸ்துக்களில் வேலை செய்கிறவர்களுக்கும் ரொக்கச் சம்பளமே கொடுக்கிறார்களென்றும், குதிரைகளும் யானைகளும் ரதங்களும் போராயுதங்களும் எல்லாம் சர்க்காருக்குச் சொந்தமானவை; வீரன் எவனேயேனும் வேலையினின்று நீக்கினால் அவன் தன் வசத்தில் உள்ளவைகளைத் திரும்பச் சர்க்காருக்கு ஒப்பித்துவிடவேண்டும் என்னும் ஏற்பாட்டையும் மெகாஸ்தனீஸ் விசாரித்துத் தெரிந்துகொண்டான். குடித்தனக்காரன் எவனும் போர்க்கரியேனும் போர்ப்பரியேனும் வைத்திருக்கக் கூடாதென்னும் விதி வழங்குகிறதெனவும் அவனுக்குச் சொன்னார்கள்.

பிறகு, அவனை நகரத்திலுள்ள மற்றக் காரியாலயங்களுக்கு அழைத்துக்கொண்டு போனார்கள். அங்கே சந்தை

கள், கால்வாய்கள், சுங்கங்கள், 'ரகதாரிகள்'[1], ஜனத் தொகைக் கணக்கு[2], அளவைப் படிகள், நிறுத்தலெடைக் கற்கள் ஆகிய இவையெல்லாம் எங்ஙனம் நிர்வகிக்கப்படுகின் றனவென்பதை அவன் ஆய்ந்து பார்த்தான். கால்வாய்களி னின்று நீர் பிரித்துவிடும் விதத்தையும், நிலங்களை அளந்து நிர்ணயிக்கும் முறையையும், வரி விதிக்கும் விதத்தையும் பார்த்து அவன் பெரிதும் கொண்டாடினன். ஒரு நாளெல் லாம் ஊக்கமாக அலைந்து திரிந்து இனிய காட்சிகளைக் கண்டு களித்து அந்தி பழுத்தபின் விருந்து மந்திரத் திற்குத் திரும்பி வந்தான்.

மறுநாள் மெகாஸ்தனீஸ் கணக்குச் சம்பிரதி[3]யின் காரியாலயத்துக்குப் போனன். அங்கே கணக்கர்களும் சோதகர்[4]களும் வரிசை வரிசையாகப் படைபோல் உட்கார்ந் திருந்ததைப் பார்த்து அயர்ந்து போனன். பிரதான வசூ லதிகாரி அனுப்பியிருந்த சென்ற வருஷத்து ராஜாங்கக் கணக்குகளை அவர்கள் ஆராய்ந்துகொண்டிருந்தார்கள்.

மெகாஸ்தனீஸ்: உங்களுக்கு எத்தனை நாள் கொண் டது ஒரு வருஷம்?

சம்பிரதி: முந்நூற்றைம்பத்துநான்கு.

மெகா: கணக்கு எப்போது முடிவு கட்டுகிறீர்கள்?

சம்: ஆஷாட மாதத்துக் கடைசித் தேதியில், வியுஷ்ட[5]த்திற் கணக்குச் சோதனை தொடங்குவோம்.

---

1. Passports.
2. Census.
3. Superintendent of Accounts.
4. Auditors.
5. About the 15th of August.

அதுவே எங்கள் வருஷாதியாகும். அது சிராவண[1] மாதத்து முதல் தேதி.

மேகா: மாகாணங்களின் கணக்குகளை எப்படித் தணிக்கை[2] செய்கிறீர்கள்?

சம்: பிரவாஸ[3]க் கணக்கர்களும் சோதகர்களும் உண்டு.

மேகா: காலதாமதமாகாது எங்ஙனம் தடுக்கின்றீர்கள்?

சம்: உத்திரவாதியா யிருக்கிற கணக்கனுக்கும் சோதகனுக்கும் தாமதப்படுத்திய மாதம் ஒன்றுக்கு 200 பணம் அபராதம் விதிக்கின்றோம்.

மேகா: உங்கள் அதிகாரிகளுக்கு என்ன சம்பளம் கொடுக்கிறீர்கள்?

சம்: அது எத்தனையோ படித்தரங்களாக இருக்கின்றது. ரித்விக்கு, ராஜகுரு, புரோகிதர், மந்திரி, படைத்தலைவன், இளவரசர், அரசரது மாதா, ராணி ஆகிய இவர்கள் ஒவ்வொருவருக்கும் வருஷம் ஒன்றுக்கு 48,000 பணம்.

பரபத்தியக்காரன், குடும்ப விசாரணைக்காரன், பிரதேஸ்திரி, ராஜுகன், சந்நிதாத்திரி என்பவர் ஒவ்வொருவருக்கும் 24,000 பணம்.

நகரத்துச் மேற்பார்வையாளர், வியவகார இலாகாவின் தலைவர்கள், எல்லைப் பராமரிப்புக்காரர்கள் என்னும் இவர்கள் ஒவ்வொருவருக்கும் 12,000 பணம்.

---

1. About the 16th of August.
2. Checking.
3. Travelling.

யானைப்படைத் தலைவர்களுக்கும் தேர்ப்படைத் தலைவர்களுக்கும் தனித்தனி 8,000 பணம்.

குதிரைப்படைத் தலைவர்களுக்கும் பதாதிப்படைத் தலைவர்களுக்கும் தனித்தனி 4,000 பணம்.

மாவுத்தர்களுக்கும் தேர்ப்பாகர்களுக்கும் மற்றவர் களுக்கும் ஒவ்வொருவருக்கும் 2,000 பணம்.

ஆஸ்தான ஜோதிஷர், ஆஸ்தான வந்தி என்பவர்கள் ஒவ்வொருவர்க்கும் 1,000 பணம்.

சாமானியப் படைவீரர், கணக்காளர், குமாஸ்தாக்கள் ஆகிய இவர்கள் ஒவ்வொருவருக்கும் 500 பணம்.

வாத்தியக்காரர்கள், நடர்கள் ஆகிய இவர்கள் ஒவ்வொருவருக்கும் 250 பணம்.

கைவினைஞர் ஒவ்வொருவருக்கும் 120 பணம்.

ஜவான்கள், தபாலோடிகள் ஒவ்வொருவருக்கும் 60 பணம்.

**மெகா:** மிகத் தாராளமான சம்பளத் திட்டம்! முக்கிய மாக, மேல் அந்தஸ்திலுள்ளவர்களுக்கு நல்ல சம்பளங்கள்.

**சம்:** அரசாது வேலைக்காரர்கள் திருப்தியாகப் பணம் பெற்றுச் சுகமாக வாழவேண்டும். 'மேல்வரும்படி'க்கு ஆசைப்படாதிருக்கவேண்டும்.

இன்னும் பதினைந்து நாள் வரையில் பாடலிபுரத்தி லுள்ள பற்பல காரியாலயங்களையும் போய்ப் பார்த்து மெகா ஸ்தனீஸ், பரிபாலன பத்ததியையும் துரைத்தன முறையை யும் கவனித்துப் பார்த்துத் தெரிந்துகொண்டான். பிரா மணர்களோடும் சமணர்களோடும் தாராளமாக ஊடாடிப் பழகினான். கர்ப்பிணி ஸ்திரீயையும் வளரும் குழந்தையையும்

பிராமணர் பராமரிக்கிற விதத்தைத் தெரிந்துகொள்வதில் அவன் சிரத்தை கொண்டிருந்தான். பிராமணர்களுடைய வாழ்க்கை அவன் மனத்திற்கு இனிமையாக இருந்தது. அவர்கள் நகரத்தின் தலைப்பகுதி யொன்றில் ஆடம்பர மின்றிச் சாமானியமாக வாழ்ந்துகொண்டிருந்தனர். மாலை தோறும் ஒரு தோப்பிற் கூடி, கன விஷயங்களைக் குறித்து அறிவுமிக்கார் செய்யும் பிரசங்கங்களையும் சொல்லும் வார்த்தைகளையும் விரும்பிக் கேட்பான். பிரசங்கம் நடை பெறும் காலத்தில் அவர்களில் எவரும் பேசுவதில்லை, இருமுவதில்லை, எச்சில் உமிழ்வதில்லை, வேறு எவ்வகை யிலும் இடைஞ்சற்படுத்துவதில்லை. இவ்வொழுங்கையும் அமைதியையுங் கண்டு இதுவே சரியான முறையெனத் தன் மனத்தில் அவன் ஆமோதித்தான். அவர்களிற் பெரும் பாலார் 36 வயது வரையில் சாஸ்திரங்கள் ஓதிப் பின்னரே விவாகஞ் செய்துகொண்டு குடித்தனம் பண்ணத் தலைப்படு வார்களெனக் கேள்விப்பட்டான். அதுகாறும் அவர்கள் புலால் உண்ணார், புணர்ச்சி விரும்பார், தர்ப்பை மீதேனும் கிருஷ்ணாஜினத்தின் மீதேனும் படுத்து உறங்குவார்; மனைவி யேற்றுக் கிருகஸ்தரானபின், அவர்கள் நேர்த்தி யான ரவைசல்லா வஸ்திரங்களை அணிவர்; பொன் மோதிரங்களையும் தோடுகளையும் தரிப்பர்; புலால் மறுக் கார்; ஆயினும், கோமாமிசம் புசியார்; சம்பாரம் மிக்க பண்டங்களையும் தவிர்ப்பர்; மரணத்தையும், மரணாந்தர கதியையுங் குறித்து அவர்கள் அடிக்கடி பிரசங்கிப்பர்.

வனங்களிற் சஞ்சரித்துக் கொண்டிருந்த சமணர் களோடும் மெகாஸ்தனீஸ் சிலகாலம் கழித்தனன். ஔஷதங் களின் சம்பந்தமாக வைத்திய சாஸ்திரத்தில் அவர் களுக்கிருந்த நற்பயிற்சியைக் கண்டு மகிழ்ந்தனன். அவர்

கள் உணவுப்பத்திய முறைகளினாலேயே நோய்களைப் பெரும்பாலும் தீர்த்தனரேயல்லாது, மருந்து கொடுத்தன்று. ஆனால் அவர்கள் பூச்சுத்தைலங்களும் பிளாஸ்திரிகளும் வழங்கிக்கொண்டிருந்தனர். அவர்களிற் சிலர் நிமித்தம் பார்த்துக் குறி சொல்வர்; பில்லிசூனியம் முதலான அபிசாரப் பிரயோகங்கள் செய்வர்; மரித்தாருக்குச் செய்யும் அபரக்கிரியைகளிலும் சம்பிரதாய முறைகளிலும் கை தேர்ந்தவர். மாந்தருக்குப் பக்தியூட்டிப் பரிசுத்தமான ஆசார வியவகாரங்களில் பற்று உண்டாக்குவதற்கு நல்ல சாதனமெனக் கருதி, மரித்தோர் நரகத்திற் படும் சித்திரவதை முதலான தண்டனைகளை விவரித்தெடுத்து உரைத்து அவர்கள் பயமுறுத்திவைப்பார்கள். இவ்வகையில் ஒரு சமணன், ஆறுகளிலும் குளங்களிலும் மலஜலங் கழித்து அசுத்தப்படுத்துகிற பாபிகள் அந்நீர் முழுமையும் ஒரு நெல்லிலையின் 8-இல் ஒரு பகுதியைக்கொண்டு இறைத்து ஒழிக்கவேண்டுமெனப் போதித்தனன்!

மகதம் வந்ததற்குப் பின், மெகாஸ்தனீஸ் சக்கரவர்த்தியாருடன் மூன்று நான்கு முறை கலந்து பேசுவதற்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. மெகாஸ்தனீஸ் கேட்டுக்கொண்டபடி, கலிங்கத்துக் காடுகளுக்கு அருகில் யானைவேட்டை பார்ப்பதற்கு அவனை அழைத்துக்கொண்டு போமாறு பத்ரபடனுக்குச் சக்கரவர்த்தி கட்டளையிட்டான். நாட்டுப்புறத்தினூடே சென்ற அப்பயணத்தில் மெகாஸ்தனீஸுக்கு மிக்க மனக்கிளர்ச்சி உண்டாயிற்று. ஆனால், யானை வேட்டையை நேரே பார்த்தபோது, முன்னினும் அதிகமாக அவன் கிளர்ச்சியுற்றான். ஒரு கட்டாந்தரையைச் சுற்றிச் சுமார் $\frac{1}{2}$ மைல் நீளத்திற்கு அகழியொன்று வெட்டப்பட்டது. இந்த ஆவரணத்திற்குள் போவதற்கு மிக ஒடுக்கமான

பாலம் ஒன்று அமைக்கப்பட்டது. அவ்வாவரணத்திற்குள் நன்கு பழக்கப்பெற்ற மூன்று பிடிகள் வைக்கப்பெற்றிருந்தன. அவ்வாவரணத்திற்கு வெளியே மறைவாக அமைக்கப்பட்டிருந்த குடில்களில் ஆட்கள் ஒளிந்துகொண்டிருந்தனர். இரவில் 10 காட்டானைகள் அப்பாலத்தின் வழியே ஒன்றன் பின் ஒன்றாக ஆவரணத்திற்குள் போயின. கடைசி யானை உள்ளே போனபின், பாலத்தை அகற்றிவிட்டார்கள்.

இங்ஙனம் சிக்கிக்கொண்ட 10 யானைகளையும் மூன்று நாள் பட்டினி போட்டார்கள். உண்ணீரும் கொடுக்கவில்லை. பின்பு பழக்கமுற்ற மாவுத்தர்கள் போர்யானைகளின் மீதேறிப் போய், காட்டானைகளோடு போர் புரிந்தனர். கைதேர்ந்த மாவுத்தர்கள் களைப்புற்றிருந்த காட்டானைகளின் வயிற்றின் கீழ் நுழைந்துகொண்டு அவற்றின் கால்களை இணைத்துக் கட்டினர். அதற்குப் பிறகு காட்டானைகளையும் நாட்டானைகளையும் தோல்வாரினாற் கழுத்தோடு கழுத்து பிணைத்தனர். அவ்வார்கள் மாட்டின் பச்சைத் தோலினாலாயவை. காட்டானைகளின் கழுத்தைச் சுற்றிலும் வெட்டுக்காயங்கள் பண்ணினார்கள். விலங்குக்குக் கட்டுப்பட்டு, மேலே ஆள் ஏறியபோது அடங்கி அமைதியாக இருக்கும்பொருட்டு அவ்வெட்டுக்காயங்களில் தோல் வார்களைத் திணித்தார்கள். அங்ஙனம் பிடிபட்ட 10 யானைகளுள் ஒன்று மிக முதியது; மற்றொன்று மிக இளையது. அவ்விரண்டையும் திரும்பக் காட்டுக்குள் ஓட்டிவிட்டார்கள். மிகுதியான எட்டையும் 20 மைலுக்கு அப்பாலுள்ள ராஜாங்க யானைத்தொழுவங்களுக்குக் கொண்டுபோனார்கள். அங்கே அவைகளை நிலையான தூண்களுக்குக் கட்டி அப்போதைக்கு அப்போது முறை முறையாகப் பட்டினி போட்டு, சொற்படி கேட்கக் கற்றுக்கொடுத்துக் கிரமமாகப்

பழக்கினார்கள். பழகியபின், அவைகளுக்குப் பச்சை நாணலும் புல்லும் வேண்டியமட்டும் கொடுத்து, வெகு சீக்கிரத்தில் பூர்வத்துப் பலமும் வீரியமும் திரும்பப் பெறச் செய்தார்கள்.

நோய்ப்பட்ட யானைகளுக்குச் சிகிச்சை செய்வதையும் மெகாஸ்தனீஸ் பார்த்தான். காயம் பட்டிருந்ததோர் யானைக்கு வெந்நீர் ஒற்றடம் கொடுத்தார்கள். பின்பு, புண்களில் வெண்ணெயிட்டுத் தேய்த்தார்கள். பன்றி யிறைச்சித் துண்டுகளை வெட்டி இரத்தத்தோடு வெப்பமாக அந்தப் புண்ணில் வைத்துக் கட்டினார்கள். கண் நோவைத் தீர்ப்பதற்காகப் பசுவின் பாலைக் கறந்து கண்களில் வார்த்தார்கள். அசக்தமான யானைகளுக்குக் கருநிறமான விளாம் பழக்களுடன் கோழிக்குஞ்சுச்சாறு கலந்து கொடுத்தார்கள்.

எல்லாவற்றையும் பார்த்துச் சந்தோஷத்தோடு மெகாஸ்தனீஸ் பாடலிபுரத்திற்குத் திரும்பிவந்தான். பாடலிபுரத்திற்கு அவன் வந்ததுமுதல் இதுவரைக்கும் இரண்டு மாதமாயிற்று. சந்திரகுப்தன் கொடுத்த காணிக்கைகளை எடுத்துக்கொண்டு சலூகஸினிடம் போக விரும்பினான். இன்னும் மூன்றுநாளில் சந்திரகுப்தனிடம் விடைபெற்றுக் கொண்டு ஸிரியாவுக்குப் போவதாகக் காத்தியாயனனிடம் சொன்னான். மறுநாட் காலையில் ஏழு மணிக்கு விருந்து மந்திரத்திற்கு வந்து இந்தியாவைப்பற்றிப் பொதுவான விஷயங்கள் சில தனக்குச் சொல்லவேண்டுமென்றான். அங்ஙனமே செய்வதாகக் காத்தியாயனன் சொன்னான்.

---

# அத்தியாயம் 34

## மெய்யும் பொய்யும்

சொல்லவேண்டிய விஷயங்களை யெல்லாம் இனம் இனமாகத் தன் மனத்தில் வகுத்துவைத்துக்கொண்டு காத்தியாயனன் குளிர்ந்த அந்த மார்கழி மாதம் காலையில் ராஜ விருந்து மந்திரத்திற்கு வந்து சேர்ந்தான். மெகாஸ்தனீஸ் இவனைக் கூப்பிடுகிறவரையில் ஒரு மணி நேரம் தோட்டத்தைச் சுற்றிப் பார்த்துக்கொண்டிருந்தான். சரியாக ஏழு மணிக்கு மெகாஸ்தனீஸ் கொலுக் கூடத்துக்கு வந்தான். "நீர் வந்தது நிரம்ப சந்தோஷம். நேரே காரியத்தை நாம் பார்ப்போம்" என்று சொல்லி மெகாஸ்தனீஸ் அநேக கேள்விகள் கேட்டான். புத்தகம் எழுதுகையில், அப்போதைக்கப்போது பார்த்துக்கொள்வதற்காகக் கையேட்டில் அவ்வினக்களையும் விடைகளையும் குறித்துக்கொண்டான். அவன் எழுதும் புத்தகத்திற்கு "இந்திகா" என்று பெயர்.

மேகாஸ்தனீஸ்: இந்தியா எத்தனை விரிவானது?

காத்தியாயனன்: தெற்கு வடக்கில் 32,000 குரோசம்;[1] கிழக்கு மேற்கில் 28,000 குரோசம்.

மேகா: அவ்வளவு பெரிதா?

காத்: ஆம். அறத்தெற்கில் கன்னியாகுமாரியில் சூரிய கடியாரத்துக் கிலகத்து[2] நிழல் காண்பதில்லை; சப்தரிஷி

1. குரோசம்-405 முழ நீளம்.
2. Gnomon.

நக்ஷத்திரம் இரவில் தெரிவதில்லை; நிழல்கள் தெற்கே விழுகின்றன.

மேகா: இமயபர்வதமும் இந்துகுஷ்மலைத் தொடரு மன்றி வேறு பல மலைகள் உளவோ?

காத்: உண்டு. பல பிரம்மாண்டமான மலைகள் இருக் கின்றன. அவைகளில் அநேக மரவகைகளும் கனிதரு மரங்களும் இருக்கின்றன.

மேகா: தேசத்தில் அப்போதைக்கப்போது பஞ்சம் நேர்வதுண்டோ?

காத்: இந்நாட்டில் ஒருபோதும் க்ஷாமம் கண்டதில்லை. ஊட்டத்திற்குரிய உணவுப்பொருள்களுக்குப் பஞ்சமே இல்லை.

மேகா: அது ஆச்சரியமே. பஞ்சமே வராமல் நீங்கள் காத்துக்கொள்வது எங்ஙனம் அமையும்? எத்தனை போகங்கள் பயிரிடுகிறீர்கள்? அவை யாவை?

காத்: கோடைப்பயிர், கார்ப்பயிர் என்னும் இரண்டே போகங்கள். நெல், தினை, கோதுமை, பருப்புவகைகள், கரும்பு, வாழை, எள், கிழங்குவகைகள்; இவையன்றி, பருத்தி, சணல் என்னும் இவற்றையும் பயிரிடுகின்றோம்.

மேகா: கரும்பு என்பது என்ன?

காத்: அது ஒருவகை நீண்ட நாணற் செடி. அதனின்று சருக்கரை எடுக்கின்றோம்.

மேகா: ஆண்டுதோறும் இரண்டு போகங்கள் விளைவிப்பது எங்ஙனம் இயலும்?

காத்: எங்களுக்கு இரண்டு பருவப் பெயர்ச்சி மழைகள் பெய்கின்றன; அவையன்றி, நீர்ப்பாசனவசதிகளும் இருக்கின்றன.

மேகா: இந்நாட்டில் எப்பொழுதேனும் மழை பெய்ய மல் அநாவிருஷ்டி ஏற்பட்டதுண்டோ? பயிர்கள் அழிந் துண்டோ?

காத்: ஒருபோதும் இல்லை.

மேகா: போர்கள் நடக்கும்போது என்னவாகும்?

காத்: அரசர்களும் அவருடைய படையாட்களு போர் புரிவர். உழவர்களும் வர்த்தகர்களும் தங்கள் கா யத்தை வழக்கம்போலக் கவனிப்பர். இருதிறத்தாரு அவர்களைப் பீடியார். உழவுமூலமே உயிர் என இரண் கக்ஷிக்காரர்களும் உணர்ந்து அதன் வழிக்குப் போக தொழிவர்.

மேகா: உங்கள் நாட்டை வேற்றரசர் எப்போதேனு பற்றியதுண்டோ?

காத்: ஒருபோதும் இல்லை. எங்களிடம் பழகி தேர்ந்த 4000 போர் யானைகள் உளவெனக் கேட்டு அலெ சாண்டரும் எங்கள்மீது படையெடுக்கும் எண்ணம் தவிர் தான்.

மேகா: நீங்கள் படையெடுத்துப் பிறநாடு எதனை யேனும் பறித்ததுண்டோ?

காத்: ஒரு நாளும் இல்லை.

மேகா: இந்தியாவின் எல்லைகள் யாவை?

காத்: ஸிந்துநதியும், கங்காநதியும், சமுத்திரமுமே.

மேகா: உங்களுக்கு அயலார் யாவர்?

காத்: பாரஸீகர்களும், ஸ்கிதியர்களும், பாக்ட்ரிய களும்.

மேகா: இந்தியர்களெல்லாரும் ஒரே இனத்தவர்களா

காத்: இல்லை, இல்லை. எங்களில் எண்ணிறந்த இனத்தவர்கள் இருக்கிறார்கள். ஆனால், எல்லாரும் இந்நாட்டவரே. இந்தியாவின் எப்பாகத்திலும் எவரும் வந்து குடியேறியதில்லை. இந்தியர்கள் வெளியேறி வேறு எங்கும் குடிப்புகுந்ததில்லை.

மேகா: நீங்கள் என்ன என்ன தெய்வங்களைத் தொழுகின்றீர்கள்?

காத்: எங்களுக்கு ஒரு டயோனிஸியஸ் (Dionysius-கிருஷ்ணர்) உண்டு. அவர் மேற்கில் ஒரு நகரத்தில் (துவாரகையில்) ஆட்சி புரிந்தார்; தம்முடைய கீதங்களினாலும் நர்த்தனங்களினாலும் இந்தியா முழுமையும் வசப்படுத்திக்கொண்டார். எங்கள் ஜனங்களுக்கு ஒழுக்கமுறையைக் கற்பித்தார் (பகவத்கீதையின் மூலமாக). அவரது சந்ததியில் தோன்றியவர்கள் பற்பல ராஜ்யங்களுக்கு இன்னும் அதிபதிகளாயிருக்கின்றார்கள்; நம சக்கரவர்த்தியாரும் அவர்களுள் ஒருவராவர்.

எங்களுக்கொரு ஹெராகிளீஸும் (Herakles-சிவன்) உண்டு. அவர் சிங்கத்தின் தோலை ஆடையாகத் தரித்துக்கொண்டு, கையில் ஒரு தண்டாயுதமும் வைத்துள்ளார்; கடலிலும் கரையிலுமுள்ள அரக்கர்களையும் துஷ்டமிருகங்களையும் அவர் ஒழித்தார். அவர் இமயபர்வதத்தில் பார்வதியையும், காசியில் விசாலாக்ஷியையும், கஞ்சியிற் காமாக்ஷியையும், தெற்கே மதுரையில் மீனாக்ஷியையும் மணம் புரிந்துகொண்டார். பாடலிபுர ஸம்ஸ்தானத்தை ஆதியில் ஸ்தாபித்தவர் அவரே. அவருக்கு இரண்டு பிள்ளைகள். மீனாக்ஷியின் வயிற்றில் அவருக்கு ஒரு பெண் பிறந்தனள். அந்தப் பெண்ணை அவர் பாண்டிநாட்டுக்கு ராணியாக்கி, உலகத்திலுள்ள முத்துக்களுள் காந்தி மிக்கவைகளை

அவளுக்கு அளித்தார். அது வற்றாக்களஞ்சியம் போன்றிருந்தது; உலகத்தோர் அனைவரும் விரும்பத்தக்கதாயிருந்தது.

மேகா: எகிப்திலுள்ளதுபோல உங்களிலும் ஏழு ஜாதிகள் உண்டோ?

காத்: எகிப்திலுள்ள ஏழு ஜாதிகள் யாவை?

மேகா: 1. தத்துவவாதிகள். இவர்கள் யாகாதிகள் செய்வர்; இறந்தவர்களுக்கு அபரக்கிரியைகள் நடத்துவர்; மழை காற்று பெருவாரிநோய் முதலியன முற்கூறுவர்; 2. உழவர்கள்; 3. கோவைசியர்; 4. கைவினைஞர்; 5. வீரர்கள்; 6. ஒற்றரும் பராமரிப்புக்காரரும்; 7. நியாய சபையினரும் மத்தியஸ்தரும்.

காத்: அவர்களெல்லாரும் எங்களிலும் உண்டு.

மேகா: ஜனங்கள் தம் ஜாதியை விட்டு வேறு ஜாதியில் விவாகம் செய்துகொள்ளலாமா?

காத்: கூடாது.

மேகா: உங்கள் நதிகளுள் பெரியவை யாவை?

காத்: ஸிந்து நதியும், கங்கை நதியுமாம். ஆனல், இமயபர்வதத்தில் அதிசயமான ஆறு ஒன்று உளது. அது சிலை (கல்) எனப்படும். அதில் எதுவும் மிதப்பதில்லை; எல்லாம் நேரே அடியில் இறங்கிப்போம்.

மேகா: அற்புதமாக இருக்கின்றதே! அதை எளிதிற் போய்ப் பார்க்கமுடியுமா?

காத்: முடியாது. அங்கே போவதற்கு ஒரு வருஷம் பிடிக்கும். முனிவர்களே அங்கே போவார்கள்.

மேகா: யானை எத்தனை வருஷம் ஜீவித்திருக்கும்?

காத்: தீர்க்காயுள் வாய்ந்த மனிதன் உள்ளளவும், அதற்கு அதிகமாகவும் ஜீவித்திருக்கும். ஒரு யானை 200 வருஷகாலம் இருந்ததெனக் கேள்விப்பட்டுள்ளேன்.

மேகா: இந்தியாவின் மையம் யாது?

காத்: முண்டர்களும் ஸவரர்களும் (கஞ்சம் விசாகப் பட்டணத்தார்) வாழும் இடம். அங்கே மலய பர்வதத்தில் (கீழ்க்கணவாய் மலைத்தொடரிலுள்ள மகேந்திரகிரி) நிழல்கள் மாரிக்காலத்தில் ஆறு மாதம் வடபுறமாகவும், கோடைக் காலத்தில் ஆறு மாதம் தென்புறமாகவும் மாறி மாறி விழும்.

மேகா: பஞ்சு என்பது என்ன?

காத்: ஆட்டின்மீது ரோமம் வளர்வதுபோல, வருஷந் தோறும் மரங்களில் உண்டாகும் மெல்லிய இழைகள்.

மேகா: யானையல்லாமல் இந்நாட்டிலுள்ள விசித்திர மான பிராணிகள் யாவை?

காத்: குரங்கு, புலி, காண்டாமிருகம், மயில், முதலை, மலைப்பாம்பு, நாகப்பாம்பு, தேள் என்பனவாம்.

மேகா: பெரிய புலிகள் எங்கே இருக்கின்றன?

காத்: இங்கே, பிராச்சியர்களுக்கு (மகதத்தவர்களுக் கும் வங்காளத்தவர்களுக்கும்) இடையில் இருக்கின் றனவே. அவைகளை நீர் பார்த்ததில்லையோ?

மேகா: பார்த்துள்ளேன். நந்தவனத்தில் நேற்றுப் பழக்கப்பட்ட பெரும் புலியொன்றைப் பார்த்தேன். அது சிங்கத்தின் வடிவில் இருமடங்கு இருக்குமென்று தோன்றியது. அதை நால்வர் நடத்திக்கொண்டு போனார் கள். ஒரு கோவேறு கழுதையின் பின்காலை அது வாயினாற் கவ்வித் தரையில் இழுத்துக்கொண்டு வந்தது.

மேகா: இங்குள்ள குரங்குகள் துஷ்டத்தன்மையுடையவைகளா?

காத்: அல்ல. மனிதர்மீது பாய்வதில்லை; வஸ்துக்களைத் திருடுவதில்லை.

மேகா: தேள்கள் எப்படிப்பட்டவை?

காத்: அவை மிகத் தொல்லைப்படுத்துகின்றன. அவற்றுள் சில மிக நீளமானவை; சிலவற்றிற்குச் சிறகுகள் உண்டு.

மேகா: சிறகுள்ளவைகளா!

காத்: ஆம். சில பாம்புகளுக்கும் சிறகு உண்டு. அவை இரண்டுமுழ நீளமே இருக்கும். இரவில் ஓரிடத்தினின்று மற்றோர் இடத்திற்குப் பறக்கும். அவற்றின் எச்சம் மனிதர்மீது விழுந்தால் சொறி கொப்புளம் முதலியன உண்டாகும்.

மேகா: பெரிய ஸர்ப்பங்கள் இருக்கின்றனவா?

காத்: மரங்களினும் பருத்த பாம்புகளுண்டு. அவை காடுகளில் வாழும்; ஆடுமாடுகளையும் விழுங்கிவிடும்.

மேகா: வேறு விநோதமான மிருகங்கள் என்ன இருக்கின்றன?

காத்: விலாங்குமீன், பொன்னகழும்முசு, கற்களை உருட்டித் தள்ளும் குரங்கு என்பனவாம்.

மேகா: பொன்னகழும் முசுக்கள் எவ்வளவு பருமனாக இருக்கும்?

காத்: காட்டுக் குள்ளநரி அளவு இருக்கும்.

மேகா: அவை சாதுவா?

காத்: இல்லை; மிகக் கொடியவை. அவை தேடியெடுக்கும் பொன்னை மனிதர் திருடுவார்களென நினைத்து அவை உக்கிரங்கொள்வது இயல்பே.

மேகா: இன்னும் விசித்திரமான பிராணிகள் எவையேனும் உண்டோ?

காத்: வெள்ளை யானைகள் இருக்கின்றன.

மேகா: வெள்ளை யானைகளா!

காத்: ஆம். மிக அருமை. கலிங்கத்து எல்லைப் புறத்தில் ஒருவன் ஒரு வெள்ளை யானையைப் பிடித்தான். அதை வாங்கிக்கொள்ளவேண்டுமென்று ஆசைப்பட்டு நம் அரசர் வேண்டிய வெகுமதி அளிக்கிறேனென்று சொல்லி அந்த யானையைக் கேட்க ஆட்களை அனுப்பினர். உடையவன் அதைக் கொடுக்கமாட்டேனென்றான். பின்பு, இவர் சில துருப்புக்களுடன் ஒரு தலைவனை அனுப்பினர். உடையவன் காயப்பட்டு யானையின்மீதிருந்து உருண்டு விழுந்தான். அவ்யானை அவனை எடுத்துத் தன் முதுகின்மேற் போட்டுக்கொண்டு காட்டுக்குள் ஓடித் தப்பித்துக் கொண்டது.

மேகா: யானைகள் எவ்வளவு நன்றியுள்ளவை, மனிதன் எவ்வளவு நன்றியில்லாதவன்!

காத்: சிங்களத் தீவில் மிக உயர்தர ஜாதி யானைகள் இருக்கின்றன. அவற்றின் கொம்பினுள் முத்து விளையும்.

மேகா: கொம்புக்குள் முத்துக்களா! யானைகளினின்றும் முத்துக்கள் உண்டாகின்றனவா?

காத்: பிசுபிசுப்பான சிப்பிகளில் முத்து உண்டாகுமானால், என் ஐயா, மகத்தான யானைகளிடத்தில் உண்டாகலாகாது?

மேகா: அதிசயமான பறவைகளைப்பற்றி ஏதேனும் சொல்.

காத்: இந்நாட்டில் மூன்றுவகைக் கிளிகள் உண்டு. அவை காட்டில் திரியும்போது பேசமாட்டா. பிடித்துப் பழக்கிப் பேசக் கற்பித்தால் நம்மைப் போலப் பேசும். நமது அரண்மனையில் அவைகளை நீர் பார்த்திருப்பீரே. அவை யன்றிக் கோகிலம் என்னும் ஒரு பறவை உண்டு. அது கூட்டில் அடைபட்டிருக்கும்போது மனங்குன்றி வாடி வருந்திக் கொண்டிருக்கும். ஆனால், ஆண் பறவையோடு இருக்கும்போது அற்புதமாகப் பாடும். எங்கள் குக்குறு வான்புள் மிக அழகானது. அதைக் கண்டு அரசர்களும் மகிழ்வார்கள். அதைக் குறித்த கதை யொன்று உண்டு.

பூர்வத்தில் அது இந்திய ராஜகுடும்பத்தில், கடைசிக் குமாரனைப் பிறந்திருந்தது. தமையன்மார்கள் அந்தக் கடைசிப்பிள்ளையையும் பெற்றோரையும் இகழ்ந்து வெறுத்துக் கொண்டிருந்தார்கள். பெற்றோரைப் பிரத்தியக்ஷமாக அவர்கள் அவமதிப்பதைப் பொறுமல் கடைக்குமாரன் அவர்களை அழைத்துக்கொண்டு வேறிடம் போனன். நெடும்பிரயாணம் செய்து வழியிலுள்ளதொரு பாலை வனத்திற்குப் போனபோது முதிய பெற்றோரிருவரும் மரித்தனர். அசுசாரமான அந்த இடத்தில் அவர்களைப் புதைக்க மனங் கொள்ளாமல் ராஜகுமாரன் வாள்கொண்டு தன் தலையைத் தானே வெட்டிவிட்டுத் தன் உடலுக்குள் அவர்களைப் புதைத்தான்! அவனுடைய பிதுருபக்திக்கு மெச்சிச் சூரியபகவான் அவனை அழகிய கொண்டையோடு கூடிய இவ்வற்புதப் பறவையாக்கினர்.

மேகா: சிலை என்னும் ஆற்றைப் பற்றியும் கதை யுண்டோ?

காத்: அதற்கும் ஒரு கதை உண்டு:

பூர்வத்தில் கன்னெஞ்சு வாய்ந்த வட்டிவியாபாரி யொருவன் இருந்தான். அவன் நூற்றுக்கு மூந்நூறு வட்டி வாங்குவன். அவனிடத்திற் கடன் வாங்கினவர்கள் எல்லாரும் கெட்டுப் பாழாகி மனம் வருந்தினர்கள். அநேக ஜனங்களை அவன் நாசப்படுத்தியதனல், அவனைச் சந்திர பகவான் சிலை என்னும் ஆருக மாற்றினன். அவ்வாற்றில் போட்டது எதுவும் உடனே கல்லாகி அமிழ்ந்துபோம். அது முதல் அப்படிப்பட்ட அநியாய வட்டிவியாபாரம் இந்நாட்டில் ஒழிந்தது.

மேகா: உங்கள் நாட்டில் கட்டுக்கதைகளும் ஊர்க் கதைகளும் மிக அதிகமாயிருக்கின்றனவே. ஆனல், அவைகளில் உண்மையான விஷயங்களைப் பகுத்தறிவது எங்ஙனம்?

காத்: அதைப்பற்றி நாங்கள் கவலை கொள்வதேயில்லை. இன்றைக் கிருப்பார் நாளைக்கிருப்பாரென்று சொல்வதற்கு இடமில்லாத அநித்திய வாழ்க்கையில் இதை விசாரிப்பதற் குப் பொழுது எது? அதற்கு ஆவசியகமும் என்ன? இந்தக் கதைகள் லக்ஷக்கணக்கான ஜனங்களுக்குத் தெரிந்திருக் கின்றன. உண்மை விஷயம் தெரிந்தவர்கள் சிலரே இருப்பார். ஆதலின், மெய்யைக்காட்டிலும் பொய்யும் புளுகுமே மெய் யாக விளங்குகின்றன.

மேகா: நல்லது. அதிசயமான மிருகங்களைப்பற்றிச் சொல்லிய விருத்தாந்தத்தை முடிவு பண்ணு.

காத்: அழுங்கு என்னுமொரு மிருகம் உண்டு. அதன் தோல்மீது செதிள்கள் சுரசுரப்பாயிருக்கும். அதன் தோலை உரித்து அதன் செதிள்களைப் பித்தளையையும் இரும்பையும் நறுக்குவதற்கு அரங்களாக உபயோகிப்பார்கள். அரண்ய

போய்ச் சேர்க்கும்படி சந்திரபானுவுக்கு உத்தரவாயிற்று. "இங்ஙனம் சைனியத்திலுள்ள வண்டிகளெல்லாவற்றை யும் பஞ்சம் தணிக்க அனுப்பிவிடுவது யுக்தமாகுமோ? இந்தச் சமயம் பார்த்து, சத்துரு எவனேனும் படையெடுத்து வந்தால் என்ன செய்வது?" எனச் சாணக்கியரை நோக்கி ராக்ஷஸன் வினவினன். "நம்மை எதிர்க்கக் கூடிய சத்துரு இப்போது எவன் இருக்கின்றான்? சலூகஸனும் தென் னுடுகளின் அதிபதிகளும் நம் நண்பர்கள். வடக்கேயுள்ள கிராதர்களும் காம்போஜர்களும் பலமற்றவர்களானமையின், தாங்களாக முற்பட்டு வந்து நம்மைத் தாக்கக் கனவிலும் எண்ணார். நம்மை இப்போது எதிர்க்குமவ்வளவு முட்டாளாயிருப்பரேல், நம்நாட்டு ஜனங்கள் பஞ்சத்தி னுலும் வாந்திபேதியினுலும் இறவாமல் பிழைத்திருப் பார்களாயின், அவர்களில் ஒவ்வொருவனும் ஒவ்வொரு படைவீரனைக் கிளம்பிப் படையெடுத்து வருபவரைக் கண்டங் கண்டமாக வெட்டித் தள்ளிவிடுவான்" என்று சாணக்கியர் மறுமொழி கூறினர்.

ஆற்றுக்கால்வாய்களைப் பழுதுபார்த்து ஆழமாக்கவும், கால்வாய்களுக்கு நீர் தாராளமாக வருமாறு சிற்றோடை களில் அணைபோடவும் சக்கரவர்த்தியும் சாணக்கியரும் உத் தரவு செய்தார்கள். பஞ்சம் தணியும் வரையில் ஆற்றோரத்து நிலங்களில் உணவுப்பொருள்களையே பயிரிடவேண்டுமே யல்லாமல், பருத்தி சணல் முதலானவைகளைப் பயிரிடக் கூடாதென மிராசுதார்களுக்கு உத்தரவு செய்தார்கள். பஞ்சத்தின் கொடுமை அதிகமாயிருந்த இடங்களிலுள்ள வர்கள், ஸிந்துநதி கங்கையாறு யமுனையாறு முதலியன போன்ற நீர்வளங்குன்றாத நதிகளுக்குச் சமீபப் பிரதேசங் களுக்குப் போய்ச் சிலர் குடியேறுவதற்கு வேண்டிய

அனுகூலம் செய்தார்கள். நீர்வற்றிய ஏரித்தடங்களில் காய்கறி வகைகளும் கிழங்குகளும் தாற்காலிகமாகப் பயிரிடச் செய்தார்கள். கடுந்தண்டனை விதிப்போமெனப் பயமுறுத்தி வைத்தியர்களைப் படைபடையாக வகுத்து நோய்ப்பட்டாரைக் கவனித்துச் சிகிச்சை செய்யும்படி அனுப்பினார்கள். கொளுத்தாத பிணங்களை ஆறுகளில் எறியக் கூடாதெனத் தடுத்தார்கள். 'சர்க்கார் வேலைக்கார ரெல்லாரும் பிணங்களை, இறந்த 24 மணி நேரத்திற்குள் ளாக, தம் உறவினர்கள் தகனம் பண்ணும்படி செய்விக்க வேண்டும். உறவினர் அங்ஙனம் செய்யாவிடில், தாங்களே அப்பிணங்களைத் தகனம் செய்வித்து, அதற்கான செலவு களை அவ்வுறவினரிடமிருந்து வசூல் செய்யவேண்டும்' என விதித்தார்கள். ஒரு லக்ஷம் படைவீரர்களைக் கொண்டு ஸோணநதியின் குறுக்கே அணைகட்டி, ராஜதானியைச் சூழ்ந்து வறண்டுபோயிருக்கிற அகழிகளில் நீர் நிரப்பச் செய்தார்கள். இதனால், துரைத்தனத்தார் தங்களை எவ்விதத்தும் காப்பாற்றுவாரென்னும் நம்பிக்கையும் தைரியமும் நகரவாஸிகளுக்குத் திடமாக ஏற்பட்டன.

மற்றும், பெற்றோர் கைவிட்டுப்போன குழந்தைகளை எடுத்து வைத்து ஆதரிப்பதற்கான அநாதசாலைகளை அங் கங்கே சக்கரவர்த்தியும் சாணக்கியரும் அமைத்தார்கள்; திக்கற்றவர்களுக்கு இனாமாகச் சோறு கொடுக்கச் சர்க்கார் மடைப்பள்ளிகள் அமைத்தார்கள்; பழைய கோட்டைகள் கட்டடங்கள் குளங்கள் முதலானவற்றைச் செப்பனிடுதல், புதியகோட்டைகள் வழிநடைச்சாலைகள் குளங்கள் கட்ட டங்கள் ஆகிய இவைகளை அமைத்தல் முதலான க்ஷாம நிவாரண வேலைகளைத் தொடங்கி ஜனங்களுக்குக் கூலி கொடுக்கத் தலைப்பட்டார்கள். மேற் சொல்லிய காரியங்

அவர்கள் பொறுக்கமாட்டார்கள். அவர்களுக்கு வாயிலிகள் என்று பெயர்.

நெற்றிநடுவில் ஓரே கண் உள்ளவர்கள் இந்நாட்டில் உண்டு.

மேகா: அப்படிப்பட்டவர்கள் எங்கள் சைகிளோப்ஸ் (cyclopes) என்னும் கதைகளிலும் சொல்லப்பட்டிருக்கின்றனர்.

காத்: அவர்களை நாங்கள் லலாடாக்ஷர் என்கிறோம். அவர்களன்றி, வேறொரு வகையினரும் உண்டு. அவர்களுடைய தலைமயிர் முள்ளாணிகளைப்போல நிமிர்ந்து நிற்கும்.

ஆயிரவருஷகாலம் ஜீவித்திருக்கிறவர்களும் எங்களில் உண்டு.

மேகா: எங்களிலும் அப்படிப்பட்டவர்கள் இருக்கிறார்கள். அவர்களை நாங்கள் ஹைப்பர்போரியர் (Hyperboreans) என்கிறோம்.

காத்: நாங்கள் அவர்களை உத்தரகுருக்கள் என வழங்குகின்றோம். காயகற்பம் என்னும் ஔஷத சிகிச்சையினால் வேறுசிலர் ஆயிரம் வருஷம்வரை ஜீவிக்கிறார்கள். நூறு வயதுக் கிழவனை முப்பது வயது யுவனாக்கத்தக்க அற்புதமான வாஜீகரண மருந்துகளும் எங்களிடம் உண்டு.

மேகா: அவ்வாஜீகரண மருந்துகளிற் சிலவற்றைச் சலூகஸுக்குக் கொண்டுபோய்க் கொடுக்கும்படி உங்கள் அரசர் என்னிடம் ஒப்பித்திருக்கிறார். உங்கள் நாட்டில் எப்போதும் அரசர்களே ஆண்டுவந்திருக்கிறார்களா?

காத்: இல்லை. குடிப்பிரதிநிதிப்பாலனம் மூன்று தடவை நடைபெற்றது. அப்பிரதிநிதிப்பாலனம் முதன்

முறை 300 வருஷம் நீடித்தது. இரண்டாம் முறை 120 வருஷம். மூன்றும் முறை 100 வருஷம். ஆனல், பொதுப் படச்சொல்லின், எங்கள் நாட்டில் அரசர்களே பரிபாலித்து வந்திருக்கிறர்கள். இப்போதுள்ள எங்கள் அரசர் எங்கள் நாட்டு டயோனிஸியஸின் (கிருஷ்ணனது) வமிச பரம்பரையில் வந்தவர். அவரிடமிருந்து 153-ஆம் தலைமுறையின ராவர். இந்த ராஜவமிச பரம்பரை தோன்றி இப்போது 6,042 வருஷங்களாகின்றன.

மேகா: எவ்வளவு விரிவான காலம், எவ்வளவு நீளமான ராஜபரம்பரை!

காத்: இதில் அதிசயம் ஒன்றும் இல்லையே. பாண்டிய நாட்டில் பெண்கள் 9 வயதில் பிள்ளை பெறுகிருர்கள்.

மேகா: ஒன்பது வயதிலா?

காத்: ஆம். ஒன்பது வயதிலே. காய்கள் அங்கே வெகு சீக்கிரம் பழுக்கின்றன. புருஷர்களும் ஸ்திரீகளும் யுக்த வயதுக்கு முன்னரே முதிர்ந்த பருவ உணர்ச்சி பெறுகிருர்கள். பாண்டிய நாட்டிற் புருஷர்கள் கேவலம் பையன்களாக இருக்கும்போதே தலைநரைத்து, 40 வயதிலேயே இறந்துபோகிருர்கள்.

மேகா: உங்கள் நாட்டில் எப்படி?

காத்: 60 வயதே இறுதியெனச் சொல்லலாம்.

மேகா: உங்களில் அடிமைகள் உண்டோ?

காத்: இல்லை, இல்லை. ஆரியனெவனும் அடிமையாக இருக்கமுடியாது.

மேகா: கடன் கொடுப்பதும் வாங்குவதும் உண்டோ?

காத்: அதுவும் இல்லை. கடன் கொடாதே. கடன் வாங்காதே என்பதே எங்கள் கொள்கை.

மேகா: நிக்ஷேபமாக வைத்த சொத்தைத் திரும்பப் பெறும் பொருட்டு நீங்கள் கச்சேரியில் வழக்கிடுவதுண்டோ?

காத்: அதுவும் இல்லை. அயோக்கியனை யோக்கியனென நம்பியது நம்முடைய தப்பேயென வாளாயிருப்போம்.

மேகா: உங்களில் ஸ்திரீகள் தத்துவஞானிகள் ஆவதுண்டோ?

காத்: உண்டு. ஆனால் அப்படிப்பட்டவர்கள் புருஷ ஞானிகளைப்போலப் புலனெறுப்பு நோன்பு மேற்கொள்ள வேண்டும்.

மேகா: உங்களில் புருஷர்களின் சங்கியை அதிகமா? ஸ்திரீகளின் சங்கியை அதிகமா?

காத்: ஏறக்குறைய சமானமாகவே இருக்கும். எங்களில் வேதாந்திகளான சிரமணர்கள் விவாகத்தினால் சந்தானம் தோன்றச் செய்வதன்றி வேண்டியவாறு புருஷப் பிரஜையோ ஸ்திரீப் பிரஜையோ பெறவும் செய்யவல்லார். அவர்கள் நோய்களை லேபனங்களினாலும், பிளாஸ்திரிகளினாலும், கழுவுநீர்களினாலும், கஷாயங்களினாலும், சூர்ணங்களினாலும், சிந்தூரங்களினாலும், பஸ்மங்களினாலும் சொஸ்தப்படுத்துகிறார்களென்றாலும், பெரும்பான்மையாக உணவுப்பத்திய முறைகளினாலேயே குணப்படுத்துகிறார்கள்.

மேகா: ஆம். அவர்களோடு நானும் சிலகாலம் இருந்து நேரே பார்த்திருக்கிறேன்.

இனி வேறு சில விஷயங்களை வினவுவேன். இந்தியாவில் முக்கியமாயுள்ள நாடுகள் யாவை? ஜனவர்க்கங்கள்

யாவை? அவைகளைப் பற்றிச் சுருக்கமாகச் சொல். முக்கிய மான அமிசங்களை விட்டுவிடாதே.

காத்: ஏறக்குறைய 118 நாடுகள் இருக்கின்றன. அவை பெரும்பாலும் நம் சக்கரவர்த்தியாரின் ஆதிக்கத் திற்கு உட்பட்டிருக்கின்றன.

1. அசுவகர்கள், இவர்களின் தலைநகர் மசகம்; 2. தக்ஷர்கள்; தலைப்பட்டணம் தக்ஷசிலை; 3. காசுமீரிகள்; 4. அராட்டிகள்; 5. யௌதேயர்கள்; 6. அபீரர்கள்; 7. ஸௌரஸேனிகள்; இவர்களின் பட்டணங்கள் வடமதுரை, காளிந்தீபுரம் என்னும் காளிகாபுரம் (ஸ்ரீ கிருஷ்ண பகவா னுக்கு விசேஷமான பிருந்தாவனம் என்னும் ஸ்தலம்); 8. சகர்கள்; 9. கிராதர்கள்; 10. பிராச்சியர்கள்; 11. கங்காபுத்திரர்கள்; இவர்களுக்கு 6,00,000 பதாதி, 30,000 குதிரை, 6,000, தேர், 9,000 யானை உண்டு; தலைநகரம் பாடலிபுரம். அதுவன்றி நூற்றுக்கணக்கான பெரிய நகரங்களும் உண்டு; 12. உத்தரகலிங்கர்கள்; தலைநகரம் பார்த்தாலிஸ். 60,000 பதாதி, 1000 குதிரை, 700 யானை —இவை எப்போதும் போருக்குச் சித்தமாயுள்ளன; 13. தாமிரலிப்தி அரசன்; 50,000 பதாதி, 4,000 குதிரை, 400 யானை; 14. மத்திய கலிங்கர்கள்; பலமான சைனியமுள்ள வர்கள்; தலைநகரம் தந்தபுரம்; 15. ஆந்திரர்கள்; 1,00,000 பதாதி, 2,000 குதிரை, 1000 யானை உள்ளவர்கள்; மதில் களும் கோபுரங்களுமுள்ள 30 பட்டணங்கள்; அவற்றுள் ராஜபுரம், அமராவதி, மச்சிலிப்பட்டணம், கல்யாண், பிரதிஷ்டானம், தானியகேடம் என்பன சேர்ந்தவை; 16. ஏற்கெனவே உமக்குத் தெரிந்துள்ள ஸிந்து மாகாணத்துப் படாலம் முதலான இடங்களிலுள்ளவர்கள்; 17. பரபணி

சாடையிலுள்ள நிஷாதர்கள்; 18. மத்திய இந்தியாவிலுள்ள தர் என்பாரும் ஸுவர் என்பாரும்; 19. காபிடாலீஸ் மலைப் பிரதேசத்து நாரி என்பவர்கள்; இந்நாட்டின் நடுவிலுள்ள அம்மலை மிக உன்னதமானது; 20. ஓதூரர் அல்லது ராதார் என்பவர்கள்; பிரபலமான பதாதிப்படை உண்டு. யானைகள் மாத்திரம் பத்தே உள; 21. ஸௌராஷ்டிரி; இவர்கள் ஒரு க்ஷத்திரிய வீர கணம்; 1,000 யானை, 1,50,000 பதாதி, 5,000 குதிரை; தலைநகரம் அஷ்டமூலம் (வல்லபி); ஐந்து நதிகள் கூடுமிடத்திலுள்ள பெரிய வியாபார ஸ்தலம். இதன் மண்டலாதிபதி புஷ்யகுப்தன்; 22. சர்மமண்டலர்; 23. சூரியானியர். 24. ஜாதேஜர்கள், 25. கொக்கரியர், 26. உம்ராணியர், 27. கோகந்தர் முதலானவர்கள்; இவர்கள் சட்லஜ் நதிக்கும் கச்சு மாகாணத்திற்கும் இடையிலுள்ளார்; 28. கிரையர்களும் (Chryse), அரக்காணியர்களும் (Arakanese); இவர்களுக்குப் பொன் வெள்ளி முதலான உலோகங்கள் அதிகம் உண்டு; 29. பாண்டியர்கள், பூர்வத்தில் ராணி ஆண்ட நாடு; 300 நகரங்கள் வாய்ந்தது. 1,50,000 பதாதி, 500 யானை உள. தலைநகரம் மதுரை, 30. ஆர்க்காட்டைத் தலைநகரமாகக் கொண்ட சோழர்கள்; 31. திருப்புனற்றுறையைத் தலைநகரமாக கொண்ட சேரர்கள் (கேரள புத்திரர்கள்); 32. சிங்களத்தீவு; இத்தீவில் 750 கிராமங்கள் உள; 9,000 குரோச நீளமும், 5,000 குரோச அகலமும் உள்ளது; இன்னும் எத்தனையோ இருக்கின்றன. அவைகளை விரித்துச் சொல்வதனால் அலுப்பாகும்; அவை அவ்வளவு முக்கியமானவையல்ல.

மேகா: விநோதமான விஷயங்கள் இன்னும் எவையேனும் உண்டோ?

காந்: வேண்டுமானால், எங்கள் வேதாந்திகளைப் பற்றி அதிசயமான சங்கதிகள் சில சொல்வேன்.

மெகா: அவர்களைப்பற்றி எனக்கு எல்லாம் தெரியும். அலெக்சாண்டருடன் வந்திருந்த கிரேக்கர்கள் தண்டிஸ்வாமி, கலனஸ் முதலான அநேக யோகிகளைக் குறித்து விவரமான விருத்தாந்தங்களை எழுதி வைத்திருக்கிறார்கள். ஸௌஸா என்னும் ஊரில் கலனஸ் இறந்துபோன விவரம் இங்கே உங்களுக்குத் தெரியாதென்று நினைக்கிறேன். அதைக் கண்கொண்டு பார்த்த நியார்க்கஸ் என்பவன் எழுதிய விவரத்தை நான் படித்துள்ளேன்.

காந்: அதை நான் கேட்டதில்லை. தயைசெய்து சொல்லும்.

மெகா: நல்லது, ஸௌஸா என்னும் ஊர்வந்து சேருகிறவரையில் கலனஸ் நல்ல ஆரோக்கிய ஸ்திதியில் இருந்தார். மனங்கொண்டவாறு உண்டு குடித்துக் களித்தார். முன்னர் அவர் துறவறவொழுக்கம் மேற்கொண்டிருந்தவராயினும், இத்தீனியினால் அவருக்கு அஜீர்ண நோய் முதலான கேடொன்றும் சிறிதும் நேராதிருந்தது. ஆயினும், ஸௌஸாவில் அவருக்கு வயிற்று நோய் உண்டாயிற்று. நோயாளியாக வாழ்ந்திருக்க அவருக்கு விருப்பமில்லை; நிஷேதமான உணவுப் பொருள்களையும் மதுவகைகளையும் அருந்தியதனால் கெட்டானென்று இந்தியரும் மற்றவரும் தம்மைச் சுட்டிப் பேச அவருக்கு இஷ்டமில்லை. ஆதலின், நோய் முதிருமுன் உயிர் துறக்க நிச்சயித்திருப்பதாக அவர் அலெக்சாண்டருக்குச் சொன்னார். அங்ஙனம் செய்யலாகாதென அவர் மனத்தை மாற்றுவதற்கு அலெக்சாண்டர் மிக மிக முயன்றான். ஆயினும், அவன் வார்த்தை

ஏறவில்லை. ஒருவகையில் இல்லாவிட்டால் மற்றொரு வகையிலேனும் கலனஸ் உயிர் போக்கிக்கொள்வாரெனவும், அவரது பிடிவாதத்திற் சிறிதும் இளக்கமுறார் எனவும் அலெக்சாண்டர் தெரிந்துகொண்டான். ஆகையால், அவர் விரும்பியவண்ணமே ஈமவிறகினாற் சிதை அடுக்கும்படி டாலமிக்குக் கட்டளையிட்டான். கலனஸ் ஏறிக்கொண்டு போவதற்குத் தன்னுடைய சொந்தக் குதிரைகளிலொன்றை அலெக்சாண்டர் கொடுத்தான். ஆனால், அவர் அதன்மீது ஏறமுடியாதிருந்தார். அவருக்கு, இந்திய முறைப்படியே பூமாலைகள் போட்டு, இந்து வழக்கப்படியே அவரை டோலியிற் தூக்கிக்கொண்டு போனார்கள். போகும் வழி நெடுக அவர் தெய்வ ஸ்தோத்திர கீதங்களைப் பாடிக்கொண்டே போனார். அவருக்கு முன்னணியில் குதிரை வரிசைகளும் ஆயுதபாணிகளான வீரர் படையும் மௌனமாகவும் கம்பீரமாகவும் சென்றன. அவ்வாட்களிற் சிலர் பொற்கலசங்களிலும் வெள்ளிக் கலசங்களிலும் சாம்பிராணித் தூபம் போட்டுக்கொண்டே போயினர். தமக்காக அலெக்சாண்டர் கொடுத்த ராஜாங்கக் குதிரையை அவர் தம்மிடம் வேதாந்தம் பயின்ற லிஸிமெகாஸ் என்பவனுக்கு இனமாகக் கொடுத்துவிட்டார். அவருடன் சிதையிற்போட்டு எரிக்கும்படி அலெக்சாண்டர் கட்டளையிட்டிருந்த கலசங்களையும் வஸ்திரவிசேஷங்களையும் கலனஸ் தமக்குப் பணிவிடை செய்த ஆட்களுக்கு இனமாகக் கொடுத்தார். சிதையை அணுகி ஈசுவரப் பிரார்த்தனைசெய்து, அங்கிருந்தவர்கள் எல்லாரிடமும் விடைபெற்று அவர் அதன்மீது ஏறினர். தன் நண்பர் தம் உயிரைத் தாமே போக்கிக்கொள்ளும் கண்ணராவியைக் காண மனங் கொள்ளாதவனாய் அலெக்சாண்டர்

அவ்விடம் வரவில்லை. சிதையின்மீது ஏறியவுடன் கலனுஸ் அதன்மீது படுத்துத் தம் ஆடைகளினாலே தம்மை மூடிக் கொண்டு ஈமத்திற்குத் தீமூட்டச் சொன்னார். மாஸிடோனியர்களெல்லாரும் அன்றைத்தினம் அரசனுடன் மனம்வந்தவாறு மதுவுண்டு மதோன்மத்தராய் ஆனந்தமாக இருக்கவேண்டுமெனப் பணித்தார். 'அரசனை நான் பாபிலனிற் சந்திக்கிறேன்' என்றும் சொன்னார். அலெக்சாண்டர் பின்னர் பாபிலனில் இறந்தபோது, அவனுடைய ஆட்களெல்லாரும் இவர் இங்கே சொல்லிய வார்த்தையை நினைத்துக்கொண்டார்கள். ஈமம் தீப்பற்றியவுடனே, அலெக்சாண்டர் கட்டளையிட்டிருந்தவண்ணம் நியார்க்கஸ் தாரைகள் ஊதச்செய்தான். அங்குக் குழுமியிருந்த சைனியம் முழுதும் சண்டைக்குச் செல்வதுபோல யுத்தத்தொனி யெழுப்பி ஆரவாரித்தது. கலனுஸுக்கு மரியாதைசெய்யும் பொருட்டு யானைகள் தங்கள் முழக்கத்தால் விண்ணைப் பிளந்தன. ஜ்வாலை அவரைச் சூழ்ந்துகொண்டபோது அவர் சிறிதும் அசையாமற் சாம்பலாய் முற்றும் எரிந்துபோம்வரையில் ஒரே நிலையில் இருந்தார். கலனுஸ் சொல்லிப்போன வார்த்தையின்படி அலெக்சாண்டர், தன் நண்பர்களையும் தளகர்த்தர்களையும் அழைத்துப் பெருவிருந்தளித்தான். அந்த விருந்தில் அதிகமாக மதுவுண்பவனுக்கு ஒரு கிரீடம் பரிசளிப்பதாகக் கூறினான். புரோமெகாஸ் (Promachos) என்பவன் $8\frac{3}{4}$ படி மதுவைப் பானம் செய்து அந்தக் கிரீடத்தைப் பரிசாகப் பெற்றானாயினும், 3 நாளில் இறந்துபோனான். இவ்வாறே நாற்பத்தொருவர் மரித்தனர்.

காத்: அதிசயம், அதிசயம்! கலனுஸின் முடிவைப் பற்றி இந்தியர்களுக்கு நான் சொல்லவேண்டும். இனி

வேறு விசித்திரமான விஷயங்களைக் கவனிப்போம். சதியைப் பற்றி உமக்குத் தெரியுமா? சதி என்பது கணவனுடைய சிதையில் மனைவியும் விழுந்து உயிர்போக்கிக்கொள்ளல். இது சில க்ஷத்திரியர்களுக்குள் வழக்கமாயிருக்கின்றது.

மேகா: அதைப்பற்றியும் எனக்குத் தெரியும். கேடியஸ் (Keteus) என்னும் இந்தியத் தளகர்த்தன் யூமினீஸுக்கும் அன்டிகோனஸுக்கும் நடந்த பெரும்போரில் இறந்தபோது அவனுடைய மனைவியர் இருவரும் சககமனப் பெருமை தமக்கே வேண்டுமெனப் போராடினர். மூத்தவள் கர்ப்பிணி யாயிருந்ததனால், அவள் தன் உயிரைக் கணவனுடன் சிதையிற் போக்கிக் கொள்ளக்கூடாதெனத் தடுத்து இளைய வளுக்கு அனுமதி கொடுத்தார்கள்.

காத்: இதைக் குறித்துக் கிரேக்கர்கள் என்ன சொன்னார்கள்?

மேகா: இவ்வாத்ம த்யாகத்தினால் விளங்கும் தீரத்தையும் பதிபக்தியையும் சிலர் மெச்சி மகிழ்ந்தார்கள்; இது தற்கொலையென வேறு சிலர் இகழ்ந்தார்கள்; கலனஸ் செய்துகொண்ட தற்கொலையினும் இது கொடியது என்றார்கள். ஏனெனில், இது வழக்கத்தினாலேற்பட்ட தற்கொலை; கலனஸோ தம் சொந்த இஷ்டத்தினால் உயிரைப் போக்கிக்கொண்டார். உங்கள் அவையிலும் இந்தச் சம்பிரதாயம் உண்டோ?

காத்: இல்லை, இல்லை. பிராமணர்கள் இதை அனுசரிக்கக்கூடாதென்னும் நிஷேதம் உண்டு. மற்றவர்களும் இந்தப் பிரதேசங்களில் இதை அதிகமாக அனுசரிப்பதில்லை. ஒவ்வொருவரும் இவ்வுலகத்திற் செய்யும் நன்மை தீமைகளை மறுவுலகில் அனுபவிக்கிறார்களென்பது எங்கள் கொள்கை. தற்கொலை என்பது பாபகாரியம். அது நாகத்

திற் செலுத்தத்தக்கது. கணவனை இழந்தவள் தற்கொலை செய்துகொள்வதனால் நரகத்திற்குப் போவாளேயல்லாமல், கணவனுக்கு எவ்விதத்தும் துணையாகாள். அவள் உயிரோ டிருந்து, இறந்துபோன கணவனுடைய பிதுருக்களுக் குச் செய்யவேண்டிய சிராத்தம் முதலான கர்மாக்களைச் செய்வாளாயின், அவன் நற்கதி பெறுவதற்கு அது துணை யாகும்.

மேகா: நான் கேட்கவேண்டியவற்றை யெல்லாம் கேட்டுக்கொண்டேன். சங்கதிகளை நீர் எடுத்துச் சொல்லிய தற்காக உமக்கு வந்தனம்.

இவ்வாறு சொல்லி, அவன் தன் கையேட்டுப் புத்த கத்தை மூடிவிட்டுக் காத்தியாயனனுக்குப் பத்துப்பொற் பணம்கொடுத்தான். அந்தப் பணத்தைத் திருப்பிக்கொடுத் துக் காத்தியாயனன், "ஐயா! நான் இதை ஏற்றுக்கொள்ள முடியாது. எங்கள் அரசர் எங்களுக்குத் தாராளமாகச் சம்பளம் கொடுக்கிறார்; விருந்தினரிடமிருந்து இனாம் ஏற்க இடங்கொடார்" என்று சொன்னான். அதற்கு மெகாஸ் தனீஸ், "நல்லது; அப்படியானால், உமக்கு நிரம்பவந்தனம் செய்கின்றேன்" என்றான். "ஐயா, க்ஷேமமாய் உம் ஊருக் குப் போய் வாரும்" என்று சொல்லிக் காத்தியாயனன் மெகாஸ்தனீஸிடம் விடைபெற்றுச் சென்றான்.



## அத்தியாயம் 35

## பஞ்சமும் பெருவாரியும்

இந்தியாவில் ஒருகாலும் பஞ்சமே இல்லை யென்னும் புளுகுக்கதையைக் கேட்டுக்கொண்டு மெகாஸ்தனீஸ் இந்தியாவை விட்டு நீங்கினானோ இல்லையோ, இந்நாடு முழுதும் கொடிய பஞ்சம் மெய்யாகவே ஏற்பட்டது. சாம்ராஜ்யம் முழுவதிலும் மழை பெய்யவில்லை. சுவர்ணகிரி ராஜப்பிரதிநிதியின் ஆட்சிக்குட்பட்ட குந்தலம், ஈசிலை, பிரம்மகிரி முதலான தென்மாகாணங்களைத் தவிர மற்ற இடங்களில் வானம் வறண்டது. பஞ்சத்தின் கொடுமை உக்கிரமாகப் பரவியது. வட இந்தியாவிலும் மத்திய இந்தியாவிலும் மகாராஷ்டிரத்திலும் விளைவே இல்லாமற்போயிற்று. கிணறுகளெல்லாம் வறண்டேபோயின. மனிதர்களும் கால்நடைகளும் குடிப்பதற்குப் போதிய நீர் அருமையாயிற்று. சூரிய வெப்பத்தின் கடுமையினால் புற்றரைகள் புகைந்து போயின. தீனியும் தண்ணீரும் இல்லாமல் முதலில் ஆடு மாடுகள் ஆயிரக்கணக்காகச் சாகத் தலைப்பட்டன. பின்னர் மனிதர்கள் சாகலானார்கள்; முதலில் ஒருவர் இருவராக, பின்பு பதின்மர் இருபதின்மராக, பின்னர் நூற்றுவராக, முடிவில் ஆயிரக்கணக்காக இறக்கலாயினர்.

தம்மால் இயன்றமட்டும் பெருமுயற்சி செய்து அரும்பாடுபட்டு க்ஷாமத்தை நிவர்த்திப்பதற்கு வேண்டிய வழிவகைகளை அமைத்துக் குடிகளுக்கும் கால்நடைகளுக்கும்

உதவிசெய்யவேண்டுமென்று சக்கரவர்த்தி தன் துறைத் தன அதிகாரிகள் எல்லாருக்கும் உருக்கமாகவும் கண்டிப்பாகவும் கட்டளைகள் அனுப்பினான்.

அவர்களெல்லோரும் தங்களால் இயன்ற வரையில் முயற்சி செய்தனராயினும் எதுவும் பயன்படவில்லை. இயற்கையினால் நேருகிற அகோரமான ஆபத்துக்களை எதிர்ப்பதில் மனிதப் பிரயத்தனத்திற்கும் ஓர் எல்லை உண்டெனவே தோன்றியது. கி. மு. 299-ஆம் ஆண்டு இந்தியாவுக்கு மிகக் கொடுமையான க்ஷாம காலமாகும்.

பஞ்சம் பரவிய பிரதேசம் முழுதும் இறந்தாராலும் இறப்பவராலும் நிரம்பியது. பஞ்சத்தின் கொடுமை போதாமல் அது பரவிய பிரதேசமெல்லாம் வாந்திபேதி என்னும் கோரமான பெருவாரி நோய் கிளம்பியது. வயிற்றுக்கில்லாமல் அனாரோக்கியமான உணவுகளை உண்டதனாலும், அழுக்குப்பிடித்து நோய்பற்றிய நீரைக் குடித்ததனாலும் அப்பெருவாரி தோன்றியது. யமுனைக்கரையில் இந்திரப்பிரஸ்தத்திலும், கங்கைக்கரையில் ஹஸ்தினாபுரத்திலும், மாளவத்தில் உஜ்ஜயினியிலும், பாடலிபுரத்திலுங் கூட வாந்திபேதி முதன் முதல் ஆரம்பமாயிற்று. அதனால், ஆயிரக்கணக்கான ஜனங்கள் மாண்டனர். அந்தப் பிணங்களைத் தகனம் செய்யாமல் அறிவில்லா மக்கள் ஆறுகளில் எறிந்தனர். கங்கையின் தென்புறத்தில் தாமிரலிப்தி வரையிலுள்ள ஆற்றோரத்துப் பட்டணங்களிலெல்லாம் அந்நோய் விரைவில் பரவியது. சோறும் தண்ணீரும் தேடி ஜனங்கள் கூட்டங் கூட்டமாக இடம் விட்டு இடம் பெயர்ந்து போய்க்கொண்டிருந்ததனால், விராடபுரம், வனகௌசாம்பி, பிரதிஷ்டானம், தானியகேதம், பாருகச்சா, சூரத்து முதலான பற்பல பட்டணங்களுக்கும் வாந்திபேதி நோய்

பரவியது. இப்பட்டணங்களுக்கு இடையிலுள்ள கிராமங்களும் இதனால் நாசமாயின.

இந்நோயை நிவர்த்திப்பதற்கு ஜனங்கள் தொன்று தொட்டுச் செய்துகொண்டிருந்த வகைகளை யெல்லாம் மேற்கொண்டு பார்த்தும் பயன்படவில்லை. தந்துகச்சன் என்னும் பூதத்திற்கும் மாரியம்மனுக்கும் பூசைகள் போட்டுப் பலிகள் கொடுத்தார்கள். பசுக்களைக் கொண்டுபோய்ச் சுடுகாட்டிற் பால் கறந்தார்கள். சாமானியமாகப் புதைக்க வேண்டிய பிணங்களையும் எரித்துச் சாம்பராக்கினார்கள். இரவு முழுதும் பஜனைகளும் ஆராதனைகளும் செய்தார்கள். எதனாலும் நோயின் உக்கிரம் தணியவில்லை. கடுமையான பஞ்சத்தினாலும் பெருவாரிப் பீடையினாலும் ஐந்து கோடி ஜனங்கள் மிகக் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தார்கள்; இவ்விபத்துக்களினால், நாள்தோறும் மரித்துக்கொண்டிருந்தார்கள். வறுமை மூண்ட மக்கள் தங்கள் குழந்தைகளை நூற்றுக்கணக்காகக் கைவிட்டுப் போனார்கள். ஏழைக் குடிகள் ஆயிரக்கணக்கானவர்களை அடிமைகளாகவும் விற்றார்கள். அநேக புருஷர்களும் ஸ்திரீகளும் ஒப்பந்தக் கூலி வேலையிற் புகுந்தார்கள். அந்தக் கூலிவேலை என்பது அடிமைத்தனத்திற்கு ஈடானதே. தின்னவும் பருகவும் ஏதேனும் வேண்டுமே என அவர்கள் இப்படிப்பட்ட கஷ்டங்களுக்கு உட்பட்டார்கள்.

காலனும் கொள்ளைநோயும் நாட்டில் இங்ஙனம் தாண்டவமாடிக்கொண்டிருக்க, பத்ரபாகு ஸ்வாமி என்னும் பெரிய ஜைனமதாசாரியர் வடபுறத்திலுள்ள பெரிய நகரங்களில் தோன்றி, உள்ளக்கிளர்ச்சி உண்டாக்கத் தக்க மதோபதேசப் பிரசங்கங்கள் செய்யத் தலைப்பட்டார். முதன் முதல் வைசாலி என்னும் பட்டணத்தில் ஆரம்பம்

செய்து பாடலிபுரம், பிரயாகை, காசி, உஜ்ஜயினி என்னும் இடங்களில் பிரசங்கம் செய்யப்போனார். நாளுக்கு நாள் ஜனங்கள் அவரைப் பின்பற்றலானார்கள். ஜனங்கள் பூர்வத்திற் செய்த தீவினையினாலும், இப்போது துரா கிருதம், கொடுமை, உடன்பிறந்த பிராணிகளைக் கொல்லல் என்னும் கெட்ட காரியங்களைச் செய்வதனாலுமே இப் பஞ்சம் நேர்ந்ததென்று அவர் ஜனங்களுக்கு உபதேசித்து வந்தார். பொதுவாக ஆருகதரின் போதனையையும் கேவலி களின் உபதேசத்தையும், முக்கியமாக மகாவீரர், பாரிசுவ நாதர் என்பவர்களின் குருமொழிகளையும் கேளாமற் புறக் கணித்ததனாலேயே இந்தத் துன்பங்கள் நேர்ந்தனவென்றே அவர் எல்லாருக்கும் சொன்னார். "தெற்கேயுள்ள மகிஷ மண்டலத்தில் க்ஷாமம் இல்லை. எல்லாரும் புறப்பட்டு அங்கே போய்க் குடியேறவேண்டும்" என்று அவர் உபதே சித்தார். அன்றியும், "பஞ்சத்தின் கொடுமையினால் ஜனங் கள் தாங்கள் செய்யவேண்டிய நற்காரியங்களைச் செய்யவும் தர்மங்களை அனுசரிக்கவும் முடிவதில்லை. ஆதலினாலே பஞ்சமில்லாமல் சுபிக்ஷமாக இருக்குமிடத்திற்குப் போக வேண்டும்" என்றும் அவர் காரணங்கூறினார். "கொடுப்ப தற்கு ஒன்றும் இல்லாமையால் தானதர்மம் நின்றுபோயின. எதையேனும் எவ்வகையிலேனும் புசிக்கவேண்டும், பருக வேண்டும் என்னும் நோக்கத்தினால் பேராசை பதின்மடங்கு அதிகமாயிற்று. ஊர்ருக்கும் உறவினருக்குங்கூடத் தாராள மாகக் கொடுத்துதவும் தயாளம் மறைந்தேபோயிற்று. புராதனமான ஆரியதர்மம் நசித்துக் கொண்டிருக்கிறது. பொருள்வளம் மிக்க தென்னாட்டுக்குப் போய் நமது ஆரிய தர்மத்தைப் பரிபாலித்துப் பரப்புவோம்" என்று அவர் எல்லாருக்கும் சொல்லி வந்தார்.

ராஜாங்கத்தைத் துறந்து மற்றெவரிடமேனும் ஒப்படைத்துவிட்டுத் தம்முடன் வருமாறு சக்கரவர்த்திக்கும் அவர் விண்ணப்பம் செய்தார். அவருடைய உபதேசங்களினால் சந்திரகுப்தன் மனம் மிக இளகியிருந்தான். அவர் கேட்டுக்கொண்டபடி அவருடன் போவதற்கே அவன் இசைவுகொண்டிருந்தானாயினும், சாணக்கியருடைய புத்திவாத மகிமையினால் அவன் முடிவில் பத்ரபாகுஸ்வாமியின் விருப்பத்திற் கிணங்க மறுத்தான். பத்ரபாகுஸ்வாமிக்கு அவன் பின்வருமாறு பதில் எழுதியனுப்பினான்:—

"நிதானமாகவும் நன்றாகவும் நான் ஆழ்ந்து ஆலோசித்துப் பார்த்துத் தாங்கள் சொல்லிய பிரகாரம் அரசைத் துறத்தலும் தங்களுடன் போதலும் சரியல்லவெனத் தீர்மானித்துள்ளேன். ராஜ்யத்தின் துரைத்தனத்தை மேற்கொள்வதற்கு என் மகன் இன்னும் ஏற்றவனாக இல்லை. அன்றியும், ராஜ்யத்தை அவனிடம் ஒப்பிப்பதற்கு உற்ற சமயம் இதுவன்று. பஞ்சத்தையும் பெருவாரியையும் பொறுக்கமாட்டாமல் இடம்விட்டோடி எங்கள் சொந்த சாந்தத்தையும் சமாதானத்தையும் க்ஷேமத்தையுமே பாராட்டிக்கொள்ளாமல், கடவுளைப் பிரார்த்தித்து இவ் விபத்துக்களை எதிர்த்துப் போராடுவதே தகுதியெனப் போற்றற்பாலரான என் ஆசாரியர் சாணக்கிய மூர்த்தியும் நானும் தீர்மானித்துள்ளோம். இத்தருணத்தில் எம் பிரஜைகளைவிட்டு நாங்கள் ஓடுவது பெரும்போரினிடையே படைகளை விட்டு ஓடுவதற்கு ஒப்பாகும். நன்மையிலும் தீமையிலும், வளமையிலும் வறுமையிலும், தன் குடிகளண்டையிருந்து அவர்களை ஆதரிப்பதே அரசனுடைய தர்மமென நான் திடமாகத் தெரிந்துள்ளேன். சாமான்யமான சிற்றரசனாயிருப்பின், அவன் பெரும் பஞ்சம் நேர்ந்

தக்கால் தன் குடிகளுடன் நாட்டை விட்டுக் கிளம்பி வேற்றூருக்குப் போவதற்காகும். விஸ்தாரமான பெரிய சாம்ராஜ்யத்திற்கும் கோடிக்கணக்கான பிரஜைகளுக்கும் அதிபதியாயிருக்கும் என்னைப்போன்றவன் அங்ஙனம் கனவிலும் கருதலாகாது. ஆதலின், புண்ணிய புருஷராகிய தாங்கள் சொல்லிய ஆலோசனையை ஏற்க விசனத்துடன் மறுக்க வேண்டியவனாயிருக்கிறேன். ஆயினும், நீங்கள் பரதேசம் போவதற்கு அனுகூலமாயிருக்கும்பொருட்டு எனது சைனியத்தினின்று 500 மாட்டு வண்டிகள் அனுப்பியிருக்கிறேன்; அன்றியும், தங்களுக்கு வேண்டிய உதவி செய்யுமாறு சுவர்ணகிரியிலுள்ள ராஜப்பிரதிநிதிக்கும் எழுதுகிறேன்."

தக்ஷசிலைக்குப் பிந்துசாரனை ராஜப்பிரதிநிதியாக நியமித்தபோது, ராஜவைசிய புஷ்பகுப்தனின் மகனை சந்திரகுப்தனை உஜ்ஜயினிக்கு ராஜப்பிரதிநிதியாக நியமித்திருந்தார்கள். சீரும் சிறப்பும் வாய்ந்த அவ்விளைஞன் பத்ரபாகுவின் போதனைக்குட்பட்டுத் தனது உயரிய உத்தியோக ஸ்தானத்தைத் துறந்து ஜைனனாகி, அந்த ஜைனாசாரியரைப் பின்பற்றி 25,000 ஜனங்களை அழைத்துக் கொண்டு தென்னாட்டுக்கு ஏகினன். அவனை இழப்பது சக்கரவர்த்திக்குத் துன்பகரமாயிருந்தபோதிலும் அவன் போவதைத் தடுக்க அரசன் முயலவில்லை. அவனுடைய ஸ்தானத்தில் லோகிதாக்ஷனை ராஜப்பிரதிநிதியாக நியமித்தான்.

பின்பு, பஞ்சத்தையும் பெருவாரி நோயையும் நிவாரணம் செய்வதற்காகச் சக்கரவர்த்தியும் சாணக்கியரும் கடுமையான முயற்சிகளை மேற்கொண்டனர். பாடலிபுரத்திலும் மற்ற நகரங்களிலும் அகவிலை அல்லல்களும்

கலகங்களும் ஆரம்பமாயிருந்தன. வர்த்தகர்களிடமுள்ள தானியசேகரத்தையெல்லாம் சர்க்காரின் களஞ்சியங்களுக்கு நியாயமான விலைகளுக்கு விற்றுவிடவேண்டுமென ராஜாக்கினை பிறப்பித்தார்கள்; செல்வவான்களுக்கு அதே விலைக்கு விற்கவும், ஏழைகளுக்கும் பசி பட்டினியால் வருந்துவோருக்கும் குறைந்தபக்ஷம் எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு தினந்தோறும் இனமாகக்கொடுக்கவும் ஏற்பாடுசெய்தார்கள். இங்ஙனம் மேற் சொல்லிய கலகங்களை ஆரம்பதசையிலேயே அடக்கிவிட்டார்கள். தனகீர்த்தி என்னும் பெரிய வர்த்தகன் ஒருவன் ஐம்பதினாயிரம் நெல் மூட்டை வைத்துக்கொண்டிருந்தும், தன்னிடம் ஆயிரம் மூட்டைகளே உளவென நியாயாதிபதியினிடம் பிரமாண வாக்குமூலங் கொடுத்தான். அவ்வாயிர மூட்டைகளுக்குப் பணங் கொடுக்கச் சொல்லிச் சந்திரகுப்தன் தனகீர்த்தியின் மண்டியிலிருந்த பாக்கி நாற்பத்து ஒன்பதினாயிரம் மூட்டைகளையும் பணங்கொடாமலே, சர்க்காரின் களஞ்சியங்களுக்குக் கொண்டுவந்து சேர்க்கும்படி டிங்கரதனுக்குக் கட்டளையிட்டான். இந்தத் தண்டனை எல்லாரையும் சுறுக்கெனக் குத்தியது. தம்மிடத்தில் எவ்வளவு சரக்கு இருக்கிறதென ஏற்கெனவே பட்டியெழுதிக்கொடுத்திருந்த மற்ற வர்த்தகர்களெல்லோரும், தனகீர்த்திக்கு நேர்ந்ததைக் கண்டவுடனே, தம்மிடத்திலுள்ள அதிகச் சரக்குக்கு உபபட்டிகள் கொடுக்கலானார்கள். இதனால் சாம்ராஜ்யம் முழுவதிலுமுள்ள ஜனங்களெல்லாரும் தாராளமாக ஒருவருஷ காலம் புசிப்பதற்கும், மறு வேளாண்மைக்கு விதை எடுத்து வைப்பதற்கும் போதிய தானியம் கிடைத்தது.

பின்னர், சக்கரவர்த்தியும் சாணக்கியரும் சமுத்திரநாதன் வசத்தில் துரைத்தனக்கப்பல் ஓராயிரமும், வாட

கைக் கப்பல் ஓராயிரமும் ஒப்பித்தார்கள். நந்தர்கள் குவித்து வைத்திருந்த திரவியத்திரளினின்று ஒரு கோடி பொற் பணமும் கையிற் கொடுத்தார்கள். சோழ பாண்டிய கேரள சிங்கள தேசங்களுக்குப் போய், அங்கங்கே கிடைக்கக் கூடிய நெல் அத்தனையும் வாங்கிவரும்படி சொன்னார்கள். அவன் ஆறுமாதத்தில் 40 லக்ஷம் நெல் மூட்டைகளுடன் திரும்பிவந்தான். தன்வசத்திலிருந்த 2,000 கப்பல்கள் போதாமல், தென் தேசத்திலிருந்த 2,000 கப்பல்களி லும் அவைகளை ஏற்றிக்கொண்டு வந்தான். பாண்டிய சோழ கேரள சிங்கள தேசத்தரசர்கள், 'தர்மமே எங்கள் குலதெய்வம்' என்னும் தங்கள் விருதுக்கு விரோத மானமையின் ராஜாங்கக் களஞ்சியங்களினின்று கொடுத்த 10 லக்ஷம் மூட்டை நெல்லுக்கும் பணம் வாங்கிக் கொள்ள மறுத்தார்களென்னும் சுபவர்த்தமானத்தை யும் அவன் சொன்னான். சக்கரவர்த்தியும் சாணக்கி யரும் பரம சந்தோஷப்பட்டு உடனே சுவர்ணகிரியில் ராஜப்பிரதிநிதியாக இருந்தவனுக்கு உத்தரவு அனுப்பிப் பொதியில் மலையிலும் பாண்டிய சோழ ராஜ்யங் களிலும் வைத்திருந்த தங்கள் படைகளை அங்கிருந்து அகற்றிக் குந்தல மாகாணத்திற்கும் மகிஷமண்டலத்திற்கும் கொண்டுபோகும்படி சொன்னார்கள்; அன்றியும், தென் னாட்டு ஸ்வதந்திர ராஜ்யம் ஒவ்வொன்றுக்கும், அவர்கள் ஆசைப்பட்டுக்கொண்டிருந்த பொற்சக்கர ரதங்களில் ஒரு நூறு இனாமாகக் கொடுத்து, இனி ஒருநாளும் அவர்களுக் கும் தங்களுக்கும் போர்ப்பிணக்கே இராதென உறுதி கூறச் சொன்னார்கள்.

சைனியத்திலுள்ள 60,000 மாட்டு வண்டிகளில், பஞ்சம் பரவிய பிரதேசங்களுக்கெல்லாம் தானியம் கொண்டு

போய்ச் சேர்க்கும்படி சந்திரபானுவுக்கு உத்தரவாயிற்று. "இங்ஙனம் சைனியத்திலுள்ள வண்டிகளெல்லாவற்றை யும் பஞ்சம் தணிக்க அனுப்பிவிடுவது யுக்தமாகுமோ? இந்தச் சமயம் பார்த்து, சத்துரு எவனேனும் படையெடுத்து வந்தால் என்ன செய்வது?" எனச் சாணக்கியரை நோக்கி ராக்ஷஸன் வினவினன். "நம்மை எதிர்க்கக் கூடிய சத்துரு இப்போது எவன் இருக்கின்றான்? சலூகஸூம் தென்னாடுகளின் அதிபதிகளும் நம் நண்பர்கள். வடக்கேயுள்ள கிராதர்களும் காம்போஜர்களும் பலமற்றவர்களானமையின், தாங்களாக முற்பட்டு வந்து நம்மைத் தாக்கக் கனவிலும் எண்ணார். நம்மை இப்போது எதிர்க்குமவ்வளவு முட்டாளாயிருப்பரேல், நம்நாட்டு ஜனங்கள் பஞ்சத்தினாலும் வாந்திபேதியினாலும் இறவாமல் பிழைத்திருப்பார்களாயின், அவர்களில் ஒவ்வொருவனும் ஒவ்வொரு படைவீரனைக் கிளம்பிப் படையெடுத்து வருபவரைக் கண்டங் கண்டமாக வெட்டித் தள்ளிவிடுவான்" என்று சாணக்கியர் மறுமொழி கூறினர்.

ஆற்றுக்கால்வாய்களைப் பழுதுபார்த்து ஆழமாக்கவும், கால்வாய்களுக்கு நீர் தாராளமாக வருமாறு சிற்றோடைகளில் அணைபோடவும் சக்கரவர்த்தியும் சாணக்கியரும் உத்தரவு செய்தார்கள். பஞ்சம் தணியும் வரையில் ஆற்றோரத்து நிலங்களில் உணவுப்பொருள்களையே பயிரிடவேண்டுமே யல்லாமல், பருத்தி சணல் முதலானவைகளைப் பயிரிடக் கூடாதென மிராசுதார்களுக்கு உத்தரவு செய்தார்கள். பஞ்சத்தின் கொடுமை அதிகமாயிருந்த இடங்களிலுள்ளவர்கள், ஸிந்துநதி கங்கையாறு யமுனையாறு முதலியன போன்ற நீர்வளங்குன்றாத நதிகளுக்குச் சமீபப் பிரதேசங்களுக்குப் போய்ச் சிலர் குடியேறுவதற்கு வேண்டிய

அனுகூலம் செய்தார்கள். நீர்வற்றிய ஏரித்தடங்களில் காய்கறி வகைகளும் கிழங்குகளும் தாற்காலிகமாகப் பயிரிடச் செய்தார்கள். கடுந்தண்டனை விதிப்போமெனப் பயமுறுத்தி வைத்தியர்களைப் படைபடையாக வகுத்து நோய்ப்பட்டாரைக் கவனித்துச் சிகிச்சை செய்யும்படி அனுப்பினார்கள். கொளுத்தாத பிணங்களை ஆறுகளில் எறியக் கூடாதெனத் தடுத்தார்கள். 'சர்க்கார் வேலைக்கார ரெல்லாரும் பிணங்களை, இறந்த 24 மணி நேரத்திற்குள் ளாக, தம் உறவினர்கள் தகனம் பண்ணும்படி செய்விக்க வேண்டும். உறவினர் அங்ஙனம் செய்யாவிடில், தாங்களே அப்பிணங்களைத் தகனம் செய்வித்து, அதற்கான செலவு களை அவ்வுறவினரிடமிருந்து வசூல் செய்யவேண்டும்' என விதித்தார்கள். ஒரு லக்ஷம் படைவீரர்களைக் கொண்டு ஸோணநதியின் குறுக்கே அணைகட்டி, ராஜதானியைச் சூழ்ந்து வறண்டுபோயிருக்கிற அகழிகளில் நீர் நிரப்பச் செய்தார்கள். இதனால், துரைத்தனத்தார் தங்களை எவ்விதத்தும் காப்பாற்றுவாரென்னும் நம்பிக்கையும் தைரியமும் நகரவாஸிகளுக்குத் திடமாக ஏற்பட்டன.

மற்றும், பெற்றோர் கைவிட்டுப்போன குழந்தைகளை எடுத்து வைத்து ஆதரிப்பதற்கான அநாதசாலைகளை அங் கங்கே சக்கரவர்த்தியும் சாணக்கியரும் அமைத்தார்கள்; திக்கற்றவர்களுக்கு இனமாகச் சோறு கொடுக்கச் சர்க்கார் மடைப்பள்ளிகள் அமைத்தார்கள்; பழைய கோட்டைகள் கட்டடங்கள் குளங்கள் முதலானவற்றைச் செப்பனிடுதல், புதியகோட்டைகள் வழிநடைச்சாலைகள் குளங்கள் கட்ட டங்கள் ஆகிய இவைகளை அமைத்தல் முதலான க்ஷாம நிவாரண வேலைகளைத் தொடங்கி ஜனங்களுக்குக் கூலி கொடுக்கத் தலைப்பட்டார்கள். மேற் சொல்லிய காரியங்

களினால் ஜனங்களுக்கு மெல்ல மெல்ல நம்பிக்கை அதிகமாயிற்று.

மேற்சொல்லியவற்றையன்றிப் பதினாயிரம் பிராமணர்களைக் கொண்டு, இந்திரன், வருணன், அக்கினி, அசுவினிகள், ஜயந்தன் என்பவர்களைக் குறித்தும், நதிவடிவமான ஜலதேவதைகளைக் குறித்தும், மேகாதாரமான பர்வதராஜனைக் குறித்தும் சாணக்கியர் மிகத் தீவிரமான வருணஜபம் செய்வித்தார். "சுவாமி! இந்த ஜபதபங்களினால் நற்பயன் விளையுமோ?" என ஸித்தார்த்தகன் வினவினான். "நிச்சயமாக விளையும். கடவுள் ஒருவர் உளரேல், ஜனங்களின் க்ஷேமத்திற்காகச் செய்யும் பிரார்த்தனைகளுக்கு அவர் இணங்கவே வேண்டும். பிரார்த்தனைகளும் யஜ்ஞ யாகாதி கர்மாக்களும் தேவதைகளின்பொருட்டு நாம் செய்வதற்குப் பிரதியாக அத்தேவதைகள் நமக்கு அளிக்கும் கொடை மழையேயாகும். நீடித்து மாத்திரம் பிரார்த்தனை செய்வோமாயின், ஈசுவரன் நம்பாற் கருணை கூர்ந்து மழை பெய்விப்பான் என்பது திண்ணம்" என்று சாணக்கியர் மறுமொழி கூறினர். பின்னும் ஆறுமாதகாலம் பஞ்சம் நீடித்திருந்தது. ஆனால், சாணக்கியர் அமைத்த க்ஷாம நிவாரணமுறைகளினாலும், சமுத்திரநாதன் கொண்டுவந்த தானியக் குவியல்களைச் சந்திரபாநு அங்கங்கே நன்றாகப் பகிர்ந்தளித்ததனாலும் இறப்பவர்களின் சங்கியை மிகமிகக் குறைந்தது.

பிராமணர்கள் வருணஜபம் செய்துகொண்டே வந்தார்கள். கி. மு. 298-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் ஒருநாள், தாபம் தணிக்கும் முகில்கள் வானத்தில் திரண்டு மூடம்போட்டன. வானம் வாய்திறந்தது. 18 மாதங்கள் பஞ்சத்தினாற் கஷ்டப்பட்டபின், தரையில் மழைபெய்து பெருக்கெடுத்துப் பிரளயமாயிற்று. தேசத்தின் பற்பல

பாகங்களிலும் வெள்ளம் வழிந்தோடியது. இங்ஙனம் நேருமென முன்னரே ஊகித்துச் சந்திரகுப்தனும் சாணக்கியரும் வெள்ளத்தை வடிக்கவும் வியவகரிக்கவும் வேண்டியதற்காகப் படகுகளையும் மற்றுமுள்ள சாதனங்களையும் ஏற்கெனவே அமைத்துவைத்திருந்தனர். ஆதலின், அவ்வெள்ளங்களிற் சில ஆயிரம் மரங்கள் பெயர்ந்தோடிப் போயின. சில லக்ஷம் ஏகரா நிலங்களில் நீர் நிரம்பி நின்றது. இம்மாத்திரமேயன்றி, வேறு பிரமாதமொன்றும் அக்கனமழையால் உண்டாகவில்லை. அந்நீர்ப் பெருக்குத் தணிந்தபின் வயல்களில் நெற்பயிர் நிரம்பின; நாட்டைப் பார்த்தால் பஞ்சமாவது பெருவெள்ளமாவது பெருவாரி நோயாவது நேரவே யில்லையெனத் தோன்றியது.

---

## அத்தியாயம் 36

## செழுமை மிக்க சாம்ராஜ்யம்

**ப**ஞ்சகாலம் போயிற்று. எங்கெங்கும் விளைபொருள்கள் நிரம்பப் பயிராகியிருந்தன. பஞ்சம், வெள்ளம், பெருவாரி நோய் ஆகிய இவைகளால் உண்டாகியிருந்த துன்பக் குறிகளெல்லாம் மறைந்துபோயின. சாம்ராஜ்யம் முழுவதும் சாந்தமும் சந்தோஷமும் செழுமையும் செல்வமும் நிறைந்து மிளிர்ந்தது.

இவ்வாறு க்ஷேமப்பட்டதற்காகக் கடவுளை வழிப்பட்டு நன்றி செலுத்தும்பொருட்டுச் சக்கரவர்த்தி புண்ணியஸ்தலங்களுக்குத் தீர்த்தயாத்திரைபோகத் தீர்மானித்தான். அவனுடன் ராணிகளும், சாணக்கியரும், புரோகிதரும் போனார்கள். அவர்கள் கி.மு. 296, மாசி மாதத்திற் புறப்பட்டனர். முதன் முதல் அவர்கள் காசிக்குப்போய்க் கங்கையின் மணிகர்ணிகா கட்டத்திலும், தசாசுவமேத கட்டத்திலும் ஸ்நானம்செய்து விசுவநாத சுவாமியைத் தொழுதார்கள். ஹரிச்சந்திர கட்டத்திற் பிணங்கள் அநேகம் எரிந்துகொண்டிருந்தன. அந்தச் சாம்பல்களையும் எலும்புகளையும் கங்காநதியில் எறிந்துகொண்டிருந்தார்கள். "சாம்பலையும் எலும்பையும் கங்கையிற் கொட்டுவதை நாம் தடுக்கவேண்டும்" என்று சந்திரகுப்தன் சொன்னான். "அங்ஙனம் செய்யலாகாது. இவ்வாறு எலும்புகளையும் சாம்பல்களையும் போடுவதனாலேயே இந்துக்

களுக்குக் கங்காநதி பவித்திரமாகின்றது. இங்ஙனம் அவை கள் கங்கையிற் கலப்பதனாலேயே இந்துக்களுடைய பூத பவிஷ்யத் வர்த்தமானங்கள் மூன்றும் ஒன்றோடொன்று இணைக்கப்படுகின்றன. எனவே, முற்பிறப்பும் இப்பிறப்பும் மறுபிறப்பும் மூன்றும் ஓரே பிரவாகமாகின்றன. வேண்டு மானால் நீ, வாந்திபேதியினால் இறந்தவர்களின் சவங்களைத் தகனம் செய்யாமல் ஆற்றில் எறிவதைத் தடுக்கலாம். ஆனால், சாம்பலையும் எலும்புகளையும் போடுவதைத் தடுக்காதே" என்று சாணக்கியர் சொன்னார். "கங்காநதிக்கரையிலுள்ள இப்பெரிய புண்ணிய நகரத்திற்கு, கங்கையை யொட்டிய பேரை வைக்காமல், கண்ணுக்குத் தெரியாத வாரணை என்றும் அசி என்றும் சொல்லப்படுகிற இரண்டு ஓடைகளின் பெயரை ஏன் வைத்திருக்கிறார்கள்?" என்று சந்திரகுப்தன் கேட்டான். "பெரிய மனிதனொருவன் சிறிய விருந்தினர் களைக் கௌரவிப்பது போலவாகும். கங்காதேவி தன் னிடம் வந்த வாரணை என்றும், அசி என்றும் சொல்லப் படும் சிறிய விருந்தினர்களைப் பெருமைப் படுத்துகின்றனள் என்பதாம்" என்று சாணக்கியர் சொன்னார்.

பின்பு, அவர்கள் பிரயாகைக்குப் போய்த் திரிவேணி சங்கமத்தில் நீராடினர். திரிவேணி சங்கமமாவது பிரத்திய க்ஷமாயுள்ள கங்கையும் யமுனையும் அப்பிரத்தியக்ஷமா யுள்ள ஸரஸ்வதியும் ஆகிய மூன்று ஆறுகளும் ஒன்று கூடும் இடமாம். "கண்ணுக்குத் தெரியாத இந்நதியை இன்னும் ஏன் சேர்த்துக்கொள்கிறார்கள்?" எனச் சந்திர குப்தன் வினவினான். "ஏனெனில், சூக்ஷ்மத்தைத் தவிர்க் கின்ற ஸ்தூலம் பூரணமாகாது" என்று சாணக்கியர் பதில் மொழிந்தார்.

அவர்கள் ஹரித்துவாரத்திற்குப் போய்த் தக்ஷப் பிரஜாபதி கட்டத்தில் ஸ்நானம் செய்தபோது சந்திரகுப் தன், "பிரஜாபதி என் அங்ஙனம் அழிக்கப்பெற்றனன்?" எனச் சாணக்கியரை வினவினன். "ஏனெனில், கர்மாவே பக்தியினும் முக்கியமென அவன் நினைத்தனன். அதனால் பாரமார்த்திக அகங்காரமென்னும் பிரமாதமான பாபத்தை வளர்த்துக்கொண்டனன்; பாரமார்த்திகப் பெருமையைக் குறைத்து இம்மைச் சௌக்கியப் பெருமையை மிகைப் படுத்தினன். அதனால் அழிவுற்றனன். அவனுடைய சொந்த மகளும் அவனைக் கைவிட்டனள். அவனுக்கு நேர்ந்த கேட்டை எண்ணித் தேகாத்மவாதிகள் நற்புத்தி மேற்கொள்வார்களாக. கடவுளுக்கு நமது செல்வமும் வேண்டாம், சிறப்பும் வேண்டாம்; நமது ஆவாகனமும் வேண்டியிருக்கவில்லை. விசர்ஜனமும் வேண்டியிருக்கவில்லை. அவைகளால் அவருக்கு ஆகத்தக்கது ஒன்றுமே இல்லை. ஆனால், ஆத்மலாபத்தைக் கைவிட்டு இம்மைப்பயனையே நாடித்திரியும் தேகாத்மவாதிகள் மனவமைதியை இழப்ப தன்றி, உயிரையும் இழக்கநேரும். உயிரானது அழுகிய மரம்போல உளுத்து நின்று, இல்லையே யென எவரும் துக்கிக்காமலே அற்று, இருந்த இடம் தெரியாமற்போகும் நிலையொன்று வரும்" என்று சாணக்கியர் கூறினர்.

"கங்கா நதியோ சிவனுக்குரியது. ஆனால், அது நிரந் தரமான பனிமேடுகளினின்று சமதரைக்குப் பாயும் இடத் திற்கு விஷ்ணுவுக்குரிய ஹரித்துவாரம் என்னும் பெயர் ஏன் வந்தது?"

"சிவனும் விஷ்ணுவும் ஒன்றேயென விளக்கும் பொருட்டே அங்ஙனம் பெயரிட்டுள்ளார். இதே, உண் மையை அமரநாதத்திலும் கண்டாயல்லவா? விஷ்ணுவின்

பெயர்கொண்ட சேஷநாகம் என்னும் பனிப்படலத்தின் வழியாகவும் நதியின் வழியாகவுமே அத்தலத்திற்குப் போக வேண்டி யிருக்கிறது. அது நிற்க, தென்கோடியிலுள்ள ராமேசுவரத்திற் பிரசித்தமான தேவாலயத்தைப் பார்" என்று சாணக்கியர் விளக்கினர். "'ஓ! நாம் எப்போது அத் தலத்தைத் தரிசிப்போம்' என ஆவலாக இருக்கின்றேன்! சமுத்திரகுப்தன் வந்து சொல்லிய விவரத்தைக் கேட்ட பின், அங்குப் போய் ஈசுவரனை ஆராதிக்கவேண்டுமென விரும்புகிறேன்" என்றான் சந்திரகுப்தன். "நல்லது, ஒரு நாள் நாம் அங்கே போகலாம். அவ்விடமெல்லாம் நானே உனக்குச் சுட்டிக்காட்டுவேன்" என்றார் சாணக்கியர்.

சந்திரகுப்தனை நோக்கித் தேவப்பிராந்தை, "லக்ஷ்மண் ஜோலாவுக்குப் போய், அங்குள்ள கயிற்றுப்பாலத்தின் வழியாக அப்புண்ணிய நதியைக் கடப்போம் அது ஒரு பக்திப் பரீக்ஷை என்கிறார்களே. எங்ஙனம் இருப்பினும், அது ஒரு தைரியப் பரீக்ஷையேயாம்" என்றனள். மிக ரம்மியமான மலைப் பிரதேசக் காட்சிகளினிடையே சிலநாள் பிரயாணம் செய்து அவர்கள் அலக்நந்தா என்னும் நதியின் தலைப்புக்குப் போய்ச் சேர்ந்தனர். அதற்குக் குறுக்கே லக்ஷ்மண்ஜோலாவில் கயிற்றுப்பாலம் போடப்பட்டிருந்தது. அவ்விடத்தில் நதியானது மிக ஆழமான மலையிடுக்கினூடே ஓடியது. கயிற்றுப்பாலம் என்பது கீழே சுழன்று சந்தித்து ஓடிக்கொண்டிருந்த நீர்மட்டத்திற்கு 360 அடி உயரத்திற்கு அதிகம் மேலே போடப்பட்டிருந்தது. லக்ஷ்மணனைப்போலக் கடவுளினிடத்து அநன்னிய பக்தியுள்ளவர்களே க்ஷேமமாக அதைக் கடந்து போகமுடியும் என்பது ஜனங்களின் கொள்கை. சந்திரகுப்தனும் தேவப்பிராந்தையும் அதன்மீது நடந்துபோகவிரும்பினர். வேண்டாமென்று சாந்தவதியும்

துர்த்தரையும் சாணக்கியரும் இயன்றமட்டும் சொல்லிப் பார்த்தார்களாயினும், அவர்கள் ஒரே பிடிவாதமாக இருந்தார்கள். "நீங்களும் வந்து நடந்து பார்க்கலாகாதா?" என்று சாணக்கியரைச் சந்திரகுப்தன் வினவினன். "ஐயோ! எனக்கு ஐயங்களும் அச்சங்களும் அதிகம். சூதும் சூழ்ச்சியும் குயுக்தியும் அதிகம். ஆதலால், நான் அதனைக் கடக்க முடியாது. என்னால் முடியாதெனினும், என் மனைவி அதன் மீது நடப்பாள். ஏனெனில், அவள் நிஷ்கபடமானவள்; பரமபக்தியும் நம்பிக்கையும் உள்ளவள். நீங்களிருவருங் கூடப் போகவேண்டா மென்றே சொல்வேன்" என்று சாணக்கியர் பதிலுரைத்தார். "நாங்கள் மனம் மாற மாட்டோம்" என்று சந்திரகுப்தனும் தேவப்பிராந்தையும் கூறினர். "அங்ஙனமாயின், நானும் சேருவேன்" என்றனள் துர்த்தரை. "கூடாது, கூடாது; நீ அந்தப் பரீக்ஷை பார்க்கலாகாது. உனக்குப் பிள்ளை இருக்கிறான். இவ்வபாயத்திற்கு நீ உள்ளாகக் கூடாது" என்று சாந்தவதி தடுத்தாள்.

அவ்வபாயகரமான கயிற்றுப்பாலத்தின்மீது சந்திரகுப்தனும் தேவப்பிராந்தையும் சாந்தவதியும் ஒருவர் பின் ஒருவராக நடந்தனர். அவர்களில் எவரும் அச்சக்குறி சிறிதும் காட்டவில்லை. வெளியிலிருந்து பார்த்துக்கொண்டிருந்தவர்கள் மாத்திரம் அக்கயிற்றுப் பாலம் வளைந்து ஆடி அசைவதைக் கண்டு திகிலுற்று மூர்ச்சிப்பது போலானார்கள். முடிவில், அவர்கள் அந்தப் பாலத்தின்மீது நடந்து அக்கரைக்குப் போய் க்ஷேமமாகத் திரும்பி வந்தார்கள். "அது எப்படி யிருந்தது?" என்று சாணக்கியர் வினவினார். "அற்புதமான அனுபவமே" என்றான் சந்திரகுப்தன். "அது மன வெழுச்சி மிக்க ஸாகஸச் செயலே.

நீங்கள் எங்களுடன் ஏன் வரவில்லை? சொல்லப் போனால், அது அவ்வளவு கஷ்டமாயிருக்கவில்லை" என்றாள் தேவப்பிராந்தை. "என் குற்றங் குறைகள் எனக்கு நன்றாகத் தெரியும். தக்கபருவம் வாய்ந்த புருஷர் பலர் செய்யமுடியாத காரியத்தை ஒரு குழந்தை செய்யக் கூடும்" என்றார் சாணக்கியர். "உனக்கு எப்படி இருந்தது?" எனச் சாந்தவதியைத் தூர்த்தரை வினவினர். "என்னால் கண்ணை நிமிர்த்து மேலே பார்க்கவும் முடியவில்லை; கீழே நதியை நோக்கவும் முடியவில்லை. என் முழுமனமும் ஆரியபுத்திரரின்மீதே இருந்தது. அவர் க்ஷேமமாக நடந்து வரவேண்டுமென்றே அத்தனை நேரமும் பிரார்த்தித்துக் கொண்டிருந்தேன்" எனச் சாந்தவதி நவின்றனள்.

அவர்கள் கயைக்குத் திரும்பி வந்தார்கள். அங்கே சந்திரகுப்தன் தன் பிதுருக்கள் எல்லாருக்கும் சிராத்தம் செய்தான். அங்கிருந்து வைசாலிக்குப் போனார்கள். அங்கே இந்துக்களுள் பிராமண க்ஷத்திரிய வைசிய சூத்திர பஞ்சமர்களுக்குள்ளும், பௌத்தர்களின் பற்பல சாகையினருக்குள்ளும், ஜைனர்களுள் திகம்பரருக்கும் சுவேதாம்பரருக்கும் கடுமையான சச்சரவுகள் நடந்து கொண்டிருந்தன; இந்துக்கள் பௌத்தர்கள் ஜைனர்கள் என்னும் இனத்தார் ஒவ்வொருவருக்குள்ளும் பகை மிகுந்திருந்தது. வைசாலி என்பது பண்டைக்காலத்தினின்று குடியாட்சிவாய்ந்த ராஜ்யம். அது இப்போது கக்ஷிப் பிரதிகக்ஷிகளினாற் பிளவுண்டு பிணக்குற்றச் சின்ன பின்னமாகியது. இவர்களின் விஷயத்திற் சந்திரகுப்தன் கடுமையாகவும் கண்டிதமாகவும் இருக்க வேண்டியதாயிற்று. அந்தப் பற்பல இனப்பிரதிநிதிகளையும் வரவழைத்து, "ஜம்பூத்வீபம் என்னும் இந் நந்தவனத்தில் எல்லா ஞான விருக்ஷங்

களுக்கும் வேண்டிய இடம் இருக்கின்றது. ஆனால், ஒரு மரத்திற்குரிய ஒளியையும் வாயுவையும் ஊட்டத்தையும் கெடுப்பதற்கு மற்றொரு மரம் பிரயத்தனப்படுமாயின், அதைக் கிளை நறுக்கவேண்டும், அல்லது வெட்டவேண்டும், அல்லது அகற்றவேண்டும். இது தோட்டத்திற்குரிய நியாயமேயன்றோ? ஜம்பூத்வீபம் என்னும் ரத்தின கம்பளத்தில், அதனில் அமைந்திருக்கிற வர்ணங்களைத்தனையும் இருக்கவேண்டியது அவசியமே; இன்னும் வேறு அநேக வர்ணங்கள் அதனில் வந்து பொருந்தினும் பொருந்தலாம். ஆதலால், ஒவ்வொரு சாகையினரும் ஒழுங்காக நடந்து கொள்ளட்டும். மகதத்தரசர்கள் மதவைராக்கிய சேஷ்டைகளையும் சாதிப்பகைகளையும் பொறுக்க முடியாது" என்று சந்திரகுப்தன் புத்தி கூறினன். அவனை அடுத்துச் சாணக்கியரும் நற்போதப் பிரசங்கம் செய்தனர். அங்குக் குழுமியிருந்த பிரதிநிதிகளின் மனத்தில் அவை நன்கு பதிந்து உறைத்தன. அவர்கள் ஒருவரோடொருவர் அன்பு மேற்கொண்டு ஆலிங்கனம் செய்து, இனி யொருநாளும் சண்டைசச்சரவு செய்யாதிருப்போமெனச் சபதம் பண்ணினார்கள்.

பின்பு, சந்திரகுப்தனும் சாணக்கியரும் ராம்பூர்வா என்னும் ஊருக்குப் போனார்கள். அவ்விடத்திற் சந்திரகுப்தன் நேர்த்தியான கம்பமொன்றை நிலை நாட்டினன். அக்கம்பத்தின்மீது ஒருவிதமான கட்டுரையும் செதுக்கப் பெறவில்லை. அதன் உச்சியில் ரிஷப வடிவமொன்று அமைக்கப்பட்டிருந்தது. அக்கம்பத்தைச் சுற்றி நாற்புறமும் கிராதிகள் கட்டப்பட்டன. ஒரு புறத்துக் கிராதியில், பௌத்தர்களுடைய தர்மசக்கரமும் புத்த ஜாதகங்களிலுள்ள காட்சிகளும், மற்றொன்றில் ஜைன தீர்த்தங்கார்

அருகர் ஆகிய இவர்களின் ஜீவியசரித்திரக் காட்சிகளும் மூன்றாவதில் ராமாயண மகாபாரதங்களில் விவரிக்கப்பட்ட காட்சிகளும் வரையப்பட்டன. நான்காம் புறத்துக் கிராதி ஒன்றுமில்லாமல் வெறுமையாக விடப்பட்டது. "ரிஷபம் சிவனுடைய சின்னம். கிராமம் ஸ்ரீராமரின் பெயர் வாய்ந்தது. சித்திரங்களில் பௌத்தருக் குரியனவும் ஜைனருக் குரியனவும் உள; ஒன்றும் எழுதப் பெறாத ஸ்தம்பத்தில் ஜனங்கள் தங்களுக்கு இஷ்டமானது இருப்பதாக வைத்து வாசித்துக் கொள்ளலாம்" என்று சாணக்கியருக்குச் சந்திரகுப்தன் சொன்னான். "ஜம்பூத்வீபத்துச் சக்கரவர்த்தியாருக்கு இது ஏற்ற ஞாபகக்குறியேயாகும். எல்லா மதச்சாகையினருக்கும், எல்லா வகுப்பினருக்கும் ஒரே மாதிரியாக இடங்கொடுத்து ஆதரிப்பதே உனது ராஜநீதியாயிருக்கவேண்டும். அங்ஙனம் இருந்தால் உன் பிரஜைகளில் எவரும் குறை கூறார்? ஆனால், அந்த நயநீதியே உனது ஒழுக்கமுறையாக நீ கொண்டுள்ளாய். இனி நாம் சீதாகுண்டத்திற்குப் போய், அப்புண்ணிய மடுவில் நீராடுவோம்" எனச் சாணக்கியர் மொழிந்தனர்.

இவர்கள் சீதாகுண்டத்திற்குப் போய் அங்குள்ள மடுவில் ஸ்நானம் செய்தனர். அது நடுப்பகலாயினும் அந்நீர் தண்மை வாய்ந்து இளைப்பாற்றியது. "இது சீதையின் அன்பைப்போலவே குளிர்ச்சியாகவும் ஆறுதலாகவும் வற்றாததாகவும் இருக்கின்றது. அத்தன்மையான மனைவியைக் கைவிட்டு, அவள் தேகத்திடன் குறைந்திருந்த சமயத்தில், காட்டிற் கொடிய மிருகங்களின் வாதைக்கும் அவற்றினுங் கொடிய மனிதர்களின் வாதைக்கும் ஸ்ரீராமர் ஏன் உள்ளாக்கிப் போயினரென்று சொல்வீர்களா?" எனச் சாணக்கியரைச் சந்திரகுப்தன் வினவினன்.

"கடவுளின் சித்தத்தைக் கண்டறிவார் யார்? அவரது வழிவகைகளின் மர்மம் நமக்கு எட்டாது. சில காரியங்கள் விதியினாலும் வினையினாலும் விளைகின்றன. கடவுளேயாயினும், மானிடராய்ப் பிறந்தபின், அவைகளுக்கு உட்படலேவேண்டும். மானமரியாதை யோக்கியதைகளிலும் பக்தியிலும் லக்ஷ்மணர் சிறந்தவரன்றோ? அத்தகையினருக்குச் சீதை அயோக்கியமான எண்ணத்தை அநியாயமாக ஆரோபித்தனளே. அதற்கு எதிரீடாக அவ்வண்ணான் குடிவெறியில் அவள்மீதே அபாண்டமான அவதூறு புகன்றான். விதிவினைகளின் நியமனத்திற்கு உட்பட்டு ராமர் சீதையை அடவியில் விட்டுப் போயினர். அங்ஙனம் செய்ததனால், தம் குடிகளுள் கடையானவனையும் திருப்திப்படுத்தும்பொருட்டு என்ன தியாகமேனும் செய்வேனென்று பட்டாபிஷேக காலத்தில் அவர் செய்த பிரமாணத்திற்குப் பங்கம் வராமல் அவர் நடந்துகொண்டவராயினர். அது நிற்க, வனமிருகமெதுவும் சீதைக்குத் தீங்குசெய்ய முடியாது. கெடுக்க நினைத்த கொடிய அரக்கனை ராவணனும் அவளுக்குக் கேடு இழைக்க முடியாததாயிற்றெனின், சாமானிய மனிதன் எவனேனும் அவளுக்கு ஹானி செய்யமுடியுமோ? அவள் புத்திரர்களான லவனும் குசனும் வனத்தில் நல்லுபதேசங் கேட்டு வளரவேண்டியவராயிருந்தனர். ஏனெனில், மகத்தான இத்தேசத்தை அவர்களும் அவர்களது சந்ததியாரும் ஆளவேண்டியவர்களாக இருந்தனர்" என்று சாணக்கியர் சமாதானம் கூறினர்.

"சீதையை உண்மையில் தரை விழுங்கியதா? சரயு நதி ராமரை விழுங்கியதா?" என்று சந்திரகுப்தன் கேட்டதற்குச் சாணக்கியர், "சீதையானவள் பூதேவியின் அவதாரமானதனாலே திரும்பப் பூமியோடு ஐக்கியமாயினள்;

ராமரோ, ஸ்ரீமந் நாராயணனது அவதாரம்; நாரம் என்றால் ஜலம். அசையும் நீர் சொரூபமானதனாலே அவர் சரயு நதியில் அசைந்தோடும் நீரோடு கலந்தனர்" என மொழிந்தனர். "எனது கோத்திர பிதாவாகிய ஸ்ரீகிருஷ்ணர் உண்மையில் ஒரு வேடனாற் கொல்லப்பட்டனரா?" என வினவினான் சந்திரகுப்தன். "ஆம். ஸ்ரீபகவானுடைய பாத தூளி படியும் பாக்கியம் பூமிக்குச் சிறிதுகாலம் இருந்தது. அவர் பூமியில் அவதரித்துச் செய்ய வேண்டிய காரியங்களைச் செய்து முடித்தார். தர்மத்தை நிலை நாட்டுவதற்குச் செய்யவேண்டிய உபதேசத்தைச் செய்து முடித்தார். வந்த காரியம் முடிந்தமையின், அவர் புறப்பட்டுப் போக வேண்டியவராயினர். ராமாவதாரத்தில் அவர் மறைந்திருந்து வாலியை அடித்ததுபோல, கிருஷ்ணவதாரத்தில் அவரை வேடன் மறைந்திருந்து அடித்தனன். இவைகளெல்லாம் முற்பிறப்புக்களின் கர்மப்பயன்" என்று சாணக்கியர் கூறினர். "கடவுளின் அவதாரங்களும் கர்மத்திற்குக் கட்டுப்பட்டவர்களா?" "ஆம், அவர்களும் தர்மத்திற்கு உட்பட்டவர்களே. பிரம்மமும் தர்மமும் கர்மமும் ஜீவராசிகளுக்கெல்லாம் சாமானியமாகும்."

முற்காலத்து அரசர்களைப்போலச் சந்திரகுப்தன் தான் இன்னனென்று தெரியாதவாறு மாறுவேடம் பூண்டு தன் கிராமங்களில் ஒன்றுக்குப் போய்த் தன்னைப்பற்றிக் குடிகள் என்ன நினைத்துக்கொண்டிருக்கிறார்களென்று விசாரித்து அறிந்து கொள்ள விரும்பினான். அதன்மீது பாடலிபுரத்துச் சாமானிய நகரவாசியைப்போல வேஷம் போட்டுக்கொண்டு அவன் குந்தக்கிராமம் என்னும் ஊருக்குப்போனான். அவ்விடத்துக் கிராமச் சாவடிக்குப் போய் மூப்பர்களுடன் பேசிக்கொண்டிருந்தான். பேச்சுப் பராக்

கில் மெல்ல மெல்லச் சந்திரகுப்தனையும் சாணக்கியரையும் பற்றிய பிரஸ்தாபத்தை நுழைத்தான்:—

சந்திர: அவர்கள் இருவருள் சுகபுருஷன் யாவனென்று நினைக்கிறீர்?

பெரிய மூப்பன்: சாணக்கியரே.

சந்திர: ஏன்?

பே. மூப்.: அவர் இடிந்துவிழக்கூடிய வீட்டிலே இருக்கின்றார். அதனினும் அதிகமாக ஒன்றும் விரும்புவதில்லை. எவனேனும் தம்மைக் கொல்வானென்னும் பயமும் அவருக்கு இல்லை. சந்திரகுப்தனோ, பெரிய சாம்ராஜ்யம் உடையவன். அது தன் கையை விட்டு நழுவிப் போய்விடுமோ வென்னும் அச்சம் கொண்டவன்; எந்தச் சதிகாரன் தன்னை எப்போது கொல்வானோ வென்னும் பீதியினால் 'நித்தியகண்டம் பூர்ணாயுசு' என்று சொல்லுமாறு ஜீவிக்கின்றான். அதுவன்றி, சாணக்கியர் தம்மையே நம்பிச் சார்ந்திருக்கின்றார். சந்திரகுப்தனோ சாணக்கியர்மீது சார்ந்திருக்கின்றான்.

சந்: (துக்கத்தினால் முகம்வாடி உடனே மனந்தேறி) உமது மனோபீஷ்டம் யாது?

பே. மூப்: கடவுளை நேருக்குநேரே காணவேண்டுமென்பதே.

சந்: (சாத்தியமானதெதையேனும் அவன் விரும்பினால் அதை அளிப்போமென்று எண்ணங்கொண்டிருந்ததனால்) அது என்னால் அளிக்கமுடியாதே.

பே. மூப்: உம்மால் அளிக்க முடியுமென்று யார் சொன்னார்?

சந்: நீர் சந்திரகுப்தனாயிருந்தால் என்ன செய்வீர்?

பே. மூப்: என் குடிகளுள் மிகத்தாழ்மையானவனுடைய சுகதுக்கங்களும் என்னுடையனவேயென நான் கொண்டுளேனென்பதை அவன் உணரும்படி செய்வேன். நம் அரசர்கள் பாமரர்களைக் கவனியாமற் பெரிதும் புறக்கணித்துள்ளார்கள். சாமானிய மனிதனிடமிருந்து எல்லாவற்றையும் பறித்துக்கொண்டு, அவனை வருத்தி, ஒவ்வோர் அரசனும் கடைசியில் அவனைப் பொருட்படுத்தாமல் புறக்கணிக்கின்றனன். அதனாலேயே, 'ராமர் ஆண்டாலென்ன, ராவணன் ஆண்டாலென்ன?' என்னும் பழமொழி வழக்கத்தில் வந்திருக்கின்றது; அரசன் விஷயத்தில் சாமானியன் அவ்வளவு உதாசீனனா யிருக்கின்றனன். சாமானியன் ஒவ்வொருவனும் தானே ராஜாங்கம் என்று மாத்திரம் உணரட்டும்; அன்றைக்கே ராமராஜ்யம் சித்திக்கும்; அவன் அந்த ராஜாங்கத்தின் பொருட்டே வாழ்வன்; அதன்பொருட்டே தன் உயிரையும் துறப்பன்.

சங்: அப்படிப்பட்ட பிரஜாதீன ராஜ்யதந்திரத்தில் அரசனுக்கு என்ன பதவி அளிப்பீர்?

பே. மூப்: அவன் ஒரு கமானின் மையக்கல் போலிருந்து ராஜாங்கம் சீர்குலையாமல் நடுவிருந்து காப்பன். தன் குடிகளுள் இழிவானவனைக் காட்டிலும் அதிகமான சுகபோகங்களை விரும்பாது நடுநிலையில் நிற்பன்.

சங்: அரசர் கைக்கொண்டு ஒழுகுவதற்கு இது ஒரு வேளை அசாத்தியமான முறையாகுமோ என்னவோ?

பே. மூப்: சரியே. அரசர்கள் அம்முறையைக் கைக்கொண்டு சாதிக்கவேண்டும்; இன்றேல், சாக்கியர்களையும் மாளவர்களையும் போலப் பிரஜாப் பிரதிநிதிகளுக்கு ராஜ்ய பாலனதிகாரத்தை ஒப்பித்துவிட வேண்டும். அந்நாடு

களில் ஒவ்வொருவனும் செழித்துச் சுகித்துச் சந்தோஷ மாயிருக்கிறனெனச் சொல்கிறார்கள்.

மூப்பர்களிடம் விடைபெற்றுச் சந்திரகுப்தன் விசன மும் விசேஷ ஞானமும் வாய்ந்தவனாய்ச் சீதா குண்டத் திற்குத் திரும்பிவந்தான்.

தீர்த்தயாத்திரையை முடித்துக்கொண்டு அவர்கள் பாடலிபுரத்திற்குத் திரும்பிவந்தார்கள். க்ஷாமகாலத்தில் பெருமுயற்சி கொண்டு உழைத்தவர்களெல்லாருக்கும் மூன்று நாள் சுகபோஜனமும் விருந்து விநோதங்களும் அமைத்ததன்றிப் பரிசுகளும் வழங்கினார்கள். அரச ருடைய சொந்த மடைப்பள்ளியிற் சோறாக்கி ஒவ்வொரு நாளும் காலையில் ஒரு லக்ஷம் ஜனங்களுக்குச் சம்பிரமமான சாப்பாடு அளிக்கப்பட்டது. பின்பு பகற் பொழுதில் யானைப் போர், மல் யுத்தம், விற்போர், ஜாலவித்தைகள், மாட்டுவண்டிப் பந்தயம் ஆகிய இவைகள் நடைபெற்றன. பிற்பகலில் அரண்மனைத் தாசியாகிய வீரசேனை என்பவள் தன் கூட்டத்தினருடன் நாட்டியக் கச்சேரிகள் நடத்தினள்; பொம்மலாட்டங்களும் தேவ விக்கிரகங்களின் ஊர்வலங் களும் அமைக்கப்பட்டிருந்தன. சாயங்காலத்தில் வேத பாராயணங்கள் செய்யப்பட்டன. இரவில், பாஸன் என்னும் மகாகவி இயற்றிய பிரஸித்தமான மூன்று நாடகங் கள், அவனது சொந்தப் பராமரிப்பிலே நடிக்கப் பெற்றன. முதல் நாள் இரவு பிரதிமா நாடகம் என்பதை ஆடினார்கள். இரண்டாம் நாள் ஸ்வப்னவாசவதத்தை என்னும் நாடக மும் மூன்றாம் நாள் இரவு சாருதத்தன் என்னும் நாடகமும் ஆடினார்கள். அம் மூன்றையும் ஜனங்களெல்லாரும் மிகக் கொண்டாடினார்கள். பாஸ மகாகவிக்கு ஒரு ஜதை தங்கத் தோடாவும், சர்வமானியமாக ஒரு கிராமமும் சந்திரகுப்

தன் அளித்தான். அவனைச் சம்ஸ்தான கவியாகவும் நிய மித்து வருஷமொன்றுக்கு 2000 பொற்பணமும் சாம்ராஜ் யத்தில் எங்கு வேணுமானாலும் அவனுடைய நாடகங்களைத் தன் இஷ்டப்படி அவன் நடத்தலாம் என அதிகாரமும் அளித்தான். இந்நாடகங்கள் மிகப் பிரபலமாகிவிடவே கேரள புத்ரத்து அரசனுக்காக அவ்வரசனின் தூதுவன் ஒருவன், அவற்றைப்பார்த்து வேறு பிரதிகள் அனுமதியுடன் தயாரித்துக்கொண்டான். "அவர்கள் இவற்றை அர்த்தம் புரிந்துகொள்வார்களா?" என்று சந்திரகுப்தன் கேட்டதற் குச் சாணக்கியர், "அர்த்தம் புரிந்துகொள்வது மட்டுமன்றி, இம்மகதத்தார் அவற்றைப்பற்றி மறந்துபோகும் ஒரு சம யத்தில் அக்கேரளத்தார் இவர்களுக்கு அவற்றின் அழகைப் புலனாக்குவர்" என்றார். "அர்த்தசாஸ்திரத்தின் பிரதிக்காக ஏன் நீ அனுமதி கேட்கவில்லை?" எனச் சந்திரகுப்தன் அத் தூதனைக் கேட்டதற்கு அவன், "நான் அதை முன்னமே அனுப்பிவிட்டேனே. தமது சொந்த நாட்டு அரசருக்கு அது ஒன்று இருக்கவேண்டுமெனச் சாணக்கியப் பெரியார் அதன் பிரதியொன்று எனக்குக் கொடுத்துதவினர்" எனக் கூறினன். முறுவலிப்புடன் சந்திரகுப்தன், "சாணக்கிய ஆசாரியருக்கு இன்னும் கேரள ராஜ்யாபிமானம் இருக்கின் றதே!" என்றான். "விருஷலனுக்கு விரோதம் இல்லாதவரை யில் அவ்வபிமானம் இருக்கும்" என்றார் சாணக்கியர். "அப் படியானால் சிறிதும் பயமில்லை. நம் ஆசாரியரது பராமரிப் பில் இந்தச் சாம்ராஜ்யம் செழித்தோங்கும்" என்றான் சந்திரகுப்தன். "எங்களுக்கு விதி வகுக்கச் சந்திரகுப்த னும் சாணக்கியரும் உள்ளளவும் எங்களுக்கென்ன பயம்!" என ராக்ஷஸன் பகர்ந்தனன். பின்பு அவன், "சந்திர குப்த சக்கரவர்த்தியார் நீடூழி வாழி. சாணக்கிய ஆசாரியர் சிரஞ்சீவியாக வாழி!" எனக் கனிவுடன் கோஷித்தனன். அங்குத் திரண்டிருந்த அபரிமிதமான ஜனசமூகம் அந்த வாழ்த்தை மேற்கொண்டு திரும்பத்திரும்ப அந்தரங்க ஆர்வத்தோடு கூவிப் பின் குலைந்து சென்றது.

---

## அத்தியாயம் 37

## கச்சேரியிற் கொற்றவன் கொலு

கி. மு. 297 ஆகஸ்டு மாதத்தில் ஒரு சுதினம், காலையில் 10 மணிக்கு 'ஸுகங்கா' மாளிகையிலுள்ள நியாயசபையில் சந்திரகுப்தன் வந்து சிங்காதனத்தில் அமர்ந்தனன். மகத உயர்தர நீதிஸ்தலத்தில் மூன்று நீதிபதிகளும் மூன்று நியாயதுரந்தரர்களும் உண்டு. அவர்கள் சில வழக்குக்களில் தீர்ப்புச் செய்திருந்தனர்; அவைகளை அரசன் உறுதிப் படுத்தவேண்டும்; பெரிய குற்றங்கள் சிலவற்றிற்குத் தண்டனை விதித்திருந்தனர்; அவைகளை அரசன் திரும்பக் கவனித்துப் பார்த்துக் கட்டளையிடவேண்டும். இதற்காக அன்றைத்தினத்தைக் குறித்திருந்தார்கள். நகராத்தியக்ஷரும்[1] நாகரகரும்,[2] நான்கு ஸ்தானிகர்களும்,[3] பல பிரபுக்களும் நகரவாஸிகளும் அந்தக் கச்சேரிக்கு வந்திருந்தார்கள். மேடையின்மீது சந்திரகுப்தனை அடுத்து வலப் புறத்தில் இளவரசனான பிந்துசாரன் இருந்தான். அவனையடுத்துச் சாணக்கியரும், அவரையடுத்துத் தர்மாதிகாரியான[4] சங்கீர்த்தியாயனரும் அமர்ந்திருந்தனர். சந்திரகுப்த

---

1. Mayor.

2. A City Superintendent and Commissioner combined.

3. Superintendents of the wards of a city.

4. The Lord Chief Justice.

னுக்கு இடப்புறத்தில் சுபுத்திசர்மனும் அவனுடைய குமாரன் கல்லாடகனும் உட்கார்ந்திருந்தனர். இப்போது கல்லாடகன் அரசனையடுத்தே இருக்கும் மந்திரியாகவும், ராஜ முத்திராதிகாரியாகவும் இருந்தனன். பெயர் பெற்ற நகர நியாயாதிபதிகள் இருவரும் மேடையின்மீது அமர்ந்திருந்தனர். அவர்களிருவரும் குற்றங்கண்டு கடுந்தண்டனைகள் விதிப்பதிலேயே நோக்கமுடையவர்களானமையின், அவர்களுக்குக் காலபாசிகன் என்றும், தண்டபாசிகன் என்றும் சுட்டுப் பெயர்கள் வழங்கலாயின. 'காலபாசிகன்' என்றால், காலனைப்போலக் கண்டிதமாகத் தண்டிப்பவன் என்று பொருள். 'தண்டபாசிகன்' என்றால், தண்டனை வலையை உடையவன் என்று அர்த்தம். அரசனுக்குப் பின்புறத்தில் மெய்காவலர் எண்மர் நின்றனர். இரண்டு ஏவலாளர்கள் வெண்சாமரத்தினால் அரசனுக்கு விசிறிக் கொண்டிருந்தனர். வேறு இருவர் கருங்காலி மரக் குழவிகளினால் அரசனது உடம்பைத் தேய்த்துக் கொண்டிருந்தனர். அரசன் நேரே இருந்து நீதி செலுத்துவதைக் காணும்பொருட்டுப் பெருந்திரளான ஜனங்கள் கூடியிருந்தனர்.

ராஜகோசாதிகாரியான வைகிநாரி என்னும் கனவான் எழுந்து, "சென்ற ஆறுமாதத்திற் கோரமான குற்றங்களுக்காக மகதத்து உயர்தர நீதிஸ்தலத்தார் விதித்துள்ள தண்டனைகளின் மீது 'தேவானாம்பிரிய' சந்திரகுப்த மகாராஜர் இப்போது உத்தரவு செய்யப்போகிறார். மகாராஜர் அவர்கள் காசி ஹரித்துவாரம் முதலான க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை போயிருந்ததனால், இந்த ராஜாங்கக் கொலு அமைவதற்குக் காலதாமதம் ஆயிற்று. ஸத்தா! சத்தமிட்டால் அரசருக்கு ஆயாசம் உண்டாகும்" என்று அறிக்கையிட்டார். அமைதி

குடிகொண்டது. ஊசி விழினும் ஒலிக்கும்படி அவ்வளவ
நிச்சப்தமாயிருந்தது.

குற்றவாளிகளை நிறுத்துவதற்காகக் கயிறு கட்டிப் பிரித்து ஒதுக்கியிருந்த இடத்திற் கைதிகளை ஒவ்வொரு வராகக் கொண்டுவந்து நிறுத்தி, அவர்களுக்கு அரசர் உத்தரவானவுடனே அவர்களை அவ்விடத்தினின்று அகற்றிக்கொண்டு போமாறு சிறையின் அதிகாரிக்குக் கச்சேரிக் கட்டியக்காரன் சொன்னான்.

முதலிற் கொண்டுவரப்பட்டவன் 30 வயது வாய்ந்த வன். அவன் திருட்டு விழி விழித்துக் கொண்டிருந்தான். கல்லாடகன் தான் வைத்திருந்த வழக்குப் பொழிப்பு ஜாபிதாவைப் பார்த்து,

“மகாராஜாவின் சமுகத்தில் நிற்பவன் வைசாலி என்னும் ஊரில் தன் பகைவனது வீட்டுக்கு இரவில் தீ வைத்தானென்றும், அதனால் உள்ளே உறங்கிக்கொண்டிருந்த இரண்டு குழந்தை களுடைய சாவுக்குக் காரணபூதனாயிருந்தானென்றும், அக்குழந்தை களை உற்ற காலத்தில் அகற்றிக் கொண்டுபோக முடியவில்லை யென்றும் நீதிபதிகளெல்லாரும் ஒரு மனமாக இவன்மீது குற்றம் ஏற்படுத்தி, இவனுக்கு மரணதண்டனை விதித்துள்ளார். இவன் கடன்பட்டிருந்த 50 பணத்தைத் திருப்பிக்கொடுக்கும்படி அடிக்கடி வற்புறுத்தியதனால் அவ்வயலான்மீது இவன் பகை கொண்டனனும் இவன் தீயிட்டுக் கொளுத்தியபோதே இவனைப் பிடித்தார்கள் இவனும் அக்குற்றத்தை ஒப்புக்கொண்டிருக்கிறான்”

என வாசித்தான். அதன்மீது சந்திரகுப்தன், “இவனைக் கையும் குற்றமுமாகக் கண்டுபிடித்ததனால் நமது சட்டப் பிரகாரம் அத்தீயிலேயே இவனை எறிந்து கொன்றிருக் கலாமே. அங்ஙனம் செய்யாததனால் இவனைக் கொண்டு போய் ஈட்டியினாற் குத்திக் கொல்லுக. ஜனங்கள் குடி

யிருக்கும் வீட்டுக்கு இராவிற் கொள்ளிவைத்து உள்ளிருப்பவர்களைக் கொலை செய்த பாதகனுக்குக் கொலைத் தண்டனையே உரியதாகும்" எனக் கட்டளையிட்டான். அக் குற்றவாளியை அங்கிருந்து கொண்டுபோயினர்.

அடுத்தபடி வந்தவன் 40 வயதுள்ளவன். அவனைப் பற்றிக் கல்லாடகன்,

"இவன் ஊரிலுள்ள பெரியாரோடு இடைவிடாமற் சண்டை போட்டுக்கொண்டிருந்ததனால், குர்தக்கிராமம் என்னும் ஊரிலிருந்து வெளியே தூரத்தப்பட்டான். அதன்மீது ஊரில் வேளாண்மைப் பயிர்கள் அழியச் செய்யக்கருதி, கிராமத்து நீர்ப்பாசனக் குளத்தின் கரையை ஒருநாளிரவு துஷ்டபுத்தியால் இவன் உடைத்துவிட்டான். தன் குழந்தைக்கு மருந்து வாங்கும்பொருட்டு அன்றிரவு வெளியே போய்க்கொண்டிருந்த கிராமத்தானொருவன் இவன் குளக்கரையைப் பெயர்த்துக் கொண்டிருப்பதைக் கண்டு கூச்சலிட்டான். ஜனங்கள் கூடி அப்போதே இவனைப் பிடித்தார்கள்; உடைகரையை அடைத்துக் குளத்தை மீத்தார்கள். இவனுக்கு மரணதண்டனை விதிக்கப்பட்டிருக்கின்றது"

என வாசித்தான். "அந்தக் குளத்திலேயே இவனைத் தூக்கிப்போட்டு மூழ்கடித்திருக்கவேண்டும். அப்படிச் செய்யவில்லை. குளமும் மீந்தது. ஆதலால், இவனுக்கு இப்போது மரணதண்டனை அவசியமென்று எனக்குத் தோன்றவில்லை. நீர்ப்பாசன ஆதாரத்தைக் கெடுக்க முயன்றானதலால், அப்பாபத்திற்குப் பரிகாரமாக இவனை 14 வருஷகாலம் சுதர்சன ஏரி வெட்டும் வேலைக்குப் போடுக" என்று சந்திரகுப்தன் ஆக்கினை செய்தான்.

பின்பு, 50 வயதுக்காரனொருவன் வந்தான். அவனைக் குறித்துக் கல்லாடகன்,

"இவன் கிருத்திரகூடம் என்னும் ஊரான். மூன்று வயதுச் சிறுவன் ஒருவனை இவன் ஏமாற்றி அழைத்துக்கொண்டு போய்,

புதையற் பொருள் இருப்பதைக் காளிகாதேவி தனக்குக் காட்ட வேண்டுமென்று, அச்சிறுவன் தலையை வெட்டிக் காளிக்குப் பலி கொடுத்தான். இவன் ஆயுள்பரியந்தம் சுவர்ணகிரிச் சுரங்கங்களில் உழைத்துக்கொண்டிருக்க வேண்டுமெனத் தீர்ப்புச் செய்திருக்கிறார்கள்''

என வாசித்தான். ''சிறுவன் தலையை இவன் சேதித்ததுபோல இவன் தலையைச் சேதித்துவிடுக. இப்படிப்பட்டவர்கள் இந்த ஜன்மத்தில் திருத்தமுறார்'' எனச் சந்திரகுப்தன் உத்தரவு செய்தான்.

பின்பு, 45 வயது ஸ்திரீயொருத்தியைக் கொண்டுவந்து நிறுத்தினார்கள். இவளுடைய விஷயத்தை எடுத்துக் கூறுமளவிற் கல்லாடகன்,

''இவள் சீதாகுண்டம் என்னும் கிராமத்திற்குப் போய் யாத்திரைக்காரியாக நடித்தாள். குடியானவன் ஒருவன் இவளைத் தன் வீட்டில் வைத்து ஆதரித்தான். அன்றிரவு இவள் அக்குடும்பத்தவருக்குத் தேவப் பிரஸாதமாகச் சில தீம்பண்டங்கள் கொடுத்தாள். அப்பண்டங்களில் ஊமத்தம் விதை பொடிபண்ணிக் கலக்கப்பட்டிருந்தது. அவற்றைத் தின்றவர்களெல்லாம் மெய்ம்மறந்து படுத்தனர். வீட்டிலுள்ள விலைபெறு வஸ்துக்களை எடுத்துக்கொண்டு இவள் வெளியேறினள். அங்ஙனம் ஓடுகையில் இவளைப் பிடித்தார்கள். இதற்கு முன்னால் இவளைத் தன் வீட்டில் வைத்துக் கொண்டிருந்தவள் இப்படிப்பட்ட மருந்தீட்டினால் இறந்தனள். இவளுக்கு மரணதண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது''

என வாசித்தான். ''இவள் சமூக சத்துரு; அன்றியும், விஷமிட்டுக் கொலையும் புரிந்துள்ளாள். இவள் பெண்பிள்ளையெனப் பரிதபிக்கலாகாது. சாஸ்திர விதிப்படி இவளை நீரில் அமிழ்த்திக் கொல்லுங்கள்'' என்று சந்திரகுப்தன் சொன்னான்.

அடுத்தபடியாக வந்த குற்றவாளி 25 வயதுள்ளவன். விவாகமான யுவதி ஒருத்தியை அவன் பலவந்தமாகப் புணர்ந்து, அக்குற்றத்தை மறைக்கும்பொருட்டு அவளைக் கொன்றுனென ஏற்பட்டது. அவனுக்குச் சிரசாக்கினை விதிக்கப்பட்டிருந்தது. அத்தண்டனையையே சந்திரகுப்தன் உறுதிப்படுத்தினன்.

அதற்குப்பின் 30 கொள்ளைக்காரரைக் கொண்டுவந்து நிறுத்தினார்கள். தாமிரலிப்திக்கும் பாடலிபுரத்திற்கும் இடையிலுள்ள பெரிய சாலையில் வழிப்போக்கர்களை மறித்து அவர்கள் பணத்தை யெல்லாம் பறித்துக்கொண்டு, அவர்களிற் பலரைக் காயப்படுத்தினார்கள். அவர்கள் ஆயுள் பரியந்தம் சுவர்ணகிரிச் சுரங்கங்களில் உழைக்க வேண்டுமென நீதிபதிகள் தீர்மானித்திருந்தனர். அந்தத் தண்டனையை உறுதிப்படுத்தி அரசன், “பொன்னின் பொருட்டு அவர்கள் பாபம் செய்தனர்; அப்பொன்னுக்கே அவர்கள் தம் ஆயுளை அர்ப்பணம் செய்யட்டும்” என்றான்.

அடுத்த குற்றவாளி பொய்ச் சாக்ஷி சொல்லியவன். கைக்கூலி ஏற்று அவன் ஒரு கொலைக் குற்ற வழக்கிற் பொய்ச் சாக்ஷியம் சொல்லி, நிரபராதியானவன் ஒருவனை மரண தண்டனைக்கு ஆளாக்கினன். அக்குற்றவாளிக்கு மரண தண்டனையே விதிக்கப்பட்டிருந்தது. அதை உறுதிப்படுத்திச் சந்திரகுப்தன், “இவன் செய்தது, தன் சொந்தக் கையாற் செய்தது போன்ற கொலைக் குற்றமேயாகும்” எனக் கூறினன்.

அதற்குப் பின் பாண்டுகதி என்னும் கிராமவாஸிகள் இருபதுபேர் குற்றவாளிக் கூண்டில் நிறுத்தப்பட்டனர்.

"இவ்விருபதின்மர் தங்கள் கிராமத்துக்கு வந்த ஏழு துறவிகளுக்குப் பிக்ஷையிட மறுத்தனர். அதன்மீது அத்துறவிகள் சில அபிசாரப்பிரயோகங்கள் செய்தனர். அன்றிரவு அக்கிராமத்தில் பத்து வீடுகள் தீப்பற்றின. தங்கள் மந்திரப்பிரயோகத்தால் அத்தீ மூண்டதெனத் துறவிகள் பெருமையடித்துக் கொண்டனர். அப்படிச் சொல்லவே, இவ்விருபதின்மரும் அவர்களைப் பிடித்து அத்தீயிலே எறிந்து, எரியினுக்கு இரையாக்கினர். இவர்களில் ஒவ்வொருவருக்கும் 200 பொற்பணம் அபராதம் விதிக்கப்பட்டிருக்கின்றது"

என்று கல்லாடகன் சொன்னான். "அவ்வபராதத்தை தலை ஒன்றுக்கு 12 பணமாகக் குறைத்திருக்கின்றோம். இந்த 240 பணத்தைக் கொண்டு துரித நிவாரணியாகிய ஹரீதி என்னும் தேவிக்கு அந்தக் கிராமத்தில் ஒரு சிறு கோவில் கட்டப்படட்டும்" என்று சந்திரகுப்தன் உத்தரவு செய்தான்.

அவர்களுக்குப் பின், பாடலிபுரத்தான் ஒருவன் வந்தான். தாஸி ஒருத்தியைப் பலவந்தப்படுத்தினானென்பது அவன்மீது ஏற்பட்ட குற்றம். அவனுக்கு 12 பணம் அபராதம் போடப்பட்டிருந்தது. "அந்தத் தண்டனை சரியே. வசூலாகும் பணம் அந்தத் தாஸிக்குக் கொடுக்கப்படட்டும்" என்று சந்திரகுப்தன் சொன்னான்.

பிறகு மாவுத்தன் ஒருவன், தன் அஜாக்கிரதையினால் தன் யானை பாடலிபுரத்தான் ஒருவனைக் குத்திக் கொன்றதெனக் குற்றஞ்சாட்டப்பட்டு வந்தான். அவனுக்கு 500 பணம் அபராதம் விதித்திருந்தனர். அதை உறுதிப்படுத்திச் சந்திரகுப்தன், "மனிதர்கள் தங்கள் வசத்துள்ள மிருகங்களை அடக்கியாள வேண்டும்" என்றான்.

குற்ற விசாரணை முடிவுற்றது. "சென்றமுறை ராஜாங்கக் கச்சேரி நடந்தபின், லஞ்சம் வாங்கினவர்கள்

மூவரும், பொய்ச்சாக்ஷி சொல்லியவர்கள் பதினெண்மரும் தேசப் பிரஷ்டர்களாக இந்நாட்டினின்று துரத்தப்பட்டிருக்கின்றனர். இனி, மகாராஜாவின் ஸம்ஸ்தானத்து நீதிபதிகளிடம் தங்களுக்கு நியாயம் கிடைக்கவில்லையெனக் குறை கூறுகிற பிராமணர்கள், துறவிகள், அநாதர்கள், விதவைகள் முதலாயினோர் முன்வருவார்களாக" என்று கோசாதிகாரி கூறினர்.

உடனே பிராமணர்கள் பலர் முன்வந்து, பிராமணக் குற்றவாளிகளுக்குச் சூடு போடாமல் இருக்க வேண்டுமென மன்றாடினார்கள். "இப்போது திருட்டுவேலை செய்த பிராமணக் குற்றவாளிக்குச் சூட்டுக்கோலினால் நாயின்வடிவம், கட்குடித்தற்குச் சாராயக்கடைக் கொடி, கற்பழித்ததற்கு முக்கோணவடிவம், கொலை செய்ததற்குத் தலையற்ற முண்டம் என்னும் குறிகளைப் போடுகிறார்கள். இது கொடுமையாகவும் வருத்தமாகவும் இருக்கின்றது. இவ்வழக்கத்தை ஒழிப்பதனால், மகாராஜர் பிராமணர்களின் ஆசீர்வாதத்திற்கு உரியராகி அவர்களது சாபத்தினின்றும் தப்புவர்" என்று அவர்களின் தலைவன் கூறினன்.

அதற்குச் சந்திரகுப்தன், "உங்கள் வேண்டுகோட்கு இணங்க முடியவில்லையே யென மிகவும் விசனிக்கின்றேன். மற்றச் சாதியாருக்கு இதனினும் பயங்கரமான தண்டனைகள் விதிக்கப்படுகின்றன. கூலி வாங்கிக் கொண்டபின், நெசவுகாரன் ஒருவன் வேலை செய்ய மறுத்ததற்காக அவன் கைக்கட்டைவிரலை வெட்டுகிறார்கள். பிராமணஸ்திரீயின் கற்பையழித்த சூத்திரனைப் பாய்சுற்றி உயிரோடு கொளுத்தி விடுகிறார்கள். கடுங்குற்றம் செய்தவர்களுக்கு 18 விதமான சித்திரவதைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றுள், காலைக் கட்டித் தலைகீழாகத் தொங்கவிட்டுச் சவுக்கா

லடித்து, விரற் கணுக்களைச் சுடுவது ஒன்றும். இத்தண்டனைகளெல்லாம் மாமுனிவர்களாலே விதிக்கப்பட்டுள்ளன. அரசர்களாகிய நாங்கள் அவைகளை நிறைவேற்றவேண்டியவர்களா யிருக்கின்றோம். இவற்றில் ஒரு பாகத்தை மாற்றுவோமாயின், அதற்குத் தக்கபடி மற்றப் பாகங்களையும் மாற்றவேண்டியதாகும். அங்ஙனம் செய்யாவிடின், நமது சமூக வாழ்க்கைத் திட்டம் சரியாக நிலை கொள்ளாது; சில ஜாதியாருக்குத் தண்டனை படிப்படியாகக் குறையும். மற்றவர்களுக்கு அதிகமாகும்" என்று பதில் உரைத்தான்.

"பிராமணக் குற்றவாளிகளுக்குத் தேசப் பிரஷ்ட தண்டனையும் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால், சூடு போடுவதைத் தவிர்ப்பதற்குப் பெரிய ஆக்ஷேபணையொன்றும் இருக்க முடியாது. ஏனெனில், இது ஒரு அதிகப்படியான தண்டனையே" எனப் பிராமணத் தலைவன் முறையிட்டான்.

"அது முடியாது. சூடுபோடும் வழக்கம் இருக்கவேண்டியதே. இவர்கள் போகிற வேற்றூர்க்காரர்கள் இவர்கள் குற்றவாளிகளெனத் தெரிந்துகொள்ளவேண்டும்; இந்நாட்டிலிருந்து வந்த யோக்கியமான பிராமணர்களென்று தவறுக நினைக்கலாகாது. அங்ஙனம் நினைப்பதனால் நம் ராஜ்யத்துப் பிராமணர்களை அவர்கள் குறைவாக மதிக்கும்படி நேரும். அங்ஙனம் வரலாகாது. பழுதான பண்டங்களுக்கு ஒரு குறியும், பழுதில்லா நற்பண்டங்களுக்கு மற்றொரு குறியும் நாம் இடுவது எவ்வளவு நியாயமோ அவ்வளவு இச்செயலும் நியாயமாகும்" என்று சந்திரகுப்தன் தாக்ஷிண்யமின்றி மொழிந்தான். பிராமணர்கள் நீங்கிப் போயினர்.

சிராவஸ்தி என்னும் நகரவாவஸிகளின் பிரதிநிதிக் கோஷ்டியொன்று ராஜசமுகத்திற்கு வந்தது. "அம்மாகாணத்து அதிகாரியும் பெரிய அதிகாரிகளும் சென்ற ஒரு வருஷத்திற்குள்ளாக வரிகளை இருமடங்காக்கி விட்டனர்; அதற்கு ஏற்றவாறு ஜனங்களுக்கு வரும்படி அதிகமாக வில்லை; வேறுவகையில் சர்க்காருக்குப் பணவருவாய் இல்லை. புதையற்பணம்போன்று, சர்க்காருக்குப் பறிமுதலாகத்தக்க தற்செயலான வருமானங்கள் இல்லை; சர்க்கார் வேலைக்காரர்களுக்கு அபராதம் விதித்து வந்த பணங்கள் இல்லை; சர்க்கார் சொத்துக்குக் கேடு விளைத்ததற்காக ஈடு செய்யும் பணம் வரவில்லை; வார்சில்லாமற் சர்க்காருக்குச் சேர்ந்த சொத்து இல்லை; அரசனுக்குக் காணிக்கையாகக் கொடுக்கப் பட்டவைகள் இல்லை; காட்டுமரங்களை அதிகமாக விற்றுப் பணமும் வரவில்லை; இங்ஙனம் இருக்க, மாகாணத்துப் பேரீஜு[6] மாத்திரம் இருமடங்காகியிருக்கின்றது" என்று அக்கோஷ்டியினர் முறையிட்டனர். மேலும், "வருமான இனங்களெல்லாம் சென்ற வருஷப்பிறப்புத் தினத்தில் ஒத்துப்பார்த்ததில் சரியாயிருக்கின்றன" என்றும் அவர்கள் சொன்னார்கள்.

சாணக்கியரை நோக்கிச் சந்திரகுப்தன், "இதற்கு என்ன சொல்கிறீர்கள்?" எனக் கேட்டான். "மகாராஜாது உத்தரவுப்படி நான் ஆக்கியுள்ள அர்த்த சாஸ்திரத்தின் முதற்பகுதி, 9-ஆம் அத்தியாயத்தில் இதைத் தெளிவாகச் சொல்லியிருக்கிறேன். அஃது என்னவெனில், "அரசிறையை இரட்டிக்கிறவன் தேசத்து ஜீவனையே அழிக்கிறவனவன். குற்றம் சிறியதாயிருப்பின், இனி அங்ஙனம் செய்யக் கூடா

6. பேரீஜு—ஸர்க்காருக்கு வசூலாகும் இறை மொத்தம்.

தென அவனை எச்சரிக்கவேண்டும். குற்றம் பெரிதாயிருப்பின், அவனைக் கடுமையாகத் தண்டிக்கவேண்டும்” என்று சாணக்கியர் சொன்னார். தூதுக் கோஷ்டியினரை நோக்கிச் சந்திரகுப்தன், “ஐயன்மீர், இது அவ்வதிகாரிகள் செய்த முதற்குற்றமா? அவர்களைப்பற்றி ஜனங்கள் என்ன சொல்லுகிறார்கள்?” என வினவினான். “இது அவர்களது முதற் குற்றமே. அவர்கள்மீது குறை கூறுவதற்கு வேறொன்றும் இல்லை” என்று அவர்கள் பதில் சொன்னார்கள். “இனி அங்ஙனம் செய்யக்கூடாதென அதிகாரிகள் எச்சரிக்கப்படுவார்கள்” என்று சந்திரகுப்தன் சொன்னான். திருப்தியடைந்து தூதுக் கோஷ்டியினர் நீங்கிப்போயினர்.

யாத்திரிகர்கள் சிலர் வந்து தங்கள் குறையைச் சொல்லிக்கொண்டார்கள். அவர்கள் வேறு பத்துப்பேருடன் காமரூபத்திலுள்ள காமாக்ஷிதேவாலயத்திற்குப் போயிருக்கையில், நாகர்கள் ஒரு கூட்டமாக வந்து, அவர்களுடன் இருந்த பத்துப்பேரை அடிமைகளாக்கும் பொருட்டு இழுத்துக்கொண்டு போய்விட்டார்களாம். காமரூபத்து அரசனிடம் முறையிட்டும் பிரயோஜனமில்லையாம். உடனே ராக்ஷஸன் எழுந்து, அதைப்பற்றிய வர்த்தமானம் தனக்கு வந்திருக்கிறதெனச் சொன்னான். பத்ரபடன் என்னும் தளகர்த்தன் அவ்வூராரைத் தண்டிக்கும் பொருட்டு ஒரு சிறு படையை அனுப்பினன். அப்பதின்மருள் எண்மரை நாகர்கள் விடுதலை செய்துவிட்டார்கள்; ஒன்பதாமவன் நாகர் தலைவனின் குருவாக அவர்களுடனே இருக்க இசைந்தனன்; பத்தாமவன் அங்ஙனம் பிடிபட்டிருக்கையில் இறந்தனனென்று ராக்ஷஸன் விவரம் உரைத்தான். “இந்தத் தலைவெட்டிகளுக்கும், நரபலியிடுகிறவர்களுக்கும், அடிமை கொள்வோர்க்கும் நம் யாத்திரி

கர்களில் ஒருவன் குருவாக அமைந்தனனென்பது நல்லதே. இவர்களின் கொடுஞ்செயல்களைத் தடுத்து ஒழிப்பதற்கு நல்ல குருமார்களின் மூலமாக இவர்களின் மனத்தைத் திருப்புவதே உத்தமமான மார்க்கம்” என்று சந்திரகுப்தன் சொன்னான்.

அரண்மனை மடைப்பள்ளிச் சமையற்காரன் ஒருவன் வந்து, குறிப்பிட்ட அளவைக்காட்டிலும் அதிகமான விறகு உபயோகித்ததற்காக தன்னைச் சாணக்கியர் வேலையினின்றும் நீக்கிவிட்டனரென்று முறையிட்டான். “மகாராஜரைப் போன்ற சக்கரவர்த்தியாருக்கு அற்பவிலையுள்ள விறகு, எண்ணெய், அரிசி முதலான பண்டங்களை அளந்து கொடுக்கக் கூடாதல்லவா? செல்வர்களான வர்த்தகர்களும் பெரிய உத்தியோகஸ்தர்களுங்கூட இவைகளைப் பொருட்படுத்திக் கவலை கொள்ளமாட்டார்களே” என்று அவன் சொன்னான்.

சாணக்கியர் எழுந்து, “மகாராஜர் ஏழையுழவர்களுக்குத் தர்மதரிசி[1]யாவர். அவ்வேழைகள் பாடுபட்டு ஈட்டிய பணத்தை வரிகளாக வசூல் செய்கின்றோம். சமையற்காரருக்கு அவசியமான பண்டம் எதுவும் கொடாதிருக்கவில்லை. வீண் செலவை மாத்திரமே நான் தடுக்கின்றேன். இந்த மனிதன் அடுப்புக்கு வெளியே விறகை வீணே எரிந்துகொண்டிருக்கும்படி அஜாக்கிரதையாக விட்டு, மடைப்பள்ளி முற்றத்தில் திரிந்து வேலைக்காரர்களுடன் வம்பளந்துகொண்டிருந்தான். மூன்று முறை இவனை எச்சரித்தேன். அதற்குப்பின், மற்றவர்களுக்குப் புத்தி புகட்டும்பொருட்டு இவனை வேலையினின்றும் நீக்கினேன். இவ்வற்ப விஷயங்களை முடிவிற் பெருகிச் செலவுகளை அதிகப்படுத்தி, வரவு

1. Trustee.

செலவுத் திட்டத்தைத் தலைகீழாக்குகின்றன. ஒரு யானை உண்டு ஒழிக்கமுடியாத பயிர்களை லக்ஷக்கணக்கான வெட்டுக்கிளிகள் கூடி ஒழிப்பதுபோலவாம்" என்று சொன்னார். இவனால் எவ்வளவு நஷ்டம் ஏற்பட்டதென்று சந்திரகுப்தன் கேட்டதற்குச் சாணக்கியர், 43 பணம் என்று சொன்னார். "இந்தத் தொகை எமது சொந்தக் கஜானாவிலிருந்து சர்க்காருக்கு ஈடு செய்யப்படும். இவன் திரும்பத் தன் வேலையைப் பார்க்கட்டும். ஒழுங்காக நடக்காவிட்டால் மறுபடியும் வேலையினின்றும் நீக்கப்படுவன்" என்று சந்திரகுப்தன் உத்தரவு செய்யவே, எல்லாரும் கை கொட்டி ஆரவாரித்தனர்.

பின்பு, மணிப்பூர் மாதர்களின் தூதுக் கோஷ்டியொன்று வந்து, "மாதர்களின்சந்தை ஒன்று தனியே அமைப்பதற்கு அனுமதி அளிக்கவேண்டும். அதில் ஸ்திரீகளும் ராஜ குடும்பத்தாரும் மாத்திரமே வாங்கவும் விற்கவும் உரிமையுள்ளவர்களாய் இருக்கவேண்டும்" எனக் கேட்டுக்கொண்டனர். "இதனைச் சாதிக்கக் கருதிய உத்தேசம் என்ன?" என்று சந்திரகுப்தன் வினவினன். இந்தியாவில் வேறு எங்கும் இல்லாத அதிசயம் ஒன்று மணிப்பூரில் அமைக்கவேண்டுமென்பதே தங்கள் உத்தேசம் என்றார்கள். கால காலாந்தரமாக இச்சந்தை நடைபெறுவதற்கு உரிமையளித்தோமெனச் சந்திரகுப்தன் சொல்ல, எல்லாரும் நகைத்தனர்.

பாருகச்சாவிலுள்ள வர்த்தக கணங்களின் பிரதிநிதியொருவன் வந்து தங்கள் ஊரிற் கள்ள நாணயங்கள் பெரிதும் வழங்குகின்றனவென முறையிட்டான். அதனால், மோசம் விளையுமென்றான். "சாணக்கியர் அப்படிப்பட்ட நாணயங்களைத் துண்டு துண்டாக வெட்டி எறியவேண்டுமென்று உத்தரவு செய்திருக்கிறார். அதன்படி, சில்லறை

உத்தியோகஸ்தர்கள் செய்கிறார்களாவென்று தங்கசாலை யதிகாரியான லக்ஷ்மணக்ஷத்ரியக்ஷ் சரியாகக் கவனிப்பதில்லை. அந்நாணயங்களிலுள்ள பொன்னும் வெள்ளியும் திட்டத்திற்குக் குறைவாயிருப்பதனாலே, அவைகளைப் பல வர்த்தகர்கள் குறைந்த விலைக்கு விற்கிறார்கள்" என்று அவன் கூறினன். தங்கசாலை அதிகாரியும், உஜ்ஜயினி ராஜப்பிரதிநிதியும் ஸௌராஷ்டிரத்து மண்டலாதிகாரியும் ஸர்க்கார் உத்தரவைக் கண்டிப்பாக வற்புறுத்தவேண்டுமென்று அவர்களுக்கு எழுதவேமென்று சக்கரவர்த்தி சொன்னான்.

அதற்குப் பின் பாடலிபுர நகரவாஸிகள் சிலர் தோன்றி, தங்கள் குறைகளைச் சொல்லிக்கொண்டனர். "நாங்கள் இருக்கும் இடத்தில் கள்ளுக்கடைகள் அடுத்தடுத்து நெருக்கமாக இருப்பதற்கு மேற்பார்வை அதிகாரி அனுமதி கொடுத்திருக்கின்றனர்; விதி விரோதமாகக் குற்றவாளிகளுக்கும் சாராயம் விற்கின்றனர்; கள்ளுக்கடைகளை நல்ல கட்டடங்களில் அமைத்திருக்கின்றனர்; அவைகளில் நல்ல ஆசனங்களும் படுக்கைகளும் பூக்களும் பழங்களும் வைத்திருக்கின்றனர். வேசி விசாரணாதிகாரி அழகிய தாவிகளை அவ்விடத்திற்கு அனுப்புகின்றார்; கௌரவகுடும்பத்து வாலிபர்கள் குடிக்கும் கூத்திக்கும் ஆசைப்பட்டுக் கெடுகிறார்கள்" என்று அவர்கள் முறையிட்டனர். இரவில் 9 மணி முதல் காலை 3 மணி வரையிற் கள்ளுக்கடைகள் திறந்துவைக்கக்கூடாது என்னும் சட்டத்தைக் கண்டிப்பாக அமுலுக்குக் கொண்டுவரவேண்டுமென்றும், சவங்களைச் சுடுகாட்டுக்கு எந்த எந்தச் சாலைகளின் வழியாகக் கொண்டுபோகவேண்டு மென்பதை நிர்ணயிக்க வேண்டுமென்றும் அவர்கள் கேட்டுக்கொண்டார்கள். கள்ளுக்கடைகளைக்

குறித்துச் சொல்லிய விஷயத்தை விசாரித்து அறிக்கை அனுப்பும்படி நியாயாதிபதிகளுக்குச் சக்கரவர்த்தி உத்தரவு செய்தான். அவைகளை ராத்திரி 9 மணிக்குக் கண்டிதமாக மூடவேண்டும் என்பதையும், காலையில் 3 மணிக்குத் திறக்கலாமென்பதையும் ஜனங்களுக்கு அறிவிப்பதற்காகத் தினந்தோறும் அந்த நேரத்திற்குச் சரியாகத் தாரைகள் ஊதும்படி கட்டளையிட்டான். குறிப்பிட்ட வழிகளிலன்றி வேறு வழிகளிற் சவங்களைக் கொண்டுபோகிறவர்களுக்கு அபராதங்கள் விதிக்கும்படியும் சொன்னான்.

அவர்களுக்குப் பின், சாணக்கியருடைய மாப்பிள்ளையாகிய அக்கினிசர்மன் என்பவன் முன்வந்து, "மகாராஜா! எனக்கும் என் மனைவி ராஜராஜேசுவரிக்கும், எங்கள் குமாரன் ராதாகுப்தனுக்கும் போஷணைத் திரவியமாக மாதம் ஒன்றுக்கு 500 பணம் உபகார வேதனம் சென்ற பிறந்த நாட் கொண்டாட்டத்தில் அளிக்கும்படி வாய்மொழியாக உத்தரவு செய்தீர்கள். அந்த உபகாரச் சம்பள மானியத்தைப் பூஜ்யரான சாணக்கியர் ரத்து செய்துவிட்டார். மகாராஜா செய்த உத்தரவை மந்திரி யொருவர் எங்ஙனம் ரத்து பண்ணுவதற்காகும்?" எனக் குறைகூறினான். சாணக்கியர் குறுக்கிட்டு, "மகாராஜாவின் உத்தரவை நான் ரத்து செய்யவில்லை. அந்த மானியம் வேண்டாமென்று மாத்திரமே சொன்னேன்" என்றார்.

"இவருக்கல்லாமல், இவர் மருமகனுக்குக் கொடுத்த மானியத்தை வேண்டாமென்று இவர் எங்ஙனம் மறுக்கலாம்? மருமகனானவன் வேறு குடும்பத்தைச் சேர்ந்தவனாயிற்றே" என்று அக்கினிசர்மன் வினவினான். இந்த விவாதத்தைப்பற்றித் தலைமை நீதிபதியின் அபிப்பிராயம் என்னவென அரசன் விசாரித்தான். அதற்கு அவர்,

"அக்கினிசர்மனுடைய ஆக்ஞாபனை சட்டத்தின்படி செல்லும். ஒருவர் மற்றொருவருக்கு உரியதை வேண்டாமென விலக்கலாகாது" என்றார். "ஆனால், என் மருமகன் என் வீட்டோடிருந்து மனைவி மக்களுடன் உண்கின்றானே" என்று சாணக்கியர் சொன்னார். "அங்ஙனமாயினும், அவர்கள் சாணக்கியருடைய குடும்பத்தவர் ஆகார்" என்றார் சங்கீர்த்தியாயனர். "எனினும், அவன் என் மருமகன் என்பதனாலேயே அந்த உபகாரநிதி அவனுக்கு அளிக்கப்பட்டது; எனவே, அது நேர்முறையாயல்லாது, எனக்கு அளித்த கொடையேயாகும். ஆதலின், அதை நான் துறப்பதற்கு அதிகாரியாவேன்" என்றார் சாணக்கியர். "அங்ஙனமன்று. ஒரு கொடை சரியா, தப்பா என ஆராயுமளவில் சட்டத்திற்கேனும் நீதி முறைக்கேனும் அது முரணாயிருந்தாலன்றி, கொடையளித்த காரணத்தையும் சந்தர்ப்பத்தையும் ஆராயக்கூடாது" என்று சங்கீர்த்தியாயனர் சொன்னார். "அந்த மானியம் இப்பொழுது 'சுரோத்திரியப் பிரம்மதாய ஸர்வஸ்வ[1] தானமாகப்' புது முறையில் அளிக்கப்படுகின்றது. அக்கினிசர்மனும் அவனுடைய சந்ததியாரும் பரம்பரையாக என்றென்றைக்கும் அனுபவிக்குமாறு குந்தக்கிராமத்து அரசிறையினின்று ஆண்டுதோறும் 6,000 பணம் அளிக்கப்படும்" என்று சந்திரகுப்தன் உத்தரவு செய்யவே, அங்குக் கூடியிருந்த ஜனங்களெல்லாரும் மும்முரமாக ஆரவாரித்துக் களித்தனர். பிறகு, பிற்பகல் ஒரு மணிக்கு நீதிஸபை கலைந்தது. "ஜய ஜய மகாராஜா! ஜய ஜய சீதாராம்!" என்னும் பெரிய வாழ்த்துக் கோஷம் எழுந்தது.

* * *

---

1. வேதம் ஓதிய அந்தணர்க்கு அளிக்கும் கொடை.

அக்கினிசர்மன் அவசர அவசரமாக வீட்டுக்கு ஓடி, தனக்கு மானியம் கிடைத்த செய்தியை ஸ்ரீமதி கௌதமிக்கும் ராஜராஜேசுவரிக்கும் அறிவித்துவிட்டு, சாணக்கியரை நேரே சந்திக்க மனமில்லாதவனாய் ஓடிப்போனான். சாணக்கியர் வீட்டுக்குத் திரும்பிவந்தபோது, வழக்கம்போல ஸ்ரீமதி கௌதமி, 18 மாதக் குழந்தையாகிய ராதாகுப்தனைப் பாட்டனாரண்டை அனுப்பினாள். அச்சிறுவன் தத்தித் தத்திச் சாணக்கியரையணுகி, அவரது முழந்தாளைப் பற்றிக் கொண்டனன். அவனை எடுத்துச் சாணக்கியர் சீராட்டி முத்தமிட்டனர். அதற்குப் பின் ஸ்ரீமதி கௌதமி அணுகி வந்து, "இன்றைக்கு அரண்மனையில் என்ன விசேஷம்? ராஜராஜேசுவரியின் கணவன் வந்து விநோத வர்த்தமானமொன்று அவளுக்குச் சொன்னானே" என வினவினாள். "அப்படியா! அவன் வந்து சொன்னானா? இந்த மானியத்தைப் பற்றிச் சட்டநியாயம் முழுதும் எனக்கே நன்றாகத் தெரியுமென் அம்மடையன் நினைக்கவில்லைபோலும்! என் மனக் கற்பிதமான காரணத்தினாலேயே அக்கொடையைத் தடுத்துப் பேசினேன். ஏனெனில், எங்கள் குடும்பத்தில் தலைமுறை தலைமுறையாக எங்களுக்கென நாங்கள் எவ்வித மான தான மானியங்களையும் ஏற்றவர்களல்ல. மருமகன் என் வீட்டிலேயே வாழ்ந்துகொண்டிருப்பதனால், சந்திரகுப்தன் அளித்த கொடை எனக்காகவே கொடுக்கப்பட்டதெனப் பிறர் நினைக்கக்கூடும்" என்று சாணக்கியர் சொன்னார். "அந்த வார்த்தையையே அவன் ராஜேசுவரிக்குச் சொன்னான். தனக்குச் சங்கீர்த்தியாயனரும் அப்படியே சொன்னார் என்றான்" என்று ஸ்ரீமதி கௌதமி கூறினாள். "அங்ஙனமாயின், நான் நினைத்தவளவு மூடன் அன்று" என்றார் சாணக்கியர். "தங்களை வாதத்தில் வென்று

னெனின், அவன் மூடனுவானே? இதுகாறும் மானிட னெவனும் தங்களை வென்றதில்லையே" என்ருள் ஸ்ரீமதி கௌதமி.

"இனி நான் ஸ்நானம் செய்து போஜனம் பண்ணு வேன்" என்று சாணக்கியர் சொல்ல, ஸ்ரீமதி கௌதமி, "ஸ்நானத்திற்கு வெந்நீர் ஸித்தமாயிருக்கின்றது. இடையில் ஒரு வார்த்தை சொல்வேன். மூன்று கட்டுச் சிறந்த பப்படங்களும்[1] ஐந்து ஜாடி பச்சைமிளகு ஊறுகாயும், ஏழு டப்பா மாம்பழ முரப்பாவும்[2] கேரளத்தினின்று தருவித்து, சக்கரவர்த்தியார் நமக்கு அனுப்பியிருக்கின்ருர்" என்றனள்.

"எனக்காக அவ்வளவு தூரத்திலிருந்து இவ்வஸ்துக் களைத் தருவிக்க அவன் சிரமப்பட்டிருக்கக்கூடாது. ஆயினும், அவை திருப்பியனுப்பக் கூடமுடியாத அற்பப் பண்டங்களாயிருக்கின்றன. திருப்பியனுப்பி விடுவேனுயி னும், அவை இல்லையே எனச் சிந்திப்பேன். ஆதலின், அவை இருக்கட்டும். வைத்திரு. ஆனல் அவனுக்கு இதற் காக நன்றி செலுத்தும்போது, இன்னம் ஒரு வருஷம் வரையிலேனும் இத்தகைய இனமளிக்க நினையாதிருக்க வேண்டுமெனச் சொல்வேன்" என்று மொழிந்து சாணக் கியர் அப்பண்டங்களை உற்று ஆய்ந்து பார்த்தார். பின்பு, ஸ்நானம் செய்யப்போனர்.

---

1. தமிழ் நாட்டில் அப்பளம் என்பதை மலையாளத்தார் பப்படம் என்பர்.

2. Jam.

அத்தியாயம் 38

## இளவரசனுக்கு இதோபதேசம்

**ரா**ஜப்பிரதிநிதி அதிகாரத்தைப் பலகுப்தனிட ஒப்பித்துவிட்டு இளவரசனை பிந்துசாரன் கி. மு. 29 அக்டோபர் மாதத்தில் தக்ஷசிலையினின்று திரும்ப வந்திருந்தனன். அங்கே மூன்று வருஷகாலம் அவ ராஜப்பிரதிநிதியாக அலுவல் பார்த்து, பெரியபஞ்ச நேர்ந்தபோது, ஊக்கமாக உழைத்திருந்தான். கி. மு. 29 ஆகஸ்டு மாதத்தில் அவன் கேட்டுக் கொண்டபா சாணக்கியர் அவனுக்கு அரசியன் முறையையும் அரச கடமையையும் பற்றிச் சிலநாள் பாடம் சொல்லலானார்.

முதல்நாள், தெய்வப் பிரார்த்தனை செய்தபின், உ தேசிக்கத் தொடங்கினார். "இளவரசே! துறைத்த தத்துவங்களை நன்றாகத் தெரிந்து, இவ்விஸ்தாரமா சாம்ராஜ்யத்தை ஆளும்வகையில் உன் தந்தையாரு குத் துணையிருந்து நீ உண்மையில் யுவராஜனாகவேண்டி வயது உனக்கு இப்போது வந்துவிட்டது. உன் தந்ை யாரின் தேகதிடன் தளர்ந்துகொண்டிருக்கின்றது. ராஜ பிரதிநிதியாக ஒரு பிரதேசத்தை ஆளும் அனுபவ ஏற்கெனவே உனக்கு இருக்கின்றது. நமது துறைத்த இலாகாக்கள் சில எங்ஙனம் வியவகரிக்கின்றன வென்று நீ பார்த்துள்ளாய். இனிப் பொருளாதாரவகை, அரசிய முறை, அரசர்கடமை என்னும் இவற்றின் மூலதத்துவ களை உனக்கு இப்போது எடுத்துரைப்பது தகுதியேயாகு

"உன் தகப்பனார் விரும்பியவாறு அர்த்த சாஸ்திரம் என்னும் ஒரு நூலை ஏற்கெனவே நான் எழுதியிருக்கின்றேன். அது ராஜ்ய தந்திரங்களைப் பற்றிச் சொல்லும் நூலாகும். அதில் அரசியல் வியவகாரங்கள், பொருளாதார வகைகள், ராஜாங்க கோச பரிபாலனம் என்பன அடங்கியிருக்கின்றன. அது 15 பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. அப் பகுதிகளாவன: 1. ஒழுக்கமுறை, 2. அரசாங்க மேற்பார்வை அதிகாரிகளின் கடமைகள், 3. நடைமுதலி லுள்ள சட்டவிதிகள், 4. ராஜாங்கத்திற்கு முட்போன்று இடைஞ்சலாயுள்ளவைகளை அகற்றும் விதம், 5. அரசரின் தோழர் நடந்துகொள்ளவேண்டிய முறை, 6. ராஜத்துவ மூலம், 7. அறுவகை உபாயம், 8. அதர்மங்களும் விபத்துக்களும், 9. படையெடுப்பவன் செய்யவேண்டிய காரியம், 10. யுத்தம், 11. சங்கங்களை நடத்தும் முறை, 12. பிரபல சத்துருவுடன் வியவகரிக்கும் விதம், 13. கோட்டையைப் பிடிப்பதற்கான வியூகவமைப்பு, 14. ரகசியவழிகளும் யுக்திகளும், 15. நூலியற்றுமுறை என்பனவாம்.

"அப்புத்தகத்தை இனிச் சீக்கிரத்தில் நீ படிக்கத் தொடங்குவாய். இப்போது நான் உனக்குச் சொல்வதெல்லாம் அந்நூலை நீ விவரமாக ஆழ்ந்து படிப்பதற்குப் பூர்வாங்கமேயாகும். முதன்முதலில் நான் எல்லாச் சாஸ்திரங்களின் முடிவைப்பற்றியும் சொல்வேன். நான்கு சாஸ்திரங்கள் முக்கியமானவையெனப் பொதுவாக எல்லாரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அவற்றுள் மிகவும் முக்கியமானது அன்வீக்ஷகி என்பதாம். அதனில், லோகாயத மதமும், ஸாங்கிய மதமும், யோக மதமும் அடங்கியிருக்கின்றன. 'லோகாயத மதம்' என்பது, உபயோகிதாவாதம்; அதாவது, பெரும்பான்மையோர்க்குப் பெருநன்மை

விளக்கத்தக்கது எதுவோ அதுவே உத்தமமென்பது; 'ஸாங்கியம்' என்பது, பயனைக் கருதாமல் ஓயாது ஒருவன் உழைக்கவேண்டு மென்பதாம்; 'யோகம்' என்பது, ஒருவன் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்வதாம். அன்வீக்ஷகியானது சாஸ்திரங்களுள் மிக உயர்வானது. அது இன்பதுன்பம் இரண்டிலும் மனம் சலனமுறாமல் ஒரு நிலையில் இருக்கச் செய்யும்; மனிதனது உட்கரணங்கள் எல்லாம் ஒன்றுக்கு ஒன்று முரண்படாதவாறு இசைந்து அமைதியளிக்கும்; எல்லாவற்றின் தத்துவத்தையும் உள்ளபடி உணரும் நுண்ணறிவூட்டும்; வாக்குக்கும் வியவகாரத்திற்கும் இனிமையளிக்கும்; மறுமைச் சுகத்திற்கு அது சாதனமா யிருப்பது ஒருபுற மிருக்க, இம்மையில் மிகப் பெருநன்மை செய்யத்தக்கது. அது சாஸ்திரங்களுள் சிறந்தது. சாஸ்திரங்களுக் கெல்லாம் சாஸ்திரம் எனத் தகும். அறிவை விளக்கும் ஒளி. நற்குணாதாரம். நல் விஷயக் களஞ்சியம்" என்று சாணக்கியர் சொன்னார்.

"அது பிராமணர்க்கும் துறவிகளுக்குமே வேண்டிய நூல் என்றும் ராஜகுமாரர்களுக்கு அவ்வளவு அவசியமில்லை யென்றும் நினைத்திருந்தேனே" என்றான் பிந்துசாரன்.

"அங்ஙனமன்று: அது எல்லாருக்கும் அவசியமானதே. மனவமைதி அளிக்கத்தக்கது அதுவே. மனவமைதி இல்லையெனின், சுகம் ஏது?" எனச் சாணக்கியர் மொழிந்தார்.

மேலும் சொல்லலானார்: "அடுத்தபடி முக்கியமான சாஸ்திரம் வேதம். மூன்று வேதங்களைக் கொண்டே நாம் நன்மை தீமைகளைப் பகுத்தறிந்து நடந்துகொள்ளக் கடவோம்!

"மூன்றாம் சாஸ்திரம், வர்த்தம் (வியவசாயம்), பசு பாலனம், வியாபாரம். பொருள் ஈட்டுவதற்கும், வறுமை யகற்றுவதற்கும் இந்நூல் அவசியமானதாகும்.

"நான்காவது, தண்டநீதி, அல்லது ராஜ்யபரிபாலன வித்தை. நீதி நிலைகொள்ளச்செய்வதற்கும், பிரபல மூற்றிருப்பதற்கும், அநீதியை அடக்குவதற்கும், பலங் குன்றி இறந்துபோக நினைப்பதைத் தவிர்ப்பதற்கும் இது அவசியமான சாஸ்திரமாகும்.

"ஜனங்கள் நான்கு வருணங்களாகவும், நான்கு ஆசிரமங்களாகவும் பிரிக்கப்பட்டிருக்கின்றனர். ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் இவை பிராமணர்களின் தொழிலாம். ஓதல், வேட்டல், ஈதல், படைபயிறல், பொருதல், உலகோம்பல் என்பன க்ஷத்திரியரின் தொழில்களாம்; ஓதல், யாகாதிகள் செய்தல், கொடையளித்தல், வியவசாயம், பசுபோஷணம், வியாபாரம் என்பன வைசியருக்குரிய தொழில்களாம். பிரம்ம க்ஷத்திரிய வைசியர்களுக்குப் பணிவிடை செய்தல், ஏருழல், பசுக்காத்தல், பொருளீட்டல், ஸம்ஸ்தான வந்திகர்களாகவும் கைவினைஞர்களாகவும் வேலை செய்தல் என்பன சூத்திரர்களின் தொழில்களாம்.

"இனி ஆசிரமங்களைப் பற்றிச் சொல்வேன். பிரம்ம சாரியானவன், வேதம் ஓதல், அக்கினி ஆராதனை, சௌச விதிகளை யனுசரித்தல் ஆகிய இவைகளைச் செய்துகொண்டு பிக்ஷை எடுத்துண்டு, ஆசாரியர், ஆசாரிய புத்திரன், சகபாடிகள் ஆகிய இவர்களிடம் அன்பு பூண்டு பக்தியோடு வியவகரிக்கவேண்டும்.

"கிருகஸ்தனாயிருப்பவன் தனக்குரிய தொழில் செய்து ஜீவனம் நடத்திக்கொள்ளவேண்டும். அன்னிய கோத்திரத்

தில் தனக்கு ஈடான அந்தஸ்துள்ளவர்களோடு விவாக செய்துகொண்டு இல்லறம் நடத்தி, தேவர்கள், பிதுருக்க அதிதிகள் ஆகிய இவர்களுக்கு உரியன கொடுத்து மீந் தைத் தான் உண்ணவேண்டும்.

"வானப் பிரஸ்தனே, புலனொறுத்துக் காட்டில் வெ தரையிற் படுத்துறங்கிச் சடைவளர்த்து, மான்தோ உடுத்து, அக்கினிஹோத்திரம் செய்துகொண்டு சௌ விதிகளை அனுசரித்துத் தேவர்களையும் பிதுருக்களையு அதிதிகளையும் ஆராதித்துக்கொண்டு, அடவியிற் கிடைக்க கூடிய உணவுப் பொருள்களினால் ஜீவிக்கவேண்டும்.

"பரிவ்ராஜகன் என்னும் துறவி ஐம்புலன்களையு அடக்கி, லாபத்தின்பொருட்டு வேலைசெய்யாமல், திரவிய தைத் துறந்து, ஜனசமூகத்தோடு கலவாது ஒதுங்கிப் ப இடங்களிற் பிக்ஷையேற்று, காடுகளில் வசித்துக்கொண் அகத்தூய்மையையும் புறத்தூய்மையையும் வளர்க் வேண்டும்.

"அஹிம்சை அல்லது அனுவசியமாகப் பிறருக்கு தீங்கு செய்யாமை, வாய்மை, தூய்மை, வன்மமின்மை கொடுமையின்மை, பொறை என்பன மானிடரனைவரு கட்டாயமாக அனுஷ்டிக்கவேண்டிய தர்மங்களாம். அ னவனும் தனக்குரிய தர்மத்தை அனுசரிப்பதனால் மோக மடைவன். பிறருடைய தர்மத்தை மேற்கொள்வதனா வர்ண சங்கரமும் தொழிற் குழப்பமும் விளையும். ஆகலா அரசனாயிருப்பவன் மேற்சொல்லியவாறு அவரவரு தத்தமக்குரிய தர்மத்தை நிறைவேற்றும்படி செய்ய கடவன்."

"ஆனால், மகாசுவாமி! வடமேற்கிலுள்ள யவனர்க இந்நான்கு வர்ணாசிரம தர்மங்களை அனுசரிப்பதில்

ஆயினும், நம்மைப்போன்ற பயிற்சியும் ஆனந்தமும் உள்ளவர்களாய்த் தோன்றுகிறார்கள். அங்ஙனம் இருக்க, வர்ணாசிரம தர்மத்தை நாம் காப்பாற்றுவானேன்?"

"குழந்தாய்! ஒருவன் தனக்குரிய தர்மத்தை நிறைவேற்றுவதனாலே இன்பம் அடைவன். நிறைவேற்றாததனாலே துன்பமடைவன் என்று நான் உனக்குச் சொல்லவில்லையா? ஆதலால், நாம் சுகமடையும் பொருட்டு வர்ணாசிரம விதிகளை அனுஷ்டிக்கவேண்டும். அவர்கள் அனுஷ்டிக்க வேண்டாம். வெள்ளைத் தோல் அவர்களுக்கு இயல்பு; நமது தோலின்மீது ஒரு வெள்ளைப் படையானது நோய்க் குறியாகலாம்" என்று சாணக்கியர் சொன்னார். "அப்படியா? தெரிந்துகொண்டேன். நெடுநாளாக இரண்டு விஷயங்கள் தங்களைக் கேட்டறிய விரும்பிக் கொண்டிருக்கிறேன். இப்போது கேட்கட்டுமா?" என்று பிந்துசாரன் வினவ, "சங்கோசமில்லாமற் கேட்கலாம்" என்று ஆசிரியர் விடையளித்தனர்.

"அலெக்சாண்டரோ மிகப்பிரபலமான சேனாநாயகன். இந்தியாவின் வடமேற்கு எல்லையிலும் பஞ்சாபிலும் உள்ள முரட்டுச் சாதியார்களோடு அவனுடைய படையாட்கள் மனமொத்துப் போர் புரிந்தனர். அச்சாதியார்கள் பத்தசாலனது தலைமையின்கீழ் இருந்த நந்தப் படையாட்களைக் காட்டிலும் மிகச்சிறந்த போர்வீரர்கள். அங்ஙனம் இருந்தும், அலெக்சாண்டர் தன் படைகளை மகதத்தின்மீது பாயச் செய்யமுடியாமற் போனது ஏனோ?"

"ஒரு கள்வர் கூட்டத்தார் அரண்மனையிலுள்ள சுவை மிகுந்த பண்டங்களை உண்டு களிக்க வேண்டுமென அரும்பாடு பட்டு அரண்மனை மடைப்பள்ளிக்குக் கன்னம் வைத்து உட்புகுந்தனர். உள்ளே இருள் மூண்டிருந்தமை

யின், ஒரு குப்பியில் வைத்திருந்த ஆமணக்கெண்ணெ
யைத் தேனென நினைத்து அவர்கள் முதன்முதல் குடி
தனர். முதலெடுப்பிலேயே இவர்கள் செய்த தவறி
பயனைத் தீர்த்துக்கொள்வதற்கு அவசரம் அவசரமா
வெளியேறி ஓடிப்போக வேண்டுமென்னும் கவலையே அவ
களுக்கு மிகுந்தது. அதுபோன்று, அலெக்சாண்டரு
அவனுடைய ஆட்களும் இந்தியாவின் வடமேற்கு மூலையி
லும் படாலத்திலும் போர் தொடங்கினர். அங்குள்ளவர்க
இந்தியர்களுள் மிக மூர்க்கர்கள். அஞ்சாநெஞ்சு படைத்த
வர்கள். எளிதில் இசையாதவர்கள். ஆனதனால், அசுவகர்க
கலகித்து எழுந்து மலைக்கணவாய் வழிகளை அடைத்து
விட்டனரெனத் தெரிந்தவுடனே, தீவிரமாய்ப் பின்னிட்
ஓட வேண்டியவர்களாயினர். அங்ஙனமின்றித் தென்
னிந்தியாவிலேனும் வங்காளத்திலேனும் அவர்கள் போர்
தொடங்கியிருப்பின், க்ஷேமப்பட்டிருப்பர். மேற்சொல்லி
கள்வர்கள் சர்க்கரையும் பாலும் முதலிற் குடித்திருந்தா
நல்விருந்துண்டிருப்பர் என்பதுபோலாம்.” இது கேட்ட
பிந்துசாரன் நகைத்தனன்.

“உனது இரண்டாம் கேள்வி யாது?”

“500 யானைகள்என்பது மிகச் சொற்பமான பிரயோ
ஜனம். அவ்வற்பக் கொடைக்குப் பிரதியாகச் சலூகஸ்
அரயா, அரிகோவியா, கெட்ரோவியா, பரபனிசாடை
என்னும் நான்கு பெரிய மாகாணங்களை ஏன் கொடுத்
தனன்?”

“ஏனெனில், அம்மாகாணங்களை அவனால் கட்டியாள
முடியவில்லை. அவற்றால் அவனுக்குப் பலக்குறைவே
உண்டாயிருந்தது. நம் யானைகளோ, இப்ஸாஸ் என்னும்
இடத்தில் அவனினும் பிரபலமான அந்திகோனஸ் என்னும்

வைரியுடன் போர்புரிந்து வெல்வதற்கு உண்மையில் அவனுக்குப் பெரிதும் பயன்பட்டன. நல்ல திடமான அரசியல் தந்திரமுறைகளையே அவன் கைக்கொண்டனன். ராஜ்யாதிகாரம் கெடாமற் காத்துக்கொள்ளவேண்டுமானால், அறுவகை உபாயங்கள் உண்டு. அவற்றுள் எவ்வேளையில் எது ஏற்குமோ அதனைக் கைக்கொள்ளவேண்டும். அவ்வுபாயங்களாவன:—1. சமாதானம், 2. யுத்தம், 3. நடுநிலைமை, 4. போரில்லாமலே விரைவிற் பாய்தல், 5. புதிய உறவுமுறைகொள்ளல், 6. ஒருவனோடு சமாதானம் செய்துகொண்டு மற்றொருவனுக்குப் போர்க்கு அறைகூவல். இவற்றுள் சலூகஸ் கைக்கொண்டது ஆறும் முறையாகும்.

"ஆனால் நாம் கொடுத்த 500 யானைகள் அவனுடைய நான்கு மாகாணங்களுக்குச் சரியான ஈடென நடித்து அவன் அடைந்த தோல்வியை மறைக்கக் கருதினனென்றும் நினைக்கிறேன்."

"ஆம், வீட்டுக்கு வெளியலங்காரம் செய்வதுபோல, அரசன் அத்தகைய மேற்பூச்சுப் பூசவேண்டியது அவசியமே. ஸ்கிதியத்து ராஜன் செய்வதுபோலத் தன் தோல்விகளை வெளிப்படையாகப் பிரகடித்துக்கொண்டு, தன் தளகர்த்தர்களின் தலையை வெட்டுகிறவனுடைய குடிகளும் படைவீரர்களும் ஊக்கத்தளர்ச்சியை அடைவார்கள். சத்துருக்கள் மனவூக்கங்கொள்வார்கள். அரசன் தோல்வியடைந்ததைத் தோல்வியெனச் சொல்லாமல், யுத்ததந்திரமாகப் பின்னிட்டதுபோல, அதை வர்ணித்துத் தன் குடிகளுக்குக் காட்டவேண்டும். ஆனால், உண்மையான நிலையை மறவாமல் எப்பொழுதும் மனத்தில் வைத்துக்கொண்டு தனக்குள்ள குறைகளை நீக்கிக்கொண்டு, தான் அடைந்த தோல்வி

களுக்குத் தக்க பரிகாரம் பண்ண வகைதேடவேண்டும். இனிமேற் பாடம் நாளைக்கே.''

*  *  *  *

மறுநாள் சாணக்கியர் பிந்துசாரனுக்கு மேற்பாடம் சொல்லத் தொடங்கினர்: "ஒருவன் நேர்மையான முறையில் நடக்கவேண்டுமாயின், மூன்று வேதங்களையும் அவன் நன்றாகப் படிப்பது அவசியம். தானியங்கள், உணவுப் பொருள்கள், ஆடுமாடுகள், திரவியம், பிராணபோஷணைக்கு வேண்டிய மற்ற வஸ்துக்கள் ஆகிய இவைகளிலெல்லாம் ராஜ்யத்தைச் செழுமையான நிலையில் வைப்பதற்கு வர்த்த சாஸ்திரத்தைக் கற்றிருக்கவேண்டியது அவசியம். ஏனெனில், உதாநிமித்தமே உலகம் உழல்கின்றது. அன்வீக்ஷகியையும் மூன்று வேதங்களையும் வர்த்தத்தையும் பாதுகாப்பதற்குத் தண்டநீதி என்னும் துரைத்தன சாஸ்திரம் அவசியமாகவேண்டும். அதன்படி சிஷ்டபரிபாலனமும் துஷ்டநிக்கிரகமும் செய்யவேண்டும். எனவே, நல்லாரைச் சம்மானித்துப் பொல்லாதவரைத் தண்டிக்கவேண்டும். உலகம் மேன்மேலும் க்ஷேமமடைவது நல்ல துரைத்தனத்தைப் பொறுத்திருக்கின்றது. மானிடன் மானிடத்தன்மை வாய்ந்துள்ள வரையில் தண்டனை அவசியமாகவேண்டும். 'கட்டினாற் கயிறு, விட்டாற் கோல்' என்று தெலுங்கில் ஒரு பழமொழி வழங்குகின்றது. 'கோலாடக் குரங்காடும்' என்று நாம் சொல்வோம். தண்டனை வாய்க்குமென்னும் அச்சம் இல்லையெனின், எவனும் ஒழுங்குக்குக் கட்டுப்பட்டிருக்க மாட்டான். தண்டநீதியைச் செலுத்தாமல் ஒதுக்கிவைத்தால், 'மச்சநியாயம்' நடைபெறும். அதாவது, சின்ன மீனைப் பெரியமீன் தின்னும்; மெலியாரை வலியார் விழுங்குவர். ஆகையால், நாடு நல்ல வழியில் நடந்து மேன்மையுற

வதற்கு நியாயாதிபதிகள் அவசியம். அவர்களுடைய தீர்ப்புக்கு ஆதாரம் அரசனது தண்டனைக்கினை என்னும் செங்கோலாகும்.

"சாமானியமாக விதிக்கப்படும் தண்டனைகள், பண அபராதம், சிறையிருப்பு, அங்கச்சேதம், சாவு என்பன வாம். 'குற்றவாளி ஒருவன் தண்டிக்கப்பெறுவிடில் அரசன் ஒருநாள் பட்டினி இருக்கவேண்டும்; குற்றமற்றவனொரு வன் தண்டிக்கப்பெறின் அரசன் மூன்று நாள் உபவாஸம் இருக்கவேண்டும்' என்று நம் சாஸ்திரங்கள் சொல் கின்றன."

"இவ்வித்தியாசம் ஏன்?" எனப் பிந்துசாரன் வினவி னன்.

"ஏனெனில், குற்றவாளியைத் தண்டிக்காமல் தப்பிப் போகவிடுவதினும், நிரபராதியைத் தண்டிப்பதனால் ஜன சமூகத்திற்கு மும்மடங்குத் தீமை உண்டாகும்" என்று சாணக்கியர் சொன்னார். "சிறைச்சாலையிற் கைதிகளை எங்ஙனம் நடத்தவேண்டும்?" எனப் பிந்துசாரன் வினவி னன். "அவர்களுச்குக் குறிப்பிட்ட வேலைகொடுத்து நன்றாகப் பராமரிக்கவேண்டும். வெளியார் சிலர் தினந் தோறுமாவது, ஐந்து நாளைக்கு ஒருமுறையாவது சிறைச் சாலைக்குப் போய்ப் பார்த்துக் கைதிகள் செய்யும் வேலை யின் தன்மையையும், அவர்களுக்குள்ள பராமரிப்பை யும்பற்றி விசாரிக்கவேண்டும். அங்ஙனம் விசாரிக்கத் தக்கவர்கள் சிலரைச் சர்க்கார் நியமிக்கவேண்டும். சிறைப் பட்டவர்களிற் சிலரின் குடும்பங்கள் பரிதாபகரமான நிலையில் இருப்பின், அக்குடும்பங்களுக்குச் சிறு பண உதவி செய்யலாம். வளரும் சிறுவர், கிழவர், நோயாளி, வறிஞர் ஆகிய இவர்கள் சிறைவாஸத்தில் நன்னடக்கையுள்ளவர்க

ளாயிருப்பின், அவர்களை அரசர் பிறந்ததினக்கொண்டாட்டங்களிலும், பௌர்ணமித் தினங்களிலும் விடுதலைசெய்ய வேண்டும். புதிய ராஷ்டிரத்தைக் கைப்பற்றும்போதும், யுவராஜ பட்டாபிஷேகத்தின்போதும், அரசருக்குப் புத்திரோற்பத்தி யாகும்போதும் அவர்களை விடுதலை செய்ய வேண்டும்” என்று சாணக்கியர் பதில் சொன்னார். “விடுதலையான பின் கைதிகளின் விஷயத்தில் எங்ஙனம் நடக்க வேண்டும்?” என்று பிந்துசாரன் கேட்டான். “‘செய்த குற்றத்திற்காகத் தண்டனை அனுபவித்து விடுதலை பெற்றவன் மறுபடி சுத்தவானாயினன் எனக் கருதவேண்டும்; தண்டனையினால் அவனது பாபம் பரிகாரமாயிற்றெனக் கொள்ள வேண்டும்’ என்று மநுதர்ம சாஸ்திரம் கூறுகின்றது. ஆதலால், உத்தியோகம், காப்பு முதலான விஷயங்களில் அவனை மற்ற நகரவாஸியைப்போலவே பாவிக்கவேண்டும்” என்று சாணக்கியர் மொழிந்தார்.

“மரணதண்டனை நல்லதா?” என்று ராஜகுமாரன் வினவினான். “கொலைக்குற்றம், ராஜத்துரோகம் முதலான சிற்சில பாதகங்களுக்கு அத்தண்டனை அவசியமாகும். அந்தக் கடுந்தண்டனையினாலேயே அத்தகைய குற்றங்கள் செய்யாமற் பயந்து நடக்கும் ஜனங்கள் பலர் உண்டு. வெளிநாட்டினின்று வரும் கொலைகாரர்களுடன் போர்புரிந்து அவர்களைக் கொல்வதுபோல, உள்நாட்டிற் கிளம்பும் கொலைகாரர்களுக்கு இத்தண்டனை விதித்தே தீரவேண்டியதாகின்றது. முன்னர்க் கூறியதுபோல, துரைத்தன விஷயத்தில் நியாயம் என்பதையும் நல்லதென்பதையும் பாராட்டுவதைக்காட்டிலும், சமயசந்தர்ப்பங்களைத் தழுவி யுக்தாயுக்தத்தை அதிகமாகப் பாராட்டவேண்டும். இன்

றைக்கு இதோடு பாடத்தை நிறுத்துவோம்'' என்று சாணக்கியர் சொன்னார்.

* * * *

சாணக்கியர் மறுநாள் பாடம் சொல்லத் தொடங்கினார்: "சிக்ஷை என்பது செயற்கை எனவும், இயற்கை எனவும் இருவகைப்படும். செயற்கைச் சிக்ஷையாவது, சிங்கத்தைப் பிடித்துக்கொண்டு வருகிறவன் அதனைப் பழக்கியிருப்பது போன்றதாம்; இயற்கைச் சிக்ஷையாவது, பசுவின் ஸாது ஸ்வபாவத்தைப் போன்றதாம். ராஜகுமாரனை இருப்பவன் தன்னைத் தானே சிக்ஷித்து ஒழுங்குபடுத்திக்கொள்ளவேண்டும். சௌளத்திற்குப்பின், பூணூல் ஏற்குமுன் அவன் எழுதப் படிக்கவும் கணக்குப் போடவும் கற்றுக்கொள்ளவேண்டும். உபநயனம் ஆனபின், வேதம், வர்த்தம், தண்டநீதி, அன்வீக்ஷகி என்னும் சாஸ்திரங்களைத் தேர்ந்த நிபுணர்களிடமிருந்து பயிலவேண்டும். கோதானம் செய்ததுபோல, 16-ஆம் வயது ஆனபின்னரே விவாகம் செய்துகொள்ளவேண்டும். சீக்கிர காலத்தில் தனக்கு வாரிசாக ஒரு பிள்ளையைப் பெற்றுக்கொள்ள வழிதேட வேண்டும். அதனால், தனக்குப்பின் அரசப்பட்டம் பெறுவதிற் சல்லியம் இராது. சதிகாரரும் அவனைக் கொல்வதனாற் பிரயோசனம் இல்லையென அத்தகைய ஆலோசனையைக் கைவிடுவார்கள். சாஸ்திரம் வல்ல முதிய புலவர்களுடன் சகவாசம் செய்துகொண்டு, அவர்களுடைய ஒழுக்கங்களைக் கைப்பற்றி நடக்கவேண்டும். ஒவ்வொரு நேரத்திற்கும் ஒவ்வொரு வேலையை அமைத்துக்கொண்டு, அவைகளைக் கிரமமாகவும் கண்டிதமாகவும் செய்யவேண்டும். முற்பகலில் கரி பரி தேர் பதாதி என்னும் படைகளை நிர்வகித்து நடத்தல், முற்றுகைக்குரிய யந்திரவகைகளைப்

பிரயோகித்தல் முதலான யுத்த காரியங்களிலும், போரணி வகுப்பதிலும் நல்ல யுத்தானுபவம் உள்ளவர்களிடமிருந்து பாடம் படித்துக்கொள்ளவேண்டும். இராமாயணம், மகா பாரதம், புராணங்கள் ஆகிய இவைகளிலுள்ள வீரசரித்திரங் களையும் கேட்கவேண்டும். அதனல், அவர்களுடைய பெரு நோக்கங்களும் தகுதியான ஒழுக்கங்களும் அவன் மனத் திற் பதியும். பிற்பகலில் தேசசரித்திரம், வர்த்தம், தண்டநீதி என்னும் இவைகளைக் கற்கவேண்டும். பகலிற் படித்த பாடங்களை இரவில் மனனம் செய்யவேண்டும். கல்வித் திறமை தனக்குத் தானே வராது. அது விடாப்பிடியாக அடுத்துப் பயிலுவதனாலும் மனத்தை ஊன்றிச் செலுத்து வதனாலுமே வரும். நன்றாகக் கல்விகற்று, ஒழுக்கமுறையில் நல்ல சிக்ஷை பெற்று, குடியோம்புவதிலே கவனமாயிருந்து குடிகளுக்கு நன்மை செய்வதிலேயே மனங்கொண்ட அர சன் தரணிக்கு அதிபதியாவன்.

"அவன் தன் ஐம்புலன்களை அடக்கித் துராசை, கோபம், பேராசை, வீண்பெருமை, அகங்காரம், பயனற்ற மூடத்தனமான களியாட்டு ஆகிய இவைகளை உதறிவெறிய வேண்டும். எல்லாச் சாஸ்திரங்களின் முக்கியமான நோக்க மும் புலனெறுப்பே. பிராமண ஸ்திரீயின்மீது துராசை கொண்டதனல் காராளன் என்னும் வைதேகன் (மிதிலை யரசன்) மாண்டனன். பிருகு மகரிஷியின் குடும்பத்த வரின்மீது கோபங் காட்டித் தலஜங்கன் அழிந்தனன். பேராசைகொண்டு பணம் பறித்ததனல் அஜபிந்து என்னும் சௌவீரன் வீழ்ந்தனன். வல்லமையில் ஸ்ரீராமருக்கு ஈடானவனென வீண் எண்ணங்கொண்டு ராவணன் அவ ரிடம் சீதையைத் திரும்ப ஒப்பிக்காமையின் மடிந்தனன். அதுபோலவே, அர்ஜுனனையும் கிருஷ்ணனையும் எதிர்த்துப்

போர்புரிய வல்லேனெனக் கர்வித்துத் துரியோதனன் மாண்டனன். அகங்காரத்தினாலே ஹைஹய ராஜ வமிசத்துக் கார்த்தவீரியார்ஜுனன் அழிந்தனன். மூடத்தனமான களியாட்டினாலும் வியாசரைப் பயனற்ற பரிகாசம் செய்ததனாலும் விருஷ்ணிகள் ஒழிந்தனர். அதுபோலவே முட்டாள்தனமாக அகஸ்திய பகவானை நையாண்டி பண்ணப் பார்த்ததனால் வாதாபி துன்புற்றனன்.

* * *

மறுநாள் சாணக்கியர் பாடம் சொல்ல ஆரம்பித்தார். “எல்லாக் காரியங்களும் பணத்தைப் பொறுத்தே நடக்க வேண்டியதாகும். ஆதலின் எல்லாவற்றினும் கஜானாவை முக்கியமாகக் கவனிக்கவேண்டும். முக்கியமான வருவாய்களாவன;—பட்டணங்கள், நாட்டுப்புறங்கள், சுரங்கங்கள், காடுகள், தோப்புகள், ஆடுமாடுகள், ஆறுகள் கடல், கடற் அங்கம் என்பனவாம். தரைச் சுங்கம், அபராதங்கள், நிறுத்தலளவை முகத்தலளவைக் கட்டணங்கள், கம்பட்டத் தீர்வை, ரகதாரித்தீர்வை, கலால் தீர்வை, கசாய்க்கானா வரி, நூல்வரி, எண்ணெய் சர்க்கரை நெய் தங்கநகைகள் விற்பனை ஆகிய இவைகளின்மீது வரி, விலைமாதர் வரி, சூதுச்சாலைவரி, கட்டட வரி, க்ஷேத்திர வரி, விநோதக் காட்சிக் கட்டடப் பிரவேச வரி என்னும் இவை பட்டணவாசங்களில் வசூலிக்கத்தக்கனவாம். சர்க்கார் நிலத்திலிருந்துவரும் வருவாய் குடி நில விளைவில் ஆறிலொரு கடமை, யாத்திரை வரி, ஊர்ச்சுங்கம், மீன் பிடிதுறைகள், கப்பல்கள், மேய்ச்சற்றரைகள், சாலைகள், கயிறு, கிராமபாரதம் ஆகிய இவை நாட்டுப்புறத்தினின்று வசூலிக்கத் தக்கனவாம்.

"பொன், வெள்ளி, வைரம், நவரத்தினங்கள், பவழம், சங்கு, உலோகங்கள், உப்பு மற்றுமுள்ள தாதுவர்க்கங்கள் ஆகிய இவை சுரங்கங்களினின்று கிடைக்கத்தக்க வருமானங்களாம்.

"சர்க்கார்த் தோட்டங்களிலுள்ள மலர்வகை விற்பனை, பழவகை விற்பனை, கரும்பு விற்பனை ஆகிய இவை தோப்புக்களினின்று வரும் வரும்படிகளாம்.

"வேட்டைக் காடுகள், வெட்டுமரக் காடுகள், யானைக் காடுகள் என்னும் இவை காட்டுவருமான இனங்களாம். சர்க்கார் மந்தைகளினின்று பசு, எருமை, வெள்ளாடு, செம்மறியாடு, கழுதை, ஒட்டகம், குதிரை, கோவேறு கழுதை ஆகிய இவைகளின் விற்பனையினால் வரும் பணம் மந்தை வருமானமாம்.

"ஆறுகளிலும் கடலிலும் பிடித்த மீனில் ஆறில் ஒரு கடமை, புதையற் பொருள், சர்க்கார்க் கப்பல்களில் பிரயாணம் செய்கிறவர்கள் கொடுக்கும் சத்தம், பறி முதலான கொள்ளைக் கப்பல்களை அழிக்காமல் விற்றுவரும் பணம் ஆகிய இவை ஆறுகளினின்றும் கடலினின்றும் வரத்தக்கனவாம். பிறநாடுகளினின்று நம் துறையில் வந்திறங்கும் சரக்குகளின்மீது சுங்கவரி வசூல் செய்யப் படும்.

"வருமான வகைகளைச் சொன்னேன். இனிச் செலவு வகைகளைச் சொல்வேன். மாமூல், லாபத்துறை, அசாதாரணம் எனச் செலவு மூன்றுவகைப்படும். உத்தியோகஸ்தர்களின் சம்பளமும் துரைத்தனம் நடாத்தும் செலவும் மாமூற்செலவாகும்; 'சுதர்சன்' ஏரி அமைப்பதற்

காகச் செலவிட்ட மூன்று கோடிப் பணம் லாபத்துறைச் செலவாகும்; சில நாளைக்குமுன் க்ஷாமநிவாரணத்திற்காகச் செலவிட்ட ஒருகோடி சுவர்ணம் அசாதாரணச் செலவாகும்.

"வரும்படியையும் செலவையும் ஜாக்கிரதையாக ஆய்ந்து பார்க்கவேண்டும். சர்க்கார் வேலைக்காரர்கள் 40 வகையாகச் சோரம் செய்வார்கள். சபலசித்தம் மனிதர்களுக்கு இயல்பு. வேலை செய்துகொண்டிருக்கும் குதிரைகளைப்போல அவர்களுடைய குணம் மாறிக்கொண்டிருக்கும். தேன் எடுக்கிறவன் புறங்கையை நக்காதிருக்க மாட்டான். அதுபோல, அரசனுக்கு வரும் இறைப் பணத்தில் ஒரு சிறு பகுதியேனும் சர்க்கார் வேலைக்காரன் தின்னுதிருக்க முடியாது. சர்க்கார்ப் பணத்திலும், சிக்கலான கணக்குவகைகளிலும் உழலுகிற உத்தியோகஸ்தர்களின் பட்டிமையை முழுதும் கண்டுபிடிக்க முடியாது. ஆகையால், உத்தியோகஸ்தர்களை ஓரிடத்தினின்று மற்றோரிடத்திற்கும், ஒரு வேலையினின்று மற்றொரு வேலைக்கும் மாற்றவேண்டும். அப்படிச் செய்வதனால் பொதுவாகக் கேடு குறையும். அபஹாரணத்தை அடியோடு அழிக்கமுடியாது. சர்க்கார் உத்தியோகஸ்தன் பணச்சோரம் செய்தானென உண்மையாகத் தெரிந்து அறிவிக்கிறவன், சர்க்கார் வேலையில் இல்லாதிருந்தால், குற்றவாளியிடமிருந்து வசூலாகும் பணத்தில் அவனுக்கு ஆறிலொரு பங்கு கொடுக்கவேண்டும்; அவனும் சர்க்கார் வேலையில் இருந்தால், பன்னிரண்டில் ஒரு பங்கு அவனுக்குக் கொடுக்கவேண்டும். அவன் சொல்லிய சங்கதி பொய்யாக இருந்தால், அவனைக் கொரடாவினால் அடிக்கவேண்டும்."

*        *        *        *

மறுநாள் சாணக்கியர் தொடர்ந்து சொல்லலாயினர்: "இப்போது அரசியலையும், ஊறுபடாமல் அதனைக் காப்பாற்றிக்கொள்ளும் வகையையும் பற்றிச் சொல்வேன். அரசியல் அங்கங்கள்:—1. அரசன், 2. அமைச்சர், 3. நாடு, 4. கோட்டை, 5. கஜானா, 6. சைனியம், 7. துணையரசர், 8. பகைவரை அடக்கல் என எட்டாம். ஏற்கெனவே நான் சொல்லியிருக்கிற அறுவகை உபாயங்களுள் ஏற்றதொன்றைக் கொண்டு அரசியல் கெடாமல் காத்துக்கொள்ள வேண்டும். போர் நோக்கமே கொண்டு விரைவிற் படையெடுக்கப் பகைவன் மனங்கொண்டிருக்கையில், சமாதானம் செய்துகொள்ள வேண்டுமென்றே நாடுகிற அரசன் பாழ்படுவான். போதிய பலாதாரம் இல்லாமலேனும், சரியான ஆபத்தம் இல்லாமலேனும் பொரப்போகிறவன் அழிவது திண்ணம். இனி ஒருகால் சத்துருவாவார் எனத் தக்கவர்களுக்கு அரசன் தன் போக்கும் நோக்கங்களும் தெரியா வண்ணம் மறைத்து வைத்துக்கொள்ளவேண்டும். எதையும் பலர் அறியப் பகிரங்கமாக வாதிக்கக்கூடாது. இவ் விஷயம் பின்வரும் கதையினால் விளங்கும்:

"உசக்கிராமம் என்னும் ஊரில் இரண்டு பெரிய கிருகஸ்தர்கள் இருந்தார்கள். அவ்வூருக்கு வரும் அந்நியர்களுக்கு அவர்கள் இருவரும் தாராளமாக அன்னமிட்டு உபசரிப்பார்கள். ஆனால், அந்நியர்கள் அவர்கள் வீட்டிற்குப் போகும் போது, அவர்களை உள்ளே அழைத்துக்கொண்டுபோய் மரியாதையாக விருந்தினரை யொப்ப உபசரிக்கவேண்டுமா அல்லது, சாமானியரைப்போலத் தாழ்வாரத்தில் வைத்து அன்னமிடவேண்டுமா என அந்தக் கிருகஸ்தர்கள் தீர்மானிக்க வேண்டியிருந்தது. விருந்தினர் வந்தவுடன் ஒரு கிருகஸ்தன் அவர்களை எங்கே உட்காரவைக்க வேண்டு

மென, அவர்களெதிரில், தன் மனைவியுடன் ஆலோசிப்பான். அதனால் சில விருந்தினர் மனம் வருந்திக் கோபங்கொண்டனர்; வேறுசிலர் அக்கிருகஸ்தனை அடிக்கவும் அடித்தார்கள்; அவனைப்பற்றி நல்ல அபிப்பிராயப்படாமலே போய் விட்டனர். மற்றொரு கிருகஸ்தனை விருந்தினர் அனைவரும் கொண்டாடினர். அவர்களில் எவரோடும் எவ்வகை மனத் தாங்கலும் அவனுக்கு இல்லை. முதல் கிருகஸ்தன் ஒரு நாள் இரண்டாம் கிருகஸ்தனண்டை வந்து, மேற்சொல்லிய வித்தியாசத்திற்குக் காரணம் என்னவென வினவினான். அதற்கு மற்றவன், 'ஓ! நானும் என் மனைவியும் அவ் விஷயத்தை வெளிப்படையாகத் தர்க்கிப்பதில்லை. வந்த விருந்தினனை வீட்டுக்குள் உட்காரவைக்க வேண்டுமாயின், அவள் வலக்கரத்தால் தன் கூந்தலைக் கோதிக் கொள்வாள்; தாழ்வாரத்தில் உட்காரவைக்க வேண்டுமாயின், இடக்கரத் தால் கோதிக்கொள்வாள். அந்தச் சந்தேகத்தை இவ்வாறு இரகசியமாகத் தீர்த்துக்கொண்டு நாங்கள் முகமலர்ச்சி யுடன் விருந்தினனை வரவேற்று, அவனுக்கு அமைத்துள்ள இடத்திற் கொண்டுபோய் அவனை அமரச்செய்து அன்ன மிடுவோம். அவனது அந்தஸ்தைக் குறித்து நாங்கள் தர்க் கிக்கவே இல்லை யென்னும் எண்ணத்தோடு அவன் உவந்து உண்டுபோவான்' என்று சொன்னான்.

"இக்கதை போதிக்கும் நீதியை நாம் மிகப் பெருங்காரியங்களுக்கும் பொருத்திக் கொள்ளவேண்டும். சக்கரவர்த்தியார் குக்குறு வான்புள்ளை எப்பொழுதும் கையில் வைத்துச் சீராட்டிக்கொண்டிருப்பதைப் பார்த்திருப் பாய். அவரைப் பறவைப்பித்தரென்று சொல்லலாம். அந்த எண்ணம் ஜனங்களுக்கு உண்டாக வேண்டுமென் பதே எங்கள் நோக்கம். கூரிய கண்ணும் கருத்தும் அறி

வும் ஆராய்ச்சித் திறமையும் உள்ள மெகாஸ்தனீஸூம் உண்மையில் அவ்வபிப்பிராயமே கொண்டனன். இரகசியம் என்னவெனில், பறவைகள் வெளியே போய்த் திரிந்து சங்கேத லிபியில் வர்த்தமானங்கள் கொண்டுவருகின்றன. அவைகளைச் சீராட்டுகையிற் சக்கரவர்த்தியார் அக்கடிதங்களைப் படித்துக்கொண்டு, உற்ற சமயத்தில் முன்னுணர்வும் அறிக்கையும் வர்த்தமானமும் பெறுகின்றனர்.

"பிறர் உதவிகொண்டே அரசியல் நடத்தவேண்டும். ஒரே சக்கரத்தினால் வண்டி ஓடாது. ஆகையால், அரசன் மந்திரிகளை நியமித்துக்கொண்டு அவர்களின் அபிப்பிராயங்களைக் கேட்கவேண்டும். அரசன் புத்திசாலியாயிருப்பின், குழந்தை சொல்லும் யுக்தியான வார்த்தையையும் கைக்கொண்டு நன்மை பெறவேண்டும். அனுபவம் மிக்க மந்திரிகளுடன் ஆலோசிப்பதனால் எவ்வளவு நன்மை பெறலாமென்று நீயே ஊகித்துக்கொள்வாய். மந்திரிமார் ஸ்வதேசத்தவராய், கண்ணியமான குடும்பத்திற் பிறந்தவராய், கலைப் பயிற்சி மிக்கவராய், தீர்க்க திருஷ்டியுள்ளவராய், விவேகசாலிகளாய், ஞாபகசக்தி வாய்ந்தோராய், துணிவுள்ளாராய், வாசாலராய், சாமர்த்தியராய், அறிவுக் கூர்மையுள்ளவராய், ஆர்வம்மிக்கவராய், கம்பீரமுடையாராய், பொறுக்கும் சக்தியுள்ளவராய், யோக்கியராய், சாதுவாய், எளிதில் தரிசிக்கக் கூடியவராய், ராஜபக்தி யுடையராய், நன்னடக்கையினராய், பலசாலிகளாய், ஆரோக்கியமுடையராய், தீரம் மிக்கவராய், தாமதத் தன்மையும் இளநெஞ்சும் இல்லாராய், அன்புடையராய், வக்கிர ஸ்வபாவ மில்லாராய் இருக்க வேண்டும். அவர்களை அரசனும் பிரதானமந்திரியும் புரோகிதருமாகச் சோதித்துப் பார்க்கவேண்டும்; வைதிக மத விஷயங்கள், திரவியம், காமசாரம் ஆகிய இவை ஒவ்

வொன்றிலும் ஆசைகாட்டிப் பார்க்கவேண்டும், அச்சுறுத்தியும் பார்க்கவேண்டும். ஆனால், அவர்களிடத்துள்ள நற்குண நல்லம்சங்களைக் கெடுக்கும் நோக்கத்தோடல்லாது, தீமையைக் கொண்டு நன்மை அறிதற்பொருட்டே இச் சோதனைகள் செய்யவேண்டும்.

"அரசனானவன் திறமையான வேவுமுறை அமைத்துக் கொள்ளவேண்டும். நானா வகையினரையும் சாரணர்களாக வைத்திருக்கவேண்டும். வஞ்சக சீடர், ஏகாங்கி, கிருகஸ்தர், வர்த்தகர், துறவி, பள்ளிமாணவர், விஷமிடுவோர், தீ வைப்போர், பிச்சைக்கார ஆண்டிகள், பரத்தையர், என்னும் எல்லா இனத்தவரையும் ஒற்றர்களாகக் கொள்ளவேண்டும். ஓர் ஊரிலேயே இருக்கும் ஒற்றரும், ஊரூர் திரியும் ஒற்றரும் இருக்கவேண்டும். அவ்வொற்றர்களின்மீது வேவுபார்க்கச் சாரணக் கண்காணிகள் இருக்கவேண்டும். ஒரு வேவாள் சொல்லுகிற விஷயத்தை, அவனுக்குச் சம்பந்தம் இல்லாத வேறு மூவர் உறுதிப்படுத்துகிறவரையில் நம்பக்கூடாது. உத்தியோகஸ்தர்கள் நகரவாஸிகள் ஆகிய இவர்களுடைய இரகசியங்களைக் கண்டுபிடிப்பதல்லாமல் வேவுகாரர் பிற நாட்டு ஒற்றர்களின் இருக்கைகளையும் நடக்கைகளையும் தெரிந்து அறிவிக்க வேண்டும்.

"அரசன் இந்திரனுடைய கடமைகளையும் யமனுடைய கடமைகளையும் தானே மேற்கொண்டு அவரவருக்கேற்ற சம்மானங்களையும் தண்டனைகளையும் செய்ய வேண்டும். அதிருப்தியையும் பகைமையையும் அடக்குவதற்குச் சாம தான பேத தண்டமென்னும் நால்வகை உபாயங்களையும் அரசன் கையாளவேண்டும்.

"அஜாக்கிரதை, குடிமயக்கம், கனவிற் பிதற்றல், மந்திராலோசனை சபையின் இரகசியங்களை ஸ்திரீகளுக்கும்

மற்றவர்களுக்கும் வெளியிடல் என்னும் தோஷங்களுள்ள மந்திரிகளை நீக்கி விடவேண்டும். எவரையும் இகழாமல் அரசன் எல்லாருடைய அபிப்பிராயங்களையும் காது கொடுத்துக் கேட்கவேண்டும். விவேகியானவன், குழந்தை சொல்லும் சமத்காரமான வார்த்தையையும் உபயோகித் துக் கொள்ளவேண்டும்.

"அவனுடைய மந்திராலோசனை சபையில் 12, 16, 20 அல்லது ராஜ்ய காரியங்களுக்கு எத்தனைபேர் வேண்டுமோ அத்தனை மந்திரிகள் இருக்கலாம். மந்திரிகளே அவனுக் குக் கண்களாவர். இந்திரனுடைய மந்திராலோசனை சபை யில் ஓராயிரம் முனிவர்கள் இருக்கின்றனர். ஆதலால் அவனுக்கு, இரண்டு கண்களே உளவாயினும், 'ஆயிரங் கண்ணன்' என்று பெயர்.

"வழக்குரைப்போர்கள் தன் வாசலண்டை வந்து காத் திருக்கும்படியாகவாவது, தன்னை எளிதிற் பார்க்கமுடியாத வாறுவது அரசன் ஒருபோதும் செய்யக்கூடாது. தேவர் கள், தர்மவிரோதிகள், பிராமணர்கள், பாலர்கள், முதிய வர்கள், துன்புற்றோர், திக்கற்றோர், ஸ்திரீகள் ஆகிய இவர் கள் சம்பந்தமான விஷயங்களை அரசன் தானே நேரிற் கவனிக்வேண்டும். கால்நடைகள், புண்ணிய க்ஷேத்தி ரங்கள் ஆகிய இவைகளையும் அரசனே நேரிற் கவனிக்க வேண்டும். நாட்டுக்கு வரும் விபத்துக்களையும் அவன் நேரே கவனிக்கவேண்டும். அவ்விபத்துக்கள், 1. பஞ்சம், 2. வெள்ளம், 3. பெருவாரி நோய்கள், 4. துர்த்தேவதை கள், 5. தீ, 6. எலிகள், 7. ஸர்ப்பங்கள், 8. புலிகள் என்னும் எட்டாம்."

"தாங்கள் சொல்லிய விபத்துக்களுள் முதல் மூன்றைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன்; ஐந்தாவதும் இன்ன

தென்று அறிந்துகொள்ளமுடியும். மற்ற நான்கும் புதியன வாய்த் தோன்றுகின்றனவே; அன்றியும், தேச விபத் தெனச் சொல்லக்கூடாத அளவு அற்பமெனத் தோன்று கின்றனவே" என்று பிந்துசாரன் வினவினன்.

"மேற்பார்வைக்கு அவை அங்ஙனம் தோன்றுகின்றன. ஆழ்ந்தாலோசித்தால் நான் சொல்வது உண்மையென விளங்கும். மிகக் குறைவாகக் கணக்கிட்டுப் பார்த்தா லும், இந்தியாவில் பதினயிரங் கோடி எலிகளுக்குக் குறை வில்லை. ஆயிரங்கோடி மனிதர் புசிக்கத்தக்க உணவுப் பொருள்களை அவை தின்று அழிக்கின்றன. அன்றியும், கோடிக்கணக்கான விலையுள்ள வஸ்திரங்களையும் மரங்களை யும் கட்டடங்களையும் அவை வருஷந்தோறும் நாசமாக்கு கின்றன. புலிகளும் ஸர்ப்பங்களும் ஒவ்வோர் ஆண்டிலும் லக்ஷக்கணக்கான ஜனங்களைக் கொல்வதல்லாமல், அவை விளைக்கும் பீதியினல் விஸ்தாரமான நிலவெளிகளையும் பயிரிடவொட்டாமற் செய்கின்றன. நம் நாட்டிலுள்ள அறுபத்தாறுகோடி துர்த்தேவதைகள் வெளிநாட்டுச் சத் துருவைக் காட்டிலும், அதிகமான காலத்தையும் திரவியத் தையும் சக்தியையும் அழிக்கின்றன; அதனினுங் கேடான பீதியையும் பலவீனத்தையும் உண்டாக்குகின்றன. மனிதர்க ளுக்கு வரத்தக்க துராக்கிரகங்கள் மிகக் கேடான மன வெழுச்சிகள் எல்லாம் இந்தப் பலவகையான துர்த்தேவதை களினலேயே கிளர்த்தப் பெறுகின்றன" என்று சாணக் கியர் விவரங் கூறினர். "இந்தக் கஷ்டத்தைப் போக்குவது எங்ஙனம்?" எனப் பிந்துசாரன் கேட்டான். "தீமையை நன்மையினலும், பொய்யை மெய்யினலும், தானவர்களை வானவர்களாலும் வெல்க. தேவர்களுக்குக் கோயில்களை மேலும் மேலும் அதிகமாக நிருமித்துத் தானவருக்குப்

போக்கும் நிவேதனாதிகளை வானவர்க்களித்து, அத்தா
வர்களைப் பட்டினி போடுக" என்று சாணக்கியர் சொன்

"கலகங்களையும் மனஸ்தாபங்களையும்பற்றிச் சொ
னீர்களே. மானிடருக்குள் மனஸ்தாபம் நேருவதற்
மூலகாரணங்கள் யாவை?" எனப் பிந்துசாரன் வினவினான்

"விவாகம், கடன், வீடுகள், பூஸ்திதிகள், ஒப்பந்த
கள், பொருள் ஒப்படைப்பு, சூதாட்டம் ஆகிய இவை
பெரும்பான்மையான விவாதங்களுக்கும் மனஸ்தாபங்க
ளுக்கும் முக்கிய மூலமாகும்."

"எத்தகைய விவாகங்களை அரசன் அங்கீகரிக்கலாம்?"

"நம் சாஸ்திரங்களில் எட்டுவிதமான விவாகங்க
சொல்லப்பட்டிருக்கின்றன. இவற்றுள் நான்கு சாஸ்தி
சம்மதமானவை; மற்ற நான்கும் சாஸ்திர முறையாகாதவை
இவையன்றி, அந்த அந்தச் சாதிசம்பிரதாயத்தினால் எ
தனையோ விதமான மணங்கள் சமூகத்தாரால் ஒப்பு
கொள்ளப்பட்டிருக்கின்றன. சம்பந்தப்பட்ட உற்று
உறவினர் அனைவர்க்கும், விவாகம் ஏற்படுவதனால் நன்மை
தீமைப்பயன்களை அனுபவிக்கத்தக்கவர் அனைவர்க்கும்
சம்மதமேயானால் எவ்வகை விவாகமும் அங்கீகரிக்க
தக்கதே."

"மனைவிக்கெனத் தனியாகச் சொத்துப் பிரித்து
கொடுக்கவேண்டுமா?"

"மனைவிக்கு நகைகள் போடவேண்டும். அதற்கு
அளவு இல்லை. அதுவன்றி, நல்ல வரும்படியுள்ளவ
அவளுக்கு ஜீவனாதாரமாகக் குறைந்த பக்ஷம் 2,000 பண
மேனும் ஏற்படுத்தி வைக்கவேண்டியது கடமையாகும்."

"நாட்டில் நடமாடுகிற பலவகை வழக்கங்களையும் அரசன் பொறுத்து ஒப்புக்கொண்டிருக்க வேண்டுமா? அல்லது, நல்லமுறை யொன்றைத் தெரிந்தெடுத்து அதனையே எல்லாரும் அனுசரிக்க வேண்டுமெனக் கட்டாயப் படுத்தவேண்டுமா?"

"வாழ்க்கை விதம் ஒரு மாதிரியாகவே இருக்கவேண்டுமெனச் செய்யமுடியாது. எவ்வளவு நல்ல முறையைத் தெரிந்தெடுத்துக் கொண்டாலும், எல்லாருக்குமே அது சரிப்படாது. அங்ஙனம் செய்ய முயல்வது பலிக்காதென்பது திண்ணம். ஒருவேளை பலவந்தத்தினால் அது நடைபெறுவதாகக் கொண்டாலும், அது வாழ்க்கையில் மரணத்திற் கொப்பான நிலையாகும். எதுபோலவெனின், எல்லாருடைய மூக்கும் ஒரே நீளமாயிருக்க வேண்டுமெனச் சிலருடைய மூக்கை நறுக்கி, வேறு சிலருடைய மூக்கை நீளமாக்க இழுத்துவிடுவது போலவாம். அந்த அந்தச் சாதியார் தத்தம் சிஷ்டாசாரங்களையும் உரிமைகளையும் தாராளமாக அனுபவித்துக் கொள்ளட்டும். ஆனால் அவர்கள் கொண்டாடும் உரிமைகளினால் மற்றவர்களுக்கு இடைஞ்சல் இல்லாதிருக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டும். அதுவன்றி, பற்பல சாதியாரையும் அவரவருக்குத் தொன்று தொட்டு வந்துள்ள வழக்கபழக்கங்களைக் கைவிடும்படி கட்டாயப்படுத்த முயன்றால் கலகங்கள் உண்டாகும். அக்கலகங்களிற் கோபமும் உக்கிரமும் அதிகமாயிருக்கும்; அவை நெடுங்காலமும் நீடிக்கும்; கடைசியில் அவை ராஜாங்கத்தையே அழிக்கும். அக்கலகங்களினால் உண்டாகத்தக்க ஆனியிலும் அபாயத்திலும் பாதிகூடப் பிறநாட்டாரின் படையெழுச்சியினால் விளையாது. ஆகையால்,

இவ்வளவு அபாயகரமாயும் விகாரமாயுமுள்ள நிலை அமைப்பதற்கு ஒருநாளும் பிரயத்தனப்படாதே.

"இனி உனக்கு இப்பாடங்களை முடிவு செய்வே வைதிக விரதாதிகளை மேற்கொள்வதனாலும், யாகாதிகளை செய்வதனாலும், அவைகளில் துணை நின்று உதவிய புரோ தர்களுக்குத் தக்கவாறு தக்ஷிணைகள் கொடுத்துக் கடை யில் அவபிருத ஸ்நானம்[1] செய்து பரிசுத்தனாவதனாலு பிராமணனுக்கு நற்கதி வாய்க்கும். அரசனுக்கோவெனின் நற்கதி வேறுவகையிலுண்டாகும். வேலை செய்யச் சி மாயிருத்தலே அவன் மேற்கொள்ளும் வைதிகவிரதம். த கடமைகளைத் திருப்திகரமாக நிறைவேற்றலே அவன் செ யும் யாகம். எல்லாரையும் ஒரேமாதிரியாகக் கவனித் உபசரிப்பதே பிராமணர்களுக்குக் கொடுக்கும் தக்ஷிணை கும், யாகமுடிவிற்செய்யும் பரிசுத்த ஸ்நானத்திற்கும் ஈட கும். குடிகளின் திருப்தியே அவனது திருப்தி, அவ களின் க்ஷேமமே அவனது க்ஷேமம் என அவன் கொள் வேண்டும். தனக்கு இனிமையானதே நல்லதென அவ கருதக்கூடாது; பிரஜைகளுக்கு இனிமையானதே நன்மை யானதெனக் கருதவேண்டும். இங்ஙனம் அவன் எப்பொ தும் முயற்சியுள்ளவனாய்ச் சுறுசுறுப்பாக உழைத்துத் த கடமைகளைச்செய்து நிறைவேற்றவேண்டும். ஏனெனி இன்றேனும் பின்னரேனும், செல்வத்திற்கு மூலம் சு சுறுப்பேயாகும். நற்பேறு படைப்பதற்கு இடங்கொட தது சோம்பலே.

---

1. அவபிருதம்.—வேள்விமுடிவிற் செய்யும் ஸ்நானம்.

## அத்தியாயம் 39

## சுபத்திராங்கியின் மையல் மாட்சி

அரண்மனைத்தோட்டங்கள் மிக அழகானவை. அந்த ஆவரணத்திற்குள் கி. மு. 297 ஆகஸ்டு மாதத்தில் ஒரு நாள் அந்திப்பொழுதில் எவரேனும் போய்ப்பார்த்தால், அங்கே இரண்டு இளைய இராஜகுமாரர்களுக்குத் தாதிமார் பலர் விளையாட்டுக் காட்டிக்கொண்டிருப்பதைப் பார்த் திருப்பார்கள். ராணி தேவப்பிராந்தை மேற்பார்வை பார்த்துக்கொண்டிருப்பாள். அந்தக் குழந்தைகளில் ஒரு வன், சுசீமன் அல்லது சுமனன் எனப்படுவன். அவனுக்கு வயது மூன்று. மற்றவன் அசோக வர்த்தனன் எனப் படுவன். அவனுக்கு வயது இரண்டு. அவர்களின் தாயார் சுபத்திராங்கி என்பவள் அருகில் உட்கார்ந்து, அவர்களும் ராதாகுப்தன் என்னும் சிறுவனும் விளையாடிக்கொண்டிருப் பதைப் பார்த்துக்கொண்டிருப்பாள். ராதாகுப்தன் என் பவன் சாணக்கியருடைய பேரன்; அவனுக்கு வயது 18 மாதம். அதிகக் காரியமில்லாத தினங்களில் சந்திரகுப்த னும் சாணக்கியருங் கூட அவ்விடத்திற் குழந்தைகள் விளை யாடுவதைப் பார்த்துக் களித்துப் பெருமை பாராட்டிக் கொண்டிருப்பர். சந்திரகுப்தனுக்கு மதுமேஹ நோயினால் அவதி அதிகமாயிருந்தது. அதனால் அவன் தேகம் வாடி உலர்ந்துகொண்டிருந்தது. அவனுக்குச் சாவு சமீபித் திருந்தது. இன்றைக்கோ என்றைக்கோ என்னாது 'பின் னையே நின்றது கூற்று' என்று சொல்லும் நிலைமையில் அவன் இருந்தான். ஆனதனால், திடகாத்திரமுள்ள பேரப்

பிள்ளைகள் இருவர் இருப்பதைக் கண்டு அவன் பெரிதும் ஆறுதல்கொண்டனன். அந்தக் குழந்தைகளின் தாயாகிய சுபத்திராங்கி பிந்துசாரனை மணம்புரிந்துகொண்ட விருத்தாந்தம் விசித்திரமானதென அந்நாளிலேயே சொல்லப்பட்டது. அப்படிப்பட்ட சாகசசம்பவங்கள் இந்நாளில் அத்தனை நிகழ்வதில்லை.

பிந்துசாரன் 16-ஆம் வயதுத் தொடக்கத்திலே, கி. மு. 302-இல் யுவராஜப்பட்டம் சூட்டப்பெற்றிருந்தான். இந்துக்களுள் கௌடர்கள், அதாவது, வங்காளத்திலும் விஹாரத்திலும் உள்ளவர்கள் 16-ஆம் வயதே வியவகார யோக்கியதை அடையும் பருவமெனக் கொண்டுள்ளனர். அவன் கலிங்கதேசத்து லஜ்ஜாவதி என்னும் ராஜகுமாரியையும், உஜ்ஜயினி ஸம்ஸ்தானத்துச் சூரியகாந்தை என்னும் ராஜகுமாரியையும் விவாகம் செய்துகொண்டான். தைரியம் மிக்கவன் எனவும், ஆண்மை வாய்ந்தவன் எனவும், வாசாலன் எனவும், வியவகார ஞானமுள்ளவன் எனவும் ஏற்கெனவே ராஜ்யம் முழுதும் அவன் பெயர் பெற்றிருந்தான். தக்ஷசிலையின் ராஜப்பிரதிநிதியாக அவன் இன்னும் அனுப்பப்படவில்லை. ஸுகங்கா மாளிகைக்கருகில் தனி அரண்மனையில் வஸித்துக்கொண்டிருந்தான். அவனுக்குக் கல்லாடகன் மந்திரியாகவும், அக்கினிசர்மன் சொந்தக் காரியதரிசியாகவும் இருந்தனர். தன்னிடத்திலேயே பிந்துசாரன் மோகித்திருக்கவேண்டுமென லஜ்ஜாவதியும் சூரியகாந்தையும் போட்டிபோட்டுக்கொண்டிருந்தார்கள். ஆனால், அவர்களுக்கு விவாகமான சில மாதங்களுக்குள்ளேயே சுபத்திராங்கி என்பவள் மூன்றும் ராணியாகி, அவர்கள் இருவரையுமே பிந்துசாரன் மறக்குமாறு செய்துவிட்டனள்.

அவளுடைய தந்தை தேவசர்மன் என்பவன் சம்பா என்னும் ஊரிலுள்ள எளிய பிராமணன். பிறப்பிலேயே சுபத்திராங்கி அதிசய அழகு வாய்ந்திருந்தாள். அவளுடைய ஜாதகத்தைப் பார்த்த சோதிடர்களெல்லாரும் அவள் சக்கரவர்த்தினியாவளென்றும், அவள் வயிற்றிற் பிறக்கிற குமாரன் உலகத்திற் சிறந்த சக்கரவர்த்தியாவானென்றும் ஒரே வாக்காக உறுதி சொன்னார்கள். அந்தச் சோதிட வார்த்தையினால் தந்தை மிக்க ஊக்கங்கொண்டான்; உண்மையாகவே அது பலிக்குமென நம்பினான். அந்த வார்த்தை நிறைவேறுவதற்கு வேண்டிய முயற்சியும் ஒன்றியது. அந்தப் பெண்ணுக்கு வயது 15 ஆயிற்று. அவளை அழைத்துக்கொண்டு பிந்துசாரனது அரண்மனைக்குப் போனான். அவளுடைய அழகைக் கண்டு பிந்துசாரன் மோகித்து, அவளைக் கலியாணம் செய்துகொள்ள வேண்டுமென்பது அவனது கருத்து. பிந்துசாரன் அவளை ஒருதடவை பார்த்துவிட்டால், ஆசைப்பட்டு உடனே கலியாணம் செய்துகொள்வானென்று தேவசர்மன் நிச்சயமாக நினைத்தான்.

பிந்துசாரனுடைய ராணிகள் இருவரும் ஒருவரோடு ஒருவர் போட்டிபோட்டுக் கொண்டிருப்பினும், உயர் குலத்திற் பிறந்த அழகிய கன்னிகை எவளும் அரண்மனைக்குள் வராமலும், அவன் கண்ணுக்குப் படாமலும் தடுக்கும் விஷயத்தில் ஒரு மனமாய் ஒரு நோக்கமாய் இருக்கிறார்களென அரண்மனை வேலைக்காரர்கள் தேவசர்மனுக்குச் சொன்னார்கள். ஆதலால், சுபத்திராங்கியை வெளிப்படையாக அரண்மனைக்குள் கொண்டுபோய் நுழைப்பது அசாத்தியமென அவன் கண்டான். ஆயினும், அவனது மூளை ஊகமும் உரமும் வாய்ந்தது. தடைகளையும் கஷ்டங்களையும்

கடப்பதற்கு வேளைக்கு ஏற்ற உபாயம் கற்பிக்கக்கூடியது. அவன் மகள் அழகு வாய்ந்திருந்ததே யன்றி, சங்கீதம், நர்த்தனம் முதலான லலித கலைகளிலும் கைதேர்ந்திருந்தாள். இப்போது தேவசர்மன் அவளுக்குக் கை நகங்களை அழகுபடுத்தவும் கூந்தல் முடிக்கவும் கற்றுக்கொடுத்தான். அவளை நாவிதச்சியாக வேஷம் போட்டுப் பிந்துசாரனுடைய அரண்மனையில் இழி வேலைக்காரியாகக் கொண்டுபோய் நுழைத்தான். பொறுமையாகக் காத்திருந்து, பிந்துசாரன் தன்னைக் கவனிக்கக்கூடிய சமயம் வாய்க்குமளவும் அவளைப் பொறுத்திருக்கச் சொன்னான்.

தந்தையைப் போலவே சுபத்திராங்கியும் மிக்க சாமர்த்தியம் வாய்ந்தவள். அவள் தான் மேற்கொண்ட வேஷத்திற்கு ஏற்றவாறு நாவிதச்சியாக நன்றாக நடித்துச் சூரியகாந்தைக்கும் லஜ்ஜாவதிக்கும் அதிகப் பிரியமுள்ளவளானாள். அவளுடைய அதிசயமான அழகையும் கலைப் பயிற்சியையுங் கண்டு அவர்கள் இருவரும் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தார்களே யொழிய, வேறுவகையான சந்தேகம் எதுவும் கொள்ளவில்லை.

சுபத்திராங்கியும் ஒரேயடியாகப் பிந்துசாரனுடைய மனத்தைக் கவர முயலவில்லை. அரண்மனையில் தனக்கு உத்தியோகம் நிலைத்து, ராணிகளுக்கும் மற்றவர்களுக்கும் உள்ளுக்குள் இருக்கக்கூடிய சந்தேகங்களெல்லாம் ஒழிகிற வரையிற் பொறுமையாகக் காத்திருந்தாள்.

அவள் அரண்மனைக்கு வந்து ஏறக்குறைய மூன்று மாதத்திற்குப் பின்பு ஸுகங்கா மாளிகையில் சாந்தவதி ஓர் 'இஷ்ட கோஷ்டி' அமைத்தனள். அதற்கு லஜ்ஜாவதியும் சூரியகாந்தையும் போயிருந்தனர். பிந்துசாரன் மாத்திரம் அரண்மனையில் தனியே இருந்தனன். அப்போது

அவள் தன் அறையில் உட்கார்ந்து கேட்பவர் பரவசப்படு மாறு பாடிக்கொண்டிருந்தனள். அவளுடைய இனிய குரலேயும் குற்றமற்ற உச்சரிப்பையும் கேட்டு மகிழ்ந்து பிந்துசாரன் மெய்ம்மறந்து உற்றுக் கேட்டுக் கொண்டிருந் தான். பின்பு அடியரவம் எழாவாறு நுனிக் காலால் நடந்துபோய் அவள் அறைக்குள் எட்டிப்பார்த்தான். அவளுடைய குரலழகைக் காட்டிலும், வடிவழகு அற்புதச் சிறப்புடையதாகத் தெரிந்தது. அவனைப் பாராதது போலவே அவள் பாடிக்கொண்டிருந்தாள். ஆசை தடித்துக் காமவெறி கொண்டு பிந்துசாரன் அவ்வறைக்குள் போய், "சுபத்திராங்கி! உன் குரலின் அழகை என்ன சொல்வேன்! குயிலேயோ! வதனவனப்பு அதனினும் அதிசயமா யிருக்கின்றதே! மயிலேயோ!" என வியந்து கொண்டாடி ஞன். பாட்டை நிறுத்திவிட்டு அவள் நாணித் தலே குனிந்த னள். அவன் அவள் கன்னத்தைத் தடவித் தட்டி இன் புற்ருன். மகிழ்ச்சியினுல் அவள் முகம் மலர்ந்தது. நேரே நிமிர்ந்து, அற்புதமான காமக் கண்ணினுல், மனமுருகி அவனே உற்று நோக்கினள். காமத்தீயின் தாபம் பொறுக்க மாட்டாமல் அவன் ஆர்வத்தோடு அவளேத் தன் கரங்களால் அணைத்து ஆலிங்கனம் செய்து மார்போடணைத்து அழுத்திக் கொண்டு, சுடச் சுட முத்த மிட்டான். அவனது ஆலிங் கனத்தால் அவள் உடம்பு மலர்க் குவியலென மிருது வாகியது. அவள் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தனள். அப்போது பிந்துசாரன், "ஓ, ஆசைக்கினியாளே! நீ கேவலம் நாவிதச்சியாகவும் நான் உயர் குல க்ஷத்திரிய ஞகவும் இருப்பது என்ன கொடுமை! அதனுல் உன்னே நான் என் ராணியாக்கிக் கொள்ள முடியாதிருக் கின்றதே!" எனப் பரிதவித்தான். "நான் நாவிதச்சியல்ல,

நாதா! நான் உயர்வான பிராம்மணகுலத்துதித்த கன்னி. சம்பாவிலுள்ள தேவசர்மன் புதல்வி. ஒரு நாள் நீங்கள் சம்பாவில் வேட்டைக்குப் போகையில், உங்களைக் கண்டு நான் மோகித்தேன்; உங்களையன்றி மற்றொருவர்பால் ஆசை கொள்வதில்லையெனச் சபதம் செய்துகொண்டேன். அதனால் இம் மாறவேஷம் பூண்டேன். இப்போது எனது அவா ஈடேறியது" என்று சுபத்திராங்கி சொன்னாள். அதற்குப் பிந்துசாரன், "நீ பிராமணப் பெண்ணாகவாவது, க்ஷத்திரிய மகளாகவாவது இருக்கவேண்டுமென்றே நானும் நினைத் தேன். ராஜர்களுக்கும் ராஜகுமாரர்களுக்கும் அடுத்துள்ள காந்தர்வ முறைப்படி இப்போது இவ்விடத்தே உன்னை மணக்கின்றேன்" என மொழிந்து அவளைத் தழுவினன்.

லஜ்ஜாவதியும் சூரியகாந்தையும் இஷ்டகோஷ்டியை விட்டு ஸுகங்கா மாளிகையினின்று திரும்பிவந்த பொழுது அவர்களுக்கு, தான் சுபத்திராங்கியை மணந்து கொண்டதாகப் பிந்துசாரன் சொன்னான். கேட்டவுடனே உண்டான அதிர்ச்சி தணிந்தபின், அவர்கள் இருவரும் இவ் விவாகத்தைப் பற்றித் தம் மனத்தைச் சமாதானப் படுத்திக் கொண்டார்கள். அவர்களில் ஒருவருக்கொருவர் இருந்த நேசத்தைக் காட்டிலும், சுபத்திராங்கியிடம் அவர்களுக்கு ஆசை அதிகமாயிருந்தமையின், அவர்கள் எளிதில் சமா தானம் எய்தினர்.

இதைப் பற்றிச் சொன்னவுடனே சந்திரகுப்தன் சாணக்கியர் ராக்ஷஸன் கல்லாடகன் ஆகிய எல்லாரும் இவ்விவாகத்தை அங்கீகரித்தனர். முறைப்படி விவாஹோத் ஸவம் கி. மு. 302 மே மாதத்தில் மிக்க வைபவத்தோடு கொண்டாடப்பட்டது. அடுத்தவருஷம் அக்டோபர் மாதத்தில் ராஜப்பிரதிநிதியாகத் தக்ஷசிலைக்குப் போன

போது பிந்துசாரன் அவனை அழைத்துக்கொண்டு போனான்.

மறுவருஷம் சுபத்திராங்கிக்கு ஒரு குமாரன் பிறந்தான். அவனுக்குச் சுசீமன் என்றும் சுமனன் என்றும் நாமகரணம் செய்தனர். அவன் பார்வைக்கு மிக அழகாயிருந்தனன். சுமனன் பிறந்த பின் ஒரு வருஷத்தில் அசோகவர்த்தனன் என்னும் மற்றொரு குமாரன் பிறந்தனன். அவன் பார்வைக்கு அவலக்ஷணமா யிருந்தனன். ஆனால், அசோகனிடத்தே எல்லாருக்கும் வாஞ்சை அதிகம். சுமனனுக்கு மூன்று வயதும் அசோகனுக்கு இரண்டு வயதும் ஆனபோது, பெரிய ஆஜீவகஸாதுவாகிய பிங்களவத்ஸஜீவன் என்பவனைப் பிந்துசாரன் வரவழைத்தான். அவனுக்குப் பூத பவிஷ்யத் வர்த்தமானங்களை உள்ளவாறு அறிந்து சொல்லும் அரிய சக்தி உண்டென்னும் பிரக்கியாதி ஏற்பட்டிருந்தது. அவ்விரு ராஜகுமாரர்களின் பவிஷ்யத் வர்த்தமானங்களையும், அவர்களில் எவன் தனக்குப் பின் அரசனாவானென்பதையும் பார்த்துச் சொல்லும்படி பிந்துசாரன் அவனை வினவினன். "உங்களுக்குப் பின் அசோகனே அரசனாவன். இதுவரையில் இத்தரணியை ஆண்ட அரசர்களுள்ளும், அவனுக்குப் பின் ஆளத் தக்கவர்களுள்ளும் அவனே மேலோனென விளங்குவான்" என்று பிங்களன் கூறினன். "அது எங்ஙனம் அமையும்? சுமனன் மூத்தவனல்லனோ?" எனப் பிந்துசாரன் வினவினான். "வயதை விதி கணிப்பதில்லை. எழுபது வயதுக்கிழவனைத் தள்ளிவிட்டு, ஐந்து வருஷத்து இளம்பிள்ளையைத் தெரிந்தெடுத்துக்கொள்கின்றது" என்று பிங்களவத்ஸஜீவன் சாற்றினன்.

---

# அத்தியாயம் 40

## விஜயதசமி நிசி

கி. மு. 297-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் வந்தது. சாம்ராஜ்யத்தின் சீரும் சிறப்பும் செழுமையும் உன்னத ஸ்திதியில் இருந்தன. ஒவ்வொரு மாகாணத்திலும் ஒவ்வொரு ஸம்ஸ்தானத்திலும் போதிய மழை பெய்திருந்தது. அதன் பயனாகப் பயிர்கள் நன்னிலைமையில் இருந்தன. போரும் இல்லை, புரட்சியும் இல்லை. பேரூதியம் பெறும் அதிகாரிகளும், வளமை வாய்ந்து கௌரவார்த்தமாக அமல் நடத்தும் கண்ணியர்களும் எல்லா இலாகாக்களிலும் இசைந்து நின்று சாம்ராஜ்யத்தைத் திறம்படப் பரிபாலித்துவந்தனர். ராஜ்யத்திற்குள் அமைதி குடிகொண்டிருந்தது. தென்னிந்தியாவில் சோழ பாண்டிய கேரள சத்தியபுர சிங்கள ராஜ்யங்களோடும், மேற்கே கிரேக்க ஸம்ஸ்தானங்களோடும் உள்ளுவந்த ஒற்றுமை அமைந்திருந்தது. சலூகஸின் கப்பற்றலைவனை பாட்ரோகிளீஸ் (Patrokles) என்பவன் சில நாளைக்கு முன் படாலத்துக்கு வந்து விலையுயர்ந்த வியாபாரச் சரக்குகளை அங்கிருந்து வாங்கிக்கொண்டு போயினன். மகதத்திலும் கோசலத்திலும் கடற்பிரயாணப்பாங்கற்றவர்களும் கடற் பிரயாணங்கள் செய்யத் தலைப்பட்டனர். எங்கும் பயமில்லாத பாதுகாப்பும், போக்கு வரவு வசதிகளில் உண்டான பெருஞ்சீர்திருத்தமும் காரணமாக உள்நாட்டு வியாபாரம் நூறுமடங்கு அதி

கரித்தது. சந்திர குப்தனும் சாணக்கியருமாக ராணுவ ரஸ்தாக்கள், ராஜபாட்டைகள், ஜில்லாச்சாலைகள், கிராம வழிகள், தோட்டவழிகள், காட்டுப்பாதைகள், தேர்செல் சாலைகள் ஆகிய இவைகளிற் பலவற்றை அணிபெற அமைத் திருந்தனர். இவைகளுக்கேற்ப ஐசுவரியமும் பெருகியது. பாடலிபுரம், உஜ்ஜயினி, தக்ஷசிலை, பாருகச்சா, மச்சிலிப் பட்டணம், சுவர்ணகிரி என்னும் இடங்களில் கோடீசுவரர் எனத்தக்க வணிகப் பிரபுக்கள் இருந்தனர். பெருவாழ்வுக் குரிய போக்கிய வஸ்துக்களின் பெருக்கம் அதிகமாயிற்று. நானாவகையான மாளிகைகளும் மந்திரங்களும் பவனங் களும் பல பல தோன்றியிருந்தன. அநேக ஜனங்கள், முக்கியமாகப் பிரபுக்கள், பெரிய அதிகாரிகள், மிராசுதார்கள், வர்த்தகர்கள் ஆகிய இவர்கள், கோட்டை களுக்கு வெளியே வசிப்பதனால் எவ்விதமான பயமும் இல்லாமையின் புறத்தே சௌகரியமான வீடுகள் கட்டிக் கொண்டிருந்தனர். கோட்டைகளுக்குள் ஜன நெருக்கத் தில் இருந்து கஷ்டப்பட வேண்டியதில்லையென அவர்கள் நினைத்தனர்.

மேற்கே புருஷபுரம் புஷ்கலவதி என்னும் பிரதேசம் முதல் கிழக்கே காமரூபம் அரக்கான் வரையிலும், வடக்கே காசுமீரம் நேபாளம் முதல் தெற்கே கன்னியாகுமாரி சிங்களம் வரையிலும் இந்தியநாடு ஒருகுடைக்கீழ் இருப்பது போல ஒருமைப்பட்டுக்கொண்டிருந்தது. வட இந்தியாவி லுள்ள வஸ்துக்கள் அநேகம் தென்னிந்தியாவில் சாதாரண மாக வழங்கலாயின; அதுபோலத் தென்னிந்திய வஸ்துக் களும் வட இந்தியாவில் வழங்கப்பெற்றன. ஒரு மாகா ணத்து ஜனங்கள் மற்றொரு மாகாணத்திற்குத் தாராளமாகக் குடியேறிப் போய்க்கொண்டிருந்தனர். வடக்கேயுள்ள

ஜைனர்கள் பலர் பத்திரபாகு சுவாமியுடன் தெற்கே நெடுந் தூரம் போய்ச் சிரவணபெல்குளம், பிரம்மகிரி, ஜாதிங்கா, ராமேசுவரம், ஸித்தபுரம் என்னும் இடங்களிலும், சத்தியபுர தேசத்திலும் போய்க் குடியேறி லக்ஷக்கணக்கான தென் னிந்தியர்களைத் தம் மதத்திற்குத் திருப்பி, எந்நாளும் அவர் களுடைய ஞாபகம் அங்கு நிலைத்திருக்குமாறு செய்தனர். ஜைனர்களைப் பின்பற்றிப் பௌத்தர்கள் சிலர் தென்திசை நோக்கிச் சென்று சுவர்ணகிரி மாகாணத்திலும், அமராவதி, காஞ்சீபுரம், நாகபட்டினம் என்னும் இடங்களிலும், கேரள நாட்டிலுங்கூடக் குடியேறி லக்ஷக்கணக்கான தென்னிந்தி யர்களுக்குப் பௌத்த மதம் போதித்தனர்.

பிராமணர்களும் மற்ற சநாதன இந்துக்களும் மேற் சொல்லிய மதத்தினருக்குப் பின்னிடவில்லை. சோழ மன்னனது விருப்பத்திற்கு இணங்கி அநேகம் பிராமணர்கள் காவிரிப்பூம்பட்டினத்திற்குப் போய்க் குடியேறி, இந்திர விழாக் கொண்டாட்டத்தை ஏற்படுத்தினர். இவ்விழா பலதினங்கள் வரையில் கொண்டாடப்பெறும். தென்னாட் டினரின் ரஸப்பாங்கினுக் கேற்பப் பாட்டும் கூத்தும் அத் தினங்களில் நிகழும். வேறு சில பிராமணர்கள் பாண்டிய நாட்டிலுள்ள திருச்செந்தூரிலும் குடியேறி, தென்னாட்டிற் கொண்டாடப்பெறும் முருகப்பெருமானே வடநாட்டில் வழங்கும் கார்த்திகேயரெனச் சாதிக்கத் தலைப்பட்டனர். வேறு சிலர் சத்தியபுரப் பிரதேசத்திலுள்ள சுப்பிரமணிய க்ஷேத்திரத்திற்குப் போய் அமர்ந்து, அங்கே அநாதிகால மாக ஆராதிக்கப்பெறுகிற நாகேசுவரரே கார்த்திகேயரென ஒற்றுமைப்படுத்திச் சொல்லத் தலைப்பட்டனர். அரசியல் வியவகாரங்களிற்போல மத சம்பந்தமான வியவகாரங்களி லும் அகில இந்திய பத்ததியொன்று மெல்ல மெல்ல உறுதி

பாக அமைந்துவந்தது. இம்முறையிற் சம்பந்தப்படாத தனித் தெய்வங்கள் சில ஒவ்வோரிடத்திற் கொண்டாடப் பெற்றன.

மௌரிய துரைத்தனதிகாரிகளுடைய ஆதரவில் லக்ஷக் கணக்கான உழவர் குடும்பங்கள் பல விதர்ப்பம், மகா கோசலம், காண்டுவானு, ராசம், குந்தலம், கொங்கணம், வனவாசி என்னுமிடங்களுக்குப் போய்க் குடியேறி நிலைத் தன. அவர்கள் மெய்வலிமிக்க உழைப்பாளிகள். வட இந்தியாவுக்கும் தென்னிந்தியாவுக்கும் இடையே விந்திய மலைக் காடுகளும் சத்புரமலைக் காடுகளும் நீண்டு விஸ்தாரமாகக் குறுக்கிட்டுக் கொண்டிருந்தமையின், பல நூற்றாண்டுகளாக வட இந்தியருக்கும் தென்னிந்திய ருக்கும் போக்குவரவு இல்லாதிருந்தது. இப்போது அம்மலைக்காடுகளின் மீதேறி இறங்குவதற்கு நான்கு பெரிய சாலைகள் அமைக்கப்பட்டிருந்தன. அவற்றுள் ஒன்று கீழ்கரையோரமாகப் பாடலி புரத்தினின்று தாமிரலிப்தி, தோசலி, சமபம், கலிங்கபட்டணம், மச்சிலிப் பட்டணம், வேங்கிபுரம், ஸித்தபுரம் வரையிற் போவதாகும்; மற்றொன்று மேற்குக்கரையோரமாகப் பாருகச்சாவிலிருந்து சூரத்து, சோபாரா, கல்யாண், பிரதிஷ்டானம், சுவர்ணகிரி வரையிற் போவதாகும்; மூன்றாம் சாலை உஜ்ஜயினியி லிருந்து நாசிகை, பிரதிஷ்டானம், சுவர்ணகிரி என்னும் இடங்களுக்குப் போவதாகும்; நான்காம் சாலை உஜ்ஜயினியி னின்று குண்டணிபுரம், நந்ததேரா, தானியகேடம், சுவர் ணகிரி, ஸித்தபுரம் வரையிற் செல்வது. இப்பெரும் பாட்டைகளல்லாமல், தாமிரலிப்தியினின்றும், பாருகச் சாவினின்றும் முசிரி, மச்சிலிப்பட்டணம், காவிரிப்பூம் பட்டினம், கொற்கை, சிங்களம் என்னும் இடங்களுக்குப்

போகும் கடல்வழிகளை ஜனங்கள் நாளுக்கு நாள் அதிகமாக உபயோகிக்கலாயினர்.

வட இந்தியாவில் பாடலிபுரத்தினின்று ஸிந்து நதிக் கரையிலுள்ள உதபாண்டபுரத்திற்குப் போகும் நெடுஞ் சாலைவழி ஒன்று இருந்தது. அதன் தொடர் ஒன்று மேற்கே யுள்ள ஹெராத்து (ஹரிஸ்தலம்) என்னும் எல்லைப்புறப் பட்டணத்திற்கும், மற்றொரு தொடர் தென்னேக்கிச் சம்பா வர்த்தமானபுரம், தாமிரலிப்தி என்பவற்றிற்கும் சென் றது. மேலும் பாடலிபுரத்தினின்று வைசாலி, நந்தன்கர், ராம் பூர்வா, ரும்மிந்தை, மஞ்சுபட்டணம் என்னும் இடங்களுக் குப் போகிற பெரிய நெடுஞ்சாலையொன்று வடக்கு நோக்கிப் போய்க்கொண்டிருந்தது. வடமதுரையினின்று விராட புரம், வனகௌசாம்பி, உஜ்ஜயினிக்குப் போகும் சாலை ஒன்று இருந்தது. இவையல்லாமல், ஸிந்துநதி கங்கை நதி ஆகிய இவைகளின் வழியாகவும், இவற்றின் உபநதிகள் வழியாகவும் ஜனப்போக்குவரவும் வியாபார வியவகாரங் களும் தோணிகளின் மூலமாக நடந்துகொண்டிருந்தன. இவையன்றி, மௌரியச் சாலைகளோடு கலக்கும் சாலை வழிகள், பாண்டிய சோழ கேரள சத்தியபுத்ர ராஜ்யங்களில் இருந்தன. முக்கியமாக, திருவேங்கடம் என்னும் திருப்பதி மலைக்குப் போகும் திவ்விய சாலை ஒன்று இருந்தது. நெடுஞ்சாலைகளில் எந்தவேளையிலும் மாட்டுவண்டிகளும் கால்நடைப் பிரயாணிகளும் போய்க்கொண்டிருப்பதைக் காணலாம். அந்த அந்த ஜில்லாவுக்குள் பிரயாணிகளுக்கு நேர்ந்த திருட்டுக்களுக்கும் கொள்ளைகளுக்கும் அந்த அந்த ஜில்லா ஜனசமூகம் முழுதும் உத்தரவாதம் செய்யவேண்டு மெனச் சந்திரகுப்தன் கட்டளையிட்டிருந்தமையால், பெரும் சாலைகளில் வண்டி நடமாட்டமும் ஜன நட

மாட்டமும் விசேஷமாயின. வர்த்தகம் வளர்ந்தோங்கியது; வேளாண்மை செழிப்புற்றிருந்தது; எங்கும் எல்லாம் யதேஷ்டமாக இருந்தன. ஆதலின், லக்ஷக்கணக்கான ஜனங்கள் செலவிடுவதற்கு வேண்டிய ரொக்கப் பணம் குறைவில்லாதிருந்தது.

நவராத்திரி மகோற்சவமும் தசராப் பண்டிகையும் அக்டோபர் மாதத்தில் தாராளமாகச் செலவு செய்து மிக வைபவமாகவும் சிறப்பாகவும் கொண்டாடப் பட்டன. வழக்கம்போல, வித்தியா தேவதையாகிய ஸரஸ்வதியையும், ஐசுவரிய தேவதையாகிய லக்ஷ்மியை யும், விஜய தேவதையாகிய பார்வதியையும் ராஜ்யமெங் கும் சீரியரும் பூரியரும் ஆராதித்தனர். எங்கே பார்த்தா லும் குதூகலம் குடிகொண்டிருந்தது. ஒவ்வொரு பட்ட ணத்திலும் லக்ஷக் கணக்கான ஏழைகளுக்கு அன்னமளித் தனர். எண்ணிறந்த பொம்மலாட்டங்களும், ஜால வித்தை களும், நாடகங்களும், கயிற்றுக் கோலாட்டங்களும், நாட்டியக் கச்சேரிகளும், பாட்டுக் கச்சேரிகளும் நடை பெற்றன. இக்களியாட்டுக்களினிடையே மனத்துக்கு அசமா தானமான விஷயம் சக்கரவர்த்திக்கு உடம்பு மிகச் சுகக் கேடாயிருந்தது ஒன்றேயாம்.

கடந்த மூன்று வருஷங்களாக அவன் நீரிழிவு நோயினால் பீடிக்கப்பட்டிருந்தான். அந்நோய்க்குரிய முதல் ராஜப்பிளவை கி. மு. 300-இல் அவன் உடம்பில் தோன்றியது. அதன்பின் அப்போதைக்கு அப்போது கட்டிகள் தோன்றிக்கொண்டேயிருந்தன. அரண்மனை வைத்தியர்கள் அவனுக்குக் கடும் பத்தியம் விதித்திருந்தனர். உப்பும், வெண்ணெயும், சர்க்கரையும் இல்லாமல் உண்டு வாழ்வதிலும் சாவதே மேலாகும் என்று சொல்லி அவன்

மனம் வந்தபடி புசிக்கத் தலைப்பட்டபின், கட்டிகள் அடிக்கடி தோன்றியதன்றி, மிகக் கடுமையாகவும் இருந்தன. இந்தச் சமயத்தில் இரண்டு ராஜப்பிளவைகள் பழுத்துவந்து கொண்டிருந்தன. ஆயினும், அவைகளைப் பாராட்டாமலே அவன் வழக்கம்போல வியவகாரங்களைச் செய்துகொண்டேயிருந்தான். நவராத்திரியுற்சவ காலத்துக் கொந்தளிப்பிற் கலந்துகொள்ள வேண்டுமென இயற்கையில் எவருக்கும் ஆசையுண்டாகும் அல்லவா? அவ்வாசையினால் அவன் தன் வேலைகளையும் வியவகாரங்களையும் சற்று அதிகப்படுத்திக் கொண்டான்.

நவராத்திரி விடுமுறைத்தினங்கள் தொடங்கிய பௌர்ணமித்தினத்தன்று பாடலிபுரத்தில் அவன் தானே நின்று ஆயிரம் பிராமணர்களுக்கும் பதினாயிரம் ஏழைகளுக்கும் அன்ன மளித்தனன். பாடலிபுரத்திற்குப் பத்து மைல் தூரத்திலுள்ளதோர் அரசாங்க வேட்டைக் காட்டில் ஒரு பெரும் புலி இருப்பதாகச் சொல்லிக் கொண்டிருந்தனர். தசராப் பண்டிகையின் நான்காம் நாள் அக்காட்டிற் பெரும்புலி வேட்டை நடந்தது. அரண்மனை வைத்தியர்களுடைய வார்த்தையைச் செவிக் கொள்ளாமல், அக்காட்டினண்டை விரைந்து போய்ச் சேர எண்ணி அவன் குதிரைமீது ஏறிப் போனான். யுவராஜனான பிந்துசாரன், தளகர்த்தனான பக்ரபடன், ராஜசேனன் முதலாயினோர் உடன் சென்றனர். காட்டினண்டை போனவுடனே குதிரையை விட்டு இறங்கிச் சந்திரகுப்தன் சந்திரலேகம் என்னும் தன் யானையின்மீது ஏறிக் கொண்டனன். ஒரேமாதிரியான உடைதரித்த மெய்காவல் ஸ்திரீகள் பன்னிருவர் அசுவாரூடராய்ச் சக்கரவர்த்தியைச் சூழ்ந்திருந்தனர். அவர்களுக்கு வெகுதந்தி என்பவள்

தலைமை வகித்தாள். இந்த வட்டத்தைச் சுற்றி ஈட்டி சுழற்றுவதிற் கைதேர்ந்த வீரர்கள் ராஜசேனனது தலைமையில் நின்றனர். ஜனங்கள் நடக்கும் வழியின் இருசிறகையும் கயிறு கட்டித் தடுத்திருந்தனர். உத்தரவின்றி எவர் அவ்வழியிற் குறுக்கிட்டாலும், ஆண்மெய்காவலரேனும் பெண்மெய்காவலரேனும் உடனே அவரைக் கொல்வர். தப்புத்தம்பட்டங்களையும் ஜல்லரிகளையும் எறிமணிகளையும் அடித்துக்கொண்டு இவர்களுக்கு முன் வேடர் படை சென்றது.

காடு கலைப்போர் தம் வேலையைத் தொடங்கினர். மாலை 4-மணிக்கு அவ்வாட்கொல்லியையும் இரண்டு சிறுத்தைகளையும் ஒரு மூலையில் மடக்கலாயினர். அடுத்தடுத்துச் சக்கரவர்த்தி விரைந்து மூன்று அம்புகள் எய்தான். சந்திரலேகத்திற்கு மூன்று அடி தூரத்தில் அக்கடுவாய் அடிபட்டு இறந்து விழுந்தது. சிறுத்தைப் புலிகளில் ஒன்றைப் பிந்துசாரன் அடித்தனன். மற்றொன்றை ராஜசேனன் அடித்தனன். வேட்டை முடிந்தது. அரசன், யுவராஜன், தளகர்த்தர்கள் எல்லோரும் இராவுப்பொழுதைக் காட்டிற் கூடாரங்களிலே கழித்து, மறுநாட் குதிரையேறிப் பாடலிபுரம் வந்து சேர்ந்தனர். செத்த புலியையும், சிறுத்தைகளையும் இவர்களுக்கு முன்னரே மாட்டுவண்டிகளில் நகரத்துக்குக் கொண்டுபோய் மேளவாத்தியத்தோடு தெருத் தெருவாகக் காட்டிக் கொண்டு போயினர். விழாக் கொண்டாட்டத்தில் இதுவும் ஒரு விநோதாம்சமாயிற்று.

குதிரைச் சவாரிசெய்த அதிர்ச்சி தாங்காமல் சக்கரவர்த்தியின் ராஜப்பிளவை மிகக்கடுமையாக நோவெடுத்தது. அப்பொழுதாயினும் சிரமபரிகாரம் செய்துகொள்ளாமல் சக்கரவர்த்தி காலை ஸ்நானமும் குதிரைச் சவாரியும்

செய்யலானன். ஆயுதபூஜைத் தினத்தில் தளகர்த்தர்களுடன் இருந்து ஆயுதங்களை ஆராதித்தனன். விஜயதசமியன்று கட்டி முதிர்ந்து பழுத்து அபாயகரமாயிருந்தது. அங்ஙனம் இருப்பினும், அன்றைத்தினம் படைகள் அணிவகுத்திருந்ததைப் பரியேறிப் பார்வையிட்டனன். அதற்குப் பின், சதுரங்கபலமும் புடைசூழச் சிறப்பான ராணுவ ஊர்கோலமாய் நகரத்துத் தெருக்களை வலம் வந்தனன். லக்ஷக்கணக்கான ஜனங்கள் மகிழ்ந்து வாழ்த்தி ஆரவாரித்த பேரொலி காது செவிடுபடச் செய்தது. மாலையில் அவன் அரண்மனைக்குத் திரும்பிவந்தபோது மூர்ச்சித்து ஒடுங்குவான்போல் இருந்தான். ஸ்நானம் செய்தான். நோயின் கொடுமை பொறுக்கமுடியவில்லை. உடனே அவனைப் படுக்கைக்குக் கொண்டுபோயினர். அரண்மனை வைத்தியர்கள் அவன் நிலைமை ஆய்ந்து பார்த்தனர். பிரமாதம் விளையும் போலவே அவர்களுக்குத் தோன்றியது. எரிகட்டிகள் ஒருபுறம் படமுறுத்திக் கொண்டிருக்க, அவனது இதயம் பலமொடுங்கிப் பயங்கரமாயிருந்தது. நிமிஷத்திற்கு நிமிஷம் நிலைமை மோசமாய்க் கொண்டிருந்தது. இவ்வபாயகரமான செய்தியைக் கேட்டு யுவராஜன், சாணக்கியர், ராக்ஷஸன், கல்லாடகன், தளகர்த்தர்கள், ராஜதானியிலுள்ள முக்கிய துரைத்தனதிகாரிகள் எல்லாரும் தீவிரமாக அரண்மனைக்கு ஓடிவந்தார்கள். பிந்துசாரன், சாணக்கியர், ராக்ஷஸன் ஆகிய இம்மூவர் மாத்திரமே சக்கரவர்த்தியின் அறையில், வைத்தியர்கள் ராணிமார் பரிசாரகர் இவர்களோடு இருந்தார்கள். துர்த்தரை அதிகமாக அழுது கொண்டிருந்தமையின், அவளை வெளியே அனுப்பிவிட வேண்டியதாயிற்று. சாந்தவதி பிரமித்து அசைவற்று ஒன்றும் செய்ய முடியாதவள்போல் இருந்

தனள். தேவப்பிராந்தை மாத்திரம் சுறு சுறுப்பாகவும் உபகாரமாகவும் இருந்தனள். சக்கரவர்த்தியைப் பரா மரிப்பதில் சோணோத்தரைக்கும் வைகிநாரிக்கும் அவள் மிக ஒத்தாசையாக இருந்தாள். நகரத்திற் குடிகொண் டிருந்த குதூகலம் மாறிக் கலக்கமும் கவலையும் மேலிட்டன.

இரவு 10 மணிக்கு விசேஷக் கடிதமொன்று சக்கர வர்த்தியின் பெயருக்கே விலாசமிட்டு வந்துசேர்ந்தது. அது சுவர்ணகிரி ராஜப்பிரதிநிதி எழுதியது. சாணக்கி யரும் ராக்ஷஸனும் எவ்வளவு தடுத்தும் கேளாமல் சந்திர குப்தன் அக்கடிதத்தை அப்போதே பிரித்துத் தனக்குப் படித்துக் காட்டவேண்டுமென்றான். "எனது ராஜாங்கப் பிரதிநிதிகளிடமிருந்து வரும் அவசரமான கடிதங்களையும் நான் திறந்துபார்க்கக் கூடாதென்றால் நான் அரசனாயிருப் பானேன்?" என்று அவன் வினவினன். அக்கடிதத்தைத் திறந்து சாணக்கியர் படித்தார். அக்கடிதத்தில்,

" 'தேவானாம் பிரிய' கணம் மிக்க கருணை நிதியாகிய சந்திர குப்த மகாராஜருக்குச் சுவர்ணகிரி ராஜப்பிரதிநிதி புருஷதத்தனும் சுவர்ணகிரித் தலைமையதிகாரிகளும் மிக்க பணிவுடன் வந்தனம் செய்து எழுதிக்கொள்ளும் விண்ணப்பம் வருமாறு:—ஜைனர்களுள் இரத்தினம் போன்ற பத்ரபாகுசுவாமி என்னும் பெரியார், முதிர் வயது மூண்டமையின் ஜைனர்கள் கொண்டாடும் புண்ணிய மார்க்கத்தைக் கைக்கொண்டு ஜீவன் முக்தியடைந்தனர். 'சல்லே கனம்'* என்னும் கடுமையான பெரிய விரதத்தை மேற்கொண்ட னர். மரணத்தினாலன்றி, அதனை முற்றுவிக்கமுடியாது. ஆரம் பத்தில் அவர் கொஞ்சம் பாலும் சோறும் உட்கொண்டனர். வர வர அவ்வுணவைக் குறைத்துக்கொண்டுவந்து, ஒரு கை ஜலத் தோடு நிறுத்தினர். பின்பு அதனையும் துறந்தனர். முடிவில்,

* இந்த விரதத்தை இந்துக்கள் 'கிருச்சிரம்' என்பர்.

பெயர்பெற்ற அக்குகையில் தேகத்தை விட்டு நீங்கி முக்திபெற்றனர். அக்குகை இச்சம்பவத்தால் இனிப் பெரும் புண்ணிய ஸ்தலமாகக் கொண்டாடப்பெறும். இப்போதே 'பத்ரபாகு குகை' என அதற்குப் பெயரிட்டிருக்கின்றனர்.

அவருக்கு ஆப்த சிஷ்யனாயிருந்தவன் உஜ்ஜயினி நகரத்து ராஜவைசிய சந்திரகுப்த முனீந்திரன். அவனும் சுருதகேவலியாயினன். வனதேவதைகள் அவனுக்கு வேண்டிய உபசாரங்கள் செய்துகொண்டிருந்தனர். அவனும் அக்குகையின் முகத்துவாரத்தில் உட்கார்ந்து, உடலைவிட்டு உயிர் நீங்குமட்டும் அவ்வாஜிசயமான 'சல்லேகனம்' செய்து முக்தியடைந்தனன். அழியாக் கீர்த்தி பெற்ற சந்திரகுப்த முனீந்திரனைக் கௌரவிக்கும் பொருட்டுப் பத்ரபாகு குகையிருக்கும் குன்றுக்கு அவ்விடத்துப் பக்தர்கள் 'சந்திரகிரிமலை' எனப் பெயரிட்டுள்ளார்.

மதவிஷயங்களில் மகாராஜருக்குள்ள தீவிர சிரத்தையையெண்ணி, அப்புண்ணிய புருஷர்களின் வர்த்தமானத்தை விசேஷ அஞ்சற்காரன் மூலமாக அவசரமாய் அறிவித்தோம். மற்றவை மகாராஜரின் உத்தரவுப்படி,

விதேயர்கள்,

புவனகிரி அரசப்பிரதிநிதியும் பெரிய அதிகாரிகளும்"

என எழுதப்பட்டிருந்தது. அதை மிகக் கவனமாக உற்றுக் கேட்டுக் கொண்டிருந்த சந்திரகுப்தன், "நல்லது, நானும் அவர்களுடன் சீக்கிரம் போய்ச் சேருவேன்" என்று கூறிவிட்டுப் பத்திரபாகு குகையைப் நன்றாகப் பராமரித்துக் காப்பாற்றி வைக்கவும், அம்மலைக்கு ராஜாங்கவியவகாரரீதியாகச் சந்திரகிரிமலையெனப் பெயரிடவும், குகைக்குப் பத்திரபாகுகுகையெனப் பெயரிடவும் உடனே உத்தரவனுப்பச் சொன்னான். அவ்விரு 'சல்லேகன'ங்களையும் கொண்டாடுவதற்காக அவர்கள் முக்தியடைந்த தினங்களில் ஆண்டு

தாறம் ஏழைகளுக்கு அன்னமிடுவதற்கு ஆயிரம் பணம் கொடுக்கக் கட்டளையிட்டான்.

இரவு 11 மணிக்குச் சந்திரகுப்தனுக்கு மரணம் கிட்டியதென்னும் ஒரு முன்னுணர்ச்சி தோன்றியது. அப்போது அவன் சாணக்கியரை நோக்கி, "தேசிகோத்தமரே! இனி நான் நெடுநேரம் ஜீவித்திருக்கமாட்டேன். நான் நற்கதி பெறுமாறு என்னை ஆசிர்வதித்து அருளுங்கள். நன்றி கொன்றார்க்கு உய்வில்லை. தங்களுக்கு நான் இவ்வளவென்று எங்ஙனம் நன்றி செலுத்துவேன்! தங்களுக்கு நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன். தாங்கள் இல்லையெனின், நான் என்னவாயிருப்பேனோ? கை கொடுத்து என்னை ஆளாக்கி அரசனுக்கிச் சக்கரவர்த்தியாக்கினீர்கள். இத்தனை செல்வமும் சிறப்பும் செல்வாக்கும் மேன்மையும் பெருமையும் எல்லாம் எனக்குத் தங்களால் வாய்த்தனவே. தாங்கள் ஆட்டிவைத்தபடி ஆடினேன்; சொன்னபடி செய்தேன். இனி நான் கடைத்தேறுமாறு ஆசிர்வதித்து என்னை அனுப்புங்கள். பிந்துசாரனுக்குப் பட்டஞ் சூட்டி அவனையும் இந்த ராஜ்யத்தையும் பராமரித்துக்கொள்ளுங்கள். அவன் சிறு பிள்ளை. அவனையும் ராஜ்யத்தையும் தாங்களே பார்த்துக்கொள்ள வேண்டும். இந்தக் காரியத்தைத் தாங்கள் மேற்கொள்வதாக எனக்கு உறுதிமொழி கூறவேண்டும். இன்றேல், என் ஆன்மா அமைதி கொள்ளாது; என் நெஞ்சு வேகாது" எனப் பிரார்த்தித்தான். கண்களில் நீர் தளும்பச் சாணக்கியர், அவன் வேண்டியவாறு உறுதியளித்து, "விருஷலா! நீ இப்போதே இறக்கமாட்டாய்" என்றனர்.

"சாவு சமீபித்ததென எனக்குத் தெரிகின்றது. சாகவும் நான் அஞ்சவில்லை" என்றான் சந்திரகுப்தன்.

மற்றும், "பிந்துசாரனைக் கவனித்துக்கொள்ளத் தாங்கள் இசைந்து விட்டமையால் நான் அமைதியோடு இறப்பேன். 'சல்லேகன'த்தைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்? என்னைப் போன்ற தீரா வியாதிபற்றிய ஆரியனொருவன் அந்த விரதத்தை மேற்கொள்ளலாமா? அதனால் தோஷம் இல்லையே" என வினவினன். "அவ்விதம் மேற்கொள்ளலாகாது. அது ஜைனர்களுக்கு மாத்திரமே அடுத்தது. சநாதன இந்துக்களுக்கு அடுத்ததன்று. நமக்கு எவ்வகைத் தற்கொலையும் ஸதிஸஹகமனமும் (மனைவி உடன்கட்டை ஏறுதலும்) கொடிய பாபமாகும்" எனச் சாணக்கியர் சொல்லினர். "ஒரு திறத்தாருக்கு நன்மையானது மற்றொரு திறத்தாருக்குத் தீமையெனத் தங்களைப்போன்ற மேதை மிக்க விவேகி சொல்லலாமோ?" எனச் சந்திரகுப்தன் வினவினன். அதற்குச் சாணக்கியர், "அதில் விபரீதம் தோன்றுவானேன்? ஒவ்வொருவனும் தனக்குரிய தர்மத்தையே அனுசரிக்க வேண்டும்; பிறருடைய தர்மம் அபாயகரமாகும்" என்றார்.

"எனக்குக் களைப்பு அதிகமாயிருக்கின்றது. பிராமணர்களைக் கொண்டு வேத பாராயணமும், ராமாயண பாகவத பாராயணமும் செய்வியுங்கள்" என்றான் சந்திரகுப்தன். உடனே சாணக்கியர் பாராயணம் செய்வித்தார். "இது ராவணனை ஸ்ரீராமர் வென்ற தினமாகும். இது புண்ணிய தினம். நானும் ராமேசுவரத்திற்குப் போய் சேது ஸ்நானம் செய்து ராமருக்கும் சிவனுக்கும் சமுத்திர ராஜன் செய்யும் நிரந்தர வழிபாட்டைப் பார்த்திருப்பின் நன்றாயிருக்கும்" என்றான் சந்திரகுப்தன். பின்பு சாணக்கியரை அருகிலழைத்து, "இது உத்தராயணமாயிருப்பின் நன்றாம்" என்றான். அதற்குச் சாணக்கியர், "வீண்

கவலைப்படாதே. நீ சந்திரகுப்தன், சந்திர வமிசத்திற் பிறந்தவன். ஆனதால், சாந்திராயண மார்க்கமாகப் போவதே இயல்பு. ஸ்வர்க்கத்தில் நீ பல்லாயிர வருஷ காலம் இருந்து, பூலோகத்திற்குத் திரும்பிவந்து, ஒரு ராஜ குடும்பத்திற் பிறப்பாய். உனக்கும் எனக்கும் மறு பிறப் பில்லை யென்று சொல்ல முடியாது. இந்த ஜன்மத்தில் நாம் எத்தனையோ காரியங்கள் செய்துள்ளோம். அக் கர்மப் பயனை அனுபவிக்கத் திரும்பப் பிறத்தலே வேண்டும்" என்று சொன்னார். "சரியே. பிந்துசாரனுக்கு இப்போதே முடிசூட்டுங்கள். நான் இறக்குமுன் என் கண்ணாலே பார்க்கிறேன்" எனச் சந்திரகுப்தன் வேண்டினன்.

மந்திராலோசனைச் சபையினர், தளகர்த்தர்கள், புராத்தியக்ஷர் (சபைத் தலைவர்), பிரதான நீதிபதி (தர்மாதி காரி), நியாயாதிபதிகள் ஆகிய எல்லாரையும் சாணக் கியர் அவ்வறைக்குள் வரவழைத்தார். அவர்களை நோக்கி, "மகத சாம்ராஜ்யத்து ஜனபதப் பிரதிநிதிகளே! தேவா னாம் பிரிய சந்திரகுப்த மகாராஜர் தமக்குப்பின் யுவ ராஜனாகிய பிந்துசார அமித்திரகாதன் முடிசூடி அரசாள வேண்டுமெனத் தெரிந்தெடுத்துள்ளார். உங்களெல்லா ருக்கும் சம்மதமா?" என வினவினர். "சம்மதம், சம்மதம்" என எல்லாரும் ஒரே வாக்காகக் கூறினர். பிந்துசாரனை நோக்கி, "பிந்துசார இளவரசே! மகத ராஜ்யத்தை நியாய மார்க்கமாக ஆளவும், அந்தணர்களையும் ஆனினத்தையும் காக்கவும், ஒவ்வொரு ஜாதியாரும் செழிப்புற்றோங்குமாறு செய்யவும் பிரமாணம் செய்கின்றனையா?" என்று சாணக் கியர் கேட்டார். பிந்துசாரன் கண்களினின்று தாரைதாரை யாக நீர்பெருகிக் கன்னங்களில் வழிந்தோட, "அங்ஙனமே பிரமாணம் செய்கின்றேன்" என்றான். உடனே சந்திர

குப்தனுடைய சிரசினின்று கிரீடத்தை எடுத்துச் சாணக்கியர் பிந்துசாரனது சிரமீது வைத்து, "தேவரும் பிரிய பிந்துசார அமித்திரகாதமகாராஜர் நீடூழிவாழி!" என ஆசிர்வதித்தார். பின்பு மந்திரிகணத்தாரெல்லாரும் நீங்கிப் போயினர்.

சந்திரகுப்தன் பேரன்மாரைத் தன்னண்டை அழைத்து வரச்சொன்னான். சுமனனையும் அசோகனையும் சோனோத்தரை அழைத்து வந்தனள். அவர்கள் இருவரையும் சக்கரவர்த்தி தழுவித் தட்டிக்கொடுத்து, முக்கியமாகத் தன் செல்வப்பேரனாகிய அசோகனை[1] உற்று நோக்கிக் கண்ணீர் உதிர்த்தனன். பின்பு அவ்விளங் குமாரர்களை அங்கிருந்து எடுத்துக்கொண்டு போய்விட்டனர். சக்கரவர்த்தி தன் ராணிகளிடம் விடை பெற்றான். தேவப்பிராந்தை கலங்காமல் மயங்காமல் அமைதியுடன் தீரமாக விவேகத்தோடு முறுவலித்தனள். துர்த்தரை துக்க மேலீட்டால் விம்மியழுதனள். சாந்தவதி அவனை ஒரு பார்வை பார்த்தனள். அப்பார்வையில், தன்னைவிட்டு நீங்குவது தகுமோவென்னும் பாவனையும், உடனே தேக வியோகமாகுமென்பதை நம்பாத பாவனையும் விளங்கின. ராணிமார் அவனை விட்டு நீங்கிச் சில நிமிஷங்களுக்குப் பின், சக்கரவர்த்திக்கு மயக்கம் மேலிட்டது. வைத்திய நிபுணர்கள் பலருடன் அங்குக் காத்துக்கொண்டிருந்த அரண்மனை வைத்தியன் தன்னாலியன்ற சிகிச்சைகள் செய்தும் அவனுக்கு உணர்

1. அசோகன்.—புத்த மதத்தை எங்கும் பரவச் செய்தவன். கி. மு. 260-இல் ஆண்டவன். இவனும் இவன் குமாரனும் புத்த மதத்தைப் பலவாறு எங்கும் பரவச் செய்தனர். இவன் குமாரன் மாவிந்தன் சிங்களத்தில் புத்த மதத்தைப் பரவச் செய்தவன். கி. மு. 222-இல் இறந்தனன்.

ஊட்ட முடியவில்லை. பின்பு ஒரு மணி நேரத்தில் நினைவு திரும்பப்பெறாமலே சந்திரகுப்தன் இறந்தனன். மூவகைச் சோதனையும் செய்து பார்த்தனர். நாசியண்டை பிடித்த கண்ணாடியில் மூச்சின் ஆவி படியவில்லை. சுக்குப்பொடியை மூக்கில் ஊதியும் தும்மலுணர்ச்சி உண்டாகவில்லை; நாடி இயக்கமும் நின்று போயிற்று. "தேவானும் பிரிய சந்திர குப்த மகாராஜன் ஈசன் திருவடி சேர்ந்தனன்! ராம! ராம!" என மொழிந்து சாணக்கியர் சிறு குழந்தையைப் போல விம்மி விம்மி அழலாயினர்.

கனியாக் கன்னெஞ்சு படைத்த சாணக்கியர் இங்ஙனம் வெண்ணெய்போல் உருகிப் பரிதபிப்பதைக் கண்டு, அங்குள்ளாரனைவரும் பிரமித்து நின்றனர். சாணக்கியர் மனம் இளகுமென அவர்கள் கனவிலும் கருதவில்லை. "ஓ விருஷலா! என்னை இங்குவிட்டு நீ ஏன் ஏகினை? நீயும் நானும் சேர்ந்தே பல பல ஆபத்துக்களையும் அனுபவித்தோம். உலகமென்னும் இவ்வரங்கத்தில் உள்ளக் கிளர்ச்சி யுண்டாக்கும் ஒரு நாடகத்தில் இருவரும் ஒருமித்து நடித்தோம்; அரங்கத்தை விட்டு ஒருமித்தே நீங்கவேண்டியவர்களாவோம். விருஷலா! நான் ஈகை யிரக்கமற்றவன், வன்மன முடையவன், சூழ்ச்சி மிக்க ராஜ்ய தந்திரி என உலகோரனைவரும் நினைக்கின்றனர். உன்னைப்போல நானும் மானவனே என்பது கௌதமிக்கும் உனக்கும் மாத்திரமே தெரியும். இப்போது நீ போய்விட்டாய். கௌதமி மாத்திரமே எனக்கு மீந்துள்ளாள்" என்று அவர் உரத்துப் பெருமூச்சுவிட்டு விம்மி அலறியதை அங்கிருந்தவர்கள் மிக்க அதிசயத்தோடு கேட்டனர். ராக்ஷஸன் அவரை யணுகி, "மகாஸ்வாமி! இனிக் காலந்தாழ்க்காமல், புதிய அரசன் பட்டத்துக்கு வந்தா

னென நகரத்திற் பறையறைவிக்கலாமே" எனக் கேட்டனன். சாணக்கியர் எழுந்து, "அங்ஙனமே 'தேவானாம்' பிரிய பிந்துசார அமித்திரகாதன் மகாராஜனாகப் பட்டத்துக்கு வந்துள்ளானென ராஜ்யம் முழுதும் பறையறைபச்செய்க. நியாயாதிபதிகள் உடனே பாடலிபுரத்திற் பறையறைவிக்கட்டும்" என்றனர்.

பின்பு சாணக்கியர் அந்தப்புரத்திற்குள் போயினர். சக்கரவர்த்தியின் சவத்தை அங்கே கொண்டு போயிருந்தனர். மார்பு பிளந்து போமோ என்னுமாறு துர்த்தரை அப்பிணத்தின் மீது விழுந்தழுதனள். தேவப்பிராந்தை அன்புடனும் மரியாதையுடனும் நின்று உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தனள். சாந்தவதி கண் கூசிப் பிரமித்து உயிரற்றவள் போலிருந்தனள். சாணக்கியரைத் தன்னண்டை அழைத்து அவள், பதியின் சிதையில் தானும் விழுந்து 'ஸதிஸஹகமனம்' செய்யவிரும்புவதாகச் சொன்னாள். "அங்ஙனம் செய்யக் கூடாது. அது நம் முனிவர்களால் விலக்கப்பட்ட பாப காரியம்" என்றனர் சாணக்கியர். "பிராச்சியர்கள் அனுசரிக்காவிடினும் அது எங்கள் பிரதேசத்து வழக்கமாகும்" என்று அவள் தடுத்துக் கூறினள். "பிராச்சியனை மணந்தமையின் நீ பிராச்சிய மாது ஆயினை. "நீ உடன்கட்டை ஏறக்கூடாது. இளங் குமரர்களாகிய சுமனனையும் அசோகனையும் பராமரித்துக் கொள். இறந்துபோன கணவனது விருப்பத்தை அவ்வகையில் ஈடேற்று. உன் கணவன்மீது ஆணை: நான் சொல்லியவண்ணம் நீ செய்ய வேண்டுகிறேன்" என்றார் சாணக்கியர். சாந்தவதி தலைவணங்கிச் சம்மதித்தனள்.

சந்திரகுப்தனது உடலுக்குப் பரிமளம்பூசி ஏழு நாள் வரையில் ராஜாங்கக் கோலமாக வைத்திருந்தனர். அதற்குப் பின் கங்கைக் கரையிலுள்ள ராஜகுடும்பத்துச் சுடலைக்குக் கொண்டுபோயினர். பத்துலக்ஷம் ஜனங்கள் கூடியிருந்தனர். சந்தனக்கட்டைகளினால் சிதை அடுக்கப் பட்டிருந்தது. நூற்றுக்கணக்கான பிராமணர்கள் மந்திர மோத, பிந்துசாரன் ஈமத்தீ மூட்டினன். சவம் சாம்பலாகும் வரையிற் சாணக்கியர் அசையாது நின்று உற்று நோக்கிக் கொண்டிருந்தனர். பின்னர்த் திரும்பிப் பிந்துசாரனை நோக்கி அழுதுகொண்டு, "அவனுக்காவது சரமக்கிரியை செய்ய நீ இருந்தனை. அது செய்ய எனக்கொரு மகனும் இல்லையே!" என்றனர். "பெரியார் தேக வியோக மாவதற்குள் ஈமக்கடன்முடிக்கத் தங்கள் தௌகித்திரன் ராதாகுப்தன் வயதுக்கு வந்துவிடுவன்" என்று பிந்து சாரன் மறுமொழி கூறினன்.

மாளிகைக்குத் திரும்பிப் போய்ப் பிந்துசாரன் தன் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்த சாந்தவதி, துர்த்தரை, தேவப்பிரசந்நை, சூரியகாந்தை, லஜ்ஜாவதி, சுபத்திராங்கி ஆகிய அனைவருக்கும் மேற்கண்ட சம்வாதத்தை விளம் பினன். "அங்ஙனமா? நம்மைப்போன்றே அவரும் மானிடர் களுக்குள்ள குறைகளுக்குட்பட்டவரா யிருக்கின்றனரே! அவர் ஆசாபாசப் பற்றற்றதோர் பௌதிகசக்தி என்றும், பூகம்பம் அல்லது மலைவீழிமக்கட்டி போன்றவரென்றும் உலகோர் நினைக்கின்றனரே. அது போகட்டும், எப்படி யானுலென்ன? என் அருமை மகனே! அரசியற் பூகம்பங் களுக்கும் மலைவீழிமக்கட்டிகளுக்கும் உன்னைக் காட்டிக் கொடுக்காமற் காப்பாற்றச் சாணக்கியாசாரியரை நமக்கு

அளித்திருப்பதற்கு எல்லாம் வல்ல இறைவனைப் போற்று
வோம்” என்றான் அவன் நாப்.

“வாழ்க வந்தணர் வானவ ராவினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.”

சுபம்

---

PRINTED BY R. NARAYANASWAMI IYER,
AT THE MADRAS LAW JOURNAL PRESS, MYLAPORE, MADRAS

